மொழிபெயர்ப்பாளர்: ரா. கிருஷ்ணையா

ДЖОН РИД

10 ДНЕЙ,
КОТОРЫЕ ПОТРЯСЛИ МИР

*На тамильском языке*

விலை: ரூ. 4-50



சோவியத் நாட்டில் அச்சிடப்பட்டது

Р $\frac{10604—82}{014(01)—76}$ 635—76

# பொருளடக்கம்

# அமெரிக்கப் பதிப்பின் முகவுரை

**உலகைக் குலுக்கிய பத்து நாட்கள்** — ஜான் ரீடு எழுதிய இந்தப் புத்தகத்தை அளவிலா ஊக்கத்தோடும் தளராத கவனத்தோடும் படித்தேன். அனைத்து உலகிலுமுள்ள தொழிலாளர்களுக்கு முழு மனதுடன் இப்புத்தகத்தைச் சிபார்சு செய்கிறேன். பத்துலட்சக் கணக்கான பிரதிகளில் அச்சாகி வெளிவர வேண்டும், எல்லா மொழிகளிலும் பெயர்க்கப்பட வேண்டுமென நான் விரும்பும் புத்தகமாகும் இது. பாட்டாளி வர்க்கப் புரட்சி என்றால் என்ன, பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரம் என்றால் என்ன என்பதைப் புரிந்து கொள்வதற்கு மிகவும் முக்கியமான நிகழ்ச்சிகளை உள்ளது உள்ளபடி உயிர்க் களையுடன் இது விவரிக்கின்றது. இந்தப் பிரச்சினைகள் விரிவாய் விவாதிக்கப்படுகின்றவை; ஆனால் எவரும் இந்தக் கருத்துகளை ஏற்றுக் கொள்ளவோ, நிராகரிக்கவோ முற்படு முன் தமது முடிவின் உட்பொருளைச் சரிவர புரிந்து கொள்வது அவசியமாகும். சர்வதேசத் தொழிலாளர் இயக்கத்தின் அடிப்படையான பிரச்சினையாகிய இதனைத் தெளிவுபடுத்த ஜான் ரீடின் புத்தகம் துணை புரியும் என்பதில் ஐயமில்லை.

**1919**

நிக்கலாய் லெனின்
**(விளதீமிர் இலியீச் உலியானவ்)**

## ருஷ்யப் பதிப்பின் முகவுரை

ஜான் ரீடு தமது ஒப்பற்ற நூலுக்கு அளித்த தலைப்பு: ''உலகைக் குலுக்கிய பத்து நாட்கள்''. அக்டோபர் புரட்சியின்* ஆரம்ப நாட்களைப் போற்றத்தக்க உயிர்க் களையோடும் வலிவோடும் சித்திரிக்கிறது இந்நூல். உண்மை விவரங்களின் வெறும் பட்டியலாகவோ, ஆவணங்களின் திரட்டாகவோ அமையாமல், வாழ்க்கைக் காட்சிகளின் படப்பிடிப்பாய்த் திகழ்கிறது. இந்தக் காட்சிகள் அவ்வளவு தத்ரூபமாய் இனமாதிரியாய் இருப்பதால், இவை இந்தப் புரட்சியில் பங்கு கொண்டவர் எவருக்கும் அந்நாட்களில் நேரில் அவர் கண்ணுற்ற இவற்றையொத்த காட்சிகளை அப்படியே கண்ணெதிரே தோன்றச் செய்கின்றன. உள்ளதை உள்ளபடிக் காட்டும் இந்த வாழ்க்கைப் படக்காட்சி பெருந் திரள் மக்களது உள்ளத்து உணர்ச்சிகளை, இந்த மாபெரும் புரட்சியின் செயல் ஒவ்வொன்றையும் இறுதியாய் நிர்ணயித்த அந்த உணர்ச்சிகளை இம்மியும் பிறழாது வியத்தகு நேர்மையுடன் புலப்படுத்துகின்றது.

நாட்டின் மொழியும் முறைகளும் தெரியாத அன்னியரான அமெரிக்கர் ஒருவரால் எப்படி இம்மாதிரியான ஒரு நூலை எழுதமுடிந்ததென்று நினைக்கையில் முதலில் யாருக்கும்

---

* இந்தப் புத்தகத்தில் பிற இடங்களில் நவம்பர் புரட்சி எனக் குறிக்கப்படுவது.—[பதிப்பாசிரியர்].

ஆச்சரியமாகவே இருக்கும்; இவர் நகைக்கத்தக்க பிழைகள் பலவும் புரிந்திருப்பார், அத்தியாவசிய உண்மைகளைப் பார்க்கத் தவறியிருப்பார் என்றே நினைக்கத் தோன்றும்.

பெருவாரியான அன்னியர்கள் சோவியத்து ருஷ்யாவைப் பற்றி முற்றிலும் வேறுவிதமான முறையில்தான் எழுதுகிறார்கள். இவர்கள் தாம் கண்ணுறும் நிகழ்ச்சிகளைப் புரிந்து கொள்ள அறவே தவறிவிடுகிறார்கள், அல்லது ஒட்டு உறவு இல்லாத, இனமாதிரியாய் அமையாத ஏதோ சில விவரங்களைத் தாவிப் பிடித்து அவற்றைப் பயன்படுத்தி மிகப் பரவலான பொது முடிவுகளை வந்தடைகிறார்கள்.

ஆனால் இந்த அன்னியர்களில் மிகச் சொற்பமானோரே புரட்சியை நேரில் கண்ணுற்றவர்கள்.

ஜான் ரீடைப் பொறுத்த வரை, அவர் கருத்தில்லாத மேம்போக்கான பார்வையாளர் அல்ல. அவர் உள்ளப்பூர்வமான புரட்சியாளர்; கம்யூனிஸ்டு; நிகழ்ச்சிகளின் மெய்ப் பொருளை, அம்மாபெரும் போராட்டத்தின் உட்பொருளை புரிந்து கொண்டவர். இதை அவர் புரிந்து கொண்ட காரணத்தால்தான் அவ்வளவு கூர்மையான பார்வையை அவர் பெற முடிந்தது, இப்படிப்பட்ட பார்வை இல்லாதவர் எவராலும் ஒருநாளும் இம்மாதிரியான ஒரு நூலை எழுதியிருக்க முடியாது.

அக்டோபர் புரட்சி குறித்து ருஷ்யர்களும் வேறொரு முறையில் எழுதுகிறார்கள்: ஒட்டுமொத்தமாய் அதை அவர்கள் மதிப்பீடு செய்கிறார்கள், அல்லது தாம் நேரடியாய்ப் பங்கு கொண்ட நிகழ்ச்சிகளை விவரிக்கிறார்கள். ரீடின் புத்தகம் மெய்யாகவே மிகப் பெருந் திரளான மக்களின் புரட்சியாய் நடைபெற்ற இந்தப் புரட்சியின் விசாலமான முழுச் சித்திரத்தை அளிக்கின்றது. ஆகவே இளந் தலைமுறையினருக்கு, அக்டோபர் புரட்சியானது கடந்த கால வரலாறாகி விட்ட வருங்காலத் தலைமுறையினருக்கு, இப்புத்தகம் தனி முக்கியத்துவம் வாய்ந்ததாகும். ரீடின் புத்தகத்தை ஓர் இதிகாசப் படைப்பென்றே சொல்ல வேண்டும்.

ஜான் ரீடு தமது வாழ்வையே ருஷ்யாவின் புரட்சியுடன் இரண்டறக் கலக்குமாறு இணைத்துக் கொண்டவர். சோவியத்து ருஷ்யாவை அவர் தமது உயிருக்கு உயிரானதாய்

நேசித்தவர். ருஷ்யாவில் அவர் டைபஸ் காய்ச்சலுக்குப் பலியாகி உயிர் நீத்தார்; செஞ் சதுக்கத்தில் கிரெம்ளின் சுவர் அருகே அடக்கம் செய்யப்பட்டார். புரட்சிக்காக உயிர்த் தியாகம் புரிந்த வீரர்களின் சவ அடக்கத்தை அத்தனைச் சிறப்புடன் சித்திரித்துக் காட்டும் ஜான் ரீடு இந்த மாபெரும் சிறப்பைப் பெற முழுத் தகுதியுடையவரே.

நதேழ்தா குரூப்ஸ்கயா

# முன்னுரை

வீறு கொண்டு எழுந்த வரலாறு, கண் கொண்டு அதைக் கண்டேன்—அந்த வரலாற்றில் ஒரு கீற்றே இந்தப் புத்தகம். நவம்பர் புரட்சியை விவரமாய்ச் சித்திரிப்பதே அல்லாமல் இப்புத்தகம் வேறொன்றும் செய்ய முயலுவதாய்க் கூறிக் கொள்ளவில்லை. போல்ஷிவிக்குகள் நவம்பர் புரட்சியின் போது தொழிலாளர்கள், படையாட்களுக்குத் தலைமை தாங்கி, ருஷ்யாவில் ஆட்சியதிகாரத்தைக் கைப்பற்றி அதை சோவியத்துகளிடம் ஒப்படைத்தார்கள்.

இயற்கையாகவே புத்தகத்தின் பெரும் பகுதி நாட்டின் தலைநகரும் எழுச்சியின் இதய பீடமுமாகிய ''சிவப்புப் பெத்ரொகிராதைப்'' பற்றியதாய் இருக்கின்றது. ஆனால் பெத்ரொகிராதில் நடைபெற்றவை வெவ்வேறு தருணங்களில் வெவ்வேறு அளவு கடுமையோடு ருஷ்யா பூராவிலுமே ஏறத் தாழ அதே விதத்தில் நடந்தேறின என்பதை வாசகர் உணர்ந்து கொண்டாக வேண்டும்.

நான் எழுதுகிறவற்றில் முதலாவதாகிய இந்தப் புத்தகத்தில், நேரில் நான் கண்ணுற்று அனுபவித்த நிகழ்ச்சிகளையும், மற்றும் நம்பத் தகுந்த சான்றுகளை ஆதாரமாய்க் கொண்ட நிகழ்ச்சிகளையும் எடுத்துரைப்பதுடன் நிறுத்திக் கொள்கிறேன். இதற்கு முன்பு முதல் அத்தியாயங்களில் நவம்பர் புரட்சியின் சூழ்நிலையையும் இந்தப் புரட்சிக்குரிய காரணங்களையும் சுருக்கமாய்க் குறிப்பிடுகின்றேன். இந்த

இரு அத்தியாயங்களும் படிப்பதற்குக் கடினமாய் இருக்கும் என்பதை நன்கு அறிவேன், ஆனால் பின்னால் வருகின்றவற்றைப் புரிந்து கொள்ள இவை இரண்டும் அவசியமாகும்.

வாசகரது மனத்துள் பல கேள்விகளும் எழவே செய்யும். போல்ஷிவிசம் என்றால் என்ன? போல்ஷிவிக்குகள் நிறுவிய அரசாங்க அமைப்பு எப்படிப்பட்டது? நவம்பர் புரட்சிக்கு முன்பு அரசியல் நிர்ணயச் சபையை முன்னின்று ஆதரித்த போல்ஷிவிக்குகள், அதற்குப் பிற்பாடு படை பலம் கொண்டு அதைக் கலைக்கக் காரணம் என்ன? போல்ஷிவிசத்தின் அபாயம் கண்கூடாகும் வரையில் அரசியல் நிர்ணயச் சபையை எதிர்த்து வந்த முதலாளித்துவ வர்க்கத்தார், பிற்பாடு முன்னிலையில் நின்று அதை ஆதரிக்கக் காரணம் என்ன?

இந்தக் கேள்விகளுக்கும் மற்றும் பலவற்றுக்கும் இங்கே பதிலளிப்பதற்கில்லை. ஜெர்மனியுடன் செய்து கொள்ளப் பட்ட சமாதான ஒப்பந்தமும் அடங்கலாய், அந்நிகழ்ச்சி வரையில் புரட்சியின் நடப்பை இன்னொரு புத்தகத்தில்—''கர்னீலவ் முதல் பிரேஸ்த்-லித்தோவ்ஸ்க் வரை''* என்பதில்—நான் விவரிக்கின்றேன். புரட்சிகர நிறுவனங்களின் உதயம், அவற்றின் செயல்கள், மக்களது உணர்ச்சிகளின் பரிணமம், அரசியல் நிர்ணயச் சபை கலைக்கப்படுதல், சோவியத்து அரசின் அமைப்பு, பிரேஸ்த்-லித்தோவ்ஸ்க் பேச்சு வார்த்தைகளின் போக்கு, அவற்றின் விளைவு முதலான பலவற்றையும் இந்தப் புத்தகத்தில் விளக்குகிறேன்....

போல்ஷிவிக்குகளின் வளர்ச்சியைக் கருதுகையில் ஒன்றைப் புரிந்து கொள்வது அவசியமாகும்: ருஷ்யாவின் பொருளாதார வாழ்வும் ருஷ்யாவின் சேனையும் சீர்குலைந்தது 1917 நவம்பர் 7ல் அல்ல; இதற்குப் பல மாதங்கள் முன்னதாகவே, 1915ல் ஆரம்பமாகிய ஒரு நிகழ்ச்சிப்போக்கின் நேரடியான விளைவாய் இந்தச் சீர்குலைவு ஏற்பட்டுவிட்டது. ஜாரின் அரசவையில் ஆதிக்கம் புரிந்த லஞ்ச ஊழல் மலிந்த பிற்போக்குவாதிகள் ஜெர்மனியுடன் தனியே சமாதானம் செய்து கொள்ளும் பொருட்டு வேண்டுமென்றே

---

* இந்தப் புத்தகத்தை எழுதி முடிக்கும் முன்பே ரீடு இறந்துவிட்டார், அது வெளிவரவில்லை.—[பதிப்பாசிரியர்].

திட்டமிட்டு ருஷ்யாவைச் சீரழிப்பதில் முனைந்திருந்தனர். போர்முனையில் ஆயுதங்கள் இல்லாமற் போனது, இதன் விளைவாய் 1915ஆம் ஆண்டு கோடையில் பேரழிவு உண்டாகும்படிப் பின்வாங்க நேர்ந்தது, சேனையிலும் பெரிய நகரங்களிலும் ஏற்பட்ட உணவுத் தட்டுப்பாடு, 1916ல் ஆலைகளும் போக்குவரத்தும் இயங்காது முடங்கிப் போனது —இவை எல்லாம் பிரம்மாண்டமான சீர்குலைவுச் சதித் திட்டத்தின் ஒரு பகுதியாகும் என்பதை இப்போது நாம் அறிவோம். மார்ச் புரட்சி இவற்றைக் கடைசி தருணத்தில் தடுத்து நிறுத்திற்று.

உலகிலேயே மிகக் கொடிய ஒடுக்குமுறையால் வதைக்கப்பட்ட பதினாறு கோடி மக்களைத் திடுமென சுதந்திரமடையச் செய்த மாபெரும் ஒரு புரட்சியைத் தொடர்ந்து எழுந்த குழப்பத்தையும் மீறி, புதிய ஆட்சியின் ஆரம்பத்தில் சில மாதங்களுக்கு உள்நாட்டு நிலைமையும் சேனையின் போர் ஆற்றலும் மெய்யாகவே மேம்பாடுற்று வந்தன.

ஆனால் இந்தத் ''தேனிலவு'' அதிக காலத்துக்கு நீடிக்கவில்லை. சொத்துடைத்த வர்க்கங்கள் ஆட்சியதிகாரத்தை ஜாரிடமிருந்து பறித்துத் தம்மிடம் கொடுக்கக் கூடிய ஓர் அரசியல் புரட்சியை மட்டுமே விரும்பின. ருஷ்யாவானது பிரான்சு அல்லது அமெரிக்க ஐக்கிய நாடு போன்ற சட்டமுறைக் குடியரசோ, அல்லது இங்கிலாந்து போன்ற சட்டமுறை முடியரசோ ஆக வேண்டுமென அவை விரும்பின. ஆனால் மக்கள் பெருந் திரளினர் இதற்கு மாறாய், மெய்யான தொழிலாளர், விவசாயிகளது ஜனநாயகத்தையே நாடினர்.

வில்லியம் இங்கிளிஷ் வாலிங்* 1905ஆம் ஆண்டுப் புரட்சியைப் பற்றிக் கூறும் **ருஷ்யாவின் விண்ணப்பம்** என்ற தமது

---

* **வில்லியம் இங்கிளிஷ் வாலிங்** [Walling] *(1877-1936)* —அமெரிக்கப் பொருளியலாளர்; சமூகவியலாளர்; தொழிலாளி வர்க்க இயக்கம் குறித்தும் சோஷலிசம் குறித்தும் புத்தகங்கள் எழுதியவர். ''ருஷ்யாவின் விண்ணப்பம்'' [Russia's Message] என்ற புத்தகம் 1908ல் அமெரிக்க ஐக்கிய நாட்டில் வெளிவந்தது.—[பதிப்பாசிரியர்].

புத்தகத்தில் பிற்பாடு அனேகமாய் ஒருமனதாய்ப் போல்ஷிவி சத்தை ஆதரிக்க முற்பட்ட ருஷ்யத் தொழிலாளர்களது மன நிலையை மிக நன்ருய்ச் சித்திரிக்கின்ருர்:

அவர்கள் (தொழிலாளர்கள்) சுதந்திர அரசாங்கத்திலுங் கூட, அந்த அரசாங்கம் ஏனைய சமூக வர்க்கங்களது கையில் அகப்பட்டுக் கொண்டு விடுமாயின், தொடர்ந்து தாம் பட்டினி கிடக்க நேரலாம் என்பதை உணர்ந்திருந்தார்கள்....

ருஷ்யத் தொழிலாளி புரட்சியாளராவார், ஆனுல் அவர் வன்முறையாளராகவோ, வறட்டுச் சூத்திரவாதியாகவோ, மூடராகவோ இருக்கவில்லை. சாலைத் தடுப்பரண்கள் அமைத்துப் போராடத் தயாராகவே இருக்கிருர், இவை குறித்து ஆராய்ந்திருக்கிருர், உலகத் தொழிலாளர்களில் தனிப்பட அவர் இவை குறித்து நடைமுறை அனுபவ வாயிலாய்க் கற்றறிந்து வைத்திருக்கிருர். தமது ஒடுக்குமுறையாளராகிய முதலாளித்துவ வர்க்கத்தை எதிர்த்து இறுதி முடிவு வரை போராடத் தயாராகவும் சித்தமாகவும் இருக்கிருர். ஆனுல் பிற வர்க்கங்களும் இருப்பதை அவர் உதாசீனம் செய்துவிட வில்லை. நெருங்கி வரும் கடும் போராட்டத்தில் பிற வர்க்கங் கள் ஏதேனும் ஒரு பக்கத்தைத் தேர்ந்தெடுத்துக் கொள் ளட்டும் என்றுதான் கோருகிருர்....

அவர்கள் (தொழிலாளர்கள்) எல்லாரும் தம்முடையவற்றைக் காட்டிலும் நமது (அமெரிக்க) அரசியல் ஆட்சி நிறுவன அமைப்புகள் விரும்பத்தக்கவையே என்பதை ஒத்துக் கொள்கிருர்கள், ஆனுல் ஒரு கொடுங்கோலரை அகற்றி அவரிடத்தில் வேருெருவரை (அதாவது முதலாளித்துவ வர்க் கத்தாரை) வந்தமரச் செய்வதில் அவர்கள் அதிக ஆர்வம் கொண்டிருக்கவில்லை....

ருஷ்யத் தொழிலாளர்கள் மாஸ்கோவிலும் ரீகாவிலும் அதேஸ்ஸாவிலும் தம்மில் பலரும் சுட்டு வீழ்த்தப்படுவதையும், நூற்றுக் கணக்கானேர் மரண தண்டனைக்கு உள்ளாக்கப் படுவதையும், ஒவ்வொரு ருஷ்யச் சிறைக்கூடத்திலும் ஆயிரக் கணக்கானேர் அடைக்கப்படுவதையும், பாலை வெளி களுக்கும் ஆர்க்டிக் பனிப் பொட்டல்களுக்கும் கடத்தப்படு வதையும் கண்டு அஞ்சாது வெஞ்சமர் புரிந்தார்களெனில்,

அது கோல்டுபீல்டு தொழிலாளர்களுக்கும் கிரிப்பிள் கிரீக் தொழிலாளர்களுக்கும் உள்ள நிச்சயமற்ற அற்பசொற்ப சலுகைகளைப் பெறுவதற்காக அல்ல....

இவ்வாறுதான், ருஷ்யாவில் அயல்நாட்டு யுத்தத்தின் உக்கிரமத்துக்கு இடையே, அரசியல் புரட்சியுடன் கூடவே சமுதாயப் புரட்சியும் வளர்ந்தோங்கிப் போல்ஷிவிசம் வெற்றிவாகை சூடும்படியான உச்சி முடியினை வந்தடைந்தது.

நம் நாட்டில் சோவியத்து அரசாங்கத்தை எதிர்த்துச் செயல்படும் ருஷ்யச் செய்தி அலுவலகத்தின் நெறியாளரான ஏ. ஜே. சாக் ''ருஷ்ய ஜனநாயகத்தின் பிறப்பு'' என்னும் தமது புத்தகத்தில் கூறுவதாவது:

நிக்கலாய் லெனினைப் பிரதமராகவும் லேவ் திரோத்ஸ்கியை அயல் விவகார அமைச்சராகவும் கொண்ட தமது சொந்த அமைச்சரவையை போல்ஷிவிக்குகள் நிறுவிக் கொண்டனர். அவர்கள் ஆட்சியதிகாரத்துக்கு வருவது தவிர்க்க முடியாததென்பது மார்ச் புரட்சியை அடுத்து அனேகமாய் உடனடியாகவே தெட்டத் தெளிவாய் விளங்கிற்று. இந்தப் புரட்சிக்குப் பிற்பாடு போல்ஷிவிக்குகளின் வரலாறு அவர்களது இடையறாத வளர்ச்சியின் வரலாறாய்த் திகழ்கிறது....

ருஷ்யத் தொழிலாளர்களது ''அறியாமை'' குறித்து வெளிநாட்டினர், முக்கியமாய் அமெரிக்கர்கள் அடிக்கடி வலியுறுத்தி வருகிறார்கள். மேலைய நாடுகளின் மக்களுக்குள்ள அரசியல் அனுபவம் அவர்களுக்கு இல்லை என்பது மெய்தான், ஆனால் மனமுவந்த நிறுவன ஒழுங்கமைப்பில் அவர்கள் சிறந்த பயிற்சி பெற்றிருந்தார்கள். 1917ல் ருஷ்ய நுகர்வாளர் கூட்டுறவுச் சங்கங்களில் ஒரு கோடி இருபது லட்சத்துக்கு மேற்பட்டோர் உறுப்பினர்களாய் இருந்தார்கள். அவர்களது நிறுவன ஒழுங்கமைப்பு ஆற்றலுக்கு சோவியத்துகள் மிகச் சிறந்த எடுத்துக்காட்டு. தவிரவும் சோஷலிசத் தத்துவத்திலும் நடைமுறையில் அதைக் கையாளுவதிலும் அவர்களைப் போல் அவ்வளவு தேர்ந்த கல்விஞானமுடைய மக்கள் உலகில் யாரும் இல்லை என்றே சொல்லலாம்.

வில்லியம் இங்கிளிஷ் வாலிங் அவர்களுடைய தனிப் பண்பை இவ்வாறு விரித்துரைக்கின்ருர்:

ருஷ்யத் தொழிலாளர்கள் பெரும்பாலோருக்கு எழுதப் படிக்க தெரியும். பல ஆண்டுகளாய் நாடு அப்படி அமைதி யற்ற நிலையில் இருந்ததால், அவர்கள் மத்தியிலிருந்து உதித்த கூரறிவு படைத்தோரது தலைமையை மட்டுமின்றி, அதே அளவுக்கு புரட்சித் தன்மை வாய்ந்த படித்த வர்க்கத்தாரில் ருஷ்யாவின் அரசியல், சமுதாயப் புத்தமைப்புக்கான தமது கருத்துகளுடன் தொழிலாளி வர்க்கத்தின் பக்கம் திரும்பிய ஒரு பெரும் பகுதியோரது தலைமையையும் பெறும் அனு கூலம் அவர்களுக்குக் கிடைக்கலாயிற்று....

பல எழுத்தாளர்கள், ருஷ்யப் புரட்சியின் இறுதிக் கட்ட மானது சமுதாயத்தின் ''கண்யமான'' பகுதியோர் போல்ஷி விசத்தின் கொடூரத் தாக்குதல்களை எதிர்த்து நடத்திய போராட்டமாகவே இருந்ததென வாதாடி, சோவியத்து அர சாங்கத்தின்பால் தமக்குள்ள பகைமைக்குக் காரணம் கூறு கின்றனர். ஆனல் உண்மை என்னவெனில், சொத்துடைத்த வர்க்கங்கள்தான் மக்களது புரட்சிகர நிறுவனங்களின் சக்தி ஓங்குவதைக் கண்டதும் இந்நிறுவனங்களை ஒழித்துக் கட்டிப் புரட்சியைத் தடுத்து நிறுத்த முற்படலாயின. சொத் துடைத்த வர்க்கங்கள் இதன் பொருட்டு முடிவில் எதற்கும் துணிந்து வெறித்தனமான நடவடிக்கைகளை மேற்கொண் டன. கேரென்ஸ்கி அமைச்சரவையையும் சோவியத்துகளையும் தகர்த்திட வேண்டுமென்று போக்குவரத்து சீர்குலைக்கப்பட் டது, நாட்டினுள் கோளாறுகள் தூண்டிவிடப்பட்டன; ஆலைக் கமிட்டிகளை நசுக்க வேண்டுமென்று தொழிற்சாலைகள் மூடப் பட்டன, எரிபொருளும் மூலப் பொருள்களும் வந்துசேராத படி தடுக்கப்பட்டன; போர்முனையில் சேனைக் கமிட்டிகளைத் தகர்க்க வேண்டுமென்று மரண தண்டனை மீண்டும் புகுத்தப் பட்டது, போர்களில் வேண்டுமென்றே தோல்விக்கு ஏற்பாடு செய்யப்பட்டது.

போல்ஷிவிக்குத் தீ பரவுவதற்கு இவை யாவும் சிறந்த எரிபொருள்களாயின. போல்ஷிவிக்குகள் வர்க்கப் போராட் டத்துக்காகப் பிரசாரம் செய்தும், சோவியத்துகள்

மேலாண்மை பெற வேண்டுமென வற்புறுத்தியும் பதிலடி கொடுத்தார்கள்.

இவ்விரு கோடிகளுக்கும் இடையே, முழு மனதுடனே அரை மனதுடனே இவற்றை ஆதரித்த பிற குழுவோருடன் கூட, ''மிதவாத'' சோஷலிஸ்டுகள் என்போரும் மென்ஷிவிக்குகளும் சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களும் மற்றும் சில சிறு கட்சியினரும் இருந்தார்கள். இந்தக் கோஷ்டிகளும் சொத்துடைத்த வர்க்கங்களது தாக்குதல்களுக்கு உள்ளாயின; ஆனுல் இவற்றின் எதிர்ப்பு சக்தி இவைகளுடைய தத்துவங்களால் முட மாக்கப்பட்டிருந்தது.

பெரும் போக்காய்ச் சொல்லுமிடத்து, மென்ஷிவிக்குகளும் சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களும் ருஷ்யாவானது சமுதாயப் புரட்சிக்குப் பொருளாதார வழியில் பக்குவமடைந்தாகவில்லை, ஆகவே அரசியல் புரட்சி மட்டுமே சாத்தியம் என்பதாய்க் கருதினர். இவர்களுடைய கூற்றுப்படி, ருஷ்ய மக்கள் திரளினர் ஆட்சியதிகாரத்தை மேற்கொள்ளப் போதுமான கல்வியறிவு பெற்றிருக்கவில்லை; ஆட்சியதிகாரத்தை மேற்கொள்வதற்கான எந்த முயற்சியும் தவிர்க்கவொண்ணுதவாறு பிற்போக்கைத் தலைதூக்கச் செய்யும்; கொடுமனங் கொண்ட சந்தர்ப்பவாதி யாரேனும் இந்தப் பிற்போக்கைப் பயன்படுத்தி பழைய ஆட்சியை மீட்டமைக்கக் கூடும். ஆக இந்நிலையிலிருந்து பெறப்பட்டது என்னவெனில், ''மிதவாத'' சோஷலிஸ்டுகள் ஆட்சியதிகாரம் ஏற்கும்படியான நிர்ப்பந்தம் ஏற்பட்ட போது அவர்கள் அதைப் பிரயோகித்துச் செயல் புரிய பயந்தார்கள்.

மேலைய ஐரோப்பா கடந்திருந்த அரசியல், பொருளாதார வளர்ச்சிக் கட்டங்களை ருஷ்யாவும் கடந்து சென்ருக வேண்டும், அதற்குப் பிற்பாடுதான் ஏனைய உலகுடன் சேர்ந்து முடிவில் அது முழுநிறை சோஷலிசத்தினுள் அடியெடுத்து வைக்க முடியும் என்று அவர்கள் நம்பினுர்கள். ஆகவே இயற்கையாகவே அவர்கள் ருஷ்ய நாடு முதற்கண் ஒரு நாடாளுமன்ற அரசாக வேண்டுமென்று கூறி, சொத்துடைத்த வர்க்கங்களின் கருத்தை ஒத்துக் கொண்டு, மேலைய ஜனநாயகங்களது முறைகளைச் சிற்சில வழிகளில் செம்மை செய்து ருஷ்யாவில் கைக்கொள்ள வேண்டும் என்ருர்கள்.

இதன் விளைவாய், அவர்கள் அரசாங்கத்தில் சொத்துடைத்த வர்க்கங்களது ஒத்துழைப்பு அவசியமென்று வற்புறுத்தினார்கள்.

இதிலிருந்து இவ்வர்க்கங்களை ஆதரிக்கும் நிலைக்குச் செல்வது எளிதாகவே இருந்தது. ''மிதவாத'' சோஷலிஸ்டுகளுக்கு முதலாளித்துவ வர்க்கம் தேவையாய் இருந்தது. ஆனால் முதலாளித்துவ வர்க்கத்துக்கு ''மிதவாத'' சோஷலிஸ்டுகள் தேவைப்படவில்லை. இதனால் என்ன ஆயிற்று என்றால், சோஷலிஸ்டு அமைச்சர்கள் சிறிது சிறிதாய்த் தமது வேலைத்திட்டம் பூராவையுமே விட்டுக் கொடுத்துச் சென்றார்கள், சொத்துடைத்த வர்க்கங்கள் மேலும் மேலும் வலுக்கட்டாயம் செய்து வந்தன.

இறுதியில் இந்த உருப்படாத சமரச ஏற்பாடு அனைத்தையும் போல்ஷிவிக்குகள் தகர்ந்து விழச் செய்த போது, மென்ஷிவிக்குகளும் சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களும் சொத்துடைத்த வர்க்கங்களுடன் கூடிக் கொண்டு போராட நேர்ந்தது.... உலகில் இன்று அனேகமாய் ஒவ்வொரு நாட்டிலும் இதே போல் நடைபெறக் காண்கிறோம்.

போல்ஷிவிக்குகள் எந்நாளும் நாசகர சக்தியாய் இருக்கவில்லை; இதற்கு நேர் மாறாய் ருஷ்யாவில் அவர்கள் மட்டும் தான் ஆக்க வழிப்பட்ட வேலைத்திட்டத்தைக் கொண்ட கட்சியாய், இந்த வேலைத்திட்டத்தை நடைமுறையில் நிறைவேற்றி நாட்டை வழிநடத்திச் செல்லும் வல்லமை வாய்ந்த கட்சியாய் இருந்தார்கள் என்பதாகவே எனக்குத் தோன்றுகிறது. அவர்கள் ஆட்சிப் பொறுப்பை ஏற்ற அந்த நேரத்தில் அவர்கள் ஆட்சிக்கு வரத் தவறியிருந்தால், சாம்ராஜ்ய ஜெர்மனியின் சேனைகள் டிசம்பர் மாதத்தில் பெத்ரொகிராதுக்கும் மாஸ்கோவுக்கும் வந்திருக்கும் என்பதிலும், மீண்டும் ருஷ்யா ஒரு ஜார் மன்னனின் கொடுங்கோன்மைக்கு உட்படுத்தப்பட்டிருக்கும் என்பதிலும் எனக்கு எந்தச் சந்தேகமும் இல்லை....

சோவியத்து அரசாங்கம் உதித்து ஒரு முழு ஆண்டு கழிந்த பிறகும், போல்ஷிவிக்கு எழுச்சியை எதிர்பாராத ஓர் ''அதிசயம்'' என்பதாய்ப் பேசுவது ஒரு மோஸ்தராய் இருந்து வருகிறது. ஆம், அது ஓர் அதிசயமே—உழைப்பாளிப் பெருந்திரள் மக்களுக்குத் தலைமை தாங்கி விசுவ வடிவம்

எடுத்து வரலாற்றினுள் பிரவேசிப்பதும், இம்மக்களது அளவிலா எளிய விருப்பங்களை ஆதாரமாய்க் கொண்டு அனைத்தையும் பணயமாய் வைத்தெழுவதும் மனிதகுலம் இதுகாறும் புரிந்திருக்கும் அற்புதங்களுக்கு எல்லாம் அற்புதமான ஓர் அதிசயமே. பண்ணைகளுடைய நிலங்களை விவசாயிகளிடையே வினியோகிப்பதற்கான நிறுவன ஏற்பாடு ஏற்கனவே நிறுவப்பட்டிருந்தது. தொழில் துறையைத் தொழிலாளர்களது கண்காணிப்பின் கீழ் கொண்டு வருவதற்கான ஆலைக் கமிட்டிகளும் தொழிற் சங்கங்களும் தயார் நிலையில் இருந்தன. ஊராட்சிப் பணியை மேற்கொள்வதற்கு ஒவ்வொரு கிராமத்திலும் சிற்றூரிலும் நகரத்திலும் மாவட்டத்திலும் மாநிலத்திலும் தொழிலாளர்கள், படையாட்கள், விவசாயிகளது பிரதிநிதிகளின் சோவியத்துகள் இருந்தன.

போல்ஷிவிசம் குறித்து யார் என்ன நினைத்தாலும், ருஷ்யாவின் புரட்சி மனித வரலாற்றிலே மாபெரும் நிகழ்ச்சிகளில் ஒன்றாகும் என்பதிலும், போல்ஷிவிக்குகள் உயர்ந்தெழுந்தது உலகளாவிய முக்கியத்துவம் வாய்ந்தது என்பதிலும் ஐயப்பாட்டுக்கு இடமில்லை. பாரிஸ் கம்யூனது வீர வரலாற்றின் மிக நுண்ணிய விவரங்களை எல்லாம் தேடி வரலாற்றியலாளர்கள் எப்படி ஆவணங்களை அலசி ஆராய்கிறார்களோ, அதே போல் அவர்கள் 1917 நவம்பரில் பெத்ரோகிராதில் என்ன நடைபெற்றது, எப்படிப்பட்ட மனப்பாங்கு மக்களை ஆட்கொண்டு இயக்குவித்தது, தலைவர்கள் எப்படிப் பட்டோராய் இருந்தார்கள், என்ன பேசினார்கள், என்ன செய்தார்கள் என்றெல்லாம் தெரிந்து கொள்ள ஆசைப்படுவார்கள். இதை மனதிற் கொண்டுதான் நான் இந்தப் புத்தகத்தை எழுதியிருக்கின்றேன்.

அப்போது நடைபெற்ற போராட்டத்தில் எனது சிந்தையும் உணர்வும் எப்பக்கமும் சாராது நடுநிலையில் இருக்கவில்லை. ஆனால் அம்மாபெரும் நாட்களின் வரலாற்றை எடுத்துரைக்கையில் நான் உண்மையை நிலைநாட்டுவதில் அக்கறைகொண்ட நேர்மையான செய்தியுரையாளனின் கண் கொண்டு நிகழ்ச்சிகளைக் காண முயன்றுள்ளேன்.

**ஜா. ரீ.**

*நியூயார்க்,*
***1919 ஜனவரி 1.***

## குறிப்புகளும் விளக்கங்களும்*

அரசியல் கோஷ்டிகள், கமிட்டிகள், மத்தியக் கமிட்டிகள், சோவியத்துகள், டூமாக்கள், ஒன்றியங்கள்—இப்படி வகை வகையாய் அமைந்த ருஷ்ய நிறுவனங்களை இனங் கண்டு கொள்வது எளிதல்ல, சராசரி வாசகருக்குப் பெரும் குழப்படியாகவே இருக்கும். இக்காரணம் கருதி இங்கு நான் சுருக்கமான சில குறிப்புரைகளும் விளக்கங்களும் தருகின்றேன்.

### அரசியல் கட்சிகள்

அரசியல் நிர்ணயச் சபைக்கு நடைபெற்ற தேர்தல்களில் பெத்ரொகிராதில் பதினேழு வேட்பாளர்கள் போட்டியிட்டனர், மாநில நகர்கள் சிலவற்றில் போட்டியிட்டவர்களின்

---

* சிற்சில பிழைபாடுகள் இருப்பினும் ஜான் ரீடு தந்துள்ள குறிப்புகளும் விளக்கங்களும் மிகவும் குறிப்பிடத் தக்கனவாகும். நவம்பர் புரட்சிக்கு முன்பு ருஷ்யாவில் இருந்த அரசியல் உறவுகளை அவர் எவ்வளவு உன்னிப்பாய் ஆராய்ந்து அறிந்திருந்தார் என்பதை இவை காட்டுகின்றன. இன்னும் முக்கியமாய் இவை ஆசிரியரது அரசியல் விருப்பு வெறுப்புகளையும், ஒன்றோடொன்று முட்டி மோதிப் போரிட்ட பற்பல கட்சிகளையும் கோஷ்டிகளையும் பற்றிய அவரது மதிப்பீட்டையும் புலப்படுத்துகின்றன.—[பதிப்பாசிரியர்].

எண்ணிக்கை நாற்பது வரையில் இருக்கும். ஆனல் அரசியல் கட்சிகளின் நோக்கங்களையும் இயைபையும் பற்றிய அடியிற் கண்ட தொகுப்புரையில், இப்புத்தகத்தில் குறிக்கப்படும் கோஷ்டிகள், உட்குழுக்கள் மட்டுமே இடம் பெறுகின்றன. அவற்றின் வேலைத்திட்டங்களது சாரப்பொருளும், அவை பிரதிநிதித்துவப் படுத்திய சமூகக் கூறுகளது பொது இயல்புகளும் மட்டும்தான் இந்தத் தொகுப்புரையில் சுட்டிக் காட்டப்படுகின்றன....

1. முடியரசுவாதிகளின் பல ரகத்தினர், அக்டோபரிஸ்டுகள் முதலானேர். ஒரு காலத்தில் வலிமை மிக்கனவாய் இருந்த இந்தக் கோஷ்டிகள் முன்புபோல் இப்போது பகிரங்கமாய்ச் செயல்படவில்லை; தலைமறைவாய்ச் செயல்பட்டன, அல்லது இவற்றின் உறுப்பினர்கள், படிப்படியாய் இவற்றின் அரசியல் வேலைத்திட்டத்தை ஆதரிக்கும் நிலைக்கு வந்துவிட்ட காடேட்டுகளின் கட்சியில் சேர்ந்து கொண்டனர். இப்புத்தகத்தில் இவர்களின் பிரதிநிதிகள்: ரத்ஸியான்கோ, ஷுல்கீன்.

2. காடேட்டுகள். ''அரசியல் சட்ட ஜனநாயகவாதிகள்'' [கான்ஸ்டிட்டூஷனல் டெமாக்கிராட்டுகள்] என்ற பெயரிலிருந்து சொற்களின் முதலெழுத்துகளைக் கொண்டு இப்படி அழைக்கப்பட்டனர். இந்தக் கட்சியின் அதிகாரபூர்வமான பெயர் (புரட்சிக்கு முன்பு): ''மக்கள் சுதந்திரக் கட்சி.'' ஜாராட்சியில் காடேட்டுகளின் கட்சி சொத்துடைத்த வர்க்கங்களைச் சேர்ந்த மிதவாதிகளாலாகிய பெரிய அரசியல் சீர்திருத்தக் கட்சியாய், ஏறத்தாழ அமெரிக்காவின் முன்னேற்றக் கட்சியை ஒத்ததாய் இருந்தது. 1917 மார்ச்சில் புரட்சி வெடித்த போது, காடேட்டுகள் முதலாவது இடைக்கால அரசாங்கத்தை நிறுவினர். காடேட்டு அமைச்சரவை ஜாரின் அரசாங்கத்தினுடைய ஏகாதிபத்திய நோக்கங்களும் அடங்கலாய் நேசக் கூட்டின் ஏகாதிபத்திய நோக்கங்களை ஆதரிப்பதாய்ப் பறைசாற்றிக் கொண்டதால் ஏப்ரல் மாதத்தில் அந்த அமைச்சரவை வீழ்த்தப்பட்டது. புரட்சி மேன்மேலும் தெளிவாய் சமுதாய, பொருளாதாரப் புரட்சியின் தன்மையதாகியதைத் தொடர்ந்து காடேட்டுகள் மேன்மேலும் பழமைவாதிகளாகிச் சென்றனர். இக்கட்சியின் பிரதிநிதிகளாய்

இப்புத்தகத்தில் வருவோர்: மில்யுக்கோவ், வினுவர், ஷாத்ஸ்கி.

**2அ. பொதுப் பிரமுகர் குழு.** கர்னீலவ் எதிர்ப்புரட்சியுடன் உறவு கொண்டதன் மூலம் காடேட்டுகள் செல்வாக்கு இழந்த பிறகு மாஸ்கோவில் பொதுப் பிரமுகர் குழு அமைக்கப்பட்டது. கேரென்ஸ்கியின் கடைசி அமைச்சரவையில் பொதுப் பிரமுகர் குழுப் பிரதிநிதிகளுக்கு அமைச்சர் பதவிகள் தரப்பட்டன. இந்தக் குழுவிற்கு ரத்ஸியான்கோவையும் ஷுல்கீனேயும் போன்ருேரே அறிவுத்துறைத் தலைவர்களாய் இருந்தனர், ஆயினும் இது தன்னைக் கட்சிசார்பற்றதாய் அறிவித்துக் கொண்டது. இந்தக் குழு ஓரளவு ''நவீன பாணியிலான'' வங்கி முதலாளிகள், வணிகர்கள், தொழிலதிபர்களால் ஆனது; இவர்கள் சோவியத்துகளை எதிர்த்துப் போராட சோவியத்துகளின் ஆயுதமான பொருளாதார ஒழுங்கமைப்பே தக்க ஆயுதமென்பதை உணர்ந்து செயல்படும் கூர்மதி கொண்டோராய் இருந்தனர். இந்தக் குழுவுக்கு எடுத்துக் காட்டாய் இருந்தோர்: லியனேஸவ், கனவாலவ்.

**3. நரோத்னிய**(*மக்கள்*) **சோஷலிஸ்டுகள்,** அல்லது **துருதொவிக்குகள்** (*உழைப்பாளர் குழு*). எண்ணிக்கையில் சொற்பமான சிறு கட்சி, எச்சரிக்கை மிகுந்த அறிவுத்துறையோரையும், கூட்டுறவுச் சங்கங்களின் தலைவர்களையும், பழமைவாத விவசாயிகளையும் கொண்டது. சோஷலிஸ்டுகளாய்க் கூறிக் கொண்ட இந்த நரோத்னிக்குகள் உண்மையில் எழுத்தர்கள், கடைக்காரர்கள் முதலானேரைப் போன்ற குட்டிமுதலாளித்துவப் பிரிவினருடைய நலன்களின் ஆதரவாளர்களாய்ச் செயல்பட்டனர். நான்காவது அரசாங்க டூமாவில் பெரும்பாலும் விவசாயிப் பிரதிநிதிகளாலாகிய ''உழைப்பாளர் குழுவாய்'' இருந்தோரின் சமரசவாத மரபின் நேர் வார்சுகளாவர் இவர்கள். 1917 மார்ச் புரட்சி மூண்ட போது அரசாங்க டூமாவில் கேரென்ஸ்கி இந்தத் துருதொவிக்குகளின் தலைவராய் இருந்தார். நரோத்னிய சோஷலிஸ்டுகள் தேசியவாதக் கட்சியாய்ச் செயல்பட்டனர். இந்தப் புத்தகத்தில் இவர்களுடைய பிரதிநிதிகளாய் விளங்குவோர்: பெஷெஹோனவ், செய்க்கோவ்ஸ்கி.

4. **ருஷ்யாவின் சமூக-ஜனநாயகத் தொழிலாளர் கட்சி.** ஆரம்பத்தில் மார்க்சிய சோஷலிஸ்டுகள். 1903ல் நடைபெற்ற கட்சிக் காங்கிரசில் இக்கட்சி போர்த்தந்திர பிரச்சினை சம்பந்தமாய்ப் பிளவுண்டு இரு பிரிவுகளாயிற்று—ஒரு பிரிவு பெரும்பான்மையோர் (போல்ஷின்ஸ்துவோ), மற்றொன்று சிறுபான்மையோர் (மென்ஷின்ஸ்துவோ). ''பெரும்பான்மை உறுப்பினர்கள்'', ''சிறுபான்மை உறுப்பினர்கள்'' என்று பொருள்படும் ''போல்ஷிவிக்குகள்'', ''மென்ஷிவிக்குகள்'' எனும் பெயர்கள் இவ்வாறே உருவாயின. இந்த இரு சாரியினரும் இரு தனிக் கட்சிகளாகியினர், இரு கட்சிகளும் தம்மை ''ருஷ்யாவின் சமூக-ஜனநாயகத் தொழிலாளர் கட்சி'' என்று அழைத்துக் கொண்டன; இரு கட்சியினரும் தம்மை மார்க்சியவாதிகளாய்க் கூறிக் கொண்டனர். போல்ஷிவிக்குகள் 1905ஆம் ஆண்டுப் புரட்சிக்குப் பின் உண்மையில் சிறுபான்மையோர் ஆயினர், 1917 செப்டம்பரில் மீண்டும் பெரும்பான்மை பெற்றுக் கொண்டனர்.

**அ) மென்ஷிவிக்குகள்.** இவர்களது கட்சி இயற்கையான பரிணாம வழியில் சமுதாயம் சோஷலிசத்தை நோக்கி முன்னேற வேண்டுமென்றும், தொழிலாளி வர்க்கம் முதற்கண் அரசியல் அதிகாரம் வென்று கொள்ள வேண்டுமென்றும் கருதும் எல்லா வகைப்பட்ட சோஷலிஸ்டுகளையும் தன்னுள் கொண்டதாகும். இதுவும் ஒரு தேசியவாதக் கட்சியே. சோஷலிஸ்டு மனப்பாங்குடைய அறிவுத்துறையினரின் கட்சியாய் இருந்தது, கல்விச் சாதனங்கள் யாவும் சொத்துடைத்த வர்க்கங்களின் கையில் இருந்ததால், இந்த அறிவுத்துறையினர் இந்தச் சாதனங்களின் வாயிலான கல்விப் பயிற்சியின் செல்வாக்குக்கு இயல்பாகவே உட்பட்டுச் சொத்துடைத்த வர்க்கங்களின் பக்கம் சேர்ந்து கொண்டனர். இந்தப் புத்தகத்தில் இவர்களது பிரதிநிதிகளாய் வருவோர்: டான், லீபெர், திஸெரெத்தேலி.

**ஆ) மென்ஷிவிக்கு சர்வதேசியவாதிகள்.** மென்ஷிவிக்குகளில் தீவிரவாதியினர்; சர்வதேசியவாதிகள்; சொத்துடைத்த வர்க்கங்களுடன் எந்த விதமான கூட்டு சேர்வதையும் எதிர்த்தவர்கள்; ஆயினும் பழமைவாத மென்ஷிவிக்குகளிடமிருந்து முறித்துக் கொள்ள விரும்பாதவர்கள்; போல்ஷிவிக்குகள்

வற்புறுத்திய தொழிலாளி வர்க்கச் சர்வாதிகாரத்தை எதிர்த் தவர்கள். திரோத்ஸ்கி நெடுங் காலம் இந்தக் கோஷ்டியின் உறுப்பினராய் இருந்தார். இக்கோஷ்டியாரின் தலைவர்களில் குறிப்பிடத்தக்கவர்கள்: மார்த்தவ், மர்த்தீனவ்.

இ) **போல்ஷிவிக்குகள்.** தற்போது இவர்கள் தம்மைக் கம்யூ னிஸ்டுக் கட்சி என்று அழைத்துக் கொள்கிருர்கள், இவ்விதம் இவர்கள் மென்ஷிவிக்குகளிடத்தும் எல்லா நாடுகளிலும் பெரும்பாலான சோஷலிஸ்டுகள் எனப்படுவோர்களிடத்தும் ஆதிக்கம் புரியும் ''மிதவாத'' அல்லது ''நாடாளுமன்ற'' சோஷலிசத்தின் மரபிலிருந்து தாம் முற்றிலும் வேருனவர் கள் என்பதைத் தெளிவாய் விளங்கும்படி அறிவித்துக் கொள்கிருர்கள். தொழில் துறையையும் நிலத்தையும் இயற்கைச் செல்வாதாரங்களையும் நிதி நிறுவனங்களையும் பலவந்தமாய் நாட்டுடைமையாக்கி சோஷலிசத்தின் உதயத் தைத் துரிதப்படுத்தும் பொருட்டு உடனடியாகவே பாட்டாளி வர்க்க எழுச்சி நடைபெற்று ஆட்சியதிகாரம் கைப்பற்றப் பட வேண்டுமென்று போல்ஷிவிக்குகள் வற்புறுத்தினர். இந்தக் கட்சி பிரதானமாய் ஆலைத் தொழிலாளர்களது விருப்பங்களையும் மற்றும் ஏழை விவசாயிகளில் ஒரு பெரும் பகுதியோரின் விருப்பங்களையும் பிரதிபலிப்பதாகும். ''போல் ஷிவிக்'' என்பதைப் ''பெருமவரையாளர்'' (மாக்சிமலிஸ்டு) என்று மொழிபெயர்க்கக் **கூடாது.** பெருமவரையாளர்கள் ஒரு தனிக் கோஷ்டியார் ஆவர் (பாரா 5ஆவைப் பார்க்க வும்).

ஈ) **ஒன்றுபட்ட சமூக-ஜனநாயகவாதிகள் — சர்வதேசியவாதி கள்.** இந்தக் கோஷ்டியின் செல்வாக்கு மிக்க செய்தி யேட்டின் பெயரில் **நோவயா ழீஸின்** (புதுவாழ்வு) கோஷ்டி என்பதாகவும் அழைக்கப்பட்டது. இதன் தலைவரான மாக் சிம் கோர்க்கியின் தனிப்பட்ட பற்ருளர்களைத் தவிர்த்து, மிகச் சில அறிவுத்துறையோரைக் கொண்ட சிறு கோஷ்டி; தொழிலாளி வர்க்கத்தாரில் இதற்கு மிகச் சொற்பமான ஆதரவாளர்களே இருந்தார்கள். இந்த அறிவுத்துறையினர் ஏறத்தாழ **மென்ஷிவிக்கு சர்வதேசியவாதிகளது** வேலைத்திட் டத்தையே கொண்டிருந்தார்கள்; ஆனல் **நோவயா ழீஸின்** கோஷ்டி இரு பெரும் குழுக்களில் எதனுடனும் தன்னை

இணைத்துக் கொள்ள மறுத்து வந்தது. போல்ஷிவிக்குகளின் போர்த்தந்திரத்தை எதிர்த்தது, ஆனால் சோவியத்து அர சாங்கத்தில் அங்கம் வகித்தது. இப்புத்தகத்தில் வரும் பிற பிரதிநிதிகள்: அவீலவ், கிராமரவ்.

உ) **எதீன்ஸ்துவோ.** கரைந்து வந்த மிகச் சிறு கோஷ்டி, 1880ஆம் ஆண்டுகளில் ருஷ்யாவின் சமூக-ஜனநாயக இயக் கத்தின் முன்னோடிகளில் ஒருவரும் அதன் மிக முக்கிய தத்துவ வாதியுமான பிளெஹானவின் தனிப்பட்ட பற்றாளர்களா லேயே அனேகமாய் ஆனது. பிளெஹானவ் இப்போது வயது முதிர்ந்தவராகிவிட்டார், கடுமையான சமூக-தேசபக்தவாதி யாய் இருந்தார், மென்ஷிவிக்குகளாலுங்கூட அளவு மீறிய பழமைப் பற்றாளராய்க் கருதப்பட்டார். போல்ஷிவிக்கு ஆட்சி மாற்றத்துக்குப் பிற்பாடு **எதீன்ஸ்துவோ** கோஷ்டி மறைந்துவிட்டது.

5. **சோஷலிஸ்டுப் புரட்சியாளர் கட்சி.** கட்சிப் பெயரின் முதலெழுத்துகளைக் கொண்டு இக்கட்சியினர் **எஸ்ஸேர்**கள் என்று அழைக்கப்பட்டனர். ஆதியில் விவசாயிகளுடைய புரட்சிக் கட்சியாய்,போராடும் நிறுவனங்களது,பயங்கரவாதி களது கட்சியாய் இருந்தது. எந்நாளும் சோஷலிஸ்டுகளாய் இருந்திராத பலரும் மார்ச் புரட்சிக்குப் பிற்பாடு இக்கட்சி யில் சேர்ந்து கொண்டார்கள். அக்காலத்தில் இது நிலத்தில் மட்டும் தனியார் சொத்துடைமையின் ஒழிப்பை ஆதரித்து நின்றது, உடைமையாளர்களுக்கு ஏதோ ஒரு வகையில் இழப்பீடு அளிக்கப்பட வேண்டுமென்று கூறிற்று. விவசாயி களிடம் புரட்சி மனப்பான்மை மேலோங்கிச் சென்றதன் விளைவாய் முடிவில் **எஸ்ஸேர்**கள் ''இழப்பீட்டு'' நிபந்தனை யைக் கைவிட வேண்டியதாயிற்று, அதோடு இளந் தலைமுறை யினரும் அதிக தீவிரம் கொண்ட ஒரு பகுதி அறிவுத்துறை யினரும் 1917ஆம் ஆண்டு இலையுதிர் காலத்தில் இக்கட்சி யிலிருந்து பிரிந்து **இடதுசாரி சோஷலிஸ்டுப் புரட்சியாளர் கட்சி** என்ற ஒரு புதுக் கட்சியை அமைத்துக் கொண்டனர். இதன் பிறகு **எஸ்ஸேர்**களைத் தீவிரவாதக் கோஷ்டிகள் **''வலதுசாரி சோஷலிஸ்டுப் புரட்சியாளர்கள்''** என்றே எப்போ தும் குறிப்பிட்டார்கள். **எஸ்ஸேர்**கள் மென்ஷிவிக்குகளுடைய அரசியல் போக்கையே தாமும் ஏற்று அவர்களுடன் சேர்ந்து

வேலை செய்தார்கள். முடிவில் இவர்கள் பணக்கார விவசாயிகள், அறிவுத்துறையினர், தொலை தூரக் கிராமாந்தர வட்டாரங்களைச் சேர்ந்த அரசியல் போதம் பெருத விவசாயிகள் ஆகியோரது பிரதிநிதிகளாயினர். ஆயினும் மென்ஷிவிக்குகளிடையே இருந்ததைக் காட்டிலும் இவர்களிடையே அரசியல், பொருளாதாரக் கருத்துச் சாயல்களில் அதிக அளவுக்கு வேறுபாடுகள் நிலவின. இக்கட்சியின் தலைவர்களில் இப்புத்தகத்தில் குறிப்பிடப்படுவோர்: அவ்க்சேன்தியெவ், கோட்ஸ், கேரென்ஸ்கி, செர்னேவ், ''பாபுஷ்கா'' பிரெஷ்கோவ்ஸ்கயா.

**அ) இடதுசாரி சோஷலிஸ்டுப் புரட்சியாளர்கள்.** தொழிலாளி வர்க்கச் சர்வாதிகாரத்துக்கான போல்ஷிவிக்கு வேலைத்திட்டத்தைத் தத்துவார்த்தத்தில் ஏற்றுக் கொண்டார்கள் என்ருலும், ஆரம்பத்தில் இவர்கள் தயவு தாட்சண்யமற்ற போல்ஷிவிக்குப் போர்த்தந்திரத்தைப் பின்பற்றத் தயங்கினுர்கள். ஆனல் இடதுசாரி சோஷலிஸ்டுப் புரட்சியாளர்கள் சோவியத்து அரசாங்கத்திலேதான் இருந்தார்கள், அமைச்சரவை உறுப்பினர்களாய் இருந்து முக்கியமாய் விவசாயத் துறை அமைச்சர் பதவி வகித்தனர். அரசாங்கத்தை விட்டுச் சில சமயம் வெளியேறினுர்கள் என்ருலும், எப்போதும் திரும்பி வந்து சேர்ந்து கொண்டார்கள். விவசாயிகள் மேலும் மேலும் அதிக எண்ணிக்கையில் **எஸ்ஸேர்**களின் அணிகளை விட்டுத் துறந்து இடதுசாரி சோஷலிஸ்டுப் புரட்சியாளர் கட்சியில் சேர்ந்து கொண்டனர்; இக்கட்சி விவசாயிகளது பெருங் கட்சியாயிற்று. சோவியத்து அரசாங்கத்தை இது ஆதரித்தது, பெரிய நிலப் பிரபுக்களுடைய பண்ணைகள் இழப்பீடின்றி பறிமுதல் செய்யப்படுவதையும், இந்நிலங்களை நேரடியாய் விவசாயிகள் தம்மிடையே பகிர்ந்து கொள்வதையும் ஆதரித்தது. இக்கட்சியின் தலைவர்களில் இங்கு குறிப்பிடப்படுகிறவர்கள்: ஸ்பிரிதோனவா, கரேலின், கம்கோவ், கலெகாயெவ்.

**ஆ) பெருமவரையாளர்கள்.** 1905ஆம் ஆண்டுப் புரட்சியின் போது **சோஷலிஸ்டுப் புரட்சியாளர் கட்சி** வலிமை வாய்ந்த விவசாயி இயக்கத்தின் கட்சியாய் இருந்த போது, சோஷலிஸ்டு வேலைத்திட்டத்தில் பெருமவரையான அளவு

உடனடியாய்ச் செயல்படுத்தப்பட வேண்டுமென்று கோரி இக்கட்சியிலிருந்து கிளைத்து உதித்தவர்கள். இப்போது இவர்கள் விவசாயி அராஜகவாதிகளாலாகிய மிகச் சிறு கோஷ்டியாய்க் குறுகிவிட்டனர்.

### கூட்ட நிகழ்ச்சிமுறை

ருஷ்யாவில் கூட்டங்களும் மாநாடுகளும் அதிகமாய்க் கண்டத்து நாடுகளது முறைப்படி நடத்தப்படுகின்றனவே அன்றி, நமது முறைப்படி அல்ல. தலைவரையும் செயலாளரையும் **தலைமைக் குழுவையும்** தேர்ந்தெடுப்பதுதான் வழக்கமாய் முதற்கண் நடைபெறும் நிகழ்ச்சி.

**தலைமைக் குழு** என்பது தலைமை வகிக்கும் தலைவர்களது குழுவாகும். இக்குழு அவையில் பிரதிநிதித்துவம் பெற்றுள்ள கோஷ்டிகள், அரசியல் கட்சிப் பிரிவுகள் ஆகியவற்றின் உறுப்பினர் எண்ணிக்கையின் விகிதப்படி அவற்றின் பிரதிநிதிகளைக் கொண்டதாகும். தலைமைக் குழு நிகழ்ச்சி நிரலைத் தீர்மானிக்கிறது. தலைமைக் குழுவின் உறுப்பினர்களில் எவரையும் தலைவர் அவ்வப்போது தலைமை வகிக்குமாறு அழைக்கலாம்.

ஒவ்வொரு பிரச்சினையும் **(வப்ரோஸ்)** பொது உரையாய் எடுத்துரைக்கப்படுகிறது, பிறகு விவாதிக்கப்படுகிறது. விவாதத்தின் முடிவில் வெவ்வேறு கட்சிப் பிரிவுகளும் தீர்மானங்களைச் சமர்ப்பிக்கின்றன, ஒவ்வொரு தீர்மானமும் தனித் தனியே ஓட்டுக்கு விடப்படுகிறது. முதல் அரை மணியில் நிகழ்ச்சி நிரல் தகர்க்கப்பட்டு விடலாம், பல சந்தர்ப்பங்களில் அவ்வாறே தகர்க்கவும் படுகிறது. கூட்டத்திலிருந்து எவரும் எழுந்து ''அவசர நிலைமை'' என்பதாய்ச் சொல்லி அனுமதி கோரும் போது அனேகமாய் எப்போதும் கூட்டம் அனுமதியளிக்கிறது, உடனே அவர் எந்த பொருள் குறித்தும் எதுவும் பேசலாம். கூட்டத்தினர் கூட்டத்தைத் தாமே கட்டுப்படுத்தி இயக்குகின்றனர், அவைத் தலைவர் செய்ய வேண்டியதெல்லாம் ஒரு சிறிய மணியை அடித்து ஒழுங்கை நிலைநாட்டுவதும் பேச்சாளர்களை அங்கீகரிப்பதும்தான். கூட்ட அமர்வின் மெய்யான வேலைகள் யாவும் அனேகமாய் வெவ்

வேறு கோஷ்டிகள், கட்சிப் பிரிவுகளின் உட்குழுக்களால் செய்யப்படுகின்றன, இக்கோஷ்டிகளும் பிரிவுகளும் அனேகமாய் எப்போதும் தனித் திரள்களாய்ச் சேர்ந்து ஓட்டு அளிக்கின்றன, இவை தத்தமது அரங்கத் தலைவர்களைக் கொண்டு செயற்படுகின்றன. இதன் விளைவு என்னவெனில், முக்கியமான புதிய விவகாரம் எழுந்ததும், அல்லது ஓட்டுக்கு விட வேண்டி வந்ததும் வெவ்வேறு கோஷ்டிகளும் கட்சிப் பிரிவுகளும் தனியே கூடி கலந்தாலோசிப்பதற்காக இடைநேரம் அறிவிக்கப்பட்டு கூட்ட அமர்வு கலைகின்றது.

கூட்டத்தினர் பெருங் கூச்சல் எழுப்புகிறார்கள், பேச்சாளர்களை ஆதரித்து முழக்கமிட்டு ஆரவாரம் செய்கிறார்கள், அல்லது இடைமறித்துக் கூச்சலிடுகிறார்கள், தலைமைக் குழுவின் நிகழ்ச்சி நிரல் திட்டங்களை ஒதுக்கித் தள்ளிவிடுகிறார்கள். வழக்கமாய் எழுப்பப்படும் கூச்சல்களில் சில வருமாறு: **''புரோசிம்!** பேசுங்கள்! தொடர்ந்து பேசுங்கள்!'' **''பிராவில்னு!''** அல்லது **''ஏத்தா** **வேர்னு!** மெய்தான்! அது சரிதான்!'', **''தவோல்னு!** போதும்!'', **''தலோய்!** ஒழிக!'' **''பஸோர்!** வெட்கம்!'', **''தீஷே!** சப்தம் போடாதீர்! மெதுவாய்!''

## செல்வாக்கு வாய்ந்த முக்கிய நிறுவனங்கள்

**1. சோவியத்து.** நெடுங் காலமாய் ருஷ்ய மொழியில் வழக்கிலுள்ள இச்சொல்லுக்கு ''ஆலோசனை சபை'' என்று பொருள். ஜாராட்சியின் போது இருந்த அரசு ஆலோசனை சபை **கசுதார்ஸ்த்வென்னி சோவியத்து** என்பதாய் அழைக்கப்பட்டது. ஆனால் புரட்சிக்குப் பிற்பாடு **சோவியத்து** என்னும் சொல் உழைப்பாளி மக்களாலும், பொருளுற்பத்திக் கூட்டுகளின் உறுப்பினர்களாலும் தேர்ந்தெடுக்கப்படும் குறிப்பிட்ட வகையிலான பிரதிநிதித்துவ மன்றங்களை—தொழிலாளர்கள் அல்லது படையாட்கள், அல்லது விவசாயிகள் பிரதிநிதிகளது சோவியத்துகளை—குறிப்பதாகியது. ஆகவே நான் இந்தச் சொல்லை இம்மாதிரியான நிறுவனங்களைக் குறிப்பதற்கு மட்டுமே இங்கு கையாளுகிறேன், வேறு விதமான

சந்தர்ப்பத்தில் வருகையில் இச்சொல்லே ''அவை'' என்பதாய் மொழிபெயர்க்கின்றேன்.

ருஷ்யாவின் ஒவ்வொரு நகரிலும் ஊரிலும் கிராமத்திலும் தேர்ந்தெடுக்கப்படும் உள்ளூர் சோவியத்துகளை அன்னியில்—பெரிய நகரங்களில் இவை தவிர வட்டார (ரய்யோன்னி) சோவியத்துகளையும் அன்னியில் — ஒப்லஸ்னீய அல்லது குபேர்ன்ஸ்கியா (மாவட்ட அல்லது மாநில) சோவியத்துகளும், மற்றும் தலைநகரில் அனைத்து ருஷ்ய சோவியத்துகளின் மத்தியச் செயற் கமிட்டியும்—இதன் முதலெழுத்துகளைக் கொண்டு இது இத்ஸேர-யி-க என்றழைக்கப்பட்டது. (கீழே ''மத்தியக் கமிட்டிகள்'' என்ற தலைப்பில் கூறப்படுவதைப் பார்க்கவும்)—இருந்தன.

மார்ச் புரட்சிக்குப் பிறகு சிறிது காலத்துக்குள் அனேகமாய் எங்கும் தொழிலாளர்கள் பிரதிநிதிகளது சோவியத்தும் படையாட்கள் பிரதிநிதிகளது சோவியத்தும் ஒன்றாய் இணைந்துவிட்டன. ஆயினும் அவர்களது தனி நலன்கள் சம்பந்தப்பட்ட விசேஷ விவகாரங்கள் குறித்து, தொழிலாளர்கள் பிரிவும் படையாட்கள் பிரிவும் தொடர்ந்து தனித் தனியே கூடி முடிவெடுத்தன. போல்ஷிவிக்கு ஆட்சி மாற்றம் நடைபெறும் வரையில் விவசாயிகள் பிரதிநிதிகளது சோவியத்துகள் ஏனைய இரண்டுடன் இணையவில்லை. விவசாயிகளும் தொழிலாளர்களையும் படையாட்களையும் போலவே ஒழுங்கமையப் பெற்றுதலைநகரில் அனைத்து ருஷ்ய விவசாயிகள் சோவியத்துகளின் செயற் கமிட்டியை நிறுவியிருந்தார்கள்.

**2. தொழிற் சங்கங்கள்.** பெரும்பாலும் தொழில் வாரியாய் அமைந்த ருஷ்யத் தொழிலாளர் சங்கங்களில் போல்ஷிவிக்குப் புரட்சியின் போது முப்பதிலிருந்து நாற்பது லட்சம் உறுப்பினர்கள் இருந்தார்கள். இந்தச் சங்கங்களும் அனைத்து ருஷ்ய நிறுவனமாய், ருஷ்யாவின் தொழிலாளர்களது ஒரு வகைக் கூட்டுச்சங்கமாய் ஒழுங்கமைக்கப்பட்டு, தலைநகரில் மத்தியச் செயற் கமிட்டியை நிறுவியிருந்தது.

**3. ஆலைக் கமிட்டிகள்.** புரட்சியைத் தொடர்ந்து ஏற்பட்ட நிர்வாகச் சிதைவைப் பயன்படுத்தித் தொழிலாளர்கள் தொழில் துறையைத் தமது கண்காணிப்பின் கீழ்

கொண்டு வருவதற்காக முயன்ற போது தொழிற்சாலைகளில் தன்முனைப்பாய்த் தொழிலாளர்கள் தோற்றுவித்த நிறுவனங்கள் இவை. புரட்சிகரச் செயலினுல் தொழிற்சாலைகளைத் தம் கைக்குக் கொண்டுவந்து அவற்றை நடத்திச் செல்வதே இவற்றின் பணியாய் இருந்தது. ஆலைக் கமிட்டிகளும் பெத்ரொகிராதில் தமது அனைத்து ருஷ்ய நிறுவனமாய் ஒரு மத்தியக் கமிட்டியை நிறுவியிருந்தன, இந்தக் கமிட்டி தொழிற்சங்கங்களுடன் ஒத்துழைத்தது.

4. **டூமாக்கள்.** டூமா என்னும் சொல்லுக்கு ''கருத்து உரைக்கும் சபை'' என்பதாய்ப் பொருள் கூறலாம். பழைய அரசாங்க டூமா ஜனநாயகத் தன்மையதாக்கப்பட்ட வடிவில் புரட்சிக்குப் பிற்பாடு ஆறு மாதங்கள் நீடித்திருந்தது, பிறகு 1917 செப்டம்பரில் இயற்கை எய்தியது. இப்புத்தகத்தில் குறிக்கப்படும் **நகர டூமா** திருத்தியமைக்கப்பட்ட நகராண்மைக் கழகமாகும், ''நகரத் தன்னுட்சி'' என்பதாய் அடிக்கடி இது அழைக்கப்பட்டது. நேரடியான இரகசிய வாக்கெடுப்பு மூலம் இது தேர்ந்தெடுக்கப்பட்டது. போல்ஷிவிக்குப் புரட்சியின் போது இதனுல் மக்கள் திரளினரை ஈர்த்துக் கொள்ள முடியாமற் போனதற்கு, வர்க்க அடிப்படையில் அமைந்த நிறுவனங்களின் ஓங்கி வளர்ந்து சென்ற சக்தியின் முன்னுல், வெறும் அரசியல் பிரதிநிதித்துவ அமைப்புகளின் செல்வாக்கு பொதுவாய் வீழ்ச்சியுற நேர்ந்ததே காரணமாகும்.

5. **ஸேம்ஸ்த்வொக்கள்.** பெரும் போக்காய்க் ''கிராமாந்தர நிர்வாகச் சபைகள்'' என்பதாய் மொழிபெயர்க்கலாம். ஜாராட்சியில் இவை மிகச் சொற்ப அளவுக்கே நிர்வாக அதிகாரம் பெற்று, பகுதியளவு அரசியல் தன்மையும் பகுதியளவு சமூகத் தன்மையும் கொண்ட அமைப்புகளாய் இருந்தன, பெரும்பாலும் நிலவுடைமையாளர் வர்க்கங்களைச் சேர்ந்த மிதவாத அறிவுத்துறையினரால் வளர்க்கப்பட்டு அவர்களுடைய பிடியில் இருந்தன. யுத்தத்தின் போது ஸேம்ஸ்த்வொக்கள் படிப்படியாய் ருஷ்ய சேனைக்கு உணவும் உடுப்புகளும் வழங்கும் பணி அனைத்தையும், மற்றும் வெளிநாடுகளிடமிருந்து கொள்வினையையும், போர்முனையில் அமெரிக்க ஒய். எம். சி.எ. புரிவதற்கு ஒப்பான படையாட்களிடையிலான வேலையையும் மேற்கொள்ளலாயின. மார்ச் புரட்

சிக்குப் பற்பாடு ஸேம்ஸ்த்வொக்களைக் கிராமாந்தர வட்டா ரங்களில் ஆட்சி உறுப்புகளாக்கும் பொருட்டு அவை ஜன நாயக அமைப்புகளாக்கப்பட்டன. ஆனால் நகர டூமாக்களைப் போலவே அவற்றாலும் சோவியத்துகளுடன் போட்டியிட முடியவில்லை.

**6. கூட்டுறவுக் கழகங்கள்.** தொழிலாளர்கள், விவசாயி களது நுகர்வாளர் கூட்டுறவுக் கழகங்களான இவற்றில் புரட்சிக்கு முன்பு ருஷ்யா பூராவிலும் இருந்த உறுப்பினர் களின் தொகை பல பத்துலட்சங்கள் இருந்திருக்கும். மித வாதிகளாலும் ''மிதவாத'' சோஷலிஸ்டுகளாலும் ஆரம்பிக்கப்பட்ட இந்தக் கூட்டுறவு இயக்கத்தை புரட்சிகர சோஷலிஸ்டுக் கோஷ்டிகள் ஆதரிக்கவில்லை; ஏனெனில் உற்பத்திக்கும் வினியோகத்துக்குமான சாதனங்கள் யாவும் அறவே தொழிலாளர்களது கைகளுக்கு மாற்றப்படுவதற்கு இவ்வியக்கம் ஒரு மாற்று அமைவாய் இருந்து வந்தது. மார்ச் புரட்சிக்குப் பிற்பாடு கூட்டுறவுக் கழகங்கள் வேகமாய்ப் பரவின; நரோத்னிய சோஷலிஸ்டுகளும், மென்ஷிவிக்கு களும், சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களும் இவற்றைத் தமது ஆதிக்கத்தின் கீழ் கொண்டு வந்தார்கள். போல்ஷிவிக்குப் புரட்சி நடைபெறும் வரை இவை பழமைவாத அரசியல் சக்தியாய்ச் செயல்பட்டு வந்தன. ஆனால் வாணிபத்துக்கும் போக்குவரத்துக்குமான பழைய கட்டமைப்பு தகர்ந்துவிட்ட போது கூட்டுறவுக் கழகங்கள் தான் ருஷ்யாவுக்கு உணவு அளித்தன.

**7. சேனைக் கமிட்டிகள்.** பழைய ஆட்சியின் இராணுவ அதி காரிகளது பிற்போக்குச் செல்வாக்கினை எதிர்த்துப் போராடுவதற்காகப் போர்முனையில் படையாட்கள் சேனைக் கமிட்டிகளை நிறுவிக் கொண்டனர். ஒவ்வொரு கம்பெனியும் ரெஜிமெண்டும் பிரிகேடும் டிவிஷனும் படையணியும் அதன் கமிட்டியைப் பெற்றிருந்தது. இவை யாவற்றுக்கும் மேலாய் சேனைக் கமிட்டி தேர்ந்தெடுக்கப்பட்டது. மத்தியச் சேனைக் கமிட்டி இராணுவத் தலைமை அலுவலர்களுடன் ஒத்துழைத் தது. புரட்சியைத் தொடர்ந்து சேனையில் நிர்வாகம் தகர்ந்து போனதன் விளைவாய், சேனைக் கமிட்டிகள் படைமனை மேலா ளர் துறையின் பணிகளை மட்டுமின்றி, சில சந்தர்ப்பங்களில்

படைத் திலமையையுங்கூட தாமே மேற்கொள்ள வேண்டி யதாயிற்று.

**8. கப்பற் படைக் கமிட்டிகள்.** மேற்கூறியதற்கு ஒப்பான முறையில் கடற் படையில் அமைந்த நிறுவனங்கள்.

## மத்தியக் கமிட்டிகள்

1917ஆம் ஆண்டு வசந்தத்திலும் கோடையிலும் எல்லா வகையான நிறுவனங்களது அனைத்து ருஷ்ய மாநாடுகளும் பெத்ரொகிராதில் நடைபெற்றன. தொழிலாளர்கள், படையாட்கள், விவசாயிகளது பிரதிநிதிகளின் சோவியத்துகள், தொழிற் சங்கங்கள், ஆலைக் கமிட்டிகள், சேனை, கப்பற் படைக் கமிட்டிகள் ஆகியவற்றின் தேசியக் காங்கிரசுகளும், மற்றும் இராணுவத் துறை, கடற்படைத் துறையின் ஒவ்வொரு கிளையும், கூட்டுறவுச் சங்கங்களும் தேசிய இனங்களும் இன்ன பிறவும் காங்கிரசுகளை நடத்தின. இந்த மாநாடுகள் ஒவ்வொன்றும் அரசாங்கத் தலைமையிடத்தில் தனதுதனி நலன்களைப் பாதுகாத்துக் கொள்வதற்காக ஒரு மத்தியக் கமிட்டி அல்லது மத்தியச் செயற் கமிட்டியைத் தேர்ந்தெடுத்தது. இடைக்கால அரசாங்கம் பலமிழந்து செல்லவே,இந்த மத்தியக் கமிட்டிகள் மேலும் மேலும் அதிகமான நிர்வாக அதிகாரங்களைத் தாமே ஏற்றுச் செயல்பட வேண்டியதாயிற்று.

இந்தப் புத்தகத்தில் குறிக்கப்படும் மிக முக்கிய மத்தியக் கமிட்டிகளாவன:

**ஒன்றியங்களின் ஒன்றியம்.** 1905ஆம் ஆண்டுப் புரட்சியின் போது பேராசிரியர் மில்யுக்கோவும் பிற மிதவாதிகளும் டாக்டர்கள், வழக்கறிஞர்கள் முதலான பல தனித் துறையாளர்களது ஒன்றியங்களை அமைத்தனர். இவை ஒன்றியங்களின் ஒன்றியம் என்ற பெயரில் ஒரே மத்திய நிறுவனமாய் ஒன்றுபட்டன. 1905ல் ஒன்றியங்களின் ஒன்றியம் புரட்சிகர ஜனநாயகத்துடன் ஒத்துழைத்தது. ஆனால் 1917ல் ஒன்றியங்களின் ஒன்றியம் போல்ஷிவிக்கு எழுச்சியை எதிர்த்துச் செயல்பட்டது, அரசாங்கப் பணியாளர்களை ஒன்று திரட்டி சோவியத்துகளின் ஆட்சியதிகாரத்தை எதிர்த்து இவர்களை வேலைநிறுத்தம் செய்ய வைத்தது.

**இத்ஸே-யி-க.** தொழிலாளர்கள், படையாட்கள் பிரதிநிதிகளது சோவியத்துகளின் அனைத்து ருஷ்ய மத்திய நிர்வாகக் கமிட்டி. இதன் பெயரின் முதலெழுத்துகளைக் கொண்டு இவ்வாறு அழைக்கப்பட்டது.

**இத்ஸென்திரஃப்ளோத்.** ''மத்தியக் கப்பற் படை''— மத்தியக் கப்பற் படைக் கமிட்டி.

**விக்ழேல்.** ரயில்வேத் தொழிலாளர் சங்கங்களின் அனைத்து ருஷ்ய மத்தியக் கமிட்டி. இதன் பெயரின் முதலெழுத்துகளைக் கொண்டு இவ்வாறு அழைக்கப்பட்டது.

## பிற நிறுவனங்கள்

**செங்காவலர்கள்.** ஆயுதமேந்திய ருஷ்ய ஆலைத் தொழிலாளர்கள். செங்காவலர்கள் முதன்முதல் 1905ஆம் ஆண்டுப் புரட்சியின் போது அமைக்கப்பட்டனர்; 1917 மார்ச் நாட்களின் போது நகரில் ஒழுங்கைப் பராமரிக்க ஒரு படை தேவைப்பட்டதும் மீண்டும் உதித்தெழுந்தனர். அப்போது இவர்கள் ஆயுதபாணி ஆயினர், இவர்களிடமிருந்து ஆயுதங்களைப் பறிப்பதற்கு இடைக்கால அரசாங்கம் மேற்கொண்ட எல்லா முயற்சிகளும் தோல்வியுற்றன. புரட்சியின் ஒவ்வொரு பெரிய நெருக்கடியின் போதும் செங்காவலர்கள் தெருக்களில் தோன்றினர்; பயிற்சி பெறுதோராகவும் கட்டுப்பாடற்றோராகவுமே இருந்தார்கள் என்றாலும், புரட்சி ஆர்வம் மிக்கோராய்ச் செயல்பட்டனர்.

**வெண்காவலர்கள்.** முதலாளித்துவத் தொண்டர் படையினர், புரட்சியின் இறுதிக் கட்டங்களின் போது, தனியார் சொத்துடைமையை ஒழித்திடுவதற்காக போல்ஷிவிக்குகள் செய்த முயற்சியிலிருந்து அதைப்பாதுகாப்பதற்காகத் திரட்டப்பட்டவர்கள். இவர்களில் மிகப் பெரும் பகுதியோர் பல்கலைக்கழக மாணவர்கள்.

**தெக்கீன்த்ஸி.** சேனையின் ''கொடும் படை'' என்பதான படைத் தொகுதி, மத்திய ஆசிய முஸ்லீம் பழங்குடியினரால் ஆனது, ஜெனரல் கர்னீலவுக்குத் தனிப்பட்ட முறையில் விசுவாசம் செலுத்தியது. தெக்கீன்த்ஸி படையினர் கண்மூடித்தனமாய்க் கீழ்ப்படிந்து உத்தரவுகளை நிறைவேற்றுவதற்கும்,

போர்களில் கொடிய மூர்க்கத்துக்கும் பெயர் பெற்றவர்கள்.

**சாவுப் பட்டாளங்கள். அல்லது அதிர்ச்சிப் பட்டாளங்கள்.** பெண்டிர் பட்டாளத்தைச் சாவுப் பட்டாளமாய் உலகம் அறியும், ஆனால் ஆடவராலான சாவுப் பட்டாளங்களும் பல இருந்தன. முன்னுதாரணமான வீரத்தின் மூலம் சேனையின் கட்டுப்பாட்டையும் போர்த் திறனையும் உயர்த்தும் பொருட்டு, 1917ஆம் ஆண்டு கோடையில் கேரென்ஸ்கியால் நிறுவப்பட்டவை இவை. இந்தச் சாவுப் பட்டாளங்கள் தீவிர தேசியவாத இளைஞர்களைக் கொண்டு அமைந்தவை. இவர்களில் பெரும் பகுதியானோர் சொத்துடைத்த வர்க்கங் களது புதல்வர்களாவர்.

**இராணுவ அதிகாரிகளது ஒன்றியம்.** ஓங்கி வளர்ந்து சென்ற சேனைக் கமிட்டிகளது அதிகாரத்தை அரசியல் முறை யில் எதிர்த்துப் போராடுவதற்காக சேனையில் பிற்போக்கு அதிகாரிகளைக் கொண்டு அமைக்கப்பட்ட நிறுவனம்.

**ஜார்ஜ் வீரமறவர்கள்.** போரில் வீரச் செயல் புரிந்தோ ருக்கு ஜார்ஜ் சிலுவை விருது அளிக்கப்பட்டது. இவ் விருதைப் பெற்றவர்கள் ''ஜார்ஜ் வீரமறவர்'' பட்டத்துக்கு உரியோராயினர். ஜார்ஜ் வீரமறவர்களது நிறுவனத்தில் இராணுவ ஆட்சி ஆதரவளர்கள் ஆதிக்கத்தில் இருந்தனர்.

**விவசாயிகளது ஒன்றியம்.** 1905ல் விவசாயிகளது ஒன்றி யம் புரட்சிகர விவசாயிகளது நிறுவனமாய் இருந்தது. ஆனால் 1917ல் இது பணக்கார விவசாயிகளது அரசியல் நலன்களைப் பிரதிபலிப்பதாகி, விவசாயிகள் பிரதிநிதிகளது சோவியத்துகளுடைய வளர்ந்து சென்ற அதிகாரத்தையும் அவற்றின் புரட்சிகர நோக்கங்களையும் எதிர்த்துப் போரா டிற்று.

## காலண்டரும் எழுத்துப் பெயர்ப்பும்

பதின்மூன்று நாட்கள் பிற்பட்டதாய் அமைந்த பழைய ருஷ்யக் காலண்டருக்குப் பதில், நம்முடையதையே இப்புத் தகம் பூராவிலும் அனுசரித்திருக்கின்றேன்.

ருஷ்யப் பெயர்களையும் சொற்களையும் எழுத்துப் பெயர்ப்பு செய்கையில் நான் எந்த விஞ்ஞான விதிமுறையையும் பின்

பற்ற முயலவில்லை; வாசகர் தமது மொழியின் வழியில் கூடு மான அளவுக்கு ருஷ்ய உச்சரிப்பை நெருங்கி வர உதவ முயன்றுள்ளேன்.

## தகவல் ஆதாரங்கள்

இந்தப் புத்தகத்தில் கூறப்படுகின்றவற்றில் பெரும் பகுதி எனது சொந்தக் குறிப்புகளிலிருந்து எடுக்கப்பட்டதா கும். மற்றும், இங்கு விவரிக்கப்படும் காலத்தில் அனேகமாய் ஒவ்வொரு நாளையும் பற்றியவையான பல்வேறு வகைப்பட்ட பல நூறு ருஷ்யச் செய்தியேடுகளின் கட்டுகளையும், *Russian Daily News* [''ருஷ்யத் தினசரிச் செய்திகள்''] என்ற ஆங்கில ஏட்டின் கட்டுகளையும், *Journal de Russie* [ருஷ்ய நாளேடு], *Entente* [நேசக் கூட்டு] என்ற இரு பிரெஞ்சு ஏடுகளின் கட்டு களையும் நான் ஆதாரமாய்க் கொண்டேன். இந்த ஏடுகளைவிட எனக்கு மிகவும் முக்கிய ஆதாரமாய் அமைந்தது, பெத்ரொ கிராதில் பிரெஞ்சு செய்தி அலுவலகம் நாள்தோறும் வெளி யிட்ட *Bullettin de la Presse* [''பத்திரிகைச் செய்தியறிக் கை'']. இதில் எல்லா முக்கிய நிகழ்வுகளும் சொற்பொழிவு களும் ருஷ்யப் பத்திரிகைகளின் கருத்துரைகளும் அறிவிக்கப் பட்டு வந்தன. 1917ஆம் ஆண்டு வசந்தத்திலிருந்து 1918 ஜனவரி முடிவு வரையில் வெளிவந்த இந்தச் செய்தியறிக்கை கள் அனேகமாய் யாவும் அடங்கிய கட்டு என்னிடம் உள்ளது.

இவை தவிர, 1917 செப்டம்பர் நடுவிலிருந்து 1918 ஜன வரி முடிவு வரை பெத்ரொகிராதில் சுவர்களில் ஒட்டப் பட்ட பிரகடனங்கள், அரசாணைகள், அறிவிப்புகள் யாவும் அனேகமாய் ஒன்று விடாமல் என்னிடம் இருக்கின்றன. இதே போல எல்லா அரசாணைகளும் அரசாங்க உத்தரவுகளும் அடங்கிய அதிகாரபூர்வமான வெளியீடுகளும், அயல்துறை அமைச்சகம் போல்ஷிவிக்குகளின் கைக்கு வந்ததும் அங்கு கண்டுபிடிக்கப்பட்ட இரகசிய ஒப்பந்தங்கள், ஏனைய ஆவணங் களது அதிகாரபூர்வமான அரசாங்க வெளியீடும் என் வச முள்ளன.

## அத்தியாயம் 1

# பின்னணி

ருஷ்யாவுக்கு வருகை தந்திருந்த வெளிநாட்டுச் சமூகவியல் பேராசிரியர் ஒருவர் 1917 செப்டம்பர் முடிவில் பெத்ரொகிராதில் என்னைச் சந்தித்துப் பேசினர். புரட்சி தணிந்து வருவதாய்த் தொழில், வாணிப வட்டாரத்தினரும் அறிவுத்துறையோரும் அவரிடம் சொல்லியிருந்தார்கள். பேராசிரியர் இதைப் பற்றி ஒரு கட்டுரை எழுதிவிட்டு, நாட்டில் சுற்றுப் பயணம் செய்து, தொழில் நகரங்களையும் விவசாயக் கிராமங்களையும் பார்வையிட்டார்—எங்கும் அவர் வியப்புறும் வண்ணம், புரட்சி மும்முரமடைந்து வரக் கண்டார். தொழிலாளர்களிடத்தும் விவசாயிகளிடத்தும் ஓயாமல் ஒரேபேச்சு அடிபடக் கேட்டார்: ''நிலம் எல்லாம் விவசாயிகளுக்கே, ஆலைகள் எல்லாம் தொழிலாளர்களுக்கே.'' பேராசிரியர் போர்முனைக்குச் சென்றிருந்தால், சேனை அனைத்தும் சமாதானம் குறித்துப் பேசக் கேட்டிருப்பார்....

பேராசிரியருக்குத் திகைப்பாய் இருந்தது. உண்மையில் அவர் திகைப்புற்றிருக்க வேண்டியதில்லை: இரண்டு கருத்துப் பதிவுகளும் முற்றிலும் சரியானவையே. சொத்துடைத்த வர்க்கங்கள் மேலும் மேலும் பழமைப் பற்றுமிக்கனவாகி வர, மக்கள் பெருந்திரள்கள் மேலும் மேலும் தீவிர மனப் பாங்குடையனவாய் மாறிச் சென்றன.

தொழில், வாணிப வட்டாரத்தாரிடமும் பொதுவாய் அறிவுத்துறையோரிடமும் நிலவிய எண்ணம் என்னவெனில்,

புரட்சியானது போதுமான தொலைவுக்குச் சென்றுவிட்டது, நீண்ட காலத்துக்கு நீடித்துவிட்டது, இனி யாவும் ஒழுங்கு நிலைக்குத் திரும்பிவிட வேண்டும் என்பதே. இதே விருப்பம் தான் கேரென்ஸ்கியை ஆதரித்து நின்ற தலைமையான ''மித வாத'' சோஷலிஸ்டுக் கோஷ்டிகளிடத்தும், **அபரோன்த்ஸி**[1*] மென்ஷிவிக்குகளிடத்தும், சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களி டத்தும் மேலோங்கியிருந்தது.

''மிதவாத'' சோஷலிஸ்டுகளுடைய அதிகாரபூர்வமான ஏடு** அக்டோபர் 27ல் எழுதிற்று:

புரட்சியின் நாடகம் இரண்டு அங்கங்களைக் கொண்டது: முதலாவது பழைய ஆட்சியினை ஒழித்திடுதல், இரண்டாவது புதிய ஆட்சியினை உருவாக்குதல். முதலாவது அங்கம் போதிய அளவுக்கு நீடித்து நடைபெற்றுள்ளது. இப்போது இரண்டாவதுக்குச் சென்று கூடுமான வேகத்தில் அதை நடத்திச் செல்வதற்குரிய நேரம் வந்துவிட்டது. மாபெரும் புரட்சியாளர் ஒருவர் இதை எடுத்துரைத்தது போல், 'நண்பர்களே, வாருங்கள் சீக்கிரம், புரட்சிக்கு முடிவு கட்டு வோம். அதை அதிக காலம் நீடிக்கச் செய்வோருக்கு அதன் கனிகள் கைவரப் பெறு....'

ஆனல் தொழிலாளி, படையாள், விவசாயிப் பெருந் திரளினரிடத்தே, ''முதலாவது அங்கம்'' இன்னும் முடிவுற் ருகவில்லை என்ற விடாப்பிடியான எண்ணம் நிலை கொண் டிருந்தது. போர்முனையில் சேனைக் கமிட்டிகள் எந்நேரமும் இராணுவ அதிகாரிகளுடன் முட்டி மோதின, இந்த அதிகாரி களுக்குத் தமது படையாட்களை மனிதப் பிறவிகளாய் மதித்து நடத்தும் பழக்கம் வருவதாய் இல்லை. பின்னிலைப் பகுதிகளில்

---

* இவ்வாறு இந்த அத்தியாயத்தில் எண்ணிட்டுக் காட் டப்படும் சுட்டுக்குறிகள் அத்தியாயம் 1இன் அனுபந்தத் தைக் குறிப்பவை.

** இங்கு குறிக்கப்படும் செய்தியோடு **இஸ்வேஸ்தியா இத்ஸ்-யி-க**; அன்று இது மென்ஷிவிக்குகள், சோஷலிஸ்டுப் புரட்சியாளர்கள் ஆகியோரது கையில் இருந்தது.—[பதிப் பாசிரியர்.]

விவசாயிகள் தேர்ந்தெடுத்த நிலக் கமிட்டிகள் நிலங்களைப் பற்றிய அரசாங்க விதிமுறைகளைச் செயல் படுத்த முயன்ற தற்காகச் சிறைப் பிடிக்கப்பட்டன; ஆலைகளில் தொழிலா ளர்கள்[2] கரும் பட்டியல்களையும் கதவடைப்புகளையும் எதிர்த் துப் போராடினர்கள். அது மட்டுமன்றி, நாடு கடத்தப்பட் டிருந்தோர் வெளிநாடுகளிலிருந்து திரும்பிய போது அவர் கள் ''விரும்பத்தகாத'' குடிகளாய் நாட்டிலிருந்து விலக்கப் பட்டனர்; சில சந்தர்ப்பங்களில் வெளிநாடுகளிலிருந்து தமது கிராமங்களுக்குத் திரும்பி வந்தவர்கள் மீது வழக்கு தொடரப்பட்டு, அவர்கள் 1905ல் புரிந்த புரட்சிகரச் செயல்களுக்காகச் சிறையில் அடைக்கப்பட்டனர்.

மக்களுடைய நானுவிதமான அதிருப்திகளுக்கும் ''மித வாத'' சோஷலிஸ்டுகள் ஒரே பதிலைத்தான் கூறி வந்தனர்: காத்திருங்கள், டிசம்பர் மாதத்தில் அரசியல் நிர்ணயச் சபை கூடப் போகிறது. ஆனல் மக்கள் திரளினருக்கு இது மனநிறைவு அளிக்கவில்லை. அரசியல் நிர்ணயச் சபை கூடட் டும், நல்லதுதான். ஆனல் ருஷ்யப் புரட்சி நடத்தப்பட்ட தும், புரட்சியின் தியாகிகள் மார்ஸ் புலனில்* சோதரத் துவச் சமாதியில் புதையுண்டதும் திட்டவட்டமான சில கோரிக்கைகளுக்காக—சமாதானம், நிலம், தொழில் துறை தொழிலாளர்களது கட்டுப்பாட்டின் கீழ் வருதல் ஆகியவற் றுக்காக. அரசியல் நிர்ணயச் சபை கூடினலும் சரி, கூடாவிட் டாலும் சரி, இந்தக் கோரிக்கைகள் நிறைவேற்றப்பட்டே ஆக வேண்டும். திரும்பத் திரும்ப அரசியல் நிர்ணயச் சபை ஒத்திப் போடப்பட்டு வந்துள்ளது. இனியும் அது ஒத்திப் போடப்படலாம், போதிய அளவுக்கு மக்கள் அமைதி நிலை அடையும் வரை, தமது கோரிக்கைகளை மாற்றிக் கொள்ளும் படியான அளவுக்கு அவர்கள் அமைதி நிலை அடையும் வரை, தொடர்ச்சியாய் ஒத்திப் போடப்படலாம்! எப்படியும்

---

* மார்ஸ் புலன் — பெத்ரொகிராதில் (இப்போது லெனின்கிராது)ஒரு சதுக்கம்; எதேச்சாதிகாரத்தை எதிர்த்து மார்ச் மாத ஜனநாயகப் புரட்சியின் போது போராடி உயிர்த் தியாகம் புரிந்த வீரர்கள் 1917 ஏப்ரல் 5ல் இங்கே அடக்கம் செய்யப்பட்டனர்.—[பதிப்பாசிரியர்.]

புரட்சி தொடங்கி எட்டு மாதங்கள் உருண்டோடிவிட்டன, இன்னமும் எந்தப் பலனையும் காணோம்....

இதற்கிடையில் படையாட்கள் சமாதானப் பிரச்சினைக்குத் தீர்வு காண ஆரம்பித்தார்கள்—படைகளை விட்டுத் துறந்தோடுவதன் மூலம்; விவசாயிகள் பிரபுக்களின் பண்ணை மனைகளை எரித்துப் பெரும் பண்ணைகளைக் கைப்பற்றிக் கொண்டார்கள்; தொழிலாளர்கள் கீழ்ப்படிய மறுத்து வேலைநிறுத்தம் செய்தார்கள்.... இயற்கையாய் எதிர்பார்க்கக் கூடியது போலவே ஆலை முதலாளிகளும் நிலப்பிரபுக்களும் இராணுவ அதிகாரிகளும் ஜனநாயக அடிப்படையில் மக்கள் திரளினருக்கு விட்டுக்கொடுக்க மறுத்துத் தமது செல்வாக்கு அனைத்தையும் பிரயோகித்துச் செயல்பட்டனர்....

இடைக்கால அரசாங்கத்தின் கொள்கை பயனளிக்காத சீர்திருத்தங்களுக்கும் கடுமையான அடக்குமுறை நடவடிக்கைகளுக்கும் இடையே ஊசலாடிற்று. தொழிலாளர்களது சோஷலிஸ்டு அமைச்சரின் ஆணை ஒன்று, தொழிலாளர் கமிட்டிகள் எல்லாம் இனி வேலைநேரத்துக்குப் பிற்பாடே கூடலாமென உத்தரவிட்டது. போர்முனையில் துருப்புகளிடையே, எதிர்க் கட்சிகளின் ''கிளர்ச்சிக்காரர்கள்'' கைது செய்யப்பட்டனர்; தீவிரவாதச் செய்தியேடுகள் தடைவிதிக்கப்பட்டு மூடப்பட்டன; மரண தண்டனை விதிக்கப்பட்டது—புரட்சியின் பிரசாரகர்களுக்கு. செங்காவலர்களிடமிருந்து அவர்களது ஆயுதங்களைப் பறிப்பதற்கு முயற்சிகள் செய்யப்பட்டன. மாநிலங்களில் ஒழுங்கை நிலைநாட்ட கசாக்குப் படையினர் அனுப்பி வைக்கப்பட்டனர்....

இந்த நடவடிக்கைகளை ''மிதவாத'' சோஷலிஸ்டுகளும் அமைச்சரவையிலிருந்த அவர்களது தலைவர்களும் ஆதரித்தார்கள், இத்தலைவர்கள் சொத்துடைத்த வர்க்கங்களோடு ஒத்துழைப்பது அவசியமெனக் கருதினார்கள். மக்கள் இவர்களை அதிவேகமாய் விட்டுப் பிரிந்து, சமாதானத்துக்காகவும் நிலத்துக்காகவும் தொழில் துறையின் மீது தொழிலாளர்களது கட்டுப்பாட்டுக்காகவும், தொழிலாளி வர்க்க அரசாங்கத்துக்காகவும் நின்ற போல்ஷிவிக்குகளின் பக்கம் சென்றனர். 1917 செப்டம்பரில் விவகாரங்கள் முற்றி நெருக்கடி நிலையை அடைந்தன. கேரென்ஸ்கியும் ''மிதவாத''

சோஷலிஸ்டுகளும் சொத்துடைத்த வர்க்கங்களுடன் கூட்டணி அரசாங்கம் நிறுவுவதில் வெற்றியடைந்தார்கள். இதன் விளைவாய் மென்ஷிவிக்குகளும் சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களும் என்றென்றுக்குமாய் மக்களது நம்பிக்கையை இழக்க வேண்டியதாயிற்று.

அக்டோபர் நடுவில் ரபோச்சி பூத் (தொழிலாளர் பாதை) செய்தியேடு ''சோஷலிஸ்டு அமைச்சர்கள்''[3] என்று தலைப்பிட்டு எழுதிய கட்டுரையில் ''மிதவாத'' சோஷலிஸ்டுகளின் பால் பெருந் திரள் மக்களுக்கு இருந்த மனப்பாங்கை வெளிப்படுத்தியது:

அவர்கள் ஆற்றிய சேவைகளின் பட்டியல் இதோ இருக்கிறது.

திஸெரெத்தேலி: ஜெனரல் போலவ்த்சவுடன் சேர்ந்து தொழிலாளர்களை நிராயுதபாணியாக்கினர், புரட்சிகரப் படையாட்களை அடக்கி இருத்தினர், சேனையில் மரண தண்டனை விதிக்கப்படுவதற்கு அங்கீகாரம் அளித்தார்.

ஸ்கோபெலெவ்: முதலாளிகளுக்கு அவர்களது இலாபத்தில் 100% வரி விதிக்கும் முயற்சியிலிருந்து ஆரம்பித்தவர்... தொழிற்கூடங்களிலும் ஆலைகளிலும் தொழிலாளர்களது கமிட்டிகளைக் கலைத்திடும் முயற்சியிலே வந்து நின்றார்.

அவ்க்சேன்தியெவ்: நிலக் கமிட்டிகளின் உறுப்பினர்களான பல நூறு விவசாயிகளைச் சிறையிலே அடைத்தார்; தொழிலாளர்கள், படையாட்களது செய்தியேடுகளை டஜன் கணக்கில் நசுக்கினர்.

செர்னேவ்: பின்லாந்தின் பிரதிநிதித்துவச் சபையைக் கலையுமாறு உத்தரவிட்ட ஜாரிஸ்டு அறிக்கையில் கையொப்பமிட்டார்.

சாவின்கவ்: ஜெனரல் கர்னீலவுடன் பகிரங்கக் கூட்டு அமைத்துக் கொண்டார். நாட்டின் இந்த ரட்சகர் பெத்ரொகிராதைக் காட்டிக்கொடுப்பதில் வெற்றி பெறவில்லைஎன்றால், அதற்குப் பொறுப்பு அவரை மீறிய காரணங்களே அன்றி அவரல்ல.

ஸரூத்னி: அலெக்சீன்ஸ்கி, கேரென்ஸ்கி இவர்களது அங்கீகாரத்தின் பேரில் புரட்சியின் சிறந்த சில தொழிலாளர்

களையும் படையாட்களையும் மாலுமிகளையும் சிறையிலே தள்ளினுர்.

நிக்கீத்தின்: ரயில்வேத் தொழிலாளர்களுக்கு எதிராய்க் கேவல போலீஸ் ஆளுக்குரிய கைங்கரியத்தைச் செய்தார்.

கேரென்ஸ்கி: இவரைப் பற்றி ஒன்றும் சொல்லாமல் விடுவதே உத்தமம். இவருடைய சேவைகளின் பட்டியல் மிகமிக நீளமானது....

ஹெல்சிங்போர்சில் கூடிய பால்டிக் கப்பற் படைப் பிரதிநிதிகளது காங்கிரசில் நிறைவேற்றப்பட்ட ஒரு தீர்மானத்தின் தொடக்கம் வருமாறு:

...''சோஷலிஸ்டு'' இடைக்கால அரசாங்கத்தின் அணியிலிருந்து அரசியல் சாகசக்காரர் கேரென்ஸ்கியை உடனடியாய் விலக்க வேண்டுமெனக் கோருகிறேம்; முதலாளித்துவ வர்க்கத்தின் சார்பில் இவர் மானவெட்கமின்றி அரசியல் பகற் கொள்ளை நடத்தி மாபெரும் புரட்சியையும் அதனுடன் கூட புரட்சிகர வெகு ஜனங்களையும் இழிவுபடுத்தி நாசத்துக்கு உள்ளாக்குகிற ஆள் என்பதால் இவ்வாறு கோருகிறேம்....

போல்ஷிவிக்குகளுடைய செல்வாக்கின் வளர்ச்சியே இவை யாவற்றின் நேரடி விளைவு....

கரை புரண்டெழுந்த தொழிலாளர்கள், படையாட்களது வெள்ளப் பெருக்கு 1917 மார்ச்சில் தவ்ரீத் அரண்மனையின் மீது முட்டி மோதி, மனமில்லாத அரசாங்க டூமாவினை ருஷ்யாவின் தலைமை ஆட்சியாதிகாரத்தை மேற்கொள்ளுமாறு கட்டாயப் படுத்திய காலம் முதலாய்ப் புரட்சியின் போக்கிலே ஏற்பட்ட ஒவ்வொரு மாறுதலையும் பலவந்தமாய் நடைபெறச் செய்தது தொழிலாளர்களும் படையாட்களும் விவசாயிகளுமான மக்கள் பெருந் திரளினர்தான். இவர்கள்தான் மில்யூக்கவின் அமைச்சரவையைத் தூக்கியெறிந்தவர்கள், இவர்களுடைய சோவியத்துதான் உலகுக்கு ருஷ்யாவின் சமாதானப் பிரேரணையைப் பிரகடனம் செய்தது—''பிரதேசக் கைப்பற்றல்களுக்கு இடமில்லை, இழப்



ஆலைக் கமிட்டிகளது பெத்ரொகிராது மாநாடு,
ஜூன் 12-16, 1917



கைக்குண்டுப் படைப்பிரிவின் கொட்டடியில் படையாட்களது
பொதுக் கூட்டம், 1917 அக்டோபர்.
பேசுகிறவர் பால்டிக் கப்பற்படையைச் சேர்ந்த ஒரு மாலுமி

பீட்டுத் தண்டத் தொகைகளுக்கு இடமில்லை, தேசங்களுக்குச் சுய-நிர்ணய உரிமை''. மீண்டும் ஜூலை மாதத்தில் நிறுவன ஒழுங்கமைப்பில்லாத பாட்டாளி வர்க்கத்தாரது தன்னியல்பான எழுச்சிதான் மறுபடியும் தவ்ரீத் அரண்மனையைச் சுற்றிவளைத்துக் கொண்டு ருஷ்யாவின் ஆட்சியதிகாரத்தை சோவியத்துகளே மேற்கொள்ள வேண்டுமென்று கோரிற்று.

அப்போது சிறிய அரசியல் குழுவோராய்* இருந்த போல்ஷிவிக்குகள் இந்த இயக்கத்துக்குத் தலைமை ஏற்று இதை வழிநடத்தினர். இந்த எழுச்சி துயரார்ந்த முறையில் தோல்வியுற்றதன் பலனாய்ப் பொது அபிப்பிராயம் இவர்களுக்கு எதிராய்த் திரும்பிற்று. இவர்களுடைய தலைமையை இழக்கும்படியாகிய கூட்டத் திரளினர் பின்வாங்கிச் சென்று பெத்ரொகிராதின் செயின்ட் அந்துவானாகிய** வீபர்க் வட்டாரத்துக்குத் திரும்பி வந்து பதுங்கிக் கொண்டனர். இதைத் தொடர்ந்து கொடூர அடக்குமுறை துவக்கப்பட்டு போல்ஷிவிக்குகள் வேட்டையாடப்பட்டனர்; திரோத்ஸ்கியும்***

---

* *1917 மார்ச் மாத முதலாளித்துவப் புரட்சியை அடுத்து, அப்போதுதான் தலைமறைவு நிலையிலிருந்து வெளிப்பட்டு வந்திருந்த போல்ஷிவிக்குக் கட்சி, உறுப்பினர் எண்ணிக்கையில் ஒப்பளவில் சிறியதாகவே இருந்தது.—[பதிப்பாசிரியர்.]*

** *செயின்ட் அந்துவான்—பாரிஸ் நகரின் சுற்று வட்டாரங்களில் ஒன்று; 18ஆம் நூற்றாண்டின் கடைப் பகுதியிலும் 19ஆம் நூற்றாண்டிலும் நடைபெற்ற புரட்சியின் எழுச்சிகளின் போது, இந்த வட்டாரம் இதன் தொழிலாளி மக்கள் காட்டிய போர்குணம் காரணமாய்ப் பெயரும் புகழும் பெறலாயிற்று. வீபர்க் வட்டாரம் என்பது பெத்ரொகிராது நகரின் தொழிலாளர் வட்டாரத்தின் பெயர்.—[பதிப்பாசிரியர்.]*

*** *திரோத்ஸ்கி (பிரான்ஷ்டைன்), லெவ் தவீதவிச்—1897 முதலாய் ருஷ்யாவின் சமூக-ஜனநாயகத் தொழிலாளர் கட்சி உறுப்பினர், மென்ஷிவிக்கு. 1917ஆம் ஆண்டு கோடையில் போல்ஷிவிக்குக் கட்சியில் சேர்ந்து கொண்டார், ஆயினும் போல்ஷிவிக்குக் கொள்கை வழியை ஏற்றுக் கொள்ளவில்லை, லெனினியத்தையும் கட்சியின் கொள்கையையும் எதிர்த்து வெளிப்படையாகவும் மறைமுகமாகவும் தொடர்ச்சியாய்ப் போராட்டம் நடத்தினர். இம்மாதிரியான செயல்களுக்காக 1927ல் கட்சியிலிருந்து வெளியேற்றப்பட்டார். — [பதிப்பாசிரியர்.]*

திருமதி கொலன்தாயும்* காமெனெவும்** அடங்கலாய் நூற்றுக் கணக்கானோர் சிறை பிடிக்கப்பட்டார்கள்; லெனினும் ஸிநோவியெவும்*** தலைமறைவாக வேண்டியதாயிற்று;

---

* கொலன்தாய், அ.மி. (1872-1952)—1915லிருந்து போல்ஷிவிக்குக் கட்சியின் உறுப்பினர். நவம்பர் புரட்சிக்குப் பிறகு, பொது நலத் துறை மக்கள் கமிசார்.

1920ல் கம்யூனிஸ்டுக் கட்சி மத்தியக் கமிட்டியின் பெண்கள் பிரிவின் தலைவர். 1921-22ல் கம்யூனிஸ்டு அகிலத்தின் சர்வதேசப் பெண்கள் செயற்குழுவின் செயலாளர். 1923 முதலாய் முக்கிய அரசுத் தூதுத் துறையாளர்.—[பதிப்பாசிரியர்.]

** காமெனெவ் (ரோசன்ஃபேல்டு), ல. வி. — 1901 முதலாய் போல்ஷிவிக்குக் கட்சி உறுப்பினர். நவம்பர் புரட்சிக்குப் பிற்பாடு மாஸ்கோ சோவியத்தின் தலைவர், மக்கள் கமிசார் அவையின் துணைத் தலைவர்.

அடிக்கடி லெனின் கொள்கை வழியை எதிர்த்தவர். மார்ச் முதலாளித்துவ ஜனநாயகப் புரட்சிக்குப் பிற்பாடு, சோஷலிசப் புரட்சியை ஓங்கச் செய்வதென கட்சி அனுசரித்த கொள்கையை எதிர்த்தார்; 1917 நவம்பரில், மென்ஷிவிக்குகளோடும் சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களோடும் சேர்ந்து கூட்டு அரசாங்கம் அமைக்க வேண்டுமென்ற கருத்தை ஆதரித்தார்.

முடிவில் அவர் மார்க்சியம்-லெனினியத்திலிருந்து முறித்துக் கொண்டதும், கட்சியிலிருந்து விலக்கப்பட்டார்.—[பதிப்பாசிரியர்.]

*** ஸிநோவியெவ் (ரதொமீஷில்ஸ்கி), ஜி. ஒய்.—மிகப் பல சந்தர்ப்பங்களிலும் போல்ஷிவிசத்திலிருந்து தடம் புரண்டு சென்றவர், முடிவில் மார்க்சியம்-லெனினியத்திலிருந்து அறவே முறித்துக் கொண்டுவிட்டவர். 1917 நவம்பரில் இவர் காமெனெவுடன் சேர்ந்து புரட்சிக்குத் துரோகச் செயல் புரிந்து மென்ஷிவிக்குச் செய்தியேடு ''நோவயா ழீசினில்'' ஒரு கட்டுரை வெளியிட்டார்; ஆயுதமேந்திய எழுச்சி பற்றிய மத்தியக் கமிட்டி தீர்மானத்துக்கு இவர் இக்கட்டுரையில் தமது எதிர்ப்பை அறிவித்தார்; இவ்விதம் போல்ஷிவிக்குத் திட்டத்தைப் பகிரங்கமாக்கினார். போல்ஷிவிக்குக் கட்சி உறுப்பினர்களுக்கு எழுதிய கடிதத்தில் லெனின் இச்செயலைச் கருங்காலிச் செயலாகும் என்று கண்டித்து, ஸிநோவியெவும் காமெனெவும் கட்சியிலிருந்து விலக்கப்பட வேண்டுமெனக் கோரினார். நவம்பர் புரட்சி

போல்ஷிவிக்குச் செய்தியேடுகள் தடைவிதிக்கப்பட்டு மூடப் பட்டன. போல்ஷிவிக்குகள் ஜெர்மன் கையாட்கள் என் பதாய் இரகசியக் கைக்கூலிகளும் பிற்போக்கர்களும் பெருங் கூச்சல் கிளப்பினர், அனைத்து உலகும் நம்பும் வரை இந்தக் கூச்சல் ஓயாமல் எழுப்பப்பட்டு வந்தது.

ஆனால் இடைக்கால அரசாங்கத்தால் தனது இந்தக் குற்றச்சாட்டுகளுக்கு ஆதாரமாய் எந்தச் சான்றையும் அளிக்க முடியவில்லை. ஜெர்மன்-ஆதரவுச் சதிக்கு ஆதார மாய்த் தரப்பட்ட சான்றுவணங்கள் ஜோடிக்கப்பட்ட கள்ளப் பத்திரங்களாகும்* என்பது அம்பலமாயிற்று. ஆகவே விசா ரணை நடத்தப்படாமலே போல்ஷிவிக்குகள் பெயரளவிலான பிணையுடனே, பிணையே இல்லாமலோ ஒவ்வொருவராய் விடு தலை செய்யப்பட்டனர்—முடிவில் ஆறு பேர் மட்டுமே சிறையில் எஞ்சியிருந்தனர். ஓயாமல் மாறிய வண்ணமிருந்த இடைக்கால அரசாங்கத்தின் கையாலாகாத்தனமும் தீர்மான மின்மையும் எல்லார்க்கும் தெரியும்படி பட்டவர்த்தன மாகி வந்தன. பெருந் திரள் மக்களது அபிமானத்துக்குரிய தாய் இருந்த ''அனைத்து ஆட்சியதிகாரமும் சோவியத்து களுக்கே!'' என்னும் கோஷத்தைப் போல்ஷிவிக்குகள் மீண்டும் எழுப்பினர்—வெறும் தன்னல நாட்டத்தால் உந்தப்பட்டு அவர்கள் இதைச் செய்யவில்லை, ஏனெனில் அப்போது பெரும்பாலான சோவியத்துகள் அவர்களுடைய பரம

---

வெற்றி பெற்ற பிறகு, மென்ஷிவிக்குகள், சோஷலிஸ்டுப் புரட்சியாளர்கள், ''நரோத்னிக் சோஷலிஸ்டுகள்'' ஆகியோ ரின் பிரதிநிதிகளும் அடங்கிய கூட்டு அரசாங்கத்தை அமைத் திடும் கருத்தை ஆதரித்தார். 1927ல் ஸினோவியெவ் தொடர்ச்சியான கட்சிவிரோதக் குழுவமைப்புச் செயல்களுக் காக கட்சியிலிருந்து வெளியேற்றப்பட்டார்.—[பதிப்பாசிரி யர்.]

* பேர்போன ''சிஸ்ஸோன் ஆவணங்களில்'' ஒரு பகு தியானவை இவை.

சிஸ்ஸோன் என்றொரு பிற்போக்கு அமெரிக்கப் பத்திரி கையாளர், போல்ஷிவிக்குத் தலைவர்களைச் செல்வாக்கிழக்கச் செய்ய வேண்டுமென்று ஜோடிக்கப்பட்ட சோவியத்து-எதிர்ப்புக் கள்ளப் பத்திரங்களைத் திரட்டி, அமெரிக்க ஐக்கிய நாட்டில் வெளியிட்டார்.—[பதிப்பாசிரியர்.]

வைரிகளாகிய ''மிதவாத'' சோஷலிஸ்டுகளது செல்வாக்கின் கீழ் இருந்தன.

இதனிலும் கூட அதிக பலன் தர வல்லதாய் அமைந்தது என்னவெனில், தொழிலாளர்கள், படையாட்கள், விவசாயிகளது செப்பமில்லாச் சர்வசாதாரண விருப்பங்களைப் போல்ஷிவிக்குகள் அடிநிலையாய்க் கொண்டு தமது உடனடி வேலைத் திட்டத்தை வகுத்துக் கொண்டனர். ஆகவே அபரோன்த்ஸி மென்ஷிவிக்குகளும் சோஷலிஸ்டுப் புரட்சியாளர் கட்சியினரும் முதலாளித்துவ வர்க்கத்துடன் சமரசம் செய்து கொள்வதில் ஈடுபட்டிருக்கையில், போல்ஷிவிக்குகள் அதிவேகமாய் ருஷ்யப் பெருந்திரளினரைத் தம்பால் ஈர்த்து வந்தனர். ஜூலையில் அவர்கள் வேட்டையாடப்பட்டோராய், தீண்டத் தகாதோராய் இருந்தார்கள்; ஆனால் செப்டம்பருக்குள் தலைநகரின் தொழிலாளர்களும் பால்டிக் கப்பற் படையின் மாலுமிகளும் மற்றும் படையாட்களும் ஏறத்தாழ முழு அளவுக்கு அவர்கள் பக்கத்துக்கு வந்துவிட்டார்கள். பெரிய நகரங்களில்[4] செப்டம்பரில் நடைபெற்ற நகராண்மைக் கழகத் தேர்தல்கள் குறிப்பிடத்தக்கனவாகும்: ஜூனில் 70 சதவீதத்துக்கும் அதிகமான இடங்களை வென்ற மென்ஷிவிக்குகளும் சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களும் இப்போது 18 சதவீத இடங்களே பெற முடிந்தது....

அன்று வெளிநாட்டுப் பார்வையாளர்களைத் திகைக்கச் செய்வதாய் இருந்த ஓர் உண்மை என்னவெனில்: சோவியத்துகளின் மத்தியக் கமிட்டியும், மத்தியச் சேனை, கப்பற் படைக் கமிட்டிகளும்*, சில தொழிற் சங்கங்களுடைய மத்தியக் கமிட்டிகளும்—குறிப்பாய்த் தபால், தந்தித் தொழிலாளர்களது கமிட்டியும் ரயில்வேத் தொழிலாளர்களது கமிட்டியும்—போல்ஷிவிக்குகளை மிகவும் கடுமையாய் எதிர்த்தன. இந்த மத்தியக் கமிட்டிகள் யாவும் கோடையின் நடுவிலோ, அதற்கும் முன்னதாகவோ, மென்ஷிவிக்குகளும் சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களும் பெருந்திரளான ஆதரவாளர்களைப் பெற்றிருந்த ஒரு காலத்தில் தேர்ந்தெடுக்கப்பட்டவை; இவர்கள் புதிய தேர்தல்கள் நடைபெறுதபடி தாமதம் செய்

---

* குறிப்புகளும் விளக்கங்களும் என்பதைப் பார்க்கவும்.

தார்கள், அல்லது தடுத்து நின்ருர்கள். எடுத்துக்காட்டாய், தொழிலாளர்கள், படையாட்கள் பிரதிநிதிகளது சோவியத்துகளின் அமைப்பு விதிகளின் படி, இவற்றின் அனைத்து ருஷ்யக் காங்கிரஸ் செப்டம்பரில் கூட்டப்பட்டிருக்க வேண்டும், ஆனுல் இத்ஸே-யி-க இந்தக் காங்கிரசைக் கூட்டாமலே இருந்தது, அரசியல் நிர்ணயச் சபை கூடுவதற்கு இரண்டு மாதங்களே இருப்பதாய்க் காரணம் கூறிற்று, அரசியல் நிர்ணயச் சபை கூடியதும் சோவியத்துகள் அரங்கை விட்டகல வேண்டியிருக்குமென்று ஜாடையாய்க் குறிப்பிட்டது. இதற்கிடையில் போல்ஷிவிக்குகள் நாடெங்கிலும் உள்ளூர் சோவியத்துகள் யாவற்றிலும், தொழிற் சங்க ஒன்றியக் கிளைகளிலும், படையாட்கள், மாலுமிகளது அணிகளிலும் வெற்றி மேல் வெற்றி பெற்று வந்தார்கள். விவசாயிகளது சோவியத்துகள் இன்னமும் பழமைவாதப் போக்குடையனவாகவே இருந்தன; காரணம் என்னவெனில், மந்த நிலையிலான கிராமாந்தர வட்டாரங்களில் அரசியல் உணர்வு மெதுவாகவே வளர முடிந்தது, ஒரு தலைமுறையாய் சோஷலிஸ்டுப் புரட்சியாளர் கட்சிதான் விவசாயிகளிடையே கிளர்ச்சி புரிந்து வந்த கட்சியாய் இருந்தது.... ஆனுல் விவசாயிகள் மத்தியிலுங்கூட புரட்சிகர பிரிவு ஒன்று உருவாகிக் கொண்டுதான் இருந்தது. அக்டோபரில் சோஷலிஸ்டுப் புரட்சியாளர் கட்சியின் இடது சாரியினர் அதனிடமிருந்து துண்டித்துக் கொண்டு ஒரு புதிய அரசியல் கோஷ்டியை, இடதுசாரி சோஷலிஸ்டுப் புரட்சியாளர் கட்சியை அமைத்துக் கொண்டபோது இது கண்கூடாய்த் தெரியலாயிற்று.

அதேபோது பிற்போக்கு சக்திகளும் மேன்மேலும் நம்பிக்கை பெற்று வந்தன[5] என்பதற்கான அறிகுறிகள் எங்கும் தென்பட்டு வந்தன. உதாரணமாய், பெத்ரொகிராதில் திரோயித்ஸ்கி நாடக மன்றத்தில் ஜார் இழைத்த குற்றங்கள் என்ற நகைச்சுவை நாடகம் நடைபெற்றுக் கொண்டிருந்த போது, முடியாட்சிவாதிகள் சிலர் குறுக்கிட்டுப் ''பேரரசனை இழிவுபடுத்திய'' நடிகர்களைப் பழி வாங்குவோமென அச்சுறுத்திக் கலாட்டா செய்தார்கள். சில செய்தியேடுகள் ''ருஷ்ய நெப்போலியன்'' ஒருவன் தோன்றமாட்டாளு என்று ஏங்கத் தொடங்கின, தொழிலாளர் பிரதிநிதி

களது (ரபோச்சிஹ் டெப்புத்தாத்தவ்) சோவியத்தை முத லாளித்துவ அறிவுத்துறையினர் சபாச்சிஹ் டெப்புத்தாத் தவ் — அதாவது நாய்கள் பிரதிநிதிகளது — சோவியத்து என்று அழைப்பது வழக்கமாயிருந்தது.

''ருஷ்ய ராக்பெல்லர்'' என்று பெயர் பெற்ற ருஷ்யப் பெருமுதலாளி ஸ்தெபான் ஜியோர்கியெவிச் லியனோஸவ் அக்டோபர் 15ல் என்னுடன் உரையாடினார். அரசியல் கருத் துகளில் அவர் ஒரு காடேட்டு.

''புரட்சி என்பது ஒரு நோய்'' என்றார் அவர். ''முன் போ, பின்போ அன்னிய அரசுகள் இங்கு தலையிட்டே ஆக வேண்டும்—குழந்தை நோயால் பீடிக்கப்படுகையில் தலை யிட்டுச் சிகிச்சை அளித்து அதற்கு நடக்கக் கற்றுத் தருவது எப்படி அவசியமோ, அதைப் போலத்தான் இதுவும். தகாச் செயலாகவே இது கருதப்படும்; ஆனால் எல்லா நாடுகளும் போல்ஷிவிசத்தால் தமக்கு உண்டாகும் அபாயத்தை உணர்ந்து கொள்வது அவசியமாகும்—'பாட்டாளி வர்க்கச் சர் வாதிகாரம்', 'உலக சோஷலிசப் புரட்சி' ஆகியவை எல்லாம் கொள்ளை நோய் போல் பரவும்படியான கருத்துகளாகும்.... இந்தத் தலையீடு தேவையற்றதாகும்படி நேர்ந்தாலும் நேரலாம். போக்குவரத்து குலைந்துவிட்டது, ஆலைகள் மூடப் படுகின்றன, ஜெர்மானியர்கள் முன்னேறி வந்து கொண்டி ருக்கிறார்கள். பட்டினியும் தோல்வியும் ருஷ்ய மக்களுக்குப் புத்தி வரும்படிச் செய்யலாம்....''

எது எப்படியானாலும், வணிகர்களும் தொழிலதிபர் களும் ஆலைக் கமிட்டிகள் தொடர்ந்து நீடிக்கவோ, தொழில் துறையின் நிர்வாகத்தில் தொழிலாளர்கள் எந்தப் பங்கும் பெறவோ அனுமதிப்பது முடியாத காரியம் என்று அழுத்தம் திருத்தமாய்க் கூறினார் திருவாளர் லியனோஸவ்.

''போல்ஷிவிக்குகளைப் பொறுத்த வரை இரண்டு வழி களில் ஏதேனும் ஒன்றில் அவர்கள் ஒழித்துக் கட்டப்படுவார் கள். அரசாங்கம் பெத்ரொகிராதிலிருந்து காலி செய்து கொண்டு வெளியே செல்லலாம், அப்போது இங்கே முற்றுகை நிலைமை பிரகடனம் செய்யப்படும், இராணுவ மாவட்டத் தளபதி சட்ட முறைச் சம்பிரதாயங்களை ஒதுக்கி வைத்துவிட்டு இந்தக் கனவான்களைச் சமாளிக்க முடியும்....

அல்லது, உதாரணமாய் அரசியல் நிர்ணயச் சபை எவ்விதமான கற்பனுவாதப் போக்கினையும் வெளிக்காட்டுமானுல் படை பலம் கொண்டு அது கலைக்கப்படலாம்....''

குளிர் காலம் நெருங்கி வந்து கொண்டிருந்தது—பயங்கர ருஷ்யக் குளிர் காலம். வாணிப, தொழில் வட்டாரத்தினர் இது பற்றி இவ்வாறு பேசக் கேட்டேன்: ''எப்போதுமே குளிர் காலம் ருஷ்யாவின் உற்ற நண்பனுய் இருந்துள்ளது. இப்போது அது இந்தப் புரட்சியை விரட்டியடித்து நமக்கு விமோசனம் கிடைக்கச் செய்யலாம்.'' கடுங்குளிரில் போர் முனையில் சேனைகள் ஆர்வம் இழந்து வந்தன, பட்டினி கிடந்து வதைந்து மடிந்து கொண்டிருந்தன. ரயில்வேக்கள் குலைந்து போயின, உணவு குறைந்து சென்றது, ஆலைகள் மூடப்பட்டு வந்தன. நம்பிக்கைக்கு வழி ஏதுமின்றி மக்கள் திரள்கள், முதலாளித்துவ வர்க்கம் போர்முனையில் தோல்வி ஏற்படச் செய்கிறது, மக்களுடைய வாழ்வுக்கே உலை வைக்கிறதென்று கூச்சலிட்டன. ''நாடு தனது கடமையை உணரும் படியான நிலையை வந்தடைவதற்காக நாம் ரீகாவை விலையாய்த் தந்தாக வேண்டுமா?'' என்று ஜெனரல் கர்னீலவ் பகிரங்கமாகவே கேட்டார், இதன்பின் ரீகா சரணடைந்து பகைவர்கள் கைக்குச் சென்றது.

வர்க்கப் போராட்டம் இந்த அளவுக்கு உக்கிரமாய் வளர முடியுமென்பது அமெரிக்கர்களுக்கு நம்பக் கூடியதாய்த் தோன்றவில்லை. ஆனுல் வடக்குப் போர்முனையில் நான் நேரில் சந்தித்த இராணுவ அதிகாரிகள் படையாட்களது கமிட்டிகளுடன் ஒத்துழைப்பதைக் காட்டிலும் இராணுவப் படுதோல்வியே மேலெனை ஒளிவு மறைவின்றிக் கூறினுர்கள். நாட்டின் பொருளாதார வாழ்வு சீர்குலைந்ததானது புரட்சியை மதிப்பிழக்கச் செய்வதற்கான இயக்கத்தின் ஒரு பகுதியே ஆகுமெனக் காடேட்டுக் கட்சியினுடைய பெத்ரொகிராதுக் கிளையின் செயலாளர் என்னிடம் சொன்னுர். இது மெய்தான், தமக்குத் தெரியுமென நேச நாட்டுத் தூதரகத்தவர் ஒருவர் இதனை உறுதி செய்தார்—அவருடைய பெயரைக் குறிப்பிடாமல் இருப்பதாய் அவருக்கு நான் வாக்களித்தேன். ஹார்க்கவுக்கு அருகே சில நிலக்கரிச் சுரங்கங்களுக்கு அவற்றின் உடைமையாளர்கள் தீ வைத்து வெள்ளத்

தில் மூழ்க்கடித்ததையும், மாஸ்கோவில் துணி ஆலைகளின் பொறியாளர்கள் அவற்றை விட்டுச் சென்ற போது இயந்திர சாதனங்களைச் சீர்குலைத்ததையும், ரயில்வே அதிகாரிகள் இஞ்சின்களை முடமாக்கிய போது தொழிலாளர்கள் அவர்களைக் கையும் மெய்யுமாய்ப் பிடித்ததையும் நான் அறிவேன்....

சொத்துடைத்த வர்க்கங்களில் ஒரு பெரும் பிரிவானது, புரட்சிக்கு — ஏன், இடைக்கால அரசாங்கத்துக்குங்கூட — ஜெர்மானியர்களே தேவலையெனக் கருதிற்று, அவ்வாறே தயங்காது சொல்லவும் செய்தது. நான் வசித்து வந்த ருஷ்ய வீட்டில் எல்லாரும் சாப்பாட்டு மேஜையைச் சுற்றிலும் அமர்ந்திருக்கையில் ஜெர்மானியர் வரப் போவது பற்றியும் ''சட்டத்தையும் ஒழுங்கையும்'' நிலைநாட்டப் போவது பற்றியும்தான் அனேகமாய் எப்போதுமே பேச்சு அடிபடும்.... மாஸ்கோ வணிகர் ஒருவர் வீட்டில் நான் ஒரு மாலைப் பொழுதைக் கழித்தேன்; தேநீர் அருந்திய போது மேஜையைச் சுற்றிலும் இருந்த பதினொரு பேரை யார் தேவலை, ''வில்ஹெல்மா, போல்ஷிவிக்குகளா'' என்று கேட்டோம். ஒன்றுக்குப் பத்தான வாக்கு வில்ஹெல்முக்கே ஆதரவாய் இருந்தது....

எங்கும் சீரழிவு தாண்டவமாடிய இந்த நிலைமையைப் பயன்படுத்தி கள்ளச் சந்தையினர் கொள்ளை கொள்ளையாய்ச் செல்வம் திரட்டினர்; கற்பனைக்கு எட்டாத களியாட்டங்களில் திளைக்கவோ, அரசாங்க அதிகாரிகளை லஞ்ச ஊழலில் மிதக்கச் செய்யவோ இச்செல்வத்தைச் செலவிட்டனர். உணவும் பண்டங்களும் எரிபொருளும் பதுக்கப்பட்டன, அல்லது நாட்டிலிருந்து கள்ளத்தனமாய் ஸ்வீடனுக்குக் கடத்தப்பட்டன. எடுத்துக் காட்டாய், புரட்சியின் முதல் நான்கு மாதங்களில், பெத்ரொகிராதில் மிகப் பெரிய நகராண்மைக் கழகக் கிடங்குகளிலிருந்து உணவுப் பண்ட சேமிப்புகள் பகிரங்கமாகவே கொள்ளையிடப்பட்டதன் விளைவாய், இரண்டு ஆண்டுகளுக்குப் போதுமான அளவில் இருந்த தானிய சேமிப்புகள் நகருக்கு ஒரு மாதத்துக்கு உணவளிப்பதற்கு வேண்டியதற்கும் குறைவாய்க் குன்றிவிட்டன.... இடைக்கால அரசாங்கத்தில் பண்ட வழங்கீட்டுத் துறையின் கடைசி அமைச்சரது அதிகாரபூர்வமான அறிக்கையின்படி,

விளாதிவஸ்தோக்கில் மொத்த அளவில் ராத்தல் 2 ரூபி ளுக்கு வாங்கப்பட்ட காப்பிக் கொட்டைக்கு, பெத்ரொகி ராதில் நுகர்வாளர் 13 ரூபிள் தர வேண்டியிருந்தது. பெரிய நகரங்களில் எல்லாக் கடைகளிலும் டன் கணக்கில் உணவுப் பண்டங்களும் துணிமணியும் இருந்தன, ஆனால் செல்வந்தர் களால் மட்டுமே அவற்றை வாங்க முடிந்தது.

மாநில நகரம் ஒன்றில் வணிகர் குடும்பம் ஒன்றை எனக்குத் தெரியும். இக்குடும்பத்தினர் கள்ளச் சந்தை வணி கர்களாய் மாறிவிட்டவர்கள்—**மரதியோர்** (கொள்ளைக்காரர்) என்பதே கள்ளச் சந்தை வணிகரைக் குறிப்பிட ருஷ்யர்கள் உபயோகித்த சொல். மூன்று புதல்வர்களும் லஞ்சம் கொடுத்து இராணுவச் சேவையிலிருந்து தமக்கு விலக்கு வாங்கிக் கொண்டுவிட்டனர். உணவுப் பண்டங்களில் ஒரு புதல்வர்கள்ளச் சந்தை ஊக வாணிபம் புரிந்தார். இன்னொரு வர் லேனாத் தங்கச் சுரங்கங்களிலிருந்து சட்ட விரோதமாய் வாங்கப்பட்ட தங்கத்தைப் பின்லாந்திலிருந்த மர்மமான கொள்வினையாளர்களுக்கு விற்பனை செய்தார். மூன்றாவது புதல்வர் சாக்கலட்டு ஆலை ஒன்றில் தலைமைப் பங்குடைமை யாளராய் இருந்தார், உள்ளூர் கூட்டுறவுச் சங்கங்கள் தமக்குத் தேவையானவை யாவற்றையும் அளிக்க வேண்டுமென்ற நிபந் தனையின் பேரில் அவர் இக்கழகங்களுக்குச் சாக்கலெட்டு விற்பனை செய்தார். ஆகவே, பெருந் திரளான மக்கள் அவர்களது உணவுப் பங்கீட்டுச் சீட்டைக் காட்டி நாள் ஒன்றுக்குக் கால் ராத்தல் கறுப்பு ரொட்டி பெற்று வந்த ஒரு நேரத்தில், அவருக்கு அளவின்றி வெள்ளை ரொட்டியும் சர்க்கரையும் தேயிலையும் மிட்டாயும் கேக்கும் வெண்ணெயும் கிடைத்து வந்தன.... ஆயினும் போர்முனையில் படையாட்கள் குளிரிலும் பசியிலும் வதைந்து பலமிழந்துப் போர் புரிய முடியாமல் ஓய்ந்து போனதும், இந்தக் குடும்பத்தினர் கொடுங் கோபங் கொண்டு கூச்சலிட்டதைப் பார்க்க வேண்டுமே: ''பேடி கள்!'' ''ருஷ்யர்களெனக்'' கூறிக் கொள்ள ''வெட்கமாய்'' அல்லவா இருந்தது....இறுதியில் போல்ஷிவிக்குகள் தோன்றி, கிடங்கு கிடங்காய்ப் பதுக்கி வைக்கப்பட்டிருந்த கள்ளச் சேமிப்புப் பண்டங்களைக் கண்டுபிடித்துக் கட்டாயக் கொள்

முதல் செய்த போது, ''பகற் கொள்ளையர்களாய்'' அல்லவா இருந்தார்கள் இந்தப் போல்ஷிவிக்குகள்.

வெளிப்படையாய்த் தெரிந்த இந்த மோசடிக்கும் இழிவுக்கும் பின்னால் பழங் காலத்து இருண்ட சக்திகள் இயங்கின; இரண்டாம் நிக்கலாய் விழுந்தது முதல் எந்த மாற்றமும் இன்றி, தொடர்ந்து இரகசியமாய், முனைந்து செயல்பட்டன. அபக்கியாதி பெற்ற அஹ்ரான்க்காவின் கைக்கூலிகள் ஜாருக்கு ஆதரவாகவும் எதிராகவும், கேரென்ஸ்கிக்கு ஆதரவாகவும் எதிராகவும்—கைக்காசு தருவோர் யார் என்பதற்கு ஏற்ப—தொடர்ந்து செயல்பட்டனர்.... கறுப்பு நூற்றுவரைப் போன்ற எல்லா வகையான இரகசிய நிறுவனங்களும் இருட்டிலே செயல்பட்டு, எந்த வடிவிலேனும் பிற்போக்கை மீண்டும் நிலைநிறுத்த அயராது முயற்சி செய்தன.

லஞ்ச ஊழலும் பேய்த்தனமான போலி உண்மைகளும் மலிந்துவிட்ட இந்தச் சூழலில் நாள் தவறாமல் தெளிவாகவும் மேலும் மேலும் ஆழமாகவும் ஒலித்தது ஒருங்கிணைந்த போல்ஷிவிக்குகளின் குரல்: ''அனைத்து ஆட்சியதிகாரமும் சோவியத்துகளுக்கே! கோடானு கோடியான சாமானியத் தொழிலாளர்கள், படையாட்கள், விவசாயிகளது நேரடியான பிரதிநிதிகளுக்கே அனைத்து ஆட்சியதிகாரமும். ரொட்டி வேண்டும்; நிலம் வேண்டும்; அர்த்தமில்லா இந்த யுத்தத்துக்கு முடிவு கட்டு; இரகசிய அரசு தந்திரத்தை நிறுத்து; ஒழித்துக் கட்டு கள்ளச் சந்தை வாணிபத்தை; ஒழிக துரோகம்... புரட்சிக்கு ஆபத்து, அதோடு அனைத்து உலக மக்களின் இலட்சியத்துக்கும் ஆபத்து!''

பாட்டாளி வர்க்கத்துக்கும் முதலாளித்துவ வர்க்கத்துக்கும் இடையிலான போராட்டம், சோவியத்துகளுக்கும் அரசாங்கத்துக்கும் இடையிலான போராட்டம்—மார்ச்சு ஆரம்ப நாட்களில் தொடங்கிய இந்தப் போராட்டம்—அதன் உச்ச நிலையை அடையும் தறுவாயில் இருந்தது. ஒரே தாவலில் மத்திய காலத்திலிருந்து இருபதாம் நூற்றாண்டை எட்டிப் பிடித்துவிட்ட ருஷ்ய நாடு, இரு வகைப் புரட்சிகளுக்கும்—அரசியல் புரட்சிக்கும் சமூகப் புரட்சிக்கும்—இடையிலான ஜீவமரணப் போராட்டத்தைக் கதி கலங்கிப் போன உலகின் கண்ணெதிரே நிகழ்த்திக் காட்டிற்று.

இத்தனை மாதங்களாய்ப் பட்டினியிலும் ஏமாற்றத்திலும் வதைபட்ட பிற்பாடு ருஷ்யப் புரட்சி வெளிப்படுத்திய ஜீவ சக்தி விந்தையிலும் விந்தையாகவே இருந்தது! முதலாளித் துவ வர்க்கம் அதனுடைய ருஷ்யாவைச் சரிவர புரிந்து வைத் திருக்கவில்லை. இல்லையேல் ருஷ்யாவில் புரட்சி ''நோய்'' அதிக காலத்துக்கு அதன் போக்கிலே போகும்படி விடப்பட் டிருக்காது....

இப்போது திரும்பிப் பார்ப்போமாயின் நவம்பர் எழுச் சிக்கு முற்பட்ட ருஷ்யா நம்பவே முடியாதவாறு பழமைவாத மனப்பாங்குடையதாய்த் தோன்றுகிறது. அவ்வளவு சடுதி யில் நாம், அதிவேகமாய் நடைபோட்ட புதிய வாழ்வுக்கு நம்மைத் தகவமைத்துக் கொண்டுவிட்டோம். ருஷ்ய அரசி யல் அப்படி திடுதிப்பென முழு அளவில் இடது பக்கத்துக்குப் பாய்ந்தோடி விட்டது—ஆகவே காடேட்டுகள் ''மக்களின் பகைவர்களாய்'' பொது வாழ்விலிருந்து விரட்டப்பட்டார் கள்; கேரென்ஸ்கி ''எதிர்ப்புரட்சியாளர்'' ஆயினர்; ''மித வாத'' சோஷலிஸ்டுகளாகிய திஸெரெத்தேலியும் டானும் லீபெரும் கோத்ஸும் அவ்க்சேன்தியெவும் அவர்களது அணிகளின் மனப்பாங்குக்கு ஒவ்வாதபடி அவ்வளவு பிற் போக்கர்களாகிவிட்டனர்; வீக்தர் செர்னேவ் போன்றோரும் மக்சீம் கோர்க்கியுங்கூட வலது சாரியைச் சேர்ந்தவர்கள் ஆயினர்....

1917 டிசம்பர் ஏறத்தாழ நடுப் பகுதியில் சோஷலிஸ்டுப் புரட்சியாளர் கட்சித் தலைவர்கள் சிலர் சொந்த முறையில் சந்தித்துப் பேசுவதற்காகப் பிரிட்டிஷ் தூதுவர் சர் ஜார்ஜ் பூஹனனிடம் வந்திருந்தார்கள்; ஏற்கனவே தாம் ''நெடுந் தொலைவுக்கு வலது பக்கம் சென்றுவிட்டதாய்'' கருதப்படு வதால், அவரிடம் தாம் வந்து சென்றதை வெளியே சொல்ல வேண்டாமென்று அவரைக் கேட்டுக் கொண்டார்கள்.

''என்னென்பது இதை! ஓராண்டுக்கு முன்புதான் எனது அரசாங்கம், மில்யுக்கோவை அழைத்துப் பேச வேண்டாம், ஏனெனில் அவர் அவ்வளவு அபாயகரமாய் இடது சாரியாய் இருக்கிறாரென எனக்கு அறிவித்திருந்தது!'' என்று வியந்து கொண்டார் சர் ஜார்ஜ்.

செப்டம்பரும் அக்டோபரும்தான் ருஷ்ய ஆண்டின், முக்கியமாய் பெத்ரொகிராது ஆண்டின், படுமோசமான மாதங்கள். சாம்பல் பூத்த மந்தமான வானத்திலிருந்து, பகல் நேரம் குன்றிய முன்னிருட்டுப் பொழுதில், ஓயாமல் மழை கொட்டிற்று. காலுக்கடியில் சகதி ஆழமாய்ச் சதசதத்தது, வழுக்கிற்று, காலில் ஒட்டிக் கொண்டது, கனத்த பூட்சுகளின் தடம் எங்கும் பதிந்திருந்தது, நகர நிர்வாகம் அறவே தகர்வுண்டுவிட்டதால் வழக்கமாய் இருக்கக் கூடியதைக் காட்டிலும் கடுமையாய் இருந்தது. பின்லாந்து வளைகுடாவிலிருந்து ஈரக் காற்று வீரிட்டு வீசிற்று, தெருக்கள் ஜில்லிட்டுப் போகும்படி மூடுபனி கவிந்து தவழ்ந்தது. இரவில் சிக்கனத்தை உத்தேசித்தும் ஜெப்பலின்கள் தாக்குமென்று அஞ்சியும் தெரு விளக்குகள் அங்கொன்றும் இங்கொன்றுமாய் ஒரு சிலவே எரிந்து கொண்டிருந்தன. தனியார் வீடுகளுக்கும் பலகுடித்தனக் கட்டடங்களுக்கும் மாலை ஆறு மணியிலிருந்து நள்ளிரவு வரையில் மட்டுமே மின்விசை கிடைத்தது, மெழுகுவத்தி ஒன்றின் விலை நாற்பது சென்டு, மண்ணெண்ணை கிடைக்கவில்லை. பிற்பகல் மூன்று மணியிலிருந்து காலை பத்து மணி வரை இருட்டாயிருந்தது. களவும் வீடு புகுந்து கொள்ளையடிப்பதும் அதிகரித்துவிட்டன. குடித்தனக் கட்டடங்களில் ஆட்கள் முறை வைத்துக் கொண்டு துப்பாக்கியும் கையுமாய் இரவு முழுதும் காவல் புரிந்தனர். இடைக்கால அரசாங்கம் இருந்த போது இப்படி நடைபெற்றது.

உணவு கிடைப்பது வாரத்துக்கு வாரம் அரிதாகி வந்தது. தினசரி ரொட்டிப் பங்கீடு ஒன்றரை ராத்தலிலிருந்து ஒரு ராத்தலாயிற்று, பிறகு முக்கால், அரை, கால் ராத்தலாகி விட்டது. முடிவில் ஒரு வாரத்துக்கு ரொட்டி என்பதே இல்லை. சர்க்கரை எப்போதாவது கிடைக்குமாயின்—அது அரிதினும் அரிதே—மாதத்துக்கு இரண்டு ராத்தலே அனுமதிக்கப்பட்ட பங்கீடு. ஒரு பாளம் சாக்கலெட்டு அல்லது சுவையற்ற ஒரு ராத்தல் மிட்டாயின் விலை ஏழிலிருந்து பத்து ரூபிள் வரை எவ்வளவு வேண்டுமானாலும்—ஒரு டாலருக்குக் குறையாமல்—இருக்கும். நகரிலிருந்த கைக்குழந்தைகளில் சுமார் ஒரு பாதிக்குப் பால் இல்லை; மிகப் பெருவாரியான ஓட்டல்களும் தனியார் வீடுகளும் பாலைப் பார்த்து எத்தனையோ

மாதங்களாகியிருக்கும். பழங்களுக்கான பருவக் காலத்தில் ஆப்பிளும் பேரியும் தெரு முனையில் ஒரு பழம் சுமார் ஒரு ரூபிளுக்கு விற்றது....

பாலுக்கும் ரொட்டிக்கும் சர்க்கரைக்கும் புகையிலைக்கும் மணிக் கணக்காய்க் குளிரால் வருந்தியவாறு மழையில் நீள்வரிசையில் நிற்க வேண்டியிருந்தது. இரவு முழுதும் நடைபெற்ற கூட்டத்திலிருந்து திரும்பி வரும் நான், விடியும் முன்பே ஹ்வோஸ்த் (வால்) பகுதி வளரத் தொடங்குவதைக் காண்பேன்; பெண்களே மிகுதியாய் இருப்பார்கள்; சிலர் குழந்தையைத் தூக்கிக் கொண்டு நிற்பார்கள்.... நீள்வரிசையில் நின்று காத்திருப்பதில் ஏனைய எவருக்கும் இல்லாத திறனைப் பெற்றவர்களாய் கார்லைல் தமது பிரெஞ்சுப் புரட்சியில் பிரெஞ்சு நாட்டின் மக்களைச் சித்திரிக்கிறார். ருஷ்ய நாடு இந்த நடைமுறைக்கு நன்றாகவே பழக்கப்பட்டுவிட்டது; அருளார்ந்த ஜார் நிக்கலாய் ஆட்சி புரிந்த போது 1915ஆம் ஆண்டிலேயே ஆரம்பமான இது, விட்டு விட்டுத் தொடர்ந்து 1917ஆம் ஆண்டு கோடை வரை நீடித்து, இதன்பின் அன்றாட நடைமுறையாய் நிலைத்துவிட்டது. தக்க ஆடைகளின்றி வரிசையாய் இம்மக்கள் பெத்ரொகிராதின் பனி படிந்த வெண்ணிறத் தெருக்களில் கடும் ருஷ்யக் குளிர் காலத்தில் நாள் தவறாமல் நின்ற போது எப்படி இருந்திருக்கும் நினைத்துப் பாருங்கள்! ரொட்டிக்காகக் காத்திருக்கும் நீள்வரிசைகளில் அடிபடும் பேச்சுகளை நான் கேட்பேன், ருஷ்யத் திரளினரின் அசங்காத அதிசய அமைதிப் பண்பையும் மீறி அவ்வப்போது அதிருப்தியின் கூர்மையான கடுஞ்சொற்கள் கொதித்தெழும்....

எல்லா நாடகமன்றங்களிலும் ஒவ்வோர் இரவிலும், ஞாயிறு இரவுகளும் தவறாமல், கலைநிகழ்ச்சிகள் நடைபெற்றன. மரீயின்ஸ்கியில் புதிய பாலே நாடகத்தில் கர்சாவினாவின் நடனத்தைப் பாலே அபிமானங் கொண்ட ருஷ்யர்கள் கண்டு களித்தனர். ஷலியாப்பின் பாடினார். அலெக்சாந்திரின்ஸ்கி மன்றத்தில் அ. தல்ஸ்தோயினது ''பயங்கர இவானது மரணத்''தை நாடகமாக்கிய மெயெர்ஹோல்தின்* தயாரிப்பு

---

* மெயெர்ஹோல்து, வி. இ. (1874-1940)—சோவியத்து நாடக இயக்குநர், நடிகர்.—[பதிப்பாசிரியர்.]

திரும்பவும் நடிக்கப் பெற்று வந்தது. அப்போது பேரரச் இளந்தகைப் பள்ளியின்* மாணவர் ஒருவர், இராணுவச் சீருடையில் காட்சிகளுக்கு இடையில் முறைப்படி எழுந்து, கழுகுச் சின்னங்கள் எல்லாம் அழிக்கப்பட்டுக் காலியாய் இருந்த பேரரசத் தனி இருக்கை முன்னுல் விரைப்பாய் நின்ற காட்சி என் நினைவுக்கு வருகிறது... ஷினித்ஸ்லெரின்** ''ரீகென்'' நாடகத்தைக் கண்கொளா எழிற் படைப்பாய்க் கிரிவோயெ ஸேர்க்கலா நடத்திக் காட்டிற்று.

எர்மித்தாழும் ஏனையச் சித்திரக் கூடங்களும் காலி செய்யப்பட்டு மாஸ்கோவுக்கு அனுப்பப்பட்டு விட்ட போதிலும், ஓவியக் கண்காட்சிகள் வாராவாரம் நடைபெற்றன. அறிவுத்துறை வட்டாரத்துப் பெண்கள் கூட்டமாய் வந்து கலை, இலக்கியச் சொற்பொழிவுகளையும் சுலபவழித் தத்துவ ஞானச் சொற்பொழிவுகளையும் கேட்டுச் சென்ருர்கள். குறிப்பாய், பிரம்மஞானச் சங்கத்தாரின் கூட்டங்கள் மிகவும் விறு விறுப்பாய் நடைபெற்றன. வரலாற்றில் முதன்முதலாய் ருஷ்யாவுக்குள் அனுமதிக்கப்பட்டிருந்த இரட்சணிய சேனையானது, வேத விரிவுரைக் கூட்ட அறிவிப்புகளைத் தெருச் சுவர்களில் எல்லாம் ஒட்டியிருந்தது, கேட்க வந்த ருஷ்யர்களுக்கு வேடிக்கையாகவும் வியப்பாகவும் இருந்த கூட்டங்கள் அவை....

இம்மாதிரியான காலங்களில் நடைபெறுவதைப் போலவே, நகரின் வழக்கமான சிறுதிற வாழ்க்கை கூடுமான வரை புரட்சியைக் கவனியாது நடைபோட்டு வந்தது. கவிஞர்கள் கவிதைகள் இயற்றினர்கள்—புரட்சியைப்பற்றிய கவிதைகள் அல்ல. எதார்த்தவாத ஓவியர்கள் மத்திய கால ருஷ்ய வரலாற்று நிகழ்ச்சிகளை ஓவியங்களாய்த் தீட்டினர்கள்—புரட்சியைத் தவிர்த்து எதைப் பற்றி வேண்டுமானுலும் தீட்டத் தயாராய் இருந்தார்கள். இளஞ் சீமாட்டியர் பிரெஞ்சு மொழி கற்பதற்காகவும் சாரீரத்தைச் சாதகம் செய்வதற்

* பேரரச இளந்தகைப் பள்ளி—ஜார் கால ருஷ்யாவில் ஜெனரல்கள், மேன் மக்களது புதல்வர்களுக்கான தனியுரிமை பெற்ற இராணுவப் பள்ளி.—[பதிப்பாசிரியர்.]

** ஆர்தர் ஷினித்ஸ்லெர் (1862—1931)—ஆஸ்திரிய எழுத்தாளர்.—[பதிப்பாசிரியர்.]



*மாறுவேடத்தில் லெனின். 1917 ஜூலை நிகழ்ச்சிகளுக்கு பிற்பாடு கடைசி தடவையாக தலைமறைவாக இருந்த போது லெனின் இந்தப் புகைப்படதுடன் குடிய அடையாளச் சீட்டை உபயோகித்து வந்தார். கே.பி. இவனேவ் என்ற தொழிலாளியின் பெயரில் வழங்கப்பட்ட அடையாளச் சீட்டு அது*

1

Ц. К. признает, что как международное положеніе русской революціи (восстаніе во флотѣ в Германіи, как крайнее проявленіе нарастанія всемірной соціалистической революціи, затѣм угроза мира империалистов с цѣлью удушенія революціи в Россіи), — так и военное положеніе (несомнѣнное рѣшеніе русской буржуазіи и Керенскаго с К° сдать Питер нѣмцам), — так и пріобрѣтеніе большинства пролетарской партіей в Совѣтах, — все это в связи с крестьянским возстаніем и с поворотом народнаго

во всей Европѣ

ஆயுதமேந்திய எழுச்சி குறித்து லெனின் வரைந்த தீர்மானத்தின் முதற் பக்கம்.
மத்தியக் கமிட்டியின் வரலாற்றுச் சிறப்புடைத்த அமர்விஞல் 1917 அக்டோபர் 23ல் இந்தத் தீர்மானம் ஏற்கப்பட்டது

காகவும் மாநிலங்களிலிருந்து தலைநகருக்கு வந்தார்கள்; கண்ணுக்கினிய குதூகலமான இளம் இராணுவ அதிகாரிகள் பொன்னிற விளிம்பு கொண்ட சிவப்பு பஷ்லீக் தொப்பி அணிந்து அலங்கார வேலைப்பாடுகளோடு கூடிய காக்கஸஸ் உடைவாளுடன் ஓட்டல் நடைகளிலும் முன்னறைகளிலும் போய்க் கொண்டிருந்தார்கள். அதிகார வர்க்கத்தின் கீழ் வரிசையைச் சேர்ந்த சீமாட்டியர் தங்க, வெள்ளி அல்லது கற்கள் பதித்த சர்க்கரைப் பேழையை எடுத்துக் கொண்டு, கம்பளிக் கைப்பொதியினுள் பாதி ரொட்டியுடன் வந்து, பிற்பகலில் ஒருவரையொருவர் சந்தித்துத் தேநீர் அருந்திய வாறு, ஜார் மன்னர் திரும்பவும் வர மாட்டாரா, ஜெர்மானியர்கள்தான் வந்து சேர மாட்டார்களா, அல்லது வேலையாள் பிரச்சினை தீருவதற்கு வேறு எதுவும் நடைபெறாதா என்று ஏங்கினர்.... என் நண்பர் ஒருவருடைய புதல்வி ஒரு நாள் பிற்பகல் கதி கலங்கிய நிலையில் வீட்டுக்கு வந்து சேர்ந்தாள், ஏனெனில் டிராமில் பெண் கண்டக்டர் அவளைத் ''தோழரே!'' என்று அழைத்துவிட்டாளாம்!

இவர்களைச் சுற்றிலும் மாருஷ்யா புத்துலகைப் பெற்றெடுக்கும் வேதனையால் வதைபட்டுக் கொண்டிருந்தது. அற்ப சம்பளத்துக்கு அமர்த்தப்பட்டு ஆடுமாடுகளைப் போல் நடத்தப்பட்டு வந்த வீட்டு வேலையாட்கள் இப்போது சுதந்திர உணர்வு பெற்று வந்தார்கள். பூட்சுகளின் விலை நூறு ரூபிளுக்கு அதிகமாகிவிட்டது, வீட்டு வேலையாட்களுக்குக் கிடைத்த சராசரி மாதச் சம்பளம் சுமார் முப்பத்தைந்து ரூபிள்தான், ஆகவே இவர்கள் சாமான்கள் வாங்கி வருவதற்காக பூட்சுகள் தேய்ந்து வீணாகும்படி நீள்வரிசைகளில் நிற்க மறுத்தனர். அது மட்டுமா? புதிய ருஷ்யாவில் ஒவ்வோர் ஆணுக்கும் பெண்ணுக்கும் வாக்குரிமை இருந்தது. தொழிலாளி வர்க்கச் செய்தியேடுகள் வெளிவந்தன, திடுக்கிடும்படியான புதுப் புது விவரங்களை எல்லாம் கூறின. சோவியத்துகள் இருந்தன; தொழிற் சங்க ஒன்றியங்கள் இருந்தன. இஸ்வோஸ்ச்சிக்குகளும் (வாடகைக் குதிரை வண்டிக்காரர்கள்) தொழிற் சங்கம் வைத்திருந்தார்கள், பெத்ரொகிராது சோவியத்தில் அவர்களுக்கும் பிரதிநிதித்துவம் தரப்பட்டிருந்தது. மேஜைப் பணியாளர்களும் ஓட்டல் வேலையாட்களும்

நிறுவன ஒழுங்கமைப்பு பெற்றிருந்தார்கள், இனும்கள் பெற மறுத்தார்கள். ''இங்கே இனும்கள் பெற்றுக் கொள்ளப்படுவதில்லை,'' அல்லது ''மேஜைப் பணியாளராய் வேலை செய்து பிழைக்கிறார் என்பதற்காக இனும் தந்து அவரை அவமதிக்காதீர்கள்!'' என்பதாய்க் கூறிய அறிவிப்புகளைச் சிற்றுண்டி சாலைகளின் சுவர்களில் பொருத்தியிருந்தார்கள்.

போர்முனையில் படையாட்கள் இராணுவ அதிகாரிகளை எதிர்த்துப் போராட்டம் நடத்தினார்கள், தமது கமிட்டிகளின் மூலம் தன்னாட்சி நடத்தக் கற்றுக் கொண்டார்கள். ஆலைகளில் தனிச் சிறப்புக்குரிய ருஷ்ய நிறுவனங்களாகிய ஆலைக் கமிட்டிகள்* பழைய அமைப்பை எதிர்த்துப் போராடி அனுபவமும் பலமும் பெற்று வந்தன, தமது வரலாற்றுப் பணியினை உணர்ந்து கொண்டன. ருஷ்யா அனைத்துமே படிக்கக் கற்றுக் கொண்டு வந்தது, அரசியலும் பொருளாதாரமும் வரலாறும் **படித்தது,** ஏனெனில் மக்கள் பலவும் **தெரிந்து கொள்ள** விரும்பினார்கள்.... மாநகரம் ஒவ்வொன்றிலும், மிகப் பெருவாரியான நகர்களிலும், போர்முனை நெடுகிலும் ஒவ்வொரு அரசியல் கட்சிப் பிரிவும் அதன் செய்தியேட்டை—சில நேரங்களில் ஒன்றுக்கு மேற்பட்டவற்றையும்—நடத்தி வந்தது. பல்லாயிரக் கணக்கான நிறுவனங்கள் லட்சக் கணக்கான பிரசுரங்களை வினியோகித்தன, இவை சேனைகளினுள்ளும் கிராமங்களிலும் ஆலைகளிலும் தெருக்களிலும் பெருக்கெடுத்தன. இத்தனைக் காலமாய் மடையிட்டுத் தடுக்கப்பட்டிருந்த கல்வித் தாகம் இப்போது புரட்சியைத் தொடர்ந்து மடையை உடைத்துக் கொண்டு, வெளியீட்டுப் பிரளயமாய் ஆவேசமாய் எழுந்தது. ஸ்மோல்னி கழகத்தில் மட்டுமிருந்து முதல் ஆறு மாதங்களில் நாள்தோறும் டன் கணக்கில் லாரி லாரியாய், ரயில் ரயிலாய் பிரசுரங்களும் புத்தகங்களும் நாடெங்கிலும் போய்ச் சேர்ந்தன. பாலை மணல் போல் ருஷ்ய நாடு முடிவின்றி ஏடுகளை

---

* குறிப்புகளும் விளக்கங்களும் என்பதைப் பார்க்கவும்.

ஜூன் 16ல் நடைபெற்ற ஆலைக் கமிட்டிகளது பெத்ரொகிராது மாநாடு மிகப் பெரும்பான்மை வாக்குகளின் பேரில் (பிரதிநிதிகளில் நான்கில் மூன்று பங்கானோரின் வாக்குகளின் பேரில்) போல்ஷிவிக்குகளை ஆதரித்தது.—[பதிப்பாசிரியர்.]

யும் நூல்களையும் உட்கவர்ந்து கொண்டது. அவை கட்டுக் கதைகளும், புரட்டான வரலாறும், முனைப்பில்லா மதமும், சீரழிக்கும் கீழ்த்தரப் புதினமும் அல்ல—சமூக, பொருளாதாரத் தத்துவங்களும், தத்துவவியலும், தல்ஸ்தோய், கோகல், கோர்க்கி போன்றோரின் எழுத்துகளுமாகும்....

பிறகு பேச்சுப் பெருக்கு — கார்லைல் கூறினரே "பிரெஞ்சுப் பேச்சுப் பெருவெள்ளம்" என்று, அதை மெல்லிய தாரையெனச் சொல்லும் அளவுக்குப் பிரவாகமாகி விட்ட பேச்சுப் பெருக்கு. விரிவுரைகள், விவாதங்கள், சொற்பொழிவுகள்—நாடகக் கூடங்களில், சர்க்கஸ் அரங்குகளில், பள்ளிக்கூடக் கட்டடங்களில், மன்றங்களில், சோவியத்துக் கூட்ட மண்டபங்களில், தொழிற் சங்க அலுவலகங்களில், இராணுவக் கொட்டடிகளில்.... எங்கும் கூட்டங்கள்—போர்முனை அகழ்வரிகளில், கிராமச் சதுக்கங்களில், ஆலைகளில்....புத்தீலவ் ஆலையின் நாற்பதாயிரம் தொழிலாளர்களும் திரண்டெழுந்து வந்து, சமூக-ஜனநாயகவாதிகளும் சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களும் அராஜகவாதிகளும் இன்னும் யார் வேண்டுமானாலும் என்ன வேண்டுமானாலும் பேச முடிந்த வரை பேசுவதைக் கேட்டுக் கொண்டிருந்த காட்சி கண்கொளாக் காட்சி! தொடர்ச்சியாய்ப் பல மாதங்களாய்ப் பெத்ரொகிராதிலும் ருஷ்யா எங்கிலும் முச்சந்தி ஒவ்வொன்றும் பொதுக் கூட்ட அரங்காகிவிட்டது. ரயில் வண்டிகளில், தெருவில் டிராம்களில், இன்னும் எங்கெங்கு எல்லாமோ திடீர் விவாதங்கள் கிளர்ந்தெழுந்தன....

இவற்றுடன், அனைத்து ருஷ்ய மாநாடுகளும் காங்கிரசுகளும் இரு கண்டங்களிலிருந்து ஆட்களை ஒருசேரக் கூட்டின—சோவியத்துகள், கூட்டுறவுச் சங்கங்கள், ஸேம்ஸ்த்வோக்கள்*, தேசிய இனங்கள், பாதிரிமார்கள், விவசாயிகள், அரசியல் கட்சிகள் இப்படி விதம் விதமாய் எண்ணிலடங்காத காங்கிரசுகள்; ஜனநாயக மாநாடு, மாஸ்கோ மாநாடு, ருஷ்யக் குடியரசுப் பேரவை. பெத்ரோகிராதில் எப்போதும் மூன்று அல்லது நான்கு மாநாடுகள் நடைபெற்று

---

* குறிப்புகளும் விளக்கங்களும் என்பதைப் பார்க்கவும்.
—[பதிப்பாசிரியர்.]

வந்தன. எந்தக் கூட்டத்திலும் பேச்சாளர்களுக்கு நேர வரம்பு இடுவதற்கான முயற்சிகளை எதிர்த்து வாக்களிக்கப்பட்டது, ஒவ்வொருவரும் தமது மனத்துள் இருந்ததைத் தங்குதடையின்றி எடுத்துரைக்க முடிந்தது....

ரீகாவுக்குப் பின்னால் இருந்த பன்னிரண்டாம் சேனையின் போர்முனைக்குச் சென்றிருந்தோம். படையாட்கள் அகழ் வரியின் சேற்றிலே காலில் பூட்சின்றி வதைந்து, பசியாலும் பிணியாலும் ஓய்ந்து போயிருந்தார்கள். எங்களைப் பார்த்ததும் பரபரப்புற்றவர்களாய், சிவந்த முகங்களுடன், உடுப்புகளின் கிழிசல் வழியே நீலம் பாய்ந்த மேனி தெரிய, ஆவலோடு கேட்டார்கள்: ''படிப்பதற்கு ஏதாவது கொண்டு வந்திருக்கிறீர்களா?''

காலம் மாறிவிட்டது என்பதற்கான அறிகுறிகள் மிகப் பலவும் வெளிப்படையாகவும் தெளிவாகவும் தெரிந்தன என்றாலும், அலெக்சாந்திரின்ஸ்கி நாடக மன்றத்துக்கு முன்னால் இருந்த பேரரசி காத்தரீன் சிலை ஒரு சிறு செங்கொடியைக் கையிலே ஏந்தியிருந்ததும், மற்றும் பல செங்கொடிகள் —சற்று மங்கிப் போய்—எல்லாப் பொதுக் கட்டடங்களின் மீதும் பறந்து கொண்டிருந்ததும், ஜாரரசு முத்திரைச் சின்னங்களும் கழுகுகளும் உடைத்தெடுக்கப்பட்டோ மூடப்பட்டோ இருந்ததும் மெய்தான் என்றாலும், மூர்க்க உருக் கொண்ட நகரப் போலீசாருக்குப் பதில் ஆயுதங்கள் இல்லாத நன்னயப் பாங்கினரான குடி மக்கள் காவலினர் தெருக்களிலே ரோந்து சுற்றினர் என்றாலும்—காலத்துக்கு ஒவ்வாத விபரீதங்கள் பலவும் நடைபெற்றுக் கொண்டுதான் இருந்தன.

உதாரணமாய், மகா பீட்டரின் தாபில் ஓ ராங்கஹ்— படிநிலைப் பதவி அட்டவணை—இரும்புக் கரங் கொண்டு ருஷ்யாவின் மீது அழுத்திப் பொருத்தப்பட்ட அந்தப் பட்டப் படிவரிசை, தொடர்ந்து இன்னமும் கோலோச்சி வந்தது. பள்ளிக்கூட சிறுவர்களிலிருந்து தொடங்கி அனேகமாய் எல்லாரும் அவரவருக்கும் விதிக்கப்பட்ட சீருடை அணிந்து பொத்தானிலும் தோள்பட்டையிலும் ஜார் பேரரசரின் இலச்சினையுடன் தோற்றமளித்தனர். பிற்பகல் ஐந்து மணிக்கு எல்லாம் தெருக்களிலே அடக்கவொடுக்கமான வயது முதிர்ந்த ஆட்கள் நிரம்பிவிடுவர்—பெரிய பெரிய கொட்டடி போன்ற

அமைச்சகங்கள் அல்லது அரசாங்க நிலையங்களில் வேலை முடிந்து கைப்பைகளை எடுத்துக் கொண்டு வீட்டுக்குத் திரும்பு கிறவர்கள் இவர்கள். தமது மேலதிகாரிகளிடையே மரண விகிதம் எவ்வளவு இருந்தால், பல காலமாய்த் தாம் எதிர் பார்த்துக் காத்திருக்கும் பட்டத்து ஆலோசகர் அல்லது தனி ஆலோசகர் பதவியை நோக்கித் தாம் முன்னேற முடியும், வசதியான ஓய்வூதியத்தோடும் முடியுமாயின் ஆன்ஞச் சிலு வைப் பதக்கத்தோடும்* ஓய்வு பெறும் வாய்ப்பினை வந்தடை யலாம் என்று கணக்கிட்டுக் கொண்டிருப்பவர்கள்....

அரசவை ஆலோசகர் சக்கலோவைப் பற்றிக் கதை ஒன்று கூறப்பட்டது; புரட்சியின் உச்சத்தில் ஒரு நாள் அவர் சாதாரண உடுப்புகளில் அரசவைக் கூட்டத்துக்கு வந்து சேர்ந்தார், ஜார் மன்னரது இச் சேவைத் துறைக்கு விதிக் கப்பட்ட முறை உடுப்பு அணிந்திருக்கவில்லையென கூட்ட மண்டபத்துக்குள் அவர் அனுமதிக்கப்படவில்லையாம்!

தேசம் அனைத்தும் கொந்தளிப்புக்கும் சிதைவுக்கும் உள்ளாகியிருந்த இப்படிப்பட்ட பின்னணியிலேதான் வர லாற்றுப் பெருங் காப்பியமாய் ருஷ்ய மக்கட் பெருந் திரளினரது எழுச்சி நடந்தேறியது....

---

* ஆன்ஞச் சிலுவைப் பதக்கம்—பட்டையில் பதித்துக் கழுத்தில் அணிந்து கொள்ளப்பட்ட ஜார் காலத்திய விருது. —[பதிப்பாசிரியர்.]

அத்தியாயம் 2

## நெருங்கி வரும் புயல்

ஜெனரல் கர்னீலவ் தம்மை ருஷ்யாவின் இராணுவச் சர்வாதிகாரியாக்கிக் கொள்ளும் பொருட்டு, செப்டம்பரில் பெத்ரொகிராதின் மீது படையெடுத்தார். துணிவுடன் புரட்சியை நசுக்க முயன்ற முதலாளித்துவ வர்க்கத்தின் வலுவான கரம் அவருக்குப் பின்னல் மறைந்திருந்தது திடுமென வெளிப்பட்டது. சோஷலிஸ்டு அமைச்சர்கள் சிலர் இதில் சம்பந்தப்பட்டிருந்தார்கள், கேரென்ஸ்கியுங்கூட சந்தேகத்துக்குரிய ஆளாய்க் கருதப்பட்டார்.[1]* சாவின்கவ் விளக்கம் கூறுமாறு அவரது கட்சியான சோஷலிஸ்டுப் புரட்சியாளர் கட்சியின் மத்தியக் கமிட்டியால் அழைக்கப்பட்டார்; அவர் விளக்கம் கூற மறுத்த போது கட்சியிலிருந்து விலக்கப்பட்டார். படையாட்களது கமிட்டிகள் கர்னீலவைக் கைது செய்தன. ஜெனரல்கள் பலர் பதவி நீக்கம் செய்யப்பட்டார்கள். அமைச்சர்கள் சிலர் அவர்களது பொறுப்புகளிலிருந்து தற்காலிகமாய் நீக்கி வைக்கப்பட்டனர், அமைச்சரவை தகர்ந்து விழுந்தது.

முதலாளித்து வர்க்கத்தின் கட்சியினரான காடேட்டுகளையும் சேர்த்துக் கொண்டு கேரென்ஸ்கி ஒரு புதிய அரசாங்கத்தை அமைக்க முயன்றார். காடேட்டுகளைச் சேர்த்துக் கொள்ளக்கூடாதென்று அவருடைய கட்சியான சோஷலிஸ்டுப் புரட்சியாளர் கட்சி அவருக்கு உத்தரவிட்டது. கேரென்ஸ்கி

---

* இந்த அத்தியாயத்தில் எண்ணிட்டுக் காட்டப்படும் சுட்டுக் குறிகள் அத்தியாயம் 2இன் அனுபந்தத்தைக் குறிப்பவை.

இதற்குப் பணிய மறுத்தார்; சோஷலிஸ்டுகள் வற்புறுத்து வார்களாயின் அமைச்சரவையிலிருந்து தாம் ராஜிநாமா செய்யும்படி நேருமென மிரட்டினர். ஆயினும் மக்களிடையே எதிர்ப்புணர்ச்சி கடுமையாகி விடவே, உடனடியாகவே இதற்கு எதிராய்ச் செல்லத் துணியவில்லை அவர். பிரச்சினைக்கு இறுதித் தீர்வு ஏற்படும் வரை பழைய அமைச்சர்களில் ஐவர் அடங்கிய தற்காலிக நெறியாளர் குழு* ஒன்று கேரென்ஸ்கியைத் தலைவராய்க் கொண்டு அதிகாரம் ஏற்றது.

கர்னீலவ் கலகத்தைத் தொடர்ந்து எல்லா சோஷலிஸ்டுக் கோஷ்டிகளிடத்தும், ''மிதவாதிகளும்'' மற்றும் புரட்சியாளர்களுமான எல்லாரிடத்தும், தற்காப்பு உணர்ச்சி மேலோங்கி இக்கோஷ்டிகள் ஒன்றை யொன்று நெருங்கி வரலாயின. கர்னீலவ் போன்றோர் இனி யாரும் தோன்ற இடமளிக்கலாகாது. புரட்சியை ஆதரித்து நிற்கும் கூறுகளுக்குப் பொறுப்பான ஒரு புதிய அரசாங்கம் அமைக்கப்பட வேண்டும். ஆகவே **இத்ஸே-யி-க** செப்டம்பரில் பெத்ரொகிராதில் ஜனநாயக மாநாடு ஒன்றைக் கூட்டுவதென முடிவு செய்து, எல்லா ஜனநாயக நிறுவனங்களையும் இம்மாநாட்டுக்குப் பிரதிநிதிகளை அனுப்பி வைக்குமாறு அழைத்தது.

**இத்ஸே-யி-க**வில் உடனே மூன்று போக்குகள் உருவாயின. போல்ஷிவிக்குகள் சோவியத்துகளின் அனைத்து ருஷ்யக் காங்கிரஸ் கூட்டப்பட வேண்டுமென்றும், ஆட்சியதிகாரம் அனைத்தும் அதற்கு மாற்றப்பட வேண்டுமென்றும் கோரினர். செர்னேவின் தலைமையிலிருந்த ''மையநிலை'' சோஷலிஸ்டுப் புரட்சியாளர்கள் கம்கோவும் ஸ்பிரிதோனவாவும் தலைமை தாங்கிய இடதுசாரி சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களோடும், மார்த்தவின் கீழிருந்த மென்ஷிவிக்கு சர்வதேசியவாதிகளோடும், பொக்தானவாலும் ஸ்கோபெலெவாலும் பிரதிநிதித்துவம் செய்யப்பட்ட''மையநிலை'' மென்ஷிவிக்குகளோடும்**

---

* தற்காலிக நெறியாளர் குழுவில் இருந்தவர்கள்: கேரென்ஸ்கி, நிக்கீதின், தெரேஷ்ச்சென்கொ,வெர்ஹோவ்ஸ்கி, வெர்தெரேவ்ஸ்கி.—[பதிப்பாசிரியர்.]

** குறிப்புகளும் விளக்கங்களும் என்பதைப் பார்க்கவும். —[பதிப்பாசிரியர்.]

சேர்ந்து கொண்டு, முழுநிறை சோஷலிஸ்டு அரசாங்கம் அமைக்கப்பட வேண்டுமென்று கோரினர். திஸெரெத்தேலி டான், லீபெர் இவர்களைத் தலைவர்களாய்க் கொண்ட வலது சாரி மென்ஷிவிக்குகளும், அவ்க்சேன்தியெவ், கோட்ஸ் ஆகி யோரின் தலைமையிலிருந்த வலதுசாரி சோஷலிஸ்டுப் புரட்சி யாளர்களும் புதிய அரசாங்கத்தில் சொத்துடைத்த வர்க்கங் களும் பிரதிநிதித்துவம் பெற்றிருக்க வேண்டுமென வற் புறுத்தினர்.

இதன்பின் அனேகமாய் உடனடியாகவே போல்ஷிவிக்கு கள் பெத்ரொகிராது சோவியத்தில் பெரும்பான்மை பெற்று விட்டார்கள்; பிறகு மாஸ்கோ, கீவ், அதேஸ்ஸா சோவியத்து களிலும் ஏனைய நகரங்களது சோவியத்துகளிலும் இதே போல் ஆயிற்று.

இத்ஸே-யி-கவில் ஆதிக்கம் புரிந்த மென்ஷிவிக்குகளும் சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களும் பீதியுற்றுப் போய், இறு தியாய்ப் பார்க்கையில் கர்னீலவ் அபாயத்தைக் காட்டிலும் லெனின் அபாயத்தையே தாம் அதிகமாய் அஞ்சுவதாய் முடிவு செய்தார்கள்.

ஜனநாயக மாநாட்டின் பிரதிநிதித்துவத் திட்டத்தை[2] அவர்கள் திருத்தியமைத்து, கூட்டுறவுக் கழகங்களிடமிருந் தும் ஏனைய பழமைவாத நிறுவனங்களிடமிருந்தும் அதிக அளவிலான பிரதிநிதிகளை இம்மாநாட்டில் அமரச் செய்தனர். இப்படிப்பட்ட பிரதிநிதிகளைத் திரட்டி வந்துங்கூட ஆரம் பத்தில் இந்த மாநாடு, காடேட்டுகள் இல்லாத கூட்டணி அரசாங்கமே வேண்டுமென்று வாக்களித்தது. கேரென்ஸ்கி ராஜீநாமா செய்து விடுவதாய்ப் பகிரங்கமாய் அச்சுறுத்திய பிற்பாடும், ''குடியரசுக்கு ஆபத்து'' என்று ''மிதவாத'' சோஷலிஸ்டுகள் கூக்குரலிட்டுப் பீதி உண்டாக்கிய பிற்பா டும்தான், மாநாடு சொற்ப பெரும்பான்மை வாக்குகளின் மூலம் பணியலாயிற்று—முதலாளித்துவ வர்க்கத்துடன் கூட்டணி கொள்ளும் கோட்பாட்டை ஆமோதிக்கவும், சட்ட மியற்றும் அதிகாரம் ஏதுமின்றி ஆலோசனை அந்தஸ்து கொண்ட ஒருவகைப் நாடாளுமன்றம், ருஷ்யக் குடியரசின்

இடைக்கால அவை என்ற பெயரில் நிறுவப்படுவதை அங்கீகரிக்கவும் அது உடன்பட்டது. புதிதாய் அமைக்கப்பட்ட அமைச்சரவையில் சொத்துடைத்த வர்க்கங்களே நடைமுறையில் ஆதிக்க நிலை வகித்தன, ருஷ்யக் குடியரசு அவையில் இவ்வர்க்கங்கள் அளவுக்கு மீறிய இடங்களைப் பெற்றுக் கொண்டன.

இத்ஸே-யி-க உண்மையில் இப்போது சோவியத்துகளில் அணிதிரண்டிருந்த மக்கள் திரளினரது பிரதிநிதியாய் விளங்கவில்லை. செப்டம்பரில் கூட்டப்பட்டிருக்க வேண்டிய சோவியத்துகளின் மற்றோர் அனைத்து ருஷ்யக் காங்கிரசைக் கூட்டமறுத்துச் சட்டவிரோதமாய்ச் செயல்பட்டு வந்தது அது. இந்தக் காங்கிரசைக் கூட்டும் உத்தேசமோ, இது கூட்டப்படுவதை அனுமதிக்கும் உத்தேசமோ அதற்கு இல்லை. சோவியத்துகளின் பணி அனேகமாய் முடிவுற்றுவிட்டதாகவும்,[3] விரைவில் அவை கலைக்கப்பட்டு விடலாம் என்றும் இத்ஸே-யி-கவின் அதிகாரபூர்வமான ஏடாகிய இஸ்வேஸ்தியா (செய்தி) ஜாடையாய்க் குறிப்பிட்டு வந்தது.... இதே நேரத்தில் புதிய அரசாங்கம், ''பொறுப்பற்ற நிறுவனங்களை'', அதாவது சோவியத்துகளைக் கலைத்திடுவது தனது கொள்கையின் ஒரு பகுதியாகுமென அறிவித்தது.

போல்ஷிவிக்குகள் இதற்குப் பதிலளிக்கும் முறையில், சோவியத்துகளின் அனைத்து ருஷ்யக் காங்கிரசை நவம்பர் 2ல் பெத்ரொகிராதில் கூடுமாறும், ருஷ்யாவின் ஆட்சியதிகாரத்தை மேற்கொள்ளுமாறும் அழைத்தார்கள். அதே போது ''மக்களுக்குத் துரோகமிழைக்கும் அரசாங்கம்'' ஒன்றில் தாம் பங்கு கொள்ள முடியாதெனக் கூறி[4], அவர்கள் ருஷ்யக் குடியரசு அவையிலிருந்து வெளியேறினார்கள்.

அதிர்ஷ்டமில்லாத அந்த அவையில், போல்ஷிவிக்குகள் வெளியேறிய பிற்பாடும் அமைதி ஏற்படவில்லை. இப்போது அதிகார நிலையைப் பெற்றுவிட்ட சொத்துடைத்த வர்க்கங்களுக்கு ஆணவம் தலைக்கேறிவிட்டது. ருஷ்யாவைக் குடியரசெனப் பிரகடனம் செய்வதற்கு அரசாங்கத்துக்குச் சட்டப்படி எந்த உரிமையும் இல்லை என்று பறைசாற்றினர் காடேட்டுகள். சேனையிலும் கடற்படையிலும் கடும் நடவடிக்கைகள் எடுக்கப்பட வேண்டும், படையாட்கள், மாலுமிகளது கமிட்

டிகள் அழிக்கப்பட வேண்டும் என்றனர்; சோவியத்துகளை நிந்தனை செய்தனர். அவையின் எதிர்ப் புறத்திலிருந்து மென்ஷிவிக்கு சர்வதேசியவாதிகளும் இடதுசாரி சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களும் உடனடியாய்ச் சமாதானமும், விவசாயிகளுக்கு நிலமும், தொழிற் துறையின் மீது தொழிலாளர் கண்காணிப்பு வேண்டுமென — அனேகமாய் போல்ஷிவிக்கு வேலைத்திட்டத்தை அப்படியே—வற்புறுத்தினர்.

காடேட்டுக்குப் பதிலளித்து மார்த்தவ் நிகழ்த்திய சொற்பொழிவைக் கேட்டேன் நான். இனி நம்பிக்கைக்கு இடமில்லை என்னும்படி நோயுற்றவராய்ப் பேச்சுமேடை மேஜை மீது கவிழ்ந்து கொண்டு, கம்மிப் போய்ச் சரிவரக் காதில் விழாத குரலில் பேசிய அவர், வலப் பக்கத்து பெஞ்சுகளை நோக்கி விரலை ஆட்டிக் காட்டினார்:

''நீங்கள் எங்களைப் பார்த்துத் தோல்வி மனப்பாங்கு கொண்டுள்ளோம் என்கிறீர்கள்; ஆனால் சமாதானம் முடித்துக்கொள்ள இன்னும் தக்க தருணம் வந்தாகவில்லையெனக் காத்திருப்பவர்கள்தான், சமாதானத்தை ஒத்திப் போட வேண்டுமென வற்புறுத்துவோர்தான், ருஷ்யச் சேனையில் ஏதும் மிஞ்சியில்லாமற் போகும் வரை, ருஷ்யாவானது வெவ்வேறு ஏகாதிபத்தியக் கோஷ்டிகளுக்கு இடையிலான பேரத்துக்கு உரியதாகும் வரைக் காத்திருக்கலாம் என்போர்தான் உண்மையில் தோல்வி மனப்பாங்கு கொண்டவர்கள்.... முதலாளித்துவ வர்க்கத்தின் நலன்களால் தீர்மானிக்கப்பட்ட ஒரு கொள்கையினை நீங்கள் ருஷ்ய மக்கள் மீது திணிக்கப் பார்க்கிறீர்கள். சமாதானப் பிரச்சினை தாமதமின்றி உடனே எழுப்பப்பட்டாக வேண்டும்.... ஜெர்மன் கையாட்கள் என்பதாய்ச் சொல்கிறீர்களே, எல்லா நாடுகளிலும் ஜனநாயக மக்கட் திரளினரின் மனச்சான்று விழித்தெழுவதற்காக வேலை செய்து வந்திருக்கும் அந்த ஸிம்மர்வால்டியர்கள்* ஆற்றியுள்ள பணி வீணாகிவிடவில்லை என்பதை அப்போது நீங்கள் காண்பீர்கள்....''

---

* ஐரோப்பிய சோஷலிஸ்டுகளின் புரட்சிகர சர்வதேசியப் பிரிவைச் சேர்ந்தவர்கள், ஸ்விட்சர்லந்திலுள்ள ஸிம்மர்வால்டில் 1915ல் நடைபெற்ற சர்வதேச மாநாட்டில் பங்கெடுத்துக் கொண்டதால் ஸிம்மர்வால்டியர்கள் என்று அழைக்கப்பட்டனர்.

இவ்விரு பிரிவோருக்கும் இடையே மென்ஷிவிக்குகளும் சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களும் ஊசலாடினார்கள், வெகு ஜனங்களுடைய உயர்ந்தெழுந்த அதிருப்தியின் பலவந்தத்தைச் சமாளிக்க முடியாமல் இடதுப் பக்கம் தள்ளப்பட்டு வந்தார்கள்.

ருஷ்யக் குடியரசு அவை கடும் பகைமை கொண்ட இரு கோஷ்டிகளாய், இணக்கம் காண முடியாத இரு கோஷ்டிகளாய்ப் பிளவுபட்டிருந்தது.

இம்மாதிரியான நிலைமையில்தான், நெடுநாட்களாய் எதிர்பார்க்கப்பட்ட நேசநாடுகளது பாரிஸ் மாநாடு கூடுவது பற்றிய அறிவிப்பு வெளியாயிற்று; தலையாய அவசரப் பிரச்சினையாகிய அயல் துறைக் கொள்கைப் பிரச்சினையை இந்த அறிவிப்பு எழுப்பிற்று....

ருஷ்யாவைச் சேர்ந்த எல்லா சோஷலிஸ்டுக் கட்சிகளும் ஜனநாயக வரையறைகளின் அடிப்படையிலான சமாதானம் கூடுமான விரைவில் முடிவாக வேண்டும் என்பதைத் தத்துவார்த்த அளவில் ஆதரித்து வந்தன. 1917 மே மாதத்திலேயே பெத்ரொகிராது சோவியத்து—அப்போது அது மென்ஷிவிக்குகள், சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களது ஆதிக்கத்தில் இருந்தது—சமாதானத்துக்கான பிரபல ருஷ்ய வரையறைகளைப் பிரகடனம் செய்திருந்தது. யுத்தத்தின் நோக்கங்களை விவாதிக்கும் பொருட்டு நேச நாடுகள் ஒரு மாநாட்டைக் கூட்ட வேண்டுமென்று இந்த வரையறைகள் கோரியிருந்தன. ஆகஸ்டில் இம்மாநாடு கூடுமென வாக்களிக்கப்பட்டிருந்தது. பிறகு அக்டோபருக்கு ஒத்திப் போடப்பட்டு, இப்போது நவம்பர் 10ல் நடைபெறுமென அறிவிக்கப்பட்டிருந்தது.*

இடைக்கால அரசாங்கம் இந்த மாநாட்டிற்கு இரு பிரதிநிதிகளை—பிற்போக்குவாத இராணுவப் பிரமுகரானஜெனரல் அலெக்சேயிவையும், அயல் துறை அமைச்சர் தெரேஷ்ச்சென்கொவையும்—அனுப்ப உத்தேசித்திருப்பதாய் அறிவித்தது. சோவியத்துகள் தம் சார்பில் பேசுவதற்காக ஸ்கோபெலெவைத் தேர்ந்தெடுத்து, அவருக்காக ஓர் அறிக்கையையும்,

* இடைக்கால அரசாங்கம் விழுந்துவிட்டதால் இந்த மாநாடு நடைபெறவில்லை.—[பதிப்பாசிரியர்.]

அதாவது புகழ் பெற்ற நக்காஸையும்[5] — கட்டளைகளையும்— வகுத்தளித்தன. இடைக்கால அரசாங்கம் ஸ்கோபெலெவை யும் அவருக்கான நக்காஸையும் எதிர்ப்பதாய்க் கூறிற்று, நேசநாடுகளின் தூதர்களும் ஆட்சேபம் தெரிவித்தார்கள். முடிவில் பிரிட்டிஷ் காமன்ஸ் சபையில் ஒரு கேள்விக்குப் பதிலளிக்கும் முறையில் போனர் லா* இரக்கமின்றி அறிவித் தார்: ''எனக்குத் தெரிந்த வரை பாரிஸ் மாநாடு யுத்தத்தின் நோக்கங்கள் குறித்து விவாதிக்கப் போவதில்லை, யுத்தத்தை நடத்துவதற்கான வழிமுறைகளைப் பற்றி மட்டுமே விவா திக்கும்....''

இதைக் கேட்டு, பழமைவாத ருஷ்யப் பத்திரிகைகள் ஆனந்தப்பட்டுக் கொண்டன; போல்ஷிவிக்குகள் கூச்சலிட் டார்கள்: ''மென்ஷிவிக்குகளும் சோஷலிஸ்டுப் புரட்சியாளர் களும் பின்பற்றும் சமரசவாதப் போக்கு அவர்களை எங்கே அழைத்துச் சென்றிருக்கிறது, பாருங்கள்!''

ஆயிரம் மைல்களுக்கு நீண்டு சென்ற போர்முனையிலே ருஷ்யச் சேனைகளின் லட்சோப லட்சக் கணக்கான படை யாட்கள் கடலெனக் கிளர்ந்தனர், நூற்றுக் கணக்கிலான தமது பிரதிநிதிக் குழுக்களைத் தலைநகருக்கு அனுப்பி, ''சமா தானம்! சமாதானம்!'' என்ற தமது கோரிக்கையை அதிர்ந்து முழங்கச் செய்தனர்.

ஆற்றைக் கடந்து நான் மாடர்ன் சர்க்கஸுக்குச் சென் றேன், இரவு தவறாமல் மேலும் மேலும் அதிக எண்ணிக்கை யில் நகரெங்கும் நடைபெற்ற மாபெரும் பொதுக் கூட்டங் களில் ஒன்று அங்கே நடைபெற்றுக் கொண்டிருந்தது. மெல்லிய கம்பியிலிருந்து தொங்கிய ஐந்து சிறு விளக்குகளைத் தவிர வேறு ஒளியின்றி மங்கலாய், அலங்கார ஜோடனை எது வுமின்றி இருந்த அந்த வட்டரங்கு நிரம்பி வழிந்தது, கீழே சர்க்கஸ் வட்டத்திலிருந்து செங்குத்தாய்க் கூரை வரை உயர்ந்து சென்ற இருள் படிந்த பலகைப் படியடுக்கில் நெரிச

---

* ஹென்றி போனர் லா (1858-1923)—ஆங்கிலேய அரசுத் துறையாளர், கான்சர்வேட்டிவ்களின் தலைவர், 1917ல் லாயிட் ஜார்ஜின் கூட்டணி அரசாங்கத்தில் நிதி அமைச்சர், காமன்ஸ் சபையில் முதல்வர்.—[பதிப்பாசி ரியர்.]

லாய்க் குழுமியிருந்த படையாட்களும் மாலுமிகளும் தொழிலாளர்களும் பெண்களும் தமது உயிரே அங்கு நிகழ்த்தப் பட்ட பேச்சுகளையே பொறுத்திருந்தாற் போல் அவ்வளவு உருக்கமாய்க் கேட்டுக் கொண்டிருந்தார்கள். ஐந்நூற்று நாற்பத்தெட்டாவது டிவிஷனும்—அது என்ன டிவிஷனே, எங்கே இருந்ததோ—அதைச் சேர்ந்த படையாள் ஒருவர் பேசிக் கொண்டிருந்தார்:

''தோழர்களே'' என்று கத்தினர், அவரது வாடிய முகமும் சோர்வு கொண்ட அங்க அசைவுகளும் நெஞ்சு பொறுக்காத வேதனையை வெளியிட்டன. ''இன்னும் தியாகம் புரியுங்கள், இன்னும் தியாகம் புரியுங்களென மேலிடத்தவர்கள் எந்நேரமும் நமக்கு அறிவுறுத்துகிறார்கள், அதேபோது அனைத்தையும் பெற்றிருப்பவர்கள் எதையும் கைவிட நேராதபடி சுகமாய் விட்டு வைக்கப்படுகிறார்கள்.

''ஜெர்மனிக்கும் நமக்கும் யுத்தம் நடைபெறுகிறது. ஜெர்மன் ஜெனரல்களை அழைத்து நமது படைத் தலைமையிடத்தில் வேலைக்கு அமர்த்திக் கொள்வோமா? இதே போலத்தான் முதலாளிகளுக்கும் நமக்கும் யுத்தம் நடைபெறுகிறது, ஆயினும் இந்த முதலாளிகளை அழைத்து நமது அரசாங்கத்தில் அமர்த்திக் கொள்கிறோம்....

''படையாள் சொல்வது இதுதான்: 'நான் போர் புரிவது எதற்காக என்பதைச் சொல்லுங்கள். கான்ஸ்தான்திநோப்பிளுக்காகவா, அல்லது சுதந்திர ருஷ்யாவுக்காகவா? ஜனநாயகத்துக்காகவா, அல்லது முதலாளித்துவக் கொள்ளைக்காரர்களுக்காகவா? நான் போர் புரிவது புரட்சியின் பாதுகாப்புக்காக என்பதை உங்களால் எனக்கு நிரூபிக்க முடியுமானல், என்னைப் பலவந்தம் செய்ய மரண தண்டனை தேவையாய் இருக்காது, நானாகவே போய்ப் போர் புரிவேன்.

''நிலம் விவசாயிகளுக்கும், ஆலைகள் தொழிலாளர்களுக்கும், ஆட்சியதிகாரம் சோவியத்துகளுக்கும் உரித்தாகும் போது, போர் புரியத் தக்க காரணம் இருப்பதை நாங்கள் தெரிந்து கொள்வோம், அதற்காகப் போர் புரிவோம்!''

படைக் கொட்டடிகளிலும் ஆலைகளிலும் தெருச் சந்திகளிலும் முடிவின்றி வந்து நின்று படையாட்கள் பேசினர்; யாவரும் யுத்தம் முடிவுற வேண்டுமென ஆக்ரோஷமாய்க்

கோரினர்; சமாதானம் முடிவாவதற்காக அரசாங்கம் முழு மூச்சுடன் செயல்படாவிடில் சேனையானது அகழ்வரிகளை விட்டுத் துறந்து வீட்டைப் பார்க்கப் போய்ச் சேர்ந்துவிடு மெனப் பறைசாற்றினர்.

எட்டாவது சேனையின் சார்பில் பேசியவர் அறிவித்தார்:

''பலமெல்லாம் இழந்து வருகிறோம், ஒவ்வொரு படைப் பிரிவிலும் ஒருசில ஆட்களே எஞ்சியிருக்கிறார்கள். எங்களுக்கு அவர்கள் உணவும் பூட்சுகளும் புதுப் படைகளும் அனுப்பி வைக்க வேண்டும், இல்லையேல் விரைவில் காலி அகழ்வரிகள் தான் எஞ்சியிருக்கும். சமாதானம் அல்லது தேவைப் பொருட்கள்.... அரசாங்கம் யுத்தத்துக்கு முடிவு கட்டட்டும், அல்லது சேனைக்கு வேண்டியவற்றை அளிக்கட்டும்....''

நாற்பத்தாறுவது சைபீரியப் பீரங்கிப் பிரிகேடின் சார்பில் கூறப்பட்டது:

''அதிகாரிகள் எங்களுடையகமிட்டிகளுடன்சேர்ந்துவேலை செய்ய மறுக்கிறார்கள், பகைவனுக்கு எங்களைக் காட்டிக் கொடுக்கிறார்கள், எங்களுடைய கிளர்ச்சியாளர்களுக்கு மரண தண்டனை விதிக்கிறார்கள், எதிர்ப்புரட்சி அரசாங்கம் இந்த அதிகாரிகளை ஆதரிக்கிறது. புரட்சியானது சமாதானத் துக்கு வழி செய்யுமென நினைத்திருந்தோம். ஆனால் இப்போது அரசாங்கம் இம்மாதிரியானவை குறித்து நாங்கள் பேசக்கூட அனுமதி இல்லையெனத் தடை போடுகிறது; அதேபோது நாங்கள் உயிரோடு இருப்பதற்கு வேண்டிய உணவோ, போர் புரிவதற்கு வேண்டிய ஆயுத தளவாடங்களோ அளிக்க மறுக் கிறது....''

ருஷ்யாவைப் பலியிட்டு அதன் செலவில் சமாதானம் செய்து கொள்ளப்படலாம் என்பதாய் ஐரோப்பாவிலிருந்து வதந்திகள் வந்தன....[6]

பிரான்சில் ருஷ்யத் துருப்புகளுக்கு நேர்ந்தது பற்றிய செய்திகள் அதிருப்தியை மேலும் சூடேறச் செய்தன. முதலாவது பிரிகேடின் படையாட்கள் சலோனிக்காவுக்குச் செல்ல வேண்டுமென்ற உத்தரவுக்குக் கீழ்ப்படிய மறுத்துவிட்டுத் தாம் ருஷ்யாவுக்கு அனுப்பப்பட வேண்டுமென்று கோரினர், தாயகத்தில் தம் தோழர்கள் செய்தது போலவே தாமும் தமது அதிகாரிகளுக்குப் பதிலாய்ப் படையாட்கள் கமிட்டி

களை அமைத்துக் கொள்ள முயன்றனர். இவர்கள் சுற்றி வளைக்கப்பட்டு பட்டினி போடப்பட்டார்கள், பிறகு பீரங்கிப் பிரயோகம் செய்யப்பட்டு பலர் கொல்லப்பட்டார்கள்....[7]

குடியரசு அவை கூடியிருந்த மரீயின்ஸ்கி அரண்மனையின் சலவைக் கல் செம்மண்டபத்துக்கு அக்டோபர் 26ல் நான் சென்றிருந்தேன், அரசாங்கத்தின் அயல் துறைக் கொள்கையை அறிவித்துத் தெரேஷ்ச்சென்கொ அன்று அங்கே உரை நிகழ்த்தினார். யுத்தத்தால் நலிவுற்று ஓய்ந்து போய்ச் சமாதானத்துக்காக ஏங்கிய நாடு அனைத்தும் அடங்காத் தவிப்புடன் எதிர்பார்த்துக் காத்திருந்த கொள்கை அறிவிப்பு உரை அது.

நெட்டையானவர், குற்றங் குறையின்றி உடுத்தியிருந்த இளைஞர், கன்னத்து எலும்புகள் புடைத்துக் கொண்டு தெரிய மழிக்கச் சிரைத்த முகமுடையவர்—பட்டதும் படாதது மாய்க் கவனமாய் வரையப் பெற்ற உரையை அமைதி குலையாத குரலில் படித்துச் சென்றார்.[8] ஒன்றுமில்லை.... எல்லாம் பழைய பல்லவிதான்—நேசநாடுகளது துணை கொண்டு ஜெர்மன் இராணுவ ஆதிக்கத்தை நசுக்குவதன் அவசியம், ருஷ்யாவின் ''அரசு நலன்கள்'', ஸ்கோபெலெவின் நக்காஸினால் ஏற்பட்ட ''சங்கடம்'' ஆகியவை பற்றிய வெற்றுப் பேச்சுதான். உரையின் இறுதியில் மையக் கருத்தை எடுத்துரைத்தார்:

''ருஷ்யா ஒரு பெரிய வல்லரசு. என்ன நேர்ந்தாலும் எப்போதும் ருஷ்யா ஒரு பெரிய வல்லரசாகவே நிலைத்திருக்கும். நாம் எல்லாரும் ருஷ்யாவைப் பாதுகாக்க வேண்டும்; மாபெரும் ஓர் இலட்சியத்தின் காவலர்களாவோம், ஒரு பெரிய வல்லரசின் புதல்வர்களாவோம் என்பதை நாம் நிரூபித்துக் காட்ட வேண்டும்''.

இந்த உரையால் யாருக்கும் திருப்தி இல்லை. பிற்போக்குவாதிகள் ''வலுமிக்க'' ஏகாதிபத்தியக் கொள்கை வேண்டும் என்றனர்; ஜனநாயகக் கட்சிகள் சமாதானத்துக்காக அரசாங்கம் முனைந்து பாடுபடப் போவதாய் வாக்குறுதி அளிக்க வேண்டும் என்றன... போல்ஷிவிக்குப் பெத்ரொகிராது சோவியத்தின் ஏடாகிய ரபோச்சி இ சொல்தாத்தில் (தொழி

லாளியும் படையாளும்) வெளிவந்த தலையங்கத்தை அப்படியே இங்கு தருகிறேன்:

அகழ்வரிகளில் இருப்போருக்கு அரசாங்கத்தின் பதில்

நமது அமைச்சர்களில் மிகவும் மௌனமாய் இருப்பவரான அயல் துறை அமைச்சர் திரு. தெரெஷ்ச்சென்கொ படையாட்களையும் மக்களையும் பார்த்து மெய்யாகவே கூறுகின்றார்:

1. நமது நேசநாடுகளுடன் நாம் நெருக்கமாய் ஒன்றுபட்டுள்ளோம். (இந்நாடுகளின் மக்களுடன் அல்ல, இவற்றின் அரசாங்கங்களுடன்.)

2. குளிர் காலப் போர் இயக்கம் சாத்தியமா, இல்லையா என்பது பற்றிய விவாதத்தில் ஜனநாயகம் ஈடுபட வேண்டியதில்லை. நமது நேசநாடுகளின் அரசாங்கங்கள் இது குறித்து தீர்மானிக்கும்.

3. ஜூலை முதலாம் நாள் தாக்குதல் பயனுடையதாகவும் மகிழ்ச்சிக்குரியதாகவுமே இருந்தது. (இதன் விளைவுகளை அவர் குறிப்பிடவில்லை.)

4. நமது நேசநாடுகள் நம்மைப் பற்றிக் கவலைப்படவில்லை என்பது உண்மை அல்ல. மிகவும் முக்கியமான அறிக்கைகள் அமைச்சரிடம் இருக்கின்றன. (அறிக்கைகள்தானே? செயல்கள் எப்படி? பிரிட்டிஷ் கப்பற் படை எப்படி நடந்து கொண்டது?[9] நாடு கடத்தப்பட்ட எதிர்ப்புரட்சியாளரான ஜெனரல் குர்க்கோவுடன் பிரிட்டிஷ் அரசர் கூடிப் பேசவில்லையா? இவை எல்லாம் குறித்து அமைச்சர் ஒன்றும் சொல்லவில்லை.)

5. ஸ்கோபெலெவுக்கு வகுத்தளிக்கப்பட்ட நக்காஸ் நன்றாய் இல்லை; நேசநாடுகளுக்கு அது பிடிக்கவில்லை, ருஷ்யத் தூதுத் துறையோருக்கும் பிடிக்கவில்லை. நேசநாடுகளது மாநாட்டில் நாம் எல்லாரும் ''ஒரே மொழியில்'' பேச வேண்டும்.

அவ்வளவுதானா? அவ்வளவுதான். நமக்குள்ள வழி என்ன? நேசநாடுகளை நம்ப வேண்டும், தெரேஷ்ச்சென்கொவை நம்ப வேண்டும்—அது ஒன்றேதான் வழி. சமாதானம் எப்போது கைவரப் பெறும்! நேசநாடுகள் அனுமதிக்கும் போது.

அகழ்வரிகளில் இருப்போருக்குச் சமாதானம் குறித்து அரசாங்கம் அளித்திடும் பதில் இதுவேதான்!

ருஷ்ய அரசியலின் பின்னணியில் இப்போது ஒரு குரூர சக்தி அரசபுரசலாய்த் தெரிய ஆரம்பித்தது—கசாக்குகளே அந்த சக்தி. கோர்க்கியின் ஏடான நோவயா ழீஸின் (புது வாழ்வு) அவர்களுடைய செய்கைகளைக் கவனத்துக்குக் கொண்டு வந்தது:

...புரட்சியின் ஆரம்ப காலத்தில் கசாக்குகள் மக்களைச் சுட்டு வீழ்த்த மறுத்தவர்கள். பெத்ரொகிராதின் மீது கர்னீலவ் படையெடுத்த போது அவர்கள் அவரைப் பின் தொடர மறுத்தவர்கள். புரட்சியின் பால் செயல் முனைப் பில்லா விசுவாசம் காட்டும் நிலையிலிருந்து, (அதற்கு எதி ராய்ச்) செயல் முனைப்புடன் அரசியல் தாக்குதல் தொடுக்கும் நிலைக்கு மாறியிருக்கிறார்கள். கசாக்குகள் புரட்சியின் பின் னிலையில் இருந்தவர்கள், திடுமென அரங்கின் முன்னிலைக்கு வந்திருக்கிறார்கள்....

கர்னீலவ் சதியில் உடந்தையாய் இருந்ததற்காக தோன் கசாக்குகளின் அட்டாமன் கலேடினை இடைக்கால அரசாங் கம் பதவி நீக்கம் செய்திருந்தது. ஆனால் கலேடின் பதவியிலி ருந்து விலக மறுத்து, மூன்று பெரிய கசாக்குச் சேனைகள் புடைசூழ நோவொச்செர்க்காஸ்கில் முகாமிட்டுச் சதி புரிந்து அச்சுறுத்தி வந்தார். அவரது பலம் மிகப் பெரிதாய் இருந்த தால் அரசாங்கம் வேறு வழியின்றி அவரது கீழ்ப்படியா மையைக் கண்டு கொள்ளாமல் சும்மாயிருக்க வேண்டிய தாயிற்று. அதோடல்லாமல் அது கசாக்குச் சேனைகளது ஒன்றி யத்தின் அவையை அதிகாரபூர்வமாய் அங்கீகரிக்கும்படியும், சோவியத்துகளது புதிதாய் அமைக்கப் பெற்ற கசாக்குப் பிரிவு சட்ட விரோதமானதென்று பிரகடனம் செய்யும் படியும் நிர்பந்திக்கப்பட்டது....

அக்டோபர் மாத ஆரம்பத்தில் கசாக்குப் பிரதிநிதிக் குழு ஒன்று கேரென்ஸ்கியைச் சந்தித்துப் பேசி, கலேடின் மீதான குற்றச்சாட்டுகளை விட்டொழிக்குமாறு ஆணவமாய்க் கோரிற்று, சோவியத்துகளுக்குப் பணிந்து வந்ததற்காக

அரசுத் தலைவரைச் சாடிற்று. கலேடினைச் சும்மா விடுவதற்குக் கேரென்ஸ்கி உடன்பட்டதுடன், பின்வருமாறு கூறியதாய்ச் சொல்லப்படுகிறது: ''சோவியத்துத் தலைவர்களது கண்ணோட்டத்தில் நான் கொடுங்கோலனும் எதேச்சாதிகாரியும் ஆவேன்.... ஆனால் இடைக்கால அரசாங்கத்தைப் பொறுத்த வரை, அது சோவியத்துகளைச் சார்ந்ததல்ல என்பதோடன்றி, சோவியத்துகள் ஒழியாமல் நீடித்திருப்பது வருந்தத்தக்கதென்றும் அது கருதுகிறது.''

அதே நேரத்தில் மற்றொரு கசாக்குப் பிரதிநிதிக் குழு பிரிட்டிஷ் தூதரிடம் சென்று, ''சுதந்திரக் கசாக்கு மக்களின்'' பிரதிநிதியாய்த் துணிவுடன் தன்னை அறிவித்துக் கொண்டு அவருடன் பேச்சுகள் நடத்திற்று.

தோனில் கசாக்குக் குடியரசுக்கு ஒப்பான ஒன்று நிறுவப்பட்டிருந்தது. குபான் தன்னை ஒரு சுயேச்சைக் கசாக்கு அரசாய்ப் பிரகடனம் செய்து கொண்டது. தோன் நதியின் கரையிலுள்ள ரஸ்தோவிலும், மற்றும் எக்கத்தெரீன்பார்கிலும் ஆயுதந் தாங்கிய கசாக்குகள் சோவியத்துகளைக் கலைத்து விட்டனர். ஹார்க்கவில் நிலக்கரிச் சுரங்கத் தொழிலாளர் சங்கத்தின் தலைமையகம் தாக்கப்பட்டது. கசாக்கு இயக்கமானது அதன் எல்லா வெளிப்பாடுகளிலும் சோஷலிசத்தின் பகையாகவும் இராணுவாதிக்கத் தன்மையதாகவும் தான் விளங்கிற்று. கலேடினும் கர்னீலவும் ஜெனரல்கள் துத்தோவும் கரவூலொவும் பர்திழீவும் போன்ற கோமான்களும் பெரிய நிலப் பிரபுக்களும்தான் அதன் தலைவர்கள். மாஸ்கோவின் பெரும் பலம் படைத்த வணிகர்களும் வங்கி முதலாளிகளும் அதன் ஆதரவாளர்கள்....

பழய ருஷ்யா அதிவேகமாய்ச் சிதைந்து வந்தது. உக்ரைனிலும் பின்லாந்திலும் போலந்திலும் பெலருஷ்யாவிலும் தேசிய இயக்கங்கள் வலுப் பெற்றுத் துணிச்சல் மிக்கனவாகிச் சென்றன. சொத்துடைத்த வர்க்கங்களது பிடியில் இருந்தபிராந்திய ஆட்சி உறுப்புகள் பெத்ரொகிராதின் ஆணைகளுக்குப் பணிய மறுத்துத் தன்னாட்சி உரிமை கொண்டாடின. ஹெல்சிங்போர்சில் பின்லாந்து செனட்டு இடைக்கால அரசாங்கத்துக்குக் கடன் தர மறுத்தது, பின்லாந்தின் தன்னாட்சியைப் பிரகடனம் செய்து ருஷ்யத் துருப்புகள் அங்கிருந்து

திருப்பியழைக்கப்பட வேண்டுமென்று கோரிற்று. கீவில் முதலாளித்துவ ராதா தெற்கு ருஷ்யாவின் மிக செழிப்பான விவசாயப் பரப்புகள் யாவும் அடங்கலாய்க் கிழக்கே யூரல் மலைத்தொடர் வரை நீளும்படி உக்ரைனின் எல்லைகளைப் பரவலாய்ப் பெருக்கிக் கொண்டு, உக்ரைனியச் சேனை ஒன்றை நிறுவ முற்பட்டது. ஜெர்மனியுடன் தனியே சமாதானம் முடித்துக் கொள்வது பற்றி ராதாவின் பிரதமர் வின்னிச் சேன்கொ சாடையாய்க் குறிப்பிட்டார்—இடைக்கால அரசாங்கம் ஒன்றும் செய்ய முடியாத நிலையில் இருந்தது. சைபீரியாவும் காக்கசஸும் தனியே தமக்கு அரசியல் நிர்ணயச் சபைகள் வேண்டும் என்றன. இந்த மாநிலங்கள் யாவற்றிலும் பிராந்திய ஆட்சியாளர்களுக்கும் தொழிலாளர்கள், படையாட்கள் பிரதிநிதிகளது சோவியத்துகளுக்கும் இடையே கடும் போராட்டம் மூண்டு வந்தது....

நாளுக்கு நாள் நிலைமை குழப்பமாகிச் சென்றது. லட்சக் கணக்கில் படையாட்கள் போர்முனையைத் துறந்து குறிக்கோளில்லாப் பெருந் திரள்களாய் நாடெங்கிலும் திரிய முற்பட்டனர். தம்போவ், திவேர் மாநிலங்களில் விவசாயிகள் நிலம் பெறுவதற்காகக் காத்திருந்து பார்த்துவிட்டுப் பொறுமையிழந்து, அரசாங்கத்தின் அடக்குமுறை நடவடிக்கைகளைக் கண்டு ஆத்திரமடைந்து, பண்ணை வீடுகளுக்குத் தீ வைத்து நிலப்பிரபுக்களைக் கொன்றனர். மாஸ்கோவையும் அதேஸ்ஸாவையும் தோன் பிரதேச நிலக்கரிச் சுரங்கங்களையும் பிரம்மாண்ட வேலைநிறுத்தங்களும் கதவடைப்புகளும் ஆட்டிக் குலுக்கின. போக்குவரத்து நிலைகுலைந்துவிட்டது, சேனை பட்டினி கிடந்து வதைந்தது, பெரிய நகரங்களில் ரொட்டி கிடைக்கவில்லை.

ஜனநாயகப் பிரிவுகளுக்கும் பிற்போக்குப் பிரிவுகளுக்கும் இடையிலான போராட்டத்தால் அலைக்கழிக்கப்பட்ட அரசாங்கத்தால் ஒன்றும் செய்ய முடியவில்லை: செயல்படுமாறு பலவந்தம் செய்யப்பட்டதும் எப்போதும் அது சொத்துடைத்த வர்க்கங்களது நலன்களையே ஆதரித்தது. விவசாயிகளிடையே ஒழுங்கை நிலைநாட்டவும், மற்றும் வேலைநிறுத்தங்களை முறியடிக்கவும் கசாக்குகள் அனுப்பி வைக்கப்பட்டார்கள். தாஷ்கேந்தில் அரசாங்க அதிகாரிகள் சோவியத்தை

நசுக்கினர். குலைந்து போன தேசப் பொருளாதார வாழ்வைப் புத்தமைப்பதற்காகப் பெத்ரொகிராதில் நிறுவப் பெற்ற பொருளாதாரக் கவுன்சிலானது எதிரும் புதிருமான சக்திகளாகிய மூலதனத்துக்கும் உழைப்புக்குமிடையே இணக்கத்துக்கு இடமில்லாத காரணத்தால் முடங்கிப் போயிற்று; முடிவில் கேரென்ஸ்கியால் கலைக்கப்பட்டுவிட்டது. பழைய ஆட்சி முறையைச் சேர்ந்த இராணுவ அதிகாரிகளும் ஜெனரல்களும் சேனையிலும் கடற்படையிலும் கட்டுப்பாட்டை மீண்டும் நிலை நிறுத்துவதற்காகக் கடுமையான நடவடிக்கைகள் எடுக்க வேண்டுமென்று கோரினர், காடேட்டுகள் இவர்களுக்கு ஆதரவாய் இருந்தார்கள். மதிப்புக்குரிய கடற்படை அமைச்சர் அட்மிரல் வெர்தெரேவ்ஸ்கியும் யுத்த அமைச்சர் ஜெனரல் வெர்ஹோவ்ஸ்கியும் படையாட்கள், மாலுமிகளது கமிட்டிகளுடன் ஒத்துழைப்பதன் அடிப்படையிலான மனமுவந்த, ஜனநாயகத் தன்மையதான புதிய முறையிலாகிய கட்டுப்பாட்டினுல் மட்டுமே சேனையையும் கடற்படையையும் அழிவிலிருந்து காப்பாற்ற முடியுமென வற்புறுத்திஞர்கள், ஆனுல் இவர்களுடைய பரிந்துரைகளை யாரும் கேட்பதாயில்லை.

பிற்போக்குவாதிகள் மக்களிடையே கோபக் கனலைத் தூண்டிவிடுவதெனக் கங்கணம் கட்டிக் கொண்டுவிட்டாற் போல் செயல்பட்டனர். கர்னீலவ் வழக்கு விசாரணைக்கான நாள் நெருங்கி வந்து கொண்டிருந்தது. ஆனுல் முதலாளித்துவப் பத்திரிகைகள் மேலும் மேலும் பகிரங்கமாய் அவருக்கு ஆதரவாய் வாதாடின, ''மாபெரும் ருஷ்ய தேசபக்தர்'' என்பதாய் அவரைப் புகழ்ந்தன. கர்னீலவ், கலேடின், கேரென்ஸ்கி இவர்களது சர்வாதிகாரம் நிறுவப்பட வேண்டுமென்று பறைசாற்றியது பூர்த்ஸெவின்* பத்திரிகையான **ஓப்ஷியெ தியேலோ** (பொது இலட்சியம்)!

---

* வி. டி. பூர்த்ஸெவ்—மிதவாத முதலாளித்துவப் பதிப்பாளர். 1917ல் வெளி வந்த இவருடைய பத்திரிகையான **ஓப்ஷியெ தியேலோ** (பொது இலட்சியம்) போல்ஷிவிக்குகளைத் தாக்கிற்று. நவம்பர் புரட்சிக்குப் பிறகு பூர்த்ஸெவ் தாய்நாட்டை விட்டுத் துறந்து பாரிஸுக்கு சென்று தமது பத்திரிகையை மீண்டும் வெளியிட முற்பட்டார், அங்கே அது முடியரசுவாதப் போக்குடையதாயிற்று.—[பதிப்பாசிரியர்.]

*குடியரசு அவையில் பத்திரிகையாளர் மாடத்தில் ஒரு நாள் பூர்த்ஸெவுடன் பேசிப் பார்த்தேன். கட்டையான கூனல் உருவம், சுருக்கம் விழுந்த முகம், தடித்த கண்ணுடி வில்லேக்குப் பின்னுலிருந்து உற்று நோக்கிய கிட்டத்துப் பார்வை கொண்ட கண்கள், பரட்டைத் தலை, நரை கலந்த தாடி.*

*''இளைஞரே, நான் சொல்வது நினைவில் இருக்கட்டும்! ருஷ்யாவுக்கு வேண்டியது வலிமை வாய்ந்த ஓர் ஆள். இப்போது நாம் புரட்சியைப் பற்றி நினைக்கலாகாது, நமது சிந்தனை அனைத்தும் ஜெர்மானியர்கள் பற்றிதாகவே இருக்க வேண்டும். முட்டாள்கள், முட்டாள்கள், கர்னீலவைத் தோல்வியுறச் செய்துவிட்டார்கள்; இந்த முட்டாள்களுக்குப் பின்னுலிருந்து ஜெர்மன் கையாட்கள் செயல்படுகிருர்கள். கர்னீலவ் வெற்றி பெற்றிருக்க வேண்டும்....''*

*வலது சாரியின் கடைகோடியில் அதிக மறைவில்லாமலே செயல்பட்டன முடியரசுவாதிகளது ஏடுகள்: புரிஷ்கேவிச்சின்* **நரோத்னி திரிபூன்** *(மக்கள் உரிமைக் காவலன்),* **நோவயா ரூஸ்** *(புதிய ருஷ்யா),* **ழிவோயெ ஸ்லோவா** *(உயிருள்ள சொல்). புரட்சிகர ஜனநாயகம் ஒழித்துக் கட்டப்பட வேண்டுமென்று பகிரங்கமாகவே பறைசாற்றின இவை....*

*அக்டோபர் 23ல் ரீகா வளைகுடாவில் ஜெர்மன் கப்பற் படைப்பிரிவு ஒன்றுடன் கடற் போர் நடைபெற்றது. பெத்ரொகிராதுக்கு ஆபத்து வந்துவிட்டதாய்ச் சொல்லி இடைக் கால அரசாங்கம் தலைநகரைக் காலி செய்து அப்புறப் படுத்தத் திட்டங்கள் வகுத்தது. முதலில் பெரிய ஆயுத தளவாட ஆலைகள் எல்லாம் அப்புறப்படுத்தப்பட்டு, ருஷ்யா முழுதும் பரவலாய் அனுப்பப்பட இருந்தன; பிறகு அரசாங்கம் மாஸ்கோவுக்கு மாற்றப்பட இருந்தது. புரட்சியைப் பலம் குன்றச் செய்ய வேண்டுமென அரசாங்கம் செந்தலைநகரைக் கைவிடுகிறதென்று உடனே போல்ஷிவிக்குகள் கண்டனக் குரல் எழுப்பினர். ரீகாவை ஜெர்மானியர்கள் வசம் ஒப்படைத்துத் தலை முழுகிவிட்டார்கள், இப்போது பெத்ரொகிராதைக் காட்டிக் கொடுத்துத் துரோகம் புரியப் போகிருர்கள்!*

*முதலாளித்துவப் பத்திரிகைகள் ஆனந்தப்பட்டுக் கொண்டன. ''மாஸ்கோவில் அரசாங்கம் அராஜகவாதிகளது*

தொல்லையின்றி அமைதியான சூழலில் தன் பணியைப் புரிந்திட முடியும்'' என்றது காடேட்டு ஏடான ரேச் (பேச்சு). ஜெர்மானியர்கள் பெத்ரொகிராதைப் பிடித்துக் கொள்வது நல்லதுதான், ஏனெனில் இதன் மூலம் சோவியத்துகள் ஒழித்துக் கட்டப்பட்டுவிடும், புரட்சிகர பால்டிக் கப்பற் படையிடமிருந்து ருஷ்யா விடுவிக்கப்படும் என்று ஊத்ரொ ரஸ்ஸீயி (ருஷ்யாவின் அருணோதயம்) ஏட்டில் காடேட்டுக் கட்சியினது வலதுசாரியின் தலைவர் ரத்ஸியான்கா அறிவித்தார்:

பெத்ரொகிராது அபாயத்துக்கு உள்ளாகியிருக்கிறது என்று எழுதினார் அவர். ''பெத்ரொகிராதைக் கடவுள் காப்பாற்றட்டும்'' என்று நான் என் மனத்துள் கூறிக் கொள்கிறேன். பெத்ரொகிராதை இழந்தோமாயின் புரட்சிகர மத்திய நிறுவனங்கள் அழிக்கப்பட்டுவிடுமென அவர்கள் அஞ்சுகிறார்கள். இந்த நிறுவனங்கள் யாவும் அழிக்கப்படுமாயின் மட்டற்ற மகிழ்ச்சியடைவேன் என்பதே இதற்கு நான் அளித்திடும் பதில்; இந்த நிறுவனங்களால் ருஷ்யாவுக்குப் பெருவிபத்தே ஏற்படும்....

பெத்ரொகிராது பிடிக்கப்பட்டதும் பால்டிக் கப்பற் படையும் ஒழிக்கப்பட்டு விடும்.... வருத்தப்பட வேண்டிய ஒன்றல்ல இது, மிகப் பெரும்பாலான போர்க் கப்பல்கள் அறவே சீரழிந்து விட்டன....

மக்களிடமிருந்து எழுந்த கண்டனப் புயல் மிகக் கடுமையாய் இருக்கவே தலைநகரை அப்புறப்படுத்தும் திட்டம் கைவிடப்பட்டது.

இதற்கிடையில், சோவியத்துகளின் அனைத்து ருஷ்யக் காங்கிரஸ் மின்வெட்டுகள் பாயும் புயல் மேகம் போல் மூண்டு, ருஷ்யாவின் மீது கவிழ்ந்து கொண்டது. அரசாங்கம் மட்டுமல்ல,''மிதவாத''சோஷலிஸ்டுகள் அனைவரும் அதை எதிர்த்தார்கள். சேனையின், கப்பற் படையின் மத்தியக் கமிட்டிகளும், சில தொழிற் சங்கங்களது மத்தியக் கமிட்டிகளும், விவசாயிப் பிரதிநிதிகளது சோவியத்துகளும், இவை யாவற்றைவிட முக்கியமாய் இத்ஸே-யி-கவும் இந்தக் காங்கிரஸ் கூடுவதைத் தடுக்க வேண்டுமென்று வரிந்து கட்டிக் கொண்டு

வேலே செய்தன. பெத்ரொகிராது சோவியத்தால் முன்பு துவக்கப்பட்டு இப்போது இத்ஸே-யி-கவின் பிடியில் இருந்த பத்திரிகைகளாகிய இஸ்வேஸ்தியாவும் கோலஸ் சல்தாத்தாவும் (படையாள் குரல்) மூர்க்கமாய் இக்காங்கிரசைத் தாக்கின. இதே போல் சோஷலிஸ்டுப் புரட்சியாளர் கட்சியைச் சேர்ந்த பத்திரிகைப் பீரங்கிகள் யாவும்—தியேலொ நரோதா (மக்கள் இலட்சியம்), வோலியா நரோதா (மக்கள் சித்தம்)—கடுந் தாக்குதல் தொடுத்தன.

நாடெங்கும் பிரதிநிதிகள் அனுப்பப் பட்டார்கள், வட்டார சோவியத்துகளுக்குப் பொறுப்பான கமிட்டிகளுக்கும் சேனேக் கமிட்டிகளுக்கும் தந்தி மூலம் செய்திகள் பறந்தன—காங்கிரசுக்கான தேர்தல்களே நிறுத்தும்படி, இல்லேயேல் ஒத்திப் போட்டுத் தாமதம் செய்யும்படி இவற்றுக்கு உத்தரவுகள் அனுப்பப்பட்டன. காங்கிரஸ் கூடுவதை எதிர்த்துப் புனிதமான தீர்மானங்கள் ஏற்கப்பட்டன; அரசியல் நிர்ணயச் சபை கூடும் நாள் இவ்வளவு அருகாமையில் வந்துவிட்ட ஒரு சந்தர்ப்பத்தில் காங்கிரஸ் கூட்டப்படுவது ஜனநாயகத்துக்கு விரோதமானதாகும் என்பதாய்ப் பிரகடனங்கள் விடுக்கப்பட்டன; போர் முனேயையும் ஸேம்ஸ்த்வொகளின் ஒன்றியத்தையும் விவசாயிகளது ஒன்றியத்தையும் மற்றும் கசாக்குச் சேனேகளது ஒன்றியம், இராணுவ அதிகாரிகளது ஒன்றியம், ஜார்ஜ் வீரமறவர்கள், சாவுப் பட்டாளங்கள்* ஆகிய பலவற்றையும் சேர்ந்த பிரதிநிதிகள் கண்டன முழக்கமிட்டனர்.... ருஷ்யக் குடியரசு அவை ஒருமுகமாய் எதிர்ப்பு தெரிவித்தது. மார்ச் ருஷ்யப் புரட்சியால் நிறுவப்பெற்ற நிறுவனப் பொறியமைவு அனேத்தும் சேர்ந்து சோவியத்துகளின் காங்கிரஸ் கூடுவதைத் தடுத்து நிறுத்துவதற்காக வேலே செய்தது....

மறுபுறத்தில் தொழிலாளர்கள், சாதாரணப் படையாட்கள், ஏழை விவசாயிகள் ஆகியோராலான பாட்டாளி வர்க்கத்தின் சட்ட வடிவமற்ற சித்தம் செயல்பட்டது. வட்டார சோவியத்துகளில் பலவும் ஏற்கனவே போல்ஷிவிக்குகளின் தரப்புக்கு வந்துவிட்டன; பிறகு ஆலேத் தொழிலாளர்களது

---

* குறிப்புகளும் விளக்கங்களும் என்பதைப் பார்க்கவும்.

நிறுவனங்களாகிய ஃபப்ரீச்னெ-ஸவொத்ஸ்கியெ கமித்தேத்தி —ஆலைக் கமிட்டிகள்—இருந்தன; எழுச்சியுற்ற புரட்சிகரச் சேனை, கப்பற் படை நிறுவனங்களும் இருந்தன. முறைப்படியான தமது சோவியத்துப் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்க முடியாதபடி தடுக்கப்பட்ட மக்கள் பல இடங்களில் தனிப்படத் தாமே கூடிப் பெத்ரொகிராதுக்குப் பிரதிநிதியாய் அனுப்பத் தம்மில் ஒருவரைத் தேர்ந்தெடுத்தனர். பிற இடங்களில் அவர்கள், முட்டுக்கட்டையாய் இருந்த பழைய கமிட்டிகளைத் தகர்த்துவிட்டுப் புதியவற்றை நிறுவிக் கொண்டனர். தரைக் கடியிலிருந்து விம்மிப் புடைத்துக் கிளம்பிய எழுச்சியானது இத்தனை மாதமாய் அடங்கித் தணிந்திருந்த புரட்சி நெருப்பின் மேற்பரப்பில் இறுகிக் கெட்டிப் பிடித்திருந்த மேலோட்டை உடைத்து நொறுக்கிற்று. இயற்கையான முறையில்மூண்டெழுந்த இந்த வெகுஜன இயக்கத்தால்தான் சோவியத்துகளின் அனைத்து ருஷ்யக் காங்கிரசைக் கூட்ட முடிந்தது....

போல்ஷிவிக்குப் பேச்சாளர்கள் நாள் தோறும் படையாட்களது கொட்டடிகளுக்கும் ஆலைகளுக்கும் சென்று ''உள்நாட்டு யுத்தத்துக்கு வித்திடும் அரசாங்கத்தை'' வன்மையாய்க் கண்டித்தனர். கூட்டம் நிரம்பி வழிந்த நீராவி டிராம் ஒன்றில் ஒரு ஞாயிறன்று நாங்கள் ஆழி போல் பெருகிப் பரவியிருந்த சகதியிலே ஊர்ந்து சேன்றோம். சோக உருவங் கொண்ட ஆலைகளுக்கும் பெரிய மாதாகோயில்களுக்கும் இடையில் தவழ்ந்து, ஷிலிஸ்ஸெல்புர்க் பிராஸ்பேக்டுக்கு அருகிலிருந்த அரசாங்க ஆயுத தளவாட ஆலையான **அபூஹவ்ஸ்கி ஸவோதுக்குப்** போய்ச் சேர்ந்தோம்.

இன்னும் பூர்த்தியாகாத பிரம்மாண்டக் கட்டடத்தின் நெடிதுயர்ந்த கற்சுவர்களுக்கு நடுவில் அன்றைய கூட்டம் நடைபெற்றது. கறுப்பு உடுப்புகள் உடுத்திய ஆடவரும் பெண்டிருமாய்ப் பத்தாயிரம் பேர் சிவப்புத்துணிகளால் அலங்கரிக்கப் பெற்ற சாரக்கட்டைச் சுற்றிலும் குவியல்களாய்க் குவிக்கப்பட்டிருந்த கட்டட மரங்கள் மீதும் கற்கள் மீதும் நெருக்கமாய்க் குழுமியிருந்தார்கள், கருநிழல்கள் போலிருந்த உத்தரங்களில் உயரத்தில் தொத்திக் கொண்டிருந்தார்கள். உருக்கமாய்க் கேட்டுக் கொண்டும், இடியென முழங்கிக் கொண்டுமிருந்தார்கள். கனத்த கருமேகங்களுக்கிடையே

அவ்வப்போது கதிரவனது ஒளி கிழித்துக் கொண்டு வெளிப் பட்டு, சன்னல் கூடுகள் மூலம் வெள்ளப் பெருக்காய்ப் பாய்ந்து எங்களை நோக்கிப் பெருந் திரளாய் அண்ணுந்திருந்த எளிய முகங்களைச் செவ்வொளியில் மூழக்கடித்தது.

மாணவரையொத்த மெல்லிய வடிவமும் கலைஞருக்குரிய உணர்ச்சித் துடிப்பு மிக்க முகமும் கொண்ட லூனச்சார்ஸ்கி, ஆட்சியதிகாரத்தை சோவியத்துகள் ஏன் கைப்பற்ற வேண்டு மென்று விளக்கிக் கூறிக் கொண்டிருந்தார். புரட்சியை அதன் பகைவர்களிடமிருந்து பாதுகாக்க அது ஒன்றேதான் வழி. இந்தப் பகைவர்கள் வேண்டுமென்றே திட்டமிட்டு நாட்டை நாசமாக்குகிறார்கள், சேனையைச் சீரழியச் செய் கிறார்கள், புதியதொரு கர்னீலவ் எழுவதற்கான வாய்ப்பு களைத் தோற்றுவிக்கிறார்கள்.

ருமேனியப் போர்முனையிலிருந்து வந்த படையாள் ஒரு வர் பேசினார்—ஒல்லியானவர், சோக உருவினர், ஆவேசம் கொண்டவர். ''தோழர்களே!'' என்று கூவினார். ''போர் முனையில் நாங்கள் பட்டினியால் தவிக்கின்றோம், குளிரில் விறைத்துப் போகின்றோம். காரணமில்லாமலே செத்து மடி கின்றோம். ருஷ்யர்களாகிய நாங்கள் இறுதி மூச்சு உள்ளள வும் புரட்சியைக் கைவிட மாட்டோம் என்ற செய்தியை அமெரிக்காவுக்கு எடுத்துச் சென்று தெரிவிக்குமாறு அமெ ரிக்கத் தோழர்களைக் கேட்டுக் கொள்கிறேன். உலக மக்கள் கிளர்ந்தெழுந்து எங்களுக்கு உதவும் வரை, எங்களது முழு பலத்தையும் கொண்டு தொடர்ந்து நாங்கள் புரட்சிக்காகப் போராடுவோம்! ஆர்த்தெழுந்து சமுதாயப் புரட்சிக்காகப் போராடுமாறு அமெரிக்கத் தொழிலாளர்களிடம் சொல்லுங் கள்!''

பிறகு பெத்ரோவ்ஸ்கி எழுந்து நின்றார், மெல்லுருவும் மெலிந்த குரலும் கொண்ட அவர் வைராக்கியம் தொனிக்கக் கூறினார்:

''பேசியது போதும், செயலுக்கான நேரம் இது! பொரு ளாதார நிலைமை படுமோசமாய் இருக்கிறது, ஆனால் இதற்கு நாம் நம்மைப் பழக்கப்படுத்திக் கொண்டாக வேண்டும். நம் மை அவர்கள் பட்டினி போடவும் குளிரில் விறைக்க வைக் கவும் முயலுகிறார்கள். நமக்கு ஆத்திரமூட்ட முயலுகிறார்

கள். ஆனால் அளவு மீறிப் போக முடியாது என்பதை அவர்களுக்கு நாம் தெரியப்படுத்துவோம்—பாட்டாளி வர்க்கத்தின் நிறுவனங்களுக்கு எதிராய்க் கை நீட்டத் துணிவார்களாயின், குப்பையைக் கூட்டித் தள்ளுவது போல் அவர்களைப் புவிப் பரப்பிலிருந்தே கூட்டித் தள்ளிவிடுவோம் என்பதைத் தெரியப்படுத்துவோம்!''

போல்ஷிவிக்குகளுடைய பத்திரிகைகள் திடுமெனப் பெருகிவிட்டன. ரபோச்சி பூத், சல்தாத் (படையாள்) ஆகிய கட்சி ஏடுகள் இரண்டையும் அன்னியில், விவசாயிகளுக்கான தெரெவேன்ஸ்கயா பெத்னொத்தா (கிராம ஏழை) என்ற புதிய ஏடு ஒன்று தோன்றி தினசரி ஐந்து லட்சம் பிரதிகளில் வெளியாயிற்று; அக்டோபர் 17ல் ரபோச்சி இ சல்தாத் வெளிவரத் தொடங்கிற்று. போல்ஷிவிக்குகளின் கருத்தோட்டத்தை இந்த ஏட்டின் தலையங்கக் கட்டுரை சுருக்கமாய் எடுத்துரைத்தது:

நான்காவது குளிர் காலப் போர் இயக்கம் சேனைக்கும் நாட்டுக்கும் நாசத்தையே விளைவிக்கும்.... புரட்சிகர பெத்ரொகிராதின் பாதுகாப்பு அபாயத்துக்கு உள்ளாக்கப்பட்டிருக்கிறது.... மக்களுக்கு நேர்ந்துள்ள துர்பாக்கியம் குறித்து எதிர்ப்புரட்சியாளர்கள் மனம் மகிழ்கிறார்கள்.... நம்பிக்கைக்கு இடமில்லாத அவல நிலையில் கொண்டு வந்து விடப்பட்டிருக்கும் விவசாயிகள் பகிரங்கமாகவே கலகக் கொடியை உயர்த்துகின்றனர்; நிலப்பிரபுக்களும் அரசாங்க அதிகாரிகளும் தண்டப் படைகளை அனுப்பி அவர்களைக் கொன்று குவிக்கிறார்கள். தொழிற்சாலைகளும் சுரங்கங்களும் மூடப்படுகின்றன, தொழிலாளர்களைப் பட்டினி எதிர்நோக்குகின்றது.... முதலாளித்துவ வர்க்கத்தாரும் அவர்களது ஜெனரல்களும் சேனையில் கண்மூடித்தனமான கட்டுப்பாட்டை மீண்டும் நிலைநாட்ட விரும்புகிறார்கள்.... அரசியல் நிர்ணயச் சபை கூடுவதைத் தகர்த்திட கர்னீலவியர்கள் முதலாளித்துவ வர்க்கத்தாரின் ஆதரவுடன் ஒளிவுமறைவின்றி தயாராகி வருகிறார்கள்....

கேரென்ஸ்கி அரசாங்கம் தொழிலாளர்களுக்கும் படையாட்களுக்கும் விவசாயிகளுக்கும் எதிரானது. இந்த அரசாங்

கம் நாட்டையே அழித்துவிடும்.... ரபோச்சி இ சல்தாத் ஏடு பெத்ரொகிராதின் பாட்டாளி வர்க்கத்தினுடைய, பெத்ரொகிராதின் படையாட்களுடைய குரலாகும். நமது ஏடு கிராம ஏழைகளது நலன்களை விடாப்பிடியாய் நின்று பாதுகாப்பதாகும்....

மக்களை அழிவிலிருந்து காப்பாற்றியாக வேண்டும். புரட்சியை அதன் இறுதி வரை நடத்தி நிறைவு பெறச் செய்தாக வேண்டும். ஆட்சியதிகாரத்தை முதலாளித்துவ வர்க்கத்தின் கையிலிருந்து பறித்து நிறுவன ஒழுங்கமைப்பு பெற்ற தொழிலாளர்கள், படையாட்கள், புரட்சிகர விவசாயிகளின் கையில் ஒப்படைத்தாக வேண்டும்....

தொழிலாளர்கள், படையாட்கள் பிரதிநிதிகளது பெத்ரொகிராது சோவியத்தின் வேலைத்திட்டம்தான் நமது ஏட்டின் வேலைத்திட்டம்:

அனைத்து ஆட்சியதிகாரமும் சோவியத்துகளுக்கே—மத்தியிலும் மாநிலங்களிலும்!

எல்லாப் போர்முனைகளிலும் உடனடியாய்ப் போர் நிறுத்த ஒப்பந்தம்! எல்லா நாடுகளின் மக்களுக்கும் நேர்மையான ஜனநாயகத்தன்மையதான சமாதானம்!

நிலப்பிரபுக்களின் நிலங்கள்—இழப்பீடின்றி—விவசாயிகளுக்கு மாற்றப்பட வேண்டும்!

தொழில் துறைப் பொருளுற்பத்தியின் மீது தொழிலாளர்களது கண்காணிப்பு!

நேர்மையாய்த் தேர்ந்தெடுக்கப்பட்ட அரசியல் நிர்ணயச் சபை....

ஜெர்மன் கையாட்களாய் உலகுக்கு அறிவிக்கப்பட்டார்களே, அந்த போல்ஷிவிக்குகளின் முரசமாகிய இதே ஏட்டிலிருந்து இன்னொரு வாசகத்தையும் இங்கு தந்தோமாயின் சுவையாய் இருக்கும்:

பத்துலட்சக் கணக்காய் மடிந்த மக்களின் இரத்தம் படிந்த ஜெர்மன் கெய்சர் தமது சேனையைப் பெத்ரொகிராதுக்கு எதிராய் அனுப்பித் தாக்குதல் தொடுக்க விரும்புகிறார். கெய்சருக்கு எதிராய் நமக்கு உதவும்படி ஜெர்மன்

தொழிலாளர்களுக்கும் படையாட்களுக்கும் மாலுமிகளுக்கும் விவசாயிகளுக்கும் நாம் அறைகூவல் விடுப்போமாக—அவர்களும் நம்மைப் போலவே சமாதானத்துக்காகத்தான் ஏங்குகிறுர்கள்... 'கேடுகெட்ட இந்த யுத்தத்தை எதிர்த்து எழுமின்!' இம்மாதிரியான அறைகூவலே விடுப்பது எப்படி?

ருஷ்யாவின் தொழிலாளர்கள், படையாட்கள், மாலுமிகள், விவசாயிகளின் மெய்யான பிரதிநிதியாய்ப் பேசக்கூடிய புரட்சிகர ஆட்சியதிகாரத்தால்தான், மெய்யாகவே புரட்சிகரமான அரசாங்கத்தால்தான் இம்மாதிரியான அறைகூவலே விடுக்க முடியும்.

இப்படிப்பட்ட அரசாங்கம் தூதுத் துறையினரின் தலேக்கு மேல் நேரடியாய் ஜெர்மன் துருப்புகளுக்கே அறைகூவல் விடுக்கும், ஜெர்மன் மொழியிலான பிரகடனங்களே ஜெர்மன் அகழ்வரிகளில் நிரப்பும்.... நமது விமானிகள் இந்தப் பிரகடனங்களே ஜெர்மனி முழுதும் பொழிந்து பரவச் செய்வர்....

குடியரசு அவையில் இரு பிரிவோருக்கும் இடையிலான பிளவு நாளுக்கு நாள் ஆழமாகிச் சென்றது.

''சொத்துடைத்த வர்க்கங்கள் ருஷ்யாவை நேசநாடுகளுடைய யுத்தத் தேரின் காலுடன் கட்டிப்போட விரும்புகின்றன'' என்று கூச்சலிட்டார் இடதுசாரி சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களின் சார்பில் பேசிய கரேலின். ''இதைச் செய்வதற்காக இவ்வர்க்கங்கள் அரசின் புரட்சிகரப் பொறியமைவைப் பயன்படுத்திக் கொள்ள முயலுகின்றன! புரட்சிகரக் கட்சிகள் இந்தக் கொள்கையை அடியோடு எதிர்க்கின்றன....''

நரோத்னிக்கு சோஷலிஸ்டுகளின் பிரதிநிதியான முதுபெரும் நிக்கலாஸ் செய்க்கோவ்ஸ்கி, காடேட்டுகளின் பக்கம் சேர்ந்து கொண்டு, விவசாயிகளுக்கு நிலம் அளிப்பதை எதிர்த்துப் பேசினுர்:

''சேனேயில் உடனே நாம் கண்டிப்பான கட்டுப்பாட்டை ஏற்படுத்த வேண்டும்.... யுத்த காலத்தில் சமுதாய, பொருளாதாரச் சீர்திருத்தங்களேச் செய்ய முனேவது கொடுங் குற்றமாகுமென யுத்தத்தின் தொடக்கம் முதலாகவே நான்

ஓயாமல் வற்புறுத்தி வருகிறேன். இந்தக் கொடுங் குற்றத்தை நாம் இழைத்து வருகிரேம். ஆயினும் நான் இந்தச் சீர்திருத்தங்களின் பகைவன் அல்ல, ஏனெனில் நான் ஒரு சோஷலிஸ்டு.''

''உங்கள் பேச்சை நாங்கள் நம்பவில்லை!'' என்ற கூப்பாடுகள் இடதுசாரியிலிருந்து எழுந்தன. அதேபோது வலது சாரியிலிருந்து பலத்த கையொலி முழக்கம்....

காடேட்டுகளின் சார்பில் பேசிய அட்ழேமவ், சேனையானது எதற்காகப் போர் புரிகிறது என்பதை நாம் அதற்குச் சொல்லத் தேவையில்லை, ருஷ்யப் பரப்பிலிருந்து பகைவனை விரட்டியடிப்பது தனது முதற் கடமையென்பதை ஒவ்வொரு படையாளும் உணர்ந்திருக்க வேண்டும் என்று முழங்கினர்.

கேரென்ஸ்கியுங்கூட இரு தரம் வந்திருந்தார், தேசிய ஒற்றுமை வேண்டுமென உணர்ச்சி ததும்ப வலியுறுத்தினர், ஒரு தரம் பேச்சின் முடிவில் கண்ணீர் விட்டு அழவும் செய்தார். கிண்டலாய் அடிக்கடி இடைமறித்தவாறு குடியரசு அவை ஆர்வமின்றி அவர் பேச்சைக் கேட்டது.

**இத்ஸே-யி-கவின்**, பெத்ரொகிராது சோவியத்தின் தலைமையகமான ஸ்மோல்னிக் கழகம் பல மைல்களுக்கு அப்பால் நகரின் ஓரத்தில் அகன்ற நேவாவின் கரையிலே அமர்ந்திருந்தது. நெரிசலான டிராமில் நான் அங்கே சென்றேன். சரளைக்கற்கள் வேய்ந்த சேரும் சகதியுமான தெருக்களில் முக்கி முனகிக் கொண்டு நத்தை போல் போயிற்று அது. பாதையின் இறுதியில் ஸ்மோல்னி மடாலயத்தின் நீலப் புகை போன்ற கண்கவர் வில் மாடங்கள் மங்கலான பொன்னிற உருவரை காட்டி எழிற் கோலம் பூண்டு நின்றன. அதற்குப் பக்கத்தில் இருந்தது, பெரிய படைக் கொட்டடியை ஒத்த முகப்புடன் இருநூறு கஜ நீளமும் மூன்று பிரம்மாண்ட மாடிகளின் உயரமும் கொண்ட ஸ்மோல்னிக் கழகம். பேருருவாய்க் கல்லில் வடிக்கப் பெற்ற ஜார் அரசு இலட்சனை ஆணவமாய் இன்னும் நுழைவாயிலுக்கு மேல் காட்சியளித்தது....

ஜார் ஆட்சியின் போது இக்கழகம் ருஷ்யப் பிரபுக் குல மகளிருக்கான பெயர் பெற்ற மடாலயப் பள்ளிக்கூடமாய் இருந்தது, ஜரீட்ஸா அரசியே இதன் புரவலராய் இருந்து

ஆதரவளித்தார். பிறகு புரட்சியானது இதனைத் தொழிலாளர்கள், படையாட்களது புரட்சி நிறுவனங்களுக்கு உரிய தாக்கிற்று. இதனுள் நூற்றுக்கும் அதிகமான பெரிய அறைகள் வெண்ணிறமாய், காலியாய் இருந்தன. அறைக் கதவுகளில் எனமல் தகடுகளில் பொறிக்கப்பட்டிருந்த பெயர்க் குறிப்புகள் இன்னமும் உள்ளே ''மகளிர் வகுப்பறை எண் 4'' அல்லது ''ஆசிரியர் குழாம்'' இருப்பதாய் அறிவித்தன. இவற்றுக்கு மேல் தொங்கிய குறிப்புகளில் வரையப் பெற்ற செப்பமில்லா எழுத்துகள் புதிய அமைப்பின் ஜீவசக்திக்குச் சான்று பகன்றன: ''பெத்ரொகிராது சோவியத்தின் மத்தியக் கமிட்டி'', ''இத்ஸேஸ-யி-க'', ''அயல் விவகாரக் குழு''; ''சோஷலிஸ்டுப் படையாட்கள் ஒன்றியம்'', ''அனைத்து ருஷ்யத் தொழிற் சங்க மத்தியக் கமிட்டி'', ''ஆலைக் கமிட்டிகள்'', ''மத்தியச் சேனைக் கமிட்டி''; அரசியல் கட்சிகளது மத்திய அலுவலகங்கள், கட்சிக் குழுமங்களது கூட்ட அறைகள்....

நீண்டு சென்ற வில்மாட நடைகளில் அரிதாய் அங்குமிங்கும் மின் விளக்குகள் எரிந்தன. அவசர அவசரமாய்ப் போய் வரும் படையாட்கள், தொழிலாளர்களது உருவங்கள் இந்நடைகளில் மொய்த்துக் கொண்டிருந்தன. செய்தியேடுகள், பிரகடனங்கள், எல்லா விதமான பிரசார வெளியீடுகள் இப்படிப் பெரும் பெரும் கட்டுகளைச் சுமந்து கொண்டு கூனியவாறு விரைந்தன சில உருவங்கள். மரக் கட்டைகள் கொண்டு தளமிடப்பட்ட தரையில் இந்தப் படையாட்கள், தொழிலாளர்களது கனத்த பூட்சுகள் தட்டி ஓயாத இடியோசை எழுப்பின.... ''தோழர்காள்! உங்கள் உடல் நலங் கருதிச் சுத்தத்தைக் காப்பாற்றுங்கள்!'' என்ற அறிவிப்பு ஆங்காங்கே காணப்பட்டது.ஒவ்வொரு மாடியிலும் படிக்கட்டுக்கு முன்னலும் படிக்கட்டுத் திருப்ப மேடைகளிலும் நீளமான மேசைகளில் பற்பல அரசியல் கட்சிகளின் புத்தகங்களும் வெளியீடுகளும் விற்பனைக்காகக் குவிக்கப்பட்டிருந்தன....

கீழ்த் தரையில் உயரக் கட்டையான ஒட்டுத் தளத்துக்கு அடியில் இருந்த விசாலமான இடம் முன்பு போலவே இப்போதும் சாப்பாட்டுக் கூடமாய்ப் பயன்பட்டு வந்தது. இரண்டு ரூபிளுக்குச் சாப்பாட்டுச் சீட்டு வாங்கிக் கொண்டு,

நீண்டு சென்ற சாப்பாட்டு மேசைகளைச் சென்றடைவதற்காக ஆயிரம் பேர் நின்ற வரிசையில் நான் காத்திருந்தேன். சாப்பாட்டு மேசைகளுக்கு எதிரே இருபது ஆடவரும் பெண்டிரும் பெரும் பெரும் கொப்பரைகளிலிருந்து முட்டைக் கோசுச் சூப்பும் இறைச்சித் துண்டுகளும் காஷாவும் [கூழ்] கறுப்பு ரொட்டிப் பாளங்களும் பரிமாறிச் சென்றூர்கள். ஐந்து கோப்பெக்குக்குத் தகரக் கோப்பையில் தேநீர் தரப்பட்டது. ஒரு கூடையிலிருந்து அவசரமாய் ஒவ்வொருவரும் பிசுபிசுப்பான ஒரு மரக் கரண்டியை எடுத்துக் கொண்டோம்.... கடும் பசி கொண்ட பாட்டாளிகள் மேசைகளின் பக்கத்தில் பெஞ்சுகளில் நெருக்கமாய் அமர்ந்து ஆவேசமாய் சாப்பிட்டார்கள், குறும்புகள் புரிந்து கூடத்தின் குறுக்கே ஒருவரைப் பார்த்து ஒருவர் வேடிக்கையாய்ப் பேசிக் கூச்சலிட்டார்கள்....

மாடியில் இன்னொரு சாப்பாட்டு அறை இருந்தது. இத் ஸே-யி-க உறுப்பினர்களுக்காக ஒதுக்கப்பட்டதாகும் அது—ஆயினும் அங்கும் எல்லோரும் போய் வந்தார்கள். நிறைய வெண்ணெய் தடவப்பட்ட ரொட்டியும் வேண்டிய மட்டும் கிளாஸ் கிளாஸாய்த் தேநீரும் அங்கே கிடைத்தன....

இரண்டாவது மாடியில் தென்புறத்தில் இருந்தது மாபெரும் கூட்ட மண்டபம்—முன்பு மடாலயப் பள்ளிக்கூடமாய் இருந்த காலத்தில் கோலாகல நடனக் கூடமாய்த் திகழ்ந்த இடம். மெருகிடப்பட்டு தகதகத்த வெள்ளைச் சரவிளக்குகளின் நூற்றுக் கணக்கான அலங்கார மின் சிமிழ்கள் ஒளி பரப்பின. இரு வரிசைகளில் நின்ற பெரும் தூண்களால் இம் மண்டபம் பிரிக்கப் பட்டிருந்தது. ஒரு கோடியில் அமைந்த மேடையின் இரு மருங்கிலும் பல கிளைக் கொத்துகளைக் கொண்ட இரண்டு பெரிய சரவிளக்குகள்; இவற்றின் பின்னணியில் பொன்னிறச் சட்டமிடப்பட்ட படம்—பேரரசனது உருவம் அதிலிருந்து அகற்றப்பட்டிருந்தது. விழா நாட்களில் முன்பு இம்மேடையில் கண்ணைப் பறிக்கும் இராணுவ உடுப்புகளும் சமயச் சபை உடுப்புகளும் அணிந்தவர்கள் புடை சூழ்ந்திருப்பர், கோமகளிருக்கு ஏற்ற கொலு மேடையாய் இருக்கும்....

இம்மண்டபத்துக்கு முன்னுல்தான் சோவியத்துகளது காங்கிரசின் பிரதிநிதிச் சான்று ஆவணக் கமிட்டியின் அலுவலகம் இருந்தது. புதிய பிரதிநிதிகள் வருவதைப் பார்த்துக் கொண்டு அங்கே நான் நின்றிருந்தேன் —தாடி வைத்திருந்த முரட்டுப் படையாட்களும் கறுப்பு அங்கி அணிந்த தொழிலாளர்களும் நீள முடிகளேயுடைய விவசாயிகள் சிலரும், வந்தார்கள். அங்கே பணி புரிந்த பெண் — பிளெஹானவின் எதீன்ஸ்துவோ* கோஷ்டியைச் சேர்ந்தவள் — இளக்காரமாய்ச் சிரித்துக் கொண்டாள். ''முதலாவது சியேஸ்துக்கு (காங்கிரஸ்) வந்தப் பிரதிநிதிகளைப் போன்றவர்களல்ல இவர்கள், முற்றிலும் வேறு விதமானவர்கள்'' என்ருள். ''நயமற்ற முரட்டு ஆட்கள், குருட்டுப் பிறவிகள்! இருண்ட அடிமட்டத்து ஆட்கள்....'' மெய்தான், ருஷ்யாவின் அடியாழங்கள் கிளர்த்திவிடப் பட்டுவிட்டன, அடிமட்டம்தான் இப்போது முன்னிலையில் இருந்தது. பழய இத்ஸே-யி-கவால் நியமிக்கப்பட்ட பிரதிநிதிச் சான்று ஆவணக் கமிட்டியினர் வரிசையாய் ஒவ்வொரு பிரதிநிதிக்கும் ஆட்சேபம் தெரிவித்தனர், சட்டத்துக்குப் புறம்பாய்த் தேர்ந்தெடுக்கப்பட்டவர் என்பதாய்க் கூறினர். போல்ஷிவிக்கு மத்தியக் கமிட்டியின் உறுப்பினரான கரஹான்** மெல்லச் சிரித்துக் கொண்டார். ''கவலைப்பட வேண்டாம்'' என்ருர் அவர், ''காங்கிரஸ் ஆரம்பமாகட்டும், நீங்கள் எல்லாரும் உங்கள் இடங்களில் வந்தமர ஏற்பாடு செய்யப்படும்....''

ரபோச்சி இ சல்தாத் எழுதிற்று:

புதிய அனைத்து ருஷ்யக் காங்கிரசுக்கு வந்திருக்கும் பிரதிநிதிகளின் கவனத்துக்கு இதைக் கொண்டு வருகிருேம்: நிறுவனக் கமிட்டியின் உறுப்பினர்கள் சிலர் இந்தக் காங்கிரஸ் நடைபெறப் போவதில்லை, பிரதிநிதிகள் பெத்ரொகிராதிலிருந்து திரும்பிச் சென்றுவிடலாம் என்பதாய் அறிவித்துக் காங்கிரசைச் சீர்குலைக்க முயலுகிருர்கள்.... இந்த புரட்டு

* குறிப்புகளும் விளக்கங்களும் என்பதைப் பார்க்கவும்.
** கரஹான் மத்தியக் கமிட்டி உறுப்பினர் அல்ல.—[பதிப்பாசிரியர்.]

களுக்குச் செவி சாய்க்காதீர்கள்.... மாபெரும் நாட்கள் வருகின்றன....

காங்கிரசுக்கு வேண்டிய குறைவெண்ணுக்குத் தேவையான பிரதிநிதிகள் நவம்பர் 2க்குள் கூடப் போவதில்லை என்பது தெளிவாய்த் தெரியவே, காங்கிரசின் துவக்கம் நவம்பர் 7க்கு ஒத்திப் போடப்பட்டது. ஆனால் நாடு அனைத்தும் இதற்குள் கிளர்ந்தெழுந்துவிட்டது. மென்ஷிவிக்குகளும் சோஷலிஸ்டுப் புரட்சியாளர் கட்சியினரும் தமது தோல்வியை உணர்ந்து கொண்டார்கள், உடனே அவர்கள் தமது செயல் தந்திரத்தை மாற்றிக் கொண்டு, ''மிதவாத'' சோஷலிஸ்டுகளை எவ்வளவு அதிகமாய் முடியுமோ அவ்வளவு அதிகமாய்ப் பிரதிநிதிகளாய்த் தேர்ந்தெடுத்து அனுப்பி வைக்கும்படி தமது மாநில நிறுவனங்களுக்கு அவசரமாய்த் தந்திகள் அடிக்க ஆரம்பித்தார்கள். அதே போது விவசாயிகள் காங்கிரசின் நிர்வாகக் கமிட்டி அவசர அழைப்பு விடுத்து விவசாயிகளது காங்கிரசை டிசம்பர் 13ல் கூட்ட முற்பட்டது, இவ்விதம் அது தொழிலாளர்களும் படையாட்களும் எடுக்கக்கூடிய செயல் எதுவாயினும் அதைப் பயனற்றதாக்கலாமென நினைத்தது....

போல்ஷிவிக்குகள் செய்யப் போவது என்ன? தொழிலாளர்கள், படையாட்களது ஆயுதமேந்திய ''ஆர்ப்பாட்டம்'', **விஸ்துப்லேனியெ**—''வெளிவருதல்''—நடைபெறப் போவதாய் நகரில் வதந்திகள் அடிபட்டன. முதலாளித்துவப் பத்திரிகைகளும் பிற்போக்குப் பத்திரிகைகளும் எழுச்சி நடைபெறப் போகிறதென்று கூறின; பெத்ரொகிராது சோவியத்தைக் கைது செய்ய வேண்டும், இல்லையேல் சோவியத்துகளின் காங்கிரசைக் கூடாமல் தடுக்கவாவது வேண்டும் என்று அரசாங்கத்தை அவை வற்புறுத்தின. **நோவயா ரூஸ்** போன்ற ஏடுகள் போல்ஷிவிக்குகள் எல்லோரும் படுகொலை செய்யப்பட வேண்டும் என்றன.

கோர்க்கியின் ஏடான **நோவயா ழீஸின்**, பிற்போக்குவாதிகள் புரட்சியை ஒழித்துக்கட்ட முயலுவது மெய்தான், தேவைப்படுமாயின் ஆயுத பலங் கொண்டு அவர்களை எதிர்த்திட வேண்டும் என்று போல்ஷிவிக்குகளுடன் உடன்பாடு

தெரிவித்தது. ஆனுல் புரட்சிகர ஜனநாயகக் கட்சிகள் யாவும் ஒன்று பட்டு ஒரே அணியாய் நின்று செயல்பட வேண்டு மென அது கருத்துரைத்தது.

ஜனநாயகமானது அதன் பிரதான சக்திகளை ஒழுங் கமைத்துக் கொள்ளாமல் இருக்கும் வரையில், அதனுடைய செல்வாக்குக்கு எதிர்ப்பு இன்னமும் கடுமையாகவே இருந்து வரும் வரையில், தாக்குதலில் இறங்குவதில் அனுகூலம் இல்லை. ஆனுல் பகைத் தரப்புகள் வன்முறைக்கு அறைகூவல் விடுக்குமாயின், அப்போது புரட்சிகர ஜனநாயகம் ஆட்சியதி காரத்தைக் கைப்பற்ற போரில் இறங்கியே ஆக வேண்டும், மக்களது மிக விரிவான அடுக்கினரின் ஆதரவு அதற்குக் கிடைக்கும்....

பிற்போக்குப் பத்திரிகைகளும், அதே போல் அரசாங்கப் பத்திரிகைகளும் போல்ஷிவிக்குகளுக்கு ஆத்திரமூட்டி அவர் களை வன்முறையில்இறங்கச் செய்ய முனைந்தன என்று கோர்க்கி எழுதினுர். எழுச்சி நடைபெற்ருல் அது ஒரு புதிய கர்னீல வுக்கே பாதையைச் செப்பனிடும். வதந்திகளுக்கு மறுப்பு கூறும்படி போல்ஷிவிக்குகளை அவர் வற்புறுத்தினுர். போல் ஷிவிக்குகளுடைய இரகசிய நடவடிக்கைத் திட்டத்தை வெளிப்படுத்துவதாய்க் கூறிக் கொண்டு மென்ஷிவிக்குகளின் **''தியேன்''** (நாள்) ஏட்டில் பத்ரேசொவ் பரபரப்பான ஒரு கட்டுரை வெளியிட்டார், நிலப்படம் ஒன்றும் அக்கட்டுரை யுடன் அச்சிடப்பட்டிருந்தது.

மாய வித்தை புரிந்தது போல பெத்ரொகிராது நகரின் சுவர்களில் எச்சரிக்கைகளும்[10] பிரகடனங்களும் வேண்டு கோள்களும் ஏகமாய்க் நிறைந்துவிட்டன. ''மிதவாத'', பழ மைவாதக் கட்சிகளின் மத்தியக் கமிட்டிகளாலும் **இத்ஸே-யி -கவினு**லும் வெளியிடப்பட்டவை அவை. ''ஆர்ப்பாட்டங் களை'' அவை கண்டித்தன, கிளர்ச்சிக்காரர்களுக்குச் செவி மடுக்க வேண்டாமென தொழிலாளர்களையும் படையாட்களை யும் வேண்டின, எடுத்துக் காட்டாய், சோஷலிஸ்டுப் புரட்சி யாளர் கட்சியின் இராணுவப் பிரிவு வெளியிட்டிருந்ததாவது:

**விஸ்துப்லேனியெ**வுக்காகத் தயார் செய்யப்படுவதாய்

மீண்டும் நகரில் வதந்திகள் உலவுகின்றன. இந்த வதந்திகள் கிளம்புவது எங்கிருந்து? எழுச்சி வேண்டுமென்கிருர்களே இந்தக் கிளர்ச்சிக்காரர்களுக்கு அதிகாரமளிக்கும் நிறுவனம் எது? இத்ஸே-யி-கவில் போல்ஷிவிக்குகள் ஒரு கேள்விக்குப் பதிலளிக்கையில், தமக்கும் இவ்வதந்திகளுக்கும் எந்த சம் பந்தமுமில்லை என்ருர்கள்.... ஆனல் இந்த வதந்திகள் பெரிய அபாயம் உண்டாக்கக் கூடியவை. பெருவாரியான தொழிலா ளர்கள், படையாட்கள், விவசாயிகளது மன நிலையைக் கணக் கில் எடுத்துக் கொள்ளாமலே தனிப்பட்ட அவசரக்காரர் கள் தொழிலாளர்கள், படையாட்களில் ஒரு பகுதியினரைத் தெருக்களுக்கு அழைத்து அவர்களை எழுச்சி துவக்குமாறு தூண்டுவது எளிதில் நடைபெறக் கூடியதே.... புரட்சிகர ருஷ்யா கடந்து கொண்டிருக்கும் அச்சம் தரும் இந்நாட் களில் எந்த எழுச்சியும் எளிதில் உள்நாட்டு யுத்தமாய் மாறி விடும், அரும் பாடுபட்டு கட்டியமைக்கப்பட்ட பாட்டாளி வர்க்க நிறுவனங்கள் யாவும் இதன் விளைவாய் அழிக்கப்பட நேரும்.... எதிர்ப்புரட்சி சதிகாரர்கள் இந்த எழுச்சியைப் பயன்படுத்திப் புரட்சியை ஒழித்திடவும், போர்முனையை வில்ஹெல்முக்குத் திறந்துவிடவும், அரசியல் நிர்ணயச் சபை யைத் தொலைத்துக் கட்டவும் திட்டமிட்டு வருகிருர்கள்.... எந்த ஆர்ப்பாட்டமும் வேண்டாம்! வெளியே வர பிடிவாத மாய் மறுத்து உங்கள் வேலையிடங்களிலே இருங்கள்!...

அக்டோபர் 28ல் ஸ்மோல்னியின் நடைகளில் நான் காமெனெவுடன் பேசினேன். கரளை வடிவமும் சிவந்த கூம்புத் தாடியும் அட்டகாசமான அங்கசேஷ்டைகளும் கொண்டவர். போதுமான பிரதிநிதிகள் வந்து சேர்வார்களென நிச்சய மாய்ச் சொல்வதற்கில்லை என்ருர். ''காங்கிரஸ் நடைபெறு **மாயின்**, அது மிகப் பெருவாரியான மக்களது உணர்ச்சிகளைப் பிரதிபலிப்பதாய் இருக்கும்'' என்ருர். ''நான் எதிர்பார்ப் பது போல் பெரும்பாலான பிரதிநிதிகள் போல்ஷிவிக்குகளாய் இருப்பார்களாயின், ஆட்சியதிகாரம் சோவியத்துகளிடம் ஒப்படைக்கப்பட வேண்டும், இடைக்கால அரசாங்கம் ராஜிநாமா செய்துவிட வேண்டும் என்று நாங்கள் கோரு வோம்....''

வலதார்ஸ்கி—வெளிறிட்டு நோய்த் தோற்றங் கொண்ட உயரமான இளைஞர், மூக்குக் கண்ணாடி போட்டிருந்தார்—இன்னும் திட்டவட்டமாய்க் கூறினார்: "லீபெர்-டான்களும்* ஏனைய சமரசவாதிகளும் காங்கிரசைச் சீர்குலைக்கிறார்கள். காங்கிரஸ் கூட முடியாதபடி தடுப்பதில் அவர்கள் வெற்றி பெறுவார்களானால்—நாங்கள் எதார்த்தவாதிகள், அதை ஏற்றுக் கொண்டு சும்மாயிருக்க மாட்டோம்!"

எனது குறிப்புப் புத்தகத்தில் அக்டோபர் 29ஆம் நாளுக்கு அடியில், அன்றைய செய்தியேடுகளிலிருந்து எடுக்கப்பட்ட பின்வரும் விவரங்கள் குறிக்கப்பட்டிருப்பதைக் காண்கிறேன்:

மொகிலோவ் (இராணுவப் பொதுத் தலைமையிடம்). நம்பகமான காவல் படைப்பிரிவுகளும் வெறிப்படை டிவிஷனும் கசாக்குப் பட்டாளமும் சாவுப் பட்டாளமும் இங்கே குவிக்கப்பட்டிருக்கின்றன.

பாவ்லவ்ஸ்க், ஜார்ஸ்கயெ செலோ, பீட்டர்ஹாப் இராணுவ அதிகாரிகளது பள்ளிகளின் யூன்கெர்கள்** பெத்ரொகிராதுக்குச் செல்லத் தயாராயிருக்கும்படி உத்தரவிடப்பட்டிருக்கிறார்கள். ஒரனியென்பாவுமைச் சேர்ந்த யூன்கெர்கள் தலைநகர் வந்து சேர்கிறார்கள்.

பெத்ரொகிராது படைத்தளத்தின் கவச மோட்டார் டிவிஷனில் ஒரு பகுதி குளிர்கால அரண்மனையில் நிறுத்தப்பட்டிருக்கிறது.

திரோத்ஸ்கி கையெழுத்திட்ட கட்டளையின் பேரில் செஸ்த்ரொரேத்ஸ்க் அரசாங்க ஆயுதத் தொழிற்சாலையிலிருந்து சில ஆயிரம் துப்பாக்கிகள் பெத்ரொகிராது தொழிலாளர்களின் பிரதிநிதிகளுக்குத் தரப்பட்டன.

அனைத்து ஆட்சியதிகாரம் சோவியத்துகளிடம் அளிக்கப்பட வேண்டுமெனக் கோரி நீழ்னெலித்தேய்னி வட்டாரத்து

---

* லீபெரும் டானும்.

** யூன்கெர்கள்—பிரபுக் குலத்தோரின் புதல்வர்களை இராணுவ அதிகாரிகளாய்ப் பயிற்றுவித்த இராணுவப் பள்ளிகளின் மாணவர்களான இளம் படையினர்.—[பதிப்பாசிரியர்.]

நகரக் காவல் படையினரின் கூட்டத்தில் தீர்மானம் நிறை வேற்றப்பட்டது.

அனல் பறந்த அந்நாட்களின் குழப்படியான நிகழ்ச்சி களுக்குச் சில எடுத்துக் காட்டுகளே இவை. என்னமோ நடைபெறப் போகிறதென எல்லாருக்கும் தெரிந்திருந்தது, என்ன நடைபெறப் போகிறதென்றுதான் யாருக்கும் தெரிய வில்லை.

ஆயுதமேந்திய எழுச்சி நடத்த சோவியத்து திட்டமிடுவ தாய் முதலாளித்துவப் பத்திரிகைகள் பரப்பிய பேச்சுகளை, அக்டோபர் 30ஆம் நாள் இரவில் ஸ்மோல்னியில் நடைபெற்ற பெத்ரொகிராது சோவியத்தின் கூட்டத்தில் திரோத்ஸ்கி ''சோவியத்துகளது காங்கிரசைத் தூற்றுவதற்கும் குலைத் திடுவதற்கும் பிற்போக்குவாதிகள் செய்யும் முயற்சியாகும்'' என்று கூறிச் சாடினார். ''...விஸ்துப்லேனியெ எதுவும் நடைபெற வேண்டுமென பெத்ரொகிராது சோவியத்து கட்டளையிடவில்லை'' என்றார். ''அது தேவைப்படுமாயின் நாம் அதற்கு ஏற்பாடு செய்வோம், பெத்ரொகிராது படைத் தளப் படையினர் எங்களுக்கு ஆதரவாய்ச் செயல்படுவார் கள்.... அவர்கள் (அரசாங்கத் தரப்பினர்) எதிர்ப்புரட்சிக்குத் தயார் செய்கிறார்கள். தாக்குதல் மூலம் இதற்கு நாங்கள் பதிலளிப்போம், இந்தத் தாக்குதல் இரக்கமின்றி உறுதி வாய்ந்ததாகவும் முடிவு கட்டும்படியானதாகவும் இருக்கும்.''

பெத்ரொகிராது சோவியத்து ஆர்ப்பாட்டத்துக்கு உத்தர விடவில்லை என்பது மெய்தான், ஆனால் போல்ஷிவிக்குக் கட்சி யின் மத்தியக் கமிட்டி எழுச்சிப் பிரச்சினை குறித்து ஆலோ சித்து வந்தது. 23ஆம் தேதியன்று இரவு முழுதும் கூடி அது விவாதித்தது. தலைவர்களாகிய கட்சி அறிவுத்துறையினர் எல்லாரும் கூடியிருந்தார்கள், மற்றும் பெத்ரொகிராதின் தொழிலாளர்கள், படைத்தளப் படையினரின் பிரதிநிதிகளும் இருந்தார்கள். அறிவுத்துறையினரில் லெனினும் திரோத்ஸ் கியும் மட்டும்தான் எழுச்சியை ஆதரித்தவர்கள். இராணுவ ஆட்களுங்கூட எதிர்த்தனர். வாக்கு எடுக்கப்பட்டது. எழுச் சிக்குத் தோல்வி கிடைத்தது!

பிறகு சாதாரண தொழிலாளி ஒருவர் எழுந்து நின்றார், ஆத்திரம் தாங்க மாட்டாமல் முகத்தைச் சுளித்துக் கொண்டார். ''பெத்ரொகிராதுப் பாட்டாளி வர்க்கத்தின் சார்பில் பேசுகிறேன் நான்'' என்று கடுமையான குரலில் அறிவித்தார். ''நாங்கள் எழுச்சியை ஆதரிக்கிறோம். நீங்கள் எப்படி வேண்டுமானாலும் செய்யலாம், ஆனால் ஒன்றை மட்டும் நினைவில் வைத்துக் கொள்ளுங்கள்: சோவியத்துகள் அழிக்கப்படுவதற்கு இடம் தருவீர்களானால், **உங்களுக்கும் எங்களுக்கும் ஒட்டுமில்லை உறவுமில்லை என்றாகிவிடும்!''** படையாட்கள் சிலர் அவர் கூறியதை ஆமோதித்தார்கள்.... இதற்குப் பிறகு திரும்பவும் ஒரு தரம் வாக்கு எடுக்கப்பட்டது—எழுச்சிக்கு வெற்றி கிட்டிவிட்டது....*

* 1917 அக்டோபரில் போல்ஷிவிக்குக் கட்சியின் அந்த வரலாற்றுச் சிறப்புக்குரிய கூட்டத்தில் ஆயுதமேந்திய எழுச்சி குறித்து நடைபெற்ற விவாதத்தைப் பற்றி இங்கு சரிவர கூறப்படவில்லை. ஆயுதமேந்திய எழுச்சிக்கு ஏற்பாடு செய்வதென்ற தீர்மானம் 1917 அக்டோபர் 23ல் மத்தியக் கமிட்டியின் தனிக் கூட்டத்தில் ஏற்கப்பட்டது. கலந்து கொண்ட உறுப்பினர்கள்: லெனின், புப்னோவ், தெர்ழீன்ஸ்கி, ஸினோவியெவ், காமெனெவ், கொலன்தாய், லோமவ், ஸ்வெர்திலோவ், சக்கோல்னிக்கவ், ஸ்டாலின், திரோத்ஸ்கி, உரீத்ஸ்கி. லெனின் முன்மொழிந்த தீர்மானத்தை ஸினோவியெவும் காமெனெவும் எதிர்த்து வாக்களித்தார்கள். ஆறு நாட்களுக்குப் பிறகு அக்டோபர் 29ல் மத்தியக் கமிட்டியின் விரிவாக்கப்பட்ட கூட்டம் நடைபெற்றது. பெத்ரொகிராது கட்சிக் கமிட்டி, இராணுவ நிறுவனம், பெத்ரொகிராது சோவியத்து, தொழிற் சங்கங்கள், ஆலைக் கமிட்டிகள், பெத்ரொகிராது மாவட்டக் கட்சிக் கமிட்டி, மற்றும் ரயில்வேத் தொழிலாளர் பிரதிநிதிகளும் இதில் கலந்து கொண்டனர். மத்தியக் கமிட்டியின் முந்திய அமர்வில் ஏற்கப்பட்ட தீர்மானத்தை இந்தக் கூட்டத்தில் லெனின் படித்துக் காட்டினார். அவர் தமது சொற்பொழிவில் ருஷ்யாவிலும் ஐரோப்பாவிலும் நிலவிய எதார்த்த அரசியல் சூழ்நிலையானது மிகவும் தீர்மானகரமான, செயல் முனைப்பான கொள்கையை வலியுறுத்தியதென்றும், இக்கொள்கை ஆயுதமேந்திய எழுச்சியே அன்றி வேறு எதுவாகவும் இருக்க முடியாதென்றும் குறிப்பிட்டார். ஆயுதமேந்திய எழுச்சி பற்றிய மத்தியக் கமிட்டி முடிவை வரவேற்று ஆதரவு தெரிவிக்கும் ஒரு தீர்மானத்தை லெனின் முன்மொழிந்தார். ஆதரித்து 19 வாக்குகளும்,

ஆயினும் போல்ஷிவிக்குகளது வலதுசாரியினர் ஆயுத மேந்திய எழுச்சியை எதிர்த்து ரியஸானவ், காமெனெவ், ஸினேவியெவின் தலைமையில் தொடர்ந்து இயக்கம் நடத்தினர். அக்டோபர் 31* காலையில் ''தோழர்களுக்கு வரையும் கடிதம்''[11] என்ற தலைப்பில் லெனின் எழுதிய மடலின் முதற் பகுதி ரபோச்சி பூத் ஏட்டில் வெளிவந்தது. இவ்வளவு அபார துணிச்சல் கொண்ட அரசியல் பிரசாரத்தை இதன் முன் உலகம் கண்டிருக்காது. காமெனெவும் ரியஸானவும் எழுப்பிய ஆட்சேபங்களை ஒவ்வொன்றாய் எடுத்துச் சம்வாதம் புரிந்து எழுச்சிக்கு ஆதரவான வாதங்களை நிலைநாட்டினார் லெனின்.

'' 'அனைத்து ஆட்சியதிகாரமும் சோவியத்துகளுக்கே' என்ற நமது கோஷத்தை நாம் விட்டொழிக்க வேண்டும்; அல்லது எழுச்சிக்கு ஏற்பாடு செய்தாக வேண்டும்—இந்த இரண்டுக்கும் இடைப்பட்ட வழி எதுவும் இல்லை....'' என்று எழுதினார்.

அதே நாளன்று பிற்பகலில் காடேட்டுகளின் தலைவர் பாவெல் மில்யுக்கோவ் குடியரசு அவையில் இடிமுழக்கமிட்டுப் பொரிந்து தள்ளினார். ஸ்கோபெலெவ் நக்காஸ் ஜெர்மன்-ஆதரவுச் செயலாகுமென ஆத்திரமாய்த் தாக்கினார்,[12] ''புரட்சிகர ஜனநாயகம்'' ருஷ்யாவை நாசமாக்குவதாய்க் கடிந்து கொண்டார், தெரேஷ்ச்சென்கொவை எள்ளி நகையாடினார், ருஷ்ய அரசுத் தந்திரத்தைக் காட்டிலும் ஜெர்மனியினுடையது தமக்கு விரும்பத்தக்கதாய் இருப்பதாய்ப் பகிரங்கமாகவே பறைசாற்றினார்.... இடதுசாரி பெஞ்சுகளிடமிருந்து முழு நேரமும் கண்டனக் கூச்சல்கள் எழுந்த வண்ணமிருந்தன....

அரசாங்கத்தைப் பொறுத்தவரை, போல்ஷிவிக்குப் பிரசாரம் பெற்று வந்த வெற்றியை அதனால் கவனியாது புறக்

---

எதிர்த்து 2 வாக்குகளும் அளிக்கப்பட்டு இந்தத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. நான்கு பேர் ஒதுங்கியிருந்தார்கள். ஸினேவியெவும் காமெனெவும் மீண்டும் மத்தியக் கமிட்டி தீர்மானத்தை எதிர்த்து வாக்களித்தார்கள்.—[பதிப்பாசிரியர்.]

* இந்தத் தேதி சரியல்ல. இவ்விதழ் நவம்பர் 1ல் வெளியாயிற்று.—[பதிப்பாசிரியர்.]

கணிக்க முடியவில்லை. அக்டோபர் 29ல் அரசாங்கம், குடியரசு அவை இவற்றின் கூட்டு ஆணைக்குழு அவசர அவசரமாய் இரு சட்டங்களை வகுத்திட்டது—ஒன்று விவசாயிகளுக்குத் தற்காலிகமாய் நிலம் அளிப்பதற்கானது; மற்றொன்று வலுமிக்க முறையில் சமாதானத்துக்குரிய அயல் துறைக் கொள்கையைச் செயல்படுத்துவதற்கானது. மறு நாளன்று கேரென்ஸ்கி, சேனையில் மரண தண்டனை விதிக்கப்படுவதை நிறுத்தி வைத்தார். அதே நாள் பிற்பகலில் ''குடியரசு ஆட்சியைப் பலப்படுத்துவதற்கும் அராஜகத்தையும் எதிர்ப்புரட்சியையும் எதிர்த்துப் போராடுவதற்குமான'' புதிய ஆணைக் குழுவின் முதலாவது அமர்வு மிகுந்த ஆடம்பரத்துடன் ஆரம்பமாயிற்று—ஆனால் அதற்கு மேல் வரலாற்றில் இதைப் பற்றிய அறிகுறி இம்மியளவும் தென்படவில்லை .... மறுநாள் காலையில் நானும் இன்னும் இரு நிருபர்களும் கேரென்ஸ்கியைப் பேட்டி கண்டோம்[13]—பத்திரிகையாளர்களை அழைத்து அவர் பேசியது அதுவே கடைசி முறை.

''பொருளாதாரச் சீர்கேடு ருஷ்ய மக்களை வருத்துகின்றது'' என்று மனக் கசப்பு தொனிக்கக் கூறினார். ''அதோடு நேசநாடுகளைப் பற்றிய ஏமாற்றமும் அவர்களை வருத்துகின்றது! ருஷ்யப் புரட்சி முடிவுற்றுவிட்டதாய் நினைக்கிறது உலகம். இந்த நினைப்பு தவறானது. ருஷ்யப் புரட்சி இப்போது தான் ஆரம்பமாகிறது....'' அவர் நினைத்திருக்கக் கூடியதைக் காட்டிலும் தொலைநோக்கு வாய்ந்த சொற்கள் அவை.

புயலின் சீற்றம் கொண்டதாய் இருந்தது, அக்டோபர் 30ல் இராப் பொழுது முழுதும் நடைபெற்ற பெத்ரொகிராது சோவியத்தின் கூட்டம். நான் நேரில் சென்று கண்ணுற்றேன். ''மிதவாத'' சோஷலிஸ்டு அறிவுத்துறையினர், இராணுவ அதிகாரிகள், சேனைக் கமிட்டிகளின் உறுப்பினர்கள், இத்ஸே-யி-க-வின் உறுப்பினர்கள் ஆகிய எல்லோரும் முழு பலத்துடன் வந்திருந்தார்கள். உணர்ச்சியும் எளிமையும் வாய்ந்தவர்களான தொழிலாளர்களும் விவசாயிகளும் சாதாரணப் படையாட்களும் இவர்களுக்கு எதிராய் எழுந்து பேசினர்.

விவசாயி ஒருவர் திவேரில் நடைபெற்ற கலவரங்கள் குறித்துப் பேசினார், நிலக் கமிட்டிகளைச் சேர்ந்தோர் கைது செய்யப்பட்டதால் இக்கலவரங்கள் மூண்டன என்றார். ''நிலப்பிரபுக்களுக்குக் காவலாளாய்ச் செயல்படுகிறார்

இந்தக் கேரென்ஸ்கி'' என்று ஆத்திரமாய்க் கூறினர்; ''அரசியல் நிர்ணயச் சபையில் எப்படியும் நாங்கள் நிலத்தை வசப்படுத்திக் கொண்டு விடுவோம் என்று அவர்களுக்குத் தெரியும், ஆகவே அவர்கள் அரசியல் நிர்ணயச் சபையை ஒழித்துக் கட்ட முயலுகிறார்கள்!''

புத்திலவ் ஆலையைச் சேர்ந்த இயந்திரக் கம்மியர் ஒருவர், ஆலையின் மேலாளர்கள் எரிபொருளோ மூலப்பொருள்களோ இல்லையென்று சொல்லி ஒவ்வொரு தொழிற்கூடமாய் மூடி வருவதை எடுத்துரைத்தார். ஆனால் எரிபொருளும் மூலப் பொருள்களும் நிறைய பதுக்கி வைக்கப்பட்டிருப்பதை ஆலைக் கமிட்டி கண்டுபிடித்தது என்று கூறினர்.

''தூண்டிவிடுதலே ஆகும் இது'' என்றார் அவர். ''எங்களைப் பட்டினி போட்டு வதைக்க வேண்டும், வன்முறையில் இறங்கும்படி வைக்க வேண்டுமென அவர்கள் விரும்புகிறார்கள்''.

படையாட்களில் ஒருவர் பேச ஆரம்பித்தார்: ''தோழர்களே, அகழ்வரிகள் தோண்டுவதாய்ச் சொல்லித் தமக்குத் தாமே சவக்குழிகள் தோண்டுகிறார்களே, அந்த இடத்திலிருந்து நான் உங்களுக்கு வாழ்த்துகள் கொண்டு வருகிறேன்!''

பிறகு உலர்ந்து மெலிந்த நெட்டையான இளம் படையாள் ஒருவர் கண்கள் பளிச்சிட்டு ஒளிர எழுந்து நின்றார், உடனே அவரை வரவேற்று ஆரவார முழக்கம் எழுந்தது. அவர்தான் சுத்னேவ்ஸ்கி, ஜூலை மாதப் போரில் உயிரிழந்தவராய் அறிவிக்கப்பட்டவர், மாண்டவர்களிடமிருந்து எழுந்து வந்து இங்கே நின்றார்.

''படையாட்கள் இப்போது அவர்களது இராணுவ அதிகாரிகளை நம்புவதில்லை. சேனைக் கமிட்டிகளும்கூட எங்களது சோவியத்தின் கூட்டத்தைக் கூட்ட மறுத்து எங்களுக்கு வஞ்சகம் புரிந்துவிட்டன.... மிகப் பெருவாரியான படையாட்கள் அரசியல் நிர்ணயச் சபை அதற்குக் குறிக்கப்பட்ட தேதியில் தவறாமல் கூட்டப்பட வேண்டுமெனக் கோருகிறார்கள். அதை ஒத்திப் போடத் துணிவோரை நாங்கள் சபிக்கவே செய்வோம்—எங்கள் சாபங்கள் சொல்லளவிலான சாபங்களாய் இருக்கமாட்டா, ஏனெனில் படையாட்களிடம் துப்பாக்கிகள் இருக்கின்றன....''

ஐந்தாவது சேனையில் அரசியல் நிர்ணயச் சபைக்காக நடைபெற்று வந்த தேர்தல் இயக்கம் குறித்து கூறினர் அவர். ''இராணுவ அதிகாரிகள், முக்கியமாய் மென்ஷிவிக்கு களாகவும் சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களாகவும் இருப் போர், போல்ஷிவிக்குகளை முடக்கிவிட வேண்டுமென்று முயற்சி செய்கிருர்கள். எங்களுடைய செய்தியேடுகள் அகழ் வரிகளில் வினியோகமாவதற்கு அனுமதிக்கப்படுவதில்லை. எங்களுடைய பேச்சாளர்கள் கைது செய்யப்படுகிருர்கள்...''

''ரொட்டி கிடைக்காதது பற்றிப் பேச மாட்டேன் கிருயே, ஏன்?'' என்று கத்தினுர் யாரோ ஒரு படையாள்.

''மனிதன் வாழ்வது ரொட்டியால் மட்டுமல்ல'' என்று கோபமாய்ப் பதிலளித்தார் சுத்னேவ்ஸ்கி....

அடுத்தபடி பேசியவர் ஓர் இராணுவ அதிகாரி, வித் தெப்ஸ்க் சோவியத்தைச் சேர்ந்தவர், மென்ஷிவிக்கு **அபரோ னெத்ஸ்.** ''ஆட்சியதிகாரம் யாரிடம் இருக்கிறது என்பதல்ல பிரச்சினை. நமக்குப் பிரச்சினையாய் இருப்பது அரசாங்க மல்ல, யுத்தம்தான்... இந்த யுத்தத்தில் நாம் வெற்றி பெற் ருக வேண்டும், மாற்றம் ஏற்படுமுன்—'' உடனே எதிர்ப்புக் குரல்களும் ஏளனக் கூச்சல்களும் எழுந்தன. ''இந்தப் போல் ஷிவிக்குக் கிளர்ச்சியாளர்கள் வாய்வீச்சுக்காரர்கள்!'' சிரிப் பொலியால் மண்டபம் அதிர்ந்தது. ''சிறிது காலத்துக்கு நாம் வர்க்கப் போராட்டத்தை மறந்தாக வேண்டும்—'' ஆனுல் அதற்கு மேல் அவர் பேச முடியவில்லை. ''நீங்கள் விரும்பு தெல்லாம் அதுதான்!'' என்று கூவிற்று ஒரு குரல்.

அந்நாட்களில் பெத்ரொகிராது நகரமே விபரீதமாய்த் தான் இருந்தது. ஆலைகளின் கமிட்டி அறைகளில் அடுக்கு அடுக்காய்த் துப்பாக்கிகள் குவிந்திருந்தன, தகவல் கொண்டு வருவோர் ஓயாமல் வந்து சென்ற வண்ணமிருந்தனர், செங்காவலர்கள்* அணி வகுத்துப் பயிற்சிகள் புரிந்தனர்... இராணுவக் கொட்டடிகளில் ஒவ்வோர் இரவிலும் கூட்டங் களும், பகற் பொழுது முழுதும் முடிவில்லாத பலத்த விவா தங்களும் நடைபெற்று வந்தன. அந்தி இருட்டு நெருங்கிய தும் வீதிகளில் மக்கள் வெள்ளம் நெரித்தது, நேவ்ஸ்கி சாலை

* குறிப்புகளும் விளக்கங்களும் என்பதைப் பார்க்கவும்.

யில் இரு திசைகளிலும் அலை அலையாய்த் திரண்டு சென்று செய்தியேடுகளுக்காக அடித்து மோதிக் கொண்டது.... கிளைத் தெருக்களில் செல்வது அபாயமிக்கதாகிவிட்டது, வழிப்பறி அவ்வளவு அதிகமாகிவிட்டது.... பிற்பகலில் ஒரு நாள் சதோவயாவில் திருட முயன்று அகப்பட்டுக் கொண்ட படையாளை நூற்றுக் கணக்கானோர் கூடி அடித்து மிதித்துக் கொன்றதைக் கண்டேன் நான்.... குளிரில் நடுங்கியவாறு ரொட்டிக்காகவும் பாலுக்காகவும் மணிக் கணக்காய் நீள்வரிசையில் காத்து நின்ற பெண்களிடையே சென்று, உணவுப் பொருள்களை யூதர்கள் கைப்பற்றிக் கொண்டு விட்டதாகவும், மக்கள் பட்டினி கிடக்கையில் சோவியத்துகளின் உறுப்பினர்கள் ஆடம்பரமாய் வாழ்வதாகவும் இரகசியக் குரலில் பேசிச் சென்றனர் மர்மமான ஆட்கள்....

ஸ்மோல்னியில் கதவருகிலும் வெளிவாயிலிலும் காவலர்கள் கண்டிப்புடன் எல்லோரிடத்தும் நுழைவுச் சீட்டுகளைக் காட்டும்படிக் கேட்டார்கள். அல்லும் பகலும் ஓய்ச்சல் ஒழிவின்றி கமிட்டி அறைகளில் இரைச்சலும் அமளியுமாய் இருந்தது, நூற்றுக் கணக்கில் படையாட்களும் தொழிலாளர்களும் காலி இடங்களில் அப்படி அப்படியே தரையில் படுத்து உறங்கினார்கள். மாடியில் மாமண்டபத்தில் ஓராயிரம் பேர் வரை பெத்ரொகிராது சோவியத்தின் ஆரவாரமான கூட்டங்களில் குழுமியிருந்தார்கள்....

இருட்டியதும் ஆரம்பித்து பொழுது விடியும் வரையில் சூதாட்டக் கூடங்கள் மும்முரமாய்ச் செயல்பட்டன, செலவான சாம்பெயினுக்கு அளவிருக்காது, இருபது ஆயிரம் ரூபிள் வரையிலான பணயங்கள் வைக்கப்பட்டன. நகைகளும் விலை உயர்ந்த மென்முடிகளும் அணிந்த விபசாரிகள் இரவில் நகரின் நடு மையத்தில் நெரிசலான சிற்றுண்டி விடுதிகளில் அங்குமிங்கும் நடந்து கொண்டிருந்தனர்....

முடியரசுவாதிகள் சதிபுரிந்தனர், ஜெர்மன் உளவாளிகளும் கள்ளக் கடத்தல் ஆசாமிகளும் இரகசியத் திட்டங்கள் தீட்டினர்....

மந்தார வானத்துக்கு அடியில் அடங்காத் துடிப்புடன் இயங்கிய இம்மாநகர் மழையிலும் கடுங் குளிரிலும் வேகமாய் விரைந்து கொண்டிருந்தது—எங்கே?

*அத்தியாயம் 3*

## புரட்சியின் தறுவாயில்

*பலமிழந்த அரசாங்கத்துக்கும் எழுச்சி கொண்ட மக்களுக்கும் இடையிலுள்ள உறவுகளில் முன்னதாகவோ பின்னதாகவோ இக்கட்டான தருணம் வரவே செய்கிறது— அப்போது அரசாங்கம் மேற்கொள்ளும் ஒவ்வொரு செயலும் மக்கள் திரளினரைக் கொதிப்படைய வைக்கிறது, அது செயலைத் துறக்கும் ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் அவர்களுடைய இகழ்ச்சிக்கும் ஏளனத்துக்கும் பாத்திரமாகிறது....*

*பெத்ரொகிராதைத் துறந்துவிட்டு வெளியேறும் திட்டம் கடும் கண்டனப் புயலைக் கிளப்பிற்று. இம்மாதிரியான உத்தேசம் அரசாங்கத்துக்கு எந்நாளும் இருந்ததில்லை என்று கேரென்ஸ்கி பகிரங்கமாய் அறிவித்தார், உடனே நாற்புறமிருந்தும் ஏளனக் கூச்சல்கள் எழுந்தன.*

*புரட்சியின் பலவந்தம் தாள முடியாமல் ''இடைக்கால'' முதலாளித்துவத்தின் அரசாங்கம், பெத்ரொகிராதை விட்டோடும் எண்ணம் என்றுமே தனக்கு இருந்ததில்லை என்றும், தலைநகரைக் கைவிடத் தான் விரும்பியதே இல்லை என்றும் பொய்யான வாக்குமூலங்கள் அளித்துத் தப்பித்துக் கொள்ள முயலுகிறதென முழக்கமிட்டது* ரபோச்சி பூத்....

ஹார்க்கவில்* முப்பதாயிரம் நிலக்கரிச் சுரங்கத் தொழிலாளர்கள் ஒன்றுபட்டு ஒழுங்கமைந்து ''உலக ஆலைத் தொழிலாளர்''** நிறுவனத் திட்டத்தின் பின்வரும் முகப்புரை வாசகத்தை ஏற்றுக் கொண்டார்கள்: ''தொழிலாளி வர்க்கத்துக்கும் உடைமையாளர் வர்க்கத்துக்கும் பொதுவானது ஒன்றுமில்லை.'' கசாக்குப் படையினரால் தாக்குண்டு இவர்களது நிறுவனம் கலைக்கப்பட்டது. சுரங்க முதலாளிகள் கதவடைப்பு செய்து ஒரு பகுதி தொழிலாளர்களை வெளியே தள்ளினர், ஏனையோர் பொது வேலை நிறுத்தம் செய்தார்கள். இந்தத் தகராற்றைத் தீர்த்து வைப்பதற்காக வாணிப, தொழில் அமைச்சர் கனவாலவ் தமது துணையாளராகிய அர்லோவுக்கு முழு அதிகாரம் வழங்கி அவரை நெறியாளராய் நியமித்தார். சுரங்கத் தொழிலாளர்களின் வெறுப்புக்குப் பாத்திரமானவர் இந்த அர்லோவ். ஆனால் இத்ஸே-யி-க இவரது நியமனத்தை ஆதரித்ததோடு அன்னியில், தோனேட்ஸ்க் பள்ளத்தாக்கிலிருந்து கசாக்குப் படையினர் திருப்பியழைக்கப்பட வேண்டுமென்று கோர மறுத்தது....

இதைத் தொடர்ந்தாற் போல் கலூகாவின் சோவியத்து கலைக்கப்பட்டது. இந்த சோவியத்தில் போல்ஷிவிக்குகள் பெரும்பான்மை பலம் பெற்றதும் அவர்கள் அரசியல் கைதிகள் சிலரை விடுதலை செய்தார்கள். அரசாங்கக் கமிசாரது உடன்பாட்டுடன் நகர டூமாவானது மீன்ஸ்கிலிருந்து துருப்புகளைத் தருவித்தது, சோவியத்தின் தலைமையகத்தை இவர்

---

* ஜான் ரீடு இங்கு குறிப்பிடுவது தொனேத்ஸ்க் நிலக்கரிப் பள்ளத்தாக்காகவே இருக்க வேண்டும்.—[பதிப்பாசிரியர்.]

** ''உலக ஆலைத் தொழிலாளர்'' (I.W.W.)—அமெரிக்க ஐக்கிய நாட்டில் இருந்த புரட்சிகர வெகுஜனத் தொழிற்சங்க நிறுவனம். ருஷ்யாவில் நடைபெற்ற புரட்சிகர சம்பவங்களால் உத்வேகமூட்டப் பெற்று 1905ல் இந்த நிறுவனம் அமைக்கப்பட்டது. முப்பதாம் ஆண்டுகளில் இந்நிறுவனம் தொழிலாளிப் பெருந் திரளினருடன் முன்பு தனக்கிருந்த தொடர்புகளை இழந்து குறுங் குழுவாய்ச் சீரழிந்து போயிற்று. இதன் செல்வாக்கு உச்ச நிலையில் இருந்து வந்த காலத்தில் ஜான் ரீடு இதன் செயல் முனைப்புள்ள உறுப்பினராய் இருந்தவர்.—[பதிப்பாசிரியர்.]

கள் பீரங்கிகள் கொண்டு தாக்கினர். போல்ஷிவிக்குகள் பணிய வேண்டியதாயிற்று, ஆனால் அவர்கள் கட்டடத்தை விட்டு வெளியேறிய போது கசாக்குகள் அவர்களைத் தாக்கி, ''மாஸ்கோ, பெத்ரொகிராது சோவியத்துகளும் அடங்கலாய் எல்லா சோவியத்துகளுக்கும் இதே கதிதான் ஏற்படப் போகிறது!'' என்று கத்தினர். இந்தச் சம்பவம் ருஷ்யாவெங்கும் ஆத்திரத் தீயைப் பரவச் செய்தது....

வட பிராந்திய சோவியத்துகளின் காங்கிரஸ் பெத்ரொகிராதில் நடைபெற்று முடிந்தது. போல்ஷிவிக்காகிய குரிலேன்கொ இதற்குத் தலைமை வகித்தார். அனைத்து ருஷ்யக் காங்கிரஸ் ஆட்சியதிகாரம் அனைத்தையும் ஏற்க வேண்டுமென்று இது பிரம்மாண்டப் பெரும்பான்மை வாக்குகளின் பேரில் தீர்மானம் நிறைவேற்றியது. பிறகு இது சிறையிலிருந்த போல்ஷிவிக்குகளுக்கு வாழ்த்துரைத்து அவர்களை மகிழ்ச்சி கொள்ளுமாறு வேண்டிற்று, ஏனெனில் அவர்கள் விடுதலை பெறப் போகும் நேரம் வந்துவிட்டதாய் அறிவித்தது. அதே சமயத்தில் ஆலைக் கமிட்டிகளின்[1*] முதலாவது அனைத்து ருஷ்ய மாநாடு சோவியத்துகளுக்கு முழுமனதான ஆதரவைப் பிரகடனம் செய்து, பின்வருமாறு தீர்மானித்தது:

*அரசியல் துறையில் விடுதலை பெற்றுக் கொண்ட தொழிலாளி வர்க்கம் தனது பொருளுற்பத்தித் துறையிலும் ஜனநாயக முறை வெற்றி பெற வேண்டுமென விரும்புகிறது. ஆதிக்க வர்க்கங்களுடைய கொடுங் கொள்கையின் விளைவாய் நேர்ந்த பொருளாதாரச் சீரழிவின் சூழலில் தொழில் துறைப் பொருளுற்பத்தியின் மீது இயற்கையாகவே எழுந்த தொழிலாளர் கண்காணிப்பு இந்த விருப்பத்தின் சிறந்த வெளிப்பாடாகும்....*

ரயில்வேத் தொழிலாளர் ஒன்றியமானது பாதை, செய்திப் போக்குவரத்து அமைச்சர் லிவெரோவ்ஸ்கி ராஜிநாமா செய்துவிட வேண்டுமென்று கோரி வந்தது....

---

* இந்த அத்தியாயத்தில் எண்ணிட்டுக் காட்டப்படும் சுட்டுக்குறிகள் அத்தியாயம் 3அன் அனுபந்தத்தைக் குறிப்பவை.

நேசநாடுகளது மாநாட்டில் **நக்காஸ்** சமர்ப்பிக்கப்பட வேண்டுமென்று **இத்ஸே-யி-கவின்** சார்பில் ஸ்கோபெலெவ் வற்புறுத்தினர். தெரேஷ்ச்சென்கொ பாரிஸுக்கு அனுப்பி வைக்கப்பட்டதை எதிர்த்து முறைப்படி அவர் கண்டனம் செய்தார். தெரேஷ்ச்சென்கொ தாம் ராஜிநாமா செய்து விடத் தயாராயிருப்பதாய் அறிவித்தார்....

ஜெனரல் வெர்ஹோவ்ஸ்கி சேனையைத் திருத்தியமைப் பதற்கான தமது திட்டத்தைச் செயற்படுத்த முடியாமற் போகவே, அமைச்சரவைக் கூட்டங்களில் அரிதாகவே கலந்து கொண்டார்....

நவம்பர் 3ல் பூர்த்ஸெவின் **ஓப்ஷியெ** **தியேலொ,** கொட்டைத் தலைப்புகளிட்டுக் கூக்குரலிட்டது:

குடிமக்களே, ருஷ்யாவைக் காப்பாற்றுங்கள்!

தேசப் பாதுகாப்பு ஆணைக்குழுவின் கூட்டத்தில் நேற்று எனக்கு இது தெரிய வந்தது: கர்னீலவின் வீழ்ச்சிக்கு பிரதான பொறுப்பாளிகளில் ஒருவரான யுத்த அமைச்சர் ஜெனரல் வெர்ஹோவ்ஸ்கி நேசநாடுகளைச் சாராமல் தனியே சமாதானம் முடித்துக் கொள்ள வேண்டுமென முன்மொழித் திருக்கிறார்.

ருஷ்யாவுக்கு இழைக்கப்படும் துரோகமே ஆகும் இது!

ஜெனரல் வெர்ஹோவ்ஸ்கியின் முன்மொழிவை இடைக் கால அரசாங்கம் பரிசீலனைகூட செய்யவில்லை என்று தெரேஷ்ச் சென்கோ அறிவித்தார்.

''நாங்கள் எல்லாரும் பைத்தியக்கார விடுதியிலே இருப் பதாய் நினைக்கத் தோன்றும்!'' என்றார் தெரேஷ்ச்சென்கோ.

ஜெனரலின் சொற்கள் ஆணைக்குழு உறுப்பினர்களைத் திடுக்குறச் செய்தன.

ஜெனரல் அலெக்சேயெவ் அழுதுவிட்டார்.

இல்லை, பைத்தியக்கார விடுதி அல்ல! இன்னுங்கூட பயங்கரமானது! ருஷ்யாவுக்கு நேரடியாகவே துரோகம் புரிவதாகும் இது!

வெர்ஹோவ்ஸ்கியின் சொற்கள் குறித்து உடனே நமக்குக் கேரென்ஸ்கியும் தெரேஷ்ச்சென்கோவும் நெக்ராச வும் பதிலளித்தாக வேண்டும்.

குடிமக்களே, கிளர்ந்தெழுங்கள்!
விலை பேசி விற்கப்படுகிறது ருஷ்யா!
நாட்டைக் காப்பாற்றுங்கள்!

உண்மையில் வெர்ஹோவ்ஸ்கி கூறியதெல்லாம், சமாதானத்துக்காக முன்மொழியும்படி நேசநாடுகளை வற்புறுத்த வேண்டும், ஏனெனில் இனியும் தொடர்ந்து ருஷ்யச் சேனையால் போராட முடியாது என்பதுதான்....

ருஷ்யாவிலும் வெளிநாடுகளிலும் ஏற்பட்ட பரபரப்புக்கு அளவே இல்லை. வெர்ஹோவ்ஸ்கியிற்கு ''உடல் நலக் குறைவு காரணமாய் கால வரையின்றி ஓய்வு'' தரபட்டது, அவர் அரசாங்கத்திலிருந்து விலகிக் கொண்டார். ஒப்ஷியெதியேலொ தடையிட்டு மூடப்பட்டது....

நவம்பர் 4ஆம் நாளாகிய ஞாயிற்றுக் கிழமை பெத்ரொகிராது நகர சோவியத்தின் நாளாய்க் குறிக்கப்பட்டு, நகரெங்கும் பெரும் பெரும் கூட்டங்கள் நடைபெறுவதற்கு ஏற்பாடாயிற்று. சோவியத்து நிறுவனத்துக்காகவும் பத்திரிகைகளுக்காகவும் நிதி திரட்டுவதே இந்தக் கூட்டங்களின் நோக்கமாய்க் கூறப்பட்டது; உண்மையில் பலத்தைப் புலப்படுத்துவதே இவற்றின் நோக்கம். அதே நாளன்று கசாக்குகள் கிரெஸ்த்னி ஹோத்—அதாவது சிலுவை ஊர்வலம்—நடத்தப் போவதாய்த் திடுமென அறிவிக்கப்பட்டது. இந்தச் சிலுவை ஊர்வலம் 1812ல் மாஸ்கோவை நெப்போலியனிடமிருந்து காப்பாற்றிய தேவ உருவின் உற்சவமாகும். சூழ்நிலை கலவரமிக்கதாகி விட்டது: ஒரு சிறு பொறி கிளம்பினாலும் உள்நாட்டு யுத்தத் தீயாய் மூண்டுவிடும்படியான நிலைமை. பெத்ரொகிராது சோவியத்து, ''கசாக்கு சோதரர்களே!'' என்று தலைப்பிட்டு ஓர் அறிக்கை வெளியிட்டது:

கசாக்குகளாகிய உங்களைத் தொழிலாளர்களும் படையாட்களுமாகிய எங்களுக்கு எதிராய்த் தூண்டி விடுகிறார்கள். இந்தப் பைசாசத் திட்டத்தைச் செயல்படுத்துவோர் நமது பொதுப் பகைவர்கள், சொத்துடைத்த வர்க்கத்தவர்களாகிய நமது ஒடுக்குமுறையாளர்கள்: ஜெனரல்கள், வங்கி முதலாளிகள், நிலப்பிரபுக்கள், முன்னாள் ஆட்சி அதிகாரி

கள், ஜாரின் முன்னாள் சேவகர்கள்.... இலஞ்ச வெறியர்கள் எல்லோரும், உங்களுடைய கசாக்கு ஜெனரல்களும் அடங்கலான செல்வச் சீமான்களும் கோமான்களும் பிரபுக்களும் ஜெனரல்களுமாகிய இவர்கள் எல்லோரும் நம்மை வெறுப்பவர்கள். எக்கணத்திலும் பெத்ரொகிராது சோவியத்தை ஒழித்துக் கட்டவும், புரட்சியை நசுக்கவும் தயாராய் இருப்பவர்கள்....

நவம்பர் 4ஆம் நாளன்று சிலர் கசாக்குச் சிலுவை ஊர்வலத்துக்கு ஏற்பாடு செய்து வருகிறார்கள். இந்த ஊர்வலத்தில் பங்கெடுத்துக் கொள்வதும் பங்கெடுக்காமல் ஒதுங்குவதும் அவரவரது மனசாட்சிக்கும் உரித்தான ஒரு பிரச்சினை, இந்த விவகாரத்தில் நாங்கள் தலையிடவில்லை, யாருக்கும் நாங்கள் தடையாய்க் குறுக்கே நிற்கவில்லை....ஆனால், கசாக்குகளே, உங்களை நாங்கள் எச்சரிக்கின்றோம்! சிலுவை ஊர்வலம் என்று சொல்லிக் கொண்டு உங்களுடைய கலேடின்கள் உங்களை எங்களுக்கு விரோதமாய், படையாட்களுக்கு விரோதமாய்த் தூண்டிவிடாதபடி பார்த்துக் கொள்ளுங்கள், கவனமாய் இருங்கள்....

சிலுவை ஊர்வலம் அவசரமாய்க் கைவிடப்பட்டது....

நகரில் கொட்டடிகளிலும் தொழிலாளி வர்க்க வசிப்பிடங்களிலும் போல்ஷிவிக்குகள் ''அனைத்து அதிகாரமும் சோவியத்துகளுக்கே!'' என்று முழங்கிப் பிரசாரம் செய்தார்கள். அதேபோது இருண்ட சக்திகளின் கையாட்கள், மக்களைக் கொதித்தெழுந்து யூதர்களையும் கடைக்காரர்களையும் சோஷலிஸ்டுத் தலைவர்களையும் படுகொலை புரியும்படித் தூண்டிக் கொண்டிருந்தனர்....

ஒரு புறத்தில் முடியரசுவாதப் பத்திரிகைகள் இரத்த வெறிகொண்டு அடக்குமுறை கட்டவிழ்த்து விடப்பட வேண்டுமென்று தூண்டிவிட்டுக் கொண்டிருந்தன—மறுபுறத்தில் லெனினுடைய பலத்த குரல் கர்ஜனை புரிந்தது: ''எழுச்சி நடைபெற வேண்டும்!... இனிமேல் நாம் காத்திருக்கலாகாது!''

முதலாளித்துவப் பத்திரிகைகளுங்கூட நிதானமிழந்துவிட்டன.[2] பீர்ழேவியே வேதமொஸ்தி (பங்கு மார்க்கெட்

ஏடு) போல்ஷிவிக்குப் பிரசாரத்தை ''ஆளின் காவந்து, தனியார் சொத்துடைமையை மதித்து நடத்தல் ஆகிய சமுதாயத்தின் இந்த அடியாதார கோட்பாடுகள்'' மீதான தாக்குதலாகுமெனக் குறிப்பிட்டது.

ஆனால் ''மிதவாத'' சோஷலிஸ்டு வெளியீடுகள்தான் மிக அதிகமாய்ப் பகைமை பாராட்டின.[3] ''போல்ஷிவிக்குகள்தான் புரட்சியின் படுபயங்கர விரோதிகள்'' என்றது **தியேலொ நரோதா**. ''அரசாங்கம் தன்னைப் பாதுகாத்துக் கொண்டு எங்களையும் பாதுகாக்க வேண்டும்'' என்று எழுதிற்று மென்ஷிவிக்கு ஏடாகிய **தியேன்**. பிளெஹானவின் பத்திரிகை **எதீன்ஸ்துவொ** (ஒற்றுமை)[4] பெத்ரொகிராது தொழிலாளர்கள் ஆயுதபாணியாக்கப்படுவதை அரசாங்கத்துக்குச் சுட்டிக் காட்டிற்று, போல்ஷிவிக்குகளுக்கு எதிராய்க் கடுமையான நடவடிக்கைகள் எடுக்கப்பட வேண்டுமென்று கோரிற்று.

நாளுக்கு நாள் அரசாங்கம் மேன்மேலும் ஆதரவற்றுச் சக்தியிழந்து வந்தது. நகராட்சி நிர்வாகமுங்கூட குலைந்து போயிற்று. துணிகரக் கொள்ளைகளையும் கொலைகளையும் பற்றிய செய்திக் குறிப்புகள் காலைப் பத்திரிகைகளில் பத்தி பத்தியாய் வெளிவந்தன, கொள்ளைக்காரர்களும் கொலைகாரர்களும் தடையற்றுச் சுதந்திரமாய்ச் செயல்பட்டனர்.

மறுபுறத்தில் ஆயுதமேந்திய தொழிலாளர்கள் இரவில் தெருக்களில் காவற் குழுவினராய்ச் சுற்றி வந்து கொள்ளைக்காரர்களை எதிர்த்துப் போராடினார்கள், ஆயுதங்கள் கண்டு பிடிக்கப்பட்ட போதெல்லாம் அவற்றைக் கைப்பற்றிப் பறிமுதல் செய்தார்கள்.

பெத்ரொகிராதின் இராணுவத் தளபதி கர்னல் பல்க்கோவ்னிக்கவ் நவம்பர் முதல் நாளன்று பின்வரும் ஆணையை வெளியிட்டார்:

நாடு கடந்து கொண்டிருக்கும் கடினமான நாட்களைக் கவனியாது, ஆயுதமேந்திய ஆர்ப்பாட்டங்களுக்கும் படுகொலைகளுக்குமான பொறுப்பற்ற அறைகூவல்கள் பெத்ரொகிராதில் இன்னமும் பரப்பப்பட்டு வருகின்றன, கொள்ளையும் ஒழுங்கின்மையும் நாளுக்கு நாள் அதிகரித்துச் செல்கின்றன.

இந்த நிலைமை நகர மக்களது வாழ்வைச் சீர்குலைக்கிறது; அரசாங்கம், நகராட்சி நிறுவனங்கள் இவற்றின் முறையான வேலைகளுக்கு இடையூறாகி விடுகிறது.

நாட்டின் முன்னால் எனக்குள்ள பொறுப்பினையும் கடமையையும் முழு அளவில் மனதிற் கொண்டு நான் ஆணையிடுகின்றேன்:

1. ஒவ்வோர் இராணுவத் தொகுதியும் தனிக் கட்டளைகளுக்கு ஏற்பவும், அதன் பொறுப்பிலுள்ள வட்டாரத்துக்கு உட்பட்டும், அரசாங்க நிலையங்களையும் பொது நிலையங்களையும் காவல் புரிவதில் நகராண்மைக் கழகத்துக்கும் கமிசார்களுக்கும் காவல் துறைக்கும் எல்லா வித உதவியும் அளிக்க வேண்டும்.

2. வட்டாரத் தளபதி, நகரக் காவல் துறையின் பிரதிநிதிகள் இவர்களது ஒத்துழைப்புடன் சுற்றுக் காவற் குழுக்களுக்கு ஏற்பாடு செய்ய வேண்டும், குற்றவாளிகளையும் படைத் துறப்பாளர்களையும் கைது செய்வதற்கான நடவடிக்கைகளை எடுக்க வேண்டும்.

3. படைக் கொட்டடிகளினுள் பிரவேசித்து ஆயுதமேந்திய ஆர்ப்பாட்டங்களிலும் படுகொலைகளிலும் ஈடுபடும்படித் தூண்டும் எல்லா ஆட்களையும் கைது செய்து அவர்களை நகரத்தின் இரண்டாவது தளபதியின் தலைமையகத்துக்குக் கொண்டுவந்து ஒப்படைக்க வேண்டும்.

4. ஆயுதமேந்திய எந்த ஆர்ப்பாட்டமாயினும், கலகமாயினும், கைவசமுள்ள ஆயுதப் படைகள் அனைத்தையும் கொண்டு அதை ஆரம்பத்திலேயே அடக்கிவிட வேண்டும்.

5. அதிகார முறையில்லா வீட்டுச் சோதனைகளையும் அதிகார முறையில்லா கைது பிடித்தல்களையும் தடுப்பதற்குக் கமிசார்களுக்கு உதவி புரிய வேண்டும்.

6. பொறுப்பிலுள்ள வட்டாரத்தில் நடப்பவை யாவற்றையும் உடனுக்குடன் பெத்ரொகிராது இராணுவ மாவட்டத் தலைமைக்குத் தெரிவிக்க வேண்டும்.

தளபதிகள் அவர்களது கடமைகளை நிறைவேற்றுவதற்கு அவர்களுக்குத் தமது உதவியை அளிக்கும்படி எல்லா இராணுவக் கமிட்டிகளையும் நிறுவனங்களையும் கேட்டுக் கொள்கின்றேன்.

போல்ஷிவிக்குகள் செய்து வரும் தயாரிப்புகளைப் பற்றிய முழு விவரமும் இடைக்கால அரசாங்கத்துக்குத் தெரியுமென்றும், எந்த ஆர்ப்பாட்டத்தையும் சமாளிப்பதற்கு அரசாங்கம் போதிய பலம் பெற்றிருக்கிறதென்றும் குடியரசு அவையில் கேரென்ஸ்கி அறிவித்தார்.[5] நோவயா ரூஸ், ரபோச்சி பூத் பத்திரிகைகள் இரண்டும் ஒரே மாதிரியான சீர்குலைவு வேலைதான் செய்து வருகின்றன என்று அவர் குற்றஞ் சாட்டினார். ''ஆனால் முழுநிறைப் பத்திரிக்கைச் சுதந்திரம் இருந்து வரும் காரணத்தால் அச்சிடப்பட்ட பொய்களை அரசாங்கத்தால் எதிர்த்திட முடியவில்லை....''* என்றார். இருண்ட சக்திகள் அத்தனை ஆர்வமொடு விரும்பும் எதிர்புரட்சியைக் குறிக் கோளாய்க் கொண்ட ஒரு விதமான பிரசாரத்தின் இரு முகங்களே இந்தப் பத்திரிகைகள் என்று குறிப்பிட்டுவிட்டு அவர் மேலும் கூறினார்:

''நான் விதியால் சபிக்கப்பட்டவன், எனக்கு என்ன நேர்வதாயினும் நேரட்டும், பரவாயில்லை; நகரில் போல்ஷிவிக்குகள் தூண்டிவிட்டுச் செய்து வரும் நம்புதற்கரிய சதி இருக்கிறதே அதுதான் மிகப் பெரிய மர்மமாகுமென நான் துணிந்து கூறுகிறேன்!''

சோவியத்துகளின் காங்கிரசுக்கு நவம்பர் 2ல் வந்து சேர்ந்த பிரதிநிதிகள் பதினைந்து பேர்தான். மறுநாளன்று இந்த எண்ணிக்கை நூறு ஆயிற்று, இதற்கு அடுத்த நாள் காலை நூற்று எழுபத்தைந்து ஆயிற்று—இவர்களில் நூற்று மூன்று பேர் போல்ஷிவிக்குகள்.... காங்கிரஸ் நடைபெறுவதற்கு வேண்டிய பிரதிநிதிகளது குறைவெண் நானூறு, காங்கிரஸ் ஆரம்பமாவதற்கு இன்னும் மூன்று நாட்களே இருந்தன....

ஸ்மோல்னியில் நான் நெடுநேரம் செலவிட்டேன். உள்ளே செல்வது இப்போது எளிய காரியமாய் இருக்கவில்லை. வெளிவாயிலில் இரட்டை வரிசையில் காவலர்கள் நின்று

---

* கலப்படமில்லா உண்மையல்ல இது. இடைக்கால அரசாங்கம் முன்பு ஜூலை மாதத்தில் போல்ஷிவிக்குப் பத்திரிகைகளுக்குத் தடைவிதித்து அவற்றை மூடிற்று, திரும்பவும் இதேபோல் செய்யத் திட்டமிட்டுக் கொண்டுதான் இருந்தது.

காவல் புரிந்தார்கள். முன்கதவைக் கடந்து உள்ளே சென்றதும் அங்கே ஏராளமானோர் நின்ற நீள்வரிசையில் காத்திருக்க வேண்டும். யார், வந்த வேலை என்ன என்ற கேள்விகளுக்கு விடையளித்தபின் நான்கு நான்கு பேராய் இவர்கள் உள்ளே விடப்பட்டார்கள். நுழைவுச் சீட்டுகள் வழங்கப்பட்டிருந்தன, ஆனால் நுழைவுச் சீட்டு முறை ஒருசில மணிக்கு ஒரு தரம் மாற்றப்பட்டு வந்தது, ஏனென்றால் உளவாளிகள் ஓயாமல் ஊடுருவி உள்ளே வந்து கொண்டிருந்தனர்....

**Военно-Революціон.**
**Комитетъ**
при
ПЕТР. С. Р. и С. Д:

Комендантскій отдѣлъ.

16 ноября 1917 г.

№ 955

Смольный институтъ.

**Пропускъ.**

Дано. сіе Джону Риду

Корресп. амер. соц. прессы

срокомъ по 1 декабря

на право свободнаго входа въ Смольный Институтъ.




*Комендантъ* Ф. Дзержинский

*Дѣлопроизводитель*

ஸ்மோல்னியினுள் செல்வதற்காக ஜான் ரீடுக்குத் தரப்பட்ட அனுமதிச் சீட்டு.

ஒரு நாள் நான் வெளிவாயிலை வந்தடைந்த போது எனக்கு முன்னால் திரோத்ஸ்கியும் அவர் மனைவியும் செல்லக் கண்டேன். படையாள் ஒருவர் அவர்கள் இருவரையும் நிறுத்தினார். திரோத்ஸ்கி தமது பைகளுக்குள் கையை விட்டுத் தேடினார், ஆனால் நுழைவுச் சீட்டு எதிலும் இல்லை.

''பரவாயில்லை'' என்றார் அவர், முடிவில். ''என்னை உங்களுக்குத் தெரியும். என் பெயர் திரோத்ஸ்கி.''

''நுழைவுச் சீட்டு இல்லை உங்களிடம். உள்ளே போக முடியாது நீங்கள்'' என்று பிடிவாதமாய்ப் பதிலளித்தார்

அந்தப் படையாள். ''பெயரைச் சொல்லிப் பயனில்லை எனக்குத் தெரியாது'' என்ருர்.

''நான்தான் பெத்ரொகிராது சோவியத்தின் தலைவர்.''

''அப்படியா?'' என்ருர் அந்தப் படையாள். ''அவ்வளவு முக்கியமானவர் என்ருல், உங்களிடம் சிறு துண்டுக் காகிதம் இருக்க வேண்டுமே.''

திரோத்ஸ்கி பொறுமையாய் இருந்தார். ''காவல் தலைவரிடம் என்னை அழைத்துச் செல்லுங்களேன்'' என்ருர். படையாள் தயங்கினுர், வருகிற ஒவ்வோர் ஆளையும் அழைத்துச் சென்று காவல் தலைவரைத் தொல்லை செய்து கொண்டிருக்க முடியாது என்று முணுமுணுத்துக் கொண்டார். பிறகு அவர் காவல் குழுவின் தலைவரை வருமாறு கையை ஆட்டிக் கூப்பிட்டார். வந்தவரிடம் திரோத்ஸ்கி தமது விவகாரத்தைச் சொல்லி, ''என் பெயர் திரோத்ஸ்கி'' என்று மீண்டும் ஒரு தரம் கூறினுர்.

''திரோத்ஸ்கியா?'' வந்த படையாள் தலையைச் சொறிந்து கொண்டார். ''எங்கோ கேட்ட பெயராய் இருக்கிறதே'' என்ருர் அந்த இரண்டாவது படையாள். ''சரிதான், நீங்கள் உள்ளே போகலாம், தோழரே....''

போல்ஷிவிக்கு மத்தியக் கமிட்டி உறுப்பினரான கரஹானை நான் நடையில் சந்தித்தேன். புதிய அரசாங்கம் எப்படிப்பட்டதாய் இருக்கும் என்று அவர் எனக்கு விளக்கினுர்.

''சோவியத்துகள் மூலம் வெளியீடாகும் மக்கள் சித்தத்துக்கு நுண்ணுணர்வோடு செவி சாய்க்கக் கூடியதாகவும், வட்டாரத்து சக்திகள் முழுச் சுதந்திரத்தோடு முன்முயற்சி எடுத்துச் செயல்பட இடமளிக்கக் கூடியதாகவும் நெகிழ்வு நயம் கொண்ட ஒழுங்கமைப்பாய் இருக்கும். ஜார் அரசாங்கம் செய்தது போலவே தற்போது இடைக்கால அரசாங்கமும் வட்டாரங்களது ஜனநாயக சித்தத்தின் செயற்பாட்டுக்கு முட்டுக்கட்டை போடுகிறது. புதிய சமுதாயத்தில் முன்முயற்சி கீழ்மட்டங்களிலிருந்து உதித்தெழும்.... வடிவத்தில் இந்த அரசாங்கம் ருஷ்யாவின் சமூக ஜனநாயகத் தொழிலாளர் கட்சியினது அமைப்புத் திட்டத்தை முன்மா

திரியாய்க் கொண்டு அமைந்ததாய் இருக்கும். புதிய இத்ஸேஃயி-க அடிக்கடி கூடும் சோவியத்துகளின் அனைத்து ருஷ்யக் காங்கிரசிற்குப் பொறுப்புக் கூற வேண்டியதாய் இருக்கும். அமைச்சகங்கள் பற்பலவும் அமைச்சர்களுக்குப் பதில் குழுமங்கள் என்பதான கமிட்டிகளின் தலைமையில் இயங்கும், இந்த அமைச்சகங்கள் நேரடியாய் சோவியத்துகளுக்குப் பொறுப்புக் கூற வேண்டியனவாய் இருக்கும்....''

முன்கூட்டியே ஏற்பாடாகியிருந்தபடி அக்டோபர் 30ல் நான் திரோத்ஸ்கியைப் பேட்டி காண்பதற்காக ஸ்மோல்னியின் உச்சித் தளத்தில் ஒரு சிறிய காலி அறைக்குச் சென்றேன். அறையின் மையத்தில் காலி மேசை ஒன்றின் பின்னால் முரட்டு நாற்காலியில் அவர் அமர்ந்திருந்தார். நான் அதிகமாய் அவரிடம் கேள்விகள் கேட்க வேண்டியிருக்கவில்லை. தடங்கலின்றி வேகமாய் ஒரு மணி நேரத்துக்கு மேல் பேசினார். அவர் பேசியதன் சாரத்தை அவருடைய சொற்களிலேயே இங்கு தருகிறேன்:

''இடைக்கால அரசாங்கம் அறவே சக்தியற்றதாய் இருக்கிறது. முதலாளித்துவ வர்க்கம்தான் ஆட்சியதிகாரம் புரிகின்றது. ஆனால் இந்த முதலாளித்துவ ஆட்சியதிகாரம் அபரோன்த்ஸி கட்சிகளுடனான போலிக் கூட்டணியால் மூடிமறைக்கப் பட்டிருக்கிறது. தற்போது புரட்சியின் போது விவசாயிகள் தமக்குக் கிடைக்கப் போவதாய் வாக்களிக்கப்பட்ட நிலத்துக்காகக் காத்திருந்து சலிப்படைந்து கலகம் புரிவதைப் பார்க்கிறோம். நாடெங்கும் உழைப்பாளி வர்க்கங்கள் யாவும் யாவற்றிடமும் இதே மனக் கசப்பு ஏற்பட்டிருப்பது தெளிவாகவே தெரிகிறது. முதலாளித்துவ வர்க்கத்தின் இந்த ஆதிக்கம் உள்நாட்டு யுத்தத்தின் மூலம் மட்டும்தான் சாத்தியம். கர்னீலவ் முறைதான் முதலாளித்துவ வர்க்கம் ஆதிக்கம் புரிவதற்கு அனுசரிக்கக் கூடிய ஒரே வழியாகும். ஆனால் பலவந்தம் செய்வதற்கான சக்தி முதலாளித்துவ வர்க்கத்திடம் இருக்கவில்லை.... சேனையானது எங்கள் பக்கத்தில் இருக்கிறது. சமரசவாதிகளும் சாத்வீகவாதிகளுமாகிய சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களும் மென்ஷிவிக்குகளும் அறவே செல்வாக்கு இழந்துவிட்டனர், ஏனெனில் விவசாயிகளுக்கும்

நிலப்பிரபுக்களுக்கும், தொழிலாளர்களுக்கும் ஆலேயதிபர் களுக்கும், படையாட்களுக்கும் இராணுவ அதிகாரிகளுக்கும் இடையிலான போராட்டம் என்றையும்விட கடுமையா னதாகிவிட்டது, என்றையும் விட இணக்கம் காண முடியாத தாகி விட்டது. மக்கள் பெருந்திரளினரது ஒருமித்த செய லால்தான், பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத்தின் வெற்றி யால்தான் புரட்சியைச் சித்தி பெறச் செய்து மக்களைக் காப் பாற்ற முடியும்....

''சோவியத்துகள்தான் மக்களது சரிநிறையான பிரதிநிதி கள்—அவற்றின் புரட்சி அனுபவத்திலும், அவற்றின் எண்ணங்களிலும் நோக்கங்களிலும் மக்களுக்குச் சரிநிறை யானவை. அகழ்வரிகளிலுள்ள படையாட்கள், ஆலேகளிலுள்ள தொழிலாளர்கள், நிலங்களிலுள்ள விவசாயிகள் ஆகிய இவர் களை நேரடியாய்த் தமக்கு ஆதாரமாய்க் கொண்ட இந்த சோவியத்துகள் புரட்சியின் முதுகெலும்பாய் இருப்பவை.

''சோவியத்துகள் இல்லாத அதிகார சக்தி ஒன்றை உரு வாக்க முயன்று பார்த்தார்கள்—அதிகார சக்தியின்மையைத் தான் உருவாக்கியிருக்கிறுர்கள். எல்லா விதமான எதிர்ப் புரட்சி சதித் திட்டங்களும் தற்போது ருஷ்யக் குடியரசு அவையின் நடைவழிகளில் தீட்டப்பெற்று வருகின்றன. காடேட்டுக் கட்சி எதிர்ப்புரட்சிப் போர்ப் படையாய் விளங்கு கிறது. மறுபுறத்தில் சோவியத்துகள் மக்கள் இலட்சியத் தைக் குறிப்பனவாய் உள்ளன. இவ்விரு முகாம்களுக்கும் இடைப்பட்டனவாய்க் குறிப்பிடத்தக்க முக்கியத்துவம் வாய்ந்த கோஷ்டிகள் எவையும் இல்லை.... இறுதி முடிவு கட்டப் போகும் போராகும் இது. முதலாளித்துவ எதிர்ப் புரட்சியானது அதன் சக்திகள் யாவற்றையும் ஒழுங்கமைத்துக் கொள்கிறது, எங்கள் மீது தாக்குதல் தொடுப்பதற்குத் தக்க தருணத்தை எதிர்நோக்கிக் காத்திருக்கிறது. எங்களு டைய பதில் தீர்மானகரமாய் இருக்கும். மார்ச் மாதத்தில் பற்றுக்குறையாய் ஆரம்பிக்கப்பட்டு, பிறகு கர்னீலவ் விவகாரத்தின் போது முன்னிலேக்குக் கொண்டு வரப்பட்ட பணியினே நாங்கள் நிறைவு பெறச் செய்வோம்....''

பிறகு அவர் புதிய அரசாங்கத்தின் அயல்துறைக் கொள்கை குறித்துப் பேசினுர்:

''எல்லாப் போர்முனைகளிலும் உடனே போர்நிறுத்தம் செய்யப்படுவதற்கும், ஜனநாயக சமாதான வரையறைகளை விவாதிப்பதற்காக எல்லா நாடுகளின் மக்களது மாநாடு கூட்டப்படுவதற்கும் அழைப்பு விடுப்பதே எங்களுடைய முதலாவது செயலாய் இருக்கும். சமாதான ஒப்பந்தத்தில் எந்த அளவுக்கு ஜனநாயகம் இருக்கப் போகிறது என்பது ஐரோப்பாவில் எந்த அளவுக்கு நமக்குப் புரட்சிகர மறுமொழி கிடைக்கப் போகிறது என்பதைப் பொறுத்ததாகும். இங்கே நாங்கள் சோவியத்துகளின் அரசாங்கம் ஒன்றை உருவாக்குவோமாயின் அது ஐரோப்பாவில் உடனடியாய் சமாதானம் ஏற்படுவதற்கு சக்தி வாய்ந்த காரணக் கூறாய் இருக்கும். எப்படியெனில் இந்த அரசாங்கம் போர்நிறுத்தத்தை முன்மொழிந்து எல்லா நாடுகளின் மக்களுடன், அவர்களது அரசாங்கங்களைக் கடந்து, நேரடியாகவும் உடனடியாகவும் உரையாடும். சமாதானம் முடிவாகும் தருணத்தில் ருஷ்யப் புரட்சியானது முழு பலத்தையும் கொண்டு 'பிரதேசச் சேர்ப்புகளுக்கோ யுத்த இழப்பீடுகளுக்கோ இடமில்லை, மக்களுக்கு சுயநிர்ணய உரிமை' என்பதையும், ஐரோப்பாவின் கூட்டுக் குடியரசையும் வற்புறுத்தும்....

''இந்த யுத்தத்தின் முடிவில் ஐரோப்பா புத்தமைக்கப் படுவதை, தூதுத் துறையாளர்களால் அல்ல, பாட்டாளி வர்க்கத்தால் புத்தமைக்கப்படுவதை நான் எதிர்பார்க்கிறேன். ஐரோப்பாவின் கூட்டுக் குடியரசு, அதாவது ஐரோப்பிய அரசுகளது ஐக்கியம் உருவாதல்—இவ்வாறே இருக்க வேண்டும் இந்தப் புத்தமைப்பு. தேசியத் தன்னாட்சி மட்டும் இருந்தால் இனி போதாது. பொருளாதார முன்னேற்றமானது தேசிய எல்லைகள் மறைய வேண்டுமெனக் கோருகிறது. தேசியக் கோஷ்டிப் பிரிவுகளாய் ஐரோப்பா பிரிந்திருந்தால், ஏகாதிபத்தியம் திரும்பவும் அதன் வேலையை ஆரம்பித்துவிடும். ஐரோப்பாவின் கூட்டுக் குடியரசால் மட்டும்தான் உலகுக்குச் சமாதானத்தை அளித்திட முடியும்.'' அவர் புன்னகை புரிந்து கொண்டார்—அவருக்குரிய அந்த நேர்த்தியான, சற்று கிண்டலான புன்னகை அது. ''ஆனால் ஐரோப்பிய மக்கள் பெருந்திரளினரின் நேரடி நடவடிக்கைகள் இல்லையேல் இந்த நோக்கங்கள் ஈடேற முடியாது—இப்போது....''

இப்போது, திடுமென ஒருநாள் காலையில் தெருக்களில் போல்ஷிவிக்குகள் தோன்றி வெள்ளைக் காலர் உடுத்தியவர்களைச் சுட்டு வீழ்த்தப் போகிறார்கள் என்று எல்லோரும் நினைத்திருந்த ஒரு நேரத்தில், மெய்யான எழுச்சியானது முற்றிலும் இயற்கையான முறையில் ஒளிவு மறைவின்றி பகிரங்கமாய் ஆரம்பிக்கலாயிற்று.

இடைக்கால அரசாங்கம் பெத்ரொகிராது நகரக் காவற்படையைப் போர்முனைக்கு அனுப்பத் திட்டமிட்டது.

பெத்ரொகிராது நகரக் காவற்படையில் சுமார் அறுபது ஆயிரம் ஆட்கள் இருந்தார்கள். இவர்கள் புரட்சியில் முக்கிய பங்கெடுத்துக் கொண்டவர்கள். மார்ச் மாதத்தின் மாபெரும் நாட்களின் போது இவர்கள்தான் தீர்மானகரமான திருப்பத்தை உண்டாக்கி, படையாட்கள் பிரதிநிதிகளது சோவியத்துகளை நிறுவியவர்கள்; பிறகு கர்னீலவைப் பெத்ரொகிராதின் தலைவாயில்களிலிருந்து எதிர்த்தடித்து விரட்டியவர்கள்.

இவர்களில் ஒரு பெரும் பகுதியோர் போல்ஷிவிக்குகள். இடைக்கால அரசாங்கம் நகரத்தைக் காலி செய்து வெளியேறலாமென்று பேசிய போது, பெத்ரொகிராது நகரக் காவற்படையினர்தான் தக்கபடி இதற்குப் பதிலளித்தார்கள்: ''தலைநகரைப் பாதுகாக்க உங்களுக்குத் திறனில்லையெனில், சமாதானம் முடித்துக் கொள்ளுங்கள்; சமாதானம் முடித்துக் கொள்ள முடியாதெனில், இவை இரண்டையும் செய்ய வல்லதாகிய மக்கள் அரசாங்கத்துக்கு இடமளித்து விலகிச் செல்லுங்கள்....''

எழுச்சி முயற்சி எதுவும் பெத்ரொகிராது நகரக் காவற்படையின் போக்கினையே பொறுத்திருக்கும் என்பது தெளிவாகவே விளங்கிற்று. நகரக் காவற் படைப் பிரிவுகளை வெளியே அனுப்பிவிட்டு அவற்றின் இடத்தில் ''நம்பத்தக்க'' படைகளாகிய கசாக்குப் படைகளையும் சாவுப் பட்டாளங்களையும் கொண்டுவந்து நிறுத்துவதென அரசாங்கம் திட்டமிட்டது. சேனைக் கமிட்டிகளும் ''மிதவாத'' சோஷலிஸ்டுகளும் இத்ஸே-யி-கவும் அரசாங்கத்தை ஆதரித்தன. போர்முனையிலும் பெத்ரொகிராதிலும் விரிவான அளவில் கிளர்ச்சி நடத்தப்பட்டது: பெத்ரொகிராது நகரக் காவற் படையி

னர் எட்டு மாதங்களாய் தலைநகரில் கொட்டடிகளில் துன்பம் அறியாமல் சொகுசாய் வாழ்ந்து வர, போர்முனையில் இவர்களது தோழர்கள் பலமெல்லாம் இழந்து அகழ்வரிகளிலே பட்டினி கிடந்து வதைகிறார்கள் என்றும் உயிர் விடுகிறார்கள் என்றும் சொல்லி உணர்ச்சிகள் தூண்டப்பட்டன.

நகரக் காவல் படைப் பிரிவுகள் ஒப்பளவில் வசதியான தமது நிலைமைகளைக் கைவிட்டுக் குளிர்காலப் படையியக்கத்தின் துன்பதுயரங்களுக்கு ஆளாவதற்கு விரும்பவில்லை என்ற குற்றச்சாட்டில் உண்மை ஓரளவு இருந்ததென்பதில் சந்தேகமில்லை. ஆனால் இந்தப் படைப் பிரிவுகள் போர்முனைக்குப் போக மறுத்ததற்கு வேறு காரணங்களும் இருந்தன. அரசாங்கத்தின் நோக்கங்கள் குறித்து பெத்ரொகிராது சோவியத்து அச்சங் கொண்டிருந்தது. போர்முனையிலிருந்து சாதாரண படையாட்களால் தேர்ந்தெடுத்து அனுப்பி வைக்கப்பட்ட நூற்றுக் கணக்கான பிரதிநிதிகள் ஒரே குரலில் கூறிச் சென்றார்கள்: ''எங்களுக்குப் புதிய படைகள் வேண்டுமென்பது மெய்தான், ஆனால் இதனிலும் முக்கியமாய்ப் பெத்ரொகிராதும் புரட்சியும் தக்கபடி பாதுகாக்கப்பட வேண்டுமென்பதும் எங்களுக்குத் தெரியும்.... தோழர்களே, பின்னணியை நீங்கள் விடாமல் பார்த்துக் கொள்ளுங்கள், போர்முனையை நாங்கள் விடாமல் பார்த்துக் கொள்கிறோம்!''

அக்டோபர் 25ல் பெத்ரொகிராது சோவியத்தின் செயற்குழு கதவு மூடப்பட்ட தனிக் கூட்டத்தில் கூடி, இந்த பிரச்சினை அனைத்துக்கும் முடிவு கட்டுவதற்கான தனி இராணுவக் கமிட்டி ஒன்றை நிறுவுவது குறித்து விவாதித்தது. மறுதினம் பெத்ரொகிராது சோவியத்தின் படையாட்கள் பிரிவு கூடி ஒரு கமிட்டியைத் தேர்ந்தெடுத்தது. இந்தக் கமிட்டி முதலாளித்துவச் செய்தியேடுகளைப் பகிஷ்கரிக்கும்படி உடனே பிரகடனம் செய்தது, சோவியத்துகளின் காங்கிரசை எதிர்த்து நிற்பதற்காக இத்ஸே-யி-கவைக் கண்டித்தது. அக்டோபர் 29ல் நடைபெற்ற பெத்ரொகிராது சோவியத்தின் திறந்த கூட்டத்தில் திரோத்ஸ்கி இந்தப் புரட்சி இராணுவக் கமிட்டிக்கு அதிகாரபூர்வ அங்கீகாரம் அளிக்கும் தீர்மானத்தை முன்மொழிந்தார். ''களம் புகுந்து போராடுவதற்கும் அவசியமானால் உயிர் விடுவதற்கும் நாம் தனியே ஒரு நிறுவனத்

*தைத் தோற்றுவித்துக் கொண்டாக வேண்டும்....'' என்றார் அவர். பெத்ரொகிராது சோவியத்திலிருந்து ஒன்றும், நகரக் காவற் படையிலிருந்து ஒன்றுமாய் இரு பிரதிநிதிக் குழுக் களைப் போர்முனைக்கு அனுப்பி அங்கே படையாட்கள் கமிட்டி களுடனும் இராணுவத் தலைமை அலுவலர்களுடனும் பேச்சு கள் நடத்தச் சொல்வதெனத் தீர்மானிக்கப்பட்டது.*

*பிஸ்கோவில் சோவியத்தின் பிரதிநிதிக் குழுவினை வடக்குப் போர்முனையின் தளபதியாகிய ஜெனரல் செரமீசவ் சந்தித்து, பெத்ரொகிராது நகரக் காவற் படையினரை அகழ்வரிகளுக்குப் போய்ச் சேருமாறு தாம் கட்டளையிட்டு விட்டதாய்ச் சுருக்கமாய் அறிவித்து, மேற்கொண்டு பேசு வதற்கு ஒன்றுமில்லை என்றார். நகரக் காவற் படையின் பிரதி நிதிக் குழு பெத்ரொகிராதை விட்டு வெளியே செல்ல அனுமதிக்கப்படவில்லை....*

*பெத்ரொகிராது சோவியத்தின் படையாட்கள் பிரிவின் தூதுக் குழு ஒன்று தமது பிரிவின் பிரதிநிதி ஒருவரைப் பெத் ரொகிராது இராணுவ மாவட்டத் தலைமை அலுவலர்களு டன் சேர்த்துக் கொள்ளும்படி வேண்டிற்று. மறுக்கப்பட்டது. பெத்ரொகிராது சோவியத்து தனது படையாட்கள் பிரிவின் ஆமோதிப்பின்றி கட்டளைகள் எவையும் பிறப்பிக்கப்படக் கூடாதெனக் கோரிற்று. மறுக்கப்பட்டது. ''*இத்ஸே-யி-கவை *மட்டுமே நாங்கள் அங்கீகரிக்கிறோம், உங்களை நாங்கள் அங்கீ கரிக்கவில்லை, சட்டங்களை மீறினீர்களாயின் உங்களைக் கைது செய்வோம்'' என்ற முரட்டு அடியான பதிலே இந்தத் தூதுக் குழுவிற்குக் கிடைத்தது.*

*அக்டோபார் 30ல்* பெத்ரொகிராது நகரக் காவற் படையின் எல்லாப் படையணிகளையும் சேர்ந்த பிரதிநிதிகளது கூட்டத்தில் பின்வரும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது:*
**''பெத்ரொகிராது நகரக் காவற் படை இனி இடைக்கால அரசாங் கத்தை அங்கீகரிக்கப் போவதில்லை. பெத்ரொகிராது சோவியத்து தான் எங்களுடைய அரசாங்கம். பெத்ரொகிராது சோவியத்து அதன் புரட்சி இராணுவக் கமிட்டி மூலம் பிறப்பிக்கும் கட்டளைக்கு மட்டுமே**

---

** அக்டோபர் 31ல் நடைபெற்ற கூட்டம் இது.—[பதிப் பாசிரியர்.]*

நாங்கள் பணிந்து நடப்போம்.'' பெத்ரொகிராது சோவியத்தின் படையாட்கள் பிரிவின் ஆணைகளை எதிர்பார்த்துக் காத்திருக்கும்படி வட்டார இராணுவப் பிரிவுகள் உத்தரவிடப்பட்டன.

மறுநாளன்று இத்ஸே-யி-க பெருமளவுக்கு இராணுவ அதிகாரிகளாலாகிய அதன் சொந்தக் கூட்டம் ஒன்றைக் கூட்டி, இராணுவத் தலைமை அலுவலர்களுடன் ஒத்துழைப்பதற்கான ஒரு கமிட்டியை அமைத்தது; பெத்ரொகிராதின் எல்லா வட்டாரங்களுக்கும் அத்னத்ற்குமான கமிசார்களை நியமித்தது.

நவம்பர் 3ல் ஸ்மோல்னியில் நடைபெற்ற படையாட்களது மாபெரும் பொதுக் கூட்டத்தில் பின்வருமாறு தீர்மானிக்கப்பட்டது:

பெத்ரொகிராது நகரக் காவற் படையானது தொழிலாளர்கள், படையாட்கள் பிரதிநிதிகளது பெத்ரொகிராது சோவியத்தின் கீழ் புரட்சி இராணுவக் கமிட்டி அமைக்கப்பட்டிருப்பதை வரவேற்று வாழ்த்துரைக்கின்றது; புரட்சியின் நலன்களை முன்னிட்டு போர்முனையையும் பின்னணியையும் மேலும் நெருக்கமாய் ஐக்கியப்படுத்துவதற்காக புரட்சி இராணுவக் கமிட்டி மேற்கொள்ளும் எல்லா நடவடிக்கைகளிலும் அதற்கு முழுநிறை ஆதரவளிக்குமென வாக்களிக்கிறது.

மேலும் பெத்ரொகிராது நகரக் காவற் படை பறைசாற்றுவதாவது: நகரக் காவற் படை புரட்சிகரப் பாட்டாளி வர்க்கத்துடன் சேர்ந்து பெத்ரொகிராதில் புரட்சிகர ஒழுங்கை நிலைநாட்டும். கர்னீலவியர்களோ, முதலாளித்துவ வர்க்கத்தாரோ மேற்கொள்ளக்கூடிய ஆத்திரமூட்டும் சதிச் செயல் முயற்சி ஒவ்வொன்றும் இரக்கமின்றி எதிர்த்தடிக்கப்படும்.

புரட்சி இராணுவக் கமிட்டி இப்போது தனது பலத்தை உணர்ந்து கொண்டு, பெத்ரொகிராது இராணுவ மாவட்டத் தலைமை அலுவலர்களைத் தனது ஆணைகளுக்குக் கீழ்ப்படியும்படி உறுதியுடன் கட்டளையிட்டது. புரட்சி இராணுவக் கமிட்டியின் அதிகாரபூர்வமான ஆணையின்றி எந்த வேண்டுகோள்களையோ பிரகடனங்களையோ வெளியிடக் கூடாதென்று எல்லா அச்சகங்களுக்கும் அது கட்டளையிட்டது. ஆயுதமேந்

திய கமிசார்கள் கிரோன்வெர்கிஸ்கி ஆயுதச் சாலைக்குச் சென்று ஏராளமான ஆயுதங்களையும் படைத் தளவாடங்களையும் கைப்பற்றினர்; கலேடினது தலைமையிடமாகிய நோவொச்செர்க்காஸ்குக்கு அனுப்பப்பட்டு வந்த பத்தாயிரம் துப்பாக்கிக் குத்தீட்டிகளைத் தடுத்து நிறுத்தினர்....

திடுமென அபாயத்தை உணர்ந்து விழித்துக் கொண்ட அரசாங்கம், புரட்சி இராணுவக் கமிட்டி கலைக்கப்படுமாயின் அதற்குக் காப்புரிமை அளிப்பதாய்க் கூறியது. காலங் கடந்து விட்டது, இதெல்லாம் இனி செல்லுபடியாகாது. நவம்பர் 5 நள்ளிரவில் மலேவ்ஸ்கியை நேரில் கேரென்ஸ்கியே அனுப்பி வைத்து, இராணுவத் தலைமை அலுவலர் குழுவில் பெத்ரொகிராது சோவியத்தின் பிரதிநிதியைச் சேர்த்துக் கொள்வதாய் வாக்களிக்கச் சொன்னார். புரட்சி இராணுவக் கமிட்டி ஏற்றுக் கொண்டது. அப்போதைக்கான யுத்த அமைச்சராய்ச் செயல்பட்ட ஜெனரல் மனிக்கோவ்ஸ்கி ஒரு மணி நேரத்துக்குப் பிற்பாடு இதை நிராகரித்து எதிர்க்கட்டளையிட்டார்....

நவம்பர் 6, செவ்வாய்க் கிழமை காலையில் நகரைப் பரபரப்படையச் செய்த சுவரொட்டி ஒன்று தெருச் சுவர்களில் காணப்பட்டது, ''பெத்ரொகிராது தொழிலாளர், படையாட்கள் பிரதிநிதிகளது சோவியத்தின் புரட்சி இராணுவக் கமிட்டி'' என்பதாய் ஒப்பமிடப்பட்டிருந்தது.

பெத்ரொகிராது நகரவாசிகளுக்கு.

குடிமக்களே, கொலைவெறி கொண்ட தலையை உயர்த்துகிறது எதிர்ப்புரட்சி. கர்னீலவியர்கள் தமது சக்திகளை ஒன்றுதிரட்டுகிறார்கள், சோவியத்துகளின் அனைத்து ருஷ்யக் காங்கிரசை நசுக்குவதற்காகவும் அரசியல் நிர்ணயச் சபையை முறியடிப்பதற்காகவும். அதேபோது படுகொலைச் சதிகாரர்கள் பெத்ரொகிராது நகர வீதிகளில் கலவரத்தையும் இரத்தப் பெருக்கையும் உண்டாக்க முயற்சிக்கக் கூடும். எதிர்ப்புரட்சிக்கும் படுகொலைக்குமான முயற்சிகளை எதிர்த்து நகரில் புரட்சிகர ஒழுங்கைப் பாதுகாக்கும் பொறுப்பினைப் பெத்ரொகிராது தொழிலாளர், படையாட்கள் பிரதிநிதிகளது சோவியத்து மேற்கொள்கிறது.



ஸ்மோல்னியின் வாயிலில் படையாட்களும்
செங்காவலர்களும் காவல் புரிகின்றனர்



ஸ்மோல்னியில் செங்காவலர்கள் உள்ளே வருவோரின்
அனுமதிச்சீட்டுகளைப் பார்வையிடுகிறார்கள்

பெத்ரொகிராது நகரக் காவற் படை எவ்விதமான வன்முறையோ, ஒழுங்கீனமோ நடைபெற அனுமதிக்காது. குண்டர்களையும் கறுப்பு நூற்றுவர் கிளர்ச்சிக்காரர்களையும் கைது செய்து அருகாமையில் இருக்கும் இராணுவப் பிரிவிலுள்ள சோவியத்துக் கமிசாரிடம் ஒப்படைக்கும்படி நகர மக்கள் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள். பெத்ரொகிராது நகரத் தெருக்களில் குழப்பமோ, கொள்ளையோ, சண்டையோ துவக்க முதலாவது முயற்சி எடுக்கப்படும் போதே சதிகாரர்கள் புவிப் பரப்பிலிருந்தே ஒழிக்கப்பட்டு விடுவார்கள்!

நகர வாசிகளே! நீங்கள் முழு அமைதியோடும் சுயகட்டுப்பாட்டுடனும் இருக்க வேண்டுமென அறைகூவுகின்றோம். ஒழுங்கின் பராமரிப்பும் புரட்சி இலட்சியமும் வலுமிக்க கரங்களின் பாதுகாப்பில் உள்ளன.

புரட்சி இராணுவக் கமிட்டியின் கமிசார்கள் இருக்கும் இராணுவப் பிரிவுகள் வருமாறு....

நவம்பர் 3ல் போல்ஷிவிக்குத் தலைவர்களது வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த மற்றொரு கூட்டம், வெளியாருக்கு இடமின்றி கதவு மூடப்பட்டு நடைபெற்றது. ஸால்கிந்திடமிருந்து* இது பற்றி தெரிந்து கொண்ட நான் வெளியே நடைவழியில் காத்திருந்தேன். வெளியே வந்த வலதார்ஸ்கி உள்ளே என்ன நடைபெறுகிறதென்று என்னிடம் கூறினார்.

லெனின் பேசிக் கொண்டிருந்தார்: ''நவம்பர் 6ஆம் நாள் மட்டுமீறிக் காலத்துக்கு முன்னதான நாளாகும். எழுச்சிக்கு நமக்கு அனைத்து ருஷ்ய அடிப்படை இருப்பது அவசியமாகும். நவம்பர் 6ல் காங்கிரசின் எல்லாப் பிரதிநிதிகளும் வந்து சேர்ந்திருக்க மாட்டார்கள்... ஆனால் மறுபுறத்தில், நவம்பர் 8ஆம் நாள் மட்டுமீறிக் காலங் கடந்ததாகிவிடும். அதற்குள் காங்கிரஸ் ஒழுங்கமைப்பு பெற்றுக் கொண்டுவிடும், ஒழுங்கமைப்பு பெற்ற ஒரு பெருங் கூட்டத்தார் சீக்கிரமாகவும் தீர்மானகரமாகவும் செயல்படுவது கடினம். காங்கிரஸ் ஆரம்பமாகும் நவம்பர் 7ஆம் நாளன்றே நாம் செயலை

* **இ. அ. ஸால்கிந்து** — நவம்பர் எழுச்சியில் முன்னிலைப் பங்கு கொண்டவர், பெத்ரொகிராது போல்ஷிவிக்கு நிறுவனத்தின் உறுப்பினர்.—[பதிப்பாசிரியர்.]

மேற்கொண்டுவிட வேண்டும், அப்போதுதான் நாம் அதனிடம் சொல்லலாம்: 'இதோ இருக்கிறது ஆட்சியதிகாரம்! என்ன செய்யப் போகிறீர்கள்?' ''

ஒட்டிய முகமும் நீண்ட முடிகளும் கொண்ட ஒருவர் மாடியில் ஓர் அறையில் அமர்ந்து வேலை செய்து கொண்டிருந்தார். ஒருகாலத்தில் அவர் ஜாரின் சேனைகளில் அதிகாரியாய் இருந்தவர், பிறகு புரட்சியாளர் ஆகியவர், தண்டனைக் கைதியாய்த் தொலைவிடத்துக்குக் கடத்தப்பட்டவர். அவருடைய பெயர் அவ்சேயின்கோ, எல்லாரும் அவரை அன்தோனவ் என்றழைத்தனர். கணிதவியலாளரும் சதுரங்க ஆட்டக்காரருமான அவர், தலைநகரைக் கைப்பற்றுவதற்காகக் கவனமாய்த் திட்டங்கள் வகுத்துக் கொண்டிருந்தார்.

அரசாங்கமும் அதன் முனையிலிருந்து தயாரிப்புகள் செய்து கொண்டிருந்தது. வெகுவாய் விலகியமைந்த படைத் தொகுதிகளிலிருந்து மிகவும் விசுவாசமான சில படைப் பிரிவுகள் சந்தடியின்றி பெத்ரொகிராதுக்கு வருமாறு உத்தரவிடப்பட்டன. யூன்கெர் பீரங்கிப் படைகள் குளிர்கால அரண்மனையில் நிறுத்தப்பட்டன. ஜூலை நாட்களுக்குப் பிறகு முதன் முதலாய்த் தெருக்களில் கசாக்குப் படைக் குழுவினர் தோன்றி சுற்றிவரத் தொடங்கினர். எந்த விதமான கீழ்ப்படியாமையும் ''முழு வலிவோடு'' நசுக்கப்படுமென அச்சுறுத்தி பல்க்கோவ்னிக்கவ் ஆணைக்கு மேல் ஆணை பிறப்பித்தார். பொதுக் கல்வி அமைச்சர் கீஷ்கின்—அமைச்சரவை உறுப்பினர்கள் அனைவரிலும் மிகவும் வெறுப்புக்குரியவராய் இருந்தவர்—பெத்ரொகிராதில் ஒழுங்கைப் பராமரிப்பதற்கான தனிக் கமிசாராய் நியமிக்கப்பட்டார். தம்மைப் போல் அதே அளவுக்கு மக்களது வெறுப்புக்குப் பாத்திரமாயிருந்த ருத்தென்பேர்கையும் பல்ச்சின்ஸ்கியையும் இவர் தமது துணைவர்களாய் அமர்த்திக் கொண்டார். பெத்ரொகிராதும் கிரன்ஷ்தாத்தும் பின்லாந்தும் முற்றுகை நிலைமைக்கு உட்பட்டனவாய் அறிவிக்கப்பட்டு இராணுவச் சட்டம் பிறப்பிக்கப்பட்டது. முதலாளித்துவ ஏடான நோவயெ விரேம்யா (புதுக் காலம்) இது குறித்துக் கிண்டலாய் எழுதிற்று:

முற்றுகை நிலைமை எதற்காக? அரசாங்கம் ஆட்சியதிகாரம் செலுத்த சக்தியற்றதாகிவிட்டது. அறநிலை அதிகாரம் அதனிடம் இருக்கவில்லை. வன்முறையைக் கையாளுவதற்கு வேண்டிய பொறியமைவு அதனிடம் இல்லை.... மிகவும் சாதகமான நிலைமைகளிலுங்கூட அது தன்னுடன் பேச உடன்படுகிறவருடன் பேச்சுவார்த்தை நடத்துவதற்கு மேல் ஒன்றும் செய்வதற்கில்லை. அதன் அதிகாரம் அவ்வளவுதான்....

நவம்பர் 5 திங்கட்கிழமை காலை நான் ருஷ்யக் குடியரசு அவையில் என்ன நடைபெறுகிறது, பார்க்கலாமென்று மரீயின்ஸ்கி மாளிகையினுள் நுழைந்தேன். தெரேஷ்ச்சென்கோவின் அயல்துறைக் கொள்கை குறித்து அனல் பறக்கும் வாக்குவாதம் நடைபெற்றுக் கொண்டிருந்தது. பூர்த்ஸெவ்-வெர்ஹோவ்ஸ்கி விவகாரத்தின் எதிரொலிகள் எழுந்தன. தூதுத் துறையாளர்கள் யாவரும் வந்தமர்ந்திருந்தார்கள், இத்தாலியத் தூதுவர் ஒருவர் மட்டும்தான் இல்லை, கார்சோ விபத்தால் அவர் அதிர்ந்து போய்விட்டதாய்ப் பேசிக் கொண்டார்கள்....

நான் உள்ளே நுழைந்த போது லண்டன் டைம்ஸ் ஏட்டிலிருந்து இடதுசாரி சோஷலிஸ்டுப் புரட்சியாளரான கரேலின் அதன் தலையங்கத்தைப் பலக்கப் படித்துக் காட்டிக் கொண்டிருந்தார். ''போல்ஷிவிசத்துக்கு மருந்து துப்பாக்கிக் குண்டுகள்தான்!'' என்றது அந்தத் தலையங்கம். காடேட்டுகளின் பக்கம் திரும்பி அவர் கூச்சலிட்டார்: ''**நீங்கள்** நினைப்பதும் அதுவேதான்!''

''ஆமாம்! ஆமாம்!'' என்று வலதுசாரியிலிருந்து குரல்கள் எழுந்தன.

''ஆமாம், நீங்கள் அப்படித்தான் நினைக்கிறீர்களெனத் தெரியும் எனக்கு'' என்று காட்டமாய்ப் பதிலளித்தார் கரேலின். ''ஆனால் இந்தக் காரியத்தைச் செய்து பார்க்கும் துணிவுதான் உங்களிடம் இல்லை!''

பிறகு ஸ்கோபெலெவ் சொகுசான மென்னிறத் தாடியோடும் பொன்னிறச் சுருள் முடிகளோடும் பார்ப்பதற்குக் கவர்ச்சி நடிகரைப் போல் தோன்ற, மன்னிப்பு கேட்பது போல் ஒலித்த குரலில் சோவியத்தினுடைய **நக்காஸை**

ஆதரித்துப் பேசினர். அடுத்து தெரேஷ்ச்சென்கொ பேசி னர், இடதுசாரியினர் ''ராஜிநாமா செய்யுங்கள்! ராஜிநாமா செய்யுங்கள்!'' என்று குரலெழுப்பி அவரைத் தாக்கினர். பாரிஸ் மாநாட்டில் அரசாங்கத்தின் பிரதிநிதிகளும் இத்ஸே-யி-கவின் பிரதிநிதிகளும் ஒத்த நோக்கு நிலை கொண்டிருக்க வேண்டுமென—அதாவது தமது நோக்கு நிலையைக் கொண் டிருக்க வேண்டுமென அவர் வற்புறுத்தினர். சேனையில் கட்டுப்பாட்டை மீட்டமைக்க வேண்டியது குறித்தும், வெற்றி கிட்டும் வரை யுத்தம் நடைபெற வேண்டியது குறித் தும் சில வார்த்தைகள்.... பேரிரைச்சலுக்கும் கொந்தளிப் பான இடதுசாரியின் பலத்த எதிர்ப்புக்குமிடையே குடியரசு அவை அதன் அன்றைய நிகழ்ச்சி நிரலின் விவகாரங்களுக்குச் சென்றது.

போல்ஷிவிக்குகளுக்கு உரித்தான இருக்கைகள் யாவும் குடியரசு அவை ஆரம்பமான நாள் முதலாய்க் காலியாகவே இருந்து வந்தன—அந்த ஆரம்ப நாளன்று வெளியேறிய போல்ஷிவிக்குகள் இங்கிருந்து ஜீவனையும் தம்முடன் எடுத்துச் சென்றுவிட்டார்கள். சொற்போரும் பூசலும் எவ்வளவு தான் கடுமையாய் இருப்பினும், உயிரின் கதகதப்பு இல்லாத இந்த உயர் மண்டபத்துள் எதார்த்த வெளியுலகின் உண் மைக் குரல் எதுவும் ஊடுருவ முடியாதெனத் தோன்றியது எனக்கு. யுத்தமா சமாதானமா என்ற பாறையில்தான், முன்பு மில்யுக்கோவ் அமைச்சரவை எதில் மோதிக் கவிழ்ந்ததோ அதே பாறையில்தான், இடைக்கால அரசாங்கமும் மோதிக் கவிழ்கிறது என்று நினைத்தவாறு நான் படிக்கட்டில் இறங்கிச் சென்றேன்.... மேல் கோட்டை என் மீது மாட்டிவிட்ட வாயி லாளர் தமக்குத் தாமே கூறிக் கொண்டார்: ''பரிதாபத்துக் குரிய ருஷ்யா! என்ன ஆகுமோ தெரியவில்லை. மென்ஷிவிக்கு களாம், போல்ஷிவிக்குகளாம், துருதோவிக்குகளாம்.... இந்த உக்ரைன், இந்த பின்லாந்து.... ஜெர்மன் ஏகாதிபத்திய வாதிகள், ஆங்கில ஏகாதிபத்தியவாதிகள்.... நாற் பத்தைந்து வயதாகிறது எனக்கு, இவ்விடத்தில் நான் கேட்க நேர்ந்திருக்கும் இவ்வளவு ஏராளமான சொற்களை எனது இந்த வாழ்நாள் அனைத்திலும் கேட்டிருக்க மாட்டேன்....''

வெளியே நடையில் நான் பேராசிரியர் ஷாத்ஸ்கியைச்

சந்தித்தேன். மூஞ்சூறு முகங் கொண்ட மனிதர் மிடுக்காய் நீள் கோட்டு போட்டிருந்தார், காடேட்டுக் கட்சியின் தலைமை வட்டாரத்தில் செல்வாக்கு மிக்கவராய் இருந்தார். போல்ஷிவிக்குகள் ஆர்ப்பாட்டம் நடத்தப் போவதாய்ப் பேச்சு அடிபடுகிறதே, நீங்கள் என்ன நினைக்கிறீர்கள் என்று அவரைக் கேட்டேன். தோள்களை உலுக்கிக் கொண்டு ஏளன மாய்ச் சிரித்தார்.

''ஆட்டு மந்தை, அசட்டுப் பாளையம்'' என்றார். ''துணிய மாட்டார்கள், அப்படித் துணிந்தார்களானால், சிதறியடிக் கப்படுவார்கள். அவர்கள் ஆர்ப்பாட்டம் நடத்தினால், எங்களுடைய கருத்துபடி அது நல்லதுதான். எப்படியெனில், அவர்கள் தம்மைத் தாமே நாசமாக்கிக் கொள்வார்கள், அரசியல் நிர்ணயச் சபையில் அவர்களுக்குப் பலமில்லாமற் போகும்....

''ஆனால், எனது மதிப்புக்குரிய நண்பரே, அரசியல் நிர் ணயச் சபையில் சமர்ப்பிக்க நான் திட்டமிடும் அரசாங்க அமைப்பைச் சொல்கிறேன், கேளுங்கள். அரசியலமைப்புத் திட்டத்தை வகுப்பதற்காக இடைக்கால அரசாங்கமும் குடி யரசு அவையும் சேர்ந்து நியமித்திருக்கும் ஆணைக் குழுவின் தலைவன் நான்.... அமெரிக்க ஐக்கிய நாட்டில் நீங்கள் வைத் திருக்கிறீர்களே, அதே போல் இரு சபைகளைக் கொண்ட சட்ட மன்றத்தை நாங்கள் அமைத்துக் கொள்வோம். கீழ்ச் சபை பிரதேசப் பிரதிநிதிகளைக் கொண்டதாய் இருக்கும்; மேல் சபையில் உத்தியோகத் தொழில்கள், ஸேம்ஸ்துவோக் கள், கூட்டுறவுக் கழகங்கள், தொழிற் சங்கங்கள் முதலான வற்றின் பிரதிநிதிகள் இருப்பார்கள்....''

வெளியே தெருவில் ஈரமான குளிர் காற்று மேற்கிலிருந்து வீசிற்று, காலுக்கடியில் சகதி ஜில்லிட்டு எனது மிதியடிக்குள் ஊடுருவிற்று. மர்ஸ்காயாவை உயர்த்தி ஆட்டிக் கொண்டு யூன்கெர் படைப்பிரிவுகள் இரண்டு என்னைக் கடந்து சென் றன. நீள் கோட்டுகள் அணிந்து விறைப்பாய் நடைபோட்டு, ஜார் காலத்திய பழைய படையாள் பாட்டைப் பாடிச் சென் றனர்.... முச்சந்தியை அடைந்ததும் நான் நகரக் காவற் படையினர் குதிரைகளில் செல்லக் கண்டேன். அதோடு அவர்கள் ஒவ்வொருவரிடத்தும் பளபளப்பான புதிய

தோலுறையில் ரிவால்வர் இருந்தது. சிறு திரளாய்ச் சில பேர் இவர்களை உற்றுப் பார்த்தவாறு வாய் பேசாமல் நின்றிருந் தார்கள். சில்லறைக் காசாய்ச் செயல்பட்டுவந்த தபால் தலை களில் ஒன்றைக் கொடுத்து, நேவ்ஸ்கி சாலையின் முனையில் நான், ''போல்ஷிவிக்குகளால் ஆட்சியதிகாரத்தை இழக்கா மல் வைத்திருக்க முடியுமா?'' என்ற லெனின் பிரசுரத்தை வாங்கினேன். எப்போதும் போல் டிராம் வண்டிகள் ஊர்ந்து கொண்டிருந்தன, தியோடார் பி. ஷான்ட்ஸ்* பொறுமைப் படும் விதத்தில் நகரவாசிகளும் படையாட்களும் அவற்றின் வெளிப்புறத்தில் தொத்திக் கொண்டிருந்தார்கள்.... சேனையை விட்டுத் துறந்தோடி வந்தவர்கள் படையாள் உடுப்புகளில் நடைபாதையில் வரிசையாய் நின்று சிகரெட் டும் சூரியகாந்தி விதையும் விற்றார்கள்....

நேவ்ஸ்கி சாலையில் மங்கலான அந்தி ஒளியில் மாலைச் செய்தியேடுகள் வாங்குவதற்காகக் கூட்டத்தினர் அடித்து மோதிக் கொண்டார்கள். தட்டைச் சுவர் இருந்த இடமெங் கும் ஒட்டப்பட்டிருந்த எண்ணிலடங்கா அறைகூவல்களுக் கும் பிரகடனங்களுக்கும்[6] முன்னால் கும்பல் கும்பலாய் நின்று பலரும் அவற்றைப் படிக்க முயன்றார்கள். இத்ஸே-யி-கவும் விவசாயிகளது சோவியத்துகளும் ''மிதவாத'' சோஷ லிஸ்டுக் கட்சிகளும் சேனைக் கமிட்டிகளும் இவற்றை வெளி யிட்டிருந்தன. இவை அச்சுறுத்தி மிரட்டின, சாபமிட்டன, வெளியே வராமல் வீட்டிலே இருங்களென்றும் அரசாங்கத் துக்கு ஆதரவளியுங்களென்றும் தொழிலாளர்களையும் படை யாட்களையும் வேண்டிக் கொண்டன....

கவச மோட்டார் ஒன்று சங்கொலி எழுப்பி அலறியவாறு மேலும் கீழுமாய் மெதுவாய்ப் போய் வந்தது. தெருமுனை ஒவ்வொன்றிலும், காலி இடம் ஒவ்வொன்றிலும் கும்பல்கள் கூடியிருந்தன. படையாட்களும் மாணவர்களுமாய் நெரித்துக் கொண்டு நின்று வாதாடினர். இருட்டாகி வந்தது, ஒன்றுக்கொன்று தொலைவில் அமைந்த தெரு விளக்குகள் அழுது விடிந்தன, முடிவின்றி சாரை சாரையாய் மக்கள்

* தியோடார் பி. ஷான்ட்ஸ்—அந்தக் காலத்தில் பெயர் பெற்றிருந்த சர்க்கஸ் கம்பங் கூத்து வித்தகர்.—[பதிப் பாசிரியர்.]

சென்று கொண்டிருந்தார்கள்.... எப்போதும் கலவரத்துக்கு முன்பு பெத்ரொகிராதில் இப்படித்தான் இருக்கும்....

நகரம் கலக்கமுற்றிருந்தது, திடீர் ஒலி கேட்கும் தோறும் திடுக்குற்றுக் கொண்டிருந்தது. ஆனால் இது வரை போல்ஷிவிக்குகளிடமிருந்து செயலின் அறிகுறி எதையும் காணோம்; படையாட்கள் கொட்டடிகளிலும் தொழிலாளர் கள் ஆலைகளிலும்தான் இருந்து வந்தனர்.... கஸான் தேவா லயத்துக்கு அருகே ஒரு திரைப்படக் காட்சிக்கு நாங்கள் போயிருந்தோம்—இத்தாலியப் படம், இரத்தமும் ஆவேச மும் சதிகளும் மிகுந்திருந்தது. முன்வரிசையில் சில படை யாட்களும் மாலுமிகளும் அமர்ந்திருந்தனர்; இத்தனை ஆவே சமும் பரபரப்பும் கொலைத் தாண்டவமும் எதற்காக என்பது புரியாமல், சிறு பிள்ளைகளைப் போல் வியப்புற்று வைத்த கண் வாங்காமல் திரையைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்....

அங்கிருந்து அவசரமாய் நான் ஸ்மோல்னிக்கு வந்து சேர்ந்தேன். உச்சி மாடியில் 10ஆம் எண் அறையில் புரட்சி இராணுவக் கமிட்டியின் அமர்வு இடை நேரமின்றி தொடர்ச்சியாய் நடைபெற்று வந்தது, பதினெட்டு வயதான வெண்முடி இளைஞரான லஸிமீரின் தலைமை வகித்தார். இவர் என்னைக் கடந்து செல்கையில் என் எதிரே நின்றார், சற்றுக் கூச்சத்துடன் என்னுடன் கைகுலுக்கினார்.

''பெத்ரொபாவ்லொவ்ஸ்கயா கோட்டை எங்கள் பக்கத்துக்கு வந்துவிட்டது'' என்று மகிழ்ச்சிப் பூரிப்புற்று அறி வித்தார். ''பெத்ரொகிராதுக்கு வந்து சேரும்படி அரசாங் கத்தால் கட்டளையிடப்பட்ட படையணியிடமிருந்து ஒரு நிமிடத்துக்கு முன்பு எங்களுக்குத் தகவல் கிடைத்தது. படையாட்களுக்கு சந்தேகம் ஏற்படவே ரயில் வண்டியை அவர்கள் காத்சினாவில் நிறுத்திக் கொண்டு, எங்களுக்கு ஒரு தூதுக் குழுவை அனுப்பினார்கள். 'என்ன சேதி?' என்று எங்களைக் கேட்டார்கள். 'நீங்கள் எங்களை என்ன செய்யச் சொல்கிறீர்கள்? ''அனைத்து ஆட்சியதிகாரமும் சோவியத்து களுக்கே'' என்று கோரி நாங்கள் தீர்மானம் நிறை வேற்றியிருக்கிறோம்'.... புரட்சி இராணுவக் கமிட்டி அவர் களுக்குப் பதில் அனுப்பியுள்ளது: 'சோதரர்களே! புரட்சி யின் பெயரில் உங்களை வாழ்த்துகின்றோம்! மேற்கொண்டு

உங்களுக்கு ஆணை வரும் வரை அங்கேயே இருங்கள்!''

தொலைபேசி இணைப்புகள் யாவும் துண்டிக்கப்பட்டுவிட்டதாய்க் கூறினார் அவர். ஆனால் இராணுவத் தொலைபேசிப் பொறியமைவு மூலம் ஆலைகளோடும் கொட்டடிகளோடும் தகவல் தொடர்பு நிறுவிக் கொண்டுவிட்டோம் என்றார்....

தகவல்கள் கொண்டு வருவோரும் கமிசார்களும் ஓயாமல் வந்து சென்று கொண்டிருந்தார்கள். நகரின் எந்தத் தொலைப் பகுதிக்கும் தகவல் எடுத்துச் செல்லத் தயாராய்ப் பன்னிரண்டு தொண்டர்கள் கதவுக்கு வெளியே காத்திருந்தார்கள். அவர்களில் ஒருவர் ஜிப்சி முகமுடையவர், லெப்டினண்டு உடுப்பு உடுத்தியிருந்தார்; பிரெஞ்சு மொழியில் அவர் என்னிடம் சொன்னார்: ''பொத்தானை அழுத்தினால் போதும், உடனே செயலில் இறங்க யாவும் தயார் நிலையில் இருக்கின்றன....''

பலரும் சென்றார்கள்: பத்வோய்ஸ்கி—தாடி வைத்திருந்த ஒல்லியான குடிமைத்துறையாளர், எழுச்சியின் ஆதாரப் போர்த் திட்டத்தை உருவாக்கியது இவரது மூளைதான்; அன்தோனவ்—மழிக்கப்படாமல் ரோமக்கட்டை அடர்ந்த முகத்தோடும் அழுக்கேறிய காலரோடும் தூக்கமில்லாமல் கலங்கிப் போய்த் தோன்றினார்; குரிலேன்கொ—கட்டைகுட்டையானவர், அகன்ற முகங் கொண்ட படையாள், எந்நேரமும் சிரித்துக் கொண்டிருப்பவர், அங்க சேஷ்டைகள் செய்து படபடவெனப் பேசுகிறவர்; திபேன்கோ—ஆசானுபாகு உருவமும் தாடியும் அமைதி தவழும் முகமும் கொண்ட மாலுமி. இவர்கள்தான் அன்றைய நிகழ்ச்சிகளுக்கும், இனி வரவிருந்த நிகழ்ச்சிகளுக்குமான முக்கிய ஆட்கள்.

கீழ்த் தளத்தில் ஆலைக் கமிட்டிகளது அலுவலகத்தில் செராத்தவ் உட்கார்ந்து கொண்டு, ஆயுதங்கள் அளிக்கும்படி அரசாங்க ஆயுதசாலைக்கு உத்தரவிட்ட ஆணைகளில் கையொப்பமிட்டுக் கொண்டிருந்தார்—ஒவ்வோர் ஆலைக்கும் நூற்றைம்பது துப்பாக்கிகள்.... நீள்வரிசையில் பிரதிநிதிகள்—நாற்பது பேர்—காத்துக் கொண்டு நின்றார்கள்....

கூடத்தில், கீழ் மட்டத்து போல்ஷிவிக்குத் தலைவர்கள் சிலர் வரக் கண்டேன். இவர்களில் ஒருவர் என்னிடம் ரிவால்வரைக் காட்டி ''ஆரம்பமாகிவிட்டது!'' என்றார், அவரு

டைய முகம் வெளிறிட்டிருந்தது. ''நாங்கள் செயலில் இறங்கினாலும் இறங்காவிட்டாலும், எதிர்த் தரப்பானது தான் செயலில் இறங்கி எங்களை அழித்தாக வேண்டும், இல்லையேல் தான் அழிந்தாக வேண்டும் என்பதை உணருகிறது...''

இராப் பகலாய் நடந்து கொண்டிருந்தது பெத்ரொகிராது சோவியத்தின் கூட்டம். திரோத்ஸ்கியின் பேச்சு முடிவுற்றுக் கொண்டிருந்த நேரத்தில் மாமண்டபத்துள் நுழைந்தேன் நான்.

''நாம் ஆர்ப்பாட்டம் நடத்தப் போகிறோமா என்று கேட்கிறார்கள்'' என்றார் அவர். ''அந்தக் கேள்விக்கு நான் தெளிவான பதிலளிக்க முடியும். ஆட்சியதிகாரம் முடிவாய் சோவியத்துகளின் கைக்கு மாறியாக வேண்டிய தருணம் வந்துவிட்டதென்று பெத்ரொகிராது சோவியத்து கருதுகிறது. ஆட்சியதிகாரத்தின் இந்த மாற்றத்தை அனைத்து ருஷ்யக் காங்கிரஸ் செய்து முடிக்கப் போகிறது.... அனைத்து ருஷ்யக் காங்கிரசின் பாதையில் குறுக்கிட்டுத் தடுக்க விரும்புகிறார்களே, அவர்களையே பொறுத்ததாய் இருக்கும் ஆயுதமேந்திய ஆர்ப்பாட்டம் அவசியமா என்பது....

''இடைக்கால அமைச்சரவையைச் சேர்ந்தோரிடம் ஒப்படைக்கப்பட்ட இந்த அரசாங்கம் பரிதாபகரமானது, சக்தியற்றது; மெய்யாகவே மக்களுடையதாகிய ஆட்சியதிகாரத்துக்கு இடமளித்துவிட்டு மறைந்தொழிவதற்காக, வரலாற்றினால் துடைத் தெரியப்படுவதற்காக நாட்களை எண்ணிக் கொண்டு காத்திருக்கும் அரசாங்கம் என்பதை நாம் நன்கு அறிவோம். ஆயினும் இன்றுங்கூட, இத்தருணத்திலுங்கூட, நாம் மோதலைத் தவிர்த்துக் கொள்ள முயன்று வருகிறோம். மக்களது ஒழுங்கமைந்த சுதந்திரத்தை அடிப்படையாய்க் கொண்ட ஆட்சியதிகாரத்தை சோவியத்துகளின் அனைத்து ருஷ்யக் காங்கிரசானது... தானே மேற்கொள்ளுமென நாங்கள் எதிர்பார்க்கின்றோம். ஆனால் தற்போதுள்ள அரசாங்கம் அதற்கு எஞ்சியிருக்கும் இந்தச் சொற்ப நேரத்தை—இந்த 24, அல்லது 48, அல்லது 72 மணி நேரத்தை—உபயோகித்து எங்கள் மீது தாக்குதல் தொடுக்க விரும்புமாயின், நாங்கள் எதிர்த் தாக்குதல்கள் தொடுத்துப் பதிலளிப்போம், ஒவ்வோர் அடிக்கும் எதிரடி கொடுப்போம், இரும்புக்கு உருக்கைப் பதிலாய் அளிப்போம்!''

புரட்சி இராணுவக் கமிட்டிக்குத் தமது பிரதிநிதிகளை அனுப்ப இடதுசாரி சோஷலிஸ்டுப் புரட்சியாளர்கள் உடன் பட்டு விட்டார்களென்று வாழ்த்தொலி முழக்கத்துக் கிடையே அவர் அறிவித்தார்....

விடியற்காலை மூன்று மணிக்கு நான் ஸ்மோல்னியிலிருந்து வெளியே வந்த போது, வேகமாய்ச் சுடும் இரு இயந்திரத் துப்பாக்கிகள் வாயிற் கதவின் வலப்புறம் ஒன்றும் இடப் புறம் ஒன்றுமாய் நிறுத்தப்பட்டிருக்கக் கண்டேன். வலு வான படைக் குழுக்கள் வெளிவாயிலிலும் தெருமுனைகளி லும் காவல் புரிந்தன. பில் ஷாத்தவ்* படிகளில் ஏறி ஓடி வந்தார். ''நாங்கள் செயல் தொடங்கிவிட்டோம்!'' என்று பலக்கக் கூறினார் அவர். கேரென்ஸ்கி யூன்கெர்களை அனுப்பி எங்கள் சல்தாத், ரபோச்சி பூத் செய்தியேடுகளை இழுத்து மூடிப் பூட்டச் சொன்னார். ஆனால் எங்கள் படையினர் சென்று அரசாங்க முத்திரைகளை உடைத்துக் கதவுகளைத் திறந்தன. இப்போது முதலாளித்துவச் செய்தியேடுகளது அலுவலகங் களுக்கு நாங்கள் படைக் குழுக்களை அனுப்பி அவற்றைக் கைப்பற்றப் போகிறோம்!'' வெற்றிக் களிப்புடன் அவர் என் தோளில் தட்டிவிட்டு உள்ளே ஓடினார்....

நவம்பர் 6ஆம் நாள் காலையில் நான் தணிக்கையாளரிடம் வேலையாய்ச் சென்றிருந்தேன், அவருடைய அலுவலகம் அயல்துறை அமைச்சகத்துள் இருந்தது. கதிகலக்கங் கொண்ட வேண்டுகோள்கள் எங்கும் எல்லாச் சுவர்களிலும் ஒட்டப்பட்டிருக்கக் கண்டேன். மக்களை அவை ''அமைதி குலையாது'' இருக்கும்படி வேண்டின. பல்க்கோவ்னிக்கவ் ஆணைக்கு மேல் ஆணை பிறப்பித்துக் கொண்டிருந்தார்:

---

* அமெரிக்கத் தொழிலாளர் இயக்கத்துக்கு நன்கு அறி முகமானவர்.

விளதீமிர் சிர்கேயிவிச் ஷாத்தவ்—அமெரிக்காவில் உலக ஆலைத் தொழிலாளர் (I.W.W.) நிறுவனத்தின் அமைப்பாளர் களில் ஒருவராய்ச் செயலாற்றியவர். 1917 ஜூனில் அமெரிக்காவிலிருந்து திரும்பி வந்தார். பெத்ரொகிராதின் புரட்சி இராணுவக் கமிட்டியின் உறுப்பினரும், ஆலைக் கமிட் டிகளது மத்திய அவையின் தலைமைக் குழு உறுப்பினருமா னார். பிற்பாடு கம்யூனிஸ்டுக் கட்சியில் சேர்ந்து கொண்டார். —[பதிப்பாசிரியர்.]

இராணுவ மாவட்டத் தலைமை அலுவலகத்திலிருந்து மேற்கொண்டு உத்தரவுகள் வரும் வரை எல்லா இராணுவப் படைப் பிரிவுகளும் தொகுதிகளும் அவர்களது கொட்டடி களில் இருக்கு வேண்டுமென நான் ஆணையிடுகிறேன்....மேலதி காரிகளது உத்தரவின்றி செயல்படும் இராணுவ அதிகாரி கள் யாவரும் கலகக்காரர்களாய் இராணுவ நீதிமன்றத்தால் தண்டிக்கப்படுவார்கள். பிற நிறுவனங்களது உத்தரவுகளைப் படையாட்கள் எவ்விதத்திலும் ஏற்றுச் செயல்படக் கூடா தெனக் கண்டிப்பான முறையில் நான் ஆணையிடுகிறேன்....

அரசாங்கமானது **நோவயா ரூஸ், ஜீவோயெ ஸ்லோவா, ரபோச்சி பூத்,** சல்தாத் செய்தியேடுகளுக்குத் தடை விதித்து அவற்றை மூடிவிட்டதாகவும், பெத்ரொகிராது சோவியத் தின் தலைவர்களையும் புரட்சி இராணுவக் கமிட்டியின் உறுப் பினர்களையும் கைது செய்யுமாறு ஆணையிட்டிருப்பதாகவும் காலைச் செய்தியேடுகள் அறிவித்தன....

நான் அரண்மனைச் சதுக்கத்தைத் தாண்டிச் சென்ற போது யூன்கெர் பீரங்கிப் படைத் தொகுதிகள் செவ்வளைவு* வழியே கணகணத்து ஓடி வந்து அரண்மனைக்கு முன்னால் அணி அமைத்து நின்றன. இராணுவத் தலைமை அலுவலர்களது பெரிய சிவப்புக் கட்டடம் என்றுமில்லாதவாறு சந்தடி மிக்கதாய் விளங்கிற்று. அதன் வாயிலுக்கு எதிரே கவச மோட்டார்கள் வரிசையாய் நின்றன. இராணுவ அதிகாரி களை ஏற்றிக் கொண்டு கார்கள் போய்க் கொண்டும் வந்து கொண்டுமிருந்தன.... தணிக்கை அதிகாரி சர்க்கஸ் ஆட்டத் தைப் பார்க்கும் சிறுவனைப் போல் பரபரப்படைந்திருந்தார். கேரென்ஸ்கி ராஜினாமா செய்துவிடுவதென்று குடியரசு அவைக்குப் போயிருப்பதாய்க் கூறினார் அவர். உடனே நான் மரீயின்ஸ்கி அரண்மனைக்கு விரைந்தேன்; கேரென்ஸ்கி முன் னுக்குப் பின் தொடர்பில்லாத, உணர்ச்சி வயப்பட்ட தமது சொற்பொழிவை முடித்துக் கொண்டிருந்த நேரத்தில் அங்கே போய்ச் சேர்ந்தேன். தம்மீது தவறு ஒன்றுமில்லையெனத் தமக்குத் தாமே அவர் கூறிக் கொண்ட நியாயங்களும்,

* இராணுவத் தலைமை அலுவர்களது கட்டடத்தின் வளைவு.—[பதிப்பாசிரியர்.]

அரசியல் எதிரிகள் மீதான நிந்தனைகளும்தான் அவருடைய சொற்பொழிவில் நிறைந்திருந்தன.

''ரபோச்சி பூத் செய்தியேட்டில் உலியானவ்-லெனின் வரிசையாய் எழுதி வெளியிடும் கட்டுரைகளிலிருந்து குணச் சான்ருய் விளங்கும் ஒரு பகுதியை மட்டும் இங்கு எடுத்து ரைக்கிறேன். இந்த உலியானவ்-லெனின் அரசுத் துரோகக் குற்றவாளி, எங்கோ ஒளிந்து கொண்டிருக்கிருர், இவரைத் தேடிப் பிடிப்பதற்காக நாங்கள் முயன்று வருகிருேம்.... இந்த அரசுத் துரோகக் குற்றவாளி ஜூலை 16-18ஆம் நாட் களது நிகழ்ச்சிகளைத் திரும்பவும் நடத்தும்படி பாட்டாளி வர்க்கத்துக்கும் பெத்ரொகிராது நகரக் காவற் படையினருக் கும் அறைகூவல் விடுத்துள்ளார்; ஆயுதமேந்திய எழுச்சி உடனடி அவசியமாகுமென வற்புறுத்துகின்ருர்.... தவிரவும் ஏனைய போல்ஷிவிக்குத் தலைவர்களும் வரிசையாய்ப் பல கூட்டங்களில் உடனே எழுச்சி நடத்துமாறு அறைகூவிப் பேசியுள்ளனர். தற்போது பெத்ரொகிராது சோவியத்தின் தலைவராய் இருக்கும் பிரான்ஷ்டைன்-திரோத்ஸ்கியின் செயல் கள் மிகவும் குறிப்பிடத்தக்கவை....

''ரபோச்சி பூத், சல்தாத் ஏடுகளில் வரிசையாய் மிகப் பல கட்டுரைகளின் சொற்ருெடர்களும் நடையும் முற்றிலும் நோவயா ரூஸ் ஏட்டினுடையவற்றை ஒத்திருப்பதை நான் உங்களுடைய கவனத்துக்குக் கொண்டு வந்தாக வேண்டும்.... நாம் எதிர்த்துச் செயல்பட வேண்டியிருப்பது இந்த, அந்த அரசியல் கட்சியின் இயக்கமல்ல அவ்வளவாய்; மக்களில் ஒரு பகுதியோரது அரசியல் அறியாமையையும் தீய உணர்ச்சி களையும் பயன்படுத்திக் கேடு விளைவிக்கும் முயற்சியை எதிர்த்து, எக்கேடு கெட்டாயினும் ருஷ்யாவில் அழிவுக்கும் கொள்ளைக்குமான ஓர் இயக்கத்தைத் தூண்டிவிடுவதையே நோக்கமாய்க் கொண்டிருக்கும் நிறுவனத்தை எதிர்த்து, நாம் செயல்பட வேண்டியிருக்கிறது. இன்று மக்கள் திரளி னரிடம் இருந்து வரும் மன நிலையில், பெத்ரொகிராதில் எழும் எந்த இயக்கத்தையும் தொடர்ந்து, படுபயங்கரப் படுகொலைதான் எங்கும் தாண்டவமாடி சுதந்திர ருஷ்யா வின் பெயருக்கு என்றென்றுக்குமாய் இழுக்கு உண்டாக்கும்.

''...சமூக-ஜனநாயகவாதிகளது தீவிர இடது சாரியின ருக்கு ருஷ்யாவில் நிலைமை மிகவும் சாதகமாய் இருக்கிற தென்று உலியானவ்-லெனினே ஒத்துக் கொள்கிறார்.'' (இங்கு லெனினது கட்டுரையிலிருந்து கேரென்ஸ்கி பின்வரும் மேற்கோளைப் படித்துக் காட்டினார்):

இதைச் சிந்தித்துப் பாருங்கள்!... ஜெர்மன் தோழர்கள் ஒரேயொரு லீப்க்னெஹ்ட்டை மட்டுமே பெற்றிருக்கிறார் கள், செய்தியேடுகள் இல்லை, கூட்டங்கள் நடத்தச் சுதந்தி ரம் இல்லை, சோவியத்து இல்லை.... சமுதாயத்தின் எல்லா வர்க்கங்களது நம்ப முடியாத கடும் பகைமையால் எதிர்க்கப் படுகிறார்கள்—இருந்த போதிலும் ஜெர்மன் தோழர்கள் செயல்பட முயலுகிறார்கள். ஆனால் நாம் பத்து, இருபது கணக்கில் செய்தியேடுகளைப் பெற்றவர்கள், கூட்டம் நடத்தச் சுதந்திரமுடையவர்கள், சோவியத்துகளில் பெரும் பாலானவற்றை நம் பக்கத்தில் கொண்டவர்கள், அனைத்து உலகிலும் மிகவும் சாதக நிலையிலுள்ள பாட்டாளி வர்க்க சர்வதேசியவாதிகளாகிய நாம் ஜெர்மன் புரட்சியாளர்களுக் கும் எழுச்சி நிறுவனங்களுக்கும் ஆதரவளிக்க மறுக்கலாமா?...

கேரென்ஸ்கி மேலும் தொடர்ந்து பேசினார்.

''இந்த அரசியல் கட்சி தங்கு தடையின்றி சுதந்திரமாய்ச் செயல்படுவதற்கு, இடைக்கால அரசாங்கத்தால் நிர்வகிக் கப்படும் ருஷ்யாவில் இன்று சாலச் சிறந்த நிலைமைகள் இருப் பதை கலகத்துக்கு ஏற்பாடு செய்து வருவோர் இவ்விதம் தாமே ஒத்துக் கொள்கிறார்கள். இந்த இடைக்கால அரசாங் கத்தின் தலைமையில் இருப்பவர், இந்தப் போல்ஷிவிக்குக் கட்சியாரது கருத்துப்படி 'தாகமுறையில் ஆட்சியைக் கைப் பற்றிக் கொண்டவரும் முதலாளித்துவ வர்க்கத்தாருக்குத் தம்மை விற்றுக் கொண்டுவிட்டவருமான அமைச்சர்-அர சதிபர் கேரென்ஸ்கி....'

''...எழுச்சிக்கு ஏற்பாடு செய்யும் இவர்கள் ஜெர்மன் பாட்டாளி வர்க்கத்துக்கு உதவி செய்யவில்லை, ஜெர்மன் ஆளும் வர்க்கங்களுக்குத்தான் உதவி செய்கிறார்கள். வில் ஹெல்மின், அவரது நண்பர்களின் இரும்புப் படைக் கரங்

களுக்குத்தான் இவர்கள் ருஷ்யப் போர் முனையைத் திறந்து விடுகிறார்கள். ...இவர்களது நோக்கங்கள் எப்படியிருந்தால் என்ன? இவர்கள் மனமறிந்து செயல்படுவகிறவர்களாய் இருந்தால் என்ன? இல்லாவிட்டால் என்ன? இடைக்கால அரசாங்கத்துக்கு எல்லாம் ஒன்றுதான். எப்படியும், ருஷ்ய அரசியல் கட்சி ஒன்று புரிந்து வரும் இம்மாதிரியான செயல்கள் ருஷ்யாவுக்குப் புரியப்படும் துரோகச் செயல்களாகுமென முழுப் பொறுப்புணர்ச்சியுடன் இந்த மாமன்ற மேடையிலிருந்து நான் அறிவிக்கின்றேன்!

''...நீதியின் நோக்கு நிலையிலிருந்து நான் இதை அணுகுகிறேன், உடனே விசாரணையை மேற்கொள்ள வேண்டும் என்கிறேன், கைது செய்யப்பட வேண்டியவர்களைக் கைது செய்ய வேண்டும் என்கிறேன்.'' (இடதுசாரியினரிடமிருந்து கூச்சல்கள் எழுகின்றன.) ''நான் சொல்வதைக் கேளுங்கள்!'' என்று பலத்த குரலில் கத்தினார் கேரென்ஸ்கி. ''மனமறிந்தோ மனமறியாமலோ செய்யப்படும் துரோகச்" செயல்களின் காரணமாய் அரசுக்கு அபாயம் ஏற்படும் ஒரு தருணத்தில், ருஷ்யாவின் வாழ்வுக்கும் மாண்புக்கும் சுதந்திரத்துக்கும் வஞ்சகம் புரிவதைக் காட்டிலும், இடைக்கால அரசாங்கமும் ஏனைய பலரிடையே நானும் கொலையுண்டு வீழ்த்தப்படுவதே மேலெனக் கருதுகிறோம்....''

அந்நேரத்தில் கேரென்ஸ்கியிடம் ஒரு காகிதம் தரப்பட்டது.

''எனக்கு இப்போது கிடைக்கப் பெற்றிருக்கும் இந்தப் பத்திரம் படைகளிடையே அவர்கள் வினியோகித்து வரும் பிரகடனமாகும். இதன் உள்ளடக்கம் வருமாறு.'' அவர் படித்துக் காட்டினார்:

'' 'பெத்ரொகிராது தொழிலாளர்கள், படையாட்கள் பிரதிநிதிகளது சோவியத்து ஆபத்துக்கு உள்ளாகியிருக்கிறது. படையணிகள் யாவற்றுக்கும் உடனே போருக்கு ஆயத்தமாகும்படியும், புதிய உத்தரவுகளை எதிர்பார்த்துக் காத்திருக்கும்படியும் நாங்கள் ஆணையிடுகிறோம். இந்த ஆணையை நிறைவேற்றாமல் இருப்பதும், நிறைவேற்றுவதில் தாமதிப்பதும் புரட்சிக்குப் புரியப்படும் துரோகச் செயலாய்க் கருதப்படும். புரட்சி இராணுவக் கமிட்டி. தலைவரின் இடத்தில்: பத்வோய்ஸ்கி. செயலாளர்: அன்தோனவ்.'

''உண்மையில் இது தற்போதுள்ள ஆட்சியமைப்புக்கு எதிராய்க் கலகக்காரக் கும்பலைக் கிளர்த்தி விடுவதற்கும், அரசியல் நிர்ணயச் சபையை முறியடிப்பதற்கும், வில்ஹேல் மின் இரும்புக் கரப் படைகளுக்குப் போர்முனையைத் திறந்து விடுவதற்குமான முயற்சியே ஆகும்....

''வேண்டுமென்றேதான் நான் 'கலகக்காரக் கும்பல்' என்கிறேன், ஏனெனில் உணர்வு படைத்த ஜனநாயகமும் அதன் இத்ஸே-யி-கவும், சேனை நிறுவனங்கள் யாவும், சுதந் திர ருஷ்யா உயர்த்திப் போற்றுகின்றவை அனைத்தும், மாபெரும் ருஷ்ய ஜனநாயகத்தின் நல்லுணர்வும், மாண்பும், மனச்சான்றும் இந்தக் காரியங்களைக் கண்டிக்கின்றன....

''வேண்டிக் கொள்வதற்காக இங்கு நான் வரவில்லை; நமது புதிய சுதந்திரத்தை இத்தருணத்தில் பாதுகாத்து நிற்கும் இடைக்கால அரசாங்கத்துக்கு, ஒளி மிகுந்த எதிர் காலத்தைப் பெற்ற புதிய ருஷ்ய அரசுக்கு, உண்மையை நேர் நின்று நோக்கும் துணிவில்லாதோரைத் தவிர்த்து ஏனை யோரது ஒருமனதான ஆதரவு கிடைக்கும் என்ற எனது உறுதியான நம்பிக்கையை அறிவிக்கவே இங்கு நான் வந்துள் ளேன்....

''...அரசின் குடிகள் எல்லோருக்கும் தமது அரசியல் உரிமைகளை உபயோகித்துக் கொள்வதற்குள்ள சுதந்திரத் துக்கு இடைக்கால அரசாங்கம் ஒருபோதும் பங்கம் விளை வித்ததில்லை.... ஆனால் இப்போது இடைக்கால அரசாங் கம்... கூறுகிறது: ருஷ்ய நாட்டோரில் சில பிரிவினர், சில கோஷ்டிகளும் கட்சிகளும், இத்தருணத்தில் ருஷ்ய மக்களு டைய சுதந்திர சித்தத்துக்கு எதிராய்க் கிளம்பவும், போர் முனையை ஜெர்மனிக்குத் திறந்து விடுவோமென அச்சுறுத்த வும் துணிந்திருக்கிறார்களே, இவர்களைக் கண்டிப்பான முறை யில் தொலைத்துக் கட்டியே ஆக வேண்டும்!...

''உறுதி வாய்ந்த அரசு அதிகாரம் ஒன்று தம் எதிரே இருக்கிறது என்பதைப் பெத்ரொகிராதுவாசிகள் புரிந்து கொள்ள வேண்டும். ஒருவேளை இந்தக் கடைசித் தருணத்தில் நல்லுணர்வும், மனச்சான்றும், கண்யமும், இன்னும் இவை மறையாதிருக்கும் நெஞ்சங்களில் வெற்றிவாகை சூடக் கூடும்....''

அவர் பேசிய முழு நேரமும் காது செவிடுபடும்படி மண்டபத்துள் கூச்சல்கள் எழுந்து கொண்டிருந்தன. முகம் வெளிறிட்டு, விறுவிறுத்து வியர்த்துப் போய் அமைச்சர்-அரசதிபர் கீழே இறங்கி, தம்மைச் சேர்ந்த இராணுவ அதிகாரிகள் புடை சூழ்ந்து வர வேகமாய் வெளியே போய்ச் சேர்ந்தார். உடனே இடதுசாரியிலிருந்தும் மையவாதப் பகுதியிலிருந்தும் ஒருவர்பின் ஒருவராய்ப் பலரும் எழுந்து ஆத்திரம் பொங்கும் குரலில் வலதுசாரியைத் தாக்கிக் கர்ஜனை புரிந்தனர். சோஷலிஸ்டுப் புரட்சியாளர் கட்சியினருங்கூட கோட்ஸ் மூலம் அறிவித்தனர்:

''போல்ஷிவிக்குகளுடைய கொள்கை வாய்வீச்சுத் தன்மையதாய், குற்றகரமானதாய் இருக்கிறது; மக்கள் திரளினரின் அதிருப்தியை அவர்கள் தகாத வழியில் பயன்படுத்திக் கொள்கிருர்கள். ஆனுல் பொது மக்களுடைய மிகப் பல கோரிக்கைகள் இது காறும் தீர்க்கப்படாமலே இருந்து வருகின்றன.... சமாதானம், நிலம், சேனையை ஜனநாயகத் தன்மையதாக்குதல் ஆகிய இந்தப் பிரச்சினைகளுக்குத் தீர்வு காண்பதற்கு அரசாங்கம் உறுதியாகவும் பிழையற்றவாறும் முயன்று வருகிறதென்பது குறித்து எந்தப் படையாளுக்கும் விவசாயிக்கும் தொழிலாளிக்கும் இம்மியளவும் ஐயம் எழ இடமில்லாத வடிவில் இந்தப் பிரச்சினைகள் எடுத்துரைக்கப்பட்டாக வேண்டும்....

''மென்ஷிவிக்குகளாகிய நாங்கள் எவ்விதத்திலும் அமைச்சரவை நெருக்கடியை உண்டாக்க விரும்பவில்லை; இறுதிச் சொட்டு இரத்தம் இருக்கும் வரை, எங்களது சக்தி அனைத்தையும் கொண்டு நாங்கள் இடைக்கால அரசாங்கத்தைப் பாதுகாக்கத் தயாராயிருக்கிருேம்—ஆனுல் இந்த அவசர அவசியப் பிரச்சினைகள் யாவும் குறித்து, மக்கள் பொறுமையை அறவே இழந்த நிலையில் இத்தனை ஆவலோடு எதிர்பார்த்துக் காத்திருக்கும் அந்தத் தெளிவான, திட்டவட்டமான விதத்தில் இடைக்கால அரசாங்கம் பேசும் போது மட்டும் தான் எங்களால் இதைச் செய்ய முடியும்....''

பிறகு மார்த்தவ் ஆத்திரமாய்ச் சீறினுர்:

''பாட்டாளி வர்க்கத்தையும் சேனையையும் சேர்ந்த முக்கிய பகுதியோர்—இவர்கள் தவருன திசையில் வழிநடத்திச்

செல்லப்பட்ட போதிலும் — இவர்கள் ஈடுபட்டிருக்கும் இயக்கம் குறித்துப் பேசுகையில் அமைச்சர்-அரசதிபர் 'கல கக்காரக் கும்பல்' என்பதாய்க் குறிப்பிடும் அளவுக்குச் சென்றுவிட்டார்; அமைச்சர்-அரசதிபரது இந்தப் பேச்சு உள்நாட்டுப் போருக்குத் தூபமிடும் பேச்சாகுமே அன்றி வேறல்ல.''

இடதுசாரியினர் முன்மொழிந்த தீர்மானத்தைக் குடிய ரசு அவை ஆதரித்து வாக்களித்து ஏற்றுக் கொண்டது. உண்மையில் இத்தீர்மானம் அரசாங்கத்தின் மீதான நம்பிக் கையில்லாத் தீர்மானமாகவே சாராம்சத்தில் விளங்கிற்று:

1. கடந்த சில நாட்களாய்த் தயார் செய்யப்பட்டு வரும் ஆயுதமேந்திய ஆர்ப்பாட்டமானது ஆட்சிக் கவிழ்ப்பையே நோக்கமாய்க் கொண்டதாகும்; இது உள்நாட்டுப் போரைத் தூண்டிவிடும் அபாயம் கொண்டதாகும்; இரத்தவெறி கொண்ட படுகொலைகளுக்கும் எதிர்ப்புரட்சிக்கும் கறுப்பு நூற்றுவரைப் போன்ற எதிர்ப்புரட்சி சக்திகள் ஒன்றுதிரட் டப்படுவதற்கும் சாதகமான நிலைமைகளை இது உருவாக்கு கிறது; அரசியல் நிர்ணயச் சபை கூடுவது அசாத்தியமாகி விடும் நிலைமையையே இது உண்டாக்கும், இராணுவப் பெரு விபத்தையே உண்டாக்கும், புரட்சியை மடியச் செய்து, நாட்டின் பொருளாதார வாழ்வைக் குலைத்து, ருஷ்யாவுக்கு அழிவை ஏற்படுத்தும்;

2. இந்தக் கிளர்ச்சிக்குச் சாதக நிலைமைகள் தோற்றுவிக் கப்பட்டது எதனால் என்றால், அவசர அவசிய நடவடிக்கை களை எடுப்பதில் ஏற்பட்டிருக்கும் தாமதத்தாலும், மற்றும் யுத்தத்தாலும் பொதுவான ஒழுங்குகுலைவினாலும் உண்டாகி யிருக்கும் எதார்த்த நிலைவரங்களாலும்தான். யாவற்றுக் கும் முதலாய், நிலத்தை விவசாயிகளது நிலக் கமிட்டிகளுக்கு மாற்றும் அரசாணையை உடனே பிறப்பிப்பதும், நேசநாடு களை அவற்றின் சமாதான வரையறைகளைப் பிரகடனம் செய் யும்படியும் சமாதானப் பேச்சுவார்த்தைகளை துவக்கும்படி யும் முன்மொழிந்து வெளிநாடுகளில் சக்தி வாய்ந்த செயல் முறையை ஏற்பதும் அவசியமாகும்;

3. முடியரசுவாத செயல் வெளிப்பாடுகளையும் இரத்த வெறிப் படுகொலை இயக்கங்களையும் சமாளிப்பதற்காக

இந்த இயக்கங்களை நசுக்க உடனே நடவடிக்கைகளை மேற்கொள்வது அத்தியாவசியமாகும்; இதன் பொருட்டு இடைக்கால அரசாங்கத்துடன் தொடர்பு கொண்டு செயல்பட்டுப் பெத்ரொகிராதில் நகராண்மைக் கழகப் பிரதிநிதிகளும் புரட்சிகர ஜனநாயகத்தின் உறுப்புகளது பிரதிநிதிகளும் அடங்கிய பொது மக்கள் பாதுகாப்புக் கமிட்டியை நிறுவுவது அவசியமாகும்....

மென்ஷிவிக்குகளும் சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களுமாகிய எல்லோரும் இந்தத் தீர்மானத்துக்கு ஆதரவாய்த் திரண்டெழுந்தனர் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.... ஆனால் கேரென்ஸ்கி இத்தீர்மானத்தைப் பார்த்ததும், அவ்க்சேன்தியெவைக் குளிர்கால அரண்மனைக்கு வந்து விளக்கம் கூறும்படி அழைத்தார். இத்தீர்மானம் இடைக்கால அரசாங்கத்தின் மீதான நம்பிக்கையின்மையைத் தெரிவிப்பதாய் இருப்பின், புதிய அமைச்சரவை ஒன்றை அமைத்துக் கொள்ளும்படி அவ்க்சேன்தியெவை அவர் வேண்டினார். ''சமரசவாதிகளது'' தலைவர்களாகிய டானும் கோட்ஸும் அவ்க்சேன்தியெவும் உடனே தமது இறுதிச் சமரசக் கைங்கரியத்தைச் செய்து முடித்தனர்.... இந்தத் தீர்மானம் அரசாங்கத்தைப் பற்றிய கண்டன விமர்சனமாய் ஏற்கப்பட்ட தீர்மானமல்ல என்று அவர்கள் கேரென்ஸ்கியிற்கு விளக்கம் கூறினர்!

மர்ஸ்காயா சாலையும் நேவ்ஸ்கி சாலையும் கூடும் முனையில் குத்தீட்டி செருகிய துப்பாக்கி ஏந்திய படையாட்கள் வரிசையாய் நின்று, தனியார் மோட்டார் வண்டிகளை நிறுத்தி அவற்றுள் இருந்தோரை கீழே இறங்கச் சொல்லி வண்டிகளை குளிர்கால அரண்மனையின் பக்கம் போகும்படி உத்தரவிட்டனர். இதை வேடிக்கைப் பார்ப்பதற்காகப் பெருங் கூட்டம் கூடியிருந்தது. இந்தப் படையாட்கள் அரசாங்கத்தை சேர்ந்தவர்களா, அல்லது புரட்சி இராணுவக் கமிட்டியைச் சேர்ந்தவர்களா என்பது யாருக்கும் தெரியவில்லை. கஸான் தேவாலயத்துக்கு முன்னாலும் இதே போல் நடைபெற்று வந்தது, மோட்டார் வண்டிகள் நேவ்ஸ்கி சாலை வழியே திருப்பியனுப்பப்பட்டன. துப்பாக்கி ஏந்திய ஐந்தாறு மாலுமிகள் பரபரப்

புற்றுச் சிரித்துக் கொண்டு படையாட்களிடம் வந்து அவர் களில் இருவருடன் உரையாட முற்பட்டனர். பால்டிக் கடற் படையைச் சேர்ந்த தலைமையான போல்ஷிவிக்குப் போர்க் கப்பல்களாகிய அரோரா, ஸாரியா ஸ்வபோது ஆகியவற்றின் பெயர்கள் இந்த மாலுமிகளது தொப்பிப் பட்டைகளில் குறிக்கப்பட்டிருந்தன. ''கிரன்ஷ்தாத்து மாலுமிப் படைகள் வருகின்றன!'' என்றார் அவர்களில் ஒருவர்... 1792ல் பாரிஸ் தெருக்களில் ''மர்சேலஸ் படைகள் வருகின்றன!'' என்று அறிவிக்கப்பட்டால் எப்படியோ, அதே போலவே இருந்தது இந்த அறிவிப்பும். கிரன்ஷ்தாத்தில் இருபத்தைந்து ஆயிரம் மாலுமிகள் இருந்தார்கள், அவ்வளவு பேரும் உறுதியான போல்ஷிவிக்குகள், சாவுக்கு அஞ்சாதவர்கள்....

ரபோச்சி இ சல்தாத் செய்தியேடு அப்போதுதான் வெளி வந்திருந்தது. அதன் முன் பக்கம் பூராவும் ஒரு பெரும் பிர கடனம் அச்சாகியிருந்தது:

படையாட்களே! தொழிலாளர்களே! குடிமக்களே!

மக்களின் பகைவர்கள் கடந்த இரவில் தாக்குதலில் இறங்கிவிட்டார்கள். இராணுவத் தலைமை அலுவலர்களைச் சேர்ந்த கர்னீலவியர்கள் சுற்று வட்டாரங்களிலிருந்து யூன் கெர்களையும் தொண்டர் பட்டாளங்களையும் கொண்டு வந்து புகுத்த முயலுகிறார்கள். ஓரனியென்பாவும் யூன்கெர்களும் ஜார்ஸ்கயெ செலோ தொண்டர்களும் வர மறுத்துவிட் டார்கள். தொழிலாளர்கள், படையாட்கள் பிரதிநிதிகளது பெத்ரொகிராது சோவியத்துக்கு எதிராய் அரசுத்துரோகக் கொடுங் சதி நடத்தத் திட்டமிடப்பட்டு வருகிறது.... சோவியத்துகளின் அனைத்து ருஷ்யக் காங்கிரஸ் ஆரம்பமாக விருக்கும் இத்தருணத்தில் அதற்கு எதிராகவும், அரசியல் நிர்ணயச் சபைக்கு எதிராகவும், மக்களுக்கு எதிராகவும் எதிர்ப்புரட்சியாளர்களுடைய இயக்கம் வழிநடத்தப்படு கிறது. பெத்ரொகிராது சோவியத்து புரட்சியைப் பாதுகாக் கிறது. சதிகாரர்களது தாக்குதலை எதிர்த்தடிக்கும் பணிக்குப் புரட்சி இராணுவக் கமிட்டி தலைமை தாங்கி வழிநடத்து கிறது. மக்களுடைய பகைவனுக்கு மரண அடி கொடுக்க

பெத்ரொகிராது நகரக் காவற் படை அனைத்தும், பெத்ரொகிராது பாட்டாளி வர்க்கம் அனைத்தும் தயாராயிருக்கின்றன.

புரட்சி இராணுவக் கமிட்டி ஆணையிடுகிறது:

1. எல்லாப் படையணி, படைத் தொகுதி, போர்க் கப்பல் கமிட்டிகளும் சோவியத்துக் கமிசார்களும் புரட்சி நிறுவனங்கள் அனைத்தும் இடையறாது தொடர்ச்சியாய் அமர்வில் கூடியிருக்க வேண்டும்; சதிகாரர்களது திட்டங்களைப் பற்றிய தகவல்கள் அனைத்தையும் ஒருசேரத் தம் கையில் குவியும்படிச் செய்து கொள்ள வேண்டும்.

2. கமிட்டியின் அனுமதியின்றி ஒரு படையாளுங்கூட அவரது படைத் தொகுதியை விட்டுச் செல்லலாகாது.

3. உடனே ஒவ்வோர் இராணுவப் பிரிவிலிருந்து இரு பிரதிநிதிகளும், ஒவ்வொரு வட்டார சோவியத்திலிருந்து ஐந்து பிரதிநிதிகளும் ஸ்மோல்னி கழகத்துக்கு அனுப்பப்பட வேண்டும்.

4. பெத்ரொகிராது சோவியத்தின் உறுப்பினர்கள் எல்லோரும், சோவியத்துகளின் அனைத்து ருஷ்யக் காங்கிரசுக்கான பிரதிநிதிகள் எல்லோரும், சிறப்புக் கூட்டத்தில் பங்கெடுத்துக் கொள்ள உடனே ஸ்மோல்னி கழகத்துக்கு வருமாறு அழைக்கப்படுகிறார்கள்.

எதிர்ப்புரட்சியானது கொடுந் தலையை உயர்த்திக் கொண்டு எழுந்துள்ளது.

மிகப் பெரும் அபாயம் எழுந்து படையாட்கள், தொழிலாளர்களது எல்லா வெற்றிகளையும், எல்லா நம்பிக்கைகளையும் அச்சுறுத்துகின்றது.

ஆனால் புரட்சியின் சக்திகள் அதன் பகைவர்களது சக்திகளைக் காட்டிலும் கணக்கின்றி மிகுதியானவை.

மக்களது இலட்சியம் வலுமிக்க கைகளில் இருக்கின்றது. சதிகாரர்கள் தகர்த்திடப்படுவார்கள்.

எவ்விதமான தயக்கமோ ஐயப்பாடோ வேண்டாம்! உறுதியுடைமை, தளர்வின்மை, கட்டுப்பாடு, வைராக்கியம்!

புரட்சி வாழ்க!

**புரட்சி இராணுவக் கமிட்டி.''**

பெத்ரொகிராது சோவியத்தின் கூட்டம் இடைமுறிவின்றி தொடர்ச்சியாய் ஸ்மோல்னியில் நடைபெற்றுக்

கொண்டிருந்தது, புயலின் மையமாய்த் திகழ்ந்து வந்தது. பிரதிநிதிகள் அப்படியே தூங்கி விழுந்து தரையில் படுத்திருந் துவிட்டுத் திரும்பவும் எழுந்து விவாதத்தில் பங்கெடுத்துக் கொண்டார்கள். திரோத்ஸ்கி, காமெனெவ், வலதார்ஸ்கி இவர்கள் நாள்தோறும் 6 மணி, 8 மணி, 12 மணி நேரம் பேசினர்....

நான் கீழ்த் தளத்துக்கு இறங்கி 18ஆம் எண் அறைக்குச் சென்றேன், போல்ஷிவிக்குப் பிரதிநிதிகளது தனிக் கூட்டம் அங்கே நடைபெற்றுக் கொண்டிருந்தது. கரகரப்பான குரல் ஒன்று ஓங்கியெழுந்து ஒலித்துக் கொண்டிருந்தது, கூட்டத் தினரால் மறைக்கப்பட்டிருந்தார் அந்தப் பேச்சாளர். ''இந்தச் சமரசவாதிகள் சொல்கிறுர்கள் நாம் தனிமைப் பட்டு விட்டோம் என்று. இவர்களைப் பற்றிக் கவலைப்படா தீர்கள். எப்படியும் இவர்கள் நம்மால் இழுக்கப்பட்டு நம் முடன் வந்து ஒட்டிக் கொள்ளவே வேண்டும், இல்லையேல் இவர்கள் தம்மைப் பின்தொடரும் அணியினரை அறவே இழக்க வேண்டியிருக்கும்....''

பேச்சாளர் ஒரு துண்டுக் காகிதத்தை உயர்த்திக் காட்டி ஞர். ''ஏற்கெனவே இவர்களை நாம் நம் பக்கத்துக்கு இழுத்துக் கொண்டுதான் இருக்கிறோம்! இதோ மென்ஷிவிக்கு களிடமிருந்தும் சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களிடமிருந்தும் நமக்குச் செய்தி வந்திருக்கிறது! நம்முடைய செயலை இவர் கள் கண்டிப்பதாகவும், ஆயினும் அரசாங்கம் நம்மீது தாக்குதல் தொடுக்குமாயின் பாட்டாளி வர்க்கத்தின் இலட் சியத்தை இவர்கள் எதிர்க்கப் போவதில்லை என்பதாகவும் கூறுகிறுர்கள்!'' மகிழ்ச்சி ஆரவாரம் எழுந்தது....

இரவு ஆரம்பமானதும் மாமண்டபத்துள் படையாட் களும் தொழிலாளர்களும் குழுமிவிட்டனர். பழுப்பு மேனி கொண்ட இந்தப் பெருந்திரள் புகையிலையின் நீலப் புகை மூட்டத்துள்ளிருந்து இரைந்து கொண்டிருந்தது. பழைய இத்ஸே-யி-கவுக்கு அழிவு தேடுவதோடு, அது அமைத் திருந்த புரட்சிகர ஆட்சியமைப்புக்கும் அழிவு தேடிவிடும் போலிருந்த புதிய காங்கிரசுக்காக வந்திருந்த பிரதிநிதிகள் இவர்கள். பழைய இத்ஸே-யி-க இந்தப் புதிய காங்கிரசின்

பிரதிநிதிகளுக்கு வரவேற்பு அளிப்பதென்று தயங்கித் தயங்கி முடிவில் ஒருவிதமாய்த் தீர்மானத்துக்கு வந்து, இந்தக் கூட்டத்தைக் கூட்டியிருந்தது. ஆனால் இந்தக் கூட்டத்தில் இத்ஸே-யி-க உறுப்பினர்களுக்கு மட்டும்தான் வாக்குரிமை தரப்பட்டிருந்தது....

நள்ளிரவுக்குப் பிற்பாடு கோத்ஸ் தலைமை ஏற்க, டான் பேச எழுந்தார். அவர் எழுந்த போது நிலவிய கடுகடுப்பான நிசப்தம் அச்சம் தரத் தக்கதாய்த் தோன்றியது எனக்கு.

''நாம் வாழும் இந்தத் தருணங்கள் கொடுஞ் சோகத்தின் சாயல் கொண்டவை'' என்றார் அவர். ''பகைவன் பெத்ரொகிராதின் வாயிலருகே வந்துவிட்டான், ஜனநாயக சக்திகள் அவனை எதிர்த்துப் போர் புரிய ஆயத்தம் செய்ய முற்படுகின்றன. ஆயினும் இந்த நேரத்தில் தலைநகரின் வீதிகளில் இரத்தம் பெருக்கெடுக்கும் நிலைமையை நாம் எதிர்நோக்குகிறோம். பஞ்சமானது நமது அரசாங்கத்தை மட்டுமின்றி, புரட்சியையுங்கூட ஒழித்துவிடுமோ என்று அஞ்ச வேண்டியிருக்கிறது....

''மக்கள் திரளினர் களைத்துப் போய், பலமெலாம் இழந்து ஓய்ந்திருக்கிறார்கள். புரட்சியில் அவர்களுக்கு நாட்டமில்லை. இந்த நேரத்தில் போல்ஷிவிக்குகள் எதையாவது ஆரம்பிப்பார்களானால், புரட்சியே ஒழிந்துவிடும் நிலைமைதான் ஏற்படும்....'' (கூச்சல்கள்: ''பொய்! பொய்!'') ''போல்ஷிவிக்குகளின் செயலுக்காகக் காத்திருக்கும் எதிர்ப்புரட்சியாளர்கள் உடனே கலகங்களையும் படுகொலைகளையும் துவக்கிவிடுவார்கள்.... ஆர்ப்பாட்டம் எதுவும் நடைபெறுமாயின் அரசியல் நிர்ணயச் சபை சாத்தியமாற்றதாகிவிடும்....'' (கூச்சல்கள்: ''அவ்வளவும் பொய்! வெட்கம்!'')

''இராணுவச் செயற் களமாய் இருக்கும் ஒரு மண்டலத்தில் பெத்ரொகிராது நகரக் காவற் படையினர் இராணுவத் தலைமை அலுவலர்களது உத்தரவுகளுக்குக் கீழ்ப்படிய மறுப்பதானது அனுமதிக்கப்பட முடியாததாகும்.... இராணுவத் தலைமை அலுவலர்களது ஆணைகளுக்கும், உங்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட இத்ஸே-யி-கவின் ஆணைகளுக்கும் நீங்கள் கீழ்ப்படியத்தான் வேண்டும். அனைத்து ஆட்சியதிகாரமும் சோவியத்துகளுக்கே! — சாவுதான் இதன் அர்த்தம்!

கொள்ளைக்காரர்களும் திருடர்களும் அத்தருணம் எப்போது வருமென்று காத்திருக்கிறார்கள்—கொள்ளையிடுவதற்காக, தீ வைப்பதற்காக.... உங்கள் முன்னால் வந்து கோஷங்கள் எழுப்புகிறார்கள்: 'வீடுகளில் புகுந்து முதலாளிமார்களது பாதணிகளையும் துணிமணிகளையும் கைப்பற்றுங்கள்...' '' (கண்டனக் கூச்சல்கள்: 'இம்மாதிரியான கோஷம் எதுவும் எழுப்பப்பட்டதில்லை! பொய்! அவ்வளவும் பொய்!') ''சரி, ஆரம்பம் இவ்வாறு இல்லாமல் இருக்கலாம், ஆனால் முடிவு இவ்வாறுதான் இருக்கும்!

''இத்ஸே-யி-க செயல்படுவதற்கு முழு அதிகாரம் பெற்றதாகும், இதற்குக் கீழ்படிந்துதான் நடக்க வேண்டும்.... நாங்கள் துப்பாக்கிகளைக் கண்டு அஞ்சுகிறவர்கள் அல்ல.... தன் உயிர் உடலைக் கிடத்திப் புரட்சியைப் பாதுகாக்கும் இந்த இத்ஸே-யி-க....'' (கூச்சல்கள்: ''அது உயிரற்ற பிரேதமாகி எவ்வளவோ காலமாகிறதே!'')

ஓயாத கூப்பாடுகளுக்கிடையே பேச்சாளர் ஓங்கி மேஜையில் தட்டியவாறு கீச்சிட்டுக் கூவியது காதில் விழுந்தது: ''இவ்வாறு சொல்லித் தூண்டிவிடுகிறவர்கள் கொடுங் குற்றம் புரியும் தீயவர்கள் ஆவர்!''

குரல்: ''அன்றே கொடுங் குற்றம் புரிந்தவர்கள் நீங்கள்! ஆட்சியதிகாரத்தைக் கைப்பற்றி அதை முதலாளித்துவ வர்க்கத்திடம் ஒப்படைத்தீர்கள்!''

கூட்டத் தலைவர் கோட்ஸ் கைமணியை ஆட்டி ஒலித்தவாறு கத்தினார்: ''சப்தம் போடாதீர்கள்! இல்லையேல் வெளியே அனுப்பிவிடுவேன்!''

குரல்: ''அனுப்புங்கள் பார்க்கலாம்!'' (கையொலி முழக்கமும் சீழ்க்கையும்.)

''இனி சமாதானம் சம்பந்தமாய் நமது கொள்கை குறித்து சில வார்த்தைகள்.'' (சிரிப்பு.) ''யுத்தம் தொடர்ந்து நடைபெறுவதை, துரதிர்ஷ்ட வசமாய் இனி ருஷ்யா ஆதரிக்க இயலாது. சமாதானம் ஏற்படப் போகிறது, நிரந்தர சமாதானமல்ல—ஜனநாயகத் தன்மையதான சமாதானமல்ல.... இரத்தக் களரியைத் தவிர்க்கும் பொருட்டு இன்று குடியரசு அவையில் நாங்கள் நிலத்தை நிலக் கமிட்டிகளுக்கு மாற்றிவிட வேண்டுமென்றும், உடனே சமாதானப் பேச்சுவார்த்தை

க்ளைத் துவக்க வேண்டுமென்றும் கோரினோம்....'' (சிரிப்பும் கூச்சலும்: ''காலங் கடந்த முயற்சி!'')

பிறகு போல்ஷிவிக்குகளின்சார்பில் பேசுவதற்காக மேடையில் ஏறினார் திரோத்ஸ்கி. அவருடன் சேர்ந்து காது செவிடு படக் கையொலி முழக்கம் எழுந்தது, கூட்டத்தினர் எழுந்து நின்று இடி முழக்கமிட்டு வாழ்த்தினர். கெட்ட காழ்ப்பும் கேலியும் பளிச்சிட்ட அவரது கூர்மையான மெல்லிய முகம் மெபிஸ்டபிலிசின் சாயல் கொண்டிருந்தது.

''முற்றிலும் டான் பக்கம்தான் இருக்கிறார்களாம் மக்கள் திரளினர்—நாட்டமின்றி மந்த நிலையிலுள்ள பெருந் திரளினர்! டான் அனுசரிக்கும் செயல்முறை இதை நன்றாய் மெய்ப்பிக்கிறது!'' (கிண்டலான சிரிப்பு.) நாடக பாணியில் அவர் கூட்டத் தலைவரின் பக்கம் திரும்பினார். ''நிலத்தை விவசாயிகளுக்குத் தர வேண்டுமென நாங்கள் சொன்னபோது நீங்கள் எதிர்த்தீர்கள். ஆகவே விவசாயிகளிடம் நாங்கள் கூறினோம், 'அவர்கள் தரவில்லையானால் நீங்களாகவே எடுத்துக் கொண்டுவிடுங்கள்!' என்று. நாங்கள் கூறிய ஆலோசனையை விவசாயிகள் பின்பற்றினார்கள். ஆறு மாதத்துக்கு முன்பு நாங்கள் செய்ததை இப்பொழுது ஆதரித்து மொழிய முன் வருகிறீர்கள் நீங்கள்....

''சேனையில் மரண தண்டனையை நிறுத்தும்படி கேரென்ஸ்கி உத்தரவிட்டதற்கு அவருடைய இலட்சிய ஈடுபாடு அல்ல காரணம்; பெத்ரொகிராது நகரக் காவற் படையினர் அவருக்குக் கீழ்ப்படிய மறுத்து அவருக்குப் புத்தி புகட்டியது தான் கேரென்ஸ்கியின் இந்த உத்தரவுக்குக் காரணம்....

''குடியரசு அவையில் டான் நிகழ்த்திய சொற்பொழிவு அவர் ஓர் இரகசிய போல்ஷிவிக்கு என்பதைக் காட்டுவதாய் இன்று அவர் கண்டிக்கப் படுகிறார்.... ஜூலை 16, 18ஆம் நாட்களது எழுச்சியில் பங்கு கொண்டவர்களைப் புரட்சியின் தவப் புதல்வர்களாய் டான் போற்றப் போகும் நாளும் ஒன்று வரலாம்.... சேனையில் கட்டுப்பாட்டை நிலைநாட்ட வேண்டுமென்று டானுடைய கட்சியின் பிரசாரத்தில் வற்புறுத்தப்பட்டு வருகிறது, ஆனால் இன்று குடியரசு அவையில் டானுடைய தீர்மானத்தில் ஒரு வார்த்தைகூட இல்லை இதைப் பற்றி....

''இல்லை. கடந்த ஏழு மாத வரலாறு எதைக் காட்டுகிற தென்றால், மக்கள் திரளினர் மென்ஷிவிக்குகளை விட்டுத் துறந்துவிட்டார்கள் என்பதைத்தான். மென்ஷிவிக்குகளும் சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களும் காடேட்டுகளின் மீது வெற்றி பெற்றனர், பிறகு ஆட்சியதிகாரம் தம் கைக்கு வந்ததும் அவர்கள் அதைக் காடேடுகளிடம் தந்தார்கள்....

''எழுச்சி நடத்த உங்களுக்கு உரிமை இல்லை என்கிறார் இந்த டான். எழுச்சி நடத்துவது புரட்சியாளர்கள் எல்லாருக்கும் உரித்தான உரிமை! காலுக்கடியில் கிடத்தி மிதிக்கப் படும் மக்கள் திரளினர் கலகம் புரிந்து எழும் போது, அவர்களுக்கு எப்போதும் உண்டு இந்த உரிமை....''

பிறகு நீண்ட முகமும் நச்சு நாக்கும் கொண்ட லீபெர், முனகல்களாலும் கேலி நகைப்பாலும் வரவேற்கப்பட்டு எழுந்து வந்தார்.

''பாட்டாளி வர்க்கம் ஆட்சியதிகாரத்தை ஏற்கப் பக்குவ நிலையில் இல்லாத வரை அதற்கு ஆட்சியதிகாரத்தைக் கைப் பெற்ற உரிமை கிடையாதென்று மார்க்சும் எங்கெல்சும் கூறினர். தற்போது நடைபெறுவதைப் போன்ற ஒரு முதலாளித்துவப் புரட்சியில்... மக்கள் திரளினர் ஆட்சியதிகாரத்தைக் கைப்பற்றுவதானது புரட்சியைத் துயர முடிவு எய்தச் செய்வதாகவே அமையும்.... திரோத்ஸ்கி சமூக-ஜனநாயகத் தத்துவவாதி என்ற முறையில் தாமே எதிர்த்திடும் ஒரு செயலைத்தான் தற்போது அவர் ஆதரித்து வேலை செய்கிறார்....'' (கூச்சல்கள்: ''போதும், இந்தப் பேச்சு! ஒழிக, ஒழிக!'')

இடைமறித்து எழுந்து கொண்டிருந்த கூப்பாடுகளுக்கிடையே மார்த்தவ் பேசினார்: ''சர்வதேசியவாதிகளாகிய நாங்கள் ஆட்சியதிகாரம் ஜனநாயகத்தின் கைகளுக்கு மாறுவதை எதிர்க்கவில்லை. ஆனால் போல்ஷிவிக்குகள் கையாளும் முறைகள் எங்களுக்கு ஏற்புடைத்தவை அல்ல. ஆட்சியதிகாரத்தைக் கைப்பற்ற இதுவல்ல நேரம்....''

மீண்டும் டான் பேசினார். புரட்சி இராணுவக் கமிட்டியானது இஸ்வேஸ்தியா செய்தியேட்டு அலுவலகத்தைக் கைப்பற்றவும் செய்தியேட்டைத் தணிக்கை செய்யவும் கமிசார் ஒருவரை அனுப்பி வைத்தது பற்றிக் குறிப்பிட்டு, இச்செயலைக்

கடுமையாய்க் கண்டித்துத் தாக்க முற்பட்டார் அவர். உடனே பெருங் களேபரமாகிவிட்டது. மார்த்தவ் பேச முயன்ருர், ஆனுல் அவர் பேசியது அந்தக் குழப்பத்திலும் சப்தத்திலும் காதில் விழவில்லே. சேனையின் பிரதிநிதிகளும் பால்டிக் கடற் படையின் பிரதிநிதிகளும் மண்டபமெங்கும் ஆங்காங்கே எழுந்து நின்று, சோவியத்துதான் தம்முடைய அரசாங்கம் என்று கூவிக் கொண்டிருந்தார்கள்....

இந்தப் பெருங் குழப்பத்துக்கிடையே ஏர்லிஹ்* ஒரு தீர்மானத்தை முன்வைத்தார். இந்தத் தீர்மானம் தொழிலாளர்களேயும் படையாட்களேயும் அமைதியாய் இருக்குமாறும், ஆர்ப்பாட்டம் செய்யும்படி ஆத்திரமூட்டித் தூண்டுவோருக்குச் செவி சாய்க்காதிருக்குமாறும் வேண்டிற்று; உடனடியாய்ப் பொதுமக்கள் பாதுகாப்புக் கமிட்டி அமைக்கப்படுவது அவசியமென அங்கீகரித்தது; நிலத்தை விவசாயிகளுக்கு மாற்றுவதற்கும் சமாதானப் பேச்சுவார்த்தைகளேத் துவக்குவதற்குமான அரசாணைகளே உடனே பிறப்பிக்கும்படி இடைக் கால அரசாங்கத்தைக் கேட்டுக் கொண்டது....

உடனே வலதார்ஸ்கி குதித்தெழுந்து கோபமாய்க் கூச்சலிட்டுப் பேசினுர். சோவியத்துகளின் காங்கிரஸ் ஆரம்பமாகப் போகும் இத்தருணத்தில், காங்கிரசுக்குரிய பணிகளேத் தானே ஏற்றுச் செயற்பட இத்ஸே-யி-கவுக்கு உரிமை இல்லே என்ருர் அவர். இத்ஸே-யி-க உண்மையில் மடிந்து ஒழிந்துவிட்ட ஓர் அமைப்பு, மறைந்துவிட்ட அதன் அதிகாரத்துக்கு உயிரூட்டுவதற்கான ஒரு தந்திரமே இந்தத் தீர்மானம் என்ருர்....

''போல்ஷிவிக்குகளாகிய நாங்கள் இந்தத் தீர்மானத்துக்கான வாக்கெடுப்பில் கலந்து கொள்ள மாட்டோம்!'' அவர் இவ்வாறு அறிவித்ததும் போல்ஷிவிக்குகள் எல்லோரும் கூட்ட மண்டபத்திலிருந்து வெளியேறினர், பிறகு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது....

நள்ளிரவுக்குப் பிற்பாடு 4 மணி இருக்கும், முன் கூடத்தில் நான் ஸோரினேச் சந்தித்தேன். அவருடைய தோளில் ஒரு துப்பாக்கி தொங்கிற்று.

* ஏர்லிஹ்—மென்ஷிவிக்குத் தலேவர்களில் ஒருவர்.—[பதிப்பாசிரியர்.]

''நாங்கள் செயல்பட்டு வருகிறேம்!''[7] என்று மனநிறைவு மிக்கவராய் அமைதியாய்க் கூறினர் அவர். ''நீதித் துறை துணை அமைச்சரையும் சமயத் துறை அமைச்சரையும் கைது செய்தோம். இப்போது அவர்கள் கீழே நிலவறையில் இருக்கிறர்கள். தொலைபேசி இணைப்பகத்தைப் பிடிப்பதற்காக ஒரு படையணி சென்றிருக்கிறது. தந்தி நிறுவனத்தைப் பிடிக்க மற்றென்றும், அரசு வங்கியைப் பிடிக்க இன்னென்றும் போயிருக்கின்றன. செஞ்காவலர்கள் தெருக்களுக்கு வந்துவிட்டார்கள்....''

ஸ்மோல்னியின் படிகளில், குளிராய் இருந்த அந்த இருட்டில் முதன்முதலாய்ச் செஞ்காவலர்களை நாங்கள் கண்ணுற்றேம் — தொழிலாளர் உடுப்புகள் அணிந்த பையன்கள், குத்தீட்டி செருகிய துப்பாக்கிகளை ஏந்தி நின்று ஒருவரோடொருவர் ஒண்டிக் கொண்டு பரபரப்பாய்த் தமக்குள் பேசிக் கொண்டிருந்தார்கள்.

நெடுந் தொலைவில் மேற்குத் திசையில் தெரிந்த அமைதியான கட்டடக் கூரைகளுக்கு அப்பாலிருந்து இங்கொன்றும் அங்கொன்றுமாய்த் துப்பாக்கிகள் சுடப்படும் சப்தம் கேட்டது. யூன்கெர்கள் அங்கே நேவா ஆற்றின் மூடு பாலங்களைத் திறந்து வைக்க முயன்று கொண்டிருந்தார்கள். வீபர்க் புறத்தைச் சேர்ந்த ஆலைத் தொழிலாளர்களும் படையாட்களும் ஆற்றைக் கடந்து வந்து, நகரின் நடுப் பகுதியிலிருந்த சோவியத்துப் படைகளுடன் சேர்ந்து கொள்ளாமல் தடுப்பதற்காக நேவா பாலத்தை இந்த யூன்கெர்கள் திறந்து உயர்த்தி வைத்துவிட்டுச் சென்றுர்கள். ஆனல் கிரன்ஷ்தாத்து மாலுமிகள் பாலத்தைத் திரும்பவும் இறக்கி விட்டனர்....

எங்களுக்குப் பின்னல் ஸ்மோல்னியினுள் விளக்குகள் எல்லாம் பிரகாசமாய் ஒளிர, அந்தப் பெரிய கட்டடம் பிரம்மாண்ட தேன்கூடு போல் மும்முரமாய் மொலுமொலுத்துக் கொண்டிருந்தது....

அத்தியாயம் 4

## இடைக்கால அரசாங்கத்தின் வீழ்ச்சி

புதன்கிழமை, நவம்பர் 7ஆம் நாள் நெடுநேரம் கழித்து விழித்தெழுந்தேன். நேவ்ஸ்கி சாலையில் நான் போய்க் கொண்டிருந்த போது நண்பகலை அறிவித்துப் பெத்ரொபாவ்லொவ்ஸ்கயா கோட்டையிலிருந்து பீரங்கி முழக்கமிட்டது. அன்று மப்பும் மந்தாரமுமாய்க் குளிராயிருந்தது. அரசு வங்கிக்கு முன்னால் அதன் மூடிய வெளிவாயிலில் குத்தீட்டித் துப்பாக்கி தாங்கிய படையாட்கள் நின்றிருந்தார்கள்.

''நீங்கள் யார் பக்கம்? அரசாங்கத்தின் பக்கமா?'' என்று கேட்டேன்.

''அரசாங்கம் போயே போச்சு!'' என்று இளித்துக் கொண்டார், அந்தப் படையாட்களில் ஒருவர். ''ஸ்லாவா போகு! ஆண்டவன் புகழ் ஓங்குக!'' அவரிடமிருந்து நான் தெரிந்து கொள்ள முடிந்தது அவ்வளவுதான்....

நேவ்ஸ்கி சாலையில் டிராம் வண்டிகள் எப்போதும் போல் ஓடிக் கொண்டிருந்தன. தொத்த முடிந்த இடங்களில் எல்லாம் ஆடவரும் பெண்டிரும் சிறு பையன்களும் அவற்றில் தொத்திக் கொண்டு சென்றார்கள். கடைகள் திறந்திருந்தன. முந்திய நாளன்று இருந்த அளவுக்குக்கூட தெருக்களில் இப்போது மக்களிடையே கலவர உணர்ச்சி இல்லை என்பதாய்த் தோன்றிற்று. எழுச்சிக்கு எதிராய் இராப் பொழுதில் சுவர்களில் வேண்டுகோள்களும் அறிவிப்புகளும் ஏராளமாய் முளைத்துக் கிளம்பியிருந்தன. யாவும் விவசாயிகளுக்கும்

போர்முனையிலிருந்த படையாட்களுக்கும் பெத்ரோகிராது தொழிலாளர்களுக்கும் விடுக்கப்பட்டவை. இவற்றில் ஒன்று வருமாறு:

**பெத்ரோகிராது நகர டூமாவிடமிருந்து**

*நகர டூமா நகர மக்களுக்கு அறிவித்துக் கொள்கிறது: நவம்பர் 6ல் நடைபெற்ற சிறப்புக் கூட்டத்தில் பொது மக்கள் பாதுகாப்புக் கமிட்டி ஒன்றை நகர டூமா அமைத்தது. இந்தக் கமிட்டியில் மத்திய டூமா, வட்டார டூமாக்களின் உறுப்பினர்களுடன் கூட பின்வரும் புரட்சிகர ஜன நாயக நிறுவனங்களது பிரதிநிதிகளும் அங்கம் வகிக்கின்றனர்:* இத்ஸே-யி-க, *விவசாயிகள் பிரதிநிதிகளது அனைத்து ருஷ்ய நிர்வாகக் கமிட்டி, சேனை நிறுவனங்கள்,* இத்ஸேன்திரஃப்ளோத், *பெத்ரோகிராது தொழிலாளர்கள், படையாட்கள் பிரதிநிதிகளது சோவியத்து (!), மற்றும் பல.*

*பொதுமக்கள் பாதுகாப்புக் கமிட்டியின் உறுப்பினர்கள் நகர டூமாக் கட்டடத்தில் கடமையாற்றுவார்கள். தொலை பேசி எண்கள்: 15-40, 232-77, 138-36.*

*1917 நவம்பர் 7.*

அப்போது இதை நான் உணரவில்லை, ஆனால் இந்த அறிவிப்பு போல்ஷிவிக்குகளுக்கு எதிராய் நகர டூமாவின் போர்ப் பிரகடனமாய் வெளியிடப்பட்டிருந்தது.

ரபோச்சி பூத் பிரதி ஒன்றை விலைக்கு வாங்கினேன், அந்த செய்தியேடு மட்டும்தான் விற்பனையாகி வந்ததாய்த் தெரிந்தது. சற்று நேரத்துக்குப் பிற்பாடு ஐம்பது கோப்பெக் கொடுத்து ஒரு படையாளிடமிருந்து அவர் படித்துவிட்டு வைத்திருந்த தியேன் ஏட்டை வாங்கிக் கொண்டேன். போல்ஷிவிக்கு ஏடாகிய ரபோச்சி பூத் கைப்பற்றப்பட்ட ரூஸ்கயா வோல்யாவின் அச்சகத்தில் பெரிய அளவு காகிதத்தில் அச்சிடப்பட்டு பெரிய கொட்டைத் தலைப்புகளுடன் வெளியாகியிருந்தது: ''அனைத்து ஆட்சியதிகாரமும் தொழிலாளர்கள், படையாட்கள், விவசாயிகளது சோவியத்துகளுக்கே! சமாதானம்! ரொட்டி! நிலம்!'' லெனினைப் போல் தலைமறைவாய்

இருந்த ''ஸிஞேவியெவின்''* ஒப்பம் தாங்கியிருந்தது அதன் தலையங்கக் கட்டுரை. இதன் துவக்கப் பகுதி வருமாறு:

தற்போதுள்ள நிலைமைக்கு இரண்டிலொரு முடிவுதான் ஏற்படுமென்பதை ஒவ்வொரு படையாளும் ஒவ்வொரு தொழிலாளியும் மெய்யான ஒவ்வொரு சோஷலிஸ்டும் நேர்மை வாய்ந்த ஒவ்வொரு ஜனநாயகவாதியும் நன்கு உணருகிருர்.

ஒன்று—ஆட்சியதிகாரம் முதலாளித்துவ நிலப்பிரபுத் துவக் கும்பலின் கையில் தொடர்ந்து நீடிப்பது... அப்போது தொழிலாளர்களும் படையாட்களும் விவசாயிகளும் எல்லா விதமான அடக்குமுறைக்கும் உள்ளாக வேண்டும், யுத்தம் தொடர்ந்து நடைபெறும், பசியும் சாவும் தவிர்க்க முடியாதனவாய் இருக்கும்....

அல்லது—ஆட்சியதிகாரமானது புரட்சிகரத் தொழிலாளர்கள், படையாட்கள், விவசாயிகளின் கைக்கு மாற்றப் படுவது. இது நிலப்பிரபுத்துவக் கொடுமை அறவே ஒழிக்கப் படுவதையும், முதலாளிகளுக்கு உடனடியாய்க் கடிவாள மிடப்படுவதையும், நியாயமான சமாதானம் உடனடியாய் முன்மொழியப்படுவதையும் குறிப்பதாய் இருக்கும். அப்போது விவசாயிகளுக்கு நிலம் உத்தரவாதம் செய்யப்படும், தொழிலாளர்களுக்குத் தொழிற் துறை மீதான கண்காணிப்பு கிடைக்கப் பெறுவது உறுதியாகிவிடும், பசிப்போருக்கு ரொட்டி கிடைப்பதும் இந்த அர்த்தமற்ற யுத்தத்துக்கு முடிவுகட்டப்படுவதும் நிச்சயமாகிவிடும்!...

கொந்தளிப்பான இரவைப் பற்றிய துண்டுச் செய்திகள் பலவும் தியேன் செய்தியேட்டில் வெளிவந்திருந்தன. போல்ஷிவிக்குகள் தொலைபேசி இணைப்பகத்தையும் பால்டிக் ரயில் நிலையத்தையும் தந்தி நிறுவனத்தையும் பிடித்துக் கொண்டு

---

* இது சரியல்ல. இங்கு குறிப்பிடப்படும் கட்டுரை 1917 நவம்பர் 7ல் ரபோச்சி பூத் செய்தியேட்டில் ஆசிரியர் பெயர் குறிக்கப்படாமல் வெளியானதாகும். இந்தக் கட்டுரையின் ஆசிரியர் யார் என்பது நிர்ணயமாகவில்லை.—[பதிப்பாசிரியர்.]

விட்டனர்; பீட்டர்ஹாபின் யூன்கெர்களால் பெத்ரொகிரா துக்கு வந்து சேர முடியவில்லை; கசாக்குகள் தீர்மானத்துக்கு வர முடியாமல் ஊசலாடினர்; அமைச்சர்களில் சிலர் கைது செய்யப்பட்டனர்; நகரக் காவல் துறையின் ஆணையரான மேய்யர் சுடப்பட்டார்; கைதாவதும், கைது செய்தலும், ரோந்து சுற்றி வந்த படையாட்களுக்கும் யூன்கெர்களுக்கும் செஞ்காவலர்களுக்குமிடையே கைகலப்புகளும் நடைபெற்றிருந்தன.[1*]

மர்ஸ்காயா சாலையின் முனையில் நான் காப்டன் கோம்பெர்கைச் சந்தித்தேன். அவர் ஒரு மென்ஷிவிக்கு-அபரோனெத்ஸ், அவருடைய கட்சியின் இராணுவப் பிரிவின் செயலாளர். மெய்யாகவே எழுச்சி நடைபெற்றுவிட்டதா என்று நான் கேட்டதும் அவர் அலுத்தக் கொள்வது போல் தோளை உலுக்கிக் கொண்டு பதிலளித்தார்: ''சோர்த் ஸ்ஞயித்! சைத்தானுக்குத்தான் தெரியும்! ஆட்சியதிகாரத்தைப் போல்ஷிவிக்குகள் கைப்பற்றிக் கொண்டுவிடலாம், ஆனல் மூன்று நாட்களுக்கு மேல் அவர்களால் அதை இழக்காமல் வைத்துக் கொள்ள முடியாது. அரசாங்கம் நடத்த அவர்களிடம் ஆட்கள் இல்லை. முயன்று பார்க்கட்டுமென அவர்களை விடுவதுங் கூட நல்லதுதான்—அடியோடு ஒழிந்துவிடுவார்கள்...''

இஸாக்கியெவ்ஸ்கயா சதுக்கத்தின் மூலையிலிருந்த இராணுவ ஓட்டலை ஆயுதமேந்திய மாலுமிகள் காவல் புரிந்து நின்றனர். ஓட்டலின் வரவேற்புக் கூடத்தில் மிடுக்கான இளம் இராணுவ அதிகாரிகள் பலரும் மேலும் கீழுமாய் நடை போட்டுக் கொண்டும் கூடி நின்று தொணதொணத்துக் கொண்டும் இருந்தார்கள். அவர்களை அந்த மாலுமிகள் வெளியே போக விடவில்லை...

வெளியே திடுமெனத் துப்பாக்கி சுடும் சப்தம் காதைத் துளைத்தது. அதைத் தொடர்ந்து அங்கும் இங்குமாய்த் துப்பாக்கி வெடிகள் சடசடத்தன. நான் வெளியே ஓடினேன். ருஷ்யக் குடியரசு அவை கூடி வந்த மரீயின்ஸ்கி அரண்மனையைச் சுற்றி ஏதோ அசாதாரணமாய் நடைபெறுவது

---

* இந்த அத்தியாயத்தில் எண்ணிட்டுக் காட்டப்படும் சுட்டுக்குறிகள் அத்தியாயம் 4இன் அனுபந்தத்தைக் குறிப்பவை.

தெரிந்தது. அகலமான சதுக்கத்தில் குறுக்கு வாட்டில் துப்பாக்கியும் கையுமாய் வரிசையாய்ப் படையாட்கள் அணி வகுத்து ஓட்டலின் கூரையை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

''ஆத்திரமூட்டும் சதிகாரர்கள்! எங்களைப் பார்த்துச் சுட்டார்கள்!'' என்றார் ஒரு படையாள், இன்னொருவர் வாயிற் கதவை நோக்கி ஓடினார்.

அரண்மனையின் மேற்கு மூலையில் செங்கொடி பறந்து கொண்டிருந்த ஒரு பெரிய கவச மோட்டார் நின்றிருந்தது, புதிதாய்ச் சிவப்பு நிறத்தில் அதில் ''எஸ். ஆர். எஸ். டி.''(தொழிலாளர்கள், படையாட்கள் பிரதிநிதிகளது சோவியத்து) என்ற எழுத்துகள் தீட்டப்பட்டிருந்தன. மோட்டாரின் இயந்திரத் துப்பாக்கிகள் யாவும் இசாக்கிவ்ஸ்கி தேவாலயத்தை நோக்கியிருந்தன. நோவயா சாலையின் முனையில் பெட்டிகளையும் பீப்பாய்களையும் ஒரு பழைய கட்டிலின் வில்மெத்தையையும் ஒரு வண்டியையும் குவித்தடுக்கிச் சாலைத் தடுப்பு அரண் எழுப்பப்பட்டிருந்தது. மரக்கட்டைகளைக் குவித்து மோய்க்கா ஆற்றங்கரைச் சாலையின் முனை அடைக்கப்பட்டிருந்தது. அருகாமையில் இருந்த ஒரு குவியலிலிருந்து கொண்டு வரப்பட்ட மரத் துண்டுகளை அடுக்கிக் கட்டடத்திற்கு முன்னால் மார்பளவு உயரத்துக்குஅரண்கள்அமைக்கப்பட்டு வந்தன....

''இங்கே சண்டையா நடைபெறப் போகிறது?'' என்று கேட்டேன்.

''சீக்கிரம் ஆரம்பித்துவிடும்'' என்று பரபரப்பாய்ப் பதிலளித்தார் படையாள் ஒருவர். ''தோழரே, நீங்கள் போய்விடுங்கள், காயம் பட்டுவிடும். அந்தத் திசையிலிருந்து வரப்போகிறார்கள்'' என்று சொல்லிக் அட்மிரால்டி கட்டடத்தைச் சுட்டிக் காட்டினார் அவர்.

''வரப் போகிறவர்கள் யார்?''

''நண்பரே, அதை நான் சொல்வதற்கில்லை'' என்று கூறிவிட்டு எச்சியைத் துப்பினார் அந்தப் படையாள்.

அரண்மனையின் வாயிற்கதவுக்கு முன்னால் படையாட்களும் மாலுமிகளும் கூட்டமாய் நின்றிருந்தார்கள். ருஷ்யக் குடியரசு அவை இறுதி எய்தியது பற்றிச் சொல்லிக் கொண்டிருந்தார் ஒரு மாலுமி. ''நாங்கள் உள்ளே சென்று ஒவ்வொரு கதவுக்கு முன்னாலும். தோழர்களை நிறுத்தினோம்''

என்றார் அவர். ''அவைத் தலைவரது நாற்காலியில் அமர்ந் திருந்த எதிர்ப்புரட்சியாளரான கர்னீலவியரிடம் சென்றேன், 'அவை இனிமேல் இல்லை, வீட்டைப் பார்க்கப் போய்ச் சேருங்கள்!' என்று அவரிடம் சொன்னேன்.''

எல்லாரும் சிரித்தார்கள். என்னிடமிருந்த காகிதங்கள் பலவற்றையும் எடுத்து ஆட்டிக் காட்டி எப்படியோ நான் பத்திரிகையாளர் மாடத்தின் கதவு வரைப் போய்ச் சேர்ந்து விட்டேன். சிரித்த முகமும் பேருருவும் கொண்ட மாலுமி ஒருவர் அங்கே என்னைத் தடுத்து நிறுத்தினார். என்னுடைய நுழைவுச் சீட்டைக் காட்டிய போது அவர் என்னிடம் சொன்னார்: ''தோழரே, நீங்கள் தூயதிரு மைக்கேலாகவே இருக் கலாம், ஆனால் இங்கே போக முடியாது!'' உள்ளே அடைபட் டிருந்த ஒரு பிரெஞ்சு நிருபரின் கோபமுற்றுக் கோணிய முகத்தையும் அவர் வீசி ஆட்டிய கரங்களையும் கண்ணாடிக் கதவு வழியே நான் காண முடிந்தது....

வெளியே முன்வாயிலில் ஜெனரலின் உடுப்பு உடுத்திச் சாம்பல் நிற மீசையுடன் கூடிய உயரக் கட்டையான ஒருவர், படையாட்களுக்கு நடுவில் நின்றிருந்தார். அவருடைய முகம் செக்கச் சிவந்திருந்தது.

''நான்தான் ஜெனரல் அலெக்சேயிவ்'' என்று கூச்சலிட் டார் அவர். ''உங்களுடைய மேல் அதிகாரி என்ற முறையி லும், குடியரசு அவையின் உறுப்பினன் என்ற முறையிலும் நான் கோருகிறேன், என்னை உள்ளே போக விடுங்கள்!'' என்றார். காவலாளி என்ன செய்வதென்று புரியாமல் ஓரக் கண்ணால் பார்த்தவாறு தலையைச் சொரிந்து கொண்டார், பிறகு அங்கே சென்ற இராணுவ அதிகாரி ஒருவரைக் கையைக் காட்டி அழைத்தார். இங்கே நிற்பவர் யார் என் பதைக் கண்டதும் அந்த அதிகாரி கலக்கமடைந்து என்ன செய்கிறோம் என்பது அறியாமலே சலாமிட்டார்.

''**வாஷே விசக்கோபிரெவோஸ்ஹதீத்தெல்ஸ்துவோ** — உயர் சிறப்புடையீர்—'' என்று திணறிக் கொண்டு ஜார் காலப் பாணியில் கூறினார். ''அரண்மனைக்குள் யாரையும் அனு மதிக்க எனக்கு உரிமையில்லை—கண்டிப்பான உத்தரவு...''

மோட்டார் கார் ஒன்று வந்தது, அதனுள் கோட்ஸ் அமர்ந்திருக்கக் கண்டேன். பெரிய வேடிக்கை எதையோ

கண்டவரைப் போல் அவர் சிரித்துக் கொண்டிருந்தார். சில நிமிடங்களுக்குப் பிற்பாடு இன்னொரு கார் ஓடி வந்தது. அதன் முன்பக்கத்து இருக்கையில் ஆயுதம் தாங்கிய படையாட்கள் இருந்தார்கள், இடைக்கால அரசாங்கத்தின் கைது செய்யப்பட்ட உறுப்பினர்கள் அதனுள் நிறைந்திருந்தார்கள். புரட்சி இராணுவக் கமிட்டியின் லாத்விய உறுப்பினராகிய பீட்டர்ஸ் சதுக்கத்தின் குறுக்கே வேகமாய் வந்து சேர்ந்தார்.

''இந்தக் கனவான்களை நேற்று இரவே பிடித்துவிட்டீர்கள் என்று அல்லவா நினைத்திருந்தேன்'' என்று காரில் இருந்தவர்களைச் சுட்டிக்காட்டி அவரிடம் கேட்டேன் நான்.

ஏமாற்றமடைந்த சிறுவனின் முகபாவத்துடன் அவர் ''ஆமாம், நாங்கள் ஒரு தீர்மானத்துக்கு வருவதற்குள் அந்த அசட்டு ஆட்கள், பெரும் பகுதியோரை விடுதலை செய்து வெளியே விட்டுவிட்டார்கள்....''

வஸ்கிரெசேன்ஸ்கி சாலையில் ஏராளமான மாலுமிகள் அணிவகுத்து நின்றார்கள், அவர்களுக்குப் பின்னால் கண்ணுக்கு எட்டிய தொலைவுக்கு அணியணியாய்ப் படையாட்கள் வந்து கொண்டிருந்தார்கள்.

அத்மிரல்தேய்ஸ்கி சாலை வழியே நாங்கள் குளிர் கால அரண்மனையை நோக்கிச் சென்றோம். அரண்மனைச் சதுக்கத்தின் நுழைவாயில்கள் யாவும் மூடப்பட்டு அவற்றில் காவற் படையாட்கள் நிறுத்தப்பட்டிருந்தனர். மேற்கு முனையில் துருப்புகள் வளையமிட்டுத் தடுத்து நிற்க, இரைச்சலிடும் மக்கள் கூட்டம் நெருக்கடித்துக் கொண்டிருந்தது. அரண்மனை வெளிமுற்றத்திலிருந்து படையாட்கள் சிலர் மரக் கட்டைகளைத் தூக்கி வந்து தலைவாயிலின் முன்னால் குவித்துக் கொண்டிருந்தார்கள். மற்றபடி அங்கே யாவும் அமைதியாகவே இருந்தன.

காவல் புரிந்து நின்ற படையாட்கள் அரசாங்க ஆதரவாளர்களா, சோவியத்தின் ஆதரவாளர்களா என்பது எங்களுக்குப் புலப்படவில்லை. ஸ்மோல்னியிலிருந்து நாங்கள் வாங்கி வைத்திருந்த சீட்டுகள் பயனளிக்காமற் போகவே, படைவரிசையின் இன்னொரு பகுதிக்குச் சென்று பெரிய மனித தோரணையுடன் நடந்து எங்களுடைய அமெரிக்க பாஸ்

போர்ட்டுகளைக் காட்டி ''அரசாங்க அலுவல்'' என்று சொல்லியவாறு இடித்துக் கொண்டு உள்ளே நுழைந்தோம். குளிர் கால அரண்மனையின் வாயிலினுள் சென்றதும் வழக்கம் போல் பித்தளைப் பொத்தான்களும் பொன்னிற விளிம்புடன் கூடிய சிவப்புக் காலரும் கொண்ட நீல உடுப்பு உடுத்திய பழைய வாயிற் காவலாளிகள் எங்களுடைய மேல் கோட்டுகளையும் தொப்பிகளையும் பணிவுடன் வாங்கி வைத்துக் கொண்டார்கள். நாங்கள் மாடிக்குச் சென்றோம். இருண்டு வெறிச் சென்றிருந்த நடையில் ஒப்பனைத் திரைச்சீலைகள் எல்லாம் அகற்றப்பட்டிருந்தன, வயது முதிர்ந்த பணியாட்கள் சிலர் வேலையில்லாமல் திரிந்து கொண்டிருந்தார்கள். கேரென்ஸ்கியின் அறைக் கதவுக்கு முன்னால் இளம் இராணுவ அதிகாரி ஒருவர் மீசையைக் கடித்தவாறு மேலும் கீழுமாய் நடந்து கொண்டிருந்தார். அமைச்சர்—அரசதிபரை நாங்கள் பேட்டி காண முடியுமா என்று அவரிடம் விசாரித்தோம். அவர் குனிந்து வணக்கம் தெரிவித்துவிட்டுப் பூட்சுக் கால்கள் படீரென இடித்துக் கொள்ள நேரே நிமிர்ந்து நின்றார்.

''மன்னிக்க வேண்டும், இப்போது முடியாது'' என்று பிரெஞ்சு மொழியில் பதிலளித்தார். ''அலெக்சாந்திர் ஃபியோதரவிச் வேலையாய் இருக்கிறார்....'' எங்களை ஒரு கணம் பார்த்துவிட்டு, ''உண்மை என்னவெனில், அவர் இங்கே இல்லை....'' என்றார்.

''எங்கே போயிருக்கிறார்?''

''போர்முனைக்குப்[2]போயிருக்கிறார். அவருடைய காருக்குப் போதிய அளவு பெட்ரோல் இல்லாமற் போயிற்று, ஆங்கில மருத்துவமனைக்கு ஆள் அனுப்பிக் கடனாய் வாங்கிவரச் சொல்ல வேண்டியிருந்தது.''

''அமைச்சர்கள் இங்கே இருக்கிறார்களா?''

''ஏதோ ஓர் அறையில் கூட்டம் நடத்துகிறார்கள், எந்த அறை என்று தெரியவில்லை எனக்கு.''

''போல்ஷிவிக்குகள் வரப் போகிறார்களா?''

''நிச்சயம் வருவார்கள். அவர்கள் வருகிறார்களென்று எந்த நிமிடத்திலும் தொலைபேசியில் செய்தியை எதிர் பார்த்துக் கொண்டிருக்கிறோம். நாங்கள் தயாராய்த்தான் இருக்கிறோம். அரண்மனையின் முன்பகுதியில் யூன்கெர்களைக்

கொண்டு வந்து வைத்திருக்கிறோம். அதோ அந்தக் கதவுக்கு அப்பால்.''

''நாங்கள் அங்கே போகலாமா?''

''கூடாது, கூடாது. அங்கே போக அனுமதி இல்லை.'' திடுமென எங்களுடன் கைகுலுக்கிவிட்டுப் போய்ச் சேர்ந்தார் அவர். அனுமதி இல்லாத அந்தக் கதவின் பக்கம் நாங்கள் திரும்பினோம். கூடத்தில் பொருத்தப் பட்டிருந்த தற்காலிகத் தடுப்பில் அமைந்த அந்த கதவு வெளிப்பக்கத்தில் தாழிடப்பட்டிருந்தது. கதவுக்கு உட்புறத்தில் பேச்சுக் குரல்களும் யாரோ சிரிக்கும் சப்தமும் கேட்டன. இவற்றைத் தவிர அந்தப் பழைய அரண்மனையின் விசாலப் பரப்புகள் எங்கும் மயான அமைதி நிலவிற்று. வயது முதிர்ந்த பணியாளர் ஒருவர் ஓடி வந்தார். ''எசமானே, நீங்கள் அங்கே போகக் கூடாது.''

''கதவு ஏன் தாழிடப்பட்டிருக்கிறது?''

''படையாட்களை வெளியே போக விடாமல் தடுப்பதற்காக'' என்று அவர் பதிலளித்தார். சில நிமிடங்களுக்குப் பிற்பாடு தேநீர் அருந்துவது பற்றி எதோ சொல்லிவிட்டுக் கூடத்தின் வழியே திரும்பிச் சென்றார். நாங்கள் கதவின் தாழ்ப்பாளைத் திறந்தோம்.

உள்ளே இரண்டு படையாட்கள் காவல் காத்து நின்றனர். ஆனால் அவர்கள் ஒன்றும் சொல்லவில்லை. நடைக் கூடத்தின் கோடியில் பொன்னிறச் சுவர் உச்சி வேலைப்பாடுகளோடும் பெரும் பெரும் படிகச் சரவிளக்குகளோடும் கூடிய அலங்காரமான பெரிய அறை இருந்தது. இதற்கு அப்பாலிருந்த சில சிறிய அறைகள் கரும் பலகைகளால் பட்டிகையிடப்பட்டு அலங்கரிக்கப்பட்டிருந்தன. மரக்கட்டைத் தளமிடப்பட்ட தரையில் இரு புறத்தும் அழுக்கேறிய மெத்தைகளும் போர்வைகளும் வரிசை வரிசையாய்ப் பரப்பப்பட்டிருந்தன. இவற்றில் அங்குமிங்குமாய்ச் சில படையாட்கள் படுத்துக் கிடந்தார்கள். எங்கும் சிகரெட்டு, ரொட்டித் துண்டுகளும் துணியும் விலையுயர்ந்த பிரெஞ்சு ஒயின்களது பெயர்ச் சீட்டுகளோடு கூடிய காலிப் புட்டிகளுமாய் இறைந்து கிடந்தன. சிகரெட்டுப் புகையாலும், தண்ணீர் படாத உடலங்களாலும் காற்று நலங்கெட்டிருந்தது.

யூன்கெர் பள்ளிகளுக்குரிய சிவப்பும் பொன்னிறமுமான தோள் பட்டிகளுடன் மேலும் மேலும் அதிகமான படையாட்கள் இந்தச் சூழலில் அப்படியும் இப்படியுமாய்ப் போய்க் கொண்டிருந்தார்கள். ஒருவரிடம் வெள்ளை பர் கண்டி ஒயின் புட்டி இருந்தது—அரண்மனை நிலவறைகளிலிருந்து களவாடிக் கொண்டு வரப்பட்டதாகவே இருந்திருக்க வேண்டும். நடுவில் புகுந்து சென்ற எங்களை இவர்கள் திகைப்புற்று நோக்கினர். அறை அறையாய்க் கடந்து சென்று வரிசையாய் அமைந்த மாபெரும் அரசு மண்டபங்களை வந்தடைந்தோம். இவற்றின் அழுக்கு படிந்த நீண்ட சன்னல்கள் யாவும் வெளியே சதுக்கத்தை நோக்கின. தங்க மெருகிடப்பட்ட தடித்த சட்டமிடப்பட்ட பிரம்மாண்ட ஓவியங்கள் சுவர்களை மூடியிருந்தன—வரலாற்றுப் போர்களின் சித்திரங்கள் அவை: ''1812 அக்டோபர் 12'', ''1812 நவம்பர் 6'',''1813 ஆகஸ்டு 16/28''....ஒரு ஓவியத்தில் வலப்பக்க மேல் மூலையில் தாராய்க் கிழிக்கப்பட்டிருந்தது.

அரண்மனையின் இப்பகுதி முழுதும் மிகப் பெரிய படைக் கொட்டடி போலிருந்தது, தரைகளும் சுவர்களும் இருந்த நிலையைப் பார்க்கையில் தொடர்ந்து சில வாரங்களாய் இப்படி இருந்திருக்க வேண்டுமென்பது தெரிந்தது. சன்னல் மேடைகளின் மீது இயந்திரத் துப்பாக்கிகள் பொருத்தப்பட்டிருந்தன, படுக்கைகளுக்கிடையே துப்பாக்கிகள் அடுக்கப்பட்டிருந்தன.

சித்திரங்களை நாங்கள் பார்வையிட்டுக் கொண்டிருந்த போது எனது இடப் பக்கக் காதுக்கு அருகிலிருந்து சாராய நெடி மூக்கில் ஏறிற்று, கட்டைக் குரல் ஒன்று சரளமான பிரெஞ்சு மொழியில் கூறிற்று: ''நீங்கள் வெளிநாட்டவர்களாகவே இருக்க வேண்டும், ஓவியங்களை நீங்கள் பார்வையிட்டு மகிழ்வதிலிருந்தே தெரிகிறது எனக்கு.'' அவர் குட்டையானவர், ஊதிப் பருத்திருந்தார், தலையிலிருந்த குல்லாவை எடுத்ததும் வழுக்கை விழுந்தவர் என்பது தெரிந்தது.

''அமெரிக்கர்களா? மிக்க மகிழ்ச்சி. தலைமை அலுவலகக் காப்டன் விளதீமிர் அர்த்ஸிபாஷவ் நான், தங்களுக்கு வேண்டியதைச் செய்யக் காத்திருக்கிறேன்.'' தாக்குதலை எதிர் பார்த்த படைகளின் பாதுகாப்புகளுக்கிடையே முன்பின்

தெரியாத வெளியாட்கள் நான்கு பேர்—ஒரு பெண்ணும் அடங்கலாய்—சுற்றித் திரிவது அவருக்கு ஒன்றும் விபரீத மாய்த் தோன்றவில்லை போலும். ருஷ்யாவின் நிலை குறித்து அவர் முறையிட முற்பட்டார்.

''போல்ஷிவிக்குகள் மட்டுமல்ல விவகாரம்'' என்றார். ''ருஷ்யச் சேனையின் சிறந்த மரபுகள் எல்லாம் பாழாகிவிட் டன. இங்கே பாருங்களேன்—இவர்கள் எல்லாரும் இராணுவ அதிகாரிகளது பயிற்சிப் பள்ளிகளின் மாணவர்கள், ஆனால் உயர் குடும்பத்துக் கனவான்களாகவா இருக்கிறார்கள்? சாதாரண படையாட்களுக்கு எல்லாம், பரீட்சையில் தேர்வு பெறும் எவருக்கும் அதிகாரிகளது பயிற்சிப் பள்ளிகளின் கதவுகளை விரியத் திறந்துவிட்டார் கேரென்ஸ்கி. ஆகவே புரட்சியால் நச்சுப்படுத்தப்பட்ட எத்தனையோ பேர் உள்ளே புகுந்து விட்டார்கள்....''

பிறகு தொடர்பின்றித் திடுமென அவர் பேச்சு வேறு எங்கோ மாறிச் சென்றது. ''ருஷ்யாவை விட்டு வெளியே போய்விட வேண்டுமென ஆசைப்படுகிறேன். அமெரிக்க சேனையில் சேர்வதென்று தீர்மானம் செய்திருக்கிறேன். உங்களுடைய தூதரகத்தில் நீங்கள் இதற்கு ஏற்பாடு செய்ய வேண்டும். உங்களுக்கு எனது முகவரியைத் தருகிறேன்.'' வேண்டாமென்று நாங்கள் ஆட்சேபித்ததைப் பொருட்படுத் தாமலே ஒரு காகிதத்தில் முகவரியை எழுதித் தந்தார், உடனே நிம்மதியடைந்தவராய்த் தோன்றினார். அவர் எழு தித் தந்தது இன்னமும் என்னிடம்தான் இருக்கிறது: **''2ஆவது ஒரனியென்பாவும்ஸ்காயா ஷ்கோலா பிரப்போர்ஷ்சிகவ், ஸ்தாரீ பெத்தெர்கோப்.''**

''இன்று காலை நாங்கள் பார்வையிட்டுப் பரிசீலனை செய் தோம்'' என்று தொடர்ந்து கூறியவாறு எங்களை அங்கிருந்த அறைகளுக்கு அழைத்துச் சென்று யாவற்றையும் விளக் கினார். ''பெண்கள் பட்டாளம் பற்றுறுதியோடு அரசாங் கத்தின் பக்கம் இருப்பதெனத் தீர்மானித்தது'' என்றார்.

''பெண் படையாட்களும் இங்கே அரண்மனையில்தான் இருக்கிறார்களா?''

''ஆமாம், பின்பக்கத்து அறைகளில் இருக்கிறார்கள். ஏதாவது கலவரம் நடைபெறுமாயின் அபாயமின்றி அவர்

கள் அங்கே இருக்க முடியும்.'' பெரு மூச்செறிந்துவிட்டு, ''எங்களுக்கு இது ஒரு பெரும் பொறுப்பாகும்'' என்ருர்.

சற்று நேரம் நாங்கள் சன்னலருகே நின்று கீழே அரண்மனைக்கு முன்னுல் இருந்த சதுக்கத்தைப் பார்த்துக் கொண்டிருந்தோம். நீள் கோட்டுகள் அணிந்த யூன்கெர்களின் மூன்று படைப் பிரிவுகள் ஆயுதம் தாங்கி அங்கே அணிவகுத்து நிற்க, விறுவிறுப்பு மிக்கவராய்த் தோன்றிய உயரமான அதிகாரி ஒருவர் ஆவேசமாய் அவர்களுக்கு உரை நிகழ்த்திக் கொண்டிருந்தார். அவரை நான் அடையாளம் தெரிந்து கொண்டேன் — இடைக்கால அரசாங்கத்தின் தலைமை இராணுவக் கமிசாராகிய ஸ்தன்கேவிச் என்பது தெரிந்தது. சில நிமிடங்களுக்குப் பிற்பாடு இவற்றில் இரு படைப்பிரிவுகள் சடசடத்துத் துப்பாக்கிகளைத் தோள் மீது உயர்த்திக் கொண்டன; பலமாய் மூன்று கூச்சல் எழுப்பிவிட்டுச் சதுக்கத்தின் குறுக்கே ஒழுங்கு நடை போட்டுச் சென்று செவ்வளைவு வழியே நிசப்தமான நகரினுள் மறைந்தது.

''தொலைபேசி இணைப்பகத்தைப் பிடிப்பதற்காகப் போகிருர்கள்'' என்ருர் யாரோ ஒருவர். எங்கள் அருகே மூன்று யூன்கெர்கள் நின்று கொண்டிருந்தார்கள். அவர்களுடன் நாங்கள் பேசத் தொடங்கிஞேம். சாதாரணப் படையாட்களாய் இருந்து பிற்பாடு அதிகாரிகளது பயிற்சிப் பள்ளிகளில் சேர்ந்ததாய் அவர்கள் எங்களிடம் கூறினர். தமது பெயர்களையும் எங்களுக்குத் தெரிவித்தனர்—ராபர்ட் ஒலேவ், அலெக்சேய் வசீலியென்கோ, எஸ்தோனியரான ஏர்னி சாக்ஸ். ஆனுல் இப்போது அவர்கள் இராணுவ அதிகாரிகளாக வேண்டுமென்று விரும்பவில்லை, ஏனெனில் இராணுவ அதிகாரிகளுக்கு மக்களிடையே நல்ல பெயரில்லை. உண்மையில் அவர்களுக்குக் குழப்பமாயிருந்தது, இனி என்ன செய்வதென்று புரியவில்லை, அவர்கள் உற்சாகமாய் இல்லை என்பது தெளிவாகவே தெரிந்தது.

ஆனுல் விரைவிலேயே அவர்கள் பெருமையடித்துக் கொள்ள முற்பட்டனர். ''போல்ஷிவிக்குகள் மட்டும் இங்கே வரட்டும், எப்படிப் போர் புரிவதென்று நாங்கள் அவர்களுக்குக் காண்பிப்போம். ஆனுல் அவர்கள் எங்களை எதிர்த்துப் போர் புரிய துணிச்சல் இல்லாதவர்கள், அத்தனை பேரும்

கோழைகள். ஆனால் நாங்கள் வீழ்த்தப்படும் நிலைமை வர நேர்ந்தால், ஒவ்வொரு வரும் எங்களுக்கெனக் கடைசியாய் ஒரு குண்டு வைத்திருக்கிறோம்....''

அந்த நேரத்தில் அருகாமையில் எங்கோ துப்பாக்கி சுடும் சப்தம் கேட்டது. கீழே சதுக்கத்தில் எல்லோரும் ஓட ஆரம்பித்தார்கள், குப்புற விழுந்து தரையில் படுத்துக் கொண்டார்கள். மூலைகளில் நின்று கொண்டிருந்த வாடகை வண்டிகள் யாவும் பல திசைகளிலும் பறந்தோடின. அரண் மனைக்குள் ஏக களேபரமாகிவிட்டது, படையாட்கள் அங்கு மிங்கும் ஓடித் துப்பாக்கிகளையும் குண்டு வார்களையும் அவசர அவசரமாய் எடுத்துக் கொண்டு ''வந்துவிட்டார்கள்! வந்து விட்டார்கள்!'' என்று கூச்சலிட்டனர்.... ஆனால் சில நிமி டங்களுக்கு எல்லாம் யாவும் மீண்டும் அமைதியாகிவிட்டன. வாடகை வண்டிகள் திரும்பி வந்தன, தரையில் குப்புறப் படுத்திருந்தவர்கள் எழுந்து நின்றார்கள். சிவப்பு வளைவு வழியே யூன்கெர்கள் திரும்பி வந்தார்கள், நடை ஒழுங்கு இப்போது சற்றுக் குலைந்து போயிருந்தது. அவர்களில் ஒருவரை ஏனைய இருவர் தாங்கிப் பிடித்து அழைத்து வந்தார்கள்.

அரண்மனையிலிருந்து நாங்கள் வெளியே வந்த போது நேரமாகிவிட்டது. சதுக்கத்தில் காவல் காத்து நின்ற படை யாட்கள் எங்கோ மறைந்துவிட்டார்கள். அரசாங்கக் கட்ட டங்களாலாகிய அந்த மாபெரும் அரைவட்டம் ஆள் அரவ மற்றதாய்த் தோன்றிற்று. மதிய உணவுக்காக நாங்கள் ஓட்டல் பிரான்சுக்குச் சென்றோம். சூப் சாப்பிட்டுக் கொண் டிருந்த நேரத்தில்,மேஜைப் பணியாளர் முகம் வெளிறிட்டுப் போய் எங்களிடம் வந்தார். ஓட்டலின் பின்பக்கத்தில் இருந்த பிரதான சாப்பாட்டுக் கூடத்துக்கு நாங்கள் சென்று விட வேண்டும், ஏனென்றால் சிற்றுண்டிச் சாலையில் விளக்கு கள் யாவும் அணைக்கப்படப் போகின்றன என்றார்: ''பெரிய அளவில் துப்பாக்கிச் சூடுகள் நடைபெறப் போகின்றன'' என்று கூறினார்.

திரும்பவும் நாங்கள் மர்ஸ்காயா சாலையில் வெளியே வந்த போது, நேவ்ஸ்கியின் முனையில் கண் சிமிட்டிய தெரு விளக்கு ஒன்றின் வெளிச்சத்தைத் தவிர மற்றெங்கும் இருட் டாயிருந்தது. அந்த விளக்கின் அடியில் ஒரு பெரிய கவச

மோட்டார் நின்றிருந்தது. அதன் இஞ்சின் படபடத்துக் கொண்டிருந்தது, எண்ணெய்ப் புகை பீறிட்டு வெளியே வந்தது. சிறுவன் ஒருவன் அந்த மோட்டாரின் விலாப் புறத்தில் ஏறி மேலே நின்று அதனுடைய இயந்திரத் துப்பாக்கியின் குழாயினுள் பார்த்துக் கொண்டிருந்தான். படையாட்களும் மாலுமிகளும் எதற்காகவோ காத்துக் கொண்டு சுற்றிலும் நின்றார்கள். சிவப்பு வளைவுக்கு நாங்கள் திரும்பிச் சென்றோம். அங்கே கூடி நின்ற படையாட்கள் விளக்கொளி பிரகாசித்த குளிர் கால அரண்மனையை வெறிக்கப் பார்த்தபடி பலத்த குரல்களில் பேசிக் கொண்டிருந்தார்கள்.

''முடியாது, தோழர்களே'' என்று அவர்களில் ஒருவர் கூறிக் கொண்டிருந்தார். ''அவர்கள் மீது நாம் சுடுவது எப்படி? பெண்கள் பட்டாளம் அங்கேதான் உள்ளே இருக்கிறது! ருஷ்யப் பெண்களைப் பார்த்துச் சுட்டோம் என்று சொல்வார்கள்.''

மீண்டும் நாங்கள் நேவ்ஸ்கி சாலையினுள் சென்ற போது மூலையைச் சுற்றி இன்னொரு கவச மோட்டார் ஓடிச் சென்றது. அதன் கவசக் கூட்டின் உச்சியிலிருந்து ஓர் ஆள் தலையை வெளியே நீட்டினார்.

''போ முன்னே!'' என்று கூச்சலிட்டார். ''நேரே போய்த் தாக்குவோம்!''

முதலாவது கவச மோட்டாரின் டிரைவர் ஓடி வந்து இரைச்சலிட்ட இஞ்சினையும் மீறிச் சென்று கேட்கும்படி பலக்கக் கூவினார்: ''கமிட்டி நம்மைக் காத்திருக்கச் சொல்கிறது. அங்கே மரக் கட்டைகளின் பின்னால் பீரங்கிகள் வைத்திருக்கிறார்கள்....''

இங்கே டிராம் வண்டிகள் ஓடவில்லை, அரிதாய் ஒரு சிலர் தான் தெருவில் போய்க் கொண்டிருந்தார்கள், விளக்குகள் எரியவில்லை. ஆனால் சிறிது தூரம் தள்ளி, சில கட்டடங்களுக்கு அப்பால் டிராம் வண்டிகளையும் திரளான மக்களையும் பிரகாசமாய் ஒளிர்ந்த கடை சன்னல்களையும் திரைப் படக் காட்சிகளைப் பற்றிய மின்னொளி அறிவிப்புகளையும் கண்ணுற்றோம்—வாழ்க்கை வழக்கம் போல் ஓடிக் கொண்டிருந்தது. மரீயின்ஸ்கி நாடக மன்றத்தில் பாலே நாடகத்துக்கு எங்களிடம் டிக்கெட்டுகள் இருந்தன—எல்லா நாடக

மன்றங்களும் திறந்துதான் இருந்தன—ஆனால் வெளியே தெருக்களில் எங்களுக்கு யாவும் பரபரப்பும் துடிப்பும் மிக்கனவாய் இருந்தன....

இருட்டில் நாங்கள் போலீஸ் பாலத்தில் எழுப்பப்பட்டிருந்த தடையரணின் மரக் கட்டைகளில் தடுக்கிக் கொண்டு தடுமாறினோம். ஸ்திரொகானவ் அரண்மனைக்கு முன்னால் மூன்று-அங்குலச் சக்கர—பீரங்கியைப் படையாட்கள் சிலர் உருட்டித் தக்க நிலையில் அமர்த்தக் கண்டோம். வெவ்வேறு உடுப்புகளிலுமான பலரும் குறிக்கோளின்றி வந்து கொண்டும் போய்க் கொண்டும் இருந்தார்கள், எல்லோரும் ஓயாமல் பேசிக் கொண்டிருந்தார்கள்.

நேவ்ஸ்கி சாலையில் நகரம் அனைத்துமே கூட்டமாய் இங்கு வந்து சுற்றுவதாய்த் தோன்றியது. ஒவ்வொரு மூலையிலும் பெரும் பெரும் கூட்டங்கள் நெருக்கியடித்துக் கொண்டிருந்தன, அவற்றின் நடுவில் சிலர் காரசாரமாய் வாக்குவாதம் புரிந்து கொண்டிருந்தார்கள். குத்தீட்டித் துப்பாக்கிகள் தாங்கிய பன்னிரண்டு படையாட்களைக் கொண்ட காவற் குழுக்கள் தெருக்களின் சந்திப்புகளில் நின்றன. செல்வச் செழிப்பு வாய்ந்த மென்முடிக் கோட்டுகள் போட்டிருந்த செம்முகக் கிழவர்கள் இந்தப் படையாட்களைப் பார்த்துக் கோபமாய் முட்டிகளை ஆட்டிக் காட்டினார்கள்; மிடுக்கான ஆடைகள் அணிந்த பெண்கள் கீச்சுக் குரலில் வசை மொழிகளைப் பொழிந்தார்கள். ஆனால் படையாட்கள் எதிர்த்துப் பேச விரும்பாமல் கூச்சப்பட்டுச் சிரித்தவாறு அரைகுறையாய்ப் பதிலளித்தார்கள்.... வீதியில் கவச மோட்டார்கள் போய் வந்தன. அவற்றின் பழைய பெயர்கள் இன்னமும் மறையாமல் இருந்தன: ''ஓலேக்'', ''ரூரிக்'', ''ஸ்வெத்தஸ்லாவ்''—யாவும் பழங் கால ருஷ்ய அரசர்களின் பெயர்கள். இந்தப் பெயர்களின் மீது புதிதாய்ப் பெரிய சிவப்பு எழுத்துகள் வரையப்பட்டிருந்தன: ''ஆர். எஸ். டி. ஆர். பி.'' (ருஷ்யாவின் சமூக-ஜனநாயகத் தொழிலாளர் கட்சி). மிகாயிலொவ்ஸ்கி சாலையில் கைநிறைய செய்தியேடுகளுடன் ஓர் ஆள் வந்து நின்றார், அடித்து மோதிக் கொண்டு பெருங் கூட்டம் அவரைச் சூழ்ந்து கொண்டுவிட்டது. ஒரு ரூபிள், ஐந்து ரூபிள், பத்து ரூபிள் கொடுத்து வாங்குவதற்குத் தயாராய்

ஆடுமாடுகளைப் போல் ஏராளமானோர் முட்டி மோதிக் கொண்டார்கள். ரபோச்சி இ சல்தாத் செய்தியேடு அது. பாட்டாளி வர்க்கப் புரட்சியின் வெற்றியையும், சிறையில் இருந்த போல்ஷிவிக்குகள் விடுதலை செய்யப்பட்டதையும் அது அறிவித்தது; ஆதரவு அளிக்கும்படி போர்முனையிலும் உட்பகுதிகளிலும் இருந்த படையாட்களை அது அறைகூவி அழைத்தது....கிளர்ச்சித் துடிப்பு கொண்ட அந்தச் சிறிய ஏட்டின் நான்கு பக்கங்களிலும் பெரிய எழுத்துகளில் அச்சிடப்பட்ட அறைகூவலைத் தவிர செய்திகள் ஒன்றும் இல்லை....

சதோவயாவின் மூலையில் சுமார் இரண்டாயிரம் குடிமக்கள் குழுமி நின்று உயரமான ஒரு கட்டடத்தின் கூரையை உற்று நோக்கினர், அங்கே கூரையில் சிறிய சிவப்புப் பொறி ஒளிர்ந்துவிட்டு அடங்கிற்று.

''அதோ பாருங்கள்!'' என்று கூறி உயரமான விவசாயி ஒருவர் அதைச் சுட்டிக் காட்டினார். ''ஆத்திர மூட்டும் கைக் கூலி அங்கே இருக்கிறான். இப்போது மக்கள் மீது சுடப் போகிறான்....'' ஆனால் யாரும் அங்கே சென்று இது குறித்துப் பரிசீலிக்க வேண்டுமென நினைத்ததாய்த் தெரிய வில்லை.

* * *

நாங்கள் வந்து இறங்கிய போது ஸ்மோல்னியின் முன் பக்கம் அதன் முழு நீளத்துக்கும் விளக்குகளின் ஒளியுடன் தகதகத்துக் கொண்டிருந்தது. ஒவ்வொரு தெருவிலிருந்தும் இருட்டில் மங்கலான உருவங்களாய்த் தெரிந்த மக்கள் சாரை சாரையாய் இங்கு வந்து குவிந்து கொண்டிருந்தார்கள். கார்களும் மோட்டார் சைக்கிள்களும் ஓயாமல் வந்து சென்றன. யானை நிறங் கொண்ட பிரம்மாண்டமான கவச மோட்டார் ஒன்று, அதன் கூண்டில் இரண்டு செங்கொடிகள் பறக்க, கீச்சிட்டுக் கூவிய சங்கை ஒலித்துக் கொண்டு வெளிவாயிலிருந்து தடதடத்து ஓடி வந்தது. குளிராய் இருந்தது, வெளிவாயிலில் செங்காவலர்கள் தமக்கு ஒரு சொக்கப்பனை அமைத்துக் கொண்டு விட்டனர். உள்வாயிலிலும் நெருப்பு எரிந்தது, அதன் வெளிச்சத்தில் காவலர்கள் எங்களுடைய நுழைவுச் சீட்டுகளை எழுத்துக் கூட்டிப் படித்துப் பார்த்து

விட்டு எங்களை மேலும் கீழுமாய் உற்று நோக்கிப் பரிசீலித்த னர். வாயிற் கதவின் இரு மருங்கிலும் பக்கத்துக்கு நான்கு வீதம் அமைந்திருந்த அதிவேகப் பீரங்கிகளிலிருந்து கான் வஸ் உறைகள் நீக்கப்பட்டிருந்தன, அவற்றின் பின்புறத்தில் தோட்டாச் சங்கிலிகள் பாம்பு போல் தொங்கின. வெளி முற்றத்தில் மரங்களுக்கு அடியில் கூட்டமாய்க் கவச மோட் டார்கள் நின்றன, அவற்றின் இஞ்சின்கள் இறைந்து கொண் டிருந்தன. அறைகுறை வெளிச்சத்தில் காலியாய் நீண்டு சென்ற நடைகளில் காலடியின் தடதடப்பும் கூப்பாடும் கூச்சலும் அதிர்ந்தன.... எதற்கும் துணிந்த உறுதியான மனோபாவம் குடிகொண்டிருந்தது. பெருங் கூட்டமாய்ப் பல ரும் படிக்கட்டு வழியே கீழே இறங்கி வந்து கொண்டிருந் தார்கள். அவர்களிடையே கறுப்பு அங்கிகளும் வட்டமான கறுப்பு மென்முடித் தொப்பிகளும் அணிந்த தொழிலாளர் கள் இருந்தனர், இவர்களில் பலர் தோளில் துப்பாக்கி தொங்கவிட்டிருந்தார்கள், அழுக்கேறிய முரட்டு மேல் கோட்டும் தட்டையாய் அழுந்திய சாம்பல் நிற மென்முடித் தொப்பியும் அணிந்த படையாட்கள் இருந்தார்கள். இவர் களுக்கு நடுவில் தலைவர்கள் சிலர்—லுனச்சார்ஸ்கி, காமெ னெவ்—விரைந்து வந்தனர். அலைக்கழிக்கப்பட்டுப் பரபரக் கும் முகங்களுடன் கைக்கடியில் கனத்த காகிதக் கோப்பு அட்டைகள் வைத்துக் கொண்டு ஒரே நேரத்தில் எல்லோரு மாய்ச் சேர்ந்து பேசினர். பெத்ரொகிராது சோவியத்தின் சிறப்புக் கூட்டம் முடிவுற்றுவிட்டது. நான் காமெனெவை நிறுத்தினேன்—அவர் அதிவிரைவாய்ச் செயல்படும் சிற்று ருவ மனிதர், தோளுடன் ஒடுங்கியமைந்த உயிர்த்துடிப் புள்ள அகன்ற முகம் படைத்தவர். கூட்டத்தில் அப்போது தான் நிறைவேற்றப்பட்டிருந்த தீர்மானத்தை அவர் முன் னுரை எதுவுமின்றி வேகமாய்ப் பிரெஞ்சு மொழியில் படித் தார்:

பெத்ரொகிராது தொழிலாளர்கள், படையாட்கள் பிரதி நிதிகளது சோவியத்து, பெத்ரொகிராது பாட்டாளி வர்க்க மும் நகரக் காவல் படையும் நடத்தியிருக்கும் வெற்றிகரப் புரட்சியினை வாழ்த்திப் போற்றுகிறது. இந்த எழுச்சியின்

போது மக்கள் பெருந் திரளினர் வெளிப்படுத்தியிருக்கும் ஒற்றுமையையும் ஒழுங்கமைப்பையும் கட்டுப்பாட்டையும் முழுநிறை ஒத்துழைப்பையும் பெத்ரொகிராது சோவியத்து தனிப்பட வலியுறுத்திப் போற்றுகிறது. இவ்வளவு குறை வாய் இரத்தம் சிந்திய ஓர் எழுச்சி அரிதினும் அரிது, அதனி லும் அரிது இவ்வளவு சிறப்பாய் வெற்றி கண்ட ஓர் எழுச்சி.

சோவியத்துகளின் அரசாங்கமாய் இந்தப் புரட்சியால் தோற்றுவிக்கப்படப் போகும் தொழிலாளர்கள், விவசாயி களது அரசாங்கம், தொழில் துறைப் பாட்டாளி வர்க்கத் துக்கு ஏழை விவசாயிகளது பெருந் திரளினர் அனைவரின் ஆதரவும் கிடைக்கும்படி உறுதி செய்யப் போகும் இந்தஅர சாங்கம், யுத்தத்தின் துன்பங்களிலிருந்தும் சொல்லொணுக் கொடுமைகளிலிருந்தும் நாட்டைக் காப்பாற்றுவதற் குரிய ஒரே வழியான சோஷலிசத்தை நோக்கித் திடமாய் நடை போடுமென்று பெத்ரொகிராது சோவியத்து உறுதி யாய் நம்புகிறது.

புதிய தொழிலாளர்கள், விவசாயிகளது அரசாங்கம் போரிலீடுபடும் எல்லா நாடுகளுக்கும் உடனே நேர்மையான, ஜனநாயக சமாதானத்தை முன்மொழியும்.

அது நிலப்பிரபுக்களுடைய நிலவுடைமையை உடனடி யாய் ஒழித்து, நிலங்களை விவசாயிகளின் கைக்கு மாற்றும். தொழில் துறைப் பொருள்களின் உற்பத்தியின் மீதும் வினியோகத்தின் மீதும் அது தொழிலாளர்களது கண் காணிப்பை நிறுவும். வங்கிகளை அது பொதுக் கண்காணிப்பின் கீழ் கொண்டு வருவதோடு அவற்றை அரசின் ஏகபோக மாய் மாற்றும்.

பாட்டாளி வர்க்கப் புரட்சியைத் தமது முழு சக்தியோ டும் முழுப் பற்றுறுதியோடும் ஆதரிக்கும்படி ருஷ்யாவின் தொழிலாளர்களுக்கும் விவசாயிகளுக்கும் பெத்ரொகிராது தொழிலாளர்கள்,படையாட்களதுபிரதிநிதிகளின்சோவியத்து அறைகூவல் விடுக்கிறது. நகரத் தொழிலாளர்கள் ஏழை விவசாயிகளுடன் நேசக் கூட்டு கொண்டு, சோஷலிசத்தின் வெற்றிக்கு இன்றியமையாத முழுநிறைப் புரட்சிகர ஒழுங்கு நிலவும்படி உறுதி செய்யுமென்ற தனது திட நம் பிக்கையைப் பெத்ரொகிராது சோவியத்து வெளியிடுகிறது.

சோஷலிச இலட்சியத்துக்கு மெய்யான, நிலையான வெற்றி கிட்டச்செய்வதற்கு நமக்கு மேற்கு ஐரோப்பிய நாடுகளுடைய பாட்டாளி வர்க்கம் துணை புரியுமென்று பெத்ரொகிராது சோவியத்து உறுதியாய் நம்புகிறது.

''வெற்றி கைகூடிவிட்டதெனக் கருதுகிறீர்களா?''

அவர் தோள்களை உலுக்கி உயர்த்திக் கொண்டார். ''இன்னும் செய்ய வேண்டியது நிறைய இருக்கிறது. திகைக்கும்படியான அளவுக்கு நிறைய இருக்கிறது. இப்போது நடைபெற்றிருப்பது துவக்கமே ஆகும்....''

படிக்கட்டு மேடையில் நான் தொழிற் சங்கங்களது துணைத் தலைவரான ரியஸானவைச் சந்தித்தேன். அவர் முகம் இருண்டிருந்தது, சாம்பல் நிறத் தாடியைக் கடித்துக் கொண்டிருந்தார். ''இது வெறித்தனம்! வெறித்தனம்!'' என்று உரக்கக் கூவினர். ''ஐரோப்பியத் தொழிலாளி வர்க்கம் செயல்படப் போவதில்லை! அனைத்து ருஷ்யாவும்—'' கலங்கிப் போய்க் கையை வீசிவிட்டு ஓடிச் சென்றுர். ரியஸானவும் காமெனெவும் எழுச்சியை எதிர்த்தவர்கள், இருவரும் லெனினது வாதவலிமையின் சாட்டையடிக்கு இலக்கானவர்கள்....

பெத்ரொகிராது சோவியத்தின் அந்தக் கூட்டம் ஒப்பற்ற சிறப்புக்குரியது. இடைக்கால அரசாங்கத்தின் வீழ்ச்சியைப் புரட்சி இராணுவக் கமிட்டியின் பெயரில் திரோத்ஸ்கி அறிவித்தார்.

''மக்களை ஏமாற்றுவது முதலாளித்துவ அரசாங்கங்களுக்கு உரித்தான பண்பு'' என்றுர் அவர். ''ஆனல் தொழிலாளர்கள், படையாட்கள், விவசாயிகள் பிரதிநிதிகளது சோவியத்துகளாகிய நாம் வரலாறு கண்டிராத ஒரு முயற்சியை மேற்கொள்கிறேம்; படையாட்கள், தொழிலாளர்கள், விவசாயிகளது தேவைகளைப் பூர்த்தி செய்வதையன்றி வேறு நோக்கம் ஏதும் இல்லாத ஓர் ஆட்சியதிகாரத்தை அமைத்திடப் போகிறேம்.''

மேடையிலே லெனின் தோன்றினர், காது செவிடுபட வரவேற்பு முழக்கம் கிளர்ந்தெழுந்தது. உலகு தழுவிய அளவில் சமுதாயப் புரட்சி நடைபெறுமென்று அவர் முன்



லெப்டினண்ட் ஷிமித்தின் பெயர் தாங்கிய கவச மோட்டாரில்
புத்தீலவ் ஆலையைச் சேர்ந்த செங்காவலர்கள்,
1917 அக்டோபர்



பெத்ரொகிராதில் வீபர்கு வட்டாரத்தில்
நோவி லெஸ்னர் ஆலையின் செங்காவலர்கள்

னறிவித்தார்.... பிறகு ஸினேவியெவ் அகமகிழ்ந்து கூவினர்: ''சர்வதேசப் பாட்டாளி வர்க்கத்துக்கு நாம் செலுத்த வேண்டிய கடனை இன்று செலுத்திஞேம்; யுத்தத்துக்குப் பயங்கர அடி கொடுத்தோம்; ஏகாதிபத்தியவாதிகள் எல்லா ருக்கும், முக்கியமாய்க் கொலேகாரன் வில்ஹேல்முக்குப் படு பயங்கர அடி கொடுத்தோம்....''

அடுத்து திரோத்ஸ்கி அறிவித்தார், வெற்றிகர எழுச் சியைத் தெரிவித்துப் போர்முனைக்குத் தந்திகள் அனுப்பப் பட்டு விட்டன, இன்னும் பதில்கள் வந்து சேரவில்லே என்று. பெத்ரொகிராதை எதிர்த்துப் படைகள் வருவதாய்க் கேள்வி —இந்தப் படைகளுக்கு உண்மையை எடுத்துரைக்கத் தூதுக் குழு ஒன்றை அனுப்ப வேண்டும் என்ருர்.

அப்போது சில குரல்கள் எழுந்தன: ''சோவியத்துகளது அனைத்து ருஷ்யக் காங்கிரசின் சித்தத்தை முந்திக் கொண்டு செயல்படுகிறீர்கள்!''

திரோத்ஸ்கி அசங்காமல் பதிலளித்தார்: ''சோவியத்து களது அனைத்து ருஷ்யக் காங்கிரசின் சித்தத்தை முந்திக் கொண்டு பெத்ரொகிராது தொழிலாளர்களும் படையாட் களும் எழுச்சி நடத்திவிட்டார்கள்!''

வாயிற் கதவில் அலேமோதிய கூட்டத்துக்குள் புகுந்த டித்துக் கொண்டு நாங்கள் கூட்ட மாமண்டபத்தினுள் சென் ரேம். வெண்ணிறச் சரவிளக்குகளுக்கு அடியில் வரிசை வரிசையாய் இருந்த இருக்கைகளிலும், அசைய முடியாத படி இடைவழிகளிலும் ஓரங்களிலும் நெரித்துக் கொண்டும், சன்னலடிகளிலும் கூட்ட மேடையின் முனைகளிலுங்கூட தொத்திக் கொண்டும், அனைத்து ருஷ்யாவின் தொழிலாளர் கள், படையாட்களது பிரதிநிதிகள் குழுமியிருந்தார்கள். ஆவல் மிக்கோராய் மௌனமாகவோ, ஆவேச ஆரவாரத் துடனே இவர்கள் கூட்டத் தலேவரது மணியின் ஓசையை எதிர் பார்த்துக் காத்திருந்தார்கள். தண்ணீர் படாத மனித உடலங்களிலிருந்து எழுந்த புழுக்கமான சூட்டைத் தவிர, கூட்ட மண்டபத்துள் கதகதப்புக்கு ஏற்பாடு ஏதுமில்லே. வேதனே தரும் நீலச் சிகரெட்டுப் புகை மூட்டம் இத்திரளின ரிடமிருந்து மேலே எழுந்து, காற்றிலே அடர்ந்து தொங்கிக் கொண்டிருந்தது. தலேமைப் பொறுப் பேற்றிருந்தோரில்

யாராவது ஒருவர் அவ்வப்போது மேடை மீதேறி, புகை பிடிக்க வேண்டாமெனக் கேட்டுக் கொண்டார். உடனே புகை பிடிப்போர், பிடிக்காதோர் ஆகிய எல்லோருமாய்ச் சேர்ந்து ''தோழர்களே, புகை பிடிக்காதீர்கள்?'' என்று குரலெழுப்பினர், பிறகு தொடர்ந்து புகை பிடித்துக் கொண்டிருந்தனர். அபூஹவ் ஆலையிலிருந்து வந்திருந்த பிரதிநிதியாகிய அராஜகவாதி பெத்ரோவ்ஸ்கி, தமக்குப் பக்கத்தில் எனக்கு உட்கார இடம் ஒதுக்கித் தந்தார். அவர் முகம் மழித்துக் கொண்டு எத்தனையோ நாளாயிருக்கும், மேலெல்லாம் அழுக்கு படிந்திருந்தது, மூன்று இரவுகளாய் உறக்கமின்றி புரட்சி இராணுவக் கமிட்டியில் வேலை செய்து ஓய்ந்து போயிருந்த அவர் உட்கார முடியாமல் ஆடிவிழுந்து கொண்டிருந்தார்.

கூட்ட மேடையில் பழைய இத்ஸே-யி-கவின் தலைவர்கள் அமர்ந்திருந்தார்கள் — கொந்தளிப்பான சோவியத்துகளின் மீது கடைசி முறையாய் ஆதிக்கம் புரிந்து கொண்டிருந்தார்கள். புரட்சியின் ஆரம்ப நாள் முதலாய் சோவியத்துகளின் மீது நாட்டாண்மை புரிந்து வந்தவர்கள் இவர்கள். இப்போது சோவியத்துகள் இவர்களை எதிர்த்துக் கிளம்பிவிட்டன. ருஷ்யப் புரட்சியின் முதலாவது காலக்கூறு முடிவுற்றுவிட்டது, இவர்கள் இந்த முதலாவது காலக்கூறின் போது முட்டுக்கட்டை போட்டுப் புரட்சியைத் தக்க வழிகளில் இட்டுச் செல்ல முயன்றவர்கள்.... இவர்களில் முப்பெரும் மூர்த்திகளாய்த் திகழ்ந்தவர்கள் இப்போது இங்கில்லை: கேரென்ஸ்கி—இவர் ஏற்கெனவே கொந்தளித்து எழுந்துவிட்ட நகர்களையும் கிராமங்களையும் கடந்து போர்முனையை நோக்கி ஓடிக் கொண்டிருந்தார்; சிஹெயீத்ஸே—முதுபெரும் கழுகெனப் பெயர் பெற்ற இவர் யாவற்றையும் இகழ்ந்து துறந்துவிட்டுத் தமது ஜார்ஜிய மலைகளுக்குச் சென்று ஓய்வெடுத்துக் கொண்டவர், அங்கே எலும்புருக்கி நோயினால் நலிவுறப் போகிறவர்; திஸெரெத்தேலி—ஆத்ம சீலராய்க் கருதப்பட்ட இவரும் கடுமையாய் நோயுற்றவரே என்றாலும், திரும்பி வந்து களம் புகுந்து தமது நாவன்மையைச் செத்து மடிந்துவிட்ட ஓர் இலட்சியத்துக்காக அர்ப்பணிக்கப்

போகிறவர். கோட்ஸ் இங்கே மேடையில் அமர்ந்திருந்தார், மற்றும் டான், லீபெர், பொக்தானவ், புரோய்டோ, பிலீப் போவ்ஸ்கி ஆகியோரும் இங்கிருந்தார்கள்—முகம் வெளுத்துப் போய், கண்கள் குழி விழுந்து, ஆத்திரம் கொண்டோராய் அமர்ந்திருந்தார்கள். அவர்களுக்குக் கீழே சோவியத்துகளின் இரண்டாவது அனைத்து ருஷ்யக் காங்கிரஸ் கொதித்துக் கொந்தளித்தது; அவர்களுடைய தலைக்கு மேல் புரட்சி இராணுவக் கமிட்டியானது எழுச்சியின் எல்லா இழைகளை யும் தன் கையில் கொண்டு, குறி தவறாமல் தாக்கி, ஜாம்ப வான் அடி கொடுத்து அனல் பறக்க செயல்பட்டுக் கொண் டிருந்தது.... இரவு மணி 10.40.

டான்—சோபையில்லா முகமும் வழுக்கைத் தலை உருவ மும் கொண்டு தொளதொளப்பான இராணுவ டாக்டர் உடுப்பணிந்தவர்—மணி அடித்துக் கொண்டு நின்றார். உடனே கடுமையான நிசப்தம் குடி கொண்டுவிட்டது, வாயிற் கதவருகே நெருக்கியடித்துக் கொண்டிருந்த கூட்டத்தின் சலசலப்பும் சச்சரவும்தான் இடையிடையே காதுக்கு எட்டின....

''ஆட்சியதிகாரம் நம் கைக்கு வந்துவிட்டது'' என்று துயரம் தோய்ந்த குரலில் டான் பேச ஆரம்பித்தார், கணப் பொழுதுக்கு நிறுத்தியபின் தணிவான குரலில் மீண்டும் தொடர்ந்து பேசிச் சென்றார். ''தோழர்களே! சோவியத்து களின் காங்கிரஸ் மிகமிக அசாதாரணமான ஒரு தருணத்தில், மிகமிக அசாதாரணமான ஒரு சூழலில் கூடுகின்றது. இந்த நிலைமையில் அரசியல் உரை நிகழ்த்திக் காங்கிரசைத் துவக்கி வைக்கத் தேவையில்லை என்று இத்ஸே-யி-க ஏன் கருதுகிற தென நீங்கள் புரிந்து கொள்வீர்கள். நான் இத்ஸே-யி-கவின் ஓர் உறுப்பினன் என்பதையும், எங்களுடைய கட்சித் தோழர் கள் இத்தருணத்தில் குளிர்கால அரண்மனையில் பீரங்கித் தாக்குதலுக்கு உள்ளாகி, அமைச்சர்கள் என்ற முறையில் தமக்குள்ள கடமையை, இத்ஸே-யி-கவினால் தமக்கு அளிக் கப்பட்ட கடமையை நிறைவேற்றுவதற்காகத் தியாகம் புரி கிறார்கள் என்பதையும் நினைவில் கொள்வீர்களாயின் மேலும் தெளிவாய் நீங்கள் இதைப் புரிந்து கொள்வீர்கள்.'' (குழப்ப மும் கூச்சலும்.)

''தொழிலாளர்கள், படையாட்கள் பிரதிநிதிகளது சோவியத்துகளின் இரண்டாவது காங்கிரசின் முதலாவது அமர்வைத் துவக்கி வைக்கிறேன்!''

சலசலப்புக்கும் நடமாட்டத்துக்கும் மத்தியில் தலைமைக் குழுவின் தேர்தல் நடந்தேறியது. போல்ஷிவிக்குகள், இடது சாரி சோஷலிஸ்டுப் புரட்சியாளர்கள், மென்ஷிவிக்குச் சர்வ தேசியவாதிகள் ஆகியோரது உடன்பாட்டின் பேரில் வீதா சாரப் பிரதிநிதித்துவத்தின் அடிப்படையில் தலைமைக் குழுவை நிறுவுவதெனத் தீர்மானிக்கப்பட்டிருப்பதாய் அவ னேசவ் அறிவித்தார். உடனே சில மென்ஷிவிக்குகள் துள்ளி யெழுந்து ஆட்சேபித்தார்கள். தாடி வைத்த படையாள் ஒருவர் அவர்களைப் பார்த்துக் கூச்சலிட்டார்: ''போல்ஷிவிக்கு களாகிய நாங்கள் முன்பு சிறுபான்மையோராய் இருந்த போது நீங்கள் எங்களுக்கு என்ன செய்தீர்கள் என்பதைத். நினைத்துப் பாருங்கள்!'' தேர்தலின் முடிவு—14 போல்ஷிவிக்குகள், 7 சோஷலிஸ்டுப் புரட்சியாளர்கள், 3 மென்ஷிவிக்குகள், 1 சர்வதேசியவாதி (கோர்க்கியின் கோஷ்டியைச் சேர்ந்தவர்). வலதுசாரி, மையவாத சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களின் சார்பில் ஹேன்டெல்மன், தாம் தலைமைக் குழுவில் பங் கெடுத்துக் கொள்ள மறுப்பதாய் அறிவித்தார். மென்ஷிவிக்கு களின் சார்பில் ஹின்ச்சூக் இதே போல் அறிவித்தார். மென் ஷிவிக்கு சர்வதேசியவாதிகள் சில நிலைமைகள் சரிபார்க்கப் படும் வரை தாமும் தலைமைக் குழுவில் பங்கு கொள்வதற் கில்லை என்றனர். இங்கும் அங்குமாய்க் கையொலி முழக்க மும் கண்டனக் கூச்சல்களும் எழுந்தன. ஒரு குரல்: ''ஓடுகாலி கள், சோஷலிஸ்டுகள் என்பதாய்க் கூறிக் கொள்கிறீர்களே!'' உக்ரைனியப் பிரதிநிதிகளின் சார்பில் ஒருவர் தலைமைக் குழுவில் இடம் வேண்டுமெனக் கோரி அதைப் பெற்றுக் கொண்டார். பிறகு பழைய இத்ஸே-யி-கவின் உறுப்பினர் கள் மேடையிலிருந்து கீழே இறங்கினர், அவர்களுடைய இடங்களில் திரோத்ஸ்கியும் காமெனெவும் லுனச்சார்ஸ்கி யும் கொலன்தாயும் நொகீனும் ஏனையோரும் வந்து நின்றார் கள்.... மாமண்டபமே எழுந்து நின்று இடியென முழங்கிக் கையொலி எழுப்பிற்று. வானுர உயர்ந்துவிட்டார்கள் இந்தப் போல்ஷிவிக்குகள்! நான்கு மாதங்களுக்கும் குறைவான

காலத்துக்கு முன்பு விலக்கி ஒதுக்கப்பட்டு வேட்டையாடப் பட்ட சிறு குழுவாய்* இருந்தவர்கள், எழுச்சியின் உச்ச அலையால் உயர்த்தப்பட்டு இந்த உன்னத நிலைக்கு, மாபெரும் ருஷ்யாவின் தலைமை நிலைக்கு அல்லவா உயர்ந்து விட்டார்கள்!

நிகழ்ச்சி நிரலை காமெனெவ் தெரிவித்தார்: முதற்கண், ஆட்சியதிகாரத்தின் ஒழுங்கமைப்பு; இரண்டாவது, யுத்த மும் சமாதானமும்; மூன்றாவது, அரசியல் நிர்ணயச் சபை. லஸோவ்ஸ்கி எழுந்து நின்று எல்லாக் கட்சிப் பிரிவுகளின் பேராட் குழுவின் உடன்பாட்டின் பேரில் முதலில் பெத்ரொ கிராது சோவியத்தின் உரையைக் கேட்டு விவாதிப்பதென் றும், பிறகு இத்ஸே-யி-க உறுப்பினர்கள், பல்வேறு கட்சி களது பிரதிநிதிகள் ஆகியோரைப் பேச அழைப்பதென்றும், முடிவில் அமர்வின் நிகழ்ச்சி நிரலுக்குச் செல்வதென்றும் முன்மொழியப்படுவதாய் அறிவித்தார்.

ஆனால் திடுமென ஒரு புதிய சப்தம் கேட்டது, கூட்டத் தினரின் ஆரவாரத்தைக் காட்டிலும் ஆழமாய், விடாப்பிடி யாய், கலவரமூட்டுவதாய் இருந்தது—பீரங்கி வெடிகளின் அதிர்வு தொலைவிலிருந்து கேட்டது. கலக்க முற்றோராய்ப் பலரும் மங்கலாயிருந்த சன்னல்களின் பக்கம் திரும்பிப் பார்த் தார்கள். அவர்கள் கலவரமடைந்து விட்டார்கள். மார்த் தவ் பேச அனுமதி கோரினார், கரகரக்கும் குரலில் பலக்கக் கூறினார்: ''தோழர்களே, உள்நாட்டுப் போர் ஆரம்ப மாகிறது! நெருக்கடிக்குச் சமாதான தீர்வு காண்பதுதான் நம் முன்னுள்ள முதலாவது பிரச்சினை. உள்நாட்டுப் போரைத் தவிர்ப்பதற்கான வழி என்னவென்பது குறித்து நாம் கோட் பாட்டின் நிலையிலிருந்தும் அரசியல் செயல்முறையின் கண் ணோட்டத்திலிருந்தும் அவசரமாய் விவாதித்தாக வேண்டும். தெருக்களில் நமது சோதரர்கள் சுட்டு வீழ்த்தப்படுகிறார் கள்! இத்தருணத்தில், சோவியத்துகளின் காங்கிரஸ் ஆரம்ப மாகுமுன், புரட்சிக் கட்சிகளில் ஒன்றால் ஏற்பாடு செய்யப் பட்ட இராணுவச் சதியின் மூலம் ஆட்சியதிகாரப் பிரச்சினை முடிவு செய்யப்பட்டு வருகிறது—'' சற்று நேரம் அவர் குரல் மூழ்கடிக்கப்பட்டுவிட்டது, காதில் விழவில்லை. ''புரட்சிக்

* 49 ஆம் பக்கத்திலுள்ள பதிப்பாசிரியர் குறிப்பைப் பார்க்கவும்.—[பதிப்பாசிரியர்.]

கட்சிகள் யாவும் உண்மையை நேர் நின்று பார்க்க வேண்டும்! ஆட்சியதிகாரப் பிரச்சினைதான் காங்கிரசின் முன்னுள்ள முதலாவது வப்ரோஸ் (பிரச்சினை); ஆனால் இந்தப் பிரச்சினை தெருக்களில் ஆயுத பலங் கொண்டு ஏற்கெனவே தீர்க்கப் படுகிறது!... ஜனநாயகம் அனைத்தாலும் அங்கீகரிக்கப்படும் படியான ஓர் ஆட்சியதிகாரத்தை நாம் உருவாக்கியாக வேண்டும். இந்தக் காங்கிரஸ் புரட்சிகர ஜனநாயகத்தின் குரலாய் இருக்க விரும்பினால், மூண்டெழுந்து வரும் உள் நாட்டுப் போரின் முன்னால் கைகட்டிக் கொண்டு இது சும் மாயிருக்கக் கூடாது. இந்த உள்நாட்டுப் போரின் விளைவாய் எதிர்ப்புரட்சி பயங்கரமாய் வெடிக்கக் கூடும்.... சமாதான வழியில் முடிவு ஏற்படுவதற்குரிய சாத்தியப்பாடு ஐக்கிய ஜனநாயக ஆட்சியதிகாரத்தை நிறுவுவதிலேதான் அடங்கி யிருக்கிறது.... ஏனைய சோஷலிஸ்டுக் கட்சிகளுடனும், நிறுவனங்களுடனும் பேச்சுவார்த்தை நடத்துவதற்கு நாம் ஒரு பிரதிநிதிக் குழுவை தேர்ந்தெடுக்க வேண்டும்....''

தொலைவில் இடையறாது எழுந்த பீரங்கி முழக்கம் சன்னல்கள் வழியே கேட்டது. பிரதிநிதிகள் இடையறாது விவாதித்துக் கூச்சலிட்டுக் கொண்டிருந்தார்கள்.... இவ்விதம் பீரங்கி வெடியதிர்ச்சிக்கிடையே, இருட்டில், வெறுப்புக்கும் அச்சத்துக்கும் எதற்கும் தயங்காத துணிவுக்கும் நடுவில் புதிய ருஷ்யா பிறந்து கொண்டிருந்தது.

இடதுசாரி சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களும் ஐக்கிய சமூக-ஜனநாயகவாதிகளும் மார்த்தவின் முன்மொழிவை ஆதரித்தனர். அது ஏற்றுக் கொள்ளப்பட்டது. விவசாயிகள் சோவியத்துகளது அனைத்து ருஷ்ய நிர்வாகக் கமிட்டி இந்தக் காங்கிரசுக்குப் பிரதிநிதிகளை அனுப்ப மறுத்துவிட்டதாய் ஒரு படையாள் அறிவித்தார்; அதிகாரபூர்வமான அழைப்புடன் ஒரு குழுவினை அதற்கு அனுப்ப வேண்டுமென அவர் முன்மொழிந்தார். ''சில பிரதிநிதிகள் இங்கே வந்திருக் கிறார்கள், அவர்களுக்கு வாக்குரிமை அளிக்க வேண்டுமென நான் முன்மொழிகிறேன்'' என்றார் அவர். இந்த முன் மொழிவுகள் ஏற்றுக் கொள்ளப்பட்டன.

காப்டனுக்குரிய தோள் கச்சைகள் அணிந்த ஹார்ராஷ் தாம் பேச வேண்டுமென எழுந்து நின்று கத்தினார். ''அரசி

யல் பித்தலாட்டக்காரர்கள் இந்தக் காங்கிரசைத் தம் பிடிக்குள் வைத்திருக்கிறார்கள்'' என்று அவர் கூச்சலிட்டார். ''ஆட்சியதிகாரப் பிரச்சினைக்கு நாம் இந்தக் காங்கிரசில் தீர்வு காண்போம் என்பதாய் இவர்கள் நம்மிடம் சொன்னார்கள்; ஆனால் காங்கிரஸ் ஆரம்பமாகும் முன்பே, நம்முடைய முதுகுக்குப் பின்னால், இந்தப் பிரச்சினை தீர்க்கப்படுகிறது! குளிர்கால அரண்மனையின் மீது தாக்குதல்கள் நடைபெறுகின்றன; ஆனால் இம்மாதிரியான தாக்குதல்கள் மூலம், முரட்டுத் துணிச்சலுடன் இப்படிப்பட்ட அடாதச் செயலில் இறங்கியிருக்கும் அரசியல் கட்சியின் சவப்பெட்டியில்தான் ஆணிகள் அறையப்பட்டு வருகின்றன!'' ஆத்திரக் கூச்சல்கள் எழுந்தன. அடுத்து ஹர்ரா பேசினார்:* ''இங்கே நாம் சமாதானத்தை முன்மொழிந்து கொண்டிருக்கையில் வெளியே தெருக்களில் போர் நடைபெற்று வருகிறது.... சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களும் மென்ஷிவிக்குகளும் தற்போது நடைபெறுவதில் சம்பந்தப்பட மறுக்கிறார்கள், ஆட்சியதிகாரத்தைக் கைப்பற்றுவதற்கான இந்த முயற்சியை எதிர்க்கும்படி எல்லா சமூக சக்திகளுக்கும் அறைகூவல் விடுக்கிறார்கள்....'' 12ஆவது சேனையைச் சேர்ந்த பிரதிநிதியும் துருதொவீக்குமான கூச்சின் பேசினார்: ''தகவல் தெரிந்து செல்வதற்காகவே நான் இங்கு வந்தேன், உடனே நான் போர் முனைக்குத் திரும்பப் போகிறேன். அரசியல் நிர்ணயச் சபை கூடுவதற்கு மூன்றே வாரங்கள் முன்னதாய் சோவியத்துகள் ஆட்சியதிகாரத்தை ஏற்பதானது முதுகுப் புறமாய் மறைந்து வந்து சேனையைத் தாக்கிக் குத்துவதாகும், மக்களுக்கு எதிரான கொடுங் குற்றமாகும் என்றே சேனைக் கமிட்டிகள் யாவும் கருதுகின்றன—!'' கூச்சல்கள்: ''பொய்! புளுகாதே!''... கூக்குரலில் சற்று நேரத்துக்கு அவர் பேச்சு காதில் விழவில்லை. ''பெத்ரொகிராதில் நடைபெறும் இந்த சாகசத்துக்கு நாம் முடிவு கட்டியாக வேண்டும்! நாட்டையும் புரட்சியையும் பாதுகாக்கும் பொருட்டு இம்மண்டபத்தை விட்டு வெளியேறும்படி எல்லாப் பிரதிநிதிகளையும் நான் வேண்டுகிறேன்!'' காது செவிடுபடும்படியான கண்டனக் கூச்சல்

* பிராவ்தா செய்தியுரையின் படி இதைப் பேசியவர் ஹர்ராஷ்.—[பதிப்பாசிரியர்.]

களுக்கிடையே இடைவழியில் அவர் நடந்து சென்ற போது பலரும் அச்சுறுத்தும் பாவனையில் எழுந்து நின்று அவரைச் சாடினர்.... பிறகு நீளமான பழுப்புநிறத் தாடி வைத்திருந்த இராணுவ அதிகாரி ஹின்ச்சூக்* அமரிக்கையாய், இதமான முறையில் பேசினர்: ''போர்முனையைச் சேர்ந்த பிரதிநிதிகளின் சார்பில் நான் பேசுகிறேன். இந்தக் காங்கிரசில் சேனையானது சரிவர பிரதிநிதித்துவம் பெற்றிருக்கவில்லை, தவிரவும் அரசியல் நிர்ணயச்சபை கூடுவதற்கு மூன்று வாரங்களே இருக்கும் இந்த நேரத்தில் சோவியத்துகளின் காங்கிரஸ் அவசியமென சேனை கருதவில்லை—'' கூச்சலும் கால்தட்டலும் கடுமையாகி விட்டன. ''சோவியத்துகளின் காங்கிரஸ் இதற்கு வேண்டிய அதிகாரம் பெற்றிருப்பதாய்ச் சேனை கருதவில்லை—'' மண்டபம் எங்கும் படையாட்கள் எழுந்து நின்றார்கள்.

''யார் சார்பில் பேசுகிறீர்? நீர் யாருடைய பிரதிநிதி?'' என்று அவர்கள் கத்தினார்கள்.

''ஐந்தாவது சேனையின் சோவியத்தினுடைய மத்திய நிர்வாகக் கமிட்டி, இரண்டாது எப்—ரெஜிமென்ட், முதலாவது என்—ரெஜிமென்ட், மூன்றாவது எஸ்—துப்பாக்கிப் படை....''

''எப்போது தேர்ந்தெடுக்கப்பட்டீர்? நீர் படையாட்களின் பிரதிநிதியல்ல, இராணுவ அதிகாரிகளின் பிரதிநிதி! படையாட்கள் கூறும் கருத்து என்ன?'' ஏளனக் கூச்சல்களும் கண்டனக் குரல்களும்.

''போர்முனைக் குழுவினரான நாங்கள் இங்கு நடைபெற்றுள்ளதற்கும், இங்கு நடைபெற்று வருவதற்கும் எங்களுக்கும் ஒட்டுமில்லை உறவுமில்லை என்று அறிவிக்கிறோம்! புரட்சியைப் பாதுகாப்பதற்காகத் தன்னுணர்வு கொண்ட புரட்சிகர சக்திகள் யாவற்றையும் ஒன்றுதிரட்டுவது அவசியமென்று நாங்கள் கருதுகிறோம்! போர்முனைக் குழுவினர் இந்தக் காங்கிரசை விட்டு வெளியேறுகின்றனர்.... நாங்கள் போராட வேண்டியது வெளியே—தெருக்களில்!''

---

* ஹின்ச்சூக் பேசியதாய் ஜான் ரீடு குறிப்பிடும் இந்தப் பேச்சு கூச்சினுடைய பேச்சின் தொடர்ச்சியாய்ச் செய்தியேடுகளில் குறிக்கப்படிருக்கிறது.—[பதிப்பாசிரியர்.]

பலத்த கண்டனக் கூச்சல்கள். ''உமது இந்தப் பேச்சு தலைமை அலுவலர்களுடையது—சேனையினுடையது அல்ல!''

''இந்தக் காங்கிரசை விட்டு வெளியேறும்படி நல்லறிவு கொண்ட எல்லாப் படையாட்களையும் வேண்டுகிறேன்!''

''கர்னீலவ் கையாள்! எதிர்ப்புரட்சியாளர்! பகைவன் கைக்கூலி!'' என்று நாற்புறமிருந்தும் அவரை ஏசினர்.

பிறகு மென்ஷிவிக்குகளின் சார்பில் ஹின்ச்சூக் பேசினார்: சமுதாயத்தின் எல்லாப் பகுதிகளின் ஆதரவையும் பெறும் படியான ஒரு புதிய அமைச்சரவையை அமைப்பதற்காக இடைக்கால அரசாங்கத்துடன் பேச்சு வார்த்தைகள் தொடங்க வேண்டும், சமாதான தீர்வுக்கு இது ஒன்றே வழி என்றார். சில நிமிடங்கள் வரை அவர் பேச முடியாதபடி கூச்சல்கள் எழுந்தன. பிறகு குரலை உயர்த்தி மென்ஷிவிக்கு அறிக்கையை உரக்கக் கத்திப் படித்தார்:

''ஏனைய கட்சிகளையும் கோஷ்டிகளையும் கலந்து கொள்ளாமலே போல்ஷிவிக்குகள் பெத்ரொகிராது சோவியத்தின் உதவியுடன் இராணுவச் சதி நடத்தியுள்ள காரணத்தால், இந்தக் காங்கிரசில் நாங்கள் இருப்பது சாத்தியமற்றதாகி விட்டது. ஆகவே நாங்கள் வெளியேறுகிறோம், எங்களைப் பின்தொடர்ந்து இங்கிருந்து வெளியேறுமாறும் நிலைமை குறித்து விவாதிப்பதற்காகக் கூடுமாறும் ஏனைய கோஷ்டிகளையும் அழைக்கின்றோம்!''

''துரோகி!'' அனேகமாய்த் தொடர்ச்சியாய் எழுந்த கூச்சலுக்கும் கூப்பாட்டுக்கும் இடையே ஹேறன்டெல்மன், சோஷலிஸ்டு புரட்சியாளர்களின் சார்பில் குளிர்கால அரண் மனை மீதான பீரங்கித் தாக்குதலைக் கண்டித்தது காதில் விழுந்தது.... ''இம்மாதிரியான அராஜகத்தை நாங்கள் எதிர்க்கிறோம்....''

அவர் வாயை மூடியிருக்க மாட்டார், அதற்குள் இளம் படையாள் ஒருவர் மேடை மீது தாவி ஏறினார். மெலிந்த முகமும் பளிச்சிட்டு மின்னும் கண்களும் கொண்ட அவர் நாடக பாணியில் சட்டெனக் கையை உயர்த்தினார்:

''தோழர்களே!'' என்று கூவினார், உடனே மண்டபம் நிசப்தமாகிவிட்டது. ''எனது ஃபமீலியா (குடும்பப் பெயர்) பீட்டர்சன்—இரண்டாவது லட்டிஷ் துப்பாக்கிப் படையின்

சார்பில் பேசுகிறேன். சேனைக் கமிட்டிகளது இரு பிரதிநிதி களின் உரைகளை நீங்கள் கேட்டீர்கள். உரை நிகழ்த்திய இவர்கள் சேனையின் பிரதிநிதிகளாய் இருந்திருந்தால் இந்த உரைகள் சிறிதளவேனும் மதிப்புக்குரியனவாய் இருந்திருக் கும்—''கட்டுக்கடங்காத கையொலி முழக்கம். ''ஆனால் இவர்கள் படையாட்களது பிரதிநிதிகளல்ல!'' முட்டியை உயர்த்தி ஆட்டினார். ''சோவியத்துக்கும் சேனைக் கமிட்டிக் கும் மறுதேர்தல் நடத்தப்பட வேண்டுமென்று 12ஆவது சேனை நெடுங்காலமாய் வற்புறுத்திக் கோரி வந்திருக்கிறது. உங்களுடைய இத்ஸே-யி-க செய்தது போலவே எங்கள் கமிட் டியும் படையாள் பெருந்திரளினரின் பிரதிநிதிகளது கூட் டத்தைக் கூட்ட மறுத்துவிட்டு, செப்டம்பர் இறுதி வரை காலம் கடத்தி வந்தது. இந்தக் காங்கிரசுக்குப் பிற்போக்கு வாதிகள் பொய்யான தமது சொந்த பிரதிநிதிகளைத் தேர்ந் தெடுத்து அனுப்ப வேண்டுமென்று அது இவ்வாறு செய்தது. இப்போது நான் உங்களுக்குச் சொல்லுகிறேன், லட்டிஷ் படையாட்கள் திரும்பத் திரும்ப கூறி வந்திருப்பது என்ன வென்றால், 'தீர்மானங்கள் போதும்! பேசியது போதும்! செயல்களே நமக்கு வேண்டும்—ஆட்சியதிகாரம் நம் கரங் களுக்கு வந்தாக வேண்டும்!' ஆகவே இந்தப் போலிப் பிரதி நிதிகள் காங்கிரசை விட்டு வெளியேறட்டும்! சேனை அவர் கள் பக்கம் இல்லை!''

ஆர்வ முழக்கத்தால் மண்டபம் கிடுகிடுத்தது. அமர்வு ஆரம்பமாகிச் சிறிது நேரம் வரை பிரதிநிதிகள் நிகழ்ச்சி களின் விரைவான ஓட்டத்தால் மலைத்துப் போய், பீரங்கியின் சப்தத்தால் அதிர்ச்சியுற்றுத் தயங்கிக் கொண்டிருந்தார்கள். ஒரு மணி நேரமாய் மேடையிலிருந்து ஒன்றின்பின் ஒன்றாய் அவர்கள் மீது விழுந்த சம்மட்டி அடிகள் அவர்களை ஒருசேர இணைத்திட்ட போதிலும், அவர்களைக் கலக்கமுறச் செய்து வந்தன. அப்படியானால் அவர்கள் தனித்தா நின்றார்கள்? ருஷ்யா அவர்களை எதிர்த்தா கிளம்பிற்று? சேனையானது பெத்ரொகிராதைத் தாக்குவதற்காக வந்து கொண்டிருப் பதாய்க் கூறப்பட்டது மெய்தானா? பிறகு தெளிந்த கண் கொண்ட இந்த இளம் படையாள் பேசினான், இது மெய்தான் என்பது அக்கணமே அவர்களுக்குத் தெளிவாகிவிட்டது....

இதுதான் படையாட்களின் குரல்—இராணுவ உடுப்பணிந்த கொந்தளிப்பான லட்சோப லட்சக் கணக்கான தொழிலாளர்களும் விவசாயிகளும் தம் போன்றவர்கள்தாம், அவர்களுடைய எண்ணங்களும் உணர்ச்சிகளும் முழுக்க முழுக்க தம்முடையவற்றைப் போன்றவைதாம் என்பது தெளிவாயிற்று....

மேலும் பல படையாட்கள் பேசினார்கள்... போர்முனைப் பிரதிநிதிகளின் சார்பில் கிமேல்ஷாக் பேசுகையில், காங்கிரசிலிருந்து வெளியேறுவதென்ற இவர்களது தீர்மானம் மிகச் சிறு பெரும்பான்மையின் பேரில்தான் ஏற்கப்பட்டது, அதுவும் போல்ஷிவிக்கு உறுப்பினர்கள் இந்த வாக்கெடுப்பில் கலந்துகொள்ளவில்லை, ஏனெனில் தொகுதிகளின்படி அல்லாமல் அரசியல் கட்சிகளின்படி பிரிவினை செய்ய வேண்டுமென அவர்கள் ஒதுங்கி விட்டனர். "போர்முனைப் பிரதிநிதிகளில் நூற்றுக் கணக்கானோர் படையாட்களின் பங்கு இல்லாமலே தேர்ந்தெடுக்கப் பட்டவர்களாவர்" என்றார் அவர். "ஏனென்றால் இப்போது சேனைக் கமிட்டிகள் சாமானியப் பெருந்திரளினரின் மெய்யான பிரதிநிதிகளாய் இருக்கவில்லை...." ஹர்ராஷ், ஹின்ச்சூக் போன்ற இராணுவ அதிகாரிகளை இந்தக் காங்கிரசில் சேனையின் பிரதிநிதிகளாய்க் கொள்ள முடியாது என்று லுக்கியானவ் பலக்கக் கூச்சலிட்டார். "மெய்யாகவே அகழ்வரிகளில் இருப்போர் ஆட்சியதிகாரமானது சோவியத்துகளின் கைக்கு மாற்றப்பட வேண்டுமென முழு மனதாய் விரும்புகிறார்கள். இந்த மாற்றத்திலிருந்து அவர்கள் நிறைய எதிர்பார்க்கிறார்கள்!" என்றார்... காற்றின் திசை மாறிவிட்டது.

பிறகு யூதர்களது சமூக-ஜனநாயகக் கட்சியாகிய பூந்த்தின் சார்பில் அப்ரமோவிச்* பேசினார்—ஆத்திரம் அவருக்குத் தொண்டையை அடைத்தது, தடித்த கண்ணாடிகளுக்குப் பின்னால் அவர் கண்கள் படபடத்தன.

"பெத்ரொகிராதில் தற்போது நடைபெறுவது கேடார்ந்த பயங்கர விபத்தாகும்! மென்ஷிவிக்குகள், சோஷலிஸ்டுப்

---

* அப்ரமோவிச், ஏர்லிஹ் ஆகிய இருவரின் பேச்சுகளையும் ஜான் ரீடு ஒன்றாய்ச் சேர்த்து அப்ரமோவிச்சின் பேச்சாய் இங்கு தருவதாய்த் தெரிகிறது.—[பதிப்பாசிரியர்.]

புரட்சியாளர்கள் ஆகியோரது அறிக்கைக்கு பூந்த கோஷ்டி யினரும் உடன்பாடு தெரிவித்து இந்தக் காங்கிரசிலிருந்து வெளியேறுகிருர்கள்!'' குரலையும் அதோடு கையையும் அவர் உயர்த்திஞர். ''வெளியேருமல் இங்கேயே இருந்து நாங்கள் இந்தக் கொடுங் குற்றங்களுக்குப் பொறுப்பாளிகளாக முடியாது, ருஷ்யப் பாட்டாளி வர்க்கத்துக்கு நாங்கள் ஆற்ற வேண்டிய கடமையானது இதற்கு அனுமதிக்கவில்லை. குளிர் கால அரண்மனை மீதான பீரங்கித் தாக்குதல் நிற்காமல் நடைபெறுவதால் நகர டூமாவானது மென்ஷிவிக்குகளோடும் சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களோடும் விவசாயிகளது சோவியத்துகளின் நிர்வாகக் கமிட்டியோடும் சேர்ந்து இடைக்கால அரசாங்கத்துடன் கூட இறந்து படுவதெனத் தீர்மானம் செய்திருக்கிறது, நாங்களும் இவர்களோடு சேர்ந்து கொள்ளப் போகிரேம்! நிராயுதபாணிகளாய் நின்று பயங் கரவாதிகளது இயந்திரத் துப்பாக்கிகளுக்கு எங்கள் நெஞ்சைத் திறந்து காட்டப் போகிரேம்.... இந்தக் காங்கிரசில் கூடியிருக்கும் எல்லாப் பிரதிநிதிகளையும் நாங்கள் அழைக்கிரேம்—'' இதற்கு மேல் அவர் பேசியது காதில் விழவில்லை, கண்டனக் கூச்சலில் மூழ்கிவிட்டது. ஐம்பது பிரதிநிதிகள் எழுந்து இடித்து மோதிக் கொண்டு வெளியே சென்ற போது, புயலென ஏளனக் கூச்சல்களும் மிரட்டல்களும் சாபங்களும் மூண்டெழுந்தன....

காமெனெவ் மணியை அடித்துப் பலக்கக் கூவிஞர்: ''இருக்கைகளில் அமருங்கள், நம் முன்னுள்ள வேலைகளைக் கவனிப்போம்!'' திரோத்ஸ்கி எழுந்து நின்ருர், அவர் முகம் வெளிறிட்டுக் கடுகடுப்பாய் இருந்தது, எதற்கும் அசங்காத அலட்சிய மனோபாவம் தொனிக்க அவர் தமது வலிவான குரலில் கூறிஞர்: ''இந்தச் சமூக-சமரசவாதிகள் எல்லோரும், பீதி கொண்ட மென்ஷிவிக்குகளும், சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களும், பூந்த்துக்காரர்களும் வெளியேறிப் போய்ச் சேரட்டும்! இவர்கள் வேண்டாத குப்பைகள், வரலாற்றின் குப்பைக் குழியில் ஒதுக்கித் தள்ளப்படுவார்கள்!''

போல்ஷிவிக்குகளின் சார்பில் பேசிய ரியஸானவ் நகர டூமாவின் வேண்டுகோளுக்கு ஏற்ப புரட்சி இராணுவக் கமிட்டி பேச்சுவார்த்தைகள் நடத்துவதற்காகக் குளிர்கால

அரண்மனைக்கு ஒரு தூதுக் குழுவை அனுப்பிற்று என்றார். ''இரத்தம் சிந்தப்படுவதைத் தவிர்த்துக் கொள்வதற்காக இவ்விதம் நாம் இயன்றது அனைத்தும் செய்திருக்கிறோம்....''

அங்கிருந்து நாங்கள் அவசரமாய்ப் புறப்பட்டோம், புரட்சி இராணுவக் கமிட்டியின் அறையில் சிறிது நேரம் காத்திருந்தோம். புரட்சி இராணுவக் கமிட்டியினர் தொலை பேசிகளின் இரைச்சலுக்கு மத்தியில் தலை தெறிக்கும் வேகத்தில் வேலை செய்து கொண்டிருந்தார்கள். மேல் மூச்சு வாங்கும்படி ஓடி வந்து தகவல் தொடர்புப் பணியாளர்களுடன் பேசித் தகவல் தெரிந்து கொண்டார்கள்; மீண்டும் பணியாளர்களைப் பல இடங்களுக்கும் போகச் சொன்னார்கள்; வாழ்வுக்கும் மரணத்துக்கும் அறுதியிடும்படியான அதிகாரமளித்துக் கமிசார்களை நகரின் தொலை முடுக்குகளுக்கு எல்லாம் அனுப்பி வைத்தார்கள். அறைக் கதவு திறக்கப் பட்டதும் கெட்ட காற்றும் சிகரெட்டுப் புகையும் குப்பென்று வெளியே பாய்ந்தன. தலைவிரி கோலமாய்த் தோன்றிய ஆட்கள் மின் விளக்கின் ஒளியில் நகரப் படத்தின்மீது கவிழ்ந்து கொண்டிருந்த காட்சி எங்கள் கண்ணில் பட்டது.... வெளிர் மஞ்சள் முடிகளும் சிரித்த முகமும் கொண்ட இளைஞரான தோழர் ஜோசெபோவ்-துஹ்வீன்ஸ்கி எங்களுக்கு நுழைவுச் சீட்டுகள் தயார் செய்து தந்தார்.

குளிராயிருந்த இரவினுள் நாங்கள் வந்தபோது ஸ்மோல்னியின் முன்னால் கார்கள் வந்து சேர்வதும் புறப்பட்டுச் செல்வதுமாய் இருந்தன. இந்த இரைச்சலுக்கு மேல் தொலைவில் பீரங்கியின் சீரான வெடியொலி கேட்டது. பெரிய லாரி ஒன்று அதன் இஞ்சினின் படபடப்பில் அதிர்ந்து கொண்டு நின்றிருந்தது. ஆட்கள் அதனுள் பெருங் கட்டுகளை வீசியெறிந்தார்கள், துப்பாக்கி தாங்கிய வேறு சிலர் லாரிக்குள்ளிருந்து இவற்றை வாங்கிக் கொண்டார்கள்.

''எங்கே போகிறீர்கள்?'' என்று நான் உரக்கக் கேட்டேன்.

''நகரெங்கும்!'' என்று, சிறிய உருவங் கொண்ட தொழிலாளி ஒருவர் சிரித்தவாறு கைகளை விரித்துக் காட்டிப் பதிலளித்தார்,

எங்களுடைய அடையாளச் சீட்டுகளைக் காட்டினோம். ''வாங்க எங்களுடன்!'' என்று அழைத்தார்கள். ''ஆனால் துப்பாக்கிகள் சுடப்படலாம்—'' நாங்கள் லாரியினுள் ஏறினோம். கிரீச்சிட்டுக் கிளட்சு அழுந்திற்று, அந்தப் பெரிய வண்டி வெடுக்கென முன்னே நகர்ந்தது, நாங்கள் பின்னால் தள்ளப் பட்டு உள்ளே ஏறிக் கொண்டிருந்தோர் மீது மோதிக் கொண்டோம். வாயிலுக்கு முன்னால் எரிந்த கணப்புத் தீயையும் பிறகு வெளிவாயிலுக்கு எதிரே துப்பாக்கிகளுடன் சுற்றி மண்டியிட்டு அமர்ந்திருந்த தொழிலாளர்களது முகங்களில் செவ்வொளி பாய்ச்சிய தீயையும் கடந்து, ஆடியதிர்ந்து கொண்டு சுவோரொவ்ஸ்கி சாலையிலே உச்ச வேகத்தில் சென்றோம்.... கட்டின் மீதிருந்த மேல் காகிதத்தை ஒருவர் கிழித்துப் பிரசுரங்களைக் கத்தை கத்தையாய் எடுத்து வெளியே காற்றில் வீசியெறிய முற்பாட்டார். நாங்களும் அவரைப் பின்பற்றி இருண்ட சாலையில் எங்களுக்குப் பின்னால் வெள்ளைக் காகிதங்களை வால் போல் சுழன்று மிதக்கச் செய்தோம். இரவில் தெரு வழியே சென்றவர்கள் குனிந்து அவற்றை எடுத்துக்கொண்டனர். தெரு மூலைகளில் நெருப்பைச் சுற்றிக் கூடியிருந்த காவற் குழுவினர் அவற்றைப் பிடிப்பதற்காகக் கைகளை மேலே உயர்த்திக் கொண்டு ஓடி வந்தார்கள். ஆயுதமேந்தியவர்கள் சில நேரங்களில் முன்னே தோன்றி ''ஸ்தோய்!''—நிறுத்து!—என்று கூச்சலிட்டுத் துப்பாக்கிகளை உயர்த்திக் காட்டினர். ஆனால் எங்கள் டிரைவர் எங்களுக்குப் புரியாத சொற்களைச் சொல்லிப் பலத்த குரலில் கத்தினார்; நிற்காமலே நாங்கள் தடதடத்துப் பறந்தோம்....

பிரசுரத்தின் பிரதி ஒன்றை எடுத்து, விர்ரெனப் பாய்ந்து சென்ற தெரு விளக்குகளின் வெளிச்சத்தில் நான் படித்துப் பார்த்தேன்:

**ருஷ்யக் குடிமக்களுக்கு!**

இடைக்கால அரசாங்கம் அகற்றப்பட்டுவிட்டது. பெத்ரொகிராது தொழிலாளர்கள், படையாட்கள் பிரதிநிதிகளது சோவியத்தின் உறுப்பாய் அமைந்து பெத்ரொகிராது பாட்டாளி வர்க்கத்துக்கும் நகரக் காவற்படைக்கும் தலைமை தாங்கும் புரட்சி இராணுவக் கமிட்டியின் கைகளுக்கு அரசின் ஆட்சியதிகாரம் மாறி வந்துவிட்டது.

*மக்கள் போராடுகிற இலட்சியம் இதுதான்: ஜனநாயக சமாதானத்துக்காக உடனடியாய் முன்மொழிதல், நிலப்பிரபுக்களது நிலச் சொத்துரிமையை ஒழித்தல், தொழில் துறைப் பொருளுற்பத்தியின் மீது தொழிலாளர் கண்காணிப்பை நிறுவுதல், சோவியத்து அரசாங்கத்தை அமைத்தல்—இந்த இலட்சியம் உறுதி வாய்ந்த முறையில் சாதிக்கப்பட்டிருக்கிறது.*

*ஓங்குக தொழிலாளர்கள், படையாட்கள், விவசாயிகளின் புரட்சி!*

**பெத்ரொகிராது தொழிலாளர்கள், படையாட்கள்**
**பிரதிநிதிகளது சோவியத்தின் புரட்சி**
**இராணுவக் கமிட்டி.**

*எனக்குப் பக்கத்தில் அமர்ந்திருந்தவர்—மாறுகண் பார்வையும் மங்கோலிய முகமும் கொண்டு ஆட்டுத் தோலில் காக்கசஸ் மேலங்கி அணிந்திருந்தார்—எங்களை எச்சரித்தார்; ''விழிப்பாய் இருங்கள்! பகைவன் கையாட்கள் எப்போதும் இவ்விடத்தில் சன்னல்களிலிருந்து சுடுவார்கள்!'' இருட்டில் மூழ்கி அனேகமாய் ஆள் அரவமற்றிருந்த ஸ்னமென்ஸ்கயா சதுக்கத்துள் நாங்கள் திரும்பினோம். துருபெத்ஸ்கோயின் கண்ணை உறுத்தும் சிலையைச்* சுற்றிக் கொண்டு அகன்ற நேவ்ஸ்கி சாலையினுள் நாங்கள் புகுந்த போது தயாராய்த் துப்பாக்கி வைத்துக் கொண்டு மூன்று ஆட்கள் சன்னல்களைக் கூர்ந்து நோக்கியவாறு நின்றார்கள். எங்களுக்குப் பின்னால் சாலையில் குனிந்து கொண்டு பலரும் அங்குமிங்கும் ஓடக் கண்டோம். பீரங்கி வெடியோசை நின்று போயிருந்தது. நாங்கள் குளிர்கால அரண்மனையை நெருங்கிச் செல்லச் செல்ல தெருக்கள் மேலும் மேலும் ஆளரவமற்று அமைதியாய் இருக்கக் கண்டோம். நகர டூமாக் கட்டடம் விளக்கொளியில் பிரகாசித்தது. அதற்கு அப்பால் கூடியிருந்த கூட்டத்தின் கரிய நிழல் உருவம் தெரிந்தது. மாலுமிகள் வரிசையாய் நின்றிருந்தார்கள், லாரியை நிறுத்தும்படி ஆத்திரமாய் அவர்கள் கூச்சலிட்டார்கள். லாரியின் வேகம் குறைந்ததும், நாங்கள் கீழே குதித்தோம்.*

** ஜார் மன்னர் மூன்றாம் அலெக்சாந்தரின் நினைவுச் சின்னம் இங்கு குறிக்கப்படுகிறது.—[பதிப்பாசிரியர்.]*

நாங்கள் கண்ட காட்சி வியப்பூட்டுவதாய் இருந்தது. எக்கத்தரீனு கால்வாய் முனையில் பிறை விளக்குக்கு அடியில் நேவ்ஸ்கி சாலையின் குறுக்கே ஆயுதமேந்திய மாலுமிகள் அணி வகுத்து நின்றனர். நால்வர் வரிசையில் ஊர்வலமாய் வந்தவர்களை இந்த மாலுமிகள் தடுத்து நிறுத்திவிட்டனர். நீள் கோட்டு போட்டிருந்த ஆடவர்களும் சிறப்பான ஆடைகள் அணிந்த பெண்களும் அதிகாரிகளும் அடங்கலாய் எல்லா விதமானோரும் முன்னூறு அல்லது நானூறு பேர் கூடியிருந்தார்கள். இவர்களிடையே காங்கிரசிலிருந்து வந்த பிரதிநிதிகள் பலரை—மென்ஷிவிக்குகள், சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களின் தலைவர்களாகிய இவர்களை—எங்களுக்கு அடையாளம் தெரிந்தது. விவசாயிகள் சோவியத்துகளது நிர்வாகக் கமிட்டியின் செந்தாடி வைத்த ஒல்லியான தலைவர் அவ்க்சேன்தியெவும், கேரென்ஸ்கியின் உதவியாளரான சரோக்கினும், ஹின்ச்சூக்கும், அப்ரமோவிச்சும், இவர்கள் எல்லார்க்கும் தலைமையில் பெத்ரொகிராது மேயரான வெண்தாடிக் கிழவர் ஷ்ரேய்தரும், இடைக்கால அரசாங்கத்தின் உணவுப் பொருள் அமைச்சராய் இருந்து அன்று காலை கைது செய்யப்பட்டுப் பிற்பாடு விடுதலை செய்யப்பட்டவரான பிரக்கபோவிச்சும் இங்கு இருந்தனர். **ரஷ்யன் டெய்லி நியூஸ்*** செய்தியேட்டின் நிருபர் மால்க்கினைக் கண்ணுற்றேன். ''குளிர்கால அரண்மனைக்குச் சென்று உயிரை விடப் போகின்றோம்'' என்று அவர் உற்சாகமாய்க் கூவினார். இந்த ஊர்வலம் அசையாமல் அப்படியே நின்று கொண்டிருந்தது, ஆனால் அதன் முன்வரிசையில் நடைபெற்ற பலத்த வாக்குவாதம் காதில் விழுந்தது. தலைமை தாங்கியவராய்த் தொன்றிய வட்டசாட்டமான ஒரு மாலுமியைப் பார்த்து ஷ்ரேய்தரும் பிரக்கபோவிச்சும் கத்திக் கொண்டிருந்தார்கள்.

''நாங்கள் போவதற்கு வழிவிடும்படிக் கோருகிறோம்!'' என்றார் அவர். ''இந்தத் தோழர்கள் சோவியத்துகளின் காங்கிரசிலிருந்து வந்திருப்பவர்கள்! இவர்களுடைய

---

* Russian Daily News *[ருஷ்யத் தினச் செய்தி]—1917ல் பெத்ரொகிராதில் ஆங்கில மொழியில் வெளிவந்த செய்தியேடு.—[பதிப்பாசிரியர்.]*

*பிரதிநிதிச் சீட்டுகளைப் பாருங்கள்! நாங்கள் குளிர்கால அரண்மனைக்குப் போகிறோம்!''*

*என்ன செய்வதென்று புரியாமல் அந்த மாலுமி திகைத்தது தெளிவாகவே தெரிந்தது. முகத்தைச் சுளித்தவாறு தமது பருத்த கையால் தலையைச் சொறிந்து கொண்டார். ''குளிர்கால அரண்மனைக்குப் போவதற்கு யாரையும் அனுமதிக்கக் கூடாதென்று கமிட்டி எனக்குக் கட்டளையிட்டிருக்கிறது'' என்று அவர் முணுமுணுத்தார். ''ஸ்மோல்னிக்கு டெலிபோன் செய்து கேட்கச் சொல்லி ஒரு தோழரை அனுப்புகிறேன்....''*

*''நாங்கள் போயாக வேண்டும்! எங்களிடம் ஆயுதங்கள் இல்லை! அனுமதித்தாலும் சரி, அனுமதிக்காவிட்டாலும் சரி, நாங்கள் போகத்தான் போகிறோம்!'' என்று உணர்ச்சி மேலிட்டவராய்க் கத்தினார் கிழவர் ஷ்ரேய்தர்.*

*''யாரையும் விடக் கூடாதென்பது எனக்கு இடப்பட்டிருக்கும் கட்டளை—'' என்று அந்த மாலுமி கடுப்பான குரலில் திரும்பவும் கூறினார்.*

*''வேண்டுமானால் எங்களைச் சுடுங்கள்! நாங்கள் போகத்தான் போகிறோம்! செல்லுங்கள் முன்னே!'' என்று நாற்புறமிருந்தும் குரல்கள் எழுந்தன. ''ருஷ்யர்கள் மீது, தோழர்கள் மீது சுடுவதற்கு மனம் வருமாயின் சுடுங்கள்! நாங்கள் சாகத் தயார்! உங்கள் துப்பாக்கிகளுக்கு எங்கள் நெஞ்சைத் திறந்து காட்டுகிறோம்!''*

*''முடியாது, நீங்கள் இங்கே செல்ல நான் அனுமதிக்க முடியாது!'' என்று வைராக்கியமாய்க் கூறினார் அந்த மாலுமி.*

*''நாங்கள் முன்னே சென்றால் என்ன செய்வீர்கள்? சுடுவீர்களா?''*

*''இல்லை, துப்பாக்கி இல்லாதவர்களை நாங்கள் சுட மாட்டோம். நிராயுதபாணிகளான ருஷ்ய மக்களை நாங்கள் சுடுவதில்லை....''*

*''நாங்கள் போகப் போகிறோம்! நீங்கள் என்ன செய்வீர்கள், பார்க்கலாம்!''*

*''நாங்கள் ஏதாவது செய்து தடுக்கத்தான் போகிறோம்'' என்று குழம்பியவாறு பதிலளித்தார் மாலுமி. ''உங்களை*

நாங்கள் போக விட முடியாது. ஏதாவது செய்யவே போகி றேம்.''

''என்ன செய்வீர்களாம்? என்ன செய்வீர்கள், சொல்லுங் களேன்!''

இன்னெரு மாலுமி எரிச்சல் தாங்க முடியாதவராய் முன்னே வந்தார். ''உதைத்து அனுப்புவோம்!'' என்று அவர் ஆவேசமாய்க் கூவினர். ''அவசியம் ஏற்பட்டால் சுட வும் செய்வோம்! பேசாமல் வீட்டுக்குப் போய்ச் சேருங்கள், எங்களைத் தொல்லை செய்யாதீர்கள்!''

உடனே கோபக் கூச்சல்களும் கூப்பாடுகளும் எழுந்தன. பிரக்கப்போவிச் பெட்டி போன்ற ஏதோ ஒன்றின் மேல் ஏறி நின்று கொண்டு குடையை வீசி ஆட்டியவாறு சொற்பொழி வாற்றினர்:

''தோழர்களே, குடிமக்களே!'' என்றார். ''நமக்கு எதி ராய் வன்முறை கையாளப்படுகிறது! குற்றமற்ற நமது இரத் தம் அறிவில்லாத இந்த ஆட்களின் கைகளில் படிவதற்கு நாம் இடம் தரக் கூடாது! இங்கே தெருவில் இந்த 'சுவிட்சுக் காரர்கள்' நம்மைச் சுட்டு வீழ்த்தும்படி விடுவது நமது கண் யத்துக்கு ஊறு விளைவிப்பதாகும்—'' ('சுவிட்சுக்காரர்கள்' என்று அவர் கூறியதன் அர்த்தம் என்னவென்று நான் தெரிந்து கொள்ள முடியவில்லை.)''நாம் டூமாவுக்குத் திரும்பிச் செல்வோம், நாட்டையும் புரட்சியையும் பாதுகாப்பதற் குரிய சிறந்த வழி குறித்து அங்கே சென்று விவாதிப்போம்!''

இதன்பின் நிலவிய உருக்கமான நிசப்தத்தில் ஊர்வலம் அங்கிருந்து திரும்பி வந்த வழியைப் பார்க்க நேவ்ஸ்கி சாலை யில் நடை போட்டுச் சென்றது, நால்வர் வரிசை கடைசி வரை கலையவே இல்லை. இந்த வேடிக்கையினுல் ஏற்பட்ட சலசலப்பில் நாங்கள் காவலர் வரிசைக்கிடையே நழுவி குளிர்கால அரண்மனையை நோக்கி விரைந்தோம்.

அங்கே ஒரே இருட்டாயிருந்தது. யாவும் சலனமற்றிருந் தன, படையாட்களும் செங்காவலர்களுமான ரோந்துப் படைக் குழுக்கள் மட்டும்தான் கூர்ந்து கவனித்தபடி அங்கு மிங்கும் போய்க் கொண்டிருந்தன. கஸான் தேவாலயத் துக்கு முன்னல் மூன்று-அங்குல சக்கர பீரங்கி ஒன்று நடுத் தெருவில் காணப்பட்டது; கூரைகளுக்கு மேல் கடைசியாய்ச்

சுட்டபோது எதிர்த்தடிக்கப்பட்டு அது ஒருக்களித்துக்கொண்டு நின்றது. வாயிற் கதவு ஒவ்வொன்றுக்கும் முன்னால் படையாட்கள் தணிந்த குரலில் பேசிக் கொண்டு, போலீஸ் பாலத்தைக் கூர்ந்து நோக்கியவாறு நின்றிருந்தார்கள். ''நாம் செய்தது தவறாய் இருந்தாலும் இருக்கலாம்....'' என்று ஒரு குரல் கூறக் கேட்டேன். தெரு முனைகளில் ரோந்துக் குழுவினர் போவோர் வருவோர் அனைவரையும் தடுத்து நிறுத்தினர். இந்தக் குழுக்களின் அமைப்பு குறிப்பிடத் தக்கதாய் இருந்தது; இராணுவத் துருப்புகளைக் கொண்ட இந்தக் குழுக்களில் அனேகமாய் ஒவ்வொன்றுக்கும் ஒரு செங்காவலரே தலைமை தாங்கிச் செல்லக் கண்டோம்.... துப்பாக்கிச் சுடுதல் முன்பே நின்றுவிட்டது.

நாங்கள் மர்ஸ்காயா வீதியை வந்தடைந்த போது யாரோ ஒருவர் உரக்கக் கூறினார்: ''யூங்கெர்கள் வெளியே வந்துவிட விரும்புவதாகவும், நாம் உள்ளே சென்று அவர்களை அழைத்து வர வேண்டுமென்றும் தகவல் அனுப்பியிருக்கிறார்கள்!'' ஆணையிட்டுக் குரல்கள் ஒலித்தன. அந்த மையிருட்டில் கருந்திரள் முன்னேக்கி நகர்வது தெரிந்தது. காலடியின் தடதடப்பையும் படைக் கலங்களின் கணகணப்பையும் தவிர எங்கும் நிசப்தம் நிலவிற்று. முதல் வரிசைகளில் நாங்களும் சேர்ந்து கொண்டு நடை போட்டோம்.

கரிய ஆற்று வெள்ளம் போல் வீதி முழுதும் நிரம்பி, பாட்டோ முழக்கமோ இன்றி நாங்கள் சிவப்பு வளைவு வழியே சாரை சாரையாய்ச் சென்றோம். அப்போது எனக்கு முன்னால் சென்றவர் தணிந்த குரலில் கூறினார்: ''தோழர்களே, உஷார்! அவர்களை நம்பாதீர்கள்! நிச்சயமாய்ச் சுடுவார்கள்!'' திறந்த வெளியில் நாங்கள் குனிந்து கவிழ்ந்து கொண்டு கும்பலாய்ச் சேர்ந்து ஓட ஆரம்பித்தோம். அலெக்சாந்தர் தூபியின் பீடத்துக்குப் பின்னால் போய்ச் சேர்ந்ததும் திடுமெனத் தடைப்பட்டு நெருக்கியடித்துக் கொண்டு நின்றோம்.

''உங்களைச் சேர்ந்தோரில் எத்தனை பேர் இவர்களால் கொல்லப்பட்டிருப்பார்கள்?'' என்று நான் கேட்டேன்.

''தெரியவில்லை. சுமார் பத்துப் பேர் இருக்கலாம்....''

சில நிமிடங்கள் அங்கே நெருக்கிக் கொண்டு பதுங்கியிருந்தபின், சில நூறு ஆட்களைக் கொண்ட எங்கள்

படைப்பிரிவு ஐயம் நீங்கி மீண்டும் உறுதி பெற்றுவிட்ட தாய்த் தோன்றியது. கட்டளை ஏதும் இல்லாமலே திடுமெனத் திரும்பவும் அது முன்னேக்கி ஓட முற்பட்டது. குளிர் கால அரண்மனையின் எல்லா சன்னல்களிலிருந்தும் வெளியே வீசிய வெளிச்சத்தில் இதற்குள் நான் முதல் இருநூறு, முன்னூறு ஆட்கள் செங்காவலர்களாய் இருக்கக் கண்டேன், இவர்களில் அங்கும் இங்குமாய் ஒரு சிலரே படையாட்கள் என்பது தெரிந்தது. விறகுக் கட்டைகளை வைத்து எழுப்பப் பட்டிருந்த தடையரண் மீது படபடத்து ஏறி உள்ளே குதித் தோம். முன்பு இங்கு நின்றிருந்த யூன்கெர்கள் கீழே எறிந் திருந்த துப்பாக்கிக் குவியலில் இடறியவாறு நாங்கள் வெற்றிக் கூச்சல் எழுப்பினேம். பிரதான வெளிவாயிலின் இரு புறங்களிலும் அமைந்த கதவுகள் விரியத் திறந்திருந்தன, அவற்றிலிருந்து வெளிச்சம் வெளியே பிரவாகமாய்ப் பாய்ந் தது. ஆனல் அந்தப் பெரிய கட்டடத்திலிருந்து எவ்விதமான ஓசையும் எழவில்லை.

ஆவலாய் உள்ளே புகுந்தோரின் வெள்ளத்தால் தள்ளப் பட்டு நாங்கள் வலப்புற வாயினுள் அடித்துச் செல்லப்பட்டு வில்மாடமாய் அமைந்த ஒரு பெரிய காலி அறையினுள்ளும், அங்கிருந்து கிழக்குப் புறக் கிடங்கறையினுள்ளும் போய்ச் சேர்ந்தோம். இங்கிருந்து பல நடைவழிகளும் படிக்கட்டு களும் நாங்கள் திகைத்துத் தடுமாறும்படி பல திசைகளிலும் சென்றன. பெரும் பெரும் கள்ளிப் பலகைப் பெட்டிகள் பலவும் கிடந்தன, செங்காவலர்களும் படையாட்களும் முண்டி யடித்துக் கொண்டு இவற்றிடம் சென்று துப்பாக்கிக் கட் டைகளால் அடித்து நொறுக்கி இவற்றை திறந்தார்கள். அவற்றிலிருந்த இரத்தனக் கம்பளங்களையும் திரைச் சீலே களையும் விரிப்புகளையும் பீங்கான் தட்டுகளையும் கண்ணுடிச் சாமான்களையும் வெளியே எடுத்தார்கள்.... வெண்கலச் சுவர்க் கடிகாரம் ஒன்றைத் தூக்கித் தோளில் வைத்துக் கொண்டு ஓராள் ஆடம்பரமாய்ச் சுற்றிக் கொண்டிருந்தார். இன்னெருவர் நெருப்புக் கோழி இறகுகள் ஒரு கொத்து கிடைக்கவே அதைத் தமது குல்லாயில் செருகிக் கொண் டார். கூட்டத்தினர் சூறையாடத் தொடங்கிய நேரத்தில் யாரோ ஒருவர் உரக்கக் கத்திஞர்: ''தோழர்களே! எதையும்

தொடாதீர்கள்! எதையும் எடுக்க வேண்டாம்! இவை யாவும் மக்கள் சொத்து!'' உடனே இருபது குரல்கள் ஒருங்கே சேர்ந்து கூவின: ''நிறுத்துங்கள்! யாவற்றையும் திருப்பி வைத்துவிடுங்கள்! எதையும் தொட வேண்டாம்! மக்கள் சொத்து!'' கொள்ளையடித்தோரைப் பல கரங்கள் பிடித்திழுத்தன. ஓவியத் திரைச் சுருள்களையும் சரிகைச் சல்லாத் துணிகளையும் எடுத்து வைத்திருந்தோரிடமிருந்து அவை பிடுங்கப்பட்டன, இரு ஆட்கள் அந்த வெண்கலச் சுவர்க் கடிகாரத்தைத் திருப்பி வாங்கினர். அவசரமாய் யாவும் திரும்பவும் பெட்டிகளில் திணிக்கப்பட்டன, தம்மைத் தாமே சிலர் காவலர்களாய் நியமித்துக் கொண்டு அவற்றின் பக்கத்தில் நின்று காவல் புரிந்தனர். நடைவழிகளிலும் படிக்கட்டுகள் மேலிருந்தும் தொலைவு அதிகமாகியதற்கு ஏற்ப மேலும் மேலும் தணிவாய் ஒலித்த கூச்சல் காதில் விழுந்தது: ''புரட்சிகரக் கட்டுப்பாடு! மக்கள் சொத்து!...''

நாங்கள் அங்கிருந்து திரும்பி மேற்குப் புறத்திலிருந்த இடப் பக்கத்து வாயிலுக்கு வந்தோம். அங்கும் ஒழுங்கு நிலை நாட்டப்பட்டு வந்தது. ''அரண்மனையை விட்டு வெளியே செல்லுங்கள்!'' என்று உட்புறக் கதவு வழியே தலையை நீட்டியவாறு கத்தினார் செங்காவலர் ஒருவர். ''தோழர்களே, நாம் திருடர்களோ கொள்ளைக்காரர்களோ அல்ல என்பதைக் காட்டுவோம் வாருங்கள்! ஆங்காங்கே காவல்காரர்கள் நிறுத்தப்படும் வரை, கமிசார்களைத் தவிர்த்து மற்றவர்கள் எல்லாரும் அரண்மனையை விட்டு வெளியே சென்றுவிட வேண்டும்.''

இரண்டு செங்காவலர்களும் ஒரு படையாளும் ஒரு இராணுவ அதிகாரியும் கையில் ரிவால்வருடன் நின்று கொண்டனர். அவர்களுக்குப் பின்னால் இன்னொரு படையாள் காகிதமும் பேனாவும் வைத்துக் கொண்டு மேசையின் பின்னால் உட்கார்ந்தார். ''வெளியே வாங்க! எல்லாரும் வெளியே வாங்க!'' என்ற கூப்பாடு மீண்டும் மீண்டும் தொலைவிலும் அருகாமையிலும் ஒலித்தன. சேனையானது இடித்துமோதிக் கொண்டு அறிவுறுத்தியவாறும் வாதடியவாறும் கதவு வழியே வெளியே வரத் தொடங்கிற்று. தம்மைத் தாமே நியமித்துக் கொண்டு கடமையாற்றிய கமிட்டியினர், வெளியே

வந்தவர் ஒவ்வொருவரையும் பிடித்துக் கோட்டுப் பைகளைப் பரிசோதனை புரிந்தார்கள், கோட்டுக்குள் ஆராய்ந்தார்கள். அவருடையதல்ல என்பது தெளிவாய்த் தெரிந்த பொருள்கள் யாவும் அவரிடமிருந்து வாங்கப்பட்டன. மேசையருகே அமர்ந்திருந்த ஆள் இவற்றைத் தமது காகிதத்தில் குறித்துக் கொண்டதும் ஒரு சிறு அறைக்குள் எடுத்துச் செல்லப் பட்டன. சிறபப் பதுமைகள், மசிக் கூடுகள், ஜார் அரசரின் சின்னம் இணைத்து நெய்யப்பட்ட மெத்தை விரிப்புகள், மெழுகு வத்திகள், ஒரு சிறு ஓவியம், மேசை மை ஒற்றுத் தாள் கட்டைகள், தங்கப் பிடி வைத்த கத்திகள், சோப்புகள், விதம்விதமான துணிமணிகள், போர்வைகள்—வியப் பூட்டும்படி மிகப் பல வகையான பொருள்களும் பறிமுதல் செய்யப்பட்டன. செங்காவலர் ஒருவர் மூன்று துப்பாக்கிகளுடன் வெளியே வந்தார்—ஒன்று அவருடையது, ஏனைய இரண்டும் யூன்கெர்களிடமிருந்து பறிக்கப்பட்டவை. இன்னொருவர் கையெழுத்து ஆவணங்கள் திணித்து வைக்கப்பட்டிருந்த நான்கு கைப் பைகள் கொண்டு வந்தார். பிடிபட்டவர்கள் தாம் வைத்திருந்தவற்றைக் கடுப்புடன் கொடுத்து விட்டுச் சென்றார்கள், அல்லது சிறு பிள்ளைகளைப் போல் தம் செயலுக்கு நியாயம் கூறிக் கொண்டு நின்றார்கள். கமிட்டியினர் எல்லாருமாய் ஏக காலத்தில் பேசி, திருட்டு வேலை மக்களது போராட்ட வீரர்களுக்கு ஏற்றதல்ல என்று விளக்கினர். பிடிபட்டவர்களில் பலர் உடனே திரும்பி நின்று கொண்டு ஏனைய தோழர்களைப் பரிசீலனை செய்து வெளியே அனுப்ப உதவ முற்பட்டனர்.[3]

யூன்கெர்கள் மூன்று அல்லது நான்கு பேர் அடங்கிய தொகுதிகளில் வெளியே வந்தார்கள். கமிட்டியினர் அவர்களைப் பிடித்து மிக மும்முரமாய்ப் பரிசோதனை செய்தனர், இடையிடையே ''பகைவனது கையாட்கள்! கர்னீலவியர்கள்! எதிர்ப்புரட்சியாளர்கள்! மக்களின் கொலைகாரர்கள்!'' என்று கூறிக் கொண்டனர். யூன்கெர்களுக்கு உதறலாய்த் தான் இருந்தது, ஆனால் அவர்கள் எவ்விதமான வன்முறைக்கும் உள்ளாக்கப்படவில்லை. அவர்களுடைய பைகளிலும் கள்ளப் பொருள்கள் நிறைய இருந்தன. இவை பற்றிய விவரங்கள் காகிதத்தில் குறிக்கப்பட்டதும் இவை அந்தச்

சிறிய அறையினுள் குவிக்கப்பட்டன.... யூன்கெர்களிடமிருந்த ஆயுதங்கள் யாவும் கைப்பற்றப்பட்டன. ''இனி மக்களுக்கு எதிராய் நீங்கள் ஆயுதம் ஏந்துவீர்களா?'' என்று ஆத்திர மாய்ப் பலரும் கேட்டார்கள்.

''ஏந்தமாட்டேன்'' என்று யூன்கெர்கள் ஒவ்வொரு வராய்ப் பதிலளித்தார்கள். அதன் பிறகு சுதந்திரமளிக்கப் பட்டு அவர்கள் வெளியே விடப்பட்டார்கள்.

நாங்கள் உள்ளே போகலாமா என்று கேட்டோம். என்ன சொல்வதென்று தெரியாமல் கமிட்டியினர் தயங்கினார்கள். ஆனால் வாட்டசாட்டமான செங்காவலர் ஒருவர் கூடாதென்று தீர்மானமாய்ப் பதிலளித்தார். ''நீங்கள் யார்? உங்களுக்கு இங்கு என்ன வேலை?'' என்று கேட்டார் அவர். ''யாருக்குத் தெரியும்—நீங்கள் எல்லாரும் கேரென்ஸ்கிகள் இல்லை என்று?'' (நாங்கள் ஐந்து பேர் இருந்தோம், இருவர் பெண்கள்.)

''பழாலஸ்தா, தவாரிஷ்சி! வழிவிடுங்கள், தோழர்களே!'' ஒரு படையாளும் ஒரு செங்காவலரும் கதவருகே தோன்றி, கூட்டத்தினரை விலகச் சொல்லி வழியமைத்துக் கொடுக்க, குத்தீட்டித் துப்பாக்கிகள் எந்திய படையாட்கள் அவர்கள் பின்னால் வந்தார்கள். இவர்களைத் தொடர்ந்து குடிமை உடைகள் உடுத்திய ஆறு பேர் ஒற்றை வரிசையில் வந்தார் கள்—இடைக்கால அரசாங்கத்தின் உறுப்பினர்கள் அவர்கள். முதலில் வந்தவர் கீஷ்கின், அவர் முகம் வாடிப் போய் வெளுத்திருந்தது; அடுத்து ருத்தென்பேர்க் வெறிக்கத் தரையைப் பார்த்தபடி வந்தார்; பிறகு தெரேஷ்ச்சென்கொ பதற்றத்தோடு சுற்றிலும் நோக்கியவாறு நடந்தார், எங்களைக் கடுப்புடன் உற்றுப் பார்த்தார்.... இவர்கள் சென்ற போது நிசப்தம் நிலவிற்று. வெற்றி வாகை சூடிய எழுச்சியாளர் கள் இவர்களைப் பார்ப்பதற்காக நெருக்கியடித்துக் கொண்டு நின்றார்கள், ஒருசில ஆத்திர முணுமுணுப்புகள் மட்டுமே எழுந்தன. வெளியே தெருவில் கூட்டத்தினர் அவர்களை ஒழித்துக் கட்ட விரும்பினார்கள் என்பதும், துப்பாக்கியால் சுட நேர்ந்தது என்பதும் பிற்பாடுதான் எங்களுக்குத் தெரிய வந்தது—ஆனால் படையாட்கள் அவர்களைப் பாதுகாத்து பெத்ரொபாவ்லொவ்ஸ்கயா கோட்டைக்குக் கொண்டு போய்ச் சேர்த்துவிட்டனர்....

இதற்கிடையில் நாங்கள் தடைகளைக் கடந்து அரண் மனைக்குள் சென்றுவிட்டோம். இன்னும் அங்கே ஏராளமா னோர் வருவதும் போவதுமாய் இருந்தார்கள். அந்த பிரம் மாண்ட கட்டடத்துள் புதிதாய்க் கண்டுபிடிக்கப்பட்ட அறைகளினுள் சென்று ஆராய்ந்தார்கள். உண்மையில் அங் கில்லை என்றாலும் பதுங்கிக் கொண்டிருந்ததாய்க் கூறப் பட்ட யூன்கெர் படைகளைத் தேடிப் பிடிப்பதற்கு முயற்சிகள் நடைபெற்றுக் கொண்டிருந்தன. நாங்கள் மாடிக்குச் சென்று ஒவ்வோர் அறைக்குள்ளும் நுழைந்து பார்வையிட்டோம். நேவா ஆற்றின் பக்கத்திலிருந்து வேறு சில படைப் பிரிவு களும் அரண்மனையின் இப்பகுதிக்குள் புகுந்திருந்தன. பெரிய அரசுக் கூடங்களைச் சேர்ந்த ஓவியங்களும் சிலைகளும் ஓவியத் திரைச் சீலைகளும் கம்பளங்களும் சேதமின்றி நல்லபடி யாகவே இருந்தன. ஆனால் அலுவலக அறைகளில் ஒவ்வொரு மேசையும் அலமாரியும் ஆராயப்பட்டுக் காகிதங்கள் தரை யிலே இறைந்து கிடைந்தன. வசிப்பறைகளில் படுக்கைகளின் விரிப்புகளும் உறைகளும் கழற்றியெடுக்கப்பட்டிருந்தன, துணி அலமாரிகள் உடைத்துத் திறக்கப்பட்டிருந்தன. யாவற் றிலும் உயர்வான கொள்ளைப் பொருள்களாய் இருந்தவை உழைப்பாளி மக்களுக்குத் தேவையான துணிமணிகளே. தட்டுமுட்டுச் சாமான்கள் சேர்த்து வைக்கப்பட்டிருந்த அறை ஒன்றில் படையாட்கள் இருவர் நாற்காலிகளிலிருந்து ஒப்பனை வேலைப்பாட்டு ஸ்பானியத் தோலைக் கிழித்தெடுத்துக் கொண்டிருக்கக் கண்டோம். பூட்சுகள் செய்வதற்கு இது வேண்டியிருந்ததாய் அவர்கள் விளக்கம் தந்தனர்....

வயது முதிர்ந்த அரண்மனைப் பணியாளர்கள் சிவப்பும் பொன்னிறமும் கொண்ட அவர்களது நீல உடுப்புகளில் வெலவெலத்துப் போய் நின்று கொண்டு, பழக்கத்தின் காரணமாய், ''எசமானே, அங்கே போக வேண்டாம்! யாரும் போகக் கூடாது—'' என்று திரும்பத் திரும்பக் கூறினர். முடிவில் நாங்கள் பொன்னிற அலங்கார வேலைப்பாடுகள் கொண்ட மலக்கைட் கூடத்தினுள் நுழைந்தோம். சென் னிறச் சித்திரத் திரைச் சீலைகள் தொங்கிய இந்தக் கூடத்துள் தான் அன்று பகற் பொழுதிலும் இரவிலும் அமைச்சர்களது

அமர்வு நடைபெற்று வந்தது, இறுதியில் இங்குதான் வாயிற் காவலர்கள் அவர்களைச் செங்காவலர்களுக்குக் காட்டிக் கொடுத்தனர். பச்சைக் கம்பளித் துணி விரிக்கப்பட்டிருந்த நீளமான மேசை, கைது செய்யப்பட்ட அமைச்சர்கள் விட்டுச் சென்றிருந்த அதே நிலையில் இருந்தது. காலி இருக்கை ஒவ்வொன்றுக்கும் எதிரே மேசையில் பேனாவும் மசியும் காகிதமும் இருந்தன. செயலுக்கான திட்டங்களின் துவக்கங்களும், அறிக்கைகளுக்கும் பிரகடனங்களுக்குமான உத்தேச நகல்களும் இந்தக் காகிதங்களில் கிறுக்கப் பட்டிருந்தன. இவை பயனற்றவை என்பது தெளிவாகியதும் பெரும்பாலானவை அடிக்கப்பட்டிருந்தன, அடுத்தடுத்து ஒவ்வோர் அமைச்சரும் முன்மொழிந்த கவைக்குதவாக் கற்பனைத் திட்டங்களைச் சோர்வுடன் கேட்டுக் கொண்டு அமர்ந்திருந்தவர்கள் ஏதோ நினைத்தவாறு காகிதத்தின் எஞ்சிய பகுதியை வடிவ கணித கோலங்களால் நிரப்பி வைத்திருந்தார்கள். இவ்வாறு கிறுக்கப்பட்டிருந்த காகிதங்களில் ஒன்றை எடுத்துப் பார்த்தேன். கனவாலவ் அதில் தம் கைப்பட எழுதியிருந்ததாவது: ''இடைக்கால அரசாங்கம் எல்லா வர்க்கங்களையும் அறைகூவி அழைக்கிறது, இடைக்கால அரசாங்கத்தை ஆதரித்து நிற்குமாறு—''.

குளிர்கால அரண்மனை இவ்வளவு நேரமாய்ச் சுற்றிவளைக்கப்பட்டிருந்த போதிலும், இடைக்கால அரசாங்கம் போர் முனையோடும் ருஷ்ய மாநிலங்களோடும் இடையறாது செய்தித் தொடர்பு கொண்டிருந்தது என்பதை நினைவில் வைத்திருக்க வேண்டும். அன்று அதிகாலையிலேயே போல்ஷிவிக்குகள் யுத்த அமைச்சகத்தைக் கைப்பற்றிக் கொண்டுவிட்டனர்; ஆனால் அங்கே மச்சு அறையில் இராணுவத் தந்தி நிலையம் ஒன்று இருந்ததும், குளிர்கால அரண்மனையுடன் அது தனித் தொலைபேசி இணைப்பு கொண்டிருந்ததும் அவர்களுக்குத் தெரியாது. அந்த மச்சு அறையில் இளம் இராணுவ அதிகாரி ஒருவர் அன்று முழுநேரமும் அமர்ந்திருந்து நாடெங்கிலும் வேண்டுகோள்களையும் பிரகடனங்களையும் பறக்கச் செய்தார், குளிர்கால அரண்மனை பிடிபட்டுவிட்ட செய்தியைக் கேட்ட பிறகு தொப்பியைத் தலையில் மாட்டிக் கொண்டு அமைதியாய் அந்தக் கட்டிடத்திலிருந்து வெளியே நடந்தார்....

சுற்றிப் பார்வையிடுவதில் நாட்டங் கொண்டிருந்த நாங்கள் எங்கள் அருகிலிருந்த படையாட்கள், செங்காவலர்களது போக்கில் ஏற்பட்டு வந்த மாற்றத்தைக் கவனிக்கத் தவறி விட்டோம். அறை அறையாய்ப் பார்த்துச் சென்ற எங்களைப் பின்தொடர்ந்து ஒரு று கோஷ்டி வந்து கொண்டிருந்தது. அன்று பிற்பகலில் நாங்கள் யூன்கெர்களைச் சந்தித்த அந்த பெரிய ஓவியக் காட்சிக் கூடத்துக்கு வந்து சேர்ந்ததும், சுமார் நூறு பேர் எங்களைச் சுற்றி வளைத்துக் கொண்டு விட்டனர். ஆஜானுபாகு போன்ற படையாள் ஒருவர் எங்கள் பாதையின் குறுக்கே வந்து நின்றுர், சந்தேகத்தால் அவர் முகம் இருண்டு போய்ச் சிடுசிடுத்தது.

''நீங்கள் எல்லாம் யார்? என்ன செய்கிறீர்கள் இங்கே?'' என்று உறுமினுர் அவர். ஏனையோர் வெறிக்கப் பார்த்தவாறு கூட்டமாய்ச் சேர்ந்து சிறிது சிறிதாய் எங்களை நெருங்கி வந்தனர், ஆத்திரமாய் முணுமுணுத்துக் கொண்டனர். ''பகைவன் கையாட்கள்!'' யாரோ ஒருவர் கூறியது என் காதில் விழுந்தது. ''கொள்ளைக்காரர்கள்!'' புரட்சி இராணுவக் கமிட்டி எங்களுக்குத் தந்திருந்த அடையாளச் சீட்டுகளை நான் காட்டினேன். தயங்கியவாறு அந்தப் படையாள் அவற்றை வாங்கித் தலைகீழாய்த் திருப்பினுர், எதையும் புரிந்து கொள்ள முடியாதவராய் அவற்றை உற்றுப் பார்த்தார். படிக்கத் தெரியாதவர் என்பது புலப்பட்டது. அவற்றை எங்களிடம் தந்துவிட்டுத் தரையிலே தூவெனத் துப்பினுர். ''புமாகி! காகிதம்!'' என்று இகழ்ந்து கூறினுர். தரையில் நிற்கும் மாட்டுக்காரச் சிறுவனை முரட்டுக் காளைகள் சுற்றி வளைத்துக் கொள்வது போல் கூட்டத்தினர் மெல்ல நெருங்கி வந்து எங்களை நெருக்கத் தொடங்கினர். கூட்டத்தினரது தலைக்கு மேல் நான் நோக்கிய போது, திகைப்புற்றவராய்த் தோன்றிய இராணுவ அதிகாரி ஒருவர் அங்கே வருவதைக் கண்டேன். உடனே நான் கூச்சலிட்டு அவரை அழைத்தேன். கூட்டத்துக்குள் புகுந்து இடித்துத் தள்ளிக் கொண்டு வந்து சேர்ந்தார் அவர்.

''நான்தான் கமிசார்'' என்று என்னிடம் சொன்னுர். ''நீங்கள் யார்? என்ன இது?'' ஏனையோர் பின்வாங்கிச் சென்று காத்திருந்தனர். எங்களது சீட்டுகளை அவரிடம் காட்டினேன்.

''வெளிநாட்டினரா நீங்கள்?'' என்று பரபரப்புடன் அவர் பிரெஞ்சு மொழியில் கேட்டார். ''ஆபத்தான நிலைமை யாயிற்றே....'' பிறகு அவர் எங்களுடைய அடையாளச் சீட்டு களை உயர்த்திக் காட்டியவாறு கூட்டத்தினரின் பக்கம் திரும் பினார். ''தோழர்களே!'' என்று உரக்கக் கூறினார். ''இவர் கள் வெளிநாட்டுத் தோழர்கள்—அமெரிக்காவிலிருந்து வந் திருப்பவர்கள். நமது பாட்டாளி வர்க்கச் சேனையின் வீரத் தையும் புரட்சிகர கட்டுப்பாட்டையும் பற்றி தம் நாட்ட வருக்கு எடுத்துரைப்பதற்காக இங்கு வந்திருக்கிறார்கள்!''

''அது உங்களுக்கு எப்படித் தெரியும்?'' என்று பதிலளித் தார் அந்த ஆஜானுபாகுப் படையாள். ''நான் சொல் கிறேன், இவர்கள் பகையாட்கள்! பாட்டாளி வர்க்கச் சேனை யின் புரட்சிகர கட்டுப்பாட்டைப் பார்த்துச் செல்வதற்காக இங்கே வந்ததாய்ச் சொல்கிறார்கள், ஆனால் அரண்மனையில் இஷ்டத்துக்குத் திரிந்து கொண்டிருக்கிறார்கள். கோட்டுப் பைகளில் இவர்கள் கொள்ளைப் பொருள்களை நிரப்பி வைத் திருக்கவில்லை என்று யாருக்குத் தெரியும்?''

''பிராவில்னு! அதுதான் உண்மை!'' என்று சீறியவாறு ஏனையோர் மீண்டும் நெருங்கி வந்தனர்.

''தோழர்களே! தோழர்களே!'' என்று வேண்டினார் அதிகாரி, அவர் நெற்றியில் முத்து முத்தாய் வியர்த்துவிட் டது. ''புரட்சி இராணுவக் கமிட்டியின் கமிசார் நான். என்னை நீங்கள் நம்ப வேண்டுமா, இல்லையா? என்னுடைய அடையாளச் சீட்டில் கையொப்பமிட்டிருக்கிறார்களே, அவர் களேதான் இவர்களுடைய சீட்டுகளிலும் கையொப்பமிட் டிருக்கிறார்கள்!''

அவர் எங்களை அங்கிருந்து கீழே அழைத்துச் சென்று நேவா ஆற்றுத் துறையின் பக்கம் இருந்த அரண்மனை வாயி லில் விட்டார். கோட்டுப் பைகளைப் பரிசோதனை செய்யும் வழக்கமான கமிட்டியினர் அந்த வாயிலிலும் நின்று வேலை செய்து கொண்டிருந்தார்கள்.... ''மயிரிழையில் தப்பினீர் கள்'' என்று அவர் முகத்தைத் துடைத்துக் கொண்டு திரும்பத் திரும்பக் கூறினார்.

''பெண்கள் பட்டாளம் என்னவாயிற்று?'' என்று நாங் கள் விசாரித்தோம்.

''ஓ—கூத்துதான்!'' என்று சிரித்தார் அவர். ''பின் பக்கத்துக் கூடம் ஒன்றில் அவர்கள் எல்லாரும் அடைந்து கிடந்தார்கள். அவர்களை என்ன செய்வதென்று தீர்மானிப் பதற்குள் போதும் போதுமென்றாகிவிட்டது—பலர் மயக்க முற்றுவிட்டனர், பெருங் குழப்பமாகிவிட்டது. முடிவில் ஒரு விதமாய் எல்லாரையும் பின்லாந்து ரயில் நிலையத்துக்கு அழைத்துச் சென்று லெவஷோவொவுக்குச் செல்லும் ரயிலில் ஏற்றினோம், அங்கே அவர்களுக்கு ஒரு முகாம் இருக்கி றது....[4]''

வெளியே நாங்கள் அடியெடுத்து வைத்த இரவு குளி ராய், அமைதியற்றதாய் இருந்தது, மாயமான சேனைகள் நெருங்கி வருவது பற்றிய வதந்திகளின் மொலுமொலுப்பும் ரோந்துப் படைக் குழுக்களின் சலசலப்பும் நிறைந்திருந்தது. ஆற்றுக்கு அப்பால் பெத்ரொபாவ்லொவ்ஸ்கயா கோட்டை யின் பிரம்மாண்ட நிழலுருவம் தெரிந்த இடத்திலிருந்து அடித் தொண்டைக் குரல்களின் கூச்சல் காதுக்கு எட்டிற்று.... நடைபாதையில் காலுக்கடியில் சுவரின் நொறுங்கிய காரைத் துண்டுகள் இறைந்து கிடைந்தன. போர்க்கப்பல் அரோரா வின் இரண்டு பீரங்கி வெடிகளால் தாக்குண்ட போது அரண் மனைச் சுவரின் சிற்ப வேலைப்பாட்டுப் பிதுக்கங்களிலிருந்து பெயர்ந்து விழுந்தவை இவை; பீரங்கித் தாக்குதலால் ஏற்பட்டசேதம் இது ஒன்றுதான்....*

இப்போது காலை மணி மூன்றுக்கு மேலாகிவிட்டது. நேவ்ஸ்கி சாலையில் தெரு விளக்குகள் திரும்பவும் எரிந்து கொண்டிருந்தன, அங்கிருந்த பீரங்கி மறைந்துவிட்டது. கணப்புத் தீயைச் சுற்றி மண்டியிட்டு அமர்ந்திருந்த செங் காவலர்களையும் படையாட்களையும் தவிர வேறு போர் அறிகுறி எதையும் காண முடியவில்லை. நகரம் அமைதியாய் இருந்

* அரோரா சுட்ட குண்டுகளைப் பற்றி இங்கு கூறப்படு வது சரியல்ல. 1917 நவம்பர் 7ஆம் நாள் அந்தியில் 9.45 மணிக்கு போர்க்கப்பல் அரோரா வெற்றுக் குண்டு ஒன்றைச் சுட்டது, குளிர்கால அரண்மனை மீது எழுச்சியாளர்களின் தாக்குதல் ஆரம்பமாவதற்குரிய குறியறிவிப்பாய் அமைந் தது அது. ஜான் ரீடு இங்கு குறிப்பிடும் சேதம் பெத்ரொ பாவ்லொவ்ஸ்கயா கோட்டையிலிருந்து சுடப்பட்ட பீரங்கி வெடிகளால் ஏற்பட்டதாகும்.—[பதிப்பாசிரியர்.]

தது—அதன் வரலாற்றிலே அன்று போல் எக்காலத்திலும் அது அவ்வளவு அமைதியாய் இருந்ததில்லை எனலாம். அன்று இரவில் வழிப்பறியோ, கொள்ளையோ ஒன்றுகூட நடைபெற வில்லை.

ஆனால் நகர டூமாவின் கட்டடம் விளக்கொளியுடன் பிரகாசித்தது. அலெக்சாந்தர் மண்டபத்துள் நாங்கள் ஏறினோம்—சுற்று மாடத்தைக் கொண்ட அம்மண்டபத்துள் தங்க முலாம் பூசிய சட்டங்களிடப்பட்டுச் சுற்றிலுமிருந்த ஜார் அரசப் பேருருவப் படங்கள் சிவப்புத் திரைகளிட்டு மறைக்கப்பட்டிருந்தன. மேடையில் ஸ்கோபெலெவ் பேசிக் கொண்டிருந்தார், சுமார் நூறு பேர் கூடியிருந்தார்கள். போல்ஷிவிக்குகளை எதிர்க்கும் எல்லாத் தொகுதியோரும் ஒரு பெரிய நிறுவனமாய் ஒருசேர இணையும்படி, பொதுமக்கள் பாதுகாப்புக் கமிட்டியானது விரிவுபடுத்தப்பட வேண்டுமென்று ஸ்கோபெலெவ் வற்புறுத்தினார். இந்தப் பெரிய நிறுவனத்துக்கு நாட்டின், புரட்சியின் இரட்சணியக் கமிட்டியெனப் பெயரிடலாம் என்றார். நாங்கள் சுற்று மாடத்திலிருந்து பார்த்துக் கொண்டிருந்த அந்நேரத்தில்தான் இரட்சணியக் கமிட்டி உருப்பெற்று எழுந்தது. அடுத்த வாரத்தில் சில நேரம் கட்சி சார்பு கொண்ட அதன் சொந்தப் பெயரிலும், சில நேரம் கட்சி சார்பற்ற உருவிலான சமுதாயப் பாதுகாப்புக் கமிட்டியாகவும் தோன்றி, போல்ஷிவிக்குகளின் மிகவும் சக்தி வாய்ந்த பகையாய் வளர்ந்த கமிட்டி அது....

டான், கோட்ஸ், அவ்க்சேன்தியெவ் ஆகியோரும், சோவியத்துகளின் காங்கிரசில் கலகம் புரிந்து வெளியேறிய பிரதிநிதிகள் சிலரும், விவசாயிகள் சோவியத்துகளது நிர்வாகக் கமிட்டி உறுப்பினர்களும், கிழவர் புரக்கப்போவிச்சும், மற்றும் குடியரசு அவையின் உறுப்பினர்களுங்கூட—எடுத்துக்காட்டாய் வினவரும் வேறு சில காடேட்டுகளும்—இந்தக் கமிட்டியில் இடம் பெற்றிருந்தனர். சோவியத்துகளின் காங்கிரஸ் சட்டத்துக்குப் புறம்பான காங்கிரசாகும், பழைய இத்ஸே-யி-கதான் தொடர்ந்து இனியும் அதிகாரத்தில் இருக்கிறது என்று உச்சக் குரலில் கத்தினார் லீபெர்... அவசரமாய் நாட்டுக்கு ஒரு வேண்டுகோள் வகுக்கப்பட்டது.

நாங்கள் ஒரு வாடகை வண்டியைக் கூப்பிட்டோம். ''எங்கே போகணும்?'' நாங்கள் ஸ்மோல்னி என்றதும், வண்டிக்காரர் தலையை ஆட்டி, ''நியெத்!—இல்லை!'' என்றார், ''அங்கே சைத்தான்கள் இருக்கின்றன....'' கால் ஓயும்படி நெடுந் தூரம் அலைந்த பிறகே எங்களை ஏற்றிச் செல்ல உடன்பட்ட வண்டிக்காரரை நாங்கள் தேடிப் பிடிக்க முடிந்தது — அவரும் முப்பது ரூபிள் வேண்டுமென்றார், அதோடு ஸ்மோல்னிக்கு இரண்டு கட்டடங்கள் முன்னதாகவே வண்டியை நிறுத்திவிட்டார்.

ஸ்மோல்னியின் சன்னல்கள் இன்னமும் விளக்கொளியில் தகதகத்தன, கார்கள் வருவதும் போவதுமாய் இருந்தன, மேல்நோக்கித் தாவிக் குதித்துக் கொண்டிருந்த கணப்புத் தீயினைச் சுற்றிலும் காவலர்கள் ஒருவரோடொருவர் ஒண்டிக் கொண்டிருந்தார்கள். வருவோர் போவோரிடம் கடைசிச் செய்திகள் குறித்து அவர்கள் ஆவலாய் விசாரித்தார்கள். கண்கள் குழித்துப் போய் மேலெங்கும் அழுக்கேறிய ஆட்கள் நடைவழிகள் நிறைய விரைந்து கொண்டிருந்தார்கள். கமிட்டி அறைகள் சிலவற்றில் பலரும் துப்பாக்கிகளைப் பக்கத்தில் வைத்துக் கொண்டு தரையில் படுத்துறங்கினார்கள். பிரதிநிதிகளில் சிலர் காங்கிரசிலிருந்து வெளியேறிய பிறகுங்கூட கூட்ட மண்டபத்தில் கூட்டம் நிரம்பி வழிந்து கடலென உறுமிற்று. நாங்கள் உள்ளே சென்ற போது காமெனெவ் கைது செய்யப்பட்ட அமைச்சர்களின் பட்டியலைப் படித்துக் காட்டிக் கொண்டிருந்தார். தெரேஷ்சென்கொவின் பெயர் அறிவிக்கப்பட்டதும் இடியெனக் கையொலி கிளர்ந்தெழுந்தது, மன நிறைவைத் தெரிவிக்கும் கூச்சல்களும் சிரிப்பொலியும் கிளம்பின. ருத்தென்பேர்கின் பெயருக்கு அந்த அளவு ஆரவாரமில்லை, பிறகு பல்ச்சீன்ஸ்கியின் பெயர் படிக்கப்பட்டதும் ஏளனக் கூச்சல்களும் கோபக் குரல்களும் ஆர்வ முழக்கமும் புயலென மூண்டன.... சுத்ஞேவ்ஸ்கி குளிர்கால அரண்மனையின் கமிசாராய் நியமிக்கப் பட்டிருப்பதாய் அறிவிக்கப்பட்டது.

பரபரப்பு உண்டாக்கிய ஒரு நிகழ்ச்சி இப்போது நடைபெற்றது. தாடி வைத்திருந்த வாட்டசாட்டமான விவசாயி

ஒருவர் ஆத்திரத்தால் முகம் துடிக்க மேடை மீது ஏறி தலைமைக் குழுவினரின் மேசையில் ஓங்கிக் குத்தினார்.

''குளிர்கால அரண்மனையில் கைது செய்யப்பட்ட சோஷலிஸ்டு அமைச்சர்களை உடனே விடுதலை செய்துவிட வேண்டுமென்று சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களாகிய நாங்கள் கோருகிறோம்! தமது உயிரையும் சுதந்திரத்தையும் துச்சமாய் மதித்து ஜாரின் கொடுங் கோன்மையை எதிர்த்துப் போராடிய நான்கு தோழர்கள் பெத்ரொபாவ்லொவ்ஸ்கயா கோட்டையின் சிறைக்கூடத்துள்—வரலாற்றிலே சுதந்திரத்தின் கல்லறையாய் அமைந்த இந்தச் சிறைக்கூடத்துள்—தள்ளப் பட்டிருக்கிறார்கள்—தெரியுமா உங்களுக்கு?'' எதிர்ப்புக் கூச்சலுக்கும் அமளிக்குமிடையே, கையை ஓங்கி மேசை மீது குத்தியவாறு தொண்டை கிழிய கத்தினார் அவர். இன்னொரு பிரதிநிதி மேலே ஏறி அவருக்குப் பக்கத்தில் நின்று கொண்டு தலைமைக் குழுவினரைச் சுட்டிக்காட்டினார்.

''புரட்சிகர மக்கள் பெருந் திரளினரின் தலைவர்கள் போல்ஷிவிக்குகளது காவல் படையினரால் சித்தரவதை செய்யப்படும் ஒரு நேரத்தில், இம் மக்கள் பெருந்திரளினரின் பிரதிநிதிகள் இங்கே கையைக் கட்டிக் கொண்டு அமர்ந்திருக்கவா போகிறார்கள்?''

சப்தம் செய்யாதிருக்கும்படி கையை உயர்த்திக் காட்டினார் திரோத்ஸ்கி. ''சோவியத்துகளை நசுக்குவதற்காக சாகசக்காரர் கேரென்ஸ்கியுடன் சேர்ந்து கொண்டு சதி புரிந்து கையும் மெய்யுமாய்ப் பிடிபட்டிருப்பவர்கள் 'இந்தத் தோழர்கள்'—இத்தகையவர்களிடம் நாம் கண்டிப்பாய் இல்லாமல் வேறு என்ன செய்வதாம்? ஜூலை 16க்கும் 18க்கும் பிற்பாடு நமக்கு அவர்கள் தயவா காட்டினார்கள்?'' குரலில் வெற்றியொலி கணீரிட அவர் உரக்கக் கூறினார்: ''அபரோன்த்சியும்—பாதுகாப்புவாதிகளும் — தொடை நடுங்கிகளும் நம்மை விட்டு ஒழிந்துவிட்டதால், இப்போது நாம் புரட்சியைப் பாதுகாத்துக் காப்பாற்றும் முழுப் பணியையும் நம் தோளில் ஏற்றுச் செயல்பட வேண்டும். இப்போது நமக்கு இன்றியமையாதது என்னவெனில் செயல்—செயல்—செயல்! அடிபணிவதைக் காட்டிலும் உயிரை விடுவதே மேலெனத் தீர்மானித்திருக்கிறோம்!''

பிறகு ஜார்ஸ்கயெ செலோவிலிருந்து வந்த கமிசார் ஒருவர் மேடையிலே தோன்றினர், அவருக்கு மூச்சு வாங்கிற்று, அதிவேகப் பயணத்தின் விளைவாய் மேலெங்கும் சேறு படிந்திருந்தது. ''ஜார்ஸ்கயெ செலோவின் காவற் படையினர் பெத்ரொகிராதின் வாயிலில் நின்று காவல் புரிகின்றனர், சோவியத்துகளையும் புரட்சி இராணுவக் கமிட்டியையும் பாதுகாத்துப் போராடத் தயாராய் இருக்கிருர்கள்!'' உற்சாகக் கையொலி முழக்கம். ''போர்முனையிலிருந்து அனுப்பப்பட்ட சைக்கிள் போரணி ஜார்ஸ்கயெ வந்து சேர்ந்துள்ளது. இந்தப் படையாட்களும் நம் பக்கத்தில் சேர்ந்துகொண்டுவிட்டார்கள்;சோவியத்துகளின் ஆட்சியதிகாரத்தையும் நிலம் உடனடியாய் விவசாயிகளுக்கு மாற்றப்பட வேண்டியதன் அவசியத்தையும் தொழில் துறையானது தொழிலாளர்களது கண்காணிப்பின் கீழ் வர வேண்டியதையும் அங்கீகரிக்கிருர்கள். ஜார்ஸ்கயெவில் நிறுத்தப்பட்டிருக்கும் சைக்கிள் படைத் தொகுதியின் ஐந்தாவது பட்டாளமும் நம்முடையதுதான்....''

அடுத்து மூன்ருவது சைக்கிள் பட்டாளத்தின் பிரதிநிதி பேசினர். கரை புரண்டோடிய உற்சாக வாழ்த்தொலிக்கிடையே அவர் கூறினர்: சைக்கிள் பட்டாளம் தென்மேற்குப் போர்முனையிலிருந்து ''பெத்ரொகிராதின் பாதுகாப்புக்காக'' விரையும்படி மூன்று நாட்களுக்கு முன்பு கட்டளையிடப்பட்டிருந்தது; ஆயினும் அவர்களுக்கு இந்தக் கட்டளை குறித்து சந்தேகம் ஏற்பட்டது; ஜார்ஸ்கயெவிலிருந்து ஐந்தாவது சைக்கிள் பட்டாளத்தின் பிரதிநிதிகள் அவர்களைப் பெரெதோல்ஸ்க் ரயில் நிலையத்தில் சந்தித்தார்கள். இணைப்பாய்க் கூட்டம் நடைபெற்றது; ''சைக்கிள் படையினரில் தமது சோதரர்களது இரத்தத்தைச் சிந்தவோ, முதலாளிகள், நிலப்பிரபுக்களது அரசாங்கத்துக்கு ஆதரவளிக்கவோ சித்தமாயிருந்தவர் ஒருவர்கூட இல்லை'' என்பது தெரியலாயிற்று!

மென்ஷிவிக்கு சர்வதேசியவாதிகளின் சார்பில் பேசிய கப்பெலீன்ஸ்கி, உள்நாட்டு யுத்தத்துக்குச் சமாதானத் தீர்வு காண்பதற்காகத் தனிக் கமிட்டி ஒன்றைத் தேர்ந்தெடுக்க வேண்டுமென்று முன்மொழிந்தார். ''சமாதானத் தீர்வு ஏதும் இல்லை!'' என்று கூட்டத்தினர் கூச்சலிட்டார்

கள். ''வெற்றி ஒன்றேதான் தீர்வு!'' மிதமிஞ்சிய அளவில் இந்த முன்மொழிவுக்கு எதிராய் வாக்குகள் அளிக்கப்பட்டன. சுற்றிலுமிருந்து புயலென மூண்ட கிண்டல் கூச்சல்களுக்கும் வசவுகளுக்கும் இடையே மென்ஷிவிக்கு சர்வதேசியவாதிகள் காங்கிரசை விட்டு வெளியேறினர். பிரதிநிதிகளிடையே முன்பு நிலவிய கிலியூட்டும் அச்ச உணர்வு இப்போது மறைந்து விட்டது.... மேடையிலிருந்து காமெனெவ் வெளியேறிய வர்களைப் பார்த்துக் கூச்சலிட்டார்: ''மென்ஷிவிக்கு சர்வ தேசியவாதிகள் 'சமாதானத் தீர்வு காணும்' பிரச்சினையை 'அவசரப் பிரச்சினையாய்' எடுத்துக் கொண்டு விவாதிக்க வேண்டுமென்று வற்புறுத்தினர்கள்; ஆனால் காங்கிரசை விட்டு வெளியேற விரும்பிய கோஷ்டிகள் வாக்குமூலம் அளிப்பதற்கு ஆதரவாய், முறையான நிகழ்ச்சி நிரலை ஒத்தி வைக்க வேண்டுமென்றே எப்போதும் இவர்கள் வாக்களித்து வந்தார்கள். இந்த ஓடுகாலிகள் எல்லோரும் வெளியேறுவ தென முன்கூட்டியே தமக்குள் தீர்மானித்துக் கொண்டுவிட்ட வர்கள் என்பது தெளிவாகவே விளங்குகிறது!...''

கோஷ்டிகள் வெளியேறியதை உதாசீனம் செய்வதென் றும், அனைத்து ருஷ்யாவின் தொழிலாளர்களுக்கும் படை யாட்களுக்கும் விவசாயிகளுக்குமான வேண்டுகோளை ஏற்ப தென்றும் காங்கிரஸ் தீர்மானித்தது:

### தொழிலாளர்களுக்கும் படையாட்களுக்கும் விவசாயிகளுக்கும்!

தொழிலாளர்கள், படையாட்கள் பிரதிநிதிகளது சோவி யத்துகளின் இரண்டாவது அனைத்து ருஷ்யக் காங்கிரஸ் தொடங்கியிருக்கிறது. மிகப் பெரும்பாலான சோவியத்துகளைப் பிரதிநிதித்துவம் செய்யும் காங்கிரசாகும் இது. விவசாயி களது சோவியத்துகளின் பிரதிநிதிகளும் பலர் இந்தக் காங் கிரசில் பங்கு கொள்கிறார்கள்.... மிகப் பெருவாரியான தொழிலாளர்கள், படையாட்கள், விவசாயிகளது சித்தத்தை அடிப்படையாய்க் கொண்டும், பெத்ரொகிராது தொழி லாளர்கள், படையாட்களது வெற்றிகர எழுச்சியை அடிப் படையாய்க் கொண்டும் இந்தக் காங்கிரஸ் ஆட்சியதிகாரத் தைத் தன் கையில் ஏற்கிறது.

இடைக்கால அரசாங்கம் அகற்றப்படுகிறது. இடைக் கால அரசாங்கத்தின் உறுப்பினர்களில் மிகப் பெரும் பாலோர் ஏற்கெனவே கைது செய்யப்பட்டுவிட்டனர்.

சோவியத்து ஆட்சியதிகாரம் எல்லா தேசங்களுக்கும் உடனடியான ஜனநாயக சமாதானத்தையும், எல்லாப் போர்முனைகளிலும் உடனடியான போர்நிறுத்தத்தையும் முன்மொழியப் போகிறது. நிலப்பிரபுக்களுக்கும் அரச குடும் பத்துக்கும் மடாலயங்களுக்கும் சொந்தமான நிலங்கள் இழப்பீடின்றி விவசாயிகளது கமிட்டிகளுக்கு மாற்றப்படும் படி அது உறுதி செய்யும்; படையாட்களது உரிமைகளைப் பாதுகாத்து சேனையை முழு அளவுக்கு ஜனநாயகத் தன் மையதாக்கும்; உற்பத்தியின் மீது தொழிலாளர்களது கண் காணிப்பை நிறுவும்; அரசியல் நிர்ணயச் சபை உரிய காலத் தில் கூட்டப்படும்படி உத்தரவாதம் செய்யும்; நகரங்களுக்கு ரொட்டியும் கிராமங்களுக்கு முதன்மையான அவசியப் பொருள்களும் வழங்கப்படுவதற்கு வகை செய்யும்; ருஷ்யா வில் வாழும் எல்லாத் தேசிய இனங்களும் சுயேச்சையாய் வாழ்வதற்கான மெய்யான உரிமை பெறும்படி உத்தர வாதம் செய்யும்.

இந்தக் காங்கிரஸ் தீர்மானிப்பதாவது: வட்டாரங்களில் அனைத்து ஆட்சியதிகாரமும் தொழிலாளர்கள், படையாட் கள், விவசாயிகளது பிரதிநிதிகளின் சோவியத்துகளுக்கு மாற்றப்படுகிறது, இந்த சோவியத்துகள் புரட்சிகர ஒழுங்கை நிலைநாட்ட வேண்டும்.

அகழ்வரிகளில் இருக்கும் படையாட்களை விழிப்பாகவும் உறுதியாகவும் இருக்கும்படி இந்தக் காங்கிரஸ் அறைகூவு கின்றது. புதிய அரசாங்கம் நேரடியாக எல்லாத் தேசங் களுக்கும் ஜனநாயக சமாதானத்தை முன்மொழிந்து, சமா தான ஒப்பந்தம் முடிவாகும்படிச் செய்யும் வரை புரட்சிகர சேனையானது ஏகாதிபத்தியத்தின் எல்லாத் தாக்குதல்களி லிருந்தும் புரட்சியைப் பாதுகாத்திடும் என்பதில் சோவியத்து களின் காங்கிரசுக்கு ஐயப்பாடு சிறிதும் இல்லை. ஆணை யிட்டுப் பொருள்களைக் கைப்பற்றுதல், சொத்துடைத்தவர்க் கங்களுக்கு வரி விதித்தல் ஆகிய வைராக்கியமான கொள்கை யின் மூலம் புதிய அரசாங்கம், புரட்சிகர சேனைக்குத்

தேவையானவை யாவும் கிடைப்பதற்கும், மற்றும் படையாட்களது குடும்பங்களுடைய நிலைமைகள் மேம்படுவதற்கும் அவசியமான எல்லா நடவடிக்கைகளையும் மேற்கொள்ளும்.

கர்னீலவியர்கள்—கேரென்ஸ்கி, கலேடின் முதலானோர்—பெத்ரொகிராதுக்கு எதிராய்த் துருப்புகளை ஏவிவிட எத்தனித்து வருகின்றனர். கேரென்ஸ்கியால் ஏமாற்றப்பட்ட சில பட்டாளங்கள், எழுச்சி புரியும் மக்களின் பக்கத்துக்கு வந்து சேர்ந்து கொண்டுவிட்டன.

படையாட்களே! கர்னீலவிய கேரென்ஸ்கியை முனைந்து முன்னின்று எதிர்த்துப் போராடுங்கள்! விழிப்புடன் இருங்கள்!

ரயில்வேத் தொழிலாளர்களே! பெத்ரொகிராதை எதிர்த்து கேரென்ஸ்கி அனுப்பும் துருப்பு வண்டிகள் யாவற்றையும் தடுத்து நிறுத்துங்கள்!

படையாட்களே, தொழிலாளர்களே, எழுத்தர் ஊழியர்களே! புரட்சியின், ஜனநாயக சமாதானத்தின் எதிர்காலம் உங்கள் கையிலேதான் இருக்கிறது!

ஓங்குக புரட்சி!

தொழிலாளர்கள், படையாட்கள் பிரதிநிதிகளது
சோவியத்துகளின் அனைத்து ருஷ்யக் காங்கிரஸ்.
விவசாயிகள் சோவியத்துகளைச் சேர்ந்த
பிரதிநிதிகள்.*

காலை சரியாய் 5-17 மணிக்குக் கையில் ஒரு தந்தியை எடுத்துக் கொண்டு களைப்பால் தடுமாறியவாறு மேடை மீது ஏறினார் குரிலேன்கொ.

''தோழர்களே! வடக்குப் போர்முனையிலிருந்து, பன்னிரண்டாவது சேனை, சோவியத்துகளின் காங்கிரசுக்கு வாழ்த்துக்கள் தெரிவிக்கிறது; புரட்சி இராணுவக் கமிட்டி ஒன்று அமைக்கப்பட்டு, வடக்குப் போர்முனைக்கு அது படைத் தலைமை ஏற்றுக் கொண்டுவிட்டதை அறிவிக்கிறது!'' ஆர்வம்

* ''விவசாயிகள் சோவியத்துகளைச் சேர்ந்த பிரதிநிகள்'' என்ற இந்த ஒப்பம், விவசாயிகள் பிரதிநிதிகள் உடன்பாடு தெரிவித்து அறிக்கை வெளியிட்டபின் சேர்த்துக் கொள்ளப் பட்டது.—[பதிப்பாசிரியர்.]

மேலிட்டு அமர்க்களப்பட்டது. பிரதிநிதிகள் ஒருவரையொருவர் கட்டித் தழுவிக் கொண்டு ஆனந்தக் கண்ணீர் வடித்தனர். ''ஜெனரல் செரமீசவ் இந்தக் கமிட்டியை ஏற்றுக் கொண்டுவிட்டார்—இடைக்கால அரசாங்கத்தின் கமிசாரான வொய்த்தீன்ஸ்கி ராஜிநாமா செய்துவிட்டார்!''

ஆக, லெனினும் பெத்ரொகிராது தொழிலாளர்களும் எழுச்சி வேண்டுமென்று முடிவு செய்தார்கள்; பெத்ரொகிராது சோவியத்து இடைக்கால அரசாங்கத்தை வீழ்த்தி, அரசு அதிகாரம் புரட்சிகர முறையில் சோவியத்துகளது காங்கிரசுக்கு மாறும்படிச் செய்தது. இனி மாபெரும் ருஷ்ய நாடு அனைத்திலும், பிறகு உலகம் முழுவதிலும் வெற்றி கிட்டச் செய்தாக வேண்டும்! ருஷ்ய நாடு பின்தொடருமா, எழுச்சி புரியுமா? உலகம்—அது என்ன செய்யப் போகிறது? உலக மக்கள் ருஷ்யாவின் வேண்டுகோளுக்குப் பதிலளித்து ஆர்த்தெழப் போகிறார்களா? உலகில் சிவப்புப் பிரளயம் ஏற்படப் போகிறதா?

காலை மணி ஆறாகியுங்கூட இரவு இன்னும் இருள் அடர்ந்து, குளிராய் இருந்தது. இயல் கடந்த மெல்லிய வெளுப்புதான் நிசப்தமான தெருக்களில் மெல்லப் படர்ந்து, காவல் குழுவினரது கணப்புத் தீயின் தகதகப்பை மங்கச் செய்தது, அச்சம் தரும் நிழல் கவிந்த உதயமாய் ருஷ்யாவின் மீது எழுந்தது....

அத்தியாயம் 5

## முழுமூச்சோடு முன்செல்லுதல்

வியாழக் கிழமை, நவம்பர் 8. நகரம் கொந்தளித்துப் பரபரத்துக் கொண்டிருக்க, பொழுது புலர்ந்தது. புயல் மோதித் தேசமே அதிர்ந்தெழுந்து கொண்டிருந்தது. மேம் போக்கான பார்வைக்கு யாவும் அமைதியாகவே இருந்தன. நூறாயிரக் கணக்கான மக்கள் நேரத்தில் படுக்கச் சென்றார் கள், அதிகாலையில் எழுந்து வேலைக்குப் புறப்பட்டுச் சென் றார்கள். பெத்ரொகிராதில் டிராம் வண்டிகள் ஓடிக் கொண் டிருந்தன, கடைகளும் உணவுவிடுதிகளும் திறந்திருந்தன, நாடகங்கள் நடைபெற்று வந்தன, ஓவியக் கண்காட்சி ஒன்று ஆரம்பமாவதாய் விளம்பரம் செய்யப்பட்டிருந்தது.... அன்றாட வாழ்க்கையின் மாமூல் முறைகள் யாவும்—யுத்த கால நிலைமைகளிலும் மீறப்பட முடியாதவையாகிய இவை —வழக்கம் போல் அனுசரிக்கப்பட்டு வந்தன. சமுதாய உயிரமைப்புக்குள்ள ஜீவ ஆற்றலைப் போல் வியக்கத்தக்கது ஏதும் இல்லை—என்னதான் பெருவிபத்து ஏற்படினும் அது தொடர்ந்து இயங்கிக் கொண்டுதான் இருக்கிறது, உண்டு கொண்டும் உடுத்திக் கொண்டும் உல்லாசமுற்றுக் கொண்டும் தான் இருக்கிறது....

கேரென்ஸ்கியைப் பற்றிய வதந்திகள் கணக்கின்றி நகரில் உலவின. அவர் போர்முனையைக் கிளர்த்திவிட்டதாக வும் பெரிய சேனை ஒன்றைத் திரட்டிக் கொண்டு தலைநகரை

நோக்கி வந்து கொண்டிருப்பதாகவும் கூறப்பட்டது. பிஸ்கோவில் அவர் விடுத்த ஆணையை வோலியா நரோதா ஏடு பிரசுரித்திருந்தது:

போல்ஷிவிக்குகளது பைத்தியக்காரத்தனமான முயற்சியின் விளைவாய் ஏற்பட்டிருக்கும் முறைகேடுகள் இந்நாட்டை ஒரு பயங்கரப் படுகுழியின் விளிம்பிற்கு இட்டுச் சென்றுள்ளன. நமது தாயகம் படுபயங்கர சோதனைக்கு உள்ளாக்கப்பட்டிருக்கிறது. இந்தச் சோதனையை வெற்றிகரமாய்ச் சமாளிப்பதற்கு நாம் ஒவ்வொருவரும் நமது அனைத்து சித்தத்தையும் நெஞ்சுத் துணிவையும் பற்றுறுதியையும் ஈடுபடுத்திச் செயலில் இறங்குவது அவசியமாகியுள்ளது....

புதிய இடைக்கால அரசாங்கத்தின்—புதிதாய் ஒன்று நிறுவப்படுமாயின்—இயைபு அறிவிக்கப்படும் வரை ஒவ்வொருவரும் அவரது பணியிடத்தில் இருந்து, இரத்தம் சிந்தும் ருஷ்யாவுக்குத் தாம் ஆற்ற வேண்டிய கடமையை நிறைவேற்ற வேண்டும். தற்போதுள்ள சேனை நிறுவனங்களில் இம்மியளவு தலையிட்டாலும் அது போர்முனையைப் பகைவனுக்குத் திறந்து விட்டு ஈடு செய்ய முடியாத பெருங்கேடுகளை விளைவிக்கும் என்பதை நினைவில் கொண்டாக வேண்டும். ஆகவே எந்த விலை கொடுத்தேனும் துருப்புகளது உறுதியையும் ஊக்கத்தையும் பாதுகாப்பது இன்றியமையாததாகும். இதற்கு முழுநிறை ஒழுங்கு நிலவும்படி உறுதி செய்வதும், சேனைக்குப் புதிய அதிர்ச்சிகள் ஏற்படாதவாறு பார்த்துக் கொள்வதும், இராணுவ அதிகாரிகளுக்கும் அவர்களுக்குக் கீழிருக்கும் படையினருக்குமிடையே முழு நம்பிக்கையை நிலைநாட்டுவதும் அவசியமாகும். நாட்டினது பாதுகாப்பின் பெயரில் நான் ஆணையிடுகின்றேன்: குடியரசின் இடைக்கால அரசாங்கம் அதன் சித்தத்தைப் பிரகடனம் செய்யும் வரை, எப்படி நான் தலைமைச் சேனுதிபதிப் பதவியை விட்டு விலகாமல் கடமையாற்றுகிறேனே, அதே போல எல்லாத் தலைவர்களும் கமிசார்களும் அவர்களது பதவிகளை விட்டு விலகாமல் கடமையாற்ற வேண்டுமென அவர்களுக்கு ஆணையிடுகின்றேன்....

இதற்குப் பதிலளிக்கும் முறையில் எல்லாச் சுவர்களிலும் அடியிற் கண்ட அறிவிப்பு ஒட்டப்பட்டிருந்தது:

**சோவியத்துகளின் அனைத்து ருஷ்யக் காங்கிரசிலிருந்து**

''முன்னாள் அமைச்சர்கள் கனவாலவ், கீஷ்கின், தெரேஷ்ச்சென்கோ, மலியன்தோவிச், நிக்கீத்தின் முதலானோர் புரட்சி இராணுவக் கமிட்டியினால் கைது செய்யப்பட்டிருக்கிறார்கள். கேரென்ஸ்கி ஓடிவிட்டார். கேரென்ஸ்கியை உடனே கைது செய்து அவரைப் பெத்ரொகிராதுக்குக் கொண்டு வந்து சேர்ப்பிப்பதற்கு எல்லா நடவடிக்கைகளையும் எடுக்கும்படி இராணுவ நிறுவனங்கள் யாவும் உத்தரவிடப்படுகின்றன.

''கேரென்ஸ்கிக்கு அளிக்கப்படும் எந்த விதமான உதவியும் அரசுக்கு எதிரான கடுங் குற்றமாய்க் கருதப்பட்டுத் தண்டிக்கப்படும்.''

தடைக் கட்டைகள் அகற்றப்பட்டு புரட்சி இராணுவக் கமிட்டி முழு வேகத்தில் இயங்கித் தீப்பொறியென நாற்றிசையிலும் கட்டளைகளையும் அறைகூவல்களையும் ஆணைகளையும் பறக்கச் செய்தது....[1*] கர்னீலவைப் பெத்ரொகிராதுக்குக் கொண்டு வந்து சேர்ப்பிக்கும்படி கட்டளை பிறப்பிக்கப்பட்டது. இடைக்கால அரசாங்கத்தால் கைது செய்யப்பட்ட விவசாயிகளது நிலக் கமிட்டிகளின் உறுப்பினர்கள் சிறையிலிருந்து விடுதலை பெற்றவர்களாய் அறிவிக்கப்பட்டனர். சேனையில் மரண தண்டனை ஒழிக்கப்பட்டது. அரசாங்க ஊழியர்கள் தொடர்ந்து தமது வேலைகளைச் செய்யும்படிக் கட்டளையிடப்பட்டனர், வேலை செய்ய மறுப்போர் கடும் தண்டனைக்கு உள்ளாவர் என்று அறிவிக்கப்பட்டது. எல்லா விதமான கொள்ளையும் ஒழுங்கின்மையும் கள்ளச் சந்தை வாணிபமும் மரண தண்டனைக்குரிய குற்றங்களாகுமென்று

---

* இந்த அத்தியாயத்தில் எண்ணிட்டுக் காட்டப்படும் சுட்டுக்குறிகள் அத்தியாயம் ஐந்தின் அனுபந்தத்தைக் குறிப்பவை.

பிரகடனம் செய்யப்பட்டது. பல்வேறு அமைச்சகங்களுக்கும் தற்காலிக கமிசார்கள் நியமிக்கப்பட்டனர்: அயல் விவகாரத் துறை—உரீத்ஸ்கியும் திரோத்ஸ்கியும்; உள்துறை, சட்டத் துறை—ரீக்கவ்; தொழிலாளர் துறை—ஷிலியாப்னிக்கவ்; நிதித் துறை—மென்ழீன்ஸ்கி, பொதுநலத் துறை—திருமதி கொலன்தாய்; வாணிகம், போக்குவரத்துத் துறை—ரியஸானவ்; கடற் படை—மாலுமி கோர்பிர்; தபால், தந்தி—ஸ்பிரோ; நாடகம்—முரவியோவ்; அரசு அச்சகத் துறை—தேர்பிஷெவ்; பெத்ரொகிராது நகரக் கமிசார்—லெப்டினன்ட் நேஸ்திரொவ்; வடக்குப் போர்முனை கமிசார்—போஸெர்ன்....*

புரட்சி இராணுவக் கமிட்டிகளை அமைத்துக் கொள்ளும்படி சேனைக்கு அறைகூவல் விடுக்கப்பட்டது. ரயில்வேத் தொழிலாளர்கள் ஒழுங்கை நிலைநாட்டும் படியும், முக்கியமாய் நகரங்களுக்கும் போர்முனைக்கும் உணவு போய்ச் சேர்வதில் தாமதம் ஏற்படாதபடி பார்த்துக் கொள்ளும்படியும் கேட்டுக் கொள்ளப்பட்டார்கள்.... இதற்குப் பதில் இவர்களுக்குப் போக்குவரத்துத் துறை அமைச்சகத்தில் பிரதிநிதித்துவம் தருவதாய் வாக்களிக்கப்பட்டது.

கசாக்குச் சோதரர்களே! (என்றது மற்றொரு பிரகடனம்). பெத்ரொகிராதுக்கு எதிராய் உங்களை ஏவிவிடுகிறார்கள். தலைநகரின் புரட்சிகரத் தொழிலாளர்களையும் படையாட்களையும் எதிர்த்துப் போராடும்படி உங்களைக் கட்டாயப் படுத்த அவர்கள் விரும்புகிறார்கள். நிலப்பிரபுக்களும் முதலாளிகளும் நமது பொதுப் பகைவர்கள், அவர்கள் சொல்வதில் ஒரு வார்த்தையும் நம்பாதீர்கள்.

---

* தற்காலிக கமிசார்களின் நியமனம் குறித்து இங்கு தரப்படும் விவரங்களில் சில சரியல்ல: அயல் துறை அமைச்சகத்துக்கு உரீத்ஸ்கி மட்டும்தான் நியமிக்கப்பட்டார்; கடற் படை அமைச்சகமானது, சோவியத்துகளின் அனைத்து ருஷ்யக் காங்கிரசுக்கு வந்திருந்த எல்லாக் கப்பற் படைப் பிரதிநிதிகளாலும் தேர்ந்தெடுக்கப்பட்ட கடற் படைப் புரட்சி இராணுவக் கமிட்டியின் பொறுப்பில் விடப்பட்டது.—[பதிப்பாசிரியர்.]

ருஷ்யாவின் தொழிலாளர்கள், படையாட்கள், உணர்வு படைத்த விவசாயிகளது எல்லா நிறுவனங்களும் எங்களுடைய காங்கிரசில் பிரதிநிதித்துவம் பெற்றிருக்கின்றன. உழைக்கும் கசாக்குகளையும் இந்தக் காங்கிரஸ் தன் மத்தியில் வந்தமர வேண்டுமென்று விரும்புகிறது. கறுப்பு நூற்றுவரின் ஜெனரல்கள், நிலப்பிரபுக்களின் சேவகர்களும் இரத்த வெறிகொண்ட நிக்கலாயின் சேவகர்களுமான இவர்கள் நமது பகைவர்கள்....

கசாக்குகளுடைய நிலங்களை சோவியத்துகள் பறிமுதல் செய்ய விரும்புவதாய் அவர்கள் உங்களிடம் சொல்கிறார்கள். இது பச்சையான பொய். பெரிய கசாக்கு நிலப்பிரபுக்களிடமிருந்து மட்டும்தான் புரட்சியானது நிலத்தைப் பறிமுதல் செய்து மக்களிடம் தரப் போகிறது.

கசாக்குப் பிரதிநிதிகளது சோவியத்துகளை அமைத்துக் கொள்ளுங்கள்! தொழிலாளர்கள், படையாட்கள் பிரதிநிதிகளது சோவியத்துகளுடன் ஒன்றுசேருங்கள்!

நீங்கள் மக்களுக்குத் துரோகமிழைப்பவர்கள் அல்ல, நீங்கள் புரட்சிகர ருஷ்யா அனைத்தாலும் சபிக்கப்பட விரும்பவில்லை என்பதைக் கறுப்பு நூற்றுவருக்குத் தெரியப்படுத்துங்கள்!...

கசாக்குச் சோதரர்களே, மக்களின் பகைவர்களுடைய ஆணைகளில் ஒன்றையேனும் நிறைவேற்றாதீர்கள். எங்களுடன் பேச்சுவார்த்தைகள் நடந்துவதற்காக உங்களுடைய பிரதிநிதிகளைப் பெத்ரொகிராதுக்கு அனுப்பி வையுங்கள்.... பெத்ரொகிராது நகரக் காவற் படையைச் சேர்ந்த கசாக்குகள் புகழுக்குரியவர்கள், மக்களது பகைவர்களின் நம்பிக்கை நிறைவேற அவர்கள் இடம் தரவில்லை....

கசாக்குச் சோதரர்களே! சோவியத்துகளின் அனைத்து ருஷ்யக் காங்கிரஸ் உங்களுக்குச் சோதரக் கரம் நீட்டுகிறது. அனைத்து ருஷ்யாவின் படையாட்கள், தொழிலாளர்கள், விவசாயிகளுடன் கசாக்குகளுக்குள்ள சோதரத்துவம் நீடூழி வாழ்க!*

---

* இந்த அறைகூவல் ''தொழிலாளர்கள், படையாட்கள் பிரதிநிதிகளது சோவியத்துகளின் அனைத்து ருஷ்யக் காங்கிரஸ்'' என்ற ஒப்பம் தாங்கியதாகும்.—[பதிப்பாசிரியர்.]

மறு புறத்திலிருந்து புயல் மூண்டது போலல்லவா அறைகூவல்களும் பிரகடனங்களும் வெளியிடப்பட்டுச் சுவர்களில் எல்லாம் ஒட்டப்பட்டன! துண்டுப்பிரசுரங்கள் எங்கும் வாரி இறைக்கப்பட்டன! செய்தியேடுகள் காட்டுக் கூச்சல் எழுப்பி, சாபங்கள் பொழிந்து, பெருங் கேடு வரப் போவதாய் ஆரூடம் கூறின! அச்சு இயந்திரங்களது போர் இப்போது ஆவேசமாய் நடைபெற்றது—ஏனைய எல்லா ஆயுதங்களும் சோவியத்துகளின் கைக்கு மாறிவிட்ட காரணத்தால்.

முதலாவதாக, தாய்நாட்டின், புரட்சியின் இரட்சணியக் கமிட்டியினுடைய அறைகூவல் ருஷ்யா எங்கும், ஐரோப்பா எங்கும் விரிவாய்ப் பறைசாற்றப்பட்டது:

ருஷ்யக் குடியரசின் குடிமக்களுக்கு!

நவம்பர் 7ஆம் நாளன்று பெத்ரொகிராது போல்ஷிவிக்குகள் புரட்சிகர மக்கள் பெருந் திரளினரது சித்தத்துக்கு விரோதமாய்க் குற்றம் இழைத்து, இடைக்கால அரசாங்க உறுப்பினர்களில் ஒரு பகுதியோரைக் கைது செய்து, குடியரசு அவையைக் கலைத்து, சட்ட விரோத ஆட்சியதிகாரம் ஒன்றைப் பிரகடனம் செய்தனர். புரட்சிகர ருஷ்யாவின் அரசாங்கத்துக்கு எதிராய், புறத்தே அமைந்த பகைவனிடமிருந்து அபாயம் மிகக் கடுமையாகிவிட்ட ஒரு நேரத்தில், புரியப்பட்டிருக்கும் இந்த வன்முறைச் செயல், தாய்நாட்டுக்கு இழைப்பட்ட கண்டும் கேட்டுமறியாத கொடுங் குற்றமாகும்.

போல்ஷிவிக்குகளது இந்தக் கலகம் தேசப் பாதுகாப்புக்கு மரண அடி கொடுக்கிறது, அனைவராலும் பெரிதும் விரும்பப்படும் சமாதானம் கைவருவதை ஒத்திப் போடுகிறது.

போல்ஷிவிக்குகளால் துவக்கப்பட்டிருக்கும் உள்நாட்டு யுத்தமானது அராஜகம், எதிர்ப்புரட்சி ஆகியவற்றின் பயங்கரத்தில் நம் நாடு மூழ்க்கடிக்கப்படும்படியான அபாயத்தை உண்டாக்குகிறது; குடியரசு ஆட்சியை உறுதி செய்து நிலத்தை என்றென்றுக்குமாய் மக்களுக்கு உரியதாக்குவதற்கு வேண்டிய அரசியல் நிர்ணயச் சபை தகர்ந்துவிடும்படியான ஆபத்தை ஏற்படுத்துகிறது.

நவம்பர் 7ஆம் நாள் இரவில் அமைக்கப்பட்டதாகிய தாய்நாட்டின், புரட்சியின் அனைத்துருஷ்ய இரட்சணியக் கமிட்டி சட்ட அங்கீகாரமுள்ள ஒரே அரசாங்க அதிகாரத்தின் மரபு வழியைப் பாதுகாத்து, ஒரு புதிய இடைக்கால அரசாங்கத்தை நிறுவ முன்முயற்சி எடுக்கிறது. இந்த அரசாங்கம் ஜனநாயக சக்திகளைத் தனக்கு அடிப்படையாய்க் கொண்டு, நாட்டை அரசியல் நிர்ணயச் சபைக்கு இட்டுச் சென்று அராஜகத்திலிருந்தும் எதிர்ப்புரட்சியிடமிருந்தும் காப்பாற்றும்.

குடிமக்களே! தாய்நாட்டின், புரட்சியின் அனைத்துருஷ்ய இரட்சணியக் கமிட்டி உங்களை அறைகூவி அழைக்கிறது:

வன்முறையின் ஆட்சியதிகாரத்தை அங்கீகரிக்கச் சம்மதிக்காதீர்கள்!

அதன் ஆணைகளுக்குப் பணியாதீர்கள்!

தாய்நாட்டையும் புரட்சியையும் பாதுகாத்திட எழுங்கள்!

தாய்நாட்டின், புரட்சியின் அனைத்துருஷ்ய இரட்சணியக் கமிட்டியை ஆதரியுங்கள்!

இந்த அறைகூவலில் ஒப்பமிட்டிருந்தவை: ருஷ்யக் குடியரசு அவை, பெத்ரொகிராது நகர டூமா, இத்ஸே-யி-க (முதலாவது காங்கிரஸ்), விவசாயிகள் சோவியத்துகளது நிர்வாகக் கமிட்டி, சோவியத்துகளின் இரண்டாவது காங்கிரசைச் சேர்ந்த போர்முனைக் கோஷ்டி, சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களும் மென்ஷிவிக்குகளும் நரோத்னிய சோஷலிஸ்டுகளும் ஒன்றுபட்ட சமூக-ஜனநாயகவாதிகளும் ''எதின்ஸ்துவொ'' கோஷ்டியினருமான கட்சிக் குழுக்கள்.

பிறகு சோஷலிஸ்டுப் புரட்சியாளர் கட்சியும், மென்ஷிவிக்குப் பாதுகாப்புவாதிகளது கோஷ்டியும் மற்றும் மத்தியச் சேனைக் கமிட்டியும், இத்ஸேன்திரஃப்ளோத்தும் சுவரொட்டிகள் வெளியிட்டிருந்தன....

...பஞ்சத்திலே மடியப் போகிறது பெத்ரொகிராது!— என்று அவை கூச்சலிட்டன. ''ஜெர்மன் சேனைகள் நமது சுதந்திரத்தை மிதித்து நசுக்கப் போகின்றன. கறுப்பு நூற்று

வரது படுகொலைகள் ருஷ்யா எங்கும் தாண்டவமாடப் போகின்றன. நாம் எல்லோரும், உணர்வு படைத்த தொழிலாளர்களும் படையாட்களும் குடிமக்களுமாகிய நாம் எல்லோரும் ஒன்றுபடாவிடில், இப்படிதான் ஆகும்....

போல்ஷிவிக்குகளது வாக்குறுதிகளை நம்பாதீர்கள்! உடனடியாய்ச் சமாதானம் வரப் போகிறதென்ற வாக்குறுதி—பெரும் பொய்! ரொட்டி கிடைக்கும் என்பது—வெறும் புரட்டு! நிலம் கிடைக்கும் என்ற உறுதிமொழி—கட்டுக் கதை!...

அந்தச் சுவரொட்டிகள் யாவும் இந்த முறையிலேதான் இருந்தன.

தோழர்களே! கேவலமாகவும் கொடுமையாகவும் நீங்கள் ஏமாற்றப்பட்டிருக்கிறீர்கள்! ஆட்சியதிகாரத்தைக் கைப்பற்றியிருக்கிறுர்கள்—இதைச் செய்திருப்பது போல்ஷிவிக்குகள் மட்டும்தான்.... சோவியத்துகளைச் சேர்ந்த ஏனைய சோஷலிஸ்டுக் கட்சிகளிடமிருந்து அவர்கள் தமது சதித் திட்டத்தை மூடிமறைத்துக் கொண்டுவிட்டனர்....

உங்களுக்கு நிலமும் சுதந்திரமும் கிடைக்குமென்று வாக்குறுதி அளித்திருக்கிறுர்கள், ஆனுல் போல்ஷிவிக்குகள் கட்டவிழ்த்து விட்டிருக்கும் அரஜகத்தால் எதிர்ப்புரட்சிதான் ஆதாயமடையப் போகிறது, உங்களை அது நிலமும் சுதந்திரமும் இல்லாதோராக்கி விடும்....

செய்தியேடுகளும் இதே போலத்தான் காட்டுக் கூச்சலிட்டன.

தொழிலாளி வர்க்கத்தின் துரோகிகளான இவர்களை அம்பலம் செய்வதே எமது கடமை—என்றது நியேலோ நரோதா. எமது சக்திகள் யாவற்றையும் ஒன்றுதிரட்டிப் புரட்சியின் இலட்சியத்தைக் காவல் புரிவதே எமது கடமை....

**இஸ்வேஸ்தியா** ஏடு கடைசித் தடவையாய் பழைய **இத்ஸே-யி-கவின்** பெயரில் வெளிவந்து பயங்கர முறையில் பழி தீர்க்கப்படும் என்று அச்சுறுத்திற்று....

சோவியத்துகளின் காங்கிரசைப் பொறுத்த வரை, நாம் தீர்க்கமாய்க் கூறுகின்றோம், சோவியத்துகளின் காங்கிரஸ் ஒன்றும் நடைபெறவில்லை என்று! நடை பெற்றது போல்ஷி விக்குக் கட்சிப் பிரிவினரது தனிப்பட்ட மாநாடே அன்றி வேறல்ல என்று நாம் அறுதியிட்டுக் கூறுகின்றோம்! ஆகவே இந்த நிலைமையில் இத்ஸே-யி-கவின் அதிகாரங்களை ரத்து செய்ய இவர்களுக்கு எந்த உரிமையும் இல்லை....

நோவயா ழீஸின் செய்தியேடு எல்லா சோஷலிஸ்டுக் கட்சிகளையும் ஒன்றுபடச் செய்யும் ஒரு புதிய அரசாங்கம் வேண்டுமென்று வலியுறுத்திவிட்டு, அதே போது சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களையும் மென்ஷிவிக்குகளையும் சோவியத்துகளின் காங்கிரசிலிருந்து அவர்கள் வெளியேறியதற்காகக் கடுமையாய்க் கண்டித்து விமர்சித்தது. போல்ஷிவிக்கு எழுச்சியானது ஒன்றை மிகத் தெளிவாய்ப் புலப்படுத்திற்று என்று அது சுட்டிக்காட்டிற்று: அதாவது, முதலாளித்துவ வர்க்கத்தாருடன் கூட்டு சேர்வது பற்றிய எல்லாப் பிரமைகளும் இனி பயனற்றவை என்பது தெளிவுபடுத்தப்பட்டுவிட்டது என்றது....

ரபோச்சி பூத், முன்பு ஜூலை மாதத்தில் தடை விதிக்கப்பட்டு மூடப்பட்ட லெனின் செய்தியேடான பிராவ்தாவாய் உரு மாறி வெளிவந்தது. அது முழக்கட்டு அறிவித்தது:

தொழிலாளர்களே, படையாட்களே, விவசாயிகளே! மார்ச் மாதத்தில் நீங்கள் பிரபுக்களது கும்பலின் ஏதேச்சாதிகாரத்தை வீழ்த்தினீர்கள். நேற்று நீங்கள் முதலாளித்துவக் கும்பலின் ஏதேச்சாதிகாரத்தை வீழ்த்தினீர்கள்....

தற்போதுள்ள முதலாவது பணி பெத்ரொகிராதுக்கு வரும் வாயில்வழிகளில் காவல் புரிவது.

இரண்டாவது பணி, பெத்ரொகிராதிலுள்ள எதிர்ப்புரட்சிக் கூறுகளை முடிவாய் ஆயுத பலம் இழக்கச் செய்தல்.

மூன்றாவது பணி, புரட்சிகர ஆட்சியதிகாரத்தை முடிவாய் ஒழுங்கமையச் செய்வதும், மக்களது வேலைத்திட்டத்தை நடைமுறையில் நிறைவேற்றுவதும்....

இன்னமும் வெளிவந்து கொண்டிருந்த ஒரு சில காடேட்டு ஏடுகளும், பொதுவாய் முதலாளித்துவ ஏடுகளும் இந்த விவகாரம் அனைத்தும் குறித்து ஒதுங்கி நின்று கேலி புரியும் ஒரு போக்கினை, ஏனைய கட்சிகளைப் பார்த்து ''நான் தான் அப்போதே சொன்னேனே'' என்று கூறும் ஒரு வகை ஏளனப் போக்கை அனுசரித்தன. செல்வாக்கு வாய்ந்த காடேட்டுகள் எந்நேரமும் நகர டூமாவையும், இரட்சணியக் கமிட்டியையும் சுற்றிக் கொண்டிருந்ததைப் பார்க்க முடிந்தது. மற்றபடி, முதலாளித்துவ வர்க்கத்தார் பேசாமல் பதுங்கிக் கொண்டு, காலம் வரும் என்று காத்திருந்தனர்—தமக்குரிய இந்தக் காலம் அதிக தொலைவில் இல்லை என்பதாய் அவர்கள் நினைத்தனர். போல்ஷிவிக்குகளால் மூன்று நாட்களுக்கு மேல் அதிகாரத்தில் இருக்க முடியுமென்ற எண்ணம்—லெனினையும் திரோத்ஸ்கியையும் பெத்ரொகிராது தொழிலாளர்களையும் சாமானியப் படையாட்களையும் தவிர்த்து—வேறு யாருக்கும் உதிக்கவே இல்லை....

சுற்றுமாடியுடன் கூடிய நெடிதுயர்ந்த வட்டரங்கமான நிக்கலாய் மண்டபத்தில் அன்று பிற்பகல் நான் நகர டூமா நிரந்தர அமர்வு நடத்திச் சீறிக் கொண்டிருக்கக் கண்டேன். போல்ஷிவிக்குகளுக்கு எதிரான எல்லா சக்திகளின் பிரதிநிதிகளும் இங்கு ஒன்றுகூடியிருந்தனர். நரைத் தலையும் தாடியும் கொண்டு கம்பீரமாய்த் தோன்றிய நகர மேயரான கிழவர் ஷ்ரேய்தர் முந்திய இரவில் மாநகரத் தன்னாட்சியின் சார்பில் ஆட்சேபம் தெரிவிப்பதற்காக ஸ்மோல்னிக்குத் தாம் சென்றிருந்தது பற்றி விவரித்துக் கூறிக் கொண்டிருந்தார். ''டூமாதான் சட்டப்படி நகரில் இருந்து வரும் ஒரே அரசாங்கம்; இது சமத்துவமான, நேரடியான இரகசிய வாக்கெடுப்பு மூலம் தேர்ந்தெடுக்கப்பட்டது. இந்த டூமா புதிய ஆட்சியதிகாரத்தை அங்கீகரிக்காது'' என்று திரோத்ஸ்கியிடம் தாம் கூறியதாய் நகர மேயர் அறிவித்தார். அதற்கு திரோத்ஸ்கி அளித்த பதில் வருமாறு: ''அரசியலமைப்புச் சட்டப்படி இதற்கு ஒரு நிவாரணம் இருக்கிறது. டூமாவைக் கலைத்துவிட்டு, புதிதாய் ஒன்றைத் தேர்ந்தெடுக்க வேண்டும்....'' இதை ஷ்ரேய்தர் அறிவித்ததும் ஆத்திரக் கூப்பாடுகள் எழுந்தன.

''துப்பாக்கி முனையிலான ஓர் அரசாங்கத்தை ஏற்றுக் கொள்ளலாமெனில், இதோ கண் முன்னால் இம்மாதிரியான ஓர் அரசாங்கம் இருக்கிறது'' என்று கிழவர் தொடர்ந்து பேசிச் சென்றார். ''ஆனால் மக்களால், பெரும்பான்மையோரால் அங்கீகரிக்கப்படும் அரசாங்கத்தைதான் சட்டப்படி அமைந்த நியாயமான அரசாங்கமாய் நான் கருதுகிறேன், சிறுபான்மையோர் தகாத வழியில் பதவியைக் கைப்பற்றிக் கொண்டு அமைத்திடும் அரசாங்கத்தை அல்ல!'' போல்ஷிவிக்கு வரிசைகளைத் தவிர ஏனைய எல்லா வரிசைகளிலிருந்தும் ஆவேசக் கையொலி முழக்கம் எழுந்தது. போல்ஷிவிக்குகள் பல பிரிவுகளுக்குக் கமிசார்களை நியமித்து நகரின் தன்னாட்சி உரிமையை ஏற்கெனவே மீறத் தொடங்கிவிட்டனர் என்று புதிய கண்டனக் கூச்சல்களுக்கிடையே நகர மேயர் அறிவித்தார்.

போல்ஷிவிக்குப் பேச்சாளர் இந்த சப்தத்துக்கு இடையே தமது பேச்சு எல்லோர் காதிலும் விழும் வண்ணம் கூச்சலிட்டுப் பேசினார். அனைத்து ருஷ்யாவும் போல்ஷிவிக்குகளுடைய செயலை ஆதரிக்கிறது, சோவியத்துகளின் காங்கிரசினுடைய தீர்மானம் இதை நிரூபிக்கிறது என்று அவர் பலக்கக் கூறினார்.

''நீங்கள் பெத்ரோகிராது மக்களின் மெய்யான பிரதிநிதியல்ல!'' என்று அவர் கத்தினார். ''அவமதிக்கிறார்! அவமதிக்கிறார்!'' என்று கூப்பாடுகள் எழுந்தன. வயது முதிர்ந்த மேயர், டூமாவானது கூடுமான முழு அளவுக்கு மக்களது சுதந்திரமான வாக்குகள் மூலம் தேர்ந்தெடுக்கப்பட்டதாகும் என்று மாண்பு மிக்க குரலில் பேச்சாளருக்கு நினைவுபடுத்தினார். ''ஆம்'' என்று போல்ஷிவிக்குப் பேச்சாளர் பதிலளித்தார். ''ஆனால் நகர டூமா தேர்ந்தெடுக்கப்பட்டது நெடுங் காலத்துக்கு முன்பு—இத்ஸே-யி-கவைப் போல், சேனைக் கமிட்டியைப் போல் பழங் காலத்தில் தேர்ந்தெடுக்கப்பட்டது!...''

''சோவியத்துகளின் புதிய காங்கிரஸ் ஒன்றும் நடைபெறவில்லை!'' என்று பலர் அவரைப் பார்த்துக் கூச்சலிட்டனர்.

''எதிர்ப்புரட்சியின் உறைவிடமான இங்கே போல்ஷிவிக்குக் குழு இனியும் தொடர்ந்து இருப்பதற்கு

மறுக்கிறது—''எதிர்ப்புக் கூச்சல். ''டூமாவுக்கு மறுதேர்தல் நடைபெற வேண்டுமென நாங்கள் கோருகிறோம்...'' இதைச் சொல்லிவிட்டு போல்ஷிவிக்குகள் மண்டபத்தை விட்டு வெளியேறினார்கள். அவர்களைப் பார்த்து ''ஜெர்மன் கையாட்கள்! துரோகிகள் ஒழிக!'' என்ற கூச்சல்கள் எழுப்பப்பட்டன.

காடேட்டான ஷிங்கரியோவ், இப்பொழுது பேசினார்; புரட்சி இராணுவக் கமிட்டியின் கமிசார்களாய்ப் பணி புரிய உடன்பட்ட நகராட்சி அலுவலர்கள் எல்லோரும் பதவி விலக்கம் செய்யப்பட வேண்டும், அவர்கள் மீது வழக்கு தொடர வேண்டும் என்று கோரினார். பிறகு ஷ்ரேய்தர் எழுந்து நின்றார்; டூமாவைக் கலைக்கப் போவதாய்ப் போல்ஷிவிக்குகள் அச்சுறுத்துவதை டூமா கண்டிக்கிறதென்றும், நகர மக்களின் சட்ட வழிப் பிரதிநிதியாகிய டூமா தனது பதவியை விட்டு விலக மறுக்கிறதென்றும் கூறிய ஒரு தீர்மானத்தை அவர் முன்மொழிந்தார்.

வெளியே அலெக்சாந்திரொவ்ஸ்கி மண்டபத்தில் கூட்டம் குழுமியிருந்தது. இரட்சணியக் கமிட்டியின் அமர்வு அங்கே நடைபெற்றுக் கொண்டிருந்தது. ஸ்கோபெலெவ் பேசிக் கொண்டிருந்தார். ''இன்று போல் என்றும் புரட்சியின் கதி இவ்வளவு கடுமையான ஆபத்துக்கு உள்ளாகியதில்லை'' என்றார் அவர். ''இன்று போல் என்றும் ருஷ்ய அரசின் வாழ்வுப் பிரச்சினை இவ்வளவு கவலை தருவதாய் இருந்ததில்லை. இன்று போல் என்றும் வரலாறு இவ்வளவு மூர்க்கமாகவும் திட்டவட்டமாகவும் எழுப்பியதில்லை—ருஷ்யா இருப்பதா, இல்லையா என்கிற இந்தக் கேள்வியை! புரட்சியின் இரட்சணைக்கான மாபெரும் தருணம் வந்துவிட்டது, இதை உணர்ந்து புரட்சிகர ஜனநாயகத்தின் ஜீவ சக்திகள் நெருங்கிய முறையில் ஒருங்கிணையக் காண்கிறோம், இந்த சக்திகளது ஒழுங்கமைந்த சித்தத்தால் தாய்நாட்டின், புரட்சியின் இரட்சணைக்கான மையம் ஒன்று ஏற்கெனவே உருவாக்கப் பெற்றுவிட்டது.... நமது பொறுப்பைத் துறப்பதைக் காட்டிலும் சாவதே மேல்!'' இதே பாணியில் தொடர்ந்து சொற்பொழிவு நடைபெற்றது.

இரட்சணியக் கமிட்டியில் ரயில்வேத் தொழிலாளர்கள் சங்கம் சேர்ந்து கொண்டுவிட்டதாய் ஆவேசக் கையொலி

முழக்கத்துக்கிடையே அறிவிக்கப்பட்டது. சில கணங்களுக்கு எல்லாம் தபால், தந்திப் பணியாளர்கள் உள்ளே வந்தனர்; பிறகு மென்ஷிவிக்கு சர்வதேசியவாதிகள் சிலர் வாழ்த்து முழக்கத்துக்கிடையே மண்டபத்துக்குள் நுழைந்தனர். ரயில்வேத் தொழிலாளர்கள் தாம் போல்ஷிவிக்குகளை அங்கீகரிக்கவில்லை என்பதாய்க் கூறினர். ரயில்வே அமைப்பு அனைத்தையும் தம் கையில் எடுத்துக் கொண்டு விட்டதாகவும், தகாத முறையில் அமைந்த ஆட்சியதிகாரம் எதனிடமும் இதை ஒப்படைக்க மறுப்பதாகவும் அவர்கள் அறிவித்தனர். தந்திப் பணியாளர்களின் பிரதிநிதி தந்திப்பொறி இயக்குவோர் தமது அலுவலகத்தில் போல்ஷிவிக்குக் கமிசார் இருக்கும் வரை பொறிகளை இயக்கத் தீர்மானமாய் மறுத்துவிட்டார்கள் என்று அறிவித்தார். தபால் பணியாளர்கள் தபால்களை ஸ்மோல்னியில் கொடுக்கவும் அங்கிருந்து பெற்றுக் கொள்ளவும் முடியாது என்றார்கள்.... ஸ்மோல்னித் தொலைபேசிகள் யாவும் துண்டிக்கப்பட்டுவிட்டன. இரகசிய உடன்படிக்கைகளைத் தரும்படிக் கேட்பதற்காக அயல் துறை அமைச்சகத்துக்கு உரீத்ஸ்கி சென்றிருந்தார் என்றும், நெராத்தவ்* அவரை வெளியே போகச் சொல்லிவிட்டார் என்றும் கட்டுக்கடங்காத களிப்புடன் அறிவிக்கப்பட்டது. அரசாங்கப் பணியாளர்கள் எல்லோரும் வேலைநிறுத்தம் செய்து வருவதாய் அறிவிக்கப்பட்டது.

போர்தான் அது — வேண்டுமென்றே திட்டமிட்டுத் தொடுக்கப்பட்டது, ருஷ்யப் பாணியிலானது; வேலைநிறுத்தத்தின் மூலமும் சீர்குலைவின் மூலமும் நடத்தப்பட்ட போர். நாங்கள் அங்கே அமர்ந்திருக்கையில் கூட்டத் தலைவர் ஒரு பட்டியலிலிருந்து பெயர்களையும், அவரவருக்கும் வகுத்தளிக்கப்பட்ட பணிகளையும் படித்துக் காட்டினார்: இவர் எல்லா அமைச்சகங்களுக்கும் போய் வருவார்; வேறொருவர் வங்கிகளுக்குச் சென்று வருவார்; பத்துப் பன்னிரண்டு பேர் கொட்டடிகளுக்குச் சென்று படையாட்களுக்கு நடுநிலைமை வகிப்பதன் அவசியத்தை உணர்த்துவார்கள்—"ருஷ்யப் படையாட்களே,

* நெராத்தவ்—முன்னாள் ஜார் அரசுத் தூதுத் துறையாளர், இடைக்கால அரசாங்கத்தில் அயல் துறைத் துணை அமைச்சர்.—[பதிப்பாசிரியர்.]

உங்களது சோதரர்களது இரத்தத்தைச் சிந்தாதீர்கள்!'' கேரென்ஸ்கியுடன் கலந்தாலோசிப்பதற்காக ஒரு கமிட்டி அனுப்பி வைக்கப்பட்டும். மாநில நகரங்களுக்கு ஆட்கள் அனுப்பப்பட்டு, அங்கே இரட்சணியக் கமிட்டியின் கிளைகள் நிறுவப்படும், போல்ஷிவிக்கு-எதிர்ப்புக் கூறுகள் ஒருசேர இணைக்கப்படும்.

கூட்டத்தினரிடையே உற்சாகம் கரை புரண்டு ஓடிற்று: ''ஆணையிட்டு அறிவுத் துறையினரை நாட்டாண்மை புரியலாமென்று நினைக்கிறார்கள் இந்த போல்ஷிவிக்குகள்? சரியானபடி அவர்களுக்குப் பாடம் கற்பிக்கிறோம்!''

...இங்கே கூடியிருந்த இந்தக் கூட்டத்துக்கும் சோவியத்து களின் காங்கிரசுக்கும் இடையிலிருந்த வேற்றுமை கண்ணை உறுத்தும்படி மிகவும் எடுப்பாய் இருந்தது. அங்கே, நைந்து போன பழைய உடுப்புகள் அணிந்த படையாட்களும் அழுக்கு படிந்த தொழிலாளர்களும் விவசாயிகளுமான பெருந் திரளி னர்—பஞ்சையர்கள், உயிர் வாழ்வதற்கான காட்டுத்தனமான போராட்டத்தில் அடிபட்டு உடலம் ஒடிந்து தழும்பேறியவர் கள். ஆனால் இங்கே, மென்ஷிவிக்குகளின், சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களின் தலைவர்களாகிய அவ்க்சேன்தியெவ் களும் டான்களும் லீபெர்களும், முன்னாள் சோஷலிஸ்டு அமைச்சர்களாகிய ஸ்கோபெலெவ்களும் செர்னோவ்களும், இவர்கள் கூடிக் குலாவிய தளுக்கு வாய்ந்த ஷாத்ஸ்கியையும் மினுக்கும் வினாவரையும் போன்ற காடேட்டுகளும், இவர் களுடன் கூட பத்திரிகையாளர்களும் மாணவர்களும் எல்லா வகையான அறிவுத் துறையினரும் கூடியிருந்தார்கள். இந்த டூமாக் கும்பல் நன்கு உண்டு, நன்கு உடுத்திச் சொகுசாய் வாழ்வது. பாட்டாளிகளில் மூன்றே மூன்று பேருக்கு மேல் இங்கு நான் காணவில்லை....

புதிய செய்திகள் தெரிய வந்தன. கர்னீலவின் நம்பக மான தெக்கீன்த்ஸி,* பீஹொவ் என்னும் இடத்தில் அவரு டைய காவலாளர்களைக் கொன்றுவிட்டது, ஆனால் அவர் தப்பி ஓடிவிட்டார். கலேடின் வடக்கு நோக்கிப் படைகளு டன் வந்து கொண்டிருந்தார்... மாஸ்கோ சோவியத்து, புரட்சி இராணுவக் கமிட்டி ஒன்றை அமைத்துக் கொண்டு

* குறிப்புகளும் விளக்கங்களும் என்பதைப் பார்க்கவும்.

விட்டது; ஆயுதச் சாலையைப் பெற்றுத் தொழிலாளர்களுக்கு ஆயுதங்களை வினியோகிப்பதற்காக அது நகரத் தள பதியுடன் பேச்சுவார்த்தைகள் நடத்தி வந்தது.

இந்த உண்மைகளுடன் கூட வதந்திகளும் புரட்டுகளும் அப்பட்ட பொய்களுமான வியப்பூட்டும் கதம்பத் திரட்டும் சேர்ந்து பரவிற்று. உதாரணமாய், புத்தி கூர்மை வாய்ந்த இளம் காடேட்டு ஒருவர், முன்பு மில்யுக்கோவுக்கும் பிறகு தெரேஷ்ச்சென்கோவுக்கும் அந்தரங்க செயலாளராய் இருந்தவர், எங்களைத் தனியே அழைத்துச் சென்று, குளிர்கால அரண்மனை பிடிக்கப்பட்டது பற்றிய முழு விவரத்தையும் எங்களிடம் சொன்னார்.

''போல்ஷிவிக்குகளுக்கு ஜெர்மன், ஆஸ்திரிய இராணுவ அதிகாரிகள்தலைமை தாங்கினார்கள்'' என்று அழுத்தம்திருத்தமாய்ச் சொன்னார்.

''அப்படியா? அது உங்களுக்கு எப்படித் தெரிய வந்தது?'' என்று நாங்கள் பணிவுடன் கேட்டோம்.

''என் நண்பர் ஒருவர் அங்கே இருந்தார், அவர்களை அவர் நேரில் பார்த்தார்.''

''அவர்கள் ஜெர்மன் இராணுவ அதிகாரிகள் என்று எப்படித் தெரிந்து கொண்டார் அவர்?''

''அவர்கள்தான் ஜெர்மன் இராணுவ உடுப்புகள் போட்டிருந்தார்களே!''

இம்மாதிரியான அசட்டுக் கதைகள் நூற்றுக் கணக்கில் கூறப்பட்டன. போல்ஷிவிக்கு-எதிர்ப்புப் பத்திரிகைகள் இவற்றை அப்படியே பிரசுரித்து வந்தன என்பது மட்டுமல்ல, சிறிதும் எதிர்பார்க்க முடியாத ஆட்கள் எல்லாம்—உண்மைகளைக் கவனமாய் ஆராய்வதில் நாட்டமுடையோராய்க் கருதப்பட்ட சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களையும் மென்ஷிவிக்குகளையும் போன்றவர்கள்கூட—இவற்றை அப்படியே நம்பினார்கள்....

ஆனால் போல்ஷிவிக்குகளின் வன்முறையையும் பயங்கரவாதத்தையும் பற்றிய கதைகள் மேற்கூறியவற்றைக் காட்டிலும் வினையம் வாய்ந்தவை. உதாரணமாய், செங்காவலர்கள் குளிர்கால அரண்மனையை வெறித்தனமாய்ச் சூறையாடியதோடு, யூன்கெர்களை நிராயுதபாணிகளாக்கிய பின்

அவர்களைப் படுகொலை புரிந்ததாகவும், அமைச்சர்களில் சிலரை மனமாரத் துணிந்து கொன்றதாகவும், பெண் படையாட்களைப் பொறுத்த வரை அவர்களில் மிகப் பெரும் பாலோர் கற்பழிக்கப்பட்டதாகவும், சித்திரவதை தாங்க மாட்டாமல் பல பெண்கள் தற்கொலை புரிந்து கொண்டதாக வும் கூறப்பட்டது, அச்சிட்டும் பரப்பப்பட்டது.... டூமாவில் கூடிய கும்பல் இந்தக் கதைகள் யாவற்றையும் முழு மையாய் அப்படியே விழுங்கி ஆத்திரமாய்ச் சீறிற்று. இதனிலும் கொடுமை என்னவெனில், **பல சந்தர்ப்பங்களில் பெயர்ப் பட்டியல்களும் சேர்த்து வெளியிடப்பட்ட** இந்தப் பயங்கர விவரங்களை அந்த யூன்கெர்கள், பெண்களின் தாய் தந்தையர் படித்தார்கள், அன்று பொழுது சாய்வதற்குள் டூமாவைச் சுற்றிலும் கொதிப்புற்றுக் கூக்குரலிடும் குடிமக் கள் ஏகமாய்க் கூடிவிட்டனர்....

கோமகன் துமானவைப் பற்றிய செய்தி இந்தக் கதை களுக்குக் குறிப்பிடத்தக்கதோர் எடுத்துக்காட்டு. இவருடைய பிரேதம் மோய்க்கா கால்வாயில் மிதந்து கொண்டிருந்ததாய் பல செய்தியேடுகள் அறிவித்தன. சில மணி நேரத்துக்கு எல்லாம் கோமகனின் குடும்பத்தார் இதை மறுத்தார்கள், கோமகன் கைது செய்யப்பட்டுக் காவலில் இருக்கும் தகவலை அவர்கள் தெரிவித்தார்கள். ஆகவே செய்தியேடுகள் இறந்து போனவரை ஜெனரல் தெனீசவாய் நிர்ணயம் செய்து அறிவித்தன. இந்த ஜெனரலும் உயிர் பெற்று எழுந்துவிடவே நாங்கள் விசாரணை செய்து பார்த்தோம்; பிரேதம் ஒன்று கண்டுபிடிக்கப்பட்டதே வெறும் புரளி என் பது தெரிந்தது....

டூமா கட்டடத்தை விட்டு நாங்கள் வெளியே வந்த போது, கட்டடத்தின் வாயிற் கதவுக்கு முன்னால் நேவ்ஸ்கி சாலையை அடைத்துக் கொண்டு ஒரு பெருங் கூட்டம் நின் றிருந்தது—அனேகமாய் வாணிபத் துறையோரும் கடைக் காரர்களும் அலுவலர்களும் எழுத்தர்களுமான கூட்டம். இவர்களுக்குச் சாரணச் சிறுவர்கள் இருவர் துண்டுப் பிரசு ரங்கள்[2] வினியோகித்துச் சென்றனர். இவற்றில் ஒன்று கூறியதாவது:

## நகர டூமாவிடமிருந்து

நகர டூமா நவம்பர் 8ல் நடைபெற்ற அதன் கூட்டத்தில், இந்நாள் நிகழ்ச்சிகளைக் கருத்தில் கொண்டு, தனியார் வசிப்பிடங்கள் யாராலும் மீறப்பட முடியாத காப்புரிமை பெற்றவை என்பதை அறிவிப்பதென்று தீர்மானித்தது. தனியார் குடித்தன இல்லங்களினுள் பலவந்தமாய் நுழைய வருவோரது எல்லா முயற்சிகளையும் வீட்டுக் கமிட்டிகள் மூலம் தீர்மானகரமாய் எதிர்த்தடிக்கும்படி, குடிமக்களது தற்காப்பு நலன்களை முன்னிட்டு ஆயுதங்களை உபயோகிப்பதும் அடங்கலாய் எல்லா வழியிலும் எதிர்த்தடிக்கும்படி பெத்ரொகிராது நகர மக்களுக்கு டூமா அறைகூவல் விடுக்கின்றது.

லித்தேய்னி வீதியின் முனையில் ஐந்தாறு செங்காவலர்களும் இரண்டு மாலுமிகளும் செய்தியேடு விற்பனையாளர் ஒருவரைச் சூழ்ந்து கொண்டு, மென்ஷிவிக்கு ஏடான ரபோச்சயா கஸேத்தாவின் (தொழிலாளர் ஏடு) பிரதிகளைத் தந்து விடும்படிக் கோரினர். விற்பனையாளர் முட்டியை உயர்த்தி அவர்களைப் பார்த்து ஆத்திரமாய்க் கூச்சலிட, மாலுமிகளில் ஒருவர் இந்தப் பிரதிகளைப் பிடுங்கிக் கொண்டார். இவர்களைச் சுற்றிலும், ஆத்திரங் கொண்ட கூட்டம் திரண்டுவிட்டது. கூட்டத்தினர் காவற் குழுவினரை ஏசினார்கள். கரளையான தொழிலாளி ஒருவர் விடாப்பிடியாய் இந்தக் கூட்டத்தினருக்கும் செய்தியேடு விற்பனையாளருக்கும் திரும்பத் திரும்ப விளக்கிச் சொல்லிக் கொண்டிருந்தார்: "இந்தச் செய்தியேட்டில் கேரென்ஸ்கியின் பிரகடனம் வெளிவந்திருக்கிறது. நாங்கள் ருஷ்ய மக்களைக் கொன்றதாய்க் கூறுகிறது இது. இரத்தம் பெருகுவதற்கே இது வழி கோலுகிறது...."

ஸ்மோல்னியில் சூழ்நிலை முன்பு இருந்ததையும்விட (இது சாத்தியமெனில்) கடுமையாகி ஒரே அமர்க்களமாயிருந்தது. இருண்ட நடைவழிகளில் முன்பு போலவே ஆட்கள் சிட்டாய்ப் பறந்தனர்; தொழிலாளர் குழுவினர் துப்பாக்கி ஏந்தி நின்றனர்; தடித்த கைப்பைகள் வைத்திருந்த தலைவர்கள், நண்பர்களும் துணைவர்களும் புடை சூழ்ந்து வர, வாதாடிக்

கொண்டும் விளக்கிச் சொல்லிக் கொண்டும் கட்டளைகள் பிறப் பித்துக் கொண்டும் பரபரக்க விரைந்து சென்றனர். மெய் யாகவே இவர்கள் மெய்மறந்தோராய் இயங்கினார்கள், இராப் பகலாய்க் கண் துஞ்சாமல் ஓயாது உழைக்கும் அருந் திறல் படைத்தோராய் இருந்தார்கள்—முகம் மழிக்கப்பட வில்லை, மேலெல்லாம் அழுக்கு, கண்கள் சிவந்து ஜிவுஜிவுத் தன. அடங்காத ஆர்வத்தை விசையாய்க் கொண்டு தமது நிலையான குறிக்கோளை நோக்கி இவர்கள் முழு வேகத்தில் ஓடிக் கொண்டிருந்தவர்கள். இவர்கள் செய்ய வேண்டியிருந் தவை நிறைய இருந்தன, அளவின்றி நிறைய இருந்தன! அரசாங்கத்தை உருவாக்கியாக வேண்டும், நகரில் ஒழுங்கை நிலைபெறச் செய்தாக வேண்டும், நகரக் காவற் படையைத் தம் பக்கத்தை விட்டுச் செல்லாதிருக்கும்படி பார்த்துக் கொண்டாக வேண்டும், டூமாவையும் இரட்சணியக் கமிட்டி யையும் எதிர்த்துப் போராடியாக வேண்டும், ஜெர்மானிய ரை உள்ளே விடாதிருக்க வேண்டும், கேரென்ஸ்கியுடன் போர் புரியத் தயார் செய்தாக வேண்டும், என்ன நடந்திருக்கிற தென்று மாநிலங்களுக்குத் தெரிவித்தாக வேண்டும், அர் ஹான்கேல்ஸ்கிலிருந்து விளதிவஸ்தோக் வரையில் பிரசாரம் செய்தாக வேண்டும்.... அரசாங்கப் பணியாளர்களும் நக ராட்சிப் பணியாளர்களும் அவர்களது கமிசார்களுக்குக் கீழ்ப்படிய மறுத்தார்கள்; தபால் தந்திப் பணியாளர்கள் ஸ்மோல்னிக்குத் தகவல் தொடர்பு இல்லாதபடி செய்தார்கள். ரயில்வே அமைப்பானது வண்டிகள் வேண்டுமென்று ஸ்மோல்னி தெரிவிக்கும் வேண்டல்களைப் பிடிவாதமாய் உதாசீனம் செய்தது. கேரென்ஸ்கி நகரை நோக்கி வந்து கொண்டிருந்தார், நகரக் காவற் படைகளை முழு அள வுக்கு நம்ப முடியவில்லை, கசாக்குகள் ஆர்ப்பாட்டத்துக் காகத் தயார் செய்தார்கள்.... இவர்களுக்குப் பகையாய் இருந்தது நிறுவன ஒழுங்கமைப்பு பெற்ற முதலாளித்துவ வர்க்கம் மட்டுமல்ல; ஏனைய எல்லா சோஷலிஸ்டுக் கட்சி களுங்கூட பகையாகவே இருந்தன; விதி விலக்கானவர்கள் இடதுசாரி சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களும் ஒரு சில மென்ஷிவிக்கு சர்வதேசியவாதிகளும் சமூக-ஜனநாயக சர் வதேசியவாதிகளும்தான்; அவர்களுங்கூட இப்பக்கத்தில்

நிலைத்திருப்பதா, இல்லையா என்ற தீர்மானமின்றி இருந்தார்கள். போல்ஷிவிக்குகளுக்கு ஆதரவாய்ப் பெருந்திரளினரான தொழிலாளர்களும் படையாட்களும் இருந்தது உண்மைதான் —விவசாயிகள் இன்னமும் போதிய அளவுக்கு நிர்ணயமாய்ச் சொல்ல முடியாதவர்களாய் இருந்தனர். ஆனால் கல்வியும் பயிற்சியும் பெற்ற ஆட்களில் போல்ஷிவிக்குகளின் கட்சி எப்படியும் செல்வச் செழிப்புடையதாய் இருக்கவில்லை....

முகப்புப் படிகளில் ஏறி மேலே வந்து கொண்டிருந்த ரியஸானவ் வேடிக்கையுடன் கிலி உணர்வும் கலந்து ஒலிக்கக் குறிப்பிட்டார்—வாணிபக் கமிசாராகிய தான் வாணிப விவகாரங்கள் குறித்து ஏதும் அறியாதவர் என்று. மாடியில் சாப்பாட்டுக் கூடத்தில் தனியே ஒரு மூலையில் ஒருவர் அமர்ந்திருந்தார். ஆட்டுத் தோல் மேலங்கியுடன் அவர் உடுத்தியிருந்த ஆடைகளில் அப்படியே இரவில். 'படுத்துறங்கியவராய்த் தோன்றினர்' என்று சொல்லப் போனேன், ஆனால் அவர்தான் எத்தனையோ நாளாய் உறங்காதவர் ஆயிற்றே. மூன்று நாளாய் மழிக்கப்படாத அவர் முகத்தில் கட்டை முடிகள் மண்டியிருந்தன. அழுக்குக் காகித உறையின் மேல் அவசரமாய் ஏதோ குறித்துக் கணக்கிட்டுக் கொண்டிருந்தார், ஆலோசனையில் மூழ்கியவராய் இடையிடையே பென்சிலை வாயில் வைத்துக் கடித்துக் கொண்டார். அவர் தான் நிதித் துறைக் கமிசாரான மென்ழீன்ஸ்கி, முன்னொரு காலத்தில் பிரெஞ்சு வங்கி ஒன்றில் எழுத்தராய் இருந்தவர் என்பதுதான் இத்துறையில் அவருக்கிருந்த பயிற்சித் தகுதி.... இதோ புரட்சி இராணுவக் கமிட்டி அலுவலகத்திலிருந்து நடைபாதையிலே நடையும் ஓட்டமுமாய் விரைந்து சென்று, அதே போது துண்டுக் காகிதங்களில் ஏதோ குறித்துக் கொள்ளும் இந்த நால்வரும் ருஷ்யாவின் நான்கு மூலைகளுக்கு அனுப்பி வைக்கப்படும் கமிசார்கள்—அங்கே சென்று அவர்கள் இங்கு நிகழ்ந்தவை யாவற்றையும் விளக்கிச் சொல்லியாக வேண்டும், தமக்குத் தெரிந்த வாதங்களை எடுத்தாண்டு வாதாடியாக வேண்டும், அல்லது தம் கைக்குக் கிடைக்கும் ஆயுதங்களைக் கொண்டு போர் புரிந்தாக வேண்டும்....

பிற்பகல் ஒரு மணிக்குக் காங்கிரஸ் அமர்வு ஆரம்பித்திருக்க வேண்டும். காங்கிரஸ் மாமண்டபத்தில் நெடுநேரத்துக்கு முன்பே பிரதிநிதிகள் நிரம்பிவிட்டனர். மாலை மணி ஏழை நெருங்கிக் கொண்டிருந்தது, ஆயினும் தலைமைக் குழுவினர் மேடைக்கு வருவதாய்த் தெரியவில்லை....போல்ஷிவிக்குகளும் இடதுசாரி சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களும் அவரவரது கட்சிக் குழுக்களின் அறைகளில் தனித் தனியே கூடி விவாதித்துக் கொண்டிருந்தார்கள். அன்று பிற்பகல் முழுதும் லெனினும் திரோத்ஸ்கியும் சமரசவாத ஆதரவாளர்களை எதிர்த்துப் போராடினர். போல்ஷிவிக்குகளில் ஒரு கணிசப் பகுதியினர் அனைத்து-சோஷலிஸ்டுக் கூட்டு அரசாங்கம் அமைக்கப்படும் அளவுக்கு விட்டுக் கொடுத்துச் செல்ல உடன்படுவோராய் இருந்தார்கள். ''நம்மால் சமாளித்து நிற்க முடியாது!'' என்று அவர்கள் கூச்சலிட்டார்கள். ''நமக்கு எதிராய் நிற்பவை அளவு மீறி அதிகமாய் இருக்கின்றன. நம்மிடம் தேவையான ஆட்கள் இல்லை. நாம் தனிமைப் படுத்தப்பட்டு விடுவோம், அனைத்தும் தகர்ந்து விழுந்து விடும்.''காமெனெவும் ரியஸானவும் மற்றும் பலரும் இவ்வாறு தான் கூறினார்கள்.

ஆனால் லெனின்—அவருடன் திரோத்ஸ்கியும் இருந்தார்—சிறிதும் அசைந்து கொடுக்கவில்லை, குன்றமென உறுதியாய் நின்றார்: ''சமரசவாதிகள் நமது வேலைத்திட்டத்தை ஏற்றுக் கொள்ளட்டும், அவர்கள் அரசாங்கத்தில் இடம் பெறுவார்கள், நாம் ஓர் அங்குலங்கூட விட்டுக் கொடுக்க மாட்டோம். நாம் துணியும் அளவுக்குத் துணிய நெஞ்சழுத்தமும் திடச் சித்தமும் இல்லாத தோழர்கள் இங்கு இருப்பார்களாயின், ஏனைய கோழைகளோடும் இணக்கவாதிகளோடும் சேர்ந்து அவர்களும் போய்ச் சேரட்டும்! தொழிலாளர்கள், படையாட்களது ஆதரவோடு நாம் தொடர்ந்து முன்செல்வோம்.''

ஏழு அடித்து ஐந்து நிமிடமாகியதும் இடதுசாரி சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களிடமிருந்து தகவல் வந்தது, புரட்சி இராணுவக் கமிட்டியில் தாம் தொடர்ந்து இருக்கப் போவதாய் அவர்கள் கூறினர்.

''பாருங்கள்! நம் பின்னல் ஓடி வருகிருர்கள்!'' என்ருர் லெனின்.

பிறகு சிறிது நேரத்துக்கெல்லாம் நாங்கள் மாமண்டபத்தில் பத்திரிகையாளர் மேசையின் பின்னல் அமர்ந்திருந்த போது, முதலாளித்துவச் செய்தியேடுகளுக்கு எழுதி வந்த அராஜகவாதி ஒருவர் நாம் வெளியே சென்று தலைமைக் குழு என்ன ஆயிற்று என்று தெரிந்து கொண்டு வரலாம் என்ருர். இத்ஸே-யி-கவின் அலுவலகத்திலும் சரி, பெத்ரொகிராது சோவியத்தின் செயலகத்திலும் சரி யாருமே இல்லை. மிகப் பெரும் ஸ்மோல்னி முழுதும் நாங்கள் அறை அறையாய்ப் பார்த்தபடி சுற்றித் திரிந்தோம். காங்கிரசின் ஆட்சிக் குழுவை எங்கே சந்திக்கலாம் என்று யாருக்கும் தெரியவில்லை. நாங்கள் சுற்றிச் சென்ற போது எனது தோழர் பழங் காலத்தில் தாம் புரிந்து வந்த புரட்சிகரச் செயல்களைப் பற்றியும், நாடு கடத்தப்பட்டு பிரான்சில் தாம் கழித்த இனிமையான நீண்ட நெடுங் காலத்தைப் பற்றியும் சொல்லிக் கொண்டிருந்தார்.... போல்ஷிவிக்குகள் இருக்கிருர்களே, அவர்கள் ஏதும் அறியாதவர்கள், நயமற்ற முரட்டு ஆட்கள், கலை உணர்வு சிறிதும் இல்லாதவர்கள் என்று அவர் தமது அந்தரங்கக் கருத்தை என்னிடம் கூறிஞர். ருஷ்ய அறிவுத்துறையினருக்கு அவர் சரியான எடுத்துக்காட்டாய் விளங்கிஞர். ...முடிவில் நாங்கள் புரட்சி இராணுவக் கமிட்டியின் அலுவலகமான 17ஆம் எண் அறைக்குச் சென்று, அவசரமாய் வருவோரும் போவோருமாய்க் களேபரப்பட்ட அந்தச் சூழலுக்கிடையே நின்ருேம். கதவு திறக்கப்பட்டது; விரிந்த முகங் கொண்ட கட்டை குட்டையானவர், தோள்பட்டை இல்லாத இராணுவ உடுப்பு அணிந்தவர் ஒருவர் வேகமாய் வெளியே வந்தார். அவர் நகைப்பதாய்த் தெரிந்தது—ஆனல் ஒரு நிமிடத்துக்குள் அது நகைப்பல்ல, மிதமிஞ்சிய களைப்பினல் முகத்தில் நிலையாய்ப் படிந்துவிட்ட சுளிப்பு என்பது புலப்பட்டது. வந்தவர் குரிலேன்கொ.

நாகரீகத் தோற்றம் கொண்ட மிடுக்கான இளைஞராகிய எனது தோழர் மகிழ்ச்சிக் குரலெழுப்பி முன்னே ஓரடி எடுத்து வைத்தார்.

''நிக்கலாய் வசீலியெவிச்!'' என்று கூப்பிட்டுக் கையை நீட்டினர். ''தோழரே, என்னை உங்களுக்கு நினைவில்லையா? சிறைச்சாலையில் இருவரும் ஒன்ருய் இருந்தோமே.''

குரிலேன்கொ முயற்சி செய்து கவனத்தை ஒன்றுகுவித்து நினைத்துப் பார்த்தார். முடிவில், மிகுந்த நட்புணர்ச்சியோடு அவர் தம் எதிரே நின்றவரை ஏற இறங்கப் பார்த்தவாறு ''ஓ, ஆமாம்!'' என்ருர். ''எஸ் — அல்லவா நீங்கள்! ஸ்திராஸ்த்வுய்த்தே! — வணக்கம்!'' இருவரும் முத்தமிட்டுக் கொண்டார்கள். ''இங்கே என்ன செய்கிறீர்கள்?'' என்று கையை வீசிச் சுற்றிலும் காட்டியவாறு கேட்டார் குரிலேன்கொ.

''சும்மா சுற்றிப் பார்த்துக் கொண்டிருக்கிறேன்... நீங்கள் பெரிய அளவில் வெற்றி பெறுவதாய்த் தெரிகிறதே.''

''ஆமாம்'' என்று ஒரு வகைப் பிடிவாதம் தொனிக்கக் கூறினர் குரிலேன்கொ. ''பாட்டாளி வர்க்கப் புரட்சி பிரமாத வெற்றி பெற்றிருக்கிறது.'' அவர் சிரித்துக் கொண்டார். ''மீண்டும் நாம் சிறைச்சாலையில் சந்திக்க நேர்ந்தாலும் நேரலாம்!''

நடைவழிக்கு நாங்கள் திரும்பியதும் எனது தோழர் விளக்கிக் கூறினர்.''நீங்கள் இதைத் தெரிந்துகொள்ள வேண்டும், நான் கிரொப்போத்கினைப் பின்பற்றுகிறவன். எங்களுக்கு இந்தப் புரட்சி ஒரு பெரிய தோல்வியே ஆகும். வெகுஜனங்களது தேசபக்தியை இது தூண்டிவிடவில்லை. மக்கள் இன்னமும் புரட்சிக்குத் தயார் நிலையில் இல்லை என்பதைத்தான் இது காட்டுகிறது....''

சரியாய் எட்டு நாற்பதுக்கு, இடியென அதிர்ந்த வாழ்த்துக்களுக்கும் கையொலி முழக்கத்துக்கும் இடையே தலைமைக் குழுவினர் உள்ளே வந்தார்கள்,அவர்களிடையே லெனினும்—மேதை லெனினும்—இருந்தார். கட்டை குட்டையான உருவம், தோள்களில் அழுந்தியமைந்த பெரிய தலை புடைத்துக் கொண்டு வழுக்கையாய் இருந்தது. சிறிய கண்கள், சற்று சப்பையான மூக்கு, வளமான அகன்ற வாய், தடித்த முகவாய்—தற்போது அது மழிக்கப்பட்டிருந்தது, ஆயினும் முற்காலத்திலும் இனி வருங்காலத்திலும் புகழுக்

குரியதாகிய அந்தத் தாடி ஏற்கெனவே முளைக்கத் தொடங்கியிருந்தது. சற்று தொளதொளப்பான ஆடைகள் அணிந்திருந்தார், கால் சட்டை அளவுக்கு அதிகமாய் நீளமாயிருந்தது .பெருந்திரளினரால் வழிபாட்டுக்குரியவராய்ப் போற்றப்படும்படி அவர் காண்போரை ஆட்கொள்ளும் தோற்றமுடையவரல்ல. ஆயினும் வரலாற்றில் மிகச் சொற்ப தலைவர்களே அவரைப் போல் மக்களது பேரன்புக்கும் பாராட்டுக்கும் பாத்திரமாகி இருப்பார்கள். விசித்திரமான மக்கள் தலைவர்—முற்றிலும் அறிவாற்றல் என்னும் ஒரே தகுதியின் காரணமாய்த் தலைவராகியவர். வண்ணக் கவர்ச்சியில்லை, மிடுக்கில்லை, மனம் தளர்ந்து விட்டுக் கொடுக்கும் இயல்பில்லை, தன்வயப்பட்ட விருப்புவெறுப்பில்லை, படாடோபமான தனிப் பாணிகள் இல்லை—ஆனால் ஆழ்ந்த கருத்துகளை எளிய முறையில் விளக்கும் ஆற்றலும் ஸ்தூல நிலைமையைப் பகுத்தாராயும் திறனும் நிரம்பப் பெற்றவர். இவற்றுடன் கூட மதிநுட்பமும் அசாத்திய அறிவுத் துணிவும் சேர்ந்திருந்தன.

புரட்சி இராணுவக் கமிட்டியின் செயல்களைப் பற்றிய உரையை காமெனெவ் படித்துக் காட்டிக் கொண்டிருந்தார்: சேனையில் மரண தண்டனை நீக்கப்பட்டது, சுதந்திரமாய்ப் பிரசாரம் செய்யும் உரிமை மீட்டளிக்கப்பட்டது, அரசியல் குற்றங்களுக்காக கைது செய்யப்பட்ட இராணுவ அதிகாரிகளும் படையாட்களும் விடுதலை செய்யப்பட்டனர், கேரென்ஸ்கியைக் கைது செய்வதற்கும் தனியார் கிடங்குகளில் உணவுப் பொருள் சேமிப்புகளைப் பறிமுதல் செய்வதற்கும் கட்டளைகள் பிறப்பிக்கப்பட்டன.... மண்டபம் அதிரும்படியான கையொலி முழக்கம்.

பூந்த் பிரதிநிதி மீண்டும் பேசினார். போல்ஷிவிக்குகள் சமரசத்துக்கு இடமில்லாத போக்கை அனுசரிப்பதன் விளைவாய் புரட்சி நசுக்கப்படும்படியே நேரும், ஆகவே பூந்த் பிரதிநிதிகள் இந்தக் காங்கிரசில் இனியும் அமர்ந்திருக்க மறுக்கிறார்கள் என்றார் அவர். மண்டபத்திலிருந்து கூச்சல்கள் எழுந்தன: ''நேற்று இரவே நீங்கள் வெளியேறி விட்டீர்கள் என்று அல்லவா நினைத்தோம்! இன்னும் எத்தனை தரம் தான் வெளிநடப்பு செய்யப் போகிறீர்கள்?''

பிறகு மென்ஷிவிக்கு சர்வதேசியவாதிகளின் பிரதிநிதி மேடையிலே வந்து நின்ருர். கூச்சல்கள்: ''என்ன இது! இன்னும் இங்கேயேதான் இருக்கிறீர்களா?'' மென்ஷிவிக்கு சர்வதேசியவாதிகளில் ஒரு பகுதியோரே காங்கிரசை விட்டு வெளியேறிஞர்கள், ஏனேயோர் இங்கேயேதான் இருக்கப் போகிருர்கள் என்று பேச்சாளர் விளக்கிஞர்—.

''ஆட்சியதிகாரத்தை சோவியத்துகளுக்கு மாற்றுவது புரட்சிக்கு அபாயம் விளேவிப்பதாகும், புரட்சியைக் கொலே புரிவதுங்கூட ஆகும் என்று நாங்கள் கருதுகிறேம்''—குரல்கள் குறுக்கிட்டன—''ஆனல் நாங்கள் இந்தக் காங்கிரசில் தொடர்ந்து இருந்து, ஆட்சியதிகார மாற்றத்தை எதிர்த்து இங்கே வாக்களிப்பது எங்கள் கடமையாகுமென நினேக்கிறேம்!''

பிற பேச்சாளர்கள் பேசினர், இதில் ஒழுங்கு முறை இருந்ததாய்த் தெரியவில்லே. தோனேத்ஸ்க் நிலக்கரிச் சுரங்கத் தொழிலாளர்களது பிரதிநிதி ஒருவர் கலேதினுக்கு எதிராய் நடவடிக்கைகள் எடுக்கும்படி காங்கிரசை வற்புறுத்திஞர்; தலேநகருக்கு நிலக்கரியும் உணவும் வராதபடி இந்தக் கலேதின் தடுத்துவிடுவார் என்று கூறிஞர். போர்முனேயிலிருந்து இப்போதுதான் வந்து சேர்ந்த சில படையாட்கள் தமதுபடைப் பிரிவுகளிலிருந்து ஆர்வமிக்க வாழ்த்துகள் தெரிவித்தனர்....இப்போது லெனின் உரைமேடையின் ஓரத்தைப் பிடித்துக் கொண்டு நின்ருர். சிமிட்டிக் கொண்ட அவரது சிறு கண்கள் பிரதிநிதிகளது கூட்டத்தின் மீது ஒரு தரம் வட்டமிட்டுவிட்டு வந்தன. கையொலி முழக்கம் நிற்பதற்காக அவர் காத்திருந்தார். ஓயாமல் சில நிமிடங்களுக்கு நீடித்த இந்த முழக்கம் அவரைப் பாதித்ததாய்த் தெரியவில்லே. அது நின்றதும் மிகவும் எளிய முறையில் அவர் சுருக்கமாய்க் கூறிஞர்: ''இப்போது நாம் சோஷலிச அமைப்பைக் கட்டியெழுப்ப ஆரம்பிக்கலாம்!'' திரும்பவும் கட்டுக்கடங்காத ஆர்வ முழக்கம்.

''சமாதானத்தைக் கைகூடச் செய்வதற்கு நடைமுறை நடவடிக்கைகளே மேற்கொள்வதுதான் நம் முன்னுள்ள முதலாவாது பணி... போரிடும் எல்லா நாடுகளின் மக்களுக்கும் நாம் சோவியத்து வரையறைகளின் அடிப்படையில்—பிர

தேசம் பிடித்தல் இல்லை, இழப்பீடுகள் இல்லை, தேசங்களது சுயநிர்ணய உரிமை ஆகியவற்றின் அடிப்படையில்—சமாதானத்தை முன்மொழிவோம். அதேபோது ஏற்கெனவே நாம் வாக்களித்தது போல், இரகசிய உடன்படிக்கைகளை வெளியிட்டு, அவற்றை நிராகரிப்போம்.... யுத்தத்தையும் சமாதானத்தையும் பற்றிய பிரச்சினை தெட்டத் தெளிவானது. ஆகவே, போரிடும் எல்லா நாடுகளின் மக்களுக்கும் பிரகடனம் என்பதான இந்தத் திட்டத்தை இங்கு நான் முன்னுரை எதுவும் இல்லாமலே படித்துக் காட்டலாமென நினைக்கிறேன்....''

அவர் பேசிய போது அவரது அகன்ற வாய் முறுவலிப்பது போல் தோன்றும் வண்ணம் விரியத் திறந்தது; அவரது குரல் கரகரப்பாய் இருந்தது—காதை உறுத்தும்படியான கரகரப்பு அல்ல, நீண்ட பல ஆண்டுகளாய்ப் பேசிப் பேசி அவ்விதம் உறுதியுற்றுவிட்டதென நினைக்கும்படியாய் இருந்தது; எவ்வளவு நேரம் வேண்டுமாயினும் முடிவின்றி இதே போல் ஒலித்துக் கொண்டிருக்கக் கூடியதாய்த் தோன்றும்படி மாற்றமின்றி ஒரே சீராய் ஒலித்துச் சென்றது.... எதையேனும் வலியுறுத்திச் சொல்ல விரும்பிய போது சற்றே முன்னால் சாய்ந்தார். அங்க அசைவுகளோ ஆட்டங்களோ இல்லை. அவருக்கு முன்னால் ஓராயிரம் எளிய முகங்கள் உருக்கமாய் நிமிர்ந்து பரவசமுற்றுப் பார்த்துக் கொண்டிருந்தன.

### போரிடும் எல்லா நாடுகளின் மக்களுக்கும் அரசாங்கங்களுக்கும் பிரகடனம்

நவம்பர் 6, 7ஆம் நாள் புரட்சியால் தோற்றுவிக்கப்பட்டு, தொழிலாளர்கள், படையாட்கள், விவசாயிகள் பிரதிநிதிகளது சோவியத்துகளை அடைப்படையாய்க் கொண்டு அமைந்த தொழிலாளர்கள், விவசாயிகளது அரசாங்கம் நேர்மையான, ஜனநாயகத் தன்மையதான சமாதானத்திற்காக உடனே பேச்சுவார்த்தைகள் தொடங்கும்படி, போரிடும் எல்லா நாடுகளின் மக்களுக்கும் அவர்களது அரசாங்கங்களுக்கும் முன்மொழிகிறது.

நேர்மையான, ஜனநாயகத் தன்மையதான சமாதானத்தை, யுத்தத்தால் பலமெலாம் இழந்து ஓய்ந்து போய் விட்ட மிகப் பெரும்பாலான தொழிலாளர்களும் உழைப்பாளி வர்க்கங்களும் விரும்புகிறுர்கள்; ஜார் மன்னனின் முடியரசை வீழ்த்தியபின் ருஷ்யத் தொழிலாளர்களும் விவசாயிகளும் இந்தச் சமாதானத்தை ஓயாது ஒழியாது திட்டவட்டமாய்க் கோரி வந்திருக்கிறுர்கள்—நேர்மையான, ஜனநாயகத் தன்மையான சமாதானம் என்பதன் மூலம் அரசாங்கம் குறிப்பிடுவது, பிரதேசச் சேர்ப்புகள் இல்லாத (அதாவது, வெளிநாட்டுப் பிரதேசத்தைப் பிடித்துக் கொள்ளுதல் இல்லாத, பிற தேசிய இனங்களைப் பலவந்தமாய்ச் சேர்த்துக் கொள்ளுதல் இல்லாத), இழப்பீடுகள் இல்லாத உடனடியான சமாதானமாகும்.

இம்மாதிரியான சமாதானம் உடனடியாய் முடிவாவதற்காக ருஷ்யாவின் அரசாங்கம், போரில் ஈடுபட்டிருக்கும் எல்லா மக்களுக்கும் முன்மொழிகிறது; இந்த சமாதானத்தை நோக்கமாய்க் கொண்டு தீர்மானகரமான நடவடிக்கைகளாய் அமைந்த பேச்சுவார்த்தைகளில் சற்றும் தாமதமின்றி உடனடியாகவே இறங்குவதற்கு, எல்லா நாடுகளின், எல்லாத் தேசிய இனங்களின் அதிகார உரிமை பெற்ற மக்கள் பிரதிநிதித்துவ மன்றங்களால் இந்த சமாதானத்தின் எல்லா வரையறைகளும் முடிவாய் ஏற்றுக் கொள்ளப்படும் முன்பே இறங்குவதற்குத் தாம் சித்தமாய் இருத்தலைத் தெரியப்படுத்தும்படி முன்மொழிகிறது.

வெளிநாட்டுப் பிரதேசத்தைச் சேர்த்துக் கொள்ளுதல் அல்லது பிடித்துக் கொள்ளுதல் என்பதன் மூலம்—பொதுவாய் ஜனநாயக உரிமைகள் என்ற கருத்தோட்டத்துக்கும் குறிப்பாய்த் தொழிலாளி வர்க்க உரிமைகள் என்ற கருத்தோட்டத்துக்கும் ஒப்ப—இந்த அரசாங்கம் குறிப்பிடுவது இதுதான்: சிறிய அல்லது பலக் குறைவான ஒரு தேசிய இனம் தானே மனமுவந்து தெளிவாகவும் கருராகவும் தனது உடன்பாட்டையும் விருப்பத்தையும் வெளியிடாதிருக்கையில், ஒரு பெரிய, வலிமை வாய்ந்த அரசோடு எவ்விதத்திலும் அது ஒன்றுசேர்க்கப்படுதலை அரசாங்கம் குறிப்பிடுகிறது—இந்தப் பலவந்தப் பிரதேசச் சேர்ப்பு நடைபெற்ற தருணம்

எதுவாயினும், பலவந்தமாய்ச் சேர்க்கப்பட்ட தேசம் அல்லது பிறிதோர் அரசின் எல்லைகளுக்கு அப்பால் பிடித்திருத்தி வைக்கப்பட்ட தேசம் அடைந்திருக்கும் நாகரிக வளர்ச்சி நிலை எதுவாயினும் கவலையில்லை; அந்தத் தேசம் ஐரோப்பாவில் இருந்தாலும் ஒன்றுதான், கடல் கடந்து அமைந்த தொலை நாடுகளில் இருந்தாலும் ஒன்றுதான்.

எந்த ஒரு தேசமும் பலவந்தமாய்ப் பிறிதோர் அரசின் வரம்புகளுக்குள் இருத்தி வைக்கப்பட்டிருக்குமாயின்; அந்த தேசம் வெளியிட்ட விருப்பத்துக்கு மாறாய் (இந்த விருப்பம் வெளியிடப்பட்டது பத்திரிகைகள் மூலமானாலும் சரி, மக்களது பொதுக் கூட்டங்கள் மூலமானாலும் சரி, அரசியல் கட்சிகளது தீர்மானங்கள் மூலமானாலும் சரி, அல்லது தேசிய ஒடுக்குமுறையை எதிர்த்து ஏற்படும் ஒழுங்கு குலைவுகள், கலகங்கள் மூலமானாலும் சரி—எல்லாம் ஒன்றுதான்), அந்த தேசம் தனது தேசிய,அரசியல் ஒழுங்கமைப்பின் வடிவத்தை சுதந்திரமான வாக்கெடுப்பின் மூலம்—அதைத் தன்னுடன் சேர்த்துக் கொண்டுவிட்ட, அல்லது சேர்த்துக் கொள்ள விரும்பும், அல்லது பொதுவாய் அதிக வலிமை படைத்ததாய் இருக்கும் பிறிதொரு தேசத்தின் ஆயுதப் படைகள் முழுமையாய் வெளியே சென்ற பிறகு வலுக்கட்டாயம் சிறிதும் இல்லாத சுதந்திரமான வாக்கெடுப்பின் மூலம்—தீர்மானித்துக் கொள்வதற்கு உரிமை அளிக்கப்படாதிருக்குமாயின், இப்படிப்பட்ட ஒன்றுசேர்வு பிரதேசச் சேர்ப்பே ஆகும்—அதாவது பிரதேசம் பிடித்தலும் வன்முறைச் செயலுமே ஆகும்.

ஆக்கிரமித்துப் பிடித்துக் கொள்ளப்பட்ட பலம் குன்றிய தேசிய இனங்களை வலிமையும் செல்வச் செழிப்பும் வாய்ந்த தேசங்கள் தம்மிடையே பகிர்ந்து கொள்ளும் பொருட்டு இந்த யுத்தத்தைத் தொடர்ந்து நடத்திச் செல்வது மனித குலத்துக்கு எதிரான மிகக் கொடிய குற்றமாகுமென இந்த அரசாங்கம் கருதுகிறது, விதிவிலக்கின்றி எல்லா தேசிய இனங்களுக்கும் ஒருங்கே நியாயமான மேற்கூறிய வரையறைகளின் அடிப்படையில் இந்த யுத்தத்துக்கு முடிவு கட்டக்கூடிய ஒரு சமாதான உடன்படிக்கையில் உடனடியாய்க் கையொப்ப

மிடுவதென்ற தனது தீர்மானத்தை இந்த அரசாங்கம் புனித உணர்வுடன் பிரகடனம் செய்கிறது.

இரகசிய அரசு தந்திரத்தை இந்த அரசாங்கம் விட்டொழிக்கிறது. எல்லாப் பேச்சுவார்த்தைகளையும் வெட்ட வெளிச்சத்தில் மக்களுக்கு முன்னால் நடத்துவதென்ற தனது உறுதியான தீர்மானத்தை நாடு அனைத்துக்கும் தெரியும்படி அறிவிக்கிறது. நிலப்பிரபுக்கள், முதலாளிகளது அரசாங்கத்தால் 1917 மார்ச்சிலிருந்து நவம்பர் 7வரை உறுதி செய்யப்பட்ட அல்லது முடித்துக் கொள்ளப்பட்ட எல்லா இரகசிய உடன்படிக்கைகளையும் முழுமையாய் வெளியிடுவதற்கு இந்த அரசாங்கம் உடனடியாய் முற்படும். பெரும்பாலான சந்தர்ப்பங்களில் இந்த இரகசிய உடன்படிக்கைகளின் பிரிவுகள் யாவும் ருஷ்ய முதலாளிகளுக்கு அனுகூலங்களும் தனிச் சலுகைகளும் பெற்றுத் தருவதையும், ருஷ்ய ஏகாதிபத்தியவாதிகள் பிடித்துக் கொண்ட பிரதேசங்கள் நழுவிவிடாமல் பாதுகாத்துக் கொள்வதையும் அல்லது அவற்றை விரிவுபடுத்திக் கொள்வதையும் நோக்கமாய்க் கொண்டவை. இந்த அரசாங்கம் இவை யாவற்றையும் உடனடியாகவும் விவாதமின்றியும் நிராகரிக்கின்றது.

எல்லா நாடுகளின் அரசாங்கங்களுக்கும் மக்களுக்கும் சமாதானம் முடித்துக் கொள்வதற்கான பகிரங்கப் பேச்சுவார்த்தைகளை உடனடியாய் ஆரம்பிக்கும்படி முன்மொழியும் இந்த அரசாங்கம், தந்தி மூலமும் தபால் மூலமும் வெவ்வேறு நாடுகளது பிரதிநிதிகளுக்கிடையிலான பேச்சுகள் மூலமும் அல்லது இந்தப் பிரதிநிதிகளது மாநாடு மூலமும் இந்தப் பேச்சுவார்த்தைகளை நடத்தத் தான் தயாராயிருப்பதை அறிவிக்கிறது. இந்தப் பேச்சுகளுக்கு வகை செய்ய இந்த அரசாங்கம் நடுநிலை நாடுகளில் தனது அதிகார பூர்வமான பிரதிநிதிகளை நியமிக்கிறது.

எல்லா அரசாங்கங்களுக்கும் போரிடும் எல்லா நாடுகளின் மக்களுக்கும் இந்த அரசாங்கம் உடனடியான போர் நிறுத்தம் செய்து கொள்ளும்படி முன்மொழிகிறது; அதே போது இந்தப் போர்நிறுத்தம் மூன்று மாதங்களுக்கு நீடிப்பதாய் இருக்க வேண்டுமென்று ஆலோசனை கூறுகிறது; அதாவது இந்த யுத்தத்தினுள் இழுக்கப்பட்ட, அல்லது இதில் பங்கு

கொள்ளும்படி பலவந்தம் செய்யப்பட்ட தேசங்கள், தேசிய இனங்கள் ஆகியவற்றில் விதிவிலக்கின்றி எல்லாவற்றின் பிரதி நிதிகளுக்கிடையே தேவையான பேச்சுகள் நடைபெறு வதற்கு மட்டுமின்றி, சமாதானத்தின் வரையறைகள் முடி வாய் ஏற்கப்படும் பொருட்டு எல்லா நாடுகளது மக்களின் உரிமை பெற்ற பிரதிநிதித்துவ மன்றங்கள் கூட்டப்படுவதற் கும் போதுமான காலத்துக்கு இந்தப் போர்நிறுத்தம் நீடிக்க வேண்டுமென்று கூறுகிறது.

போரிடும் எல்லா நாடுகளின் அரசாங்கங்களுக்கும் மக் களுக்கும் சமாதானத்தை முன்மொழிந்து இந்த அறைகூவலை விடுக்கும் ருஷ்யாவின் தொழிலாளர்கள், விவசாயிகளது இடைக்கால அரசாங்கம் இன்னும் முக்கியமாய், மனிதகுலத் தின் முன்வரிசையில் நிற்பவையும், தற்போதைய யுத்தத் தில் பங்கு கொள்வனவற்றில் மிக முக்கியமானவையுமான இங்கிலாந்து, பிரான்சு, ஜெர்மனி ஆகிய மூன்று தேசங் களின் உணர்வு படைத்த தொழிலாளர்களுக்கு இந்த அறைகூவலை விடுக்கிறது. இந்த நாடுகளின் தொழிலாளர் கள் முன்னேற்றம், சோஷலிசம் ஆகிய இலட்சியத்துக்கு மிகப் பெரும் சேவைகள் புரிந்துள்ளவர்கள். உன்னத எடுத்துக் காட்டுகளாய் விளங்குபவை இங்கிலாந்தில் சார்ட்டிஸ்டு இயக்கம், பிரெஞ்சுப் பாட்டாளி வர்க்கம் சாதித்த உல களாவிய வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த வரிசையான பல புரட்சிகள்—முடிவில், ஜெர்மனியில் விதிவிலக்குச் சட் டங்களை எதிர்த்து நடைபெற்ற வீரஞ் செறிந்த போராட்ட மும், நீண்ட காலத்துக்குத் தொடர்ந்து நீடிக்கும் விடாப்பிடி யான செயலுக்கு அனைத்து உலகின் தொழிலாளர்களுக்கும் ஒரு முன்னுதாரணமாய்த் திகழ்ந்த இந்தப் போராட்டமும், ஜெர்மன் பாட்டாளி வர்க்கத்தினரது பிரம்மாண்ட நிறு வனங்கள் கட்டியெழுப்பப்பட்ட சாதனையும் ஆகும். பாட் டாளி வர்க்கத்தின் வீரதீரத்துக்கு முன்மாதிரிகளாய் அமைந்த இவை யாவும், வரலாற்றுப் புகழ் வாய்ந்த இந்த ஆக்கச் சாதனைகள் யாவும் எங்களுக்கு உத்தரவாதம் அளிப்பன வாகும்—இந்நாடுகளின் தொழிலாளர்கள் யுத்தத்தின் கொடு மைகளிலிருந்தும் விளைவுகளிலிருந்தும் மனிதகுலத்தை விடு விப்பது தமக்குரிய கடமையாகும் என்பதை உணர்ந்து

கொள்வார்கள், சமாதான இலட்சியத்தையும் அதே போது உழைப்பாளர்களும் சுரண்டப்படுவோருமான பெருந் திரளினர் எல்லா விதமான அடிமை நிலையிலிருந்தும் எல்லா விதமான சுரண்டலிலிருந்தும் விடுதலை பெறும் இலட்சியத் தையும் நாங்கள் வெற்றிகர முடிவை வந்தடையச் செய் வதற்கு இந்நாடுகளின் தொழிலாளர்கள் தன்னலங் கருதாத் தமது தீர்மானகரமான, ஆற்றல் மிக்க, தொடர்ச்சியான செயற்பாடுகளின் மூலம் எங்களுக்குத் துணை புரிவார்கள் என்று உத்தரவாதம் அளிப்பனவாகும்.

இடியென அதிர்ந்த கையொலி முழக்கம் ஓய்ந்ததும் திரும்பவும் பேசினுர் லெனின்:

''இந்தப் பிரகடனத்தை அங்கீகரிக்குமாறு நாங்கள் இந்தக் காங்கிரசுக்கு முன்மொழிகிருேம். நாடுகளின் மக் களுக்கு மட்டுமின்றி, அரசாங்கங்களுக்கும் நாம் அறைகூவு கின்ருேம்; ஏனெனில் போரிடும் நாடுகளது மக்களுக்கு மட்டும் இந்தப் பிரகடனம் அறைகூவுமாயின், சமாதானம் முடிவா வதற்கு அதனுல் தாமதம் ஏற்படக் கூடும். போர்நிறுத்தம் ஏற்பட்டிருக்கும் காலத்தில் வகுக்கப்படும் சமாதான வரை யறைகள், அரசியல் நிர்ணயச் சபையால் அங்கீகரிக்கப்பட்டு உறுதி செய்யப்படும். போர்நிறுத்த காலத்தை மூன்று மாதமாய் நிர்ணயிப்பதன் மூலம் நாம், இந்த இரத்த வெறி கொண்ட படுநாசத்துக்குப் பிற்பாடு எல்லா நாடுகளின் மக் களுக்கும் கூடுமான வரை நீண்ட காலத்துக்கு ஓய்வும், அவர் கள் தமது பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுப்பதற்குப் போதிய அவகாசமும் அளிக்க விரும்புகிருேம். இந்த சமாதான முன்மொழிவுக்கு ஏகாதிபத்திய அரசாங்கங்களிடமிருந்து எதிர்ப்பே கிடைக்கும்—இது குறித்து நாம் வீண் பிரமைகள் கொண்டு நம்மை நாமே ஏமாற்றிக் கொள்ளவில்லை. ஆனுல் போரிடும் எல்லா நாடுகளிலும் விரைவில் புரட்சி மூண்டெழு மென நாம் நம்புகிருேம்; அதனுல்தான் முக்கியமாய் பிரான்சு, இங்கிலாந்து, ஜெர்மனி ஆகிய நாடுகளின் தொழிலாளர்களுக்கு நாம் அறைகூவுகின்ருேம்....

''நவம்பர் 6, 7ஆம் நாள் புரட்சியானது சோஷலிசப் புரட்சியின் சகாப்தத்தைத் துவக்கி வைத்திருக்கிறது'' என்று

அவர் தமது முடிவுரையில் கூறினார். ''...தொழிலாளர் இயக்கம் சமாதானத்தின் பெயரில், சோஷலிசத்தின் பெயரில் வெற்றி வாகை சூடி தனது இறுதி இலட்சியத்தை ஈடேறச் செய்யும்....''

அவருடைய பேச்சில் ஆழ்ந்த அமைதியும் அபார சக்தியும் வாய்ந்த ஏதோ ஒன்று இருந்தது, கேட்போரின் ஆன்மாவை அது தட்டியெழுப்பிற்று. லெனின் பேசிய போது மக்கள் ஏன் அப்படி அவரை நம்பினார்கள் என்பதைப் புரிந்து கொள்ள முடிந்தது....

கட்சிக் குழுக்களின் பிரதிநிதிகளை மட்டுமே தீர்மானங் குறித்துப் பேச அனுமதிப்பதென்றும், 15 நிமிடத்துக்கு மேல் யாரும் பேசக் கூடாதென்றும் கூட்டத்தினரின் வாக்கு மூலம் சீக்கிரமாகவே தீர்மானிக்கப்பட்டது.

முதற்கண், இடதுசாரி சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களின் சார்பில் கரேலின் பேசினார்: ''பிரகடனத்தின் வாசகத்துக்குத் திருத்தங்கள் முன்மொழிய எங்கள் கட்சிக் குழுவுக்கு வாய்ப்பு கிடைக்கவில்லை, ஆகவே இதை போல்ஷிவிக்குகளுக்கு மட்டும் உரித்தான தனிப்பட்ட ஒன்றாகவே கொள்ள வேண்டியிருக்கிறது. ஆயினும் நாங்கள் இதை ஆதரித்து வாக்களிப்போம், ஏனெனில் இதன் பொதுவான மனப்பாங்கு எங்களுக்கு ஏற்புடையதே....''

சமூக-ஜனநாயக சர்வதேசியவாதிகளின் சார்பில் பேசியவர் கிராமரவ் — நெட்டையானவர், கூனல் விழுந்தவர், கிட்டப் பார்வை கொண்டவர்—எதிர்த்தரப்பின் கோமாளியெனப் பெயரெடுக்கப் போகிறவர். எல்லா சோஷலிஸ்டுக் கட்சிகளையும் கொண்ட ஓர் அரசாங்கத்துக்கு மட்டுமே இம்மாதிரியான ஒரு முக்கிய செயலை மேற்கொள்வதற்குரிய அதிகாரம் உண்டு என்று கூறினார் அவர். சோஷலிஸ்டுக் கூட்டு ஒன்று அமைக்கப்படுமாயின், முழு வேலைத்திட்டத்தையும் தமது கட்சிக் குழு ஆதரிக்கத் தயாராயிருக்கும், இல்லையேல் அது ஒரு பகுதியை மட்டுமே ஆதரிக்க முடியும். இந்தப் பிரகடனத்தைப் பொறுத்தவரை, சர்வதேசியவாதிகள் இதன் பிரதான கூறுகளுக்கு முழு உடன்பாடு தெரிவிக்கிறார்கள்....

பிறகு உற்சாகம் மேலும் மேலும் ஓங்கிச் செல்ல ஒருவர் பின் ஒருவராய்ப் பேசினார்கள். உக்ரைனிய சமூக-ஜனநாயகத்தின் சார்பிலும், லித்துவேனிய சமூக-ஜனநாயகத்தின் சார்பிலும், நரோதினிய சோஷலிஸ்டுகளின் சார்பிலும், போலந்து சமூக-ஜனநாயகத்தின் சார்பிலும் ஆதரவு தெரிவிக்கப்பட்டது. போலந்து சோஷலிஸ்டுகளும் ஆதரித்தார்கள்—ஆனால் சோஷலிஸ்டுக் கூட்டு இருக்க வேண்டும் என்றார்கள். லெட்டிஷ் சமூக-ஜனநாயகத்தின் சார்பிலும் ஆதரவு தெரிவிக்கப்பட்டது.... பேச்சாளர்களை ஏதோ ஒரு சக்தி தூண்டிவிட்டது. ''உலகப் புரட்சி எழுகிறது, நாம் இந்தப் புரட்சியின் முன்னணிப் படையினர்'' என்று பேசினார் ஒருவர். ''எல்லா நாடுகளின் மக்களும் ஒரு பெருங் குடும்பமாய் ஒன்றுசேரும் புதிய சகோதரத்துவ சகாப்தம் பிறக்கிறது....'' என்றார் இன்னொருவர். யாரோ ஒரு பிரதிநிதி தனிப்பட்ட முறையில் பேசினார். ''இங்கு ஒரு முரண்பாடு இருக்கிறது'' என்றார் அவர். ''முதலில், பிரதேசச் சேர்ப்பும் இழப்பீடும் இல்லாத சமாதானத்தை முன்மொழிகிறீர்கள், பிறகு சமாதான முனைவுகள் யாவற்றையும் ஆலோசிப்போம் என்கிறீர்கள். ஆலோசிப்பதென்றால் ஏற்பதென்று அர்த்தம்....''

உடனே லெனின் எழுந்தார்: ''நாம் நேர்மையான சமாதானத்தை விரும்புகிறோம், ஆனால் புரட்சிகரமான யுத்தம் குறித்து நாம் அஞ்சவில்லை.... நமது வேண்டுகோளுக்கு ஏகாதிபத்திய அரசாங்கங்கள் பதிலளிக்காமல் இருக்கலாம் தான்—ஆனால் எளிதில் அவை முடியாதெனக் கூறிவிடும் படியான முறையில் நாம் இறுதி எச்சரிக்கை ஒன்றை வெளியிடப் போவதில்லை.... சமாதானத்துக்கான எல்லா முனைவுகளையும் நாம் ஆலோசிக்கத் தயாராயிருக்கிறோம் என்பதை ஜெர்மன் பாட்டாளி வர்க்கம் உணருமாயின், கோப்பையை நிரம்பி வழியச் செய்திடும் கடைசித் துளியாய் அது செயல்பட நேரலாம்—ஜெர்மனியில் புரட்சி மூளும்படி நேரலாம்....

''சமாதானத்துக்கான எல்லா வரையறைகளையும் நாம் ஆலோசிக்க உடன்படுகிறோம், ஆனால் அதற்கு அர்த்தம் நாம் அவற்றை ஏற்றுக் கொண்டு விடுவோம் என்பதல்ல.... நமது

வரையறைகளில் சிலவற்றுக்காக நாம் இறுதி வரை போர் புரிவோம்—ஆனால் வேறு சிலவற்றுக்காக யுத்தத்தைத் தொடர்ந்து நடத்துவது சாத்தியமல்ல என்பதாய் நாம் கருத நேரலாம்.... யாவற்றுக்கும் மேலாய் நாம் விரும்புவது யுத்தத்துக்கு முடிவு கட்ட வேண்டும் என்பது தான்....''

மணி சரியாய் 10-35 ஆயிற்று, பிரகடனத்துக்கு ஆதர வாய் இருப்போர் எல்லோரும் அவர்களது பிரதிநிதிச் சீட்டு களை உயர்த்திக் காட்ட வேண்டுமென்று கூறினார் காமெனெவ். பிரகடனத்தை எதிர்த்து ஒரேயொரு பிரதிநிதி மட்டும்தான் கையை உயர்த்தத் துணிந்தார், ஆனால் அவரைச் சுற்றிலுமிருந்து எழுந்த ஆத்திரச் சொற்களைக் கேட்டதும் அவசரமாய்க் கையைத் தணித்துக் கொண்டுவிட்டார்.... ஒருமனதாய் ஏற்கப்பட்டது.

சொல்லிவைத்தாற் போல் எல்லோரும் ஒரு திடீர் உணர்ச்சியால் உந்தப்பட்டு எழுந்து நின்று, ஒரே குரலாய் ஒருங்கிணையும் வண்ணம் **சர்வதேசியக் கீதம்** பாட முற்பட்டோம். தலை நரைத்த முதுபெரும் படையாள் ஒருவர் சிறு குழந்தை போல் விம்மியழுதார். அலெக்சாந்திரா கொலன்தாய் சட்டெனக் கண்ணீர்த் துளியைத் துடைத்து அகற்றிக் கொண்டார். அந்த ஆழ்ந்த பண்ணொலி மண்டபத்தில் பெருக்கெடுத்து, சன்னல்களையும் கதவுகளையும் அதிரச் செய்து, வெளியே நிசப்த வானத்துள் உயர்ந்து எழுந்தது. ''யுத்தம் முடிவுற்றது! யுத்தம் முடிவுற்றது!''—என் அருகே நின்ற இளந் தொழிலாளி ஒருவர் முகம் பளிச்சிட்டு ஒளிரக் கூறினார். கீதம் முடிவுற்று நிசப்தத்தால் சங்கடப்படுவோராய் நாங்கள் நின்று கொண்டிருந்த அக்கணத்தில் மண்டபத்தின் பின் வரிசையிலிருந்து பலத்த குரலில் கூறினார் ஒருவர்: ''தோழர்களே! சுதந்திரத்துக்காக உயிர் நீத்தோரை நினைவு கூர்வோம்!'' உடனே எல்லோருமாய்ச் சேர்ந்து சவ அடக்கப் பண்ணை இசைக்க ஆரம்பித்தோம்—அடிமேல் அடி வைத்துச் செல்லும் துயரார்ந்த பண், ஆயினும் வெற்றியை முழங்குவது, முழுக்க முழுக்க ருஷ்யப் பண்ணாய் அமைந்தது, நெஞ்சை நெக்குருகச் செய்வது. **சர்வதேசியக் கீதம்**—என்னதான் இருந்தாலும் அது பிறிதொரு நாட்டில் பிறந்த பண். சவ

அடக்கப் பண் இருளில் வதைந்த ருஷ்யப் பெருந் திரளின ரது இதயத்தின் பண்ணாய் ஒலிப்பது—அதையும் விஞ்சு வதாகவுங்கூடச் சொல்லலாம். இந்தப் பெருந் திரளினரின் பிரதிநிதிகள்தான் இம்மண்டபத்தில் அமர்ந்து, தெளி வின்றி மங்கலாய்த் தமக்குத் தெரிந்தவற்றைக் கொண்டு ஒரு புதிய ருஷ்யாவை உருவாக்கிக் கொண்டிருந்தார் கள்.

வெஞ்சமரில் உயிர் நீத்தீர்
வீரத் தியாகிகளாய், மக்கள்தம் விடுதலைக்காக,
மக்கள்தம் மானம் காக்க...

இன்னுயிர் ஈந்தீர், உயிரனையவை யாவும் ஈந்தீர்;
கொடுஞ் சிறையில் வதைபட்டீர்,
கொடுமைக்கோர் அளவில்லை,
கடுங்காவல் கைதிகளாய்ச் சங்கிலிகளில்
தொலைவிடங்கள் சென்றீர்...

சங்கிலி சுமந்து உடல் வருந்தினீர்,
உள்ளம் வருந்தவில்லை,
பட்டினியில் வதைந்த உம் சோதரரையே
உள்ளத்தில் நினைத்திருந்தீர்;
ஒடுக்குவோரின் வாள் வீழ்ந்துபடும்,
நீதி வெல்லுமென அஞ்சாது நின்றீர்...

நீவீர் ஈந்த இன்னுயிரின் வெற்றி நாள்
இதோ வருகிறது;
கொடுங்கோன்மை தகர்ந்துவிழும், தளையறுந்து
பேருருவினராய் எழுவர் மக்கள்!
சென்றுவருக சோதரர்காள்! அழியாப் புகழ்கொண்ட
பாதை உமது பாதை!
புதுப்படை வருகிறது உமைத் தொடர்ந்து,
சாவுக்கு அஞ்சாத படை...
சென்றுவருக சோதரர்காள்! அழியாப் புகழ்கொண்ட
பாதை உமது பாதை!
சூளுரைக்கிறோம் உமது சமாதியில், விடுதலைக்காக,
மக்கள்தம் இன்ப வாழ்வுக்காக,
போராட, பாடுபட சபதம் ஏற்கிறோம்...

இதற்காகத்தான் அங்கே துஞ்சுகிறார்கள், மார்ச் மாதத் தியாகிகள்—மார்ஸ் புலனில் குளிரில் அமைந்த அவர்தம் சோதரத்துவச் சமாதியிலே. இதற்காகத்தான் ஆயிரமாயிரமாய் மடிந்தார்கள்—சிறைக்கூடங்களில், தொலைவிடங்களில், சைபீரியச் சுரங்கங்களில்.... இது வந்த விதம் இவர்கள் எதிர்பார்த்தது போன்றதாயில்லை, அறிவுத்துறையினர் விரும்பியது போன்றதாகவும் இல்லை. ஆனால் வந்து சேர்ந்தது இது—கரடுமுரடானது, பெரும் பலம் படைத்தது, சூத்திரங்களுக்கு அடங்காதது, உணர்ச்சிப் பசப்புகளை மதியாதது; மெய்யானது....

நிலத்தைப் பற்றிய அரசாணையை லெனின் படித்து அறிவித்துக் கொண்டிருந்தார்:

1) நிலப்பிரபுக்களது நிலவுடைமைகள் யாவும் எவ்வித இழப்பீடுமின்றி உடனடியாய் ஒழிக்கப்படுகின்றன.

2) நிலப்பிரபுக்களது நிலப் பண்ணைகளும், அரச குடும்பத்துக்கும் மடாலயங்களுக்கும் சொந்தமான எல்லா நிலங்களும், சமயச் சபையின் நிலங்களும் அவற்றின் கால்நடைகளும், அவற்றுடன் சேர்த்துப் பட்டியலிடப்பட்ட சொத்துகளும், கட்டடங்களும், எல்லாத் துணையிணைப்புகளும் அடங்கலாய்,அரசியல் நிர்ணயச் சபை கூடும் வரை வட்டத்து நிலக் கமிட்டிகள், விவசாயிப் பிரதிநிதிகளது மாவட்ட சோவியத்துகள் ஆகியவற்றின் நிர்வகிப்புக்கு மாற்றப்படுகின்றன.

3) பறிமுதல் செய்யப்படும் சொத்துக்கு, இப்போதிலிருந்து மக்கள் அனைவருக்கும் உரித்தானதாகிய இந்தச் சொத்துக்கு, எவ்விதத்திலும் எந்த விதமான சேதம் உண்டாக்கப்படுதலும் புரட்சிகர நீதி மன்றங்களால் தண்டிக்கப்படத்தக்க கடுங் குற்றங்களாய்க் கருதப்படும். விவசாயிப் பிரதிநிதிகளது மாவட்ட சோவியத்துகள், நிலப்பிரபுக்களது நிலப் பண்ணைகள் பறிமுதல் செய்யப்படும் போது மிகவும் கண்டிப்பான ஒழுங்கு அனுசரிக்கப்படுவதற்கும், நிலங்களின் அளவுகளையும் அவற்றில் எந்நிலங்கள் பறிமுதலுக்கு உள்ளாக வேண்டியவை என்பதையும் நிர்ணயம் செய்வதற்கும், பறி

முதல் செய்யப்படும் சொத்து அனைத்தின் பட்டியல் வரையப் படுவதற்கும், சாகுபடிக்கு அவசியமாய் நிலத்தில் இருக்கக் கூடிய எல்லாக் கட்டடங்கள், கருவிகள், கால்நடைகள், பண்டக் கையிருப்புகள் முதலான எல்லாச் சொத்துகளின் கண்டிப்பான புரட்சிகரப் பாதுகாப்புக்கும் தேவையான எல்லா நடவடிக்கைகளையும் எடுத்துக் கொள்ள வேண்டும்.

4) இம்மாபெரும் நிலச் சீர்திருத்தங்கள் செயல்படுத்தப் பட்டு எதார்த்தமாக்கப்படும் காலத்தில், அரசியல் நிர்ணயச் சபையால் இறுதித் தீர்வு காணப்படும் வரையில், வழிகாட்டி யாய்ப் பின்வரும் விவசாயி நக்காஸை[3] (தாக்கீதுகள்) கொள்ள வேண்டும்: '242 வட்டார விவசாயி நக்காஸ்களின் அடிப்படையில் ''விவசாயிகள் பிரதிநிதிகளது அனைத்து ருஷ்ய சோவியத்தின் இஸ்வேஸ்தியா'' ஆசிரியர் குழுவினால் வகுக் கப்பட்டு, மேற்படி ''இஸ்வேஸ்தியா'' இதழ் 88ல் (பெத் ரொகிராது, இதழ் 88, 1917 ஆகஸ்டு 19) வெளியிடப்பட் டது.

சேனையில் சேவை புரியும் விவசாயிகள், கசாக்குகள் ஆகி யோரது நிலங்கள் பறிமுதல் செய்யப்படலாகாது.

'' 'கட்டமைப்பு ஒன்றை எழுப்புவதாய்' பேசி, மேலிருந்து சீர்திருத்தங்களைச் செயல்படுத்த முயன்ற முன்னாள் அமைச்சர் செர்னேவின் திட்டமல்ல இது'' என்று லெனின் விளக்கிக் கூறினார். ''நிலத்தைப் பிரித்துப் பங்கிட்டுக் கொள் வது குறித்த பிரச்சினைகள் கீழ் மட்டத்திலிருந்து அந்தந்த இடத்திலேயே தீர்மானிக்கப்படும். ஒவ்வொரு விவசாயிக் கும் கிடைக்கும் நிலத்தின் அளவு வட்டாரத்துக்கு ஏற்ப மாறு படும்....

''இடைக்கால அரசாங்கத்தின் கீழ், நிலப்பிரபுக்கள் நிலக் கமிட்டிகளது உத்தரவுகளுக்குக் கீழ்ப்படிய தீர்மான மாய் மறுத்தனர்—இந்த நிலக் கமிட்டிகள் லிவோவால் திட்டமிடப்பட்டவை, ஷிங்கரியோவால் தோற்றுவிக்கப்பட் டவை, கேரென்ஸ்கியால் நிர்வகிக்கப்பட்டவை!''

விவாதங்கள் ஆரம்பமாகுமுன் ஒருவர், இடைவழியில் கூடி யிருந்தோரிடையே பலவந்தமாய்ப் புகுந்து முண்டியடித்துக் கொண்டு சென்று மேடை மீது ஏறினார். விவசாயிகள்

சோவியத்துகளது செயற் கமிட்டியின் உறுப்பினரான பியானீஹ்ற அவர்; கோபாவேசம் கொண்டவராய் மூர்க்கமாய்ப் பேசினுர்.

''விவசாயிகள் பிரதிநிதிகளது அனைத்து ருஷ்ய சோவியத்தின் செயற் கமிட்டி எங்களது தோழர்களாகிய அமைச்சர் சலாஸ்கினும், மாஸ்லவும் கைது செய்யப்பட்டதைக் கண்டிக்கிறது!'' என்று கூட்டத்தினரைப் பார்த்துக் கடுகடுப்பான குரலில் அவர் கூறினுர். ''உடனடியாய் இவர்கள் விடுதலை செய்யப்பட வேண்டுமென்று நாங்கள் கோருகிருேம்! தற்போது இவர்கள் பெத்ரொபாவ்லொவ்ஸ்கயா கோட்டையில் அடைக்கப் பட்டிருக்கிருர்கள். உடனடிச் செயல் வேண்டும்! கணப் பொழுதும் தாமதம் ஏற்படலாகாது!''

அவரைத் தொடர்ந்து பரட்டைத் தாடியும் நெருப்பை உமிழ்ந்த கண்களும் கொண்ட படையாள் ஒருவர் பேசினுர். ''நீங்கள் இங்கே உட்கார்ந்து கொண்டு விவசாயிகளுக்கு நிலம் கொடுப்பது குறித்துப் பேசுகிறீர்கள். அதே நேரத்தில் விவசாயிகளது தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளுக்கு எதிராய்க் கொடுங்கோலர்களுக்கும் தகாநெறியினருக்குமுரிய செயலைப் புரிகிறீர்கள்! நான் உங்களுக்கு அறிவிக்கிறேன்—'' என்று முட்டியை உயர்த்திக் காட்டினுர் அவர். ''இந்தப் பிரதிநிதிகளது தலைகளிலுள்ள முடிகளில் ஒன்றேயொன்றுக்குத் தீங்கு நேர்ந்தாலும் போதும், உடனே நீங்கள் ஒரு பெரும் கலகத்தை எதிர்நோக்க வேண்டியதாகிவிடும்!'' கூட்டத்தினடையே கலக்கம் கொண்ட சலசலப்பு உண்டாயிற்று.

மேடையிலே திரோத்ஸ்கி எழுந்து நின்ருர்; அமைதியாய், நச்சுத்தன்மை வாய்ந்தவராய், தமது சக்தியை உணர்ந்தவராய் நின்ருர். அவரை வரவேற்று முழக்கம் எழுந்தது. ''சோஷலிஸ்டுப் புரட்சியாளர், மென்ஷிவிக்கு அமைச்சர்களாகிய மாஸ்லவையும் சலாஸ்கினையும் கிவோஸ்தெவையும் மலியான்தோவிச்சையும் விடுதலை செய்வதென்று புரட்சி இராணுவக் கமிட்டி நேற்று கோட்பாட்டு அளவில் தீர்மானம் செய்தது. இன்னமும் இவர்கள் பெத்ரொபாவ்லொவ்ஸ்கயா கோட்டையிலேயே இருப்பதற்குக் காரணம் எங்கள்

முன்னால் வேலைகள் மிக நிறைய இருப்பதேதான்.... ஆயினும் கர்னீலவ் விவகாரத்தின் போது கேரென்ஸ்கியின் துரோகச் செயல்களில் இவர்கள் உடந்தையாய் இருந்தார்களா என்பது விசாரித்து அறியப்படும் வரை இவர்களது வீடுகளில் இவர்கள் காவலில் வைத்திருக்கப்படுவார்கள்.''

''இங்கு நடைபெறும் இம்மாதிரியான நிகழ்ச்சிகள் எந்தப் புரட்சியிலும் எந்நாளும் காணப்பட்டதில்லை!'' என்று பியானீஹ் கூச்சலிட்டார்.

''நீங்கள் தவறிழைக்கிறீர்கள்'' என்று பதிலளித்தார் திரோத்ஸ்கி. ''இம்மாதிரியான நிகழ்ச்சிகள் இந்தப் புரட்சியிலுங்கூட காணப்பட்டிருக்கின்றன. ஜூலை நாட்களில் எங்கள் தோழர்கள் நூற்றுக் கணக்கில் கைது செய்யப்பட்டார்கள்.... டாக்டர் உத்தரவின் பேரின் தோழர் கொலன் தாய் சிறைச் சாலையிலிருந்து விடுவிக்கப்பட்ட போது, ஜாரின் இரகசியப் போலீசின் இரண்டு முன்னாள் கையாட்களை அவருடைய வீட்டு வாயிலில் அவ்க்சேன்தியெவ் நிறுத்தி வைத்தார்!'' கேலிக் கூச்சல்கள் பின்தொடர விவசாயிகள் முணுமுணுத்துக் கொண்டு வெளியே சென்றனர்.

இடதுசாரி சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களின் பிரதிநிதி நில அரசாணை குறித்துப் பேசினார். கோட்பாட்டு அளவில் உடன்பாடு தெரிவிப்பதாகவும், அதே போது தமது கட்சிக் குழு விவாதிக்கும் முன்பு இந்தப் பிரச்சினை குறித்து வாக்களிப்பதற்கில்லை என்றும் கூறினார். விவசாயிகளது சோவியத்துகளைக் கலந்தாலோசித்தாக வேண்டும்....

மென்ஷிவிக்கு சர்வதேசியவாதிகளும் தமது கட்சிக் குழு இது பற்றி விவாதிக்க வேண்டுமென வற்புறுத்தினர்.

பிறகு விவசாயிகளது அராஜகவாதப் பிரிவினராகிய பெருமவரையாளர்களின் தலைவர் பேசினார்: ''வெற்று வாய் வீச்சில் ஈடுபடாமல் முதல் நாளன்றே இம்மாதிரியான ஒரு சட்டத்தைச் செயலுக்கு வரும்படிச் செய்யும் ஓர் அரசியல் கட்சியை நாம் போற்றவே வேண்டும்!''

நீண்ட முடிகள், முழுங்கால் பூட்சுகள், ஆட்டுத் தோல் கோட்டு ஆகியவற்றுடன் முழுக்க முழுக்க விவசாயியான ஒருவர் மேடையிலிருந்து மண்டபத்தின் எல்லா மூலைகளுக்கும் திரும்பி தலை வணங்கினார். ''தோழர்களே, குடிமக்களே,

உங்களுக்கு நல்வாழ்த்து கூறுகிறேன்'' என்ருர் அவர். ''வெளியே காடேட்டுகள் நடமாடிக் கொண்டிருக்கிருர்கள். எங்களுடைய சோஷலிஸ்டு விவசாயிகளைக் கைது செய்தீர் கள்—அவர்களைக் கைது செய்யவில்லையே, ஏன் இது?''

பரபரப்புற்ற விவசாயிகளின் வாக்குவாதத்தை உடனே இது துவக்கி வைத்தது. முந்திய இரவில் நடைபெற்ற படை யாட்களது வாக்குவாதத்தைப் போன்றதாகவே இருந்தது விவசாயிகளது இந்த வாக்குவாதம். நிலத்தில் பாடுபடும் மெய்யான பாட்டாளிகள் பேசினுர்கள்....

''நமது செயற் கமிட்டியின் உறுப்பினர்களான அவ்க் சேன்தியெவும் ஏனையோரும் விவசாயிகளது காவலர்களாவர் என்று நாம் நினைத்திருந்தோம் — இல்லை, இவர்களும் காடேட்டுகள்தான்! இவர்களைக் கைது செய்யுங்கள்! கைது செய்யுங்கள்!''

இன்னொருவர்: ''இந்தப் பியானீஹ்கள், இந்த அவ்க் சேன்தியெவ்கள்—இவர்கள் எல்லாம் யார்? விவசாயிகளே அல்லர் இவர்கள்! கபட வேடதாரிகள்!''

கூடியிருந்த பிரதிநிதிகள் இந்தப் பேச்சுகளால் வெகு வாய்க் கவரப்பட்டனர். உடன்பிறந்தோரின் குரல் என்பது உணர்ந்து அவர்கள் உற்சாகமடைந்தனர்!

அரை மணி இடைநேரம் வேண்டுமென இடதுசாரி சோஷலிஸ்டுப் புரட்சியாளர்கள் முன்மொழிந்தார்கள். பிரதிநிதிகள் வெளியே சென்ற போது மேடையிலே லெனின் எழுந்து நின்ருர்.

''தோழர்களே! நாம் கால தாமதம் செய்யலாகாது! ருஷ்யாவுக்குத் தலையாய முக்கியத்துவம் வாய்ந்த செய்தி நாளை காலைச் செய்தியேடுகளில் வெளிவந்தாக வேண்டும். தாமதம் வேண்டாம்!''

காரசாரமான பேச்சுக்கும் வாதப் பிரதிவாதத்துக்கும் காலடிகளின் தடதடப்புக்கும் மேலெழுந்து ஒலித்தது புரட்சி இராணுவக் கமிட்டியிலிருந்து வந்த ஒருவரின் உச்சக் குர லிலான அறிவிப்பு: ''பதினைந்து கிளர்ச்சியாளர்கள் உடனே 17ஆம் எண் அறையில் தேவைப்படுகிருர்கள்! போர் முனைக்குச் செல்வதற்கு!''...

இதன்பின் ஏறத்தாழ இரண்டரைமணிக்குப் பிற்பாடு தான் பிரதிநிதிகள் திரள் திரளாய்த் திரும்பி வந்து சேர்ந் தார்கள், தலைமைக் குழுவினர் மேடை மீது ஏறினர், அமர்வு திரும்பவும் ஆரம்பமாயிற்று. புரட்சி இராணுவக் கமிட்டி யுடன் தாம் சேர்ந்து கொண்டு விட்டதை அறிவித்து ஒன்றின் பின் ஒன்ருய் பல பட்டாளங்களிடமிருந்தும் வந்த தந்திகள் படித்துக் காட்டப்பட்டன.

சாவதானமான முறையில் அமர்வு சுடு பிடிக்கலாயிற்று. மசிடோனியப் போர்முனையைச் சேர்ந்த ருஷ்யத் துருப்பு களிடமிருந்து வந்திருந்த ஒரு பிரதிநிதி போர்முனையில் தமது நிலைமை குறித்து மனம் கசந்து பேசினர்: ''அங்கே நாங்கள் அவ்வளவாய்ப் பகைவர்களினுல் அல்ல, நமது நேசநாடுகளது நட்பினுல்தான் அதிகமாய்த் துன்புறுகிருேம்'' என்ருர் அவர். பத்தாவது, பன்னிரண்டாவது சேனைகளின் பிரதிநிதிகள் அப்போதுதான் அவசர அவசரமாய் வந்து சேர்ந்தார்கள், அவர்கள் அறிவித்தார்கள்: ''எங்களது முழு பலத்தையும் கொண்டு உங்களை நாங்கள் ஆதரிக்கின்ருேம்!'' விவசாயிப் படையாள் ஒருவர் ''துரோக சோஷலிஸ்டுகளாகிய மாஸ்ல வும் சலாஸ்கினும்'' விடுதலை செய்யப்படுவதைக் கண் டனம் செய்தார். விவசாயிகள் சோவியத்துகளது செயற் கமிட்டியைப் பொறுத்த வரை, அதிலுள்ள அத்தனை பேரை யும் அப்படியே கைது செய்துவிட வேண்டும் என்ருர் அவர்! மெய்யாகவே புரட்சிகரமான பேச்சு அது.... பாரசீகத் திலிருந்த ருஷ்யச் சேனையின் பிரதிநிதி ஒருவர், அனைத்து ஆட்சியதிகாரமும் சோவியத்துகளுக்கே என்று கோரும்படித் தமக்குத் தாக்கீது அளிக்கப்பட்டதாய் அறிவித்தார்.... உக்ரைனிய இராணுவ அதிகாரி ஒருவர் அவரது தாய் மொழி யில் பேசினர்: ''இம்மாதிரியான ஒரு நெருக்கடியில் தேசிய வாதத்துக்கு இடமில்லை.... எல்லா நாடுகளிலும் பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரம் ஓங்குக!'' பேரார்வமிக்க உன்னத சிந்தனைகள் பிரளயப் பெருக் கெடுத்தன. இனி எந்நாளும் ருஷ்யா வாயில்லா ஜீவனுய் இருக்க முடியவே முடியாது!

போல்ஷிவிக்கு-எதிர்ப்பு சக்திகள் எங்கும் கலவரங்களைத் தூண்டிவிட முயலுகின்றன என்று கூறினுர் காமெனெவ். ருஷ்யாவின் எல்லா சோவியத்துகளுக்கும் காங்கிரசின் வேண்டு கோள் ஒன்றை அவர் படித்துக் காட்டி முன்மொழிந்தார்:

தொழிலாளர்கள், படையாட்கள் பிரதிநிதிகளது சோவியத்துகளின் அனைத்து ருஷ்யக் காங்கிரஸ்—விவசாயிகளது பிரதிநிதிகளும் சிலர் இதில் அடங்கியுள்ளனர்—எல்லா விதமான எதிர்ப்புரட்சி, யூதர்-எதிர்ப்புச் செயல்களையும், எல்லாப் படுகொலை வெறித் தாண்டவங்களையும், அவை எப்படிப்பட்டவையாயினும், எதிர்ப்பதற்காக சக்தி வாய்ந்த உடனடி நடவடிக்கைகளை எடுக்குமாறு வட்டார சோவியத்துகளுக்கு அறைகூவல் விடுக்கின்றது. எந்தப் படுகொலை வெறியாட்டத்துக்கும் இடந் தரலாகாது, தொழிலாளர்கள், விவசாயிகள், படையாட்களது புரட்சியின் உயர் சிறப்பு இதனைக் கோருகிறது.

பெத்ரொகிராதின் செங்காவலர்களும் புரட்சிகர நகரக் காவற் படையினரும் மாலுமிகளும் தலைநகரில் முழுநிறை ஒழுங்கினை நிலைநாட்டியிருக்கிறார்கள்.

தொழிலாளர்களே, படையாட்களே, விவசாயிகளே, எங்கும் நீங்கள் பெத்ரொகிராது தொழிலாளர், படையாட்களது உதாரணத்தைப் பின்பற்ற வேண்டும்.

தோழர்கள்—படையாட்களே, கசாக்குகளே, மெய்யான புரட்சிகர ஒழுங்கை உறுதி செய்யும் கடமை நம் மீதே விழுகிறது.

புரட்சிகர ருஷ்யா அனைத்தும், உலகம் அனைத்துமே நம்மை உற்று நோக்குகின்றன....

இரவு இரண்டு மணிக்கு நில அரசாணை வாக்கெடுப்புக்கு விடப்பட்டது. ஒரேயொரு வாக்குதான் எதிரான வாக்கு, விவசாயிப் பிரதிநிதிகள் ஆனந்தமடைந்து ஆவேசக் கூச்சலிட்டனர்.... இவ்வாறு போல்ஷிவிக்குகள் எதற்கும் அடங்காத வலிமையோடு, தயக்கத்தையும் எதிர்ப்பையும் ஒதுக்கித் தள்ளிவிட்டு, முழு மூச்சொடு முன்சென்றனர்—ருஷ்யாவில் அவர்கள் மட்டுமே திட்டவட்டமான வேலைத்திட்டத்தைக் கொண்டு செயல்பட்டவர்கள், ஏனையோர் தொடர்ச்சியாய் எட்டு மாதங்களாய் வாய்ப் பேச்சே பேசி வந்தனர்.

இப்போது ஒரு படையாள் மேடை மீது ஏறினார்—வற்றிய உடலில் நைந்து போன உடுப்பு உடுத்தியவர், நாவன்மை வாய்ந்தவர். இராணுவத்தை விட்டு ஓடியவர்களுக்குக் கிராம

நில ஒதுக்கீடுகளில் பங்கு பெற உரிமையில்லாதபடிச் செய்ய முற்பட்ட **நக்காஸ்*** விதியை அவர் கண்டித்துப் பேசினார். ஆரம்பத்தில் எதிர்ப்பு ஒலியும் கத்தலும் எழுந்தாலுங்கூட அவரது உருக்கமான எளிய சொற்பொழிவு முடிவில் எங்கும் நிசப்தம் நிலவச் செய்தது. ''அவருடைய சித்தத்துக்கு விரோதமாய் அகழ்வரியின் இரத்தக் களரியில் பலவந்தமாய் இழுத்துவிடப்பட்டார், இந்த இரத்தக் களரியை நீங்களே சமாதான அரசாணையில் அர்த்தமற்றது என்பதோடு பயங்கரமானதெனக் கண்டித்து வாக்களித்திருக்கிறீர்கள். சமாதானம் வருகிறது, சுதந்திரம் பிறக்கிறதென்ற நம்பிக்கையோடு அவர் புரட்சியை வரவேற்றார். சமாதானமா? கேரென்ஸ்கி அரசாங்கம் மீண்டும் அவரைப் பலவந்தம் செய்து கலீஷியாவினுள் செல்ல வைத்தது—கொலை புரிவதற்காகவும் கொல்லப் படுவதற்காகவும். சமாதானம் வேண்டுமென்ற அவரது கூப்பாடுகளைக் கேட்டுத் தெரேஷ்சென்கொ எள்ளி நகையாடினார்.... சுதந்திரமா? கேரென்ஸ்கி ஆட்சியில் அவருடைய கமிட்டிகள் நசுக்கப்பட்டன, அவருடைய செய்தியேடுகள் நிறுத்தப்பட்டன, அவருடைய கட்சிப் பேச்சாளர்கள் சிறையில் தள்ளப்பட்டார்கள்.... நாட்டினுள் அவரது கிராமத்தில் நிலப்பிரபுக்கள் அவரது நிலக் கமிட்டிகளை மீறிச் சென்றார்கள், அவரது தோழர்களைக் கைது செய்தார்கள்.... பெத்ரொகிராதில் முதலாளித்துவ வர்க்கத்தார் ஜெர்மானியர்களுடன் கூட்டு சேர்ந்து கொண்டு சேனைக்கு உணவும் தளவாடங்களும் கிடைக்காதபடி சீர்குலைவு செய்தனர்.... அவருக்குப் பூட்சுகள் இல்லை, உடுப்புகள் இல்லை.... இராணுவத்தைத் துறந்து ஓடும்படி அவரைப் பலவந்தம் செய்தது யார்? நீங்கள் வீழ்த்தியிருக்கிறீர்களே அதே கேரென்ஸ்கி அரசாங்கம்!'' முடிவில் கையொலி முழக்கம் எழுந்தது.

ஆனால் இன்னொரு படையாள் இதைக் கடுமையாய்த் தாக்கினார்: ''இராணுவத்தைத் துறந்து ஓடுவதைப் போன்ற ஒரு அபாண்டச் செயலை மூடி மறைப்பதற்கான மூடுதிரையாகி

* இங்கு குறிக்கப்படுவது நில அரசாணையுடன் கூடவே காங்கிரசால் நிறைவேற்றப்பட்ட **நக்காஸ்** (தாக்கீதுகள்). —[பதிப்பாசிரியர்.]

விட முடியாது கேரென்ஸ்கி அரசாங்கம்! துறந்து ஓடுவோர் அயோக்கியர்கள், தம் தோழர்களை அகழ்வரிகளில் தனியே மடிய விட்டுவிட்டு வீட்டுக்கு ஓடும் கழிசடைகள்! துறந்து ஓடுகிற ஒவ்வொருவரும் ஒரு துரோகி. அவரைத் தண்டிக்கவே வேண்டும்....''இரைச்சலும் கூச்சல்களும்: ''தவோல்னு! நீஷே!'' அவசரமாய்க் காமெனெவ் எழுந்து இந்த விவகாரத்தை அரசாங்கத்தின் முடிவுக்கு விட்டுவிடலாமென்று முன்மொழிந்தார்.[4]

இரவு இரண்டரை மணிக்கு திடுமெனக் கடும் நிசப்தம் குடி கொண்டது. அரசாங்க அமைப்பு பற்றிய அரசாணையைக் காமெனெவ் படித்தார்:

அரசியல் நிர்ணயச் சபை கூடும் வரை நாட்டை நிர்வகிக்க தொழிலாளர்கள், விவசாயிகளது இடைக்கால அரசாங்கம் அமைக்கப்படுகிறது, மக்கள் கமிசார் அவை[5] என்று இது அழைக்கப்படும்.

அரசுச் செயற்பாட்டின் வெவ்வேறு கிளைகளின் நிர்வாகம் ஆணைக் குழுக்களிடம் ஒப்படைக்கப்படும். உழைக்கும் ஆடவர், உழைக்கும் பெண்டிர், மாலுமிகள், படையாட்கள், விவசாயிகள், எழுத்தர் பணித் துறையினர் ஆகியோரது வெகுஜன நிறுவனத்துடன் நெருங்கிய முறையில் இணைந்து, காங்கிரசின் வேலைத்திட்டம் செயல்படுத்தப்படும்படி உறுதி செய்து கொள்ளும் விதத்தில் இந்த ஆணைக் குழுக்கள் ஒழுங்கமைக்கப்படும். இந்த ஆணைக் குழுக்களின் தலைவர்களாலான தலைமைக் குழுவினிடம், அதாவது மக்கள் கமிசார் அவையிடம் அரசாங்க அதிகாரம் ஒப்படைக்கப் படுகிறது.

மக்கள் கமிசார்களது செயற்பாடுகள் மீது கண்காணிப்பு செலுத்தலும், அவர்களை மாற்றுவதற்கான உரிமையும் தொழிலாளர்கள், விவசாயிகள், படையாட்கள் பிரதிநிதிகளது சோவியத்துகளின் அனைத்துருஷ்யக் காங்கிரசுக்கும் அதன் மத்தியச் செயற் கமிட்டிக்கும் உரியனவாகும்.

மண்டபம் நிசப்தமாயிருந்தது. கமிசார்களது பட்டியலை அவர் படித்த போது ஒவ்வொரு பெயரையும் தொடர்ந்து

கையொலி முழக்கம் எழுந்தது, முக்கியமாய் லெனின் பெயரும் திரோத்ஸ்கி பெயரும் படிக்கப்பட்டதும் நீடித்த முழக்கம் எழுந்தது.

| | |
|---|---|
| **அவைத் தலைவர்:** | விளதீமிர் உலியானவ் (லெனின்) |
| **உள் துறை:** | எ.ஐ. ரீக்கவ் |
| **விவசாயம்:** | வி.பி. மிலூத்தின் |
| **தொழிலாளர்:** | எ.ஜி. ஷிலியாப்னிக்கவ் |
| **இராணுவ, கடற்படை விவகாரங்கள்:** | வி.எ. அவ்சேயின்கோ (அந்தோனவ்), என். வி. குரிலேன்கொ, பி.இ. திபேன்கோ ஆகியோர் அடங்கிய ஒரு கமிட்டி |
| **வாணிபம், தொழில்:** | வி.பி. நொகீன் |
| **மக்கள் கல்வி:** | அ.வி. லுனச்சார்ஸ்கி |
| **நிதி:** | ஐ.ஐ. ஸ்குவொர்த்ஸோவ் (ஸ்தெபானவ்) |
| **அயல் துறை:** | எல்.டி. பிரான்ஷ்டைன் (திரோத்ஸ்கி) |
| **நீதி:** | ஜி.ஐ. ஒப்போக்கோவ் (லோமவ்) |
| **வழங்கீடு துறை:** | ஐ.எ. தெயொடரோவிச் |
| **தபால், தந்தி:** | ந.பி. அவீலவ் (கிலேபவ்) |
| **தேசிய இன விவகாரங்களுக்கான தலைவர்:** | ஐ.வி. ஜுகஷ்வீலி (ஸ்டாலின்) |
| **ரயில்வே:** | பிற்பாடு நியமிக்கப்படுவார். |

மண்டபத்தின் ஓரங்களில் துப்பாக்கிக் குத்தீட்டிகள் உயர்ந்திருந்தன, பிரதிநிதிகளிடையில் ஆங்காங்கே குத்தீட்டிகள் நீட்டிக் கொண்டிருந்தன. புரட்சி இராணுவக் கமிட்டி எல்லோரையும் ஆயுதமேந்தியோராக்கி வந்தது. கேரென்ஸ்கி படைகளின் எக்காள ஒலி தென்மேற்குக் காற்றுடன் வந்து ஒலித்து. கேரென்ஸ்கிக்கு எதிரான தீர்மானகரமான போருக்காகப் போல்ஷிவிசம் ஆயுதமேந்தி வந்தது.... இதற்கிடையில் எவரும் மண்டபத்தை விட்டு வீட்டுக்குச் செல்லவில்லை. மாறாக நூற்றுக் கணக்கில் புதிதாய் ஆட்கள் உள்ளே வந்துவிட்டார்கள். கடுமையான முகங் கொண்ட படையாட்களும்

தொழிலாளர்களும் மாமண்டபத்தில் நிறைந்துவிட்டனர். சிறிதும் அயராத நாட்டத்துடன் மணிக் கணக்காய் இவர்கள் நின்றிருந்தார்கள். காற்றில் சிகரெட்டுப் புகையும் மனித மூச்சும் கரடுமுரடான ஆடைகளின் வீச்சமும் வியர்வையின் வாடையும் அடர்ந்துவிட்டன.

சமூக-ஜனநாயக சர்வதேசியவாதிகள், மென்ஷிவிக் சர்வ தேசியவாதிகளில் எஞ்சியவர்கள் ஆகியோரின் சார்பில் நோவயா ழீஸின் ஏட்டினது ஆசிரியர் குழாத்தைச் சேர்ந்த அவீலவ் பேசிக் கொண்டிருந்தார். புத்தி கூர்மை வாய்ந்த இளவட்டமான முகமுடையவர், அவரது மிடுக்கான நீள் கோட்டில் இங்கு பொருத்தமற்றவராய்த் தோன்றினார்.

''எங்கே போகிறோம் என்று நாம் நம்மைக் கேட்டுக் கொள்ள வேண்டும்.... கூட்டு அரசாங்கம் எளிதாய்க் கவிழ்க் கப்பட்டதற்கு ஜனநாயகத்தினது இடதுசாரியின் பலமல்ல காரணம், மக்களுக்கு சமாதானமும் ரொட்டியும் கொடுக்க இந்த அரசாங்கம் திராணியற்றதாய் இருந்ததுதான் காரணம். இடது சாரியானது இந்தப் பிரச்சினைகளுக்குத் தீர்வு காண முடிந்தாலன்றி அது தன்னை அதிகாரத்தில் நிலைநாட்டிக் கொள்ள முடியாது....

''மக்களுக்கு இதனால் ரொட்டி தர முடியுமா? தானியம் கிடைப்பது அரிதாயிருக்கிறது. பெரும்பாலான விவசாயிகள் உங்களுக்கு ஆதரவாய் இருக்கப் போவதில்லை, ஏனென்றால் அவர்களுக்கு வேண்டிய இயந்திரங்களை உங்களால் தர முடி யாது. எரிபொருளும் ஏனைய பிரதான அவசியத் தேவைப் பொருள்களும் கொள்முதல் செய்வது அனேகமாய் முடியாத காரியமாகும்....

''சமாதானத்தைப் பொறுத்த வரை அது இன்னுங்கூட கடினமானது. நேசநாடுகள் ஸ்கோபெலெவுடன் பேச மறுத்து விட்டன. உங்களிடமிருந்து சமாதான மாநாட்டுக்கான முன்மொழிவை அவை ஒரு போதும் ஒத்துக் கொள்ளப் போவதில்லை. உங்களுக்கு லண்டனிலோ பாரிசிலோ அல்லது பெர்லினிலோ அங்கீகாரம் கிடைக்கப் போவதில்லை....

''நேசநாடுகளது பாட்டாளி வர்க்கத்திடமிருந்து பய னுள்ள உதவியை நீங்கள் எதிர்பார்க்க முடியாது, ஏனெனில் மிகப் பெருவாரியான நாடுகளில் அது புரட்சிப் போராட்டத்

திலிருந்து நெடுந் தொலேவில் இருக்கிறது. நேசநாடுகளில் ஜனநாயகத்தால் ஸ்டாக்ஹோம் மாநாட்டைக் கூடும்படிக் கூட செய்ய முடியவில்லே என்பதை நினேவில் கொள்ளுங்கள். ஜெர்மன் சமூக-ஜனநாயகவாதிகளேப் பொறுத்தவரை, ஸ்டாக்ஹோமிற்குச் சென்ற எங்களது பிரதிநிதிகளில் ஒருவரான தோழர் கோல்டன்பர்குடன் சற்று முன்புதான் நான் பேசினேன். யுத்தத்தின் போது ஜெர்மனியில் புரட்சி சாத்தியமல்ல என்று கடைகோடி இடதுசாரியினரும் அவரிடம் சொன்ஞர்கள்....'' இப்போது இடைமறிப்புகள் மிகவும் அதிகரித்துவிட்டன. இருப்பினும் அவீலவ் தொடர்ந்து பேசிச் சென்ருர்.

''ருஷ்யச் சேனே ஜெர்மானியர்களால் தோற்கடிக்கப் பட்டு **ருஷ்யாவின் செலவிலே** ஆஸ்திரிய-ஜெர்மன் கூட்டுக்கும் பிரெஞ்சு-பிரிட்டிஷ் கூட்டுக்குமிடையே சமாதானம் ஒப்பேற்றிக் கொள்ளப்படுதலோ, அல்லது ஜெர்மனியுடன் தனியே சமாதானம் செய்து கொள்ளப்படுதலோதான் ருஷ்யா தனிமைப்படுத்தப்பட்டிருப்பதன் நிச்சயமான விளேவாய் இருக்கும்.

''சற்று முன்புதான் நான் கேள்விப்பட்டேன்: நேசநாடுகளின் தூதர்கள் இங்கிருந்து போய் விடுவதற்காகத் தயாராகி வருகிருர்கள், ருஷ்யாவின் எல்லா நகரங்களிலும் தாய்நாட்டின்,புரட்சியின் இரட்சணியக் கமிட்டிகள் அமைக்கப்படுகின்றன....

''இந்தப் பிரம்மாண்ட இன்னல்களே எந்தவொரு கட்சியாலும் வெற்றி கொண்டுவிட முடியாது. சோஷலிஸ்டுக் கூட்டணியாலான ஓர் அரசாங்கத்துக்கு ஆதரவாய் இருக்கக் கூடிய பெரும்பான்மையான மக்களால் மட்டுமே புரட்சியைச் சித்தி பெறச் செய்ய முடியும்....''

பிறகு அவர் இரு கட்சிக் குழுக்களது தீர்மானத்தை முன் மொழிந்தார்:

புரட்சியின் வெற்றிகளது இரட்சணேக்காக, தொழிலாளர்கள், படையாட்கள், விவசாயிகள் பிரதிநிதிகளது சோவியத்துகளில் ஒழுங்கமைந்த புரட்சிகர ஜனநாயகத்தை அடிப்படையாய்க் கொண்ட ஓர் அரசாங்கத்தை நிறுவுவதன்

உடனடியான அத்தியாவசியத்தை அங்கீகரித்தும்; மற்றும் இந்த அரசாங்கத்தின் பணி கூடுமான சீக்கிரத்தில் சமாதானத்தையும், நிலக் கமிட்டிகளின் கைக்கு நிலம் மாற்றப்படுவதையும், தொழில் துறைப் பொருளுற்பத்தியின் மீது கண்காணிப்பு நிறுவப்படுவதையும், அரசியல் நிர்ணயச் சபை தீர்மான தேதியில் கூட்டப்படுவதையும் கைகூடச் செய்வது தான் என்பதை அங்கீகரித்தும்; இந்தக் காங்கிரசானது இக் காங்கிரசில் கலந்து கொள்ளும் ஜனநாயகக் கோஷ்டிகளது உடன்பாட்டின் பேரில் இம்மாதிரியான ஒரு அரசாங்கத்தை அமைத்திடுவதற்காக செயற் கமிட்டி ஒன்றை நியமிக்கின்றது.

அவீலவின் இந்த அமைதியான, நிதானம் வாய்ந்த வாதமானது வெற்றி முழக்கமிட்ட பிரதிநிதிகளது புரட்சி ஆர்வத்தையும் மீறி அவர்களைக் கலக்கம் கொள்ளச் செய்தது. அவருடைய பேச்சின் கடைப் பகுதியில் கத்தலும் கூவலும் அடங்கிவிட்டன. அவர் பேசி முடித்ததும் சிறிதளவு கைதட்டலுங்கூட அவருக்குக் கிடைத்தது.

அவரைத் தொடர்ந்து கரேலின் பேசினர்—அவரும் இளமையானவர்தான், அச்சமின்றியே பேசினர், அவரது உள்ளத்து நேர்மையை யாரும் சந்தேகிக்கவில்லை. மரியா ஸ்பிரிதோனவாவின் கட்சியாகிய, போல்ஷிவிக்குகளை அனேகமாய்த் தன்னந் தனியே பின்பற்றியதும் புரட்சிகர விவசாயிகளின் பிரதிநிதியாய்* இருந்ததுமாகிய இடதுசாரி சோஷலிஸ்டுப் புரட்சியாளர் கட்சியின் சார்பில் பேசினர் அவர்.

''மக்கள் கமிசார் அவையில் சேர்ந்து கொள்ள எங்கள் கட்சி மறுத்துள்ளது; காரணம் என்னவென்றல், புரட்சி சேனையில் ஒரு பகுதி இந்தக் காங்கிரசிலிருந்து வெளியேறியதே, அந்தப் பகுதியிடமிருந்து என்றென்றுக்குமாய் எங்களைத் துண்டித்துக் கொண்டுவிட நாங்கள் விரும்பவில்லை. அதனிடமிருந்து எங்களைத் துண்டித்துக் கொண்டால், போல்ஷிவிக்குகளுக்கும் ஜனநாயகத்தின் ஏனைய கோஷ்டிகளுக்குமிடையே

* புரட்சிகர விவசாயிகளில் ஒரு பகுதியோரே இடதுசாரி சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களைப் பின்பற்றினர்கள்.—[பதிப்பாசிரியர்.]

இடையாட்களாய் நாங்கள் சேவை புரிய முடியாமற் போய் விடும்.... இந்தக் கணத்தில் இப்படி சேவை புரிவதே எங்களது முக்கிய கடமை. சோஷலிஸ்டுக் கூட்டின் அரசாங்கத்தையன்றி வேறு எந்த அரசாங்கத்தையும் நாங்கள் ஆதரித்து நிற்க இயலாது....

''மேலும் நாங்கள் போல்ஷிவிக்குகளின் எதேச்சாதிகார நடத்தையைக் கண்டனம் செய்கிறோம். எங்களது கமிசார்கள் அவர்களது பதவிகளிலிருந்து விரட்டப்பட்டிருக்கிறார்கள். எங்களது ஒரே பத்திரிகையான **ஸ்னமியா துருதா** (உழைப்புக் கொடி) நேற்று வெளிவர முடியாதபடி தடையிடப்பட்டது....

''நகர டூமாவானது உங்களை எதிர்த்துப் போராடுவதற்காக சக்தி வாய்ந்த ஒரு கமிட்டியை, தாய்நாட்டின், புரட்சியின் இரட்சணியக் கமிட்டியை அமைத்து வருகிறது. ஏற்கெனவே நீங்கள் தனிமைப்பட்டு விட்டீர்கள், உங்களுடைய அரசாங்கம் வேறு எந்தவொரு ஜனநாயகக் கோஷ்டியிடமிருந்தும் ஆதரவு பெறாத அரசாங்கமாகும்....''

இப்போது திரோத்ஸ்கி தளராத நம்பிக்கை கொண்டவராய், ஆதிக்கம் செலுத்துகிறவராய் அந்த உயரமான பேச்சுமேடையில் நின்றார். அவரது உதடுகளின் கிண்டலான நகைப்பு ஏளனச் சிரிப்பு போன்றதாகவே இருந்தது. மணி நாதமிட்ட குரலில் பேசினார் அவர். பெருந் திரளாய்க் கூடியிருந்தோர் ஆர்வ முழக்கமிட்டு அவர் பேச்சுக்கு ஆதரவு தெரிவித்தனர்.

''எங்களது கட்சி தனிமைப்பட்டுவிடும் அபாயத்தைப் பற்றிய இந்த வாதங்கள் புதியவை அல்ல. எழுச்சிக்கு முந்திய நாளிலுங்கூட நிச்சயம் நாங்கள் தோற்கவே போகிறோம் என்றுதான் ஆரூடம் கூறப்பட்டது. எல்லோரும் எங்களை எதிர்த்து நின்றார்கள், இடதுசாரியைச் சேர்ந்த சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களது குழு மட்டும்தான் புரட்சி இராணுவக் கமிட்டியில் எங்களுடன் சேர்ந்திருந்தது. அனேகமாய்ச் சிறிதும் இரத்தம் சிந்தாமலே அரசாங்கத்தை நாங்கள் வீழ்த்த முடிந்ததே, எப்படி அது?... நாங்கள் தனிமைப்பட்டு விடவில்லை என்பதற்கு அந்த உண்மை மிகவும் கண்கூடான நிரூபணமாகும். உண்மையில் இடைக்கால அரசாங்கம்தான்

தனிமைப்பட்டிருந்தது. எங்களை எதிர்த்து நடைபோடும் ஜனநாயகக் கட்சிகள் தனிமைப்பட்டிருந்தன, இன்றும் தனிமைப்பட்டிருக்கின்றன, என்றென்றுக்குமாய் பாட்டாளி வர்க்கத்திடமிருந்து துண்டிக்கப்பட்டுத் தனித்திருக்கின்றன!

''கூட்டின் அவசியம் குறித்துப் பேசுகிறார்கள் அவர்கள். ஒரேயொரு கூட்டுதான் சாத்தியம்—தொழிலாளர்கள், படையாட்கள், மிகவும் ஏழ்மைப்பட்ட விவசாயிகளின் கூட்டுதான் அது. இம்மாதிரியான ஒரு கூட்டை நடைமுறை உண்மையாக்கிய உயர் சிறப்பு எங்கள் கட்சிக்கு உரியதாகும்.... எம்மாதிரியான கூட்டை அவீலவ் குறுப்பிடுகிறார்? மக்களுக்குத் துரோகம் புரிந்ததே, அந்த அரசாங்கத்தை ஆதரித்தவர்களுடனா கூட்டு சேர வேண்டும்? கூட்டு சேர்வதால் எப்போதும் பலம் கூடுதலாகிவிடுவதில்லை. உதாரணமாய், நமது அணிகளில் டானையும் அவ்க்சேந்தியெவையும் கொண்டிருந்தால் நம்மால் எழுச்சிக்கு ஏற்பாடு செய்திருக்க முடியுமா?'' பலத்த சிரிப்பு வெடித்து அலை மோதிற்று.

''அவ்க்சேந்தியெவ் தந்த ரொட்டி மிகச் சொற்பம். அபரோன்த்ஸியுடன் (பாதுகாப்புவாதிகள்) கூட்டு சேர்ந்தால் அதிகம் தந்துவிட முடியுமா? விவசாயிகளுக்கும், நிலக் கமிட்டிகளின் உறுப்பினர்களைக் கைது செய்யும்படி உத்தர விட்ட அவ்க்சேந்தியெவுக்கும் இடையே நாம் விவசாயிகளையே நமக்குரியோராய்த் தெரிந்தெடுத்துக் கொள்கிறோம்! வரலாற்றிலே தனிப்பெருஞ் சிறப்புக்குரியதாய்த் திகழும் நமது புரட்சி....

''ஏனைய ஜனநாயகக் கட்சிகளுடன் உடன்பாட்டுக்கு வராமல் எதிர்த்தடிப்பதாய் நம்மீது அவர்கள் குற்றஞ் சாட்டுகிறார்கள். ஆனால் நாமா இங்கு குற்றங் கூறப்பட வேண்டியவர்கள்? அல்லது கரேலின் சொன்னாரே, அது போல் 'தவறான நினைப்பைக்' குற்றங் கூற வேண்டுமா? இல்லை, தோழர்களே, இதெல்லாம் சரியல்ல. புரட்சியின் உச்ச அலையிலே இருக்கும் ஒரு கட்சி, இன்னும் வெடி மருந்து புகையின் நெடி வீசிக் கொண்டிருக்கும் ஒரு கட்சி, 'இதோ இருக்கிறது ஆட்சியதிகாரம்—எடுத்துக் கொள்ளுங்கள்!' என்று கூற முன்வருகையில், எடுத்துக் கொள்ளும்படி யாரைப் பார்த்துச் சொல்லப்படுகின்றதோ அவர்கள் பகைவன் பக்கத்துக்குச் சென்று

விடும் போது, தவருன நினைப்பு அல்ல அது.... ஈவிரக்கமற்ற போர்ப் பிரகடனமாகும் அது. போர்ப் பிரகடனம் செய்திருப்பது நாம் அல்ல....

''நாம் 'தனிமைப்பட்டு' நிற்போமாயின், நமது சமாதான முயற்சிகள் தோல்வியுற்றுவிடுமென்று அவீலவ் நம்மைப் பயமுறுத்துகிருர். திரும்பவும் சொல்கிறேன், ஸ்கோபெலெவுடஞே, அல்லது தெரேஷ்ச்சென்கொவுடஞேகூட கூட்டு சேர்வதானது, சமாதானத்தை அடைவதற்கு எப்படி நமக்கு உதவ முடியுமென எனக்குப் புரியவில்லை! நம்முடைய செலவில் சமாதானம் முடித்துக் கொள்ளப்பட்டுவிடும் என்று சொல்லி அவீலவ் நம்மைப் பயமுறுத்தப் பார்க்கிருர். இதற்கு நான் என்ன பதில் சொல்கிறேன் என்ருல், எப்படியும் ஐரோப்பாவானது தொடர்ந்து ஏகாதிபத்திய முதலாளித்துவ வர்க்கத்தாலேயே ஆளப்படுமாயின், புரட்சிகர ருஷ்யா தவிர்க்க முடியாதபடி வீழ்ந்துபடவே நேரும்....

''இரண்டில் ஒன்றே நடைபெற முடியும்: ஒன்று ருஷ்யப் புரட்சியானது ஐரோப்பாவில் ஒரு புரட்சி இயக்கத்தைத் தோற்றுவிக்க வேண்டும், அல்லது ஐரோப்பிய அரசுகள் ருஷ்யப் புரட்சியை அழித்துவிடும்!''

பிரதிநிதிகள் கரை புரண்டோடும் ஆர்வமோடு கையொலி முழக்கமிட்டார்கள். மனிதகுலத்தை வாழ்விக்கும் வெஞ்சமர் வீரர்கள் என்ற எண்ணத்தால் ஊக்கமூட்டப் பெற்று கிளர்ந்தெழுந்து முழக்கமிட்டார்கள். எழுச்சி கொண்ட பெருந்திரளினரிடத்தே அக்கணம் முதலாய், அவர்களது எல்லாச் செயல்களிலுமே உணர்வு-பூர்வமான, வைராக்கியமான ஏதோ ஒன்று வெளிப்பட்டு வந்தது, எந்நாளும் அவர்களைவிட்டு விலகாதிருந்தது.

ஆனல் எதிர்த் தரப்பிலும் போரணி உருவாகி வந்தது. பேச வந்தவர் ரயில்வேத் தொழிலாளர்களது சங்கத்தின் பிரதிநிதி என்பது காமெனெவுக்குத் தெரிந்தது. கடுகடுப்பான முகத்துடன் கட்டை குட்டையாய் இருந்தார் அவர், சிறிதும் இணக்கமற்றுப் பகைமைப் போக்கு கொண்டிருந்தார். மேடையிலே வந்து நின்று ஒரு வெடிகுண்டை வீசினுர்.

''ருஷ்யாவில் மிகமிக வலிமை வாய்ந்த நிறுவனத்தின் பெயரில் இங்கு நான் பேச வருகிறேன். உங்களுக்கு நான்

சொல்வது இதுதான்: **விக்ழேல்*** என்னை இங்கு வந்து ஆட்சி யதிகார அமைப்பு குறித்து தனது தீர்மானத்தை அறிவிக் கும்படி பணித்திருக்கிறது. போல்ஷிவிக்குகள் ருஷ்யாவின் ஜனநாயகம் அனைத்திடமிருந்தும் தம்மைத் தனிமைப்படுத்திக் கொள்ளத்தான் செய்வோமென வற்புறுத்துவார்களாயின் அவர்களை ஆதரிக்க **விக்ழேல்** கமிட்டி முற்றுகவும் முடிவாக வும் மறுக்கிறது!'' மண்டபம் எங்கும் பலத்த இரைச்சல்.

''1905லும் கர்னீலவ் விவகாரத்தின் போதும் ரயில்வேத் தொழிலாளர்கள் புரட்சியின் சிறந்த காவலர்களாய்ச் செயல் பட்டவர்கள். ஆனால் உங்களுடைய காங்கிரசுக்கு நீங்கள் எங்களை அழைக்கவில்லை—'' கூச்சல்கள்: ''உங்களை அழைக் காமல் இருந்தது பழைய **இத்ஸே-யி-க!**'' ஆனால் பேச்சாளர் இதைக் காதில் வாங்கிக் கொள்ளவில்லை. ''இந்தக் காங்கிரஸ் சட்டப்படி அமைந்ததென நாங்கள் அங்கீகரிக்கவில்லை, ஏனெ னில் மென்ஷிவிக்குகளும் சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களும் வெளியேறிய பிற்பாடு சட்டப்படி இருக்க வேண்டிய குறை வெண் வரம்பு இங்கே இல்லை.... எங்களுடைய சங்கம் பழைய **இத்ஸே-யி-க**வைத்தான் ஆதரிக்கிறது, ஒரு புதிய கமிட்டியைத் தேர்ந்தெடுக்க இந்தக் காங்கிரசுக்கு உரிமை இல்லை என்று அறிவிக்கிறது....

''ஆட்சியதிகாரமானது புரட்சிகர ஜனநாயகம் அனைத் தின் அதிகாரபூர்வமான உறுப்புகளுக்குப் பொறுப்பு வாய்ந்த சோஷலிஸ்டு, புரட்சிகர ஆட்சியதிகாரமாய் இருத்தல் வேண்டும். இப்படிப்பட்ட ஓர் ஆட்சியதிகாரம் அமைக்கப் படும் வரை ரயில்வேத் தொழிலாளர் சங்கம் எதிர்ப்புரட்சித் துருப்புகளைப் பெத்ரொகிராதுக்கு ஏற்றிச் செல்ல மறுக்கும் அதே நேரத்தில், **விக்ழேலின்** உடன்பாடின்றி எந்த உத்தரவும் நிறைவேற்றப்படக் கூடாதென்று தடை விதிக் கிறது. மேலும் **விக்ழேல்** ருஷ்யாவில் ரயில்வே நிர்வாகம் அனைத்தையும் தானே மேற்கொள்கிறது.''

முடிவில் அவரை எதிர்த்துப் புயலென எழுந்த ஆத்திர வசைமாரியில் அவருடைய பேச்சு காதில் விழவில்லை. ஆனால்

---

* **விக்ழேல்**—ரயில்வேத் தொழிலாளர்கள், பணியாளர் கள் சங்கத்தின் அனைத்து ருஷ்யச் செயற் கமிட்டி.—[பதிப்பா சிரியர்.]

அவரது பேச்சு பலத்த அடியே ஆகும்—தலைமைக் குழுவின ரது கவலை தோய்ந்த முகங்களில் இதைக் காண முடிந்தது. எனினும் காமெனெவ் எழுந்து இந்தக் காங்கிரஸ் சட்டபடி அமைந்ததே என்பதில் எந்தச் சந்தேகமும் இல்லையென்று பதிலளித்தார். மென்ஷிவிக்குகளும் சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களும் வெளியேறிய பிற்பாடுங்கூட, பழைய இத்ஸே-யி-க நிர்ணயம் செய்த குறைவெண் வரம்புங்கூட இங்கு விஞ்சப்பட்டிருக்கிறது என்று அவர் கூறினர்....

பிறகு அரசாங்க அமைப்பு பற்றிய அரசாணை வாக்கெடுப்புக்கு விடப்பட்டது. மக்கள் கமிசார் அவையானது பிரம் மாண்டப் பெரும்பான்மை வாக்குகளின் பேரில் பதவியில் அமர்த்தப்பட்டது....

ருஷ்யக் குடியரசின் புதிய நாடாளுமன்றமான புதிய இத்ஸே-யி-க தேர்ந்தெடுக்கப்படுவதற்கு பதினைந்து நிமிடங்கள்கூட ஆகவில்லை. திரோத்ஸ்கி அதன் இயைபை அறிவித்தார்: 100 உறுப்பினர்கள், அவர்களில் 70 பேர் போல்ஷிவிக்குகள்.... விவசாயிகளுக்காகவும் வெளியேறிப் பிரிந்து சென்ற கட்சிக் குழுக்களுக்காகவும் இடங்கள் ஒதுக்கி வைக்கப்பட்டிருக்கின்றன என்றார். ''நம்முடைய வேலைத்திட்டத்தை ஏற்றுக் கொள்ளும் எல்லாக் கட்சிகளையும் கோஷ்டிகளையும் நாம் அரசாங்கத்தினுள் வரும்படி வரவேற்கின்றோம்'' என்று கூறி முடித்தார் திரோத்ஸ்கி.

இதை அடுத்து சோவியத்துகளின் இரண்டாவது அனைத்து ருஷ்யக் காங்கிரஸ் முடிவுற்றது. பிரதிநிதிகள் ருஷ்யாவின் எல்லா மூலைகளிலுமுள்ள தமது ஊர்களுக்கு அவசரமாய்த் திரும்பி மாபெரும் நிகழ்ச்சிகள் குறித்து எல்லோருக்கும் சொல்வதற்காகப் புறப்பட்டார்கள்....

தூங்கிக் கொண்டிருந்த டிராம் வண்டி நடத்துநர்களையும் ஓட்டுநர்களையும் நாங்கள் எழுப்பிய போது காலை மணி ஏறத்தாழ ஏழு இருக்கும். சோவியத்துப் பிரதிநிதிகளை அவர்களது இல்லங்களுக்கு அழைத்துச் செல்வதற்காக டிராம்வே தொழிலாளர் சங்கம் டிராம் வண்டிகளை ஸ்மோல்னியின் முன்னல் கொண்டு வந்து எப்போதும் தயாராய் வைத்திருந்தது. கூட்டம் நெருக்கியடித்த வண்டியினுள் முந்திய இரவில்

இருந்ததைக் காட்டிலும் இப்போது கேளிக்கையும் சிரிப்பும் குறைவாகவே இருந்ததாய் நினைத்தேன். பலரும் கவலை தோய்ந்த முகபாவத்துடன் காணப்பட்டனர். ''இப்போது நாமேதான் எசமானர்கள், நமது சித்தத்தைச் செயலாய் நிறைவேற்றுவது எப்படி?'' என்று ஆலோசித்துக் கொண்டிருந்தார்களோ?

எங்களது குடித்தனக் கட்டடத்துக்கு அருகே குடிமக்களாலான ஆயுதமேந்திய தண்டுகாவல் குழுவினர் இருட்டிலே எங்களை நிறுத்திக் கவனமாய்ச் சோதனை புரிந்தனர். நகர டூமாவின் பிரகடனம் இப்படிச் செயல்பட்டுக் கொண்டிருந்தது ....

எங்கள் வீட்டுக்கார அம்மாள் நாங்கள் உள்ளே நுழைந்த சப்தத்தைக் கேட்டு மென்சிவப்புப் பட்டு அங்கியில் வெளியே ஓடி வந்தார்.

''ஏனைய ஆடவர்களுடன் சேர்ந்து நீங்களும் முறை வைத்துக் கொண்டு காவற் சேவை புரிய வேண்டுமென்று வீட்டுக் கமிட்டி திரும்பவும் கூறியிருக்கிறது'' என்றார் அவர்.

''இந்தக் காவற் சேவை எதற்காக?''

''வீட்டையும் பெண்களையும் குழந்தைகளையும் பாதுகாப்பதற்காக.''

''யாரிடமிருந்து?''

''கொள்ளைக்காரர்கள், கொலைகாரர்களிடமிருந்து.''

''வீட்டில் ஆயுதங்கள் இருக்கின்றனவா என்று சோதனையிடுவதற்காக புரட்சி இராணுவக் கமிட்டியிலிருந்து கமிசார் ஒருவர் வருவதாய் வைத்துக் கொள்வோம், அப்போது என்ன செய்வது?''

''அப்படிச் சொல்லிக் கொண்டுதான் வருவார்கள் அவர்கள்.... தவிரவும் வித்தியாசம் என்ன? எல்லாம் ஒன்றுதானே.''

அமெரிக்கக் குடியினர் ஆயுதம் ஏந்தக் கூடாதென்று—முக்கியமாய் ருஷ்ய அறிவுத்துறையினர் வசிக்கும் பகுதிகளில் கூடவே கூடாதென்று—கான்சல் உத்தரவிட்டிருப்பதாய் வினைமுறைக்குரிய தோரணையில் அவரிடம் நான் சொன்னேன்....

அத்தியாயம் 6

## இரட்சணியக் கமிட்டி

வெள்ளிக்கிழமை, நவம்பர் 9....

நோவொச்செர்க்காஸ்க், நவம்பர் 8.

போல்ஷிவிக்குகளுடைய கலகத்தை உத்தேசித்தும், இடைக்கால அரசாங்கத்தை அகற்றிவிட்டு பெத்ரொகிராதில் ஆட்சியதிகாரத்தைக் கைப்பற்றிக் கொள்ள அவர்கள் செய்யும் முயற்சியை உத்தேசித்தும்... கசாக்கு அரசாங்கம் இந்தச் செயல்களைத் தான் கொடுங் குற்றங்களாகவும் அனுமதிக்க முடியாதவையாகவும் கருதுவதாய் அறிவிக்கின்றது. ஆகவே கசாக்குகள் கூட்டு அரசாங்கமாகிய இடைக்கால அரசாங்கத்துக்கே தமது ஆதரவு அனைத்தையும் அளித்திடுவார்கள். இந்த நிலைமைகளின் காரணமாய், இடைக்கால அரசாங்கம் திரும்பவும் ஆட்சியதிகாரம் பெற்று ருஷ்யாவில் ஒழுங்கு மீட்டமைக்கப்படும் வரையில், தோன் பிராந்தியம் சம்பந்தப்பட்ட மட்டில் ஆட்சியதிகாரம் அனைத்தையும் நவம்பர் 7 முதலாய் நானே மேற்கொள்கிறேன்.

ஒப்பம் அட்டாமன் கலேடின்,
**கசாக்குத் துருப்புகளது அரசாங்கத்தின் அதிபர்.**

அமைச்சர்-அதிபர் கேரென்ஸ்கியின் **பிரிக்காஸ்,** காத்சினாவில் நாளிடப்பட்டது:

இடைக்கால அரசாங்கத்தின் அமைச்சர்-அதிபரும் ருஷ்யக் குடியரசின் அனைத்து ஆயுதப் படைகளுக்கும் உச்சப் படைத் தலைவருமான நான் அறிவிக்கின்றேன்: தாய்நாட்டிற்கு விசுவாசம் செலுத்துவனவாய் இருந்து வரும் போர்முனைப் படையணிகளுக்கு நான் இன்று தலைமை ஏற்கிறேன்.

பெத்ரொகிராது இராணுவ மாவட்டத்தின் எல்லாத் துருப்புகளுக்கும், தாய்நாட்டுக்கும் புரட்சிக்கும் துரோகிகளானோரது வேண்டுகோளுக்குத் தவறுதல் காரணமாகவோ, தெரியாத்தனம் காரணமாகவோ செவி சாய்த்த எல்லாத் துருப்புகளுக்கும் தாமதமின்றி அவர்களது கடமை இடத்துக்குத் திரும்பி வரும்படி நான் கட்டளையிடுகின்றேன்.

இந்தக் கட்டளை எல்லா ரெஜிமெண்டுகளிலும் பட்டாளங்களிலும் ஸ்குவாட்ரன்களிலும் படித்துக் காட்டப்பட வேண்டும்.

ஒப்பம்: **இடைக்கால அரசாங்கத்தின் அமைச்சர்-அதிபர்**
**உச்சப் படைத் தலைவ**
அ.பி. கேரென்ஸ்கி

வடக்குப் போர்முனையில் தலைமை தாங்கும் ஜெனரலுக்குக் கேரென்ஸ்கியின் தந்தி:

காத்சினு நகரம் இரத்தம் சிந்தப் படாமலே விசுவாசப் படையணிகளால் பிடிக்கப்பட்டது. கிரன்ஷ்தாத்து மாலுமிப் படைப்பிரிவுகளும், செமியோனவ்ஸ்கி, இஸ்மயீலொவ்ஸ்கி ரெஜிமெண்டுகளைச் சேர்ந்த படைப்பிரிவுகளும் எதிர்ப்பு காட்டாமல் தமது ஆயுதங்களைப் போட்டுவிட்டு அரசாங்கப் படைகளுடன் சேர்ந்து கொண்டன.

குறிக்கப்பட்ட எல்லாப் படைப்பிரிவுகளையும் கூடுமான விரைவில் முன்னேறிச் செல்லும்படி நான் கட்டளையிடுகின்றேன். புரட்சி இராணுவக் கமிட்டி தனது படைகளைப் பின்வாங்கும்படிக் கட்டளையிட்டிருக்கிறது....

தென்மேற்கில் சுமார் முப்பது கிலோமீட்டர் தொலைவிலுள்ள காத்சினு நகரம் இரவில் வீழ்ச்சியுற்றது. தந்தியில் குறிக்கப்படும் இரண்டு ரெஜிமெண்டுகளின் படைப்பிரிவுகள்

—மாலுமிகள் இல்லை—தலைமையற்றுச் சுட்டுவட்டாரத்தில் திரிந்து கொண்டிருந்த போது கசாக்குகளால் சூழ்ந்து கொள்ளப்பட்டன. அவை தமது ஆயுதங்களைப் போட்டு விட்டது உண்மையே, ஆனால் அரசாங்கப் படைகளுடன் அவை சேர்ந்து கொண்டு விட்டதாய்க் கூறப்பட்டது உண்மையல்ல. இத்தருணத்தில் இந்தப் படைப்பிரிவினர் திகைப்புற்றோராகவும் வெட்கப்படுவோராகவும் திரள் திரளாய் ஸ்மோல்னியில் கூடி விளக்கம் கூற முயன்றனர். கசாக்குகள் இவ்வளவு அருகாமையில் இருப்பார்கள் என்று அவர்கள் எதிர்பார்க்கவில்லை.... கசாக்குகளுடன் அவர்கள் வாதாட முயன்று பார்த்தார்கள்....

புரட்சிப் போர்முனை நெடுகிலும் பெருங் குழப்பம் நிலவிற்று என்பது தெரிந்தது. தென் திசையில் எல்லாச் சிறு நகரங்களிலும் நகரக் காவற் படைகள் படுமோசமாய்ப் பிளவுண்டு கசப்புணர்ச்சி கொண்ட இரு கூறுகளாய்—மூன்று கூறுகளாகவுங்கூட—பிரிந்துவிட்டன: தலைமை அதிகாரிகள் வலிமை வாய்ந்தவர் வேறு யாரும் இல்லாத காரணத்தால் கேரென்ஸ்கியின் பக்கமும், பெரும்பாலான சாதாரண படையாட்கள் சோவியத்துகளின் பக்கமும் நிற்க, ஏனையோர் தெளிவின்றி தவிப்போராய் ஊசலாடினர்.

பெத்ரொகிராதின் பாதுகாப்புக்குத் தலைமை தாங்குவதற்காக புரட்சி இராணுவக் கமிட்டி அவசரப்பட்டுக் கொண்டு, முறையான சேனையைச் சேர்ந்த ஒரு காப்டனை, முன்னுக்கு வர வேண்டுமென்ற துடிப்புள்ள முரவியோவை* நியமித்தது—கோடையின் போது சாவுப் பட்டாளங்களை நிறுவியவரும், முன்பொரு தரம் ''போல்ஷிவிக்குகளுக்கு மிதமிஞ்சிய கருணை காட்டப்படுகிறது, அடியோடு ஒழித்துக் கட்டப்பட வேண்டியவர்கள் இவர்கள்'' என்று அரசாங்கத்துக்கு ஆலோசனை கூறியதாய்ச் சொல்லப்பட்டவருமான முரவியோவ்தான் இவர். இராணுவ மனப்பாங்கு கொண்ட இவர் அதிகாரத்தையும் மனத் துணிவையும் போற்றினார், உள்ளப் பூர்வமாகவே போற்றியிருக்கலாம்....

---

* முரவியோவ்—லெப்டினண்டு-கர்னலாய் இருந்தவர் இவர்.—[பதிப்பாசிரியர்.]

காலையில் நான் கீழே இறங்கி வந்ததும் என் கதவுக்குப் பக்கத்தில் புரட்சி இராணுவக் கமிட்டியின் இரு புதிய கட்டளைகள் ஒட்டப்பட்டிருக்கக் கண்டேன். எல்லாக் கடைகளும் பண்டக சாலைகளும் வழக்கம் போல் திறக்கப்பட வேண்டும், காலியாய் இருக்கும் அறைகளும் குடித்தனப் பகுதிகளும் கமிட்டியிடம் ஒப்படைக்கப்பட வேண்டும் என்று கூறின அவை....

கடந்த முப்பத்தாறு மணி நேரமாய்ப் போல்ஷிவிக்குகள் ருஷ்ய மாநிலங்களிலிருந்தும் வெளி உலகிலிருந்தும் துண்டிக்கப்பட்டிருந்தார்கள். ரயில்வேப் பணியாளர்களும் தந்தியாளர்களும் அவர்களுடைய அனுப்புகைகளைச் செலுத்தி வைக்க மறுத்தனர், அஞ்சலகத்தினர் அவர்களுடைய அஞ்சல்களை எடுத்துச் செல்லவில்லை. ஜார்ஸ்கயெ செலோவிலிருந்த அரசாங்க ஒலிபரப்பி மட்டும்தான் அரை மணிக்கு ஒரு தரம் செய்திக் கோவைகளையும் அறிக்கைகளையும் உலகின் நாற்றிசைக்கும் அனுப்பிக் கொண்டிருந்தது. ஸ்மோல்னியின் கமிசார்களும் நகர டூமாவின் கமிசார்களும் போட்டி போட்டுக் கொண்டு புவியளவில் பாதி அளவிலான தொலைவுகளுக்கு வேக ரயில் வண்டிகளில் விரைந்து கொண்டிருந்தார்கள். பிரசார வெளியீடுகளைச் சுமந்து கொண்டு இரண்டு ஆகாய விமானங்கள் போர்முனையை நோக்கிப் பறந்தன....

ஆனால் எழுச்சியின் அலைகள் எந்த மனித ஏற்பாட்டையும் விஞ்சும்படியான வேகத்தில் ருஷ்யா எங்கும் பரவிக் கொண்டிருந்தன. ஹெல்சிங்போர்ஸ் சோவியத்து ஆதரவு தெரிவித்துத் தீர்மானங்கள் நிறைவேற்றியது. கீவில் போல்ஷிவிக்குகள் ஆயுதசாலையையும் தந்தி நிலையத்தையும் கைப்பற்றினார்கள், ஆனால் அப்போது அங்கே கசாக்குகளது காங்கிரஸ் நடைபெற்றுக் கொண்டிருக்கவே, காங்கிரஸ் பிரதிநிதிகளால் வெளியே விரட்டியடிக்கப்பட்டார்கள். கஸானில் அமைக்கப்பட்ட புரட்சி இராணுவக் கமிட்டி நகரக் காவற்படையின் தலைமை அலுவலர்களையும் இடைக்கால அரசாங்கக் கமிசாரையும் கைது செய்தது. நெடுந் தொலைவில் சைபீரியாவிலுள்ள கிரஸ்னொயார்ஸ்கிலிருந்து சோவியத்துகள் நகர நிலையங்களைத் தமது கண்காணிப்பின் கீழ் கொண்டு

வந்துவிட்டதாய்ச் செய்தி வந்தது. மாஸ்கோவில் ஒரு புறத்தில் தோல் பதனிடும் தொழிலாளர்களது பெரிய வேலைநிறுத்தத்தாலும், மறுபுறத்தில் பொதுக் கதவடைப்பு செய்யப்படுமென்ற அச்சுறுத்தலாலும் நிலைமை கடுமையுற்றிருந்தது, அங்கே சோவியத்துகள் மிகப் பெருவாரியான வாக்குகளின் பேரில் பெத்ரொகிராது போல்ஷிவிக்குகளுடைய செயலுக்கு முழு ஆதரவு தெரிவித்தன.... ஏற்கெனவே அங்கே புரட்சி இராணுவக் கமிட்டி ஒன்று செயல்பட்டு வந்தது.

எங்கும் நிகழ்ச்சிகள் ஒரே மாதிரியாகவே நடைபெற்று வந்தன. சாமானியப் படையாட்களும் ஆலைத் தொழிலாளர்களும் மிகப் பெருவாரியான அளவில் சோவியத்துகளை ஆதரித்தார்கள். இராணுவ அதிகாரிகளும் யூன்கெர்களும் பொதுவாய் மத்தியதர வகுப்பினரும்—இவர்களுடன் கூட முதலாளித்துவக் காடேட்டுகளும் ''மிதவாத'' சோஷலிஸ்டுக் கட்சிகளைச் சேர்ந்தோரும்—இடைக்கால அரசாங்கத்தின் பக்கம் நின்றார்கள். இந்த நகரங்களில் எல்லாம் தாய்நாட்டின், புரட்சியின் இரட்சணியக் கமிட்டிகள் உதித்தெழுந்து உள்நாட்டு யுத்தத்துக்காக ஆயுதமேந்திப் போர்க் கோலம் பூண்டு வந்தன....

பிரம்மாண்ட ருஷ்யா கரைந்து உரு மாற்றமடைந்து கொண்டிருந்தது. இந்த நிகழ்ச்சிப் போக்கு 1905லேயே ஆரம்பித்து விட்டது; மார்ச் புரட்சி இதைத் துரிதப்படுத்திற்று. புதிய அமைப்பு உருவாகப் போகிறதென்ற நம்பிக்கையை அளித்த மார்ச் புரட்சி பழைய ஆட்சியின் செல்லரித்துப் போன அமைப்பை நீடிக்கவைத்ததற்கு மேல் ஒன்றும் செய்யாமல் முடிவுற்றது. ஆனால் இப்போது போல்ஷிவிக்குகள், ஊதிப் புகையை மறையச் செய்வது போல், ஒரே இரவில் இவ்வமைப்பைச் சிதறச் செய்துவிட்டனர். பழைய ருஷ்யா இல்லாதொழிந்தது, ஊழிக் காலத் தீயிலே மானுட சமுதாயம் உருகித் திரவமாய் ஓடிற்று. இந்தத் தத்தளிக்கும் தீக் கடலிலிருந்து இரக்கமற்ற அப்பட்டமான வர்க்கப் போராட்டமும், புதிய கிரகங்களது மெல்லக் குளிர்ந்து கெட்டியாகும் மொறுமொறுப்பான மேலோடும் உருவாகி வெளிப்பட்டன....

பெத்ரொகிராதில் பதினாறு அமைச்சகங்கள் வேலை நிறுத்தம் செய்தன. ஆகஸ்டு மாத அனைத்து

சோஷலிஸ்டு* அரசாங்கம் தோற்றுவித்த இரண்டே இரண்டு அமைச்சகங்களாகிய தொழிலாளர், பொருள் வழங்கீடு அமைச்சகங்கள் இந்த வேலைநிறுத்துக்குத் தலைமை தாங்கின.

என்றுமே மனிதர்கள் அப்படித் தனித்திருந்ததில்லை என்று சொல்லும்படி, ''கையளவான சொற்ப போல்ஷிவிக்குகள்'' குளிர் வருத்திய மங்கலான அன்றைய காலையில் தனித்திருந்ததாய்த் தோன்றினர். எல்லாப் புயல்களும் ஒன்று சேர்ந்து அவர்களது தலைக்கு மேல் மூண்டெழுந்தன.[1]** இறுதி நிலையை வந்தடைந்துவிட்ட புரட்சி இராணுவக் கமிட்டி ஓங்கி ஓர் அடி கொடுத்தது—தனது உயிரைக் காப்பாற்றிக் கொள்வதற்காக. “De l’audace, encore de l’audace, et toujours de l’audace....*** காலை ஐந்து மணியளவில் செங்காவலர்கள் நகராட்சி மன்ற அச்சகத்துக்குச் சென்று டூமாவின் அறைகூவல்-கண்டனத்தின் பல்லாயிரக் கணக்கான பிரதிகளைப் பறிமுதல் செய்து, நகராட்சி மன்ற ஏடாகிய **வெஸ்தினிக் கொரத்ஸ்கொவ சாமயுப்ரவ்லேனியாவை** (நகரத் தன்னாட்சியின் செய்தியறிக்கை) இழுத்து மூடி அதற்குத் தடை விதித்தனர். முதலாளித்துவச் செய்தியேடுகள் யாவும் அவற்றின் அச்சுப் பொறிகளிலிருந்து பிய்த்தெடுக்கப்பட்டன. பழைய **இத்ஸே-யி-க** பத்திரிகையான **கோலஸ் சல்தாத்தாவுங்கூட** இதே போல் தடுக்கப்பட்டது—ஆனால் இது **சல்தாத்ஸ்கி கோலஸ்** என்பதாய்த் தன் பெயரை மாற்றிக் கொண்டு லட்சம் பிரதிகள் அடங்கிய பதிப்பில் வெளிவந்து அடங்காத வெறுப்பும் சீற்றமும் கொண்டு சீறிற்று:

---

* மென்ஷிவிக்குகளாலும் சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களாலும் ஆனது.—[பதிப்பாசிரியர்.]

** இந்த அத்தியாயத்தில் எண்ணிட்டுக் காட்டப்படும் சுட்டுக் குறிகள் அத்தியாயம் 6இன் அனுபந்தத்தைக் குறிப்பவை.

*** ''துணிவு, மீண்டும் துணிவு, எப்போதுமே துணிவு!'' டான்டனது புகழ் பெற்ற முழக்கம். யுத்த அபாயம் குறித்தும், எதிர்ப்புரட்சிப் பிரஷ்ய-ஆஸ்திரியக் கூட்டின் படையெடுப்பிலிருந்து பிரெஞ்சுப் புரட்சியைப் பாதுகாக்க வேண்டிய அவசியம் குறித்தும், 1792 செப்டம்பர் 2ல் பிரெஞ்சு நாட்டுச் சட்ட மன்றத்தில் டான்டன் நிகழ்த்திய சொற்பொழிவில் கூறப்பட்டது.—[பதிப்பாசிரியர்.]

இரவிலே தமது துரோகச் செயலைத் தொடுத்த ஆட்கள், செய்தியேடுகளை வெளிவராமல் அடக்கிய ஆட்கள், அதிக நாட்களுக்கு நாட்டை ஏதும் அறியாத நிலையில் வைத்திருக்க முடியாது. உண்மையை நாடு அறிந்து கொள்ளவே போகிறது! திருவாளர் போல்ஷிவிக்குகளே, நாடு உங்களைத் தெரிந்து கொள்ளத்தான் போகிறது! நாம் பார்க்கவே போகிறோம்!...

நண்பகலுக்குச் சற்றே பிற்பாடு நாங்கள் நேவ்ஸ்கி சாலை வழியே சென்றோம். நகர டூமாவின் கட்டடத்துக்கு முன்னால் சாலையில் ஒரே கூட்டமாய் இருந்தது. குத்தீட்டிகளைக் கொண்ட துப்பாக்கிகளை ஏந்திக் கொண்டு செங்காவலர்களும் மாலுமிகளும் அங்குமிங்கும் நின்றிருந்தார்கள். இவர்கள் ஒவ்வொருவரையும் சுமார் நூறு ஆடவர்களும் பெண்டிரும்—எழுத்தர்களும் மாணவர்களும் கடைக்காரர்களும் அதிகாரிகளுமானோர்—சூழ்ந்து கொண்டு முட்டிகளை உயர்த்தி ஆட்டினர், இழித்தும் பழித்தும் ஏசினர், அச்சுறுத்தி இரைந்தனர். படிகளில் சாரணச் சிறுவர்களும் இராணுவ அதிகாரிகளும் நின்று சல்தாத்ஸ்கி கோலஸ் செய்தியேட்டின் பிரதிகளை வினியோகித்துக் கொண்டிருந்தார்கள். கோட்டுக் கையில் சிவப்புப் பட்டி அணிந்து, கையில் ஒரு ரிவால்வர் வைத்திருந்த தொழிலாளி ஒருவர் படிக்கட்டுக்குக் கீழே பகைக் கூட்டத்தினருக்கு மத்தியில் நின்று கொண்டு ஆத்திரத்தாலும் கலவரத்தாலும் திணறியவாறு அந்தச் செய்தியேட்டின் பிரதிகளைத் தன்னிடம் தந்துவிடும்படிக் கோரினார்.... வரலாறு கண்டதில்லை இம்மாதிரியான ஒரு நிகழ்ச்சியை, இதன்முன் எக்காலத்திலும் இப்படி நடந்திருக்குமென கற்பனை செய்ய முடியவில்லை என்றால். ஒரு புறத்தில் மிகச் சாதாரணமான ஒருசில தொழிலாளர்களும் படையாட்களும் கையில் ஆயுதங்களுடன், வெற்றி கண்ட ஓர் எழுச்சியின் பிரதிநிதிகளாய் நின்றிருந்தார்கள்—பார்க்கப் பரிதாபமான கலங்கிய நிலையில்; மறு புறத்தில் வெறி கொண்ட ஒரு பெருங் கும்பல், நண்பகல் நேரத்தில் ஐந்தாவது அவென்யூவின்*

* நியூயார்க் நகரில் செல்வந்தர்கள் வசிக்கும் பகுதியிலுள்ள ஒரு சாலை.—[பதிப்பாசிரியர்.]

நடைபாதைகளில் நிறையக் காண்கிறேமே அவ்வகையின ரைக் கொண்ட ஒரு திருக்கூட்டம், ஏளனம் புரிந்து வசை மொழிகளை வீசி, ''துரோகிகள்! பகைவன் கைக்கூலிகள்! **அப்ரீச்னிக்கி*!''** என்று கூச்சலிட்டது.

வாயிற் கதவுகளில் மாணவர்களும் இராணுவ அதிகாரி களும் காவல் புரிந்து நின்ருர்கள். இவர்களுடைய வெள்ளைக் கைப் பட்டிகளில் சிவப்பு எழுத்துகளில் ''சமுதாயப் பாது காப்புக் கமிட்டியின் காவலர்கள்'' என்று குறிக்கப்பட்டிருந் தது. ஆறு ஏழு சாரணச் சிறுவர்கள் அப்படியும் இப்படியும் வந்து சென்றனர். மாடியில் அமளியாய் இருந்தது. காப்டன் கோம்பெர்க் படிகளில் கீழே இறங்கி வந்து கொண்டிருந் தார். ''டூமாவைக் கலைக்கப் போகிருர்கள், போல்ஷிவிக்குக் கமிசார் நகர மேயரிடம் சென்றிருக்கிருர்'' என்று கூறினுர் அவர். நாங்கள் மேலே போய்ச் சேர்ந்ததும் ரியஸானவ் அவ சரமாய் வெளியே வந்தார். மக்கள் கமிசார் அவையை நகர டூமா அங்கீகரிக்க வேண்டுமென்று கோருவதற்காக அவர் இங்கே வந்திருந்தார், ஆனுல் மேயர் முடியவே முடியாது என்று தீர்மானமாய் அவருக்குப் பதிலளித்துவிட்டார்.

அலுவலகங்களில் இரைச்சல் எழுப்பிய பெருங் கூட்டம் விரைந்து கொண்டும், சப்தமிட்டுக் கொண்டும், கைகளை ஆட்டிப் பேசிக் கொண்டும் இருந்தது—அரசாங்க அதிகாரி களும் அறிவுத்துறையினரும் பத்திரிகையாளர்களும் அயல் நாட்டு நிருபர்களும் பிரெஞ்சு, பிரிட்டிஷ் தூதரக அதிகாரி களும் அடங்கிய கூட்டம் அது.... நகரப் பொறியாளர் வெற்றிக் களிப்போடு இவர்களைச் சுட்டிக் காட்டினுர். ''தற் போது டூமா மட்டுமே ஆட்சியதிகாரத்துக்கு உரியதாகும் என்பதைத் தூதரகங்கள் எல்லாம் அங்கீகரிக்கின்றன'' என்று விளக்கினுர் அவர். ''இந்தப் போல்ஷிவிக்குக் கொலைகாரர் கள், கொள்ளைக்காரர்களின் கொட்டம் இனி ஒருசில மணி களுக்கு மேல் நீடிக்காது. அனைத்து ருஷ்யாவும் எங்கள் பின்னுல் அணி திரளுகிறது....''

---

* பயங்கர இவானது (17ஆம் நூற்ருண்டில் ருஷ்யாவில் ஆட்சி புரிந்த அரசர்) மூர்க்கமான மெய்க்காப்புப் படை யினர்.—[பதிப்பாசிரியர்.]

அலெக்சாந்திரொவ்ஸ்கி மண்டபத்தில் இரட்சணியக் கமிட்டியின் மாபெரும் கூட்டம் நடைபெற்றுக் கொண்டிருந்தது. ஃபிலிப்போவ்ஸ்கி தலைமை வகித்தார். ஸ்கோபெலெவ் மீண்டும் உரைமேடையில் நின்று கொண்டு, இடியென முழங்கிய கையொலிக்கிடையே, இரட்சணியக் கமிட்டியில் புதிதாய் இணைந்து கொண்ட நிறுவனங்களை அறிவித்தார்: விவசாயிகள் சோவியத்துகளது நிர்வாகக் கமிட்டி, பழைய இத்ஸே-யி-க, மத்தியச் சேனைக் கமிட்டி, இத்ஸேன் திரஃப்ளோத், சோவியத்துகளின் காங்கிரசிலிருந்து வெளியேறிய மென்ஷிவிக்கு, சோஷலிஸ்டுப் புரட்சியாளர், போர் முனைக் குழுப் பிரதிநிதிகள், மென்ஷிவிக்குக் கட்சி, சோஷலிஸ்டுப் புரட்சியாளர் கட்சி, நரோத்னிய சோஷலிஸ்டுக் கட்சி ஆகியவற்றின் மத்தியக் கமிட்டிகள், ''எதீன்ஸ்துவொ'' கோஷ்டி, விவசாயிகள் சங்கம், கூட்டுறவுக் கழகங்கள், ஸேம்ஸ்த்வோக்கள், நகராட்சி மன்றங்கள், தபால், தந்திச் சங்கங்கள், விக்ழேல், ருஷ்யக் குடியரசு அவை, ஒன்றியங்களின் ஒன்றியம்,* வாணிகர்கள், தொழிலதிபர்களது சங்கம்....

''...சோவியத்துகளது ஆட்சியதிகாரம் ஜனநாயக ஆட்சியதிகாரமன்று, சர்வாதிகாரமாகும்—பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரமன்று, பாட்டாளி வர்க்கத்துக்கு எதிரானது. புரட்சி ஆர்வத்தை உணர்ந்தவர்கள் எல்லோரும், அல்லது உணரத் தெரிந்தவர்கள் எல்லோரும் இப்போது புரட்சியைக் காப்பாற்றுவதாற்காக ஒன்று கூடியாக வேண்டும்....

''இன்று நம் முன்னுள்ள பணி பொறுப்புணர்ச்சி இல்லாத வாய்வீச்சுக்காரர்களால் தீங்கு நேராதபடிச் செய்வது மட்டுமல்ல, எதிர்ப்புரட்சியை எதிர்த்துப் போராடுவதும் நம்முன்னுள்ள பணியாகும்.... மாநிலங்களில் ஜெனரல்கள் சிலர் நிகழ்ச்சிகளைத் தமக்கு அனுசரணையாய்ப் பயன்படுத்திக் கொண்டு, பிற நோக்கங்களுடன் பெத்ரொகிராதை நோக்கிப் படையெடுத்து வர முயலுவதாய்க் கூறும் வதந்திகள் உண்மையானால், ஜனநாயக அரசாங்கத்துக்கு நாம் உறுதியான ஓர் அடித்தளத்தை அமைத்துக் கொள்வது அவசியமென்பதற்கு மேலும் ஒரு நிரூபணமே ஆகின்றது இது.

* குறிப்புகளும் விளக்கங்களும் என்பதைப் பார்க்கவும்.

இப்படி நாம் செய்யாவிடில், இடதுசாரியிலிருந்து வரும் இன்னல்களைத் தொடர்ந்து வலதுசாரியுடனுன இன்னல்களும் எழும்....

"கோலஸ் சல்தாத்தாவை வாங்கும் குடிமக்களும் ரபோச்சயா கஸேத்தாவை விற்கும் செய்தியேட்டுச் சிறுவர்களும் தெருக்களில் கைது செய்யப்படுகையில் பெத்ரொகிராது நகரக் காவற் படையானது கருத்தின்றி சும்மாயிருக்கலாகாது....

"தீர்மானங்களுக்கான நேரம் கழிந்து சென்றுவிட்டது.... புரட்சியில் இனி நம்பிக்கை இல்லை என்போர் ஒய்வெடுத்துக் கொண்டு விலகிச் செல்லட்டும்.... ஒன்றுபட்ட ஆட்சியதிகாரத்தை நிறுவுவதற்காக நாம் புரட்சியின் கீர்த்தியினை மீட்டமைத்தாக வேண்டும்....

"புரட்சியைக் காப்பாற்றுவோம், இல்லையேல் மடிந்தொழிவோம் என்று நாம் சபதமேற்போமாக!"

மண்டபத்தில் எல்லோரும் எழுந்து நின்று, கண்களில் பொறி பறக்க கைகொட்டி முழக்கமிட்டனர். பாட்டாளி ஒருவரைக்கூட அங்கே காண முடியவில்லை....

பிறகு வைன்ஷ்டைன் பேசினர்:

"பொது மக்கள் அபிப்பிராயம் உறுதியான முறையில் இரட்சணியக் கமிட்டிக்கு ஆதரவாய் ஒன்றுதிரளும் வரையில் நாம் அமைதியாய் இருக்க வேண்டும், செயலில் இறங்காதிருக்க வேண்டும்—அதற்குப் பிற்பாடு நாம் பாதுகாப்பிலிருந்து செயலுக்குச் செல்ல வேண்டும்!"

விக்ஷேலின் பிரதிநிதி, புதிய அரசாங்கத்தை அமைத்திட தமது நிறுவனம் முன்முயற்சி எடுத்துள்ளதாகவும், தமது நிறுவனத்தின் பிரதிநிதிகள் தற்போது இந்த விவகாரம் குறித்து ஸ்மோல்னியுடன் விவாதித்துக் கொண்டிருப்பதாகவும் அறிவித்தார்.... இதைத் தொடர்ந்து காரசாரமான விவாதம் ஆரம்பமாயிற்று: புதிய அரசாங்கத்தில் போல்ஷிவிக்குகளைச் சேர்த்துக் கொள்ளலாமா? அவர்களைச் சேர்த்துக் கொள்ள வேண்டுமென்று மார்த்தவ் வாதாடினர்: எப்படியும் அவர்கள் ஒரு முக்கிய அரசியல் கட்சியாய் இருப்பவர்கள் என்ருர் அவர். இது குறித்து கடுமையான கருத்து வேறுபாடுகள் எழுந்தன. வலதுசாரி மென்ஷிவிக்குகளும் சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களும், மற்றும் நரோத்னிய சோஷ

லிஸ்டுகளும் கூட்டுறவுக் கழகங்களும் முதலாளித்துவக் கூறுகளும் கடுமையாய் எதிர்த்தன....

''ருஷ்யாவைக் காட்டிக் கொடுத்தவர்கள் அவர்கள்'' என்றார் ஒரு பேச்சாளர். ''உள்நாட்டு யுத்தத்தை ஆரம்பித்து, போர்முனையை ஜெர்மானியர்களுக்குத் திறந்துவிட்டவர்கள். போல்ஷிவிக்குகள் ஈவிரக்கமின்றி நசுக்கப்பட வேண்டியவர்கள்....''

போல்ஷிவிக்குகள், காடேட்டுகள் ஆகிய இரு கட்சியினரையும் ஒதுக்கிவிடலாம் என்ற கருத்தை ஆதரித்தார் ஸ்கோபெலெவ்.

இளம் சோஷலிஸ்டுப் புரட்சியாளர் ஒருவருடன் நாங்கள் பேசிக் கொண்டிருந்தோம். முன்பு திஸெரெத்தேலியும் ''சமரசவாதிகளும்'' ருஷ்யாவின் ஜனநாயகத்தின் மீது கூட்டு அரசாங்கத்தைப் பலவந்தமாய்த் திணித்த அந்த இரவில் ஜனநாயக மாநாட்டிலிருந்து போல்ஷிவிக்குகளுடன் சேர்ந்து வெளிநடப்பு செய்தவர் அவர்.

''நீங்கள் இங்கேயா இருக்கிறீர்கள்?'' என்று அவரைக் கேட்டேன் நான்.

அவர் கண்கள் நெருப்பை உமிழ்ந்தன. ''ஆமாம்!'' என்று கத்தினர். ''புதன் கிழமை இரவில் என் கட்சியுடன் கூட நான் காங்கிரசை விட்டு வெளியேறினேன். இருபது ஆண்டுகளாகவும் அதற்கும் மேலாகவும் என் உயிரைத் துச்சமாய் மதித்து நான் போராடியது, இப்போது இந்த இருண்ட திரளினரது கொடுங்கோன்மைக்குக் கீழ்ப்படிவதற்காக அல்ல. அவர்களுடைய வழிமுறைகள் சகிக்க முடியாதவை. ஆனால் அவர்கள் விவசாயிகளைக் கணக்கில் எடுத்துக் கொள்ளவில்லை.... விவசாயிகள் செயலில் இறங்கியதும் அவர்களால் சில நிமிடங்களுக்குக்கூட நீடிக்க முடியாது, ஒழிந்து போய் விடுவார்கள்.''

''ஆனால் விவசாயிகள்—அவர்கள் செயலில் இறங்குவார்களா? நில அரசாணை விவசாயிகளுடைய பிரச்சினையைத் தீர்த்துவிடுகிறதே, இதற்கும் மேல் விவசாயிகளுக்கு என்ன வேண்டும்?''

''ஓ, நில அரசாணை!'' என்று ஆத்திரமாய்க் கூவினர் அவர். ''அந்த நில அரசாணை எப்படிப்பட்டது தெரியுமா

உங்களுக்கு? அது எங்களுடைய அரசாணை—சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களது வேலைத்திட்டம், அப்படியே எடுத்தாளப் பட்டிருக்கிறது! என்னுடைய கட்சி வகுத்திட்ட கொள்கை அது—நேரடியாய் விவசாயிகள் தெரிவித்த விருப்பங்களை மிகவும் கவனமாய்த் தொகுத்து என் கட்சி வகுத்தளித்த கொள்கை. மிகப் பெரிய அநியாயம்....''

''அது அப்படியே உங்களுடைய கொள்கையாய் இருக் கையில் நீங்கள் ஏன் ஆட்சேபிக்கிறீர்கள்? அது விவசாயிகளு டைய விருப்பங்களாய் இருக்கையில் அவர்கள் ஏன் அதை எதிர்க்க வேண்டும்?''

''நீங்கள் விவகாரத்தைப் புரிந்து கொள்ளவில்லை! இதெல்லாம் தந்திரம் என்பதை உடனே விவசாயிகள் தெரிந்து கொண்டு விடுவார்கள்—தகாத வழியில் அதிகாரத் துக்கு வந்த இந்தக் கயவர்கள் சோஷலிஸ்டுப் புரட்சியாளர் களுடைய வேலைத்திட்டத்தைக் களவாடிக் கொண்டு விட் டதை அவர்கள் புரிந்து கொண்டு விடுவார்கள்!''

படைகளுடன் கலேடின் வடக்கு நோக்கி வருவது மெய் தானு என்று கேட்டேன் நான்.

ஆம் என்று தலையை ஆட்டி, கசப்பான ஒரு வகை மன நிறைவுடன் கைகளைத் தேய்த்துக் கொண்டார் அவர். ''ஆமாம். இந்தப் போல்ஷிவிக்குகள் என்ன காரியம் செய் திருக்கிருர்கள் என்று இப்போது தெரிகிறதல்லவா உங் களுக்கு? எங்களுக்கு எதிராய் அவர்கள் எதிர்ப்புரட்சியைத் தலைதூக்கச் செய்திருக்கிருர்கள். புரட்சி ஒழியப் போகிறது. ஆம், நாசமாய்ப் போகப் போகிறது.''

''புரட்சியைக் காப்பாற்றுவதற்காக நீங்கள் போராடு வீர்கள், இல்லையா?''

''அதைக் காப்பாற்றுவதற்காக நிச்சயம் நாங்கள் போராடத்தான் போகிருேம்—கடைசிச் சொட்டு இரத்தம் உள்ளளவும் போராடவே செய்வோம். ஆனுல் இந்தப் போல்ஷிவிக்குகளுடன் நாங்கள் எந்த விதத்திலும் ஒத்து ழைக்கப் போவதில்லை....''

''கலேடின் பெத்ரொகிராதின் மீது படையெடுக்கையில், போல்ஷிவிக்குகள் நகரைப் பாதுகாத்துப் போராடுகையில், போல்ஷிவிக்குகளுடன் நீங்களும் சேர்ந்து போராட மாட் டீர்களா?''

''ஒரு போதும் நாங்கள் போல்ஷிவிக்குகளுடன் சேர மாட்டோம். நாங்களும் நகரைப் பாதுகாத்துப் போராடு வோம்தான், ஆனல் போல்ஷிவிக்குகளை நாங்கள் ஆதரிக்க மாட்டோம். கலேடின் புரட்சியின் எதிரிதான், ஆனல் போல் ஷிவிக்குகளும் அதே அளவுக்குப் புரட்சியின் எதிரிகள்தான்.''

''யார் மேல் என்பீர்கள்—கலேடினு, போல்ஷிவிக்கு களா?''

''விவாதிப்பதற்கு ஏற்ற பிரச்சினை அல்ல இது!'' என்று அவர் பொறுமையிழந்து போய்க் கூவினர். ''நான் சொல் கிறேன், புரட்சி நாசமாகிறது. இதற்குக் காரணம் முற்றி லும் போல்ஷிவிக்குகளேதான். ஆனல் இதைக் கேளுங்கள்— இதெல்லாம் பற்றி நாம் பேச வேண்டியதில்லை. கேரென்ஸ்கி வந்து கொண்டிருக்கிருர்.... நாளைக்கு மறு நாள் நாங்கள் தாக்குதலில் இறங்கப் போகிறேம்....ஏற்கெனவே ஸ்மோல்னி எங்களுடன் பேச தனது பிரதிநிதிகளை அனுப்பியிருக்கிறது, புதிய அரசாங்கம் அமைத்திட வரும்படி எங்களை அழைத் திருக்கிறது. இப்போது அவர்கள் எங்களுடைய பிடியில் இருக்கிருர்கள்—அறவே கையாலாகாதவர்களாகி விட் டனர்.... நாங்கள் அவர்களுடன் ஒத்துழைக்கப் போவ தில்லை....''

வெளியே துப்பாக்கிக் குண்டு சப்தம் கேட்டது. நாங்கள் சன்னல்களிடம் ஓடினேம். கூட்டத்தின் ஏச்சும் பேச்சும் தாங்க மாட்டாமற் போய்ச் செங்காவலர் ஒருவர் அதன் மீது சுட்டு விட்டார். ஓர் இளம் பெண்ணின் கரத்தில் காயம் பட்டு விட்டது. அவள் தூக்கிச் செல்லப்பட்டு ஒரு வண்டியில் ஏற்றப்பட்டதை நாங்கள் பார்க்க முடிந்தது. அவளைச் சூழ்ந் திருந்த பரபரப்பான கூட்டத்தினரின் கூப்பாடு மேலே எங்கள் காதுக்கு உயர்ந்தெழுந்து வந்து கேட்டது. சன்னல் வழியே நாங்கள் பார்த்துக் கொண்டிருந்த போது மிகாய் லவ்ஸ்கி முனையிலிருந்து கவச மோட்டார் ஒன்று திடுதிப் பெனத் தோன்றி இயந்திரத் துப்பாக்கிகளை அப்படியும் இப் படியுமாய்த் திருப்பிக் கொண்டு ஓடி வந்தது. பெத்ரோ கிராது கூட்டங்கள் வழக்கமாய்ச் செய்வது போலவே இந்தக் கூட்டமும் உடனே சிதறி ஓடத் தொடங்கிற்று. பல ரும் கீழே விழுந்து வீதியில் அசையாமல் படுத்திருந்தார்கள்,

சாக்கடைகளில் பதுங்கிக் கொண்டார்கள், தந்தி மரங்களுக்குப் பின்னுல் குவிந்து கிடந்தார்கள். படபடத்துக் கொண்டு அந்த மோட்டார் டூமா கட்டடத்தின் படிகளுக்கு முன்னுல் வந்து நின்றது, அதன் கூண்டு மூடிக்குள்ளிலிருந்து ஓர் ஆள் தலையை நீட்டி சல்தாத்ஸ்கி கோலஸ் பிரதிகளைத் தந்து விடுமாறு கோரினுர். சாரணச் சிறுவர்கள் ஏளனக் கூச்சலிட்டு விட்டுக் கட்டடத்துக்குள் ஓடினுர்கள். சற்று நேரத்துக்குப் பிற்பாடு அந்தக் கவச மோட்டார் தீர்மானமின்றித் தயக்கத் துடன் திரும்பிற்று, பிறகு நேவ்ஸ்கி சாலையிலே ஓடிச் சென்றது. அதே போது நூற்றுக் கணக்கான ஆடவரும் பெண்டிரும் ஆங்காங்கே எழுந்து நின்று ஆடைகளிலிருந்து தூசியைத் தட்ட முற்பட்டனர்....

கட்டடத்துக்குள் கை நிறைய சல்தாத்ஸ்கி கோலஸ் பிரதிகளை வாரிக் கொண்டு அவற்றை எங்கே ஒளித்து வைக்கலாமென்று அவசரமாய்ப் பலரும் அடித்து மோதிக் கொண்டு அங்குமிங்கும் ஓடினுர்கள்....

பத்திரிகையாளர் ஒருவர் ஒரு காகிதத்தை ஆட்டிக் காட்டிக் கொண்டு அறைக்குள் ஓடி வந்தார்.

''கிரஸ்னேவின் பிரகடனம் ஒன்று இதோ வெளிவந்திருக்கிறது!'' என்று அவர் கத்தினுர். எல்லாரும் அவரைச் சூழ்ந்து கொண்டார்கள். ''இதை அச்சிடச் சொல்லுங்கள்—சீக்கிரமாய் அச்சிட்டு இரணுவக் கொட்டடிகளுக்கு எடுத்துச் சென்றுக வேண்டும்!''

உச்சப் படைத் தலைவரது கட்டளையின் படி நான் பெத்ரொகிராதுத் தலைமையின் கீழ் குவிந்திருக்கும் படைகளுக்குத் தளபதியாய் நியமிக்கப்பட்டிருக்கிறேன்.

குடிமக்களே, படையாட்களே, தோனையும் குபானையும் உஸ்ஸுரீயையும் ஆமூரையும் எனிசேயையும் சேர்ந்த வீரம் செறிந்த கசாக்குகளே, நீங்கள் ஏற்ற சபதத்துக்கு விசுவாசமுள்ளவர்களாய் நடந்து கொண்ட உங்கள் எல்லோருக்கும், உங்களது கசாக்குச் சபதத்தை மீறிவொண்ணுததாய்க் காப்பாற்ற சூளுரைத்திருக்கும் உங்கள் எல்லோருக்கும் நான் வேண்டுகோள் விடுக்கிறேன்—பெத்ரொகிராதை அராஜகத்திலிருந்து, பஞ்சத்திலிருந்து, கொடுங்கோன்மையிலிருந்து

காப்பாற்றும்படி, வில்ஹேல்மின் பொற் காசால் விலைக்கு வாங்கப்பட்ட சொற்பத் தொகையினரான அறிவிழந்த மூடர்கள் ருஷ்யாவை ஆழ்த்த எத்தனிக்கும் அழியா அவக் கேட்டிலிருந்து ருஷ்யாவைக் காப்பாற்றும்படி அறைகூவு கின்றேன்.

மாபெரும் மார்ச் மாத நாட்களில் நீங்கள் எதற்குப் பற்றுறுதிச் சபதம் ஏற்றீர்களோ, அந்த இடைக்கால அர சாங்கம் வீழ்த்தப்பட்டுவிடவில்லை. அது தனது அமர்வுகளை நடத்திய கட்டடத்திலிருந்து வன்முறையின் மூலம் வெளி யேற்றப்பட்டுதான் இருக்கிறது. ஆயினும் இந்த அரசாங்கம் போர்முனையின் சேனைகளது, தமது கடமையை விசுவாசத் தோடு நிறைவேற்றும் இந்தச் சேனைகளது ஆதரவையும், கசாக்குகள் ஒன்றியத்தின் அவையினது ஆதரவையும் பெற்ற தாகும். கசாக்குகள் ஒன்றியத்தின் அவையானது தனது தலைமையின் கீழ் கசாக்குகள் அனைவரையும் ஒன்றுபடச் செய்திருக்கிறது; இதன் அணிகளில் நிலவும் பற்றுார்வத்தின் காரணமாய் வலிமை மிக்கதாய் அமைந்து, ருஷ்ய மக்களது சித்தத்துக்கு ஏற்ப செயல்படும் இது, தனது முன்னோர்கள் 1612 ஆம் ஆண்டின் பேரிடரான காலத்தில், சுவீடுகளாலும் போலிஷ்காரர்களாலும் லித்துவேனியர்களாலும் அபாயத் துக்கு உள்ளாக்கப்பட்ட மாஸ்கோவை விடுவித்த அந்தக் காலத்தில் தாயகத்துக்குப் பணி ஆற்றியது போல், இப் போதும் பணி ஆற்றுவோமெனச் சபதம் ஏற்றிருக்கிறது. [உங்களுடைய அரசாங்கம் இன்னும் நிலைத்திருக்கிறது....]*

செயல்பட்டு வரும் சேனை இந்தக் கொடுங் குற்றமிழைக் கும் கொடியோர் மீது அடங்கா வெறுப்பும் இகழ்ச்சியும் கொண்டுள்ளது. இவர்களுடைய படுநாசச் செயல்களும், கொள்ளை வெறியாட்டமும், இவர்கள் புரியும் கொடுங் குற் றங்களும், ருஷ்யா குறித்து இவர்களுக்குள்ள ஜெர்மானிய மனோபாவமும்—ருஷ்யா அடிபட்டு நலிவுற்றிருப்பினும் இன்னும் சரணடைந்துவிடவில்லை—இவர்களை அனைத்து மக் களுக்கும் அன்னியமாக்கியிருக்கின்றன.

* அடைப்புக் குறிகளுக்குள் இருக்கும் சொற்கள் செய்தி யேடுகளிலுள்ள செய்தியுரைகளில் காணப்படவில்லை.— [பதிப்பாசிரியர்.]

குடிமக்களே, பெத்ரொகிராது நகரக் காவற் படையின் படையாட்களே, வீரம் செறிந்த கசாக்குகளே, உங்களுடைய பிரதிநிதிகளை என்னிடம் அனுப்புங்கள், தாய்நாட்டின் துரோகிகள் யார், துரோகமிழைக்காதோர் யார் என்று நான் தெரிந்து கொள்ளும் பொருட்டு, குற்றமற்றோரின் இரத்தம் பெருக்கெடுப்பதைத் தடுக்கும் பொருட்டு, உங்கள் பிரதிநிதிகளை என்னிடம் அனுப்புங்கள்.

ஏறத்தாழ அதே கணத்தில், செங்காவலர்கள் கட்டடத்தைச் சூழ்ந்து கொண்டுவிட்டார்களெனத் தொகுதியிலிருந்து தொகுதிக்கு அதிவேகமாய் செய்தி பரவிற்று. கையில் செம்பட்டை அணிந்த இராணுவ அதிகாரி ஒருவர் மேயர் எங்கே இருக்கிறார் என்று கேட்டுக் கொண்டு உள்ளே விரைந்து வந்தார். ஒரு சில நிமிடங்களில் அவர் வெளியே போய்ச் சேர்ந்தார். உடனே கிழவர் ஷிரேய்தர் மாறி மாறி முகம் சிவந்தும் வெளுத்தும் செல்ல, அவரது அலுவலகத்திலிருந்து வெளியே வந்தார்.

''டூமாவின் விசேஷக் கூட்டம்!'' என்று கத்தினார் அவர். ''உடனே கூப்பிடுங்கள் எல்லோரையும்!''

பெரிய கூட்ட மண்டபத்தில் நிகழ்ச்சிகள் உடனே நிறுத்தப்பட்டன. ''டூமா உறுப்பினர்கள் எல்லோரும் விசேஷக் கூட்டத்துக்கு அழைக்கப்படுகிறார்கள்!''

''என்ன ஆயிற்று?''

''தெரியவில்லையே—நம்மைக் கைது செய்யப் போகிறார்கள்—டூமா கலைக்கப்படப் போகிறது—வாயிற் படியில் உறுப்பினர்கள் கைது செய்யப்படுகிறார்கள்—'' என்றெல்லாம் பரபரப்பான பேச்சுகள் அடிபட்டன.

நிக்கலாயெவ்ஸ்கி மண்டபத்தில் நிற்க இடமில்லை. நகர மேயர் அறிவித்தார்: வாயிற் கதவுகளில் எல்லாம் துருப்புகளை நிறுத்தி வைத்திருக்கிறார்கள்; வெளியே போகவோ உள்ளே வரவோ முடியாமல் தடுத்திருக்கிறார்கள். நகர டூமா கலைக்கப்படும், உறுப்பினர்கள் கைது செய்யப்படுவார்களெனக் கமிசார் ஒருவர் அச்சுறுத்திச் சென்றார் என்றார். உடனே மடை திறந்துவிட்டாற் போல் ஆவேசமான சொற்பொழிவுகள் உறுப்பினர்களிடமிருந்து மட்டுமின்றி, பார்வையாளர்

களது சுற்றுமாடங்களிலிருந்துங்கூட பெருக்கெடுத்தன. நகர அரசாங்கம் சுதந்திரத் தேர்தல் மூலம் தேர்ந்தெடுக்கப்பட்டது, எந்த அதிகாரத்தாலும் அதைக் கலைத்திட முடியாது; மேயரின், உறுப்பினர்கள் அனைவரின் ஆளுடைமைச் சுதந்திரம் மீறப்பட முடியாதது; கொடுங் கோன்மையரும் சதிகாரர்களும் ஜெர்மன் கையாட்களுமானோரை ஒருபோதும் அங்கீகரிக்கலாகாது; நம்மைக் கலைக்கப் போவதாய் அச்சுறுத்துகிறார்கள், முயற்சி செய்து பார்க்கட்டும் இவர்கள்—நமது சடலங்களின் மீது நடந்து வந்துதான் இவர்களால் இந்த மன்றத்தைக் கைப்பற்ற முடியும், பண்டைக் காலத்திய ரோமானிய செனட்டர்களைப் போல் மாண்புடன் இங்கே நாம் இந்தக் காட்டுமிராண்டிகளின் வருகைக்காகக் காத்திருக்கிறோம்....

அனைத்து ருஷ்யாவிலுமுள்ள நகர டூமாக்களுக்கும் ஸேம்ஸ்த்வோக்களுக்கும் உடனே தந்தி மூலம் தகவல் தெரிவிப்பதென்று ஒரு தீர்மானம். நகர மேயரோ, டூமாத் தலைவரோ புரட்சி இராணுவக் கமிட்டியின் பிரதிநிதிகளுடனோ, மக்கள் கமிசார் அவை எனப்படுவதுடனோ எவ்விதத்திலும் எந்த உறவும் கொள்ள முடியாதென்று மற்றொரு தீர்மானம். பெத்ரொகிராது நகர மக்கள் தம்மால் தேர்ந்தெடுக்கப்பட்ட நகர அரசாங்கத்தைக் காப்பாற்ற முன்வர வேண்டுமென்று அவர்களுக்குத் திரும்பவும் அறைகூவல் விடுப்பதென்று தீர்மானம். டூமாவானது நிரந்தரமாய் அமர்வு நடத்துவதென்று தீர்மானம்....

இதற்கிடையில் ஓர் உறுப்பினர் ஸ்மோல்னியுடன் தொலைபேசியில் பேசிவிட்டுத் திரும்பி வந்து தகவலைத் தெரிவித்தார். டூமாவைச் சூழ்ந்து கொள்ளும்படிக் கட்டளை எதுவும் இடவில்லை, துருப்புகள் திருப்பியழைக்கப்படுமென்று புரட்சி இராணுவக் கமிட்டி கூறியதாய் அவர் அறிவித்தார்....

நாங்கள் படிகளில் கீழே இறங்கிய போது ரியஸானவ் மிகவும் கிளர்ச்சியுற்றவராய் முன்கதவு வழியே வேகமாய் உள்ளே வந்தார்.

''டூமாவைக் கலைக்கவா போகிறீர்கள்?'' என்று கேட்டேன் நான்.

''ஐயையோ! அதெல்லாம் இல்லை!'' என்றார் அவர். ''சரியாய்ப் புரிந்து கொள்ளாததால் நேர்ந்த தவறு இது. காலையில் நான் மேயரிடம் சொன்னேன், டூமாவை நாங்கள் ஒன்றும் செய்யப் போவதில்லை என்று....''

வெளியே நேவ்ஸ்கி சாலையில் அடர்ந்து வந்த அந்தி இருட்டில் நீளமான இரட்டை வரிசையில் சைக்கிள்கள் வந்தன. சவாரி செய்து வந்தவர்களது தோளில் துப்பாக்கி தொங்கிற்று. அவர்கள் சைக்கிள்களிலிருந்து கீழே இறங்கியதும் கூட்டத்தினர் அவர்களைச் சூழ்ந்து கொண்டு கேள்விகளைப் பொழிந்தனர்.

''நீங்கள் எல்லாரும் யார்? எங்கிருந்து வருகிறீர்கள்?'' என்று கேட்டார், வாயில் சுருட்டு வைத்திருந்த ஊதிப் பருத்த கிழவர் ஒருவர்.

''பன்னிரண்டாவது சேனையைச் சேர்ந்தவர்கள், போர் முனையிலிருந்து வருகிறோம். இந்தச் சனியன் பிடித்த முதலாளித்துவ வர்க்கத்துக்கு எதிராக சோவியத்துகளை ஆதரிப்பதற்காக வந்திருக்கிறோம்!''

''ஆ! போல்ஷிவிக்குப் போலீஸ் படையினர்! போல்ஷிவிக்குக் கசாக்குகள்!'' என்று ஆத்திரக் கூப்பாடுகள் எழுந்தன.

தோல் கோட்டு அணிந்த சிறிய இராணுவ அதிகாரி ஒருவர் படிகளில் இறங்கி ஓடி வந்தார். ''நகரக் காவற் படையில் திசைமாற்றம் ஏற்பட்டிருக்கிறது!'' என்று அவர் என் காதுக்குள் கூறினார். ''போல்ஷிவிக்குகளுக்கு முடிவுக் காலம் பிறக்கிறது. நிலைமை எப்படி மாறிச் செல்கிறதென்று பார்க்க விரும்புகிறீர்களா? வாருங்கள் என்னுடன்!'' ஓட்டமும் நடையுமாய் அவர் மிகாய்லொவ்ஸ்கியை நோக்கி விரைந்தார். நாங்களும் அவருடன் சென்றோம்.

''எந்தப் படைப்பிரிவு அது?''

''புரொனிவிக்கி....'' அப்படியானால் நிலைமை மெய்யாகவே இக்கட்டானதுதான். புரொனிவிக்கி என்பவை கவச மோட்டார் படைகள். நிலைமையை நிர்ணயிக்க வல்ல கேந்திரமான படைகள் அவை; புரொனிவிக்கி யாரிடமோ, அவர்களிடமே நகரமும். ''இரட்சணியக் கமிட்டியையும் நகர டூமாவையும் சேர்ந்த கமிசார்கள் இப்படையினரிடம் சென்று

பேசியிருக்கிருர்கள். முடிவெடுப்பதற்காக கூட்டம் நடைபெற்றுக் கொண்டிருக்கிறது....''

''எதைப் பற்றி முடிவெடுக்கப் போகிருர்கள்? அவர்கள் எந்தப் பக்கத்தில் போராடுவதென்பது பற்றியா?''

''இல்லே, இல்லே! பிரச்சினையை அந்த விதத்தில் எழுப்பலாகாது. ஒரு நாளும் அவர்கள் போல்ஷிவிக்குகளை எதிர்த்துப் போராட மாட்டார்கள். நடுநிலைமை வகிப்பதென்று அவர்கள் முடிவெடுத்துவிட்டால் போதும்—அதன் பிறகு யூன்கெர்களும் கசாக்குகளும்—''

மிகப் பெரிய மிகாய்லொவ்ஸ்கி சவாரி அரங்கின் இருண்ட வாயிலின் கதவு விரியத் திறந்திருந்தது. அங்கே காவல் புரிந்து நின்ற இருவர் எங்களைத் தடுத்து நிறுத்த முயன்ருர்கள், ஆனுல் அவர்களது கோபக் கூச்சல்களைக் காதில் வாங்கிக் கொள்ளாமலே நாங்கள் தள்ளிக் கொண்டு அவசரமாய் உள்ளே சென்ருேம். அந்த மாபெரும் அரங்கின் கூரைக்கு அருகே உயரத்தில் ஒரேயொரு வில்-விளக்கு மட்டும் மங்கலாய் எரிந்து கொண்டிருந்தது. அரங்கின் நெடிதுயர்ந்த சதுரத் தூண்களும் சன்னல் வரிசைகளும் இருட்டில் மறைந்திருந்தன. சுற்றிலும் ஓரத்தில் கவசமோட்டார்களது பேய் உருவங்கள் நிற்பது மங்கலாய்த் தெரிந்தது. அரங்கின் மையத்தில் விளக்குக்கு அடியில் தனியே ஒரு மோட்டார் நின்றிருந்தது. அதைச் சுற்றிலும் மங்கிய பழுப்பு நிற உடுப்புகளுடன் சுமார் இரண்டாயிரம் படையாட்கள் கூடியிருந்தார்கள். அந்த மாபெரும் அரங்கின் விசாலமான பரப்பில் இந்தக் கூட்டம் மூழ்கிவிடும்படி மிகச் சிறிதாகத் தோன்றியது. இராணுவ அதிகாரிகளும் படையாட்கள் கமிட்டிகளது தலைவர்களும் பேச்சாளர்களுமான பத்து, பன்னிரண்டு பேர் மோட்டாரின் மீது காணப்பட்டனர். மையக் கூண்டின் உச்சியில் நின்று ஒருவர் பேசிக் கொண்டிருத்தார். அவர்தான் ஹன்ழோனவ், கோடையில் நடைபெற்ற கவச மோட்டார் படைப்பிரிவினரது அனைத்து ருஷ்யக் காங்கிரசின் தலைவராய் இருந்தவர். தோல் கோட்டு அணிந்து லெப்டினண்டின் தோள் பட்டைகளுடன் அவர், கண்ணுக்கு இனிமையாய்க் கொடி போல் துவளும் உருவமாய் நின்று, நடுநிலைமையின் அவசியத்தை வற்புறுத்தித் திறம்பட சொற்பொழிவாற்றினுர்.

''ருஷ்யர்கள் தமது ருஷ்யச் சோதரர்களைக் கொல்வது படுபாதகக் கொடுஞ் செயலாகும்'' என்றார் அவர். ''ஜாரை எதிர்த்துத் தோளொடு தோள் இணைத்து நின்ற படையாட்களிடையே, வரலாற்றிலே இடம் பெறத் தக்க போர்களில் அந்நியப் பகைவன் மீது வெற்றி வாகை சூடிய படையாட்களிடையே உள்நாட்டுப் போர் நடைபெறலாகாது! அரசியல் கட்சிகளிடையே நடைபெறும் இந்தத் தகராறுகளில், படையாட்களாகிய நமக்கு என்ன சம்பந்தம்? இடைக்கால அரசாங்கம் ஒரு ஜனநாயக அரசாங்கமாய் இருந்ததென்று நான் உங்களிடம் சொல்லவில்லை. முதலாளித்துவ வர்க்கத்துடன் நாம் எந்தக் கூட்டினையும் விரும்பவில்லை—இல்லவே இல்லை. ஆனால் நமக்கு ஒன்றுபட்ட ஜனநாயகத்தின் அரசாங்கம் அமைக்கப்பட வேண்டும், இல்லையேல் ருஷ்யாவின் கதி அதோகதிதான்! இம்மாதிரியான ஓர் அரசாங்கம் இருக்குமாயின் உள்நாட்டுப் போருக்கு அவசியம் இருக்காது, சோதரனைச் சோதரன் கொல்ல வேண்டியிருக்காது!''

இது நியாயமானதாகவே பட்டது—அந்த மாபெரும் அரங்கினுள் கைதட்டல்களும் ஆர்வ வாழ்த்துக் குரல்களும் ஒலித்து எதிரொலித்தன.

படையாள் ஒருவர் மேலே ஏறினார், அவர் முகம் வெளுத்துப் போய்க் கடுகடுப்பாய் இருந்தது. ''தோழர்களே!'' என்று கத்தினார். ''ருமேனியப் போர்முனையிலிருந்து வந்திருக்கிறேன் நான். சமாதானம் கிடைத்தாக வேண்டும்! அவசரமாய் உங்கள் எல்லோருக்கும் இதைச் சொல்வதற்காக இங்கு வந்தேன். உடனடியான சமாதானம்! யார் எங்களுக்குச் சமாதானம் கிடைக்கச் செய்கிறார்களோ—அவர்கள் போல்ஷிவிக்குகளாயினும் சரி, இந்தப் புதிய அரசாங்கமாயினும் சரி—நாங்கள் அவர்களைப் பின்பற்றுவோம். சமாதானம்! போர்முனையிலே இனி எங்களால் போர் புரிய முடியாது. ஜெர்மானியர்களாயினும், ருஷ்யர்களாயினும் யாருடனும் எங்களால் போர் புரிய முடியாது—'' இதைச் சொல்லிவிட்டு அவர் கீழே குதித்தார். பொங்கிக் குமுறிய அந்தத் திரளிடமிருந்து குழப்படியான, வேதனை வாய்ந்த இரைச்சல் எழுந்தது. மென்ஷிவிக்கு அபரோனெத்ஸாகிய அடுத்த பேச்சாளர், நேசநாடுகளுக்கு வெற்றி கிடைக்கும் வரை யுத்தம் நடை

பெற்றே ஆக வேண்டுமெனக் கூற முயன்ற போது இந்த இரைச்சல் ஆத்திரக் கூச்சலாய் மாறிற்று.

''கேரென்ஸ்கியைப் போல் பேசுகிறீரே!'' என்று கூச்ச லிட்டது கரகரப்பான ஒரு குரல்.

டூமா பிரதிநிதி ஒருவர் நடுநிலை வகிக்கும்படி ஆலோசனை கூறிப் பேசினார். தம்மில் ஒருவரல்ல இவர் என்ற உணர் வோடு கூட்டத்தினர் அமைதியின்றி வாய்க்குள் முணுமுணுத்த வாறு அவரது பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்தனர். புரிந்து கொள்வதற்காகவும் தீர்மானத்துக்கு வருவதற்காக வும் திரளான ஆட்கள் இப்படி அரும் பாடு பட்டு முயற்சி செய்யக் கண்டதில்லை நான். அவர்கள் ஆடவில்லை, அசைய வில்லை, கண்ணும் கருத்துமாய்ப் பேச்சாளரை உருக்கமாய் உற்றுப் பார்த்துக் கொண்டு நின்றார்கள், சிந்தனையின் கடுமையால் அவர்களது புருவங்கள் சுருங்கி நெருங்கியிருக்க நெற்றியிலே வியர்வை துளித்திருந்தது—ஆசானுபாகு போன்ற வாட்டசாட்டமான ஆட்கள், சிறு பிள்ளைகளின் சூதறியாத தெளிந்த கண்களும் காவியப் போர்களது வீரர் களின் முகங்களும் கொண்டவர்கள்....

இப்போது ஒரு போல்ஷிவிக்கு பேசிக் கொண்டிருந்தார் —அந்தப் படையாட்களில் அவரும் ஒருவர், ஆவேசமாய் அடங்காத வெறுப்பு தொனிக்கப் பேசினார். ஏனையோரை விட அதிகமாய் அவரை அவர்களுக்குப் பிடித்துவிடவில்லை. அவர் பேசியது அவர்களுடைய மன நிலைக்கு ஒத்துவருவதாய் இல்லை. அந்தக் கணத்துக்கு அவர்கள் தமது சாதாரண சிந்தனைகளின் அன்றாட ஒட்டத்திலிருந்து மேலே தூக்கிச் செல்லப்பட்டார்கள்; ருஷ்யா குறித்து, சோஷலிசம் குறித்து, உலகம் குறித்து சிந்திக்கும்படி செய்யப்பட்டார்கள், புரட்சி வாழப் போவதும் மடியப் போவதும் தம்மையே பொறுத்த தாகும் என்பது போல....

பேச்சாளரைத் தொடர்ந்து பேச்சாளர் பேசிச் சென்றார், முறுக்கேறிய நிசப்தத்திலோ, ஆமோதிப்பு முழக்கம் அல்லது கோபக் கூச்சலுக்கிடையிலோ வாதாடிச் சென்றார்: செயல் படுவதா, சும்மாயிருப்பதா? ஹன்ஜோனவ் திரும்பவும் வந் தார், நயம்படச் சொல்லி இணங்க வைக்கும் விதத்தில் பேசினார். எவ்வளவுதான் அவர் சமாதானத்தைப் பற்றிப்

பேசினாலும் இராணுவ அதிகாரி அல்லவா அவர்? அபரோனெத்ஸ் அல்லவா? பிறகு வசீலி ஒஸ்திரொவிலிருந்து வந்த ஒரு தொழிலாளி பேசினார். ''தொழிலாளித் தோழரே, எங்களுக்கு நீர் சமாதானத்தைக் கிடைக்கச் செய்வீரா?'' என்று கேட்டு அவரை அவர்கள் வரவேற்றார்கள். எங்களுக்கு அருகே சில ஆட்கள் இருந்தார்கள். இவர்களில் பலரும் இராணுவ அதிகாரிகள். திட்டமிட்டு அமர்த்தப்பட்ட கைதட்டிக் கும்பலாய் இவர்கள் நடுநிலைமை ஆதரவுப் பேச்சாளர்களைப் போற்றிக் கையொலி முழக்கம் எழுப்பிக் கொண்டிருந்தார்கள். ''ஹன்ஜோனவ்! ஹன்ஜோனவ்!'' என்று இவர்கள் கூவிக் கொண்டு நின்றார்கள். போல்ஷிவிக்குகள் பேச வந்ததும் விசிலடித்து ஏளனம் செய்தார்கள்.

கவச மோட்டாரின் மீதிருந்த கமிட்டி உறுப்பினர்களும் இராணுவ அதிகாரிகளும் திடுதிப்பென்று எதைப் பற்றியோ மிகுந்த பரபரப்போடு கைகளை வீசி ஆட்டி சர்ச்சை செய்ய ஆரம்பித்தார்கள். என்ன நேர்ந்ததென்று தெரிந்து கொள்வதற்காகக் கூட்டத்திலிருந்து பலரும் கத்தினார்கள். அந்தப் பெருந்திரள் ஆடியசைந்து இரைந்தது. இராணுவ அதிகாரிகளில் ஒருவரால் தடுக்கப்பட்டுப் பின்னால் இழுக்கப்பட்ட ஒரு படையாள், அவர் பிடியிலிருந்து உதறிக் கொண்டு முன்னால் வந்து கையை உயர்த்திக் காட்டினார்.

''தோழர்களே!'' என்று அவர் கத்தினார். ''தோழர் குரிலேன்கொ இங்கே வந்திருக்கிறார், பேச விரும்புகிறார்.'' உடனே வாழ்த்தொலி முழக்கமும் விசில் ஒலிகளும் **''பிரோசீம்! பிரோசீம்!** தலோய்! அவர் பேசட்டும்! அவர் பேசட்டும்! ஒழிக அவர்!'' என்ற கூச்சல்களும் மூண்டெழுந்தன. இவற்றுக்கிடையே இராணுவ விவகார மக்கள் கமிசார் முன்னாலிருந்தும் பின்னாலிருந்தும் பலர் கை கொடுத்து உதவ கவச மோட்டாரின் மீது ஏறினார். கீழே இருந்தவர்கள் உயர்த்தி விட, மேலே இருந்தவர்கள் இழுத்துத் தூக்க அவர் மேலே வந்து கணப் பொழுதுக்கு நின்றார். பிறகு ரேடியேட்டர் கவசத்துக்கு மேல் முன்னால் நடந்து வந்து இடுப்பில் கைகளை வைத்துக் கொண்டு புன்னகை புரிந்தவாறு சுற்றிலும் நோக்கினார். குட்டைக் காலில் கட்டையான உருவமாய் வெறுந்

தலையுடன் இராணுவ உடுப்பில் தோள் பட்டைச் சின்னமின்றி நின்றார் அவர்.

எனக்கு அருகே இருந்த கைதட்டிக் கும்பல் தொண்டை கிழியக் கூச்சலிட்டுக் கொண்டிருந்தது: ''ஹன்ஜோனவ்! ஹன்ஜோனவ்தான் பேச வேண்டும்! ஒழிக இந்த ஆள்! மூடு வாயை! ஒழிக! துரோகி ஒழிக!'' கூடியிருந்த கூட்டம் அனைத்தும் கொந்தளித்துப் பொங்கி இரைந்தது. பிறகு அது நகர ஆரம்பித்தது, கிடுகிடுத்து எங்களை நோக்கிப் பாறைகள் பெயர்ந்து சரிந்து விழுவது போல், பேருருவும் கறுத்த புருவமும் கொண்ட ஆட்கள் இடித்து மோதிக் கொண்டு வந்தார்கள்.

''எங்கள் கூட்டத்தைக் கலைத்திட முயலுவது யார்? இங்கே சீட்டியடித்துக் கலாட்ட செய்வது யார்?'' என்று கத்திக் கொண்டு எங்கள் அருகே வந்தார்கள். கைதட்டிக் கும்பல் உடனே சிதறிப் பறந்தோடிவிட்டது—திரும்பவும் தலைகாட்டவே இல்லை....

''தோழர்கள் படையாட்களே!'' என்று குரிலேன்கோ பேச ஆரம்பித்தார். களைப்பால் அவர் குரல் கம்மிப் போய்க் கரகரத்து. ''சிறப்பான முறையிலே என்னால் பேச முடியவில்லை, என்னை மன்னியுங்கள், தொடர்ந்து நான்கு இரவுகளாய்த் தூங்க நேரமில்லை, கண் விழித்திருக்கிறேன்....

''நான் ஒரு படையாள் என்பதை உங்களுக்குச் சொல்ல வேண்டியதில்லை. நான் சமாதானத்தை விரும்புகிறவன் என்பதையும் சொல்ல வேண்டியதில்லை. நான் உங்களுக்குச் சொல்ல வேண்டியது என்னவென்றால், தொழிலாளர்கள், படையாட்களது புரட்சியில் வெற்றி கண்டிருக்கும் போல்ஷிவிக்குக் கட்சியானது, உங்களுடைய உதவியினால், இரத்த வெறி கொண்ட முதலாளித்துவ வர்க்கத்தின் ஆட்சியதிகாரத்தை என்றென்றுக்குமாய் வீழ்த்தியிருக்கும் வீரமிக்க ஏனைய எல்லாத் தோழர்களுடைய உதவியினால் இந்த வெற்றியைக் கண்டிருக்கும் போல்ஷிவிக்குக் கட்சியானது, எல்லா நாடுகளின் மக்களுக்கும் சமாதானம் கிடைப்பதற்காக முன்மொழிவதாய் வாக்குறுதி அளித்தது. இந்த வாக்குறுதி ஏற்கெனவே—இன்றே—நிறைவேற்றப்பட்டுள்ளது!'' காது செவிடுபடும் படியான கையொலி முழக்கம்.

''நடுநிலை வகிக்கும்படி உங்களிடம் சொல்கிறார்கள். யூன்கெர்களும் சாவுப் பட்டாளங்களும் ஒருபோதும் நடுநிலை வகிப்பதில்லை, இவர்கள் வீதிகளிலே நம்மைச் சுட்டு வீழ்த்துகிறார்கள், பெத்ரொகிராதுக்குத் திருப்பிக் கொண்டு வர எத்தனிக்கிறார்கள்—கேரென்ஸ்கியை அல்லது இந்தக் கும்பலைச் சேர்ந்த வேறு யாராவது ஓர் ஆளை. இந்த நேரத்தில் நீங்கள் நடுநிலை வகிக்க வேண்டும் என்கிறார்கள். கலேடின் தோனிலிருந்து படையுடன் வந்து கொண்டிருக்கிறார். கேரென்ஸ்கி போர்முனையிலிருந்து வந்து கொண்டிருக்கிறார். கர்னீலவ் அவரது ஆகஸ்டு முயற்சியைத் திரும்பவும் நடத்துவதற்காக தெக்கீன்த்ஸியைத் திரட்டிக் கொண்டிருக்கிறார். இப்போது உள்நாட்டு யுத்தத்தைத் தடுத்து நிறுத்தும்படி உங்களுக்கு அறைகூவும் இந்த மென்ஷிவிக்குகளும் சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களும்—உள்நாட்டு யுத்தத்தின் மூலமல்லாது வேறு எந்த வழியில் ஆட்சியதிகாரத்தைத் தமது கையில் இருத்திக் கொண்டு வந்தார்கள்? இவர்களது உள்நாட்டு யுத்தம்தானே கடந்த ஜூலை முதலாய் நீடித்து வந்திருக்கிறது. இந்த யுத்தத்தில் இவர்கள் எப்போதுமே—இப்போது செய்கிறார்களே அதே போல—முதலாளித்துவ வர்க்கத்தின் பக்கம்தானே நின்றார்கள்.

''நீங்கள் ஏற்கெனவே தீர்மானத்துக்கு வந்துவிட்டீர்கள் என்றால், உங்களுக்கு நான் விளங்கச் சொல்லி நம்பிக்கை உண்டாக்குவது எப்படி? பிரச்சினை தெட்டத் தெளிவானது. ஒரு புறத்தில் இருப்பவர்கள் கேரென்ஸ்கி, கலேடின், கர்னீலவ், மென்ஷிவிக்குகள், சோஷலிஸ்டுப் புரட்சியாளர்கள், காடேட்டுகள், டூமாக்கள், இராணுவ அதிகாரிகள்.... தமது நோக்கங்கள் சிறந்தவை என்பதாய் இவர்கள் சொல்லிக் கொள்கிறார்கள். மறு புறத்தில் இருப்பவர்கள் தொழிலாளர்களும் படையாட்களும் மாலுமிகளும் மிகவும் ஏழ்மைப்பட்ட விவசாயிகளும். அரசாங்கம் உங்கள் கையிலே இருக்கிறது. நீங்கள்தான் எசமானர்கள். மாபெரும் ருஷ்யா உங்களுக்கே உரியது. இதை நீங்கள் திருப்பித் தர வேண்டுமென்று விரும்புகிறீர்கள்?''

அவர் பேசிய போது திடச் சித்தத்தின் துணை கொண்டு பெரு முயற்சி செய்து விழுந்து விடாமல் நின்றார் என்பது

தெளிவாகவே தெரிந்தது. தொடர்ந்து அவர் பேசிச் சென்ற போது அவரது சொற்களின் பின்னிருந்த மனமார்ந்த நேர்மை உணர்ச்சியானது களைப்பால் தளர்ந்த அவரது குரலில் வெடித்து வெளிப்பட்டது. பேசி முடித்ததும் அவர் நிற்க முடியாமல் தள்ளாடினார், சாய்ந்து விழப் போனார். நூறு கைகள் அவரைத் தாங்கிப் பிடித்துக் கீழே இறக்கித் தரையில் விட்டன. அவரை வாழ்த்தி அலையலையாய் எழுந்த ஒலி அந்த அரங்கின் மங்கலான விசாலப் பரப்பெங்கும் எதிரொலித்தது.

ஹன்ஷோனவ் மீண்டும் பேச முயற்சி செய்தார். ஆனால் ''வாக்கெடுக்கலாம்! வாக்கெடுக்கலாம்! வாக்கெடுக்கலாம்!'' என்று எல்லோரும் கத்தினர். முடிவில் அவர் இதற்குப் பணிந்து தமது தீர்மானத்தைப் படித்துக் காட்டினார்: புரொனிவிக்கி தமது பிரதிநிதியைப் புரட்சி இராணுவக் கமிட்டியிலிருந்து வெளியே வந்துவிடும்படி செய்து, தற்போதைய உள்நாட்டு யுத்தத்தில் தமது நடுநிலையை அறிவிப்பதென்பதே அவருடைய தீர்மானம். இதை ஆதரிப்போர் வலப் பக்கத்துக்கும், எதிர்ப்போர் இடப் பக்கத்துக்கும் செல்ல வேண்டுமென அறிவிக்கப்பட்டது. எதையோ எதிர்பார்த்துத் தயங்கியபடி கணப் பொழுது நின்றபின் கூட்டத்தினர் ஒருவரோடு ஒருவர் இடித்து மோதிக் கொண்டு மேலும் மேலும் வேகமாய் இடப் பக்கத்துக்கு விரைந்தனர், நூற்றுக் கணக்கிலான பெரும் திரள்களில் பெரும் பெரும் படையாட்கள் அழுக்கு படிந்த அந்தத் தரையின் குறுக்கே மங்கலான வெளிச்சத்தில் அவசரமாய் இடம் பெயர்ந்து இடப் பக்கத்தை அடைந்தனர்.... எங்களுக்கு அருகே சுமார் ஐம்பது பேர் தனித்து விடப்பட்டனர், இவர்கள் பிடிவாதமாகத் தீர்மானத்தை ஆதரித்தவர்கள். கிளர்ந்தெழுந்த வெற்றிக் கூச்சலில் அரங்கின் உயர் கூரை அதிர்ந்த அந்த நேரத்தில் இவர்கள் வெடுக்கெனத் திரும்பி வேகமாய் நடந்தார்கள், கட்டடத்திலிருந்து வெளியேறினார்கள் — சிலர் புரட்சியிலிருந்தும் வெளியேறினார்கள்....

இந்தப் போராட்டம் நகரிலும் மாவட்டத்திலும் போர்முனை பூராவிலும் அனைத்து ருஷ்யாவிலும் ஒவ்வோர் இராணுவக் கொட்டடியிலும் இதே போல் நடைபெறும்

காட்சியைக் கற்பனை செய்து பாருங்கள். தூக்கம் இல்லாத குரி லேன்கொக்கள் படைப்பிரிவுகளை உன்னிப்பாய்க் கவனித்து வருவதையும், ஓரிடத்திலிருந்து இன்னொன்றுக்கு விரைந்து ஓடி வாதாடுவதையும், அபாயங்களைச் சுட்டிக் காட்டுவதை யும், உடன்பாடு காணுவதையும் கற்பனை செய்து பாருங் கள்! பிறகு ஒவ்வொரு தொழிற் சங்கத்தின் கிளைகளிலும் மற்றும் ஆலைகளிலும் கிராமங்களிலும் எங்கெங்கோ நெடுந் தொலைவிலுள்ள ருஷ்யக் கடற்படைகளின் போர்க் கப்பல்களிலும் இதே போல நடைபெறுவதையும் கற்பனை செய்து பாருங்கள். விரிந்து பரந்த அந்நாடு எங்கணும் நூறு யிரக் கணக்கானோர் பேச்சாளர்களை உற்றுப் பார்த்துக் கொண்டிருப்பதையும், தொழிலாளர்களும் படையாட்களும் மாலுமிகளும் புரிந்து கொள்வதற்காகவும் தீர்மானம் செய் வதற்காகவும் அப்படி அரும் பாடு பட்டு முயலுவதையும், கடுமையாய்ச் சிந்திப்பதையும்—இறுதியில் அப்படி ஒருமன தாய்த் தீர்மானத்துக்கு வருவதையும் நினைத்துப் பாருங்கள். அவ்வாறேதான் நடந்தேறியது ருஷ்யப் புரட்சி....

அங்கே ஸ்மோல்னியில் புதிய மக்கள் கமிசார் அவை சும்மாயிருக்கவில்லை. முதலாவது ஆணை ஏற்கெனவே அச் சிடப்பட்டு வந்தது, ஆயிரக் கணக்கில் நகரத் தெருக்களில் அன்று இரவு வினியோகமாவதற்கும், தென் திசையிலும் கிழக்கிலும் சென்ற ஒவ்வொரு ரயில் வண்டியிலும் கட்டுக் கட்டாய் வெளியிடங்களுக்கு அனுப்பப்படுவதற்கும் தயா ராகி வந்தது:

தொழிலாளர்கள், படையாட்கள் பிரதிநிதிகளது சோவியத்துகளின் அனைத்து ருஷ்யக் காங்கிரசினால், விவசாயி கள் பிரதிநிதிகளது பங்குடன், தேர்ந்தெடுக்கப் பெற்ற ருஷ்யக் குடியரசு அரசாங்கத்தின் பெயரில் மக்கள் கமிசார் அவை ஆணையிடுகிறது:

1. அரசியல் நிர்ணயச் சபைத் தேர்தல்கள், அவற்றுக்குக் குறிக்கப்பட்ட நாளாகிய நவம்பர் 12ல் நடைபெற வேண் டும்.

2. எல்லாத் தேர்தல் ஆணைக் குழுக்களும், வட்டாரத் தன்னாட்சி உறுப்புகளும், தொழிலாளர்கள், படையாட்கள்,

விவசாயிகள் பிரதிநிதிகளது சோவியத்துகளும், போர்முனை யிலுள்ள படையாட்கள் நிறுவனங்களும் குறிக்கப்பட்ட நாளன்று சுதந்திரமான, முறையான தேர்தல்கள் நடை பெறும்படி உறுதி செய்வதற்கு எல்லா முயற்சிகளையும் மேற் கொள்ள வேண்டும்.

ருஷ்யக் குடியரசு அரசாங்கத்தின் பெயரில்,

**மக்கள் கமிசார் அவையின் தலைவர்,**
விளதீமிர் உலியானவ்-லெனின்.

நகர டூமாவின் கட்டடத்தில் யாவும் முழு மூச்சுடன் மும் முரமாக நடைபெற்றுக் கொண்டிருந்தன. கூட்ட மண்டபத் துள் நாங்கள் நுழைந்த போது குடியரசு அவையின் உறுப் பினர் ஒருவர் பேசிக் கொண்டிருந்தார். குடியரசு அவை யானது தான் கலைக்கப்பட்டு விட்டதாகக் கருதவில்லை, கூடு வதற்குப் புதிய இடம் கிடைக்கப் பெறும் வரையில் தனது வேலைகளைத் தொடர்ந்து நடத்திச் செல்ல இயலாத நிலையில் இருப்பதாக மட்டுமே கருதுகிறது என்று அவர் கூறினார். இதற்கிடையில் குடியரசு அவையின் மூதாளர் குழு அப்படியே முழு மொத்தமாய் இரட்சணியக் கமிட்டியில் சேர்ந்து கொள்ளத் தீர்மானித்திருப்பதாய் அறிவித்தார் அவர்.... ருஷ்யக் குடியரசு அவையைப் பற்றி வரலாற்றில் காணக் கூடியவற்றில் இதுவே கடைசி விவரமாகும் என்பதை இடைக் குறிப்பாய் இங்கு நான் எடுத்துரைக்கலாம்....

பிறகு வழக்கமான வரிசையில் அமைச்சகங்கள், **விக்** **ழேல்**, தபால், தந்தி ஊழியர் தொழிற்சங்கம் முதலானவற் றின் பிரதிநிதிகள் ஒருவர்பின் ஒருவராய் வந்தார்கள். தகாத முறையில் அதிகாரத்துக்கு வந்துவிட்ட போல்ஷிவிக்குகளுக்கு வேலை செய்வதில்லை என்ற தமது வைராக்கியத்தை நூறுவது தடவையாக இவர்கள் எல்லோரும் வலியுறுத்தினர்கள். குளிர்கால அரண்மனையின் பாதுகாப்பில் பங்கு கொண்ட **யூன்கெர்** ஒருவர் தாமும் தம் தோழர்களும் வெளிப்படுத்திய வீரதீரத்தையும், செங்காவலர்களது இழிசெயல்களையும் பற்றி இல்லாததும் பொல்லாததுமாய்க் கதைத்துச் சொன் ஞர் — கூடியிருந்தோர் யாவற்றையும் பக்தி சிரத்தையோடு உண்மையே என்று ஏற்றுக் கொண்டார்கள். சோஷலிஸ்டுப்

புரட்சியாளர் செய்தியேடான நரோதில் வெளிவந்திருந்த செய்தியுரை ஒன்றை ஒருவர் பலக்கப் படித்துக் காட்டினார்; ஐம்பது கோடி ரூபிள் பெறுமானத்துக்குக் குளிர்கால அரண் மனையில் சேதம் ஏற்பட்டதென்று கூறி, மிகவும் விவரமாகக் கொள்ளையையும் நாசத்தையும் இந்தச் செய்தியுரை வர்ணித்தது.

தொலைபேசியிலிருந்து அவ்வப்போது ஆட்கள் வந்து செய்திகளைத் தெரிவித்துச் சென்றார்கள். நான்கு சோஷலிஸ்டு அமைச்சர்கள் சிறையிலிருந்து விடுதலை செய்யப்பட்டார்கள். குரிலேன்கொ பெத்ரொபாவ்லொவ்ஸ்கயா கோட்டைக்குச் சென்று அட்மிரல் வெர்தெரேவ்ஸ்கியிடம் மன்றாடினார்; கடல் துறை அமைச்சகத்தைக் கவனிப்பார் யாருமில்லை, ருஷ்யா வுக்காக வேண்டி மக்கள் கமிசார் அவையினது அதிகாரத் தின் கீழ் அவர் இந்த அமைச்சகத்துக்குப் பொறுப் பேற்றுக் கொள்ள வேண்டுமெனக் கேட்டுக் கொண்டார்; வயது முதிர்ந்த அந்தக் கடற்படையாளர் ஒத்துக் கொண்டு விட் டார்.... காத்சினாவிலிருந்து கேரென்ஸ்கி வட திசையில் முன்னேறி வர, போல்ஷிவிக்கு ஊர்க் காவற் படைகள் பின் வாங்கி அவரிடமிருந்து விலகி ஓடிக் கொண்டிருந்தன. உணவுப் பொருள் வழங்கல் துறை சம்பந்தமாய் நகர டூமாக் களது அதிகாரங்களை விரிவுபடுத்தி ஸ்மோல்னி புதிய ஆணை ஒன்றைப் பிறப்பித்தது.

கடைசியாகக் கூறப்பட்ட இந்த ஆணவச் செயல் ஆத் திரத்தை வெடித்தெழச் செய்தது. இந்த லெனின் அடாத முறையில் அதிகாரத்துக்கு வந்தவர், கொடுங்கோலர்; இவரு டைய கமிசார்கள் மாநகராட்சி மோட்டார் வண்டிப் பேட் டையைப் பிடித்துக்கொண்டுவிட்டனர், மாநகராட்சிக் கிடங்கு களில் புகுந்தனர், பொருள் வழங்கல் கமிட்டிகளின் செயல் களிலும் உணவுப் பொருள் வினியோகத்திலும் தலையிட்டு வந்தார்கள்—இந்த லெனின் சுதந்திரமான, சுயேச்சையான, தன்னாட்சி உரிமை கொண்ட நகர அரசாங்கத்தின் அதிகார வரம்புகளை வரையறுக்க முற்படுவதாவது! என்ன துணிச்சல்! பொருள் வழங்கல் கமிட்டிகளின் வேலைகளில் போல்ஷி விக்குகள் தலையிடத் துணிந்தால், நகருக்கு உணவுப் பொருள் வராதபடி தடுத்துவிட வேண்டுமென்று ஓர் உறுப்பினர்

முட்டியை உயர்த்தி ஆட்டி முன்மொழிந்தார்.... வழங்கல் தனிக் கமிட்டியின் பிரதிநிதியான இன்னொருவர் உணவு நிலைமை மிகவும் மோசமாய் இருக்கிறதென்று கூறினார், உணவு பொருள் சரக்கு ரயில் வண்டிகளைத் துரிதப்படுத்தச் சொல்லி கமிசார்கள் அனுப்பி வைக்கப்பட வேண்டுமெனக் கோரினார்.

டியேடனேன்கோ மிகவும் தடபுடலாய் அறிவித்தார், நகரக் காவற் படையில் ஊசலாட்டம் ஏற்பட்டுவிட்டது என்று. சிமியோனவ்ஸ்கி ரெஜிமெண்டு சோஷலிஸ்டுப் புரட்சியாளர் கட்சியின் கட்டளைக்குக் கீழ்ப்படிவதென்று ஏற்கெனவே தீர்மானம் செய்துவிட்டது; நேவாவில் நிற்கும் டார்ப்பீடோ படகுகளின் மாலுமிகள் நிலைகுலைந்து விட்டனர். தொடர்ந்து பிரசாரம் நடத்திச் செல்வதற்காக உடனே ஏழு உறுப்பினர்கள் நியமிக்கப்பட்டார்கள்....

பிறகு வயது முதிர்ந்த மேயர் உரைமேடையிலே வந்து நின்றார்: ''தோழர்களே, குடிமக்களே! பெத்ரோபாவ்லொவ்ஸ்க்யா கோட்டையில் அடைக்கப்பட்டிருக்கும் கைதிகள் அபாயத்துக்கு உள்ளாக்கப்பட்டிருக்கிறார்கள் என்று சற்று முன்புதான் நான் தெரிந்து கொண்டேன். பாவ்லவ்ஸ்க் பள்ளியைச் சேர்ந்த பதினன்கு யூன்கெர்கள் அம்மணமாக்கப்பட்டு போல்ஷிவிக்குக் காவலாட்களால் சித்திரவதை செய்யப்பட்டிருக்கிறார்கள். இவர்களில் ஒருவருக்குச் சித்தம் கலங்கிவிட்டது. அமைச்சர்களைக் கொடுமைப்படுத்திக் கொலை புரியப் போவதாய் அச்சுறுத்தியிருக்கிறார்கள்!'' உடனே ஆவேசமும் ஆத்திரமும் புயலென மூண்டன. சாம்பல் நிற ஆடைகளில் கட்டை குட்டையான ஓர் அன்னை பேசுவதற்காக எழுந்து வந்து, கடுமையான கணீர்க் குரல் எழுப்பியதும் இந்த ஆவேசமும் ஆத்திரமும் மேலும் கடுமையாகின. பேச முற்பட்டவர் வேரா ஸ்லூத்ஸ்கயா—முதுபெரும் புரட்சியாளர், டூமாவின் போல்ஷிவிக் உறுப்பினர்.

''இது பச்சைப் புளுகு, தூண்டிவிடுவதற்கான சதிச் செயல்!''—தம்மீது பொழியப்பட்ட வசைகளைக் கேட்டுச் சிறிதும் அசங்காமல் பேசினார் அவர். ''தொழிலாளர்கள், விவசாயிகளது அரசாங்கம் மரண தண்டனையை ஒழித்துக் கட்டியுள்ளது, இந்த அரசாங்கம் இம்மாதிரியான காரியங்

கள் நடைபெற ஒருபோதும் அனுமதிக்காது. இங்கே கூறப் பட்ட கதை குறித்து உடனே விசாரணை நடத்த வேண்டு மென்று நாங்கள் கோருகிறோம். இதில் உண்மை ஏதேனும் இருந்தால் அரசாங்கம் சக்தி வாய்ந்த நடவடிக்கைகளை எடுத்துக் கொள்ளும்!''

எல்லா கட்சிகளின் உறுப்பினர்களையும் கொண்ட விசாரணைக் குழு உடனே நியமிக்கப்பட்டது, விசாரணை நடத்து வதற்காக மேயருடன் கூட இக்குழு பெத்ரொபாவ் லொவ்ஸ்கயா கோட்டைக்கு அனுப்பப்பட்டது. நாங்கள் இவர்களைப் பின்தொடர்ந்து வெளியே சென்ற போது நகர டூமா, கேரென்ஸ்கியைச் சந்தித்துப் பேசி, தலைநகரினுள் அவர் நுழையும் போது இரத்தக் களரியைத் தவிர்க்க முயலு வதற்காக மற்றொரு குழுவினை நியமிக்க முற்பட்டது....

கோட்டை வாயிலில் காவலர்களைக் கடந்து நாங்கள் உள்ளே நழுவிய போது நள்ளிரவு. அரிதாய் அங்கொன்றும் இங்கொன்றுமாய் எரிந்த மின்சார விளக்குகளின் மங்கலான வெளிச்சத்தில் நாங்கள் முன்னே சென்றோம். மாதா கோயி லின் ஓரமாய் நடந்தோம். இங்கு பொன்னிறத்தில் அமைந்த மெல்லியக் கோபுரக் கூம்புக்கும் பண்ணிசைக்கும் மணிக் கூண்டுக்கும் அடியில் ஜார்களது கல்லறைகள் இருக்கின்றன. இந்த மணிக் கூண்டின் மணி இன்னமும் தொடர்ந்து நாள் தோறும் நண்பகலில் **போழெ ஜாரியா ஹரானி*** கீதத் தைத்தான் இசைத்து வந்தது. சுற்றிலும் ஆளரவமற்று வெறிச்சென்று இருந்தது. பெரும்பாலான சன்னல்களில் விளக் கொளிகூட இல்லை. இருட்டில் தடுமாறிக் கொண்டு வந்த தடித்த உருவம் எப்போதாவது எங்களை எதிர்பட்டது. எங் களுடைய கேள்விகளுக்கு வழக்கமான **''யா நெ ஸ்னையு**— எனக்குத் தெரியாது'' என்ற பதிலே கிடைத்தது.

இடது புறத்தில் துருபேத்ஸ்கோய்க் கொத்தளத்தின் தணிவான இருண்ட உருவரை தொலைவில் தெரிந்தது—

---

* ''கடவுள் காத்தருள்வாராக ஜாரை.''

இந்த விவரம் சரியல்ல, பெத்ரொபாவ்லொவ்ஸ்கயா கோட்டையின் மணி **''கோள் ஸ்லாவென்...''** (''வாழ்க நீ...'') கீதமே இசைத்து வந்தது.—[பதிப்பாசிரியர்.]

Коммесарь
Главнаго Упавленія домовъ заключенія
„6" Ноября 1917 г.
№ 213
Петроградь Смольный
Институтъ; комн. № 56.-

ПРОПУСКЪ

Представителю Американскихъ Соціалистическихъ газетъ ДЖОНУ РИДУ, во всѣ мѣста заключенія гг. Петрограда и Кронштата, для общаго ознакомленія положенія заключенныхъ и широкаго общественнаго освѣдомленія въ цѣляхъ прекращенія газетной травли противъ демократіи.-



Комиссарь
Секретарь

எல்லா சிறைச்சாலேகளுக்கும் போய் வருவதற்காக
ஜான் ரீடுக்குத் தரப்பட்ட அனுமதிச் சீட்டு

உயிருள்ளோரது கல்லறை அது. ஜார் காலத்தில் விடுதலேயின் வீரத் தியாகிகள் எத்தனேயோ பேர் அதனுள் தமது உயிரையோ, சித்த சுவாதீனத்தையோ இழந்தார்கள். பிறகு இடைக்கால அரசாங்கம் மார்ச் மாத நாட்களில் ஜாரின் அமைச்சர்களே அதனுள் அடைத்தது. இப்போது போல்ஷிவிக்குகள் இடைக்கால அரசாங்கத்தின் அமைச்சர்களே அதனுள் அடைத்து வைத்தார்கள்.

நேச பாவம் கொண்ட மாலுமி ஒருவர் தங்கசாலேக்கு அருகே ஒரு சிறு கட்டடத்தில் அமைந்த கோட்டைத் தளவாயின் அலுவலகத்துக்கு எங்களே அழைத்துச் சென்ருர். புகை நிறைந்திருந்த சூடான ஓர் அறையினுள் செங்காவலர்களும் மாலுமிகளும் படையாட்களுமாய் ஆறு பேர் அமர்ந்திருந்தனர், சமவாரில் நீர் தளபுளத்து ஆவி வெளிவந்து கொண்டிருந்தது. உளமார்ந்த முறையில் இவர்கள் எங்களே வரவேற்றனர், எங்களுக்குத் தேநீர் தந்து உபசரித்தனர். தளவாய் உள்ளே இல்லே, நகர டூமாவிலிருந்து வந்த “சபத்தாழ்னிக்கி” (நாச வேலே புரிவோர்) குழு ஒன்றை அவர் அழைத்துச் சென்றிருந்தார். இந்த டூமாக் குழுவினர் இங்கிருந்த யூன்கெர்கள் எல்லோரும் கொலே புரியப்பட்டு வருவதாய்ச் சாதித்தார்களாம். வேடிக்கைதான் என்பது போல்

கிளுகிளுத்துக் கொண்டு இதை எங்களிடம் சொன்னார்கள். அறையின் ஒரு மூலையில் குட்டையான வழுக்கைத் தலை ஆள் ஒருவர், கூத்தடித்து நலமிழந்தவரின் தோற்றம் கொண்டவர், நீள் கோட்டும் விலை உயர்ந்த மென்முடி மேல் கோட்டும் அணிந்தவர், தப்பியோட வழியில்லாமல் அகப்பட்டுக் கொண்ட எலியைப் போல் விழித்துக் கொண்டு மீசையைக் கடித்தவாறு உட்கார்ந்திருந்தார். சற்று முன்புதான் அவரைக் கைது செய்து இங்கு கொண்டு வந்திருந்தார்கள். அலட்சியமாய் அவர் பக்கம் திரும்பிப் பார்த்துவிட்டு, அமைச்சராகவே என்னவாகவோ இருந்தவர் என்று எங்களிடம் சொன்னார், அறையில் இருந்தவர்களில் ஒருவர்.... அந்தக் குட்டை மனிதர் அதைக் காதில் வாங்கியதாகத் தெரியவில்லை, பீதியுற்று வெலவெலத்துப் போயிருந்தார் என்பது தெரிந்தது. அறையில் இருந்தவர்கள் அவர் பால் எவ்விதத்திலும் குரோதம் காட்டவில்லை என்றாலும் அவர் மிரண்டு போயிருந்தார்.

நான் அவரிடம் சென்று பிரெஞ்சு மொழியில் பேசினேன். விறைப்பாய்க் குனிந்து நிமிர்ந்தவாறு ''கோமகன் தல்ஸ்தோய்'' என்று பதிலளித்தார். ''என்னை ஏன் கைது செய்திருக்கிறார்கள் என்று புரியவில்லை. திரோயித்ஸ்கி பாலத்தின் வழியே நான் வீட்டுக்குத் திரும்பி சென்று கொண்டிருந்தேன், இந்த ஆட்களில்—இவர்களில்—இருவர் என்னைத் தடுத்து நிறுத்தினார்கள். இடைக்கால அரசாங்கத்தின் கமிசார்களில் ஒருவராய், இராணுவத் தலைமை அலுவலகத்தில் செயலாற்றி வந்தேன், ஆனால் எவ்விதத்திலும் அரசாங்கத்தின் உறுப்பினராய் இருக்கவில்லை....''

''இவரைப் போகச் சொல்லிவிடலாம், தீங்கில்லாத ஆள்....'' என்றார் ஒரு மாலுமி.

''கூடாது'' என்றார், கைதியை இங்கு அழைத்து வந்திருந்த படையாள். ''தளவாயைக் கேட்காமல் போகச் சொல்லக் கூடாது.''

''தளவாயைக் கேட்க வேண்டுமா?'' என்று அந்த மாலுமி ஏளனம் செய்தார். ''எதற்காக நாம் புரட்சி நடத்தினோமாம்? இராணுவ அதிகாரிகளுக்குத் தொடர்ந்து அடிபணிவதற்காகவா?''

பாவ்லவ்ஸ்கி ரெஜிமெண்டைச் சேர்ந்த **பிராப்பொர்ஷிக்**

(சீனியர் லெப்டினெண்டு) ஒருவர் எழுச்சி எப்படி ஆரம்ப மாயிற்று என்று எங்களுக்கு விவரித்தார். ''6ஆம் நாள் இரவில் எங்கள் ரெஜிமெண்டு இராணுவத் தலைமை அலுவலகத்தில் பணி புரிந்தது. என் தோழர்களில் சிலரும் நானும் காவல் புரிந்து நின்றோம். இவான் பாவ்லவிச்சும் இன்னொருவரும்—அவர் பெயர் நினைவுக்கு வரவில்லை—தலைமை அலுவலர் கூட்டம் நடைபெற்ற அறையில் சன்னல் திரைச்சீலைகளுக்குப் பின்னால் ஒளிந்து நின்று அங்கே பேசப்பட்டவற்றைக் கேட்டார்கள், பலவும் தெரியலாயின. உதாரணமாய், காத்சினு யூன்கெர்களை இரவுக்குள் பெத்ரொகிராதுக்குக் கொண்டு வருவதற்குக் கட்டளையிடப் பட்டிருந்ததென்றும், கசாக்குகளுக்குக் காலையில் புறப்படுவதற்குத் தயாராகும்படி கட்டளை அனுப்பப்பட்டிருந்ததென்றும் அவர்கள் தெரிந்து கொண்டனர்.... நகரின் பிரதான நிலைகள் பொழுது விடிவதற்குள் பிடிக்கப்படுவதற்குத் திட்டமிடப் பட்டிருந்தது. பிறகு மூடுபாலங்களை உயர்த்தி வைக்க வேண்டுமென்று பேசப்பட்டது. ஸ்மோல்னியைச் சுற்றி வளைத்துக் கொள்வது குறித்து அவர்கள் பேச முற்பட்டதும் இவான் பாவ்லவிச்சால் சகித்துக் கொண்டு நிற்க முடியவில்லை. அந்த நிமிடத்தில் அறையினுள் பலரும் வந்து சென்று கொண்டிருந்தார்கள். இவான் பாவ்லவிச் மேற்கொண்டு முடியுமானவற்றைத் தெரிந்து கொள்வதற்காகத் தமது தோழரை அங்கேயே விட்டுவிட்டுச் சந்தடியோடு சந்தடியாய்த் திரைக்குப் பின்னாலிருந்து நழுவி வெளியே காவலாளர்களது அறைக்கு வந்து சேர்ந்தார்.

''ஏதோ நடை பெறுகிறதென்று ஏற்கெனவே நான் சந்தேகப்பட ஆரம்பித்திருந்தேன். வரிசையாய்க் கார் நிறைய இராணுவ அதிகாரிகள் வந்து சேர்ந்து கொண்டிருந்தார்கள், எல்லா அமைச்சர்களும் வந்திருந்தார்கள். இவான் பாவ்லவிச் தாம் கேட்டதை என்னிடம் சொன்னார். அப்போது காலை இரண்டரை மணி. ரெஜிமெண்டுக் கமிட்டியின் செயலாளர் எங்களுடன்தான் இருந்தார். ஆகவே நாங்கள் அவரிடம் யாவற்றையும் சொல்லி என்ன செய்யலாம் என்று கேட்டோம்.

'' 'வருகிறவர்கள், போகிறவர்கள் எல்லாரையும் கைது

செய்யுங்கள்!' என்றார் அவர். எனவே நாங்கள் கைது செய்ய ஆரம்பித்தோம். ஒரு மணி நேரத்தில் நாங்கள் இராணுவ அதிகாரிகள் சிலரையும் இரண்டு அமைச்சர்களையும் பிடித்துக் கொண்டுவிட்டோம். இவர்களை நேரே ஸ்மோல்னிக்கு அனுப்பி வைத்தோம். ஆனால் புரட்சி இராணுவக் கமிட்டி இன்னும் செயலுக்குத் தயாராய் இல்லை, அவர்களுக்கு என்ன செய்வதென்று புரியவில்லை. விரைவிலேயே அங்கிருந்து எங்களுக்குக் கட்டளை வந்து சேர்ந்தது, எல்லோரையும் விட்டு விடும்படியும் மேற்கொண்டு யாரையும் கைது செய்ய வேண்டாமென்றும் சொல்லிவிட்டார்கள். உடனே நாங்கள் முழு தூரமும் ஓடிச் சென்று ஸ்மோல்னிக்குப் போய்ச் சேர்ந்தோம். ஒரு மணி நேரம் நாங்கள் பேசியிருப்போம் என்று நினைக்கிறேன், பிறகுதான் அவர்கள் போர் துவங்கிவிட்டதென்பதைப் புரிந்து கொண்டார்கள். நாங்கள் தலைமை அலுவலகத்துக்குத் திரும்பிய போது மணி ஐந்தாகிவிட்டது. அதற்குள் பெரும்பாலோர் போய்ச் சேர்ந்துவிட்டார்கள். கிடைத்த சிலரை நாங்கள் கைது செய்தோம், நகரக் காவற் படை முழு மூச்சுடன் செயல்பட முற்பட்டது....''

வசீலி ஓஸ்திரொவிலிருந்து செங்காவலர் ஒருவர் மாபெரும் எழுச்சி நாளன்று தமது வட்டாரத்தில் நடைபெற்றதை மிகவும் விவரமாய்க் கூறினார். ''அங்கே எங்களிடம் இயந்திரத் துப்பாக்கி ஒன்றுகூட இல்லை'' என்று சொல்லிச் சிரித்தார் அவர். ''ஸ்மோல்னியிலிருந்தும் எங்களுக்கு இயந்திரத் துப்பாக்கி கிடைக்கவில்லை. வட்டார டூமாவின் உப்ராவா (மையக் குழு) உறுப்பினரான தோழர் ஸால்கிந்துக்கு அப்போதுதான் திடுமென நினைவு வந்தது, உப்ராவாவில் கூட்ட அறையில் ஓர் இயந்திரத் துப்பாக்கி கிடந்ததை நினைத்துக் கொண்டார். ஜெர்மானியர்களிடமிருந்து பிடிக்கப்பட்டது அது. ஆகவே அவரும் நானும் இன்னொரு தோழரும் அங்கே சென்றோம். மென்ஷிவிக்குகளும் சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களும் அங்கே கூட்டம் நடத்திக் கொண்டிருந்தார்கள். கதவைத் திறந்து கொண்டு நாங்கள் நேரே உள்ளே நடந்தோம். மேசையைச் சுற்றிலும் அவர்கள் அமர்ந்திருந்தார்கள்—பன்னிரண்டு அல்லது பதினைந்து பேர் இருக்கும், நாங்கள் மூன்றே மூன்று பேர். எங்களைப் பார்த்ததும்

பேச்சை நிறுத்திக் கொண்டு எங்களை விழித்துப் பார்த்தார்கள். நாங்கள் அறையின் குறுக்கே நடந்து இயந்திரத் துப்பாக்கியை பிரித்தெடுத்தோம். தோழர் ஸால்கிந்து ஒரு பாகத்தைத் தூக்கினர், நான் இன்னென்றைத் தூக்கினேன். தூக்கித் தோளில் வைத்துக் கொண்டு வெளியே நடந்தோம் —ஒருவராவது வாயைத் திறந்து ஒரு வார்த்தை சொல்ல வேண்டுமே!''

''குளிர்கால அரண்மனை எப்படி பிடிக்கப்பட்டது, தெரியுமா உங்களுக்கு?'' என்று கேட்டார் மூன்ருவது ஒருவர்— அவர் ஒரு மாலுமி. ''சுமார் பன்னிரண்டு மணி இருக்கும், நேவா ஆற்றுப் பக்கத்து வாயிலில் யூன்கெர்கள் ஒருவர் கூட இல்லை என்பது எங்களுக்குத் தெரிய வந்தது. உடனே நாங்கள் கதவுகளை உடைத்துக் கொண்டு வெவ்வேறு படிக்கட்டுகள் வழியாகவும் ஒவ்வொருவராகவோ, சிறு சிறு தொகுதியாகவோ மெல்ல ஏறிச் சென்ருேம். படிக்கட்டின் உச்சியை வந்தடைந்ததும் எங்களை யூன்கெர்கள் பிடித்து நிறுத்தி எங்கள் துப்பாக்கிகளைப் பிடுங்கிக் கொண்டார்கள். அப்போதும் தொடர்ந்து எங்கள் ஆட்கள் மேலே வந்து கொண்டிருந்தனர். சிறிது சிறிதாய் நாங்கள் பெரும்பான்மையோராகியதும், யூன்கெர்கள் பக்கம் திரும்பி அவர்களிடமிருந்து துப்பாக்கிகளைப் பிடுங்கிக் கொண்டோம்....''

அந்த நேரத்தில் அறைக்குள் தளவாய் வந்தார்—ஆணை பெரு இளம் படையதிகாரி அவர், களையான முகமுடையவர், கவணக் கட்டிட்டுக் கரத்தைக் கழுத்தில் தொங்கவிட்டிருந்தார், தூக்கமின்மையின் வட்டங்கள் கண்களுக்கு அடியில் தெரிந்தன. உள்ளே வந்ததும் அவர் பார்வை மூலையில் அமர்ந்திருந்த கைதியின் மீது பதிந்தது. உடனே அந்தக் கைதி விளக்கம் கூற முற்பட்டார்.

''ஆமாம், தெரியும்'' என்று தளவாய் அவரை இடைமறித்தார். ''புதன்கிழமை இரவில் இராணுவத் தலைமை அதிகாரிகள் சரணடைய முடியாதென மறுத்த கமிட்டி உறுப்பினர்களில் ஒருவர் நீங்கள். ஆனல் நீங்கள் எங்களுக்கு வேண்டியதில்லை. எங்களை மன்னியுங்கள்—'' என்று கூறி கதவைத் திறந்து கோமகன் தல்ஸ்தோயை வெளியே போகச் சொல்லிக் கையை வீசிக் காட்டினர். ஏனையோரில் சிலர்,

முக்கியமாகச் செங்காவலர்கள் கண்டிக்கும் முறையில் முணு முணுத்துக் கொண்டார்கள். உடனே மாலுமி வெற்றிக் குரலில் கூறினார்: ''வோத்! அதான்!... நான் சொன்னேனு, இல்லையா?''

இப்போது தளவாயின் கவனம் இரண்டு பகையாட்களின் பக்கம் திரும்பிற்று. இவர்கள் இருவரும் கோட்டைக் காவற் படையால் கண்டனம் தெரிவிப்பதற்காகத் தேர்ந்தெடுக்கப் பட்டு தளவாயிடம் அனுப்பப்பட்டவர்கள். ''போதிய உணவின்றி காவற் படையினர் பட்டினி கிடக்க வேண்டியிருக் கிறது, இந்த நிலைமையில் படையினருக்கு அளிக்கப்படும் அதே அளவு உணவு கைதிகளுக்கும் தரப்படுகிறது'' என்று அவர்கள் இருவரும் முறையிட்டனர். ''எதிர்ப் புரட்சியாளர் களுக்கு எதற்காக நாம் இப்படிப் பரிவு காட்ட வேண்டும்?''

''தோழர்களே, நாம் புரட்சியாளர்கள், கொள்ளைக்காரர் களல்ல'' என்று பதிலளித்தார் தளவாய். பிறகு அவர் எங்கள் பக்கம் திரும்பினார். யூன்கெர்கள் சித்திரவதை செய் யப்படுவதாகவும், அமைச்சர்களது உயிருக்கு அபாயம் ஏற்பட்டிருப்பதாகவும் வெளியே வதந்திகள் உலவுவதை நாங்கள் அவரிடம் விளக்கமாய்ச் சொன்னோம். நாங்கள் கைதிகளைப் பார்க்க முடிந்தால், உலகுக்கு நாங்கள் உண் மையை நிரூபித்துக் காட்டலாம்....''

''இல்லை!'' என்றார் அந்த இளம் படையாள், கடுகடுப் பான குரலில். ''கைதிகளைத் திரும்பவும் நான் தொல்லை செய்யப் போவதில்லை, இப்போதுதான் நான் அங்கே சென்று அவர்களை எழுப்ப வேண்டியிருந்தது, எழுப்பினேன்—படு கொலை செய்வதற்காகவே நாங்கள் அவர்களை எழுப்புவதாய் நினைத்துக் கொண்டு விட்டார்கள்.... பெரும்பாலான யூன் கெர்கள் ஏற்கெனவே விடுதலை செய்யப்பட்டுவிட்டார்கள், ஏனையோர் நாளைக்கு வெளியே போய்ச் சேர்ந்து விடுவார் கள்.'' அவர் வெடுக்கென எங்களிடமிருந்து திரும்பினார்.

''அப்படியானால், டூமாவிலிருந்து வந்த விசாரணைக் குழு வினரை நாங்கள் சந்தித்துப் பேசலாமா?''

ஒரு கிளாசில் தமக்குத் தேநீர் ஊற்றிக் கொண்டிருந்த தளவாய் தலையை ஆட்டிக் கொண்டார். ''அவர்கள் இங்கே

தான் கூடத்தில் இருக்கிறார்கள்'' என்று அசட்டையாய்ச் சொன்னார்.

ஆம், அவர்கள் அறைக் கதவுக்கு வெளியேதான் எண்ணெய் விளக்கின் அழுது விடியும் வெளிச்சத்தில் மேயரைச் சுற்றி நின்று கொண்டு பரபரப்பாய்ப் பேசிக் கொண்டிருந்தார்கள்.

''மேயர் அவர்களே'' என்றேன் நான். ''நாங்கள் அமெரிக்க நிருபர்கள். உங்களுடைய விசாரணைகளின் முடிவை எங்களுக்கு அதிகார முறையில் சொல்லும்படி உங்களை வேண்டுகிறோம்.''

மதிப்புக்கும் மாண்புக்குமுரிய தமது முகத்தை எங்கள் பக்கம் திருப்பினார் மேயர்.

''அந்தச் செய்திகள் எவையும் உண்மையல்ல'' என்று சாவதானமாய்க் கூறினார் அவர். ''அமைச்சர்கள் இங்கே அழைத்து வரப்பட்ட போது நேர்ந்த சம்பவங்களைத் தவிர்த்து, அவர்கள் நல்லபடியாகவே நடத்தப்பட்டு வருகிறார்கள். யூன்கெர்களைப் பொறுத்தவரை அவர்களில் யாருக்கும் எவ்வித காயமும் ஏற்படவில்லை....''

நேவ்ஸ்கி சாலையில், நள்ளிரவுக்குப் பிற்பாடான வெறுமையான மங்கல் இருளில் படையாட்களது முடிவற்ற நீளணி நிசப்தத்தில் சலசலத்துச் சென்றது—கேரென்ஸ்கியின் படைகளுடன் போரிடுவதற்காக. இருண்ட பக்கவாட்டுத் தெருக்களில் மோட்டார் வண்டிகள் விளக்குகளின்றி அப்படியும் இப்படியும் விரைந்தோடின. விவசாயிகள் சோவியத்துகளது தலைமையகமான எண் 6, ஃபன்தான்காவிலும், நேவ்ஸ்கியில் பிரம்மாண்டமான ஒரு கட்டடத்தில் குறிப்பிட்ட ஒரு குடித்தனப் பகுதியிலும், இன்ழினேர்னி ஸாமக்கிலும், (பொறியாளர் பள்ளி) இரகசிய வேலைகள் மும்முரமாய் நடைபெற்றுக் கொண்டிருந்தன, நகர டூமாவில் விளக்குகளின் ஒளி பிரகரசித்தது....

ஸ்மோல்னி கழகத்தில் புரட்சி இராணுவக் கமிட்டியின் கணப்புத் தீ அளவு மீறிய மின்சுமைக்கு உள்ளான டைனமோவைப் போல் படபடத்துத் திணறிச் சுடர்விட்டு எரிந்து கொண்டிருந்தது....

*அத்தியாயம் 7*

## புரட்சிப் போர்முனை

*சனிக்கிழமை, நவம்பர் 10....*

*குடிமக்களே!*

*புரட்சிகர ஒழுங்கு எவ்விதத்திலும் மீறப்படுவதற்கு இடந் தர முடியாதென்று புரட்சி இராணுவக் கமிட்டி அறிவிக்கிறது....*

*திருட்டும் வழிப்பறியும் வலித் தாக்குதலும் படுகொலை முயற்சிகளும் கடுமையாகத் தண்டிக்கப்படும்....*

*பாரிஸ் கம்யூனது முன்னுதாரணத்தைப் பின்தொடர்ந்து கமிட்டியானது எந்தக் கொள்ளைக்காரரையும், அமைதி குலைவைத் தூண்டும் எவரையும் இரக்கமின்றி அழித்திடும்....*

அமைதி கோலோச்சியது நகரெங்கும். வழிப்பறியோ, வழி மறித்தலோ இல்லை, கொள்ளை இல்லை; குடிவெறிச் சண்டையுங்கூட இல்லை. இரவில் நிசப்தமாக இருந்த தெருக்களில் ஆயுதம் தரித்த சுற்றுக்காவற் குழுக்கள் போய் வந்தன, தெரு மூலைகளில் கணப்புத் தீயைச் சுற்றிப் படையாட்களும் செங்காவலர்களும் மண்டியிட்டு அமர்ந்திருந்தார்கள். பகற்பொழுதில் நடைபாதைகளில் பெருங் கூட்டங்கள் கூடி, மாணவர்களுக்கும் படையாட்களுக்கும், தொழில் வணிகருக்கும் தொழிலாளர்களுக்கும் இடையே முடிவின்றி நடைபெற்ற காரசாரமான வாக்குவாதங்களைக் கேட்டுக் கொண்டு நின்றன.

குடிமக்கள் தெருவிலே ஒருவரையொருவர் விசாரித்துக் கொண்டார்கள்.

''கசாக்குகள் வருகிறார்களா?''

''இல்லை....''

''செய்தி ஏதாவது தெரியுமா?''

''எனக்குத் தெரியவில்லையே... கேரென்ஸ்கி எங்கே இருக்கிறார்?''

''பெத்ரொகிராதிலிருந்து எட்டு வேர்ஸ்தா* தொலைவுக்கு வந்துவிட்டார் என்கிறார்கள்.... போல்ஷிவிக்குகள் அரோரா போர்க்கப்பலுக்கு ஓடிவிட்டதாய்ச் சொல்கிறார்களே, மெய்தானா?''

''அப்படிதான் சொல்கிறார்கள்....''

சுவர்கள்தான் சுவரொட்டிகள் மூலம் கூச்சலிட்டன, செய்தியேடுகள் சொற்பமாயிருந்தன; எங்கு பார்த்தாலும் கண்டன அறிக்கைகள், வேண்டுகோள்கள், அரசாணைகள்....

பிரம்மாண்ட சுவரொட்டி ஒன்று விவசாயிகள் சோவியத்துகளின் நிர்வாகக் குழுவினுடைய ஆவேசமான அறிக்கையைத் தாங்கியிருந்தது:

...அவர்கள் (போல்ஷிவிக்குகள்) விவசாயிகள் பிரதிநிதிகளது சோவியத்துகளின் ஆதரவைப் பெற்றிருப்பதாய், தாம் விவசாயிகள் பிரதிநிதிகளது சோவியத்துகளின் சார்பில் பேசுவதாய்த் துணிந்து கூறுகிறார்கள்....

தொழிலாளி வர்க்க ருஷ்யா அனைத்தும் தெரிந்து கொள்ளட்டும்: இது **சுத்தமான பொய்; உழைக்கும் விவசாயிகள் எல்லோரும்** வெகுண்டெழுந்து, அவர்களது நிறுவனமாகிய **விவசாயிகள் பிரதிநிதிகளது சோவியத்துகளின் அனைத்து ருஷ்ய நிர்வாகக் கமிட்டி** மூலம் மறுக்கிறார்கள்—உழைப்பாளர்களது சித்தம் படுபாதக முறையில் மீறப்படும் இந்தக் கொடுங் குற்றத்தில், நிறுவன ஒழுங்கமைப்பு பெற்ற விவசாயிகளுக்கு எந்தப் பங்குமில்லையென மறுப்புரைக்கிறார்கள்....''

சோஷலிஸ்டுப் புரட்சியாளர் கட்சியின் இராணுவப் பிரிவினரிடமிருந்து:

* 1 வேர்ஸ்தா=0.66 மைல்.—[பதிப்பாசிரியர்.]

போல்ஷிவிக்குகளது பைத்தியக்கார முயற்சி வீழ்ந்து படும் தருணம் வந்துவிட்டது. நகரக் காவற் படை பிளவுண்டு நிற்கிறது.... அமைச்சகங்கள் வேலைநிறுத்தம் செய்திருக்கின்றன, ரொட்டி கிடைப்பது மேலும் மேலும் அரிதாகி வருகிறது. ஒரு சில போல்ஷிவிக்குகளைத் தவிர ஏனைய எல்லாக் கட்சிக் குழுவோரும் காங்கிரசை விட்டு வெளியேறி விட்டார்கள். போல்ஷிவிக்குகள் தன்னந் தனியராக நிற்கிறார்கள்....

தாய்நாட்டின், புரட்சியின் இரட்சணைக் கமிட்டியை மையமாய்க் கொண்டு ஒன்றுபடுங்களென, மத்தியக் கமிட்டியின் முதலாவது அறைகூவல் கேட்டதுமே செயல்பட ஆயத்தமாய் இருப்பதற்குக் கருத்துடன் தயார் செய்யுங்களென வேண்டுகோள் விடுக்கின்றோம்....

குடியரசு அவையானது தனது துயரங்களை ஒரு துண்டுப் பிரசுரத்தில் எடுத்துரைத்தது:

துப்பாக்கிக் குத்தீட்டிகளது வன்முறையால் தாக்குண்டு குடியரசு அவையானது கலையும்படியும், தனது அமர்வினைத் தற்காலிகமாய் நிறுத்தி வைக்கும்படியும் ஆகியுள்ளது.

தகா முறையில் ஆட்சியதிகாரத்தைக் கைப்பற்றியுள்ளவர்கள், ''சுதந்திரம், சோஷலிசம்'' என்னும் சொற்களை உச்சரித்துக் கொண்டு தான்தோன்றித் தனமான வன்முறை ஆட்சியை அமைத்திருக்கிறார்கள். அவர்கள் இடைக்கால அரசாங்கத்தின் உறுப்பினர்களைக் கைது செய்திருக்கிறார்கள், செய்தியேடுகளைத் தடுத்து மூடியிருக்கிறார்கள், அச்சகங்களைப் பிடித்துக் கொண்டுவிட்டார்கள்.... இந்த ஆட்சியதிகாரத்தை மக்களின், புரட்சியின் பகையாய்க் கருத வேண்டும்; இதை எதிர்த்துப் போராடுவதும் இதைத் தகர்த்தெறிவதும் அவசியமாகும்....

குடியரசு அவையானது, தனது பணிகளைத் திரும்பவும் மேற்கொள்ளும் வரையில், ருஷ்யக் குடியரசின் குடிமக்களைத் தாய்நாட்டின், புரட்சியின் இரட்சணைக்காக அமைந்த வட்டாரக் கமிட்டிகளைச் சுற்றி ஒன்று திரளும்படி அறைகூவுகின்றது. போல்ஷிவிக்குகளது ஆட்சியதிகாரத்தை வீழ்த்திடு

வதற்கும், நாட்டை அரசியல் நிர்ணயச் சபைக்கு வழி நடத்திச் செல்ல வல்லதான ஓர் அரசாங்கத்தைத் தோற்று விப்பதற்கும் இந்தக் கமிட்டிகள் ஒழுங்கமைப்பு செய்து வருகின்றன.

**இயேலொ நரோதா** *கூறிற்று:*

*புரட்சியானது மக்கள் அனைவரும் நடத்தும் எழுச்சி யாகும்.... ஆனால் இங்கே நாம் காண்பது என்ன? லெனினாலும் திரோத்ஸ்கியாலும்... ஏமாற்றப்பட்ட பரிதாபத்துக்குரிய ஒருசில முட்டாள்களைத் தவிர வேறு யாரையும் அல்ல. இவர் களுடைய அரசாணைகளும் வேண்டுகோள்களும் வரலாற்று விபரீதங்களது காட்சியகத்துக்கு வளங் கூட்டுவதைத் தவிர வேறு ஒன்றும் செய்யப் போவதில்லை....''*

**நரோத்னயே ஸ்லோவா** *(மக்கள் சொல்—நரோத்னிய சோஷலிஸ்டுகளின் ஏடு):*

*''தொழிலாளர்கள், விவசாயிகள் அரசாங்கமா?''— வெறும் பகற்கனவுதான்! ருஷ்யாவிலும் சரி, நமது நேசநாடு களிலும் சரி யாரும் இந்த ''அரசாங்கத்தை'' அங்கீகரிக்கப் போவதில்லை—ஏன், பகை நாடுகளிலுங்கூடத்தான்....*

*முதலாளித்துவ ஏடுகள் தற்காலிகமாய் மறைந்து விட் டன....*

*இப்போது ருஷ்ய சோவியத்துக் குடியரசின் நாடாளு மன்றமாய் அமைந்த புதிய* **இத்ஸே-யி-கவின்** *முதலாவது கூட்டத்தைப் பற்றிய விவரங்கள்* **பிராவ்தாவில்** *வெளிவந் திருந்தன. விவசாயிகள் சோவியத்துகளது செயற் கமிட்டி அனைத்து ருஷ்ய விவசாயிகள் காங்கிரஸ் டிசம்பர் 13ல் கூட்டப்படுவதற்கு அழைப்பு விடுத்திருப்பது பற்றி விவ சாயத் துறை மக்கள் கமிசார் மிலூத்தின் குறிப்பிட்டார்.*

*''ஆனால் நாம் காத்திருக்க முடியாது'' என்றார் அவர். ''விவசாயிகளது ஆதரவு நமக்கு இன்றியமையாததாகும். விவசாயிகள் காங்கிரசைக் கூடுமாறு நாம் அழைக்க வேண்*

டும், உடனடியாகவே கூடச் செய்ய வேண்டும் என்று நான் முன்மொழிகின்றேன்....'' இடதுசாரி சோஷலிஸ்டுப் புரட்சியாளர்கள் உடன்பாடு தெரிவித்தார்கள். ருஷ்யாவின் விவசாயிகளுக்கு அவசரமாய் ஒரு வேண்டுகோள் வரையப்பட்டது. காங்கிரசைக் கூட்டுவதற்கான திட்டத்தைச் செயல்படுத்துவதற்காக ஐந்து பேர் அடங்கிய கமிட்டி ஒன்று தேர்ந்தெடுக்கப்பட்டது.

நிலத்தை வினியோகிப்பதற்கான புதிய சட்டத்தின் விவரங்களைப் பற்றிய பிரச்சினையும், தொழில் துறையைத் தொழிலாளர்களது கண்காணிப்பின் கீழ் கொண்டு வரும் பிரச்சினையும். இவை குறித்துப் பரிசீலித்து வரும் வித்தகர் குழுக்கள் அறிக்கை சமர்ப்பிக்கும் வரை ஒத்தி வைக்கப்பட்டன.

மூன்று அரசாணைகள்[1*] படித்துக் காட்டப்பட்டு ஏற்கப்பட்டன: முதலாவது லெனினது ''பத்திரிகைகளுக்கான பொது விதிகள்''—புதிய அரசாங்கத்தை எதிர்க்கும் படியும் கீழ்ப்படிய மறுக்கும்படியும் தூண்டுகிறவையும், குற்றச் செயல்கள் புரியத் தூண்டுகிறவையும், செய்திகளை வேண்டுமென்றே திரித்துப் புரட்டுகிறவையுமாகிய எல்லாச் செய்தியேடுகளும் தடையிடப்படுவதற்கு இது உத்தரவிட்டது; இரண்டாவது வீட்டுக் குடிக்கூலி ஒத்திவைப்பு அரசாணை; மூன்ருவது தொழிலாளர் காவல் துறையை நிறுவுவதற்கான அரசாணை. மற்றும் கட்டளைகளும் வெளியிடப்பட்டன: ஒன்று காலிக் குடித்தனப் பகுதிகளையும் வீடுகளையும் கைப்பற்ற நகர டூமாவுக்கு அதிகாரமளித்தது; இன்னொன்று கடைநிலை ரயில் நிலையங்களில் சரக்கு வண்டிகளிலிருந்து சரக்குகளை இறக்கும்படியும், அவசியத் தேவைப் பொருள்களின் வினியோகத்தைத் துரிதப்படுத்தும்படியும், அவசரமாய்த் தேவைப்படும் உருட் கலன்களை முடக்கி வைக்காமல் விரைவாய் விடுவித்து அனுப்பும்படியும் ஆணையிட்டது....

இரண்டு மணி நேரத்துக்குப் பிற்பாடு விவசாயிகள் சோவியத்துகளது நிர்வாகக் கமிட்டி அடியிற் கண்ட தந்தியை ருஷ்யா முழுதுக்கும் அனுப்பி வைத்தது:

---

* இந்த அத்தியாயத்தில் எண்ணிட்டுக் காட்டப்படும் சுட்டுக்குறிகள் அத்தியாயம் 7இன் அனுபந்தத்தைக் குறிப்பவை.

போல்ஷிவிக்குகளது தான்தோன்றி நிறுவனம் ஒன்று, ''அனைத்து ருஷ்ய விவசாயிகள் காங்கிரசுக்கான நிறுவனக் குழு'' என்று தனக்குப் பெயர் சூட்டிக் கொண்டு, பெத்ரொகிராதில் நடைபெறவிருக்கும் காங்கிரசுக்குப் பிரதிநிதிகளை அனுப்பும்படி விவசாயிகள் சோவியத்துகள் யாவற்றுக்கும் அழைப்பு விடுத்துக் கொண்டிருக்கிறது....

விவசாயிகள் பிரதிநிதிகளது சோவியத்துகளின் செயற் கமிட்டியானது, அரசியல் நிர்ணயச் சபையின் தேர்தல்களுக்குத் தயார் செய்யத் தேவைப்படும் சக்திகளை இத்தருணத்தில் வட்டாரங்களிலிருந்து விலகி வரச் செய்வது அபாயகரமான தாகுமென முன்பு போலவே இப்போதும் கருதுகிறதென்றும், அரசியல் நிர்ணயச் சபை ஒன்றுதான் விவசாயிகளும் நாடும் கடைத் தேறுவதற்கான ஒரே வழியாகுமென்றும் அறிவிக்கின்றது. விவசாயிகளது காங்கிரசிற்குரிய தேதி டிசம்பர் 13 ஆகுமென நாங்கள் ஊர்ஜிதம் செய்கின்றோம்.

நகர டூமாவில் பரபரப்பு அடங்கவே இல்லை. படையதிகாரிகள் வருவதும் போவதுமாய் இருந்தார்கள். இரட்சணியக் கமிட்டியின் தலைவர்களுடன் மேயர் கலந்துரையாடினர். டூமா உறுப்பினர் ஒருவர் கேரென்ஸ்கி பிரகடனத்தின் பிரதி ஒன்றை எடுத்துக் கொண்டு உள்ளே ஓடி வந்தார். நேவ்ஸ்கியின் மேல் தணிந்து பறந்த ஆகாய விமானம் ஒன்று நூற்றுக்கணக்கில் இந்தப் பிரகடனத்தை வீசிவிட்டுச் சென்றது. பணியாது எதிர்ப்போர் எல்லோரும் பயங்கரமாய்ப் பழி வாங்கப்பட நேருமென்று இந்தப் பிரகடனம் அச்சுறுத்திற்று, படையாட்களை அது ஆயுதங்களைத் துறந்துவிட்டு உடனே மார்ஸ் புலனில் ஒன்று கூடும்படிக் கட்டளையிட்டது.

அமைச்சர்-அதிபர் ஏற்கெனவே ஜார்ஸ்கயெ செலோவைப் பிடித்துக் கொண்டுவிட்டார், அவர் பெத்ரொகிராதுக்கு வர இன்னும் ஐந்து மைல்தான் இருக்கிறது என்று எங்களிடம் சொன்னார்கள். நாளைக்கு—அதாவது இன்னும் சில மணி நேரத்தில்—அவர் நகருக்குள் நுழைந்துவிடுவார். அவருடைய கசாக்குகளை எதிர்பட்டதும் சோவியத் படைகள் இடைக்கால அரசாங்கத்தின் பக்கம் சேர்ந்து கொண்டு விடுவதாய்க் கூறப்பட்டது. செர்னேவ் இரு தரப்புகளுக்கும்

இடையே எங்கோ இருந்து கொண்டு, ''நடுநிலைப்'' படைகளை உள்நாட்டு யுத்தத்தைத் தடுத்து நிறுத்தக் கூடிய சக்தியாய் ஒன்று திரட்ட முயன்று வந்தாராம்.

நகரினுள் நகரக் காவற் படைகள் போல்ஷிவிக்குகளை விட்டுப் பிரிந்து செல்வதாய்க் கூறப்பட்டது. ஸ்மோல்னி ஏற்கெனவே கைவிடப்பட்டு விட்டது.... அரசாங்கப் பொறியமைவு பூராவும் செயலற்று நின்று போய்விட்டது. அரசு வங்கியின் ஊழியர்கள் ஸ்மோல்னியிலிருந்து வந்த கமிசார்களுக்குக் கீழ் வேலை செய்ய மறுத்துவிட்டார்கள், அவர்களிடம் பணத்தைத் தர முடியாதெனக் கூறிவிட்டார்கள். தனியார் வங்கிகள் யாவும் மூடப்பட்டுவிட்டன. அமைச்சகங்கள் வேலை நிறுத்தம் செய்துவிட்டன. வேலைநிறுத்தம் செய்தோருக்குச் சம்பளம் தருவதற்காகத் தற்போது டூமாவின் குழு ஒன்று தொழில், வாணிப வட்டாரத்தாரிடம் சென்று நிதி வசூலித்துக் கொண்டிருந்தது[2]....

திரோத்ஸ்கி அயல் துறை அமைச்சகத்துக்குச் சென்று சமாதான அரசாணையை அயல் மொழிகளில் பெயர்த்திடும்படி அலுவலர்களுக்குக் கட்டளையிட்டார்; உடனே அறுநூறு அலுவலர்கள் ராஜீநாமாக் கடிதங்களை அவருடைய முகத்திலே வீசினார்கள்....தொழிலாளர் துறைக் கமிசார் ஷிலியாப்னிக்கவ் தமது அமைச்சகத்தின் பணியாளர்கள் எல்லோரும் இருபத்து நான்கு மணி நேரத்துக்குள் வேலைக்குத் திரும்பி வந்துவிட வேண்டும், இல்லையேல் அவர்கள் வேலையையும் ஓய்வூதிய உரிமைகளையும் இழக்க நேருமென கட்டளை பிறப்பித்தார்; வாயிற் காவலர்கள் மட்டும்தான் இந்த மிரட்டலுக்குப் பணிந்தார்கள்.... உணவுப் பொருள் வழங்கீட்டு விசேஷக் கமிட்டியின் கிளைகளில் சில, போல்ஷிவிக்குகளுக்குக் கீழ்ப்படிய விருப்பமின்றி வேலையை நிறுத்தி வைத்திருக்கின்றன.... சம்பள உயர்வு தருவதாகவும் வேலை நிலைமைகளை மேம்படுத்துவதாகவும் மட்டுமீறிய வாக்குறுதிகள் அளிக்கப்பட்டுங்கூட தொலைபேசி இணைப்பகத்தின் பணியாளர்கள் சோவியத்துத் தலைமையகத் தொலைபேசிகளுக்கு இணைப்பு அளிக்க மறுத்து வந்தார்கள்....

சோஷலிஸ்டுப் புரட்சியாளர் கட்சியானது சோவியத்துகளின் காங்கிரசிலிருந்து வெளியேறுதிருந்த உறுப்பினர்களை

யும், எழுச்சியில் பங்கு கொண்ட எல்லா உறுப்பினர்களையும் கட்சியிலிருந்து விலக்குவதெனத் தீர்மானித்தது....

மாநிலங்களிலிருந்து வந்த செய்திகள்: மொகிலோவ் நகர் தான் போல்ஷிவிக்குகளை எதிர்ப்பதாய் அறிவித்தது. கீவில் கசாக்குகள் சோவியத்துகளை வீழ்த்திவிட்டு எழுச்சித் தலைவர்கள் எல்லோரையும் கைது செய்துவிட்டார்கள். லூகாவில் சோவியத்தும் முப்பதாயிரம் துருப்புகளைக் கொண்ட நகரக் காவற் படைகளும் இடைக்கால அரசாங் கத்துக்கே தமது விசுவாசம் உரியதாகுமென வலியுறுத்தின, இடைக்கால அரசாங்கத்துக்கு ஆதரவாய் ஒன்றுதிரளும்படி அனைத்து ருஷ்யாவுக்கும் வேண்டுகோள் விடுத்தன. தோன் பள்ளத்தாக்கில் கலேதின் எல்லா சோவியத்துகளையும் தொழிற் சங்கங்களையும் கலைத்து ஒழித்துவிட்டார், அவரு டைய படைகள் வடக்கு நோக்கி வந்து கொண்டிருந்தன....

ரயில்வேத் தொழிலாளர்களது பிரதிநிதி ஒருவர் கூறி ஞர்: ''அரசியல் கட்சிகளுக்கு இடையிலான யுத்தம் உடனே நிற்க வேண்டும், கூட்டு சோஷலிஸ்டு அரசாங்கம் அமைக் கப்பட வேண்டும் என்று கோரி நேற்று நாங்கள் ருஷ்யா முழு தும் தந்தி அனுப்பிஞேம். இப்படி நடைபெருவிடில் நாளைக்கு இரவு நாங்கள் வேலைநிறுத்தத்துக்கு அறைகூவல் விடுப் போம். இந்தப் பிரச்சினையைப் பரிசீலிப்பதற்காக எல்லாக் கட்சிக் குழுவோரும் காலையில் கூட்டம் நடத்தப் போகிருர் கள். போல்ஷிவிக்குகள் உடன்பாட்டுக்கு வர ஆவலாயிருப் பதாகத் தெரிகிறது....''

''அது வரை அவர்கள் நீடிக்க வேண்டுமே!'' என்று கூறிச் சிரித்தார், செக்கச் சிவந்து போய்க் குண்டாயிருந்த நகரப் பொறியாளர்....

நாங்கள் ஸ்மோல்னிக்கு வந்தோம், அது கைவிடப் பட்டு விடவில்லை, முன்னெப்போதையும்விட மும்முரமாய்ச் செயல் பட்டுக் கொண்டிருந்தது. திரள் திரளாய்த் தொழிலாளர் களும் படையாட்களும் உள்ளே ஓடிக் கொண்டும் வெளியே விரைந்து கொண்டும் இருந்தார்கள். காவல் புரிந்து நின்ற வர்கள் எங்கும் இரு மடங்காகி விட்டனர். வெளி வாயினுள் நுழைந்ததும் நாங்கள் முதலாளித்துவ, ''மிதவாத'' சோஷலிஸ்டுச் செய்தியேடுகளின் நிருபர்களைச் சந்தித்தோம்.

''எங்களை வெளியே தள்ளிவிட்டார்கள்!'' என்று கத்தினர் வோலியா நரோதாவின் நிருபர் ஒருவர். ''போன்ச்-புருயேவிச் கீழே பத்திரிகையாளர் இருப்பிடத்துக்கு வந்து எங்களை வெளியே போகச் சொன்னார்! நாங்கள் எல்லோரும் உளவாளிகள் என்றார்!'' எல்லோருமாய் ஏககாலத்தில் கூச்சலிட ஆரம்பித்தார்கள்: ''பெரிய அவமதிப்பு! அநியாயம் இது! பத்திரிகை சுதந்திரம்!...''

முன் கூடத்தில் பெரும் பெரும் மேசைகள் மீது புரட்சி இராணுவக் கமிட்டியின் வேண்டுகோள்களும் பிரகடனங்களும் கட்டளைகளும் கட்டுக்கட்டாய்க் குவிக்கப்பட்டிருந்தன. தொழிலாளர்களும் படையாட்களும் இவற்றைச் சுமந்து கொண்டு திணறியவாறு எங்களைக் கடந்து வெளியே காத்து நின்ற மோட்டார் கார்களுக்குச் சென்றனர்.

இவற்றில் ஒன்று வருமாறு:

### பழி பீடத்தில்!

ருஷ்ய உழைப்பாளி மக்கள் கடந்து கொண்டிருக்கும் இன்னல் மிகுந்த இத்தருணத்தில், மென்ஷிவிக்கு சமரசவாதிகளும் வலதுசாரி சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களும் தொழிலாளி வர்க்கத்துக்குத் துரோகமிழைக்கிறார்கள். கர்னீலவ், கேரென்ஸ்கி, சாவின்கவ் ஆகியோரது பக்கத்தில் சேர்ந்து கொண்டுவிட்டார்கள் இவர்கள்....

துரோகி கேரென்ஸ்கியின் கட்டளைகளை இவர்கள் அச்சிட்டுப் பரப்புகிறார்கள், நகரில் பீதியை உண்டாக்குகிறார்கள், அந்த ஓடுகாலிக்கு வெற்றிகள் கிடைத்து வருவதாகக் கதைகள் கட்டி நகைக்கத்தக்க வதந்திகளைப் பரப்புகிறார்கள்....

குடிமக்களே! இந்தப் பொய்யான வதந்திகளை நம்பாதீர்கள். மக்களது புரட்சியை எந்த சக்தியாலும் தோற்கடிக்க முடியாது.... கேரென்ஸ்கியிற்கும் அவரது கூட்டாளிகளுக்கும் சீர்க்கிரமே கிடைக்கப் போவது தக்க தண்டனைதான்....

அவர்களை நாங்கள் பழி பீடத்தில் ஏற்றி நிற்க வைக்கிறோம். யார் மீது அவர்கள் பழங் காலத்து அடிமைச் சங்கிலிகளைப் பூட்ட முயன்று வருகிறார்களோ, அந்தத் தொழிலாளர்கள், படையாட்கள், மாலுமிகள், விவசாயிகள்

அனைவரின் பகைமைக்கும் அவர்களைப் பலியாகும்படி விடு கிறோம். மக்களின் வெறுப்பு, நிந்தனை இவற்றின் கறையை எந்நாளும் அவர்கள் தமது உடம்பிலிருந்து அகற்றிக் கொள்ள முடியாது.

மக்களுக்கு துரோகமிழைத்தோர் சபிக்கப்பட்டு இழிந்து படுக!

புரட்சி இராணுவக் கமிட்டி முன்னிலும் விசாலமான உச்சி மாடி 17ஆவது அறைக்கு மாறி வந்துவிட்டது. கதவின் முன்னால் செங்காவலர்கள் காவல் புரிந்து நின்றார்கள். உள்ளே கிராதியடைப்புக்கு முன்னால் இருந்த குறுகலான பரப் பில் கூட்டமாய் இருந்தது. கூடியிருந்தவர்கள் கண்ணுக் கினிய ஆடைகள் அணிந்து வெளிப் பார்வைக்குப் பணிவன்பு மிக்கோராய்த் தொன்றினர், ஆனால் உள்ளுக்குள் பகைமை யால் புகைந்து கொண்டிருந்தனர்—இவர்கள் முதலாளித் துவ வர்க்கத்தினர், தமது மோட்டார் கார்களுக்கு அனு மதிச் சீட்டுகளும், நகரை விட்டு வெளியே செல்ல தமக்குப் பயண ஆவணங்களும் வாங்க வந்திருந்தவர்கள். இவர்களில் பலர் வெளிநாட்டவர்கள்.... கமிட்டி உறுப்பினர்கள் பில் ஷாத்தவும் பீட்டர்சும் இந்த அலுவலைக் கவனித்துக் கொண் டிருந்தனர். இவர்கள் இந்த அலுவலை நிறுத்தி வைத்து விட்டுக் கடைசிச் செய்தியறிக்கைகளை எங்களுக்குப் படித்துக் காட்டினர்.

நூற்று எழுபத்தொன்பதாவது சேம ரெஜிமெண்டு அதன் ஒருமனதான ஆதரவைத் தெரிவிக்கின்றது. புத்தீலவ் கப்பல் துறைகளின் ஐந்தாயிரம் சுமைதூக்கித் தொழிலாளர் கள் புதிய அரசாங்கத்துக்கு வாழ்த்துரைக்கிறார்கள். தொழிற் சங்கங்களது மத்தியக் கமிட்டி ஆர்வமிக்க ஆதரவளிக் கிறது. ரேவெல் நகரக் காவற் படையும் ஸ்குவாட்ரனும் புரட்சி இராணுவக் கமிட்டிகளைத் தேர்ந்தெடுத்துக் கொண்டு ஒத்துழைப்பதற்கும் படைகளை அனுப்பி வைக்கவும் முன் வருகின்றன. பிஸ்கோவிலும் மீன்ஸ்கிலும் புரட்சி இரா ணுவக் கமிட்டிகள் தலைமை நிலை வகிக்கின்றன. ஜாரீத்ஸின், தோன்-ரஸ்தோவ், பியாத்திகோர்ஸ்க், செவஸ்தோபல் சோவியத்துகள் வாழ்த்துரைக்கின்றன.... பின்லாந்து டிவிஷ

னும், ஐந்தாவது, ஆருவது சேனைகளின் புதிய கமிட்டிகளும் புதிய ஆட்சியதிகாரத்துக்குப் பற்றுறுதி தெரிவிக்கின்றன....

மாஸ்கோவிலிருந்து செய்திகள் திட்டவட்டமானவையாய் இல்லை. புரட்சி இராணுவக் கமிட்டியின் படைகள் நகரின் கேந்திர நிலைகளைப் பிடித்து வைத்திருக்கின்றன. கிரெம்ளினில் சேவையாற்றும் இரு படைப்பிரிவுகள் சோவியத்துகளின் பக்கத்துக்கு வந்துவிட்டன. ஆனுல் ஆயுதசாலையானது கர்னல் ரியாப்த்சேவிடமும் அவரது யூன்கெர்களிடமும் இருந்து வரு கிறது. புரட்சி இராணுவக் கமிட்டி தொழிலாளர்களுக்கு ஆயுதங்கள் வேண்டுமென்று கோரிற்று, அதனுடன் ரியாப்த் சேவ் இன்று காலை வரை பேச்சுகள் நடத்தி வந்தார், பிறகு திடீரெனக் கமிட்டிக்கு இறுதி எச்சரிக்கை விடுத்து சோவி யத்துப் படைகள் சரணடைய வேண்டுமென்றும் கமிட்டி கலைந்துவிட வேண்டுமென்றும் உத்தரவிட்டிருக்கிருர். போர் ஆரம்பித்திருக்கிறது....

பெத்ரொகிராதில் இராணுவத் தலைமை அலுவலர்கள் ஸ்மோல்னியின் கமிசார்களுக்கு உடனே பணிந்துவிட்டனர். இத்ஸேன்திரஃபுளோத் பணிய மறுக்கவே. திபேன்கோவும் கிரன்ஷ்தாத்து மாலுமிகளது படைப்பிரிவு ஒன்றும் அதைத் தாக்கிப் பிடிக்க வேண்டியதாயிற்று, பிறகு ஒரு புதிய இத் ஸேன்திரஃபுளோத் அமைக்கப்பட்டது, பால்டிக், கருங்கடல் போர்க் கப்பல்கள் அதற்கு ஆதரவு அளித்தன....

ஆனுல் இந்த உற்சாகத்துக்கு எல்லாம் பின்னுல் ஒரு வகை கிலியூட்டும் கலவர உணர்ச்சி இருக்கவே செய்தது. கேரென்ஸ்கியின் கசாக்குகள் வேகமாக வந்து கொண்டிருந் தார்கள், அவர்களிடம் பீரங்கிகள் இருந்தன. ஆலைக் கமிட் டிகளது செயலாளரான ஸ்கிரீப்னிக், உள்ளத்தின் கலக்கம் முகத்திலே தெரிய, ஒரு முழுச் சேனைக்குரிய பீரங்கிப் படை யணி அவர்களிடம் இருப்பதாக என்னிடம் சொன்னுர். பிறகு சீற்றம் கொண்டவராய் மேலும் சொன்னுர்: ''எங்களை உயிரோடு அவர்களால் பிடிக்க முடியாது!'' பெத்ரோவ்ஸ்கி களைப்புற்று ஓய்ந்து போய் மெல்லச் சிரித்துக் கொண்டார், ''நாளைக்கு நாம் தூங்க முடிந்தாலும் முடியலாம்—நிரந் தரமாய்....'' சிவப்புத் தாடியும் சோகைச் சாயலுங் கொண்ட முகத்துடன் லஸோவ்ஸ்கி கூறினுர்: ''நமக்கு

வாய்ப்பு ஏது? தனியே இருக்கிறோம்.... பயிற்சி பெற்ற படையாட்களை எதிர்த்து ஒரு கும்பலால் என்ன செய்ய முடியும்?''

பெத்ரொகிராதுக்குத் தெற்கிலும் தென்மேற்கிலும் சோவியத்துகள் கேரென்ஸ்கி நெருங்கி வந்ததும் ஓடிவிட்டன, காத்சினுவிலும் பாவ்லவ்ஸ்கிலும் ஜார்ஸ்கயெ செலோவிலும் ஊர் காவற் படைகள் பிளவுண்டிருந்தன—பாதிப் பேர் நடுநிலை வகிப்பதென வாக்களிக்க, ஏனையோர் படையதிகாரிகளின்றி ஒழுங்கு குலைந்து அலங்கோலமாய்த் தலைநகருக்குத் திரும்பி வந்து கொண்டிருந்தார்கள்.

கூடங்களில் கடைசிச் செய்தியறிக்கைகளைச் சுவர்களில் ஒட்டிக் கொண்டிருந்தனர்:

கிராஸ்னெயெ செலோவிலிருந்து, நவம்பர் 10, காலை 8 மணி.

**அனுப்பி வைக்கப்பட வேண்டும், தலைமை அலுவலர்களது தலைவர்களுக்கும், தலைமைப் படைத் தலைவர்களுக்கும், படைத் தலைவர்களுக்கும், எல்லா இடங்களுக்கும், எல்லோருக்கும், எல்லோருக்கும், எல்லோருக்கும்.**

முன்னாள் அமைச்சர் கேரென்ஸ்கி வேண்டுமென்றே பொய்யான தந்தியை எல்லா இடங்களுக்கும், எல்லோருக்கும் அனுப்பி வைத்திருக்கிறார்; புரட்சிகர பெத்ரொகிராது தானே மனமுவந்து ஆயுதங்களைத் துறந்து சரணடைந்து பழைய அரசாங்கத்தின், அதாவது துரோகத்தினது அரசாங்கத்தின் சேனைகளோடு சேர்ந்து கொண்டுவிட்டதாகவும், புரட்சி இராணுவக் கமிட்டியானது படையாட்களைப் பின்வாங்கும்படி கட்டளையிட்டிருப்பதாகவும் கூறுகிறது இந்தப் பொய்த் தந்தி. சுதந்திர மக்களது படைகள் பின்வாங்குகிறவை அல்ல, சரணடைகிறவை அல்ல.

நமது துருப்புகள் காத்சினுவை விட்டு வந்துள்ளது எதற்காக என்றால், தமக்கும் விவரமறியாமல் தவறிழைக்கும் தமது சோதரர்களாகிய கசாக்குகளுக்கும் இடையே இரத்தக் களரியைத் தவிர்த்துக் கொள்ளும் பொருட்டும், முன்னிலும் வசதியான ஒரு நிலையில் நிற்கும் பொருட்டும்தான். இப்போது நமது துருப்புகள் ஏற்றிருக்கும் நிலையானது வலுமிக்கதாகும், கேரென்ஸ்கியும் அவரது படைக் கூட்டாளி

களும் தமது படைகளைப் பத்து மடங்கு அதிகரித்துக் கொண்டாலுங்கூட நாம் கவலைப்பட வேண்டியிராத அளவுக்கு வலுமிக்கதாகும். நமது துருப்புகளின் உள்ளப் பாங்கு மிகவும் சிறப்பாயிருக்கிறது.

பெத்ரொகிராதில் முழு அமைதி நிலவுகிறது.

**பெத்ரொகிராது நகர, பெத்ரொகிராது**
**மாவட்டப் பாதுகாப்புப் படைத் தலைவர்**
லெப்டினண்டு-கர்னல் முரவியோவ்.

நாங்கள் புரட்சி இராணுவக் கமிட்டி அறையிலிருந்து வெளியே வந்து கொண்டிருந்த போது, கையில் ஒரு காகிதத்துடன் பிரேதம் போல் வெளுத்துப் போய் உள்ளே நுழைந்தார் அந்தோனவ்.

''இதை அனுப்பிவையுங்கள்'' என்றார் அவர்.

எல்லா மாவட்டத் தொழிலாளர்
பிரதிநிதிகளது சோவியத்துகளுக்கும்
ஆலைக் கமிட்டிகளுக்கும்

**கட்டளை**

கேரென்ஸ்கியின் கர்னிலவியக் கும்பல்கள் தலைநகரின் சுற்றுப்புறங்களை அச்சுறுத்துகின்றன. மக்களுக்கும் மக்கள் கண்டிருக்கும் வெற்றிகளுக்கும் எதிரான இந்த எதிர்ப்புரட்சி முயற்சியை ஈவிரக்கமின்றி நசுக்குவதற்கு அவசியமான எல்லா கட்டளைகளும் அளிக்கப்பட்டிருக்கின்றன.

புரட்சியின் சேனைக்கும் செங்காவலர்களுக்கும் தொழிலாளர்களது உடனடி ஆதரவு வேண்டியிருக்கிறது.

வட்டார சோவியத்துகளுக்கும் ஆலைக் கமிட்டிகளுக்கும் நாங்கள் கட்டளையிடுகின்றோம்:

1. அகழ்வரிகள் தோண்டுவதற்கும், தடையரண்கள் எழுப்புவதற்கும், கம்பித் தடுப்புகளை உறுதியாக்குவதற்கும் எவ்வளவு அதிகமாய் முடியுமோ அவ்வளவு அதிகமான எண்ணிக்கையில் தொழிலாளர்களை அனுப்பி வைக்க வேண்டும்.

2. இதன் பொருட்டு ஆலைகளில் வேலைகளை நிறுத்துவது அவசியமாயிருக்கும் எல்லா இடங்களிலும் உடனடியாய் வேலைகள் நிறுத்தப்பட வேண்டும்.

3. கிடைக்கக் கூடிய சாதாரண கம்பிகளும் முட்கம் பிகளும், மற்றும் அகழ்வரிகள் தோண்டுவதற்கும் தடைய ரண்கள் எழுப்புவதற்கும் தேவையான எல்லாக் கருவிகளும் திரட்டிச் சேர்க்கப்பட வேண்டும்.

4. கிடைக்கக் கூடிய எல்லா ஆயுதங்களையும் எடுத்து வர வேண்டும்.

5. கண்டிப்பான கட்டுப்பாடு அனுசரிக்கப்பட வேண்டும், புரட்சியின் சேனைக்கு எல்லா வழிகளிலும் ஆதரவளிக்க ஒவ்வொருவரும் தயாராய் இருத்தல் வேண்டும்.

பெத்ரொகிராது தொழிலாளர்கள்,
படையாட்கள் பிரதிநிதிகளது
சோவியத்தின் தலைவர்,
மக்கள் கமிசார் லேவ் திரோத்ஸ்கி.

புரட்சி இராணுவக் கமிட்டியின் தலைவர்,
தலைமைப் படைத் தலைவர் நிக்கலாய் பத்வோய்ஸ்கி.

ஸ்மோல்னியிலிருந்து நாங்கள் இருண்டு கடுகடுப்பாயிருந்த தெருவை வந்தடைந்த போது நாற்புறமிருந்தும் ஆலைச் சங்குகள் ஒலித்துக் கொண்டிருந்தன. கேட்போர் கலங்கும்படிக் கீச்சிட்டு அலறி அபாயத்தை அறிவிக்கும் கூச்சலாய்க் கேட்டது அந்த ஒலி. பல்லாயிரக் கணக்கில் தொழிலாளி மக்கள், ஆடவரும் பெண்டிருமானோர், வெளியே வந்து தெருக்களில் சென்றார்கள். பல்லாயிரக் கணக்கான குடிசைக் குடியிருப்புகளிலிருந்து பழுப்பேறிய வேதனை வாய்ந்த திரள்கள் வெளிப்பட்டுச் சாரை சாரையாய்ச் சென்றன. சிவப்புப் பெத்ரொகிராதுக்கு ஆபத்து! கசாக்குகள்! ஆடவரும் பெண்டிரும் சிறிசுகளுமாய், துப்பாக்கிகளையும் மண்வெட்டிகளையும் குத்துக் கோடரிகளையும் கம்பிச் சுருள்களையும் சுமந்து கொண்டு, வேலை நேர உடுப்புகளுக்கு மேல் தோட்டாக் கச்சைவார்களை மாட்டிக் கொண்டு வறுமை மலிந்த தெருக்கள் வழியே தெற்கு நோக்கியும் தென்மேற்கு நோக்கியும் மாஸ்கோவ்ஸ்கி வாயிலின் திசையில் திரண்டெழுந்து சென்றார்கள்.... இப்படிப் பிரம்மாண்ட அளவில் தன்னியல்பான முறையில் ஒரு நகரம் திரண்டெழுந்த அந்தக் காட்சி எந்நாளும் காணப்படாத காட்சி! பெருவெள்ளமென

அவர்கள் கரைபுரண்டு சென்று கொண்டிருந்தார்கள், படையாட்களின் படைப்பிரிவுகளும் பீரங்கிகளும் லாரிகளும் வண்டிகளும் இந்த வெள்ளத்தோடு வெள்ளமாய் இழுத்துச் செல்லப்பட்டன—புரட்சிகரப் பாட்டாளி வர்க்கம் தொழிலாளர்கள், விவசாயிகளது குடியரசின் தலைநகரைக் காப்பாற்ற தனது மார்பைத் தடையரணாய் வைத்துப் போராடச் சென்றது!

ஸ்மோல்னியின் வாயிலுக்கு முன்னால் ஒரு மோட்டார் வண்டி நின்றிருந்தது. செவ்வரி பதிந்த கண்களைப் பெரிதாக்கிக் காட்டிய தடித்த மூக்குக் கண்ணாடி போட்டிருந்த ஒல்லியான ஒருவர் அவந்தரையான தமது மேலங்கியின் பைகளுக்குள் கைகளை நுழைத்துக் கொண்டு அந்தக் காரின் மட்கார்டின் மேல் சாய்ந்து நின்று கொண்டிருந்தார். வாயைத் திறந்து பேசுவதற்கே அவர் தமது முழு பலத்தையும் திரட்டிப் பெரு முயற்சி செய்ய வேண்டியிருந்தது. இளமையின் தெளிந்த கண்களும் தாடியும் கொண்ட வாட்டசாட்டமான மாலுமி ஒருவர், எந்நேரமும் அவர் கையை விட்டு அகலாத ஒரு பெரிய நீல நிற ரிவால்வரை ஆட்டி விளையாடியவாறு, நினைவெல்லாம் எங்கோ இருக்க அமைதியற்று அருகாமையில் அங்குமிங்கும் நடை போட்டுக் கொண்டிருந்தார். இவர்கள் தாம் அந்தோனவும் திபேன்கோவும்.

காரின் படியில் சில படையாட்கள் இராணுவ சைக்கிள்கள் இரண்டை வைத்துக் கட்டுவதற்காக முயற்சி செய்தனர். கார் டிரைவர் கடுமையாய் ஆட்சேபித்தார், காரில் சிராய்ப்புகள் விழுந்துவிடும் என்றார் அவர். போல்ஷிவிக்குதான் அவர், அந்தக் கார் ஒரு முதலாளியிடமிருந்து படைத்துறைக்காகக் கைப்பற்றப்பட்டதுதான். சைக்கிள்கள் இரண்டும் சேவகர்களுக்கானவை என்பதும் மெய்தான். ஆனால் டிரைவரின் பணித் துறைப் பெருமை உணர்ச்சி இதற்கு இடந் தரவில்லை.... ஆகவே சைக்கிள்கள் இரண்டும் காரிலிருந்து அகற்றப்பட்டன....

யுத்தம், கடற் படை மக்கள் கமிசார்களாகிய இவர்கள் புரட்சிப் போர்முனையை—அது எங்கே அமைந்திருப்பினும் —பார்வையிடுவதற்காப் புறப்பட்டுக் கொண்டிருந்தார்கள். அவர்களுடன் நாங்களும் போகலாமா? முடியவே முடியாது,

ஐந்து பேருக்குதான் இடம் இருந்தது—இரண்டு கமிசார்கள், இரண்டு சேவகர்கள், டிரைவர். ஆயினும் எனக்குத் தெரிந்த ருஷ்யர் ஒருவர்—இங்கே அவரை நான் துருசீஷ்கா என்று அழைக்கிறேன்—பேசாமல் உள்ளே ஏறி அமர்ந்து கொண்டுவிட்டார்; என்ன சொல்லியும் ஆசையவில்லை அவர்....

இந்தப் பயணம் குறித்து துருசீஷ்கா கூறியதை நான் சந்தேகிப்பதற்குக் காரணம் ஏதும் இல்லை, அவர்கள் சுவோரொவ்ஸ்கி சாலையில் போய்க் கொண்டிருந்த போது யாரோ ஒருவர் சாப்பிட ஏதாவது எடுத்து செல்ல வேண்டும் என்ருர். போதிய உணவு இல்லாத பகுதிகளில் அவர்கள் மூன்று, நான்கு நாட்கள் கழித்தாக வேண்டியிருக்கும். காரை நிற்பாட்டினுர்கள். காசு? யுத்தக் கமிசார் தமது பைகளை ஆராய்ந்து பார்த்தார்—கோப்பெக் காசு இல்லை அவரிடம். கடற்படைக் கமிசாரும் போண்டியாகவே இருந்தார். டிரைவரின் நிலைமையும் அதுவேதான். துருசீஷ்கா கடைக்குச் சென்று வேண்டியவற்றை வாங்கி வந்தார்....

நேவ்ஸ்கி சாலையில் அவர்கள் திரும்பிய போது டயர்களில் ஒன்று வெடித்தது.

''என்ன செய்யலாம்?'' என்று கேட்டார் அந்தோனவ்.

''வேருெரு வண்டியைக் கைப்பற்ற வேண்டியதுதான்!'' என்ருர் திபேன்கோ, ரிவால்வரை ஆட்டியவாறு. அந்தோனவ் சாலையின் நடுவில் நின்று, படையாள் ஒருவர் ஓட்டி வந்த காரை நிற்கச் சொல்லிக் கையைக் காட்டினுர்.

''இந்தக் கார் எனக்கு வேண்டும்'' என்ருர் அந்தோனவ்.

''இது கிடைக்காது உங்களுக்கு'' என்று பதிலளித்தார் அந்தப் படையாள்.

''நான் யார், தெரியுமா?'' என்று ஒரு காகிதத்தை எடுத்துக் காட்டினுர் அந்தோனவ். ருஷ்யக் குடியரசின் எல்லாச் சேனைகளுக்கும் அவர் தலைமைப் படைத் தலைவராய் நியமிக்கப்பட்டிருப்பதாகவும், எல்லோரும் அவருக்குக் கீழ்ப்படிய வேண்டுமென்றும் அதில் எழுதப்பட்டிருந்தது.

''சைத்தானுக்கெல்லாம் பெரிய சைத்தாணுகவே இருக்கலாம் நீங்கள், எனக்குக் கவலை இல்லை!'' என்று கோபமாய் இரைந்தார் அந்தப் படையாள். ''இந்தக் கார் முதலாவது

இயந்திரத் துப்பாக்கி ரெஜிமெண்டைச் சேர்ந்தது, இதில் நாங்கள் போர்த் தளவாடங்கள் எடுத்துச் செல்கிறோம், உங்களுக்குக் கிடைக்காது....''

இத்தாலியக் கொடியைப் பறக்கவிட்டுக் கொண்டு ஓடி வந்த கடகடத்துப் போன பழைய வாடகைக் கார் ஒன்று சிக்கலைத் தீர்த்து வைத்தது. (நெருக்கடியான காலங்களில் தனியார் மோட்டார் வண்டிகள் அரசாங்கத்தால் கைப்பற்றப்படுவதிலிருந்து தப்புவதற்காக அயல் நாட்டுக் கான்சல் அலுவலகங்களின் பெயரில் பதிவு செய்யப்பட்டிருந்தன.) விலை உயர்ந்த மென்முடி மேல் கோட்டு போட்டிருந்த பருத்த குடிமகன் ஒருவர் அந்தக் காரிலிருந்து வெளியேற்றப்பட்டார். பிறகு கமிசார்கள் தமது பயணத்தைத் தொடர்ந்தார்கள்.

சுமார் பத்து மைல் சென்றபின் நார்வ்ஸ்கயா ஸஸ்தாவா வந்து சேர்ந்தார்கள். செங்காவலர்களின் தளவாய் எங்கே இருக்கிறார் என்று அந்தோனவ் விசாரித்தார். அவரை அந்நகரின் எல்லைக்கு அழைத்துச் சென்றார்கள், அங்கே சில நூறு தொழிலாளர்கள் அகழ்வரிகள் வெட்டி முடித்துவிட்டு, கசாக்குகளின் வருகைக்காக காத்திருந்தனர்.

''தோழரே, இங்கே எல்லாம் நல்லபடிதானே இருக்கின்றன?'' என்று கேட்டார் அந்தோனவ்.

''யாவும் ஒழுங்காகவே இருக்கின்றன, தோழர்'' என்று பதிலளித்தார் தளவாய். ''படையினர் துடிப்பாய் ஆர்வமோடுதான் இருக்கிறார்கள்.... ஆனால் ஒன்று—எங்களிடம் படைத் தளவாடங்கள் இல்லை....''

''ஸ்மோல்னியில் இருநூறு கோடி சுற்றுவரித் தோட்டாக்கள் இருக்கின்றன'' என்றார் அந்தோனவ் அவரிடம். ''நான் உத்தரவு எழுதித் தருகிறேன்'' பைகளுக்குள் தேடிப் பார்த்துவிட்டு, ''துண்டுக் காகிதம் யாரிடமாவது இருக்கிறதா?'' என்று கேட்டார்.

திபேன்கோவிடம் இல்லை, சேவகர்களிடமும் இல்லை. துருசீஷ்கா தம்முடைய குறிப்பு நோட்டுப் புத்தகத்தை எடுத்துத் தர வேண்டியதாயிற்று.

''அட எழவே! என்னிடம் பென்சில் இல்லையே!'' என்று கத்தினார் அந்தோனவ். ''பென்சில் வைத்திருப்பவர் யார்?''

சொல்லவா வேண்டும்?—அந்தக் கூட்டத்தில் துருசீஷ்கா ஒருவரிடம் மட்டும்தான் பென்சில் இருந்தது....

பின்னல் விடப்பட்ட நாங்கள் ஜார்ஸ்கயெ செலோ ரயில் நிலையத்துக்குப் புறப்பட்டோம். நாங்கள் நேவ்ஸ்கியில் சென்றபோது செங்காவலர்கள் ஆயுதமேந்தி, சிலர் துப்பாக்கிகளில் குத்தீட்டியுடனும் சிலர் இது இல்லாமலும், அணி வகுத்துச் சென்றார்கள். குளிர் காலத்தின் முன்னந்தி ஆரம்பமாகிக் கொண்டிருந்தது. நான்கு நான்கு பேராய், ஒழுங்கு குலைந்த அணிகளில் இசையின்றி முரசங்களின்றி அவர்கள் தலையை உயர்த்தி நிமிர்த்திக் கொண்டு, ஜில்லிட்ட ஈரத் தரையில் நடை போட்டனர். ''சமாதானம்! நிலம்!'' என்று கோணலான பொன்னெழுத்துகளில் குறிக்கப்பட்டிருந்த செங்கொடி அவர்களுக்கு மேல் படபடத்துப் பறந்தது. எல்லோரும் இளைஞர்கள், சாகப் போகிறோம் என்பதை அறிந்தவர்களுக்கு உரித்தான முகபாவம் அவர்களிடம் இருக்கக் கண்டோம்.... நடைபாதையில் நின்ற கூட்டத்தினர், அவர்கள் சென்றதைப் பாதி அச்சத்தோடும், பாதி ஏளனத்தோடும் வெறுப்பை வெளியிடும் நிசப்தத்தில் உற்று நோக்கினர்....

கேரென்ஸ்கி எங்கே இருந்தார்? போர்முனை எங்கிருந்தது? ரயில் நிலையத்தில் யாருக்கும் இவை தெரியவில்லை. ஆனல் ஜார்ஸ்கயெவுக்கு அப்பால் ரயில்கள் செல்லவில்லை....

எங்கள் வண்டியில் தினசரி நகருக்கு வேலைக்கு வந்துவிட்டுத் திரும்புவோரும், கிராமவாசிகளும் நிறைந்திருந்தார்கள், மூட்டைகளும் மாலைச் செய்தியேடுகளும் வைத்திருந்தார்கள். போல்ஷிவிக்குகளது எழுச்சி குறித்துதான் முழு நேரமும் பேச்சு அடிபட்டது. இந்தப் பேச்சைக் கவனியாது விட்டோமாஞல், மாபெரும் ருஷ்யாவை உள்நாட்டுப் போர் இரு வேறு கூறுகளாகப் பிளந்து வந்ததையும், போர் மண்டலத்தை நோக்கி ரயில் போயிற்று என்பதையும் உணர்ந்தே இருக்க முடியாது. சன்னல் வழியே பார்த்தபோது, வேகமாகக் கறுத்து வந்த இருட்டில் திரள் திரளாய்ப் படையாட்கள் சேற்றுச் சாலையில் கைகளை வீசி ஆட்டி வாக்குவாதம் புரிந்தவாறு நகரை நோக்கிச் சென்றது தெரிந்தது. சரக்குத்

தொடர்வண்டி ஒன்று துருப்புகள் ஏகமாய் அடைந்திருக்க, பெரும் பெரும் சொக்கப்பனைகளால் ஒளியூட்டப் பெற்று பக்கப் பாதையிலே நின்றிருந்தது. அவ்வளவுதான். ரயிலின் பின்னுல் தட்டையாய்த் தெரிந்த அடிவானத்தில் நகர விளக்கு களின் ஒளிர்வு மங்கிச் சென்று இரவுடன் ஒன்றுகலந்தது. தொலைவில் தெரிந்த நகரச் சுற்றுவட்டாரத்தில் டிராம் வண்டி ஒன்று ஊர்ந்து சென்றது....

ஜார்ஸ்கயெ செலோ ரயில் நிலையம் அமைதியாகவே இருந்தது. ஆனுல் இங்குமங்கும் சிறு தொகுதிகளில் படையாட்கள் தணிவான குரலில் பேசிக் கொண்டு நின்ருர்கள். காலி ரயில்பாதை வழியே காத்சினுவின் திசையில் பதைப்புடன் அவர்கள் பார்த்துக் கொண்டனர். அந்தப் படையாட்கள் எப்பக்கத்தைச் சேர்ந்தவர்கள் என்று அவர்களில் சிலரை விசாரித்தேன். ''இந்த விவகாரத்தின் நியாயங்களை நாங்கள் நன்கறிந்தவர்கள் அல்ல'' என்ருர் அவர்களில் ஒருவர். ''கேரென்ஸ்கி தூண்டிவிட்டுக் கலகம் புரிகிருர் என்பதில் சந்தேகமில்லை, ஆனுல் ருஷ்யர்கள் ருஷ்யர்களைச் சுட்டுக் கொல்வது சரியல்ல என்று நாங்கள் கருதுகிருேம்.''

ரயில் நிலையப் படைத் தலைமை நிலையத்தில் தாடியுடன் கூடிய இன்முகங் கொண்ட உயரமான படையாள் ஒருவர் இருக்கக் கண்டோம். ரெஜிமெண்டின் படையாள் கமிட்டியினது செவப்புப் பட்டையைக் கையில் அணிந்திருந்தார் அவர். ஸ்மோல்னியிலிருந்து நாங்கள் பெற்றிருந்த அத்தாட்சி ஆவணங்களைப் பார்த்த அவர் உடனே எங்களை அன்புடன் வரவேற்ருர். அவர் சோவியத்துகளை ஆதரிப்பவர் என்பது தெளிவாகவே தெரிந்தது, ஆனுல் திகைத்துப் போயிருந்தார்.

''இரண்டு மணி நேரத்துக்கு முன்பு செங்காவலர்கள் இங்கே வந்திருந்தார்கள், ஆனுல் அவர்கள் திரும்பிச் சென்றுவிட்டார்கள். காலையில் கமிசார் ஒருவர் வந்தார், ஆனுல் கசாக்குகள் வந்து சேர்ந்ததும் அவர் பெத்ரொகிராதுக்குத் திரும்பிவிட்டார்.''

''அப்படியானுல் கசாக்குகள் இங்கேதான் இருக்கிருர்களா?''

அவர் வாட்டத்துடன் தலையை ஆட்டினுர். ''போர் நடைபெற்றது. அதிகாலையில் கசாக்குகள் வந்து சேர்ந்தார்கள்.

எங்கள் ஆட்களில் இருநூறு அல்லது முன்னூறு பேரைப் பிடித்துக் கொண்டார்கள், சுமார் இருபத்தைந்து பேரைக் கொன்ருர்கள்.''

''கசாக்குகள் இங்கு எங்கே இருக்கிருர்கள்?''

''இவ்வளவு தூரம் வரவில்லை அவர்கள். இப்போது எங்கே இருக்கிருர்களோ, தெரியாது எனக்கு. இந்தப் பக்கத்தில்தான் இருக்க வேண்டும்....'' என்று அதிகத் தெளிவின்றி மேற்றிசையை நோக்கிக் கையை வீசிக் காட்டினுர்.

ரயில் நிலையச் சிற்றுண்டிசாலையில் நாங்கள் சாப்பிடோம்—சாப்பாடு நன்ருயிருந்தது—பெத்ரொகிராதில் கிடைப்பதைக் காட்டிலும் சிறப்பாகவும் மலிவாகவும் இருந்தது. எங்களுக்கு அருகே பிரெஞ்சுப் படையதிகாரி ஒருவர் அமர்ந்திருந்தார். காத்சினுவிலிருந்து இங்கு அவர் நடந்து வந்து சேர்ந்திருந்தார். அங்கே யாவும் அமைதியாகவே இருப்பதாய்க் கூறினுர் அவர். நகரம் கேரென்ஸ்கி வசமிருந்தது. ''இந்த ருஷ்யர்களை என்னென்பது! மிகவும் அலாதியானவர்கள்! எப்படிப்பட்ட உள்நாட்டுப் போர் இது, பாருங்களேன்! போர் புரிவதைத் தவிர மற்றவை யாவற்றையும் செய்து கொண்டிருக்கிருர்கள்!''

நாங்கள் நகருக்குள் சென்று சுற்றிப் பார்ப்பதற்காகப் புறப்பட்டோம். ரயில் நிலையத்தின் வாயிலில் இரு படையாட்கள் குத்தீட்டிகளைக் கொண்ட துப்பாக்கிகளுடன் நின்ருர்கள். தொழில், வணிக வட்டாரத்தோரும் அரசாங்க அலுவலர்களும் மாணவர்களுமாகச் சுமார் நூறு பேர் இருக்கும், இவ்விரு படையாட்களையும் சூழ்ந்து கொண்டு உணர்ச்சி மேலிட்டவர்களாய் வாதங்களையும் அடைமொழிகளையும் வீசித் தாக்கினர். எந்த நியாயமும் இன்றி ஏசப்படும் சிறு பிள்ளைகளைப் போல் படையாட்கள் இருவரும் என்ன செய்வதென்று தெரியாமல் விழித்தார்கள், வேதனைப்பட்டார்கள்.

மாணவரின் சீருடை அணிந்து இறுமாப்பும் இளக்காரமும் ஒளிர்ந்த முகபாவம் கொண்ட நெட்டையான இளைஞர் ஒருவர் இந்தத் தாக்குதலுக்குத் தலைமை தாங்கினுர்.

''இதை நீங்கள் எல்லாரும் உணருவீர்களென நினைக்கிறேன்'' என்று அகங்காரமான குரலில் கூறினுர் அவர். ''கூடப்

பிறந்த சோதரர்களுக்கு எதிராய் ஆயுதமேந்திக் களம் புகுவதன் மூலம் நீங்கள் உங்களைக் கொலைகாரர்களின், தேசத் துரோகிகளின் கைக்கருவிகளாக்கிக் கொள்கிறீர்கள்.''

''சோதரரே, நீங்கள் இதைப் புரிந்து கொள்ளவில்லை'' என்று கருத்தூன்றிய முறையில் அந்தப் படையாள் பதிலளித்தார். ''இரண்டு வர்க்கங்கள் இருப்பது தெரியவில்லையா உங்களுக்கு? பாட்டாளி வர்க்கம், முதலாளித்துவ வர்க்கம் ஆகிய இரண்டு வர்க்கங்கள் இருக்கின்றன. நாங்கள்—''

''எனக்குத் தெரியும்! இதெல்லாம் அசட்டுத்தனமான பேச்சு!'' என்று அம்மாணவர் முரட்டுத்தனமாய் இடைமறித்தார். ''ஏதும் அறியாத விவசாயிகளை, உம்மைப் போன்றவர்களை, கூட்டி வைத்துக் கொண்டு சிலர் கோஷச் சொற்களை முழங்குகிறார்கள். இவற்றின் பொருளை நீங்கள் புரிந்து கொள்வதில்லை, இருந்த போதிலும் கிளிப் பிள்ளைகளைப் போல் அப்படியே அவற்றைத் திருப்பிச் சொல்லிக் கொண்டிருக்கிறீர்கள்.'' கூட்டத்தினர் சிரித்தார்கள். ''நான் ஒரு மார்க்சிய மாணவன். நான் உங்களுக்குச் சொல்கிறேன், நீங்கள் ஒன்றும் சோஷலிசத்துக்காகப் போராடவில்லை. இதெல்லாம் ஜெர்மனிக்கு ஆதரவான அராஜகமே அன்றி வேறல்ல!''

''ஆம், புரிகிறது எனக்கு'' என்று பதிலளித்தார் படையாள், அவர் நெற்றியில் வியர்வை துளிர்த்துவிட்டது. ''நீங்கள் அதிகம் படித்தவர், தெளிவாகவே தெரிகிறது. நான் சாதாரண ஆள். ஆனால் நான் என்ன நினைக்கிறேன் என்றால்—''

''நீங்கள் எல்லாம் என்ன நினைக்கிறீர்கள்''—என்று ஏளனமும் இகழ்ச்சியும் தொனிக்க இடை மறித்தார் மாணவர். ''இந்த லெனின் பாட்டாளி வர்க்கத்தின் மெய் நண்பர் என்று நினைக்கிறீர்கள், இல்லையா?''

''ஆம், அப்படிதான் நினைக்கிறோம்'' என்று வேதனையுடன் பதிலளித்தார் படையாள்.

''சரி, நண்பரே, இது தெரியுமா உங்களுக்கு? இந்த லெனின் மூடிப் பூட்டப்பட்ட ரயில் பெட்டியில் ஜெர்மனி மூலம் அனுப்பப்பட்டவர் என்பது தெரியுமா? ஜெர்மானியர்களிடம் இந்த லெனின் பணம் வாங்கிக் கொண்டது தெரியுமா?''

''எனக்குத் தெரியாது அதெல்லாம்'' என்று பிடிவாத மாய்க் கூறினார் படையாள். ''ஆனால் நான் எதைக் கேட்க விரும்புகிறேனோ, என்னைப் போன்ற சாதாரண ஆட்கள் எல்லாரும் எதைக் கேட்க விரும்புகிறோமோ, அதையேதான் லெனின் கூறுகிறார் என்பது தெரிகிறது எனக்கு. இரண்டு வர்க்கங்கள் இருக்கின்றன—முதலாளித்துவ வர்க்கம், பாட்டாளி வர்க்கம்—''

''நீர் ஒரு முட்டாள்! நண்பரே, புரட்சிச் செயலுக்காக நான் ஷிலிஸ்ஸெல்புர்கில் இரண்டு ஆண்டுகள் அடைக்கப் பட்டவன். அந்தக் காலத்தில் நீங்கள் எல்லாம் புரட்சியாளர் களை சுட்டு வீழ்த்திக் கொண்டு, 'கடவுள் காத்தருள்வாராக ஜார் வேந்தனை' என்று பாடிக் கொண்டிருந்தீர்கள்! என் பெயர் வசீலி ஜியார்ஜீவிச் பானின். என்னைப் பற்றிக் கேட்ட தில்லையா நீர்?''

''கேட்டதில்லையே, என்னை மன்னிக்க வேண்டும்'' என்று பணிவுடன் கூறினார் படையாள். ''ஆனால் நான் படிக்காத ஆள். பெரிய வீரராய் இருக்கலாம் நீங்கள்.''

''ஆம், வீரனேதான்'' என்று திட நம்பிக்கை தொனிக்கும் குரலில் சொன்னார் மாணவர். ''நான் இந்த போல்ஷிவிக்குகளை எதிர்க்கிறேன். போல்ஷிவிக்குகள் நமது ருஷ்யாவை, நமது சுதந்திரப் புரட்சியை நாசமாக்குகிறார்கள். இதற்கு நீர் கூறும் விளக்கம் என்ன?''

தலையைச் சொறிந்து கொண்டார் படையாள். ''எந்த விளக்கமும் கூற முடியாதே என்னால்'' என்றார் அவர். சிந்தனையின் சிரமத்தால் அவரது முகம் கோணிச் சுருங்கிற்று. ''எனக்குத் தெட்டத் தெளிவாகத் தெரிகிறது—ஆனால் நான் படிக்காத ஆள். எனக்குத் தெரிவது என்னவென்றால், இரண்டே இரண்டு வர்க்கங்கள்தான் இருக்கின்றன—பாட்டாளி வர்க்கம், முதலாளித்துவ வர்க்கம்—''

''திரும்பவும் உமது அசட்டுச் சூத்திரத்தை ஆரம்பிக்கிறீரே!'' என்று கத்தினார் மாணவர்.

''இரண்டே இரண்டு வர்க்கங்களே இருக்கின்றன'' என்று விடாப்பிடியாகக் கூறிச் சென்றார் படையாள். ''இந்த வர்க்கத்தின் பக்கம் இல்லாதவர், அந்த வர்க்கத்தின் பக்கம் இருப்பவர் ஆவார்....''

நாங்கள் தெருவிலே சுற்ற முற்பட்டோம். விளக்குகள் சொற்பமாக, இங்கொன்றும் நெடுந் தொலைவுக்கு அப்பால் அங்கொன்றுமாக இருந்தன. மிக அரிதாகவே யாரும் செல்லக் காண முடிந்தது. அச்சம் தரும் நிசப்தம் குடி கொண்டிருந்தது—சொர்க்கத்துக்கும் நரகத்துக்கும் இடைப்பட்ட கழுவாயாக, எத்தரப்பாருக்கும் உரித்தாயிராத அரசியல் புறம் போக்காக இருந்த நகருக்குரிய நிசப்தம் அது. முடி திருத்தகங்கள் மட்டும் விளக்கொளியுடன் பிரகாசமாகவும் கூட்டமாகவும் இருந்தன, பொதுக் குளிப்பகத்தின் கதவுகளுக்கு முன்னால் நீள் வரிசை அமைந்திருந்தது, ஏனென்றால் அது சனிக்கிழமை இரவு—அனைத்து ருஷ்யாவும் குளித்துச் சுத்தமடைந்து இன்மணமூட்டிக் கொள்ளும் நேரம். இந்தக் காரியங்களுக்கான இடங்களில் சோவியத்துப் படையினரும் கசாக்குகளும் ஒன்றுகூடி உறவாடினர் என்பதில் எனக்குச் சற்றேனும் சந்தேகமில்லை.

நாங்கள் மாட்சிமைப் பூங்காவை நெருங்கிச் சென்றோம், தெருக்கள் மேலும் மேலும் வெறிச்சென்றாகி வந்தன. பாதிரி ஒருவர் மிரண்ட நிலையில் சோவியத்தின் தலைமையகத்தை எங்களுக்குச் சுட்டிக் காட்டிவிட்டு விரைவாய் நடந்தார். பூங்காவின் முன்னமைந்த அரண்மனைகளில் ஒன்றின் பக்க வாட்டுப் பிரிவில் இருந்தது அது. சன்னல்கள் இருண்டிருந்தன, கதவுகள் பூட்டப்பட்டிருந்தன. கால்சட்டையின் மேற்பட்டையில் கைகளை வைத்துக் கொண்டு சாவதானமாய் நடை போட்ட படையாள் ஒருவர் சந்தேகத்தால் கலங்கிய கண்களால் எங்களை ஏற இறங்கப் பார்த்துவிட்டு, ''இரண்டு நாட்களுக்கு முன்பு சோவியத்து இங்கிருந்து போய்ச் சேர்ந்தது'' என்றார். ''எங்கே?'' தோளை உலுக்கிக் கொண்டு, ''நெஸ்னாயூ, எனக்குத் தெரியாது'' என்றார்.

மேலும் கொஞ்ச தூரம் சென்றதும் விளக்கொளி பிரகாசித்த ஒரு பெரிய கட்டடத்தை வந்தடைந்தோம். சுத்தியலின் தட்டொலி அதனுள்ளிருந்து கேட்டது. நாங்கள் தயங்கி நின்றிருந்த போது ஒரு படையாளும் ஒரு மாலுமியும் கை கோத்துத் தெருவிலே நடந்து வந்தனர். ஸ்மோல்னியில் கிடைத்த எனது சான்றுச் சீட்டை அவர்களிடம் காட்டினேன். ''நீங்கள் சோவியத்துகளை ஆதரிப்பவர்கள்தானே?''

என்று கேட்டேன் நான். அவர்கள் பதில் கூறவில்லை, கலவரமடைந்தவர்களாய் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள்.

''இங்கே நடைபெறுவது என்ன?'' என்று அந்தக் கட்டடத்தைச் சுட்டிக்காட்டி கேட்டார் மாலுமி.

''தெரியவில்லையே.''

தயக்கத்துடன் கையை நீட்டி படையாள் சற்றே கதவைத் திறந்தார். உள்ளே தெரிந்த பெரிய கூடம் தோரணங்களாலும் ஊசியிலைக் கொத்துகளாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தது. வரிசை வரிசையாய் நாற்காலிகள் அங்கே இருந்தன. நாடக மேடை தயார் செய்யப்பட்டு வந்தது.

குண்டாயிருந்த ஒரு பெண் கையில் சுத்தியலும் வாய் நிறைய ஆணிகளும் வைத்துக் கொண்டு வெளியே வந்தார். ''என்ன வேண்டும் உங்களுக்கு?'' என்று கேட்டார்.

''இன்று இரவு நாடகம் நடைபெறுமா?'' என்று அச்சம் தொனிக்கக் கேட்டார் மாலுமி.

''ஞாயிறு இரவில் அமெச்சூர் கலைஞர்களது நிகழ்ச்சிகள் நடைபெறும்'' என்று கடுமையான குரலில் பதிலளித்து, ''போய் வாருங்கள்'' என்றார் அந்தப் பெண்.

அந்தப் படையாளுடனும் மாலுமியுடனும் நாங்கள் உரையாட முயன்று பார்த்தோம். ஆனால் அவர்கள் கலவரமடைந்தவர்களாய், சோர்வுற்றோராய்த் தோன்றினர்; விலகிச் சென்று இருட்டில் மறைந்துவிட்டனர்.

நாங்கள் மாட்சிமை அரண்மனைகளை நோக்கி இருள் சூழ்ந்த அந்தப் பிரம்மாண்ட பூங்காவின் ஓரமாய் நடந்தோம். அதன் விசித்திரமான மண்டபங்களும் அலங்காரப் பாலங்களும் தொலைவில் அரசபுரசலாய்த் தெரிந்தன. பூநீர்ச் சுனைகளிலிருந்து மெல்லிய தாரைகளாய் நீர் பீறிட்டது. செயற்கைக் குகையிலிருந்து நகைக்கத்தக்க இரும்பு அன்னம் ஒன்று ஓயாமல் நீரை உமிழ்ந்து கொண்டிருந்த இடத்தை அடைந்ததும் நாங்கள் உற்று நோக்கப்படுவதாகத் திடுமென எங்களுள் ஓர் உணர்வு எழவே தலையை உயர்த்தி மேலே பார்த்தோம். ஆயுதம் தரித்த வாட்டசாட்டமான ஆறு படையாட்களது சிடுசிடுப்பான சந்தேகப் பார்வை எங்கள் மீது பதிந்திருக்கக் கண்டோம். புற்கள் அடர்ந்த

மேட்டுப் பரப்பிலிருந்து எங்களை அவர்கள் வெறிக்கப் பார்த்தார்கள். நான் மேலே ஏறி அவர்களிடம் சென்று "நீங்கள் யார்?" என்று கேட்டேன்.

"நாங்கள் காவலர்கள்" என்று பதிலளித்தார் ஒருவர். அவர்கள் எல்லோரும் சோர்வடைந்து விட்டது போல் காணப்பட்டார்கள். வாரக் கணக்காய் இராப்பகலாய் வாதாடியும் விவாதித்தும் வந்திருந்த அவர்கள் மெய்யாகவே சோர்ந்து போயிருந்தனர்.

"நீங்கள் கேரென்ஸ்கியின் படையினரா, சோவியத்துகளின் படையினரா?"

கணப் பொழுதுக்கு அவர்கள் மௌனமாயிருந்தனர், கலவரத்துடன் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டனர். பிறகு, "நாங்கள் நடுநிலை வகிக்கிறோம்" என்றார் அந்தப் படையாள்.

பிரம்மாண்டமான எக்கத்தரீனா அரண்மனையின் வளைவு வழியே நாங்கள் அரண்மனை அடைப்பினுள் சென்று தலைமையகம் எங்கிருக்கிறது என்று விசாரித்தோம். வளைவடிவில் அமைந்த வெண்ணிற அரண்மனைப் பக்கவாட்டுப் பகுதி ஒன்றில் கதவுக்கு முன்னால் படையாள் ஒருவர் காவல் புரிந்து நின்றார். தளவாய் உள்ளே இருப்பதாய் அவர் கூறினார்.

நேர்த்தியான வெண்ணிற ஜார்ஜிய அறையானது இருபுறக் கணப்படுப்பு மேடையால் சமமில்லா இரு அறைகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. படையதிகாரிகள் சிலர் அங்கே கவலை தொனிக்கப் பேசிக் கொண்டு நின்றார்கள். அவர்களது முகங்கள் வாடிப் போய்க் கலங்கியிருந்தன, இரவில் தூங்காமல் கண் விழித்திருந்தவர்கள் என்பது தெரிந்தது. அவர்களில் ஒருவர் வெள்ளைத் தாடியுடன் வயது முதிர்ந்தவராகக் காணப்பட்டார், அவருடைய இராணுவ உடுப்பில் பதக்கங்கள் வரிசையாகத் தொங்கின. கர்னல் என்று சொல்லி அவர் எங்களுக்கு அறிமுகம் செய்யப்பட்டதும் எங்களுடைய போல்ஷிவிக்கு அடையாளச் சீட்டுகளை அவரிடம் காட்டினோம்.

அவர் வியப்புடன் எங்களை உற்று நோக்கினார். "எப்படி நீங்கள் உயிரோடு இங்கே வந்து சேர முடிந்தது?" என்று

பணிவாகவே எங்களைக் கேட்டார் அவர். ''தெருக்களில் இப்போது நிலைமை அபாயகரமாகிவிட்டது. ஜார்ஸ்கயெ செலோவில் அரசியல் ஆவேசம் கொழுந்து விட்டு எரிகிறது. இன்று காலையில் போர் நடைபெற்றது, நாளைக்குக் காலையில் இன்னொரு போர் நடைபெறும். எட்டு மணிக்குக் கேரென்ஸ்கி நகரினுள் நுழையப் போகிறார்.''

''கசாக்குகள் எங்கே இருக்கிறார்கள்?''

''சுமார் ஒரு மைல் தொலைவில் இந்தப் பக்கத்தில்'' என்று சொல்லி கையை வீசிக் காட்டினார்.

''அவர்களிடமிருந்து நகரைப் பாதுகாக்க நீங்கள் போர் புரியப் போகிறீர்கள் அல்லவா?''

''ஐயோ, இல்லை, இல்லை!'' அவர் புன்னகை புரிந்து கொண்டார். ''கேரென்ஸ்கிக்காகவே நாங்கள் இந்நகரை வைத்துக் கொண்டு காத்திருக்கிறோம்.'' எங்களுக்குப் பகீரென்றது, ஏனெனில் எங்களது அடையாளச் சீட்டுகளில் நாங்கள் முழுக்க முழுக்க புரட்சியாளர்கள் என்று குறிக்கப் பட்டிருந்தது. கர்னல் தொண்டையைக் கனைத்துக் கொண் டார். ''உங்களுடைய அந்த அடையாளச் சீட்டுகளைப் பற்றி நான் சொல்வதைக் கேளுங்கள்'' என்று கூறிச் சென்றார் அவர். ''நீங்கள் பிடிபட்டால் உங்கள் உயிருக்கு ஆபத்தாகி விடும். ஆகவே நீங்கள் போரைப் பார்க்க விரும்பினால், படையதிகாரிகளது விடுதியில் உங்களுக்கு அறைகள் தரச் சொல்லி உத்தரவு எழுதித் தருகிறேன், பிறகு காலையில் ஏழு மணிக்கு இங்கே வாருங்கள், புதிய அடையாளச் சீட்டு கள் கொடுக்கிறேன்.''

''அப்படியானால் நீங்கள் கேரென்ஸ்கியின் ஆதரவாளர் களா?''

''இல்லை, கேரென்ஸ்கியின் ஆதரவாளர்கள் என்று சொல் வதற்கில்லை.'' கர்னல் தயங்கினார். ''நகரக் காவற் படையில் பெரும்பாலான படையாட்கள் போல்ஷிவிக்குகள். இன்று போருக்குப் பிற்பாடு அவர்கள் எல்லாரும் பெத்ரொகிராதை நோக்கிச் சென்று விட்டனர், பீரங்கிகளையும் தம்முடன் எடுத்துச் சென்றுவிட்டனர். படையாட்களில் யாரும் கேரென் ஸ்கிஆதரவாளர்களென்று சொல்ல முடியாது, ஆனால் அவர் களில் சிலர் போர் புரிய விரும்பாதவர்கள் என்று சொல்ல

லாம். படையதிகாரிகளில் அனேகமாய் எல்லோரும் கேரென்ஸ்கியின் படைகளுடன் சேர்ந்து கொண்டு விட்டார்கள், அல்லது இங்கிருந்து போய்ச் சேர்ந்துவிட்டார்கள். எங்கள் நிலைமை—உம்—ம்—இக்கட்டானதுதான்....''

போர் எதுவும் நடைபெறுமென்று நாங்கள் நம்பவில்லை.... கர்னல் பணிவன்பு மிக்கவராய் தமது சேவகர் ஒருவரை எங்களை ரயில் நிலையத்துக்கு அழைத்துச் சென்று விட்டு வரச் சொன்னார். அந்தச் சேவகர் தென் பகுதியைச் சேர்ந்தவர், பெஸ்ஸராபியாவில் குடியேறிய பிரெஞ்சுப் பெற்றோருக்குப் பிறந்தவர். ''நான் இந்த அபாயங்கள் குறித்தோ, இன்னல்கள் குறித்தோ கவலைப்படவில்லை'' என்றார் அவர். ''ஆனால் என் அம்மாவை இவ்வளவு காலமாய், மூன்று ஆண்டுகளாய், விட்டுப் பிரிந்திருப்பது குறித்தே கவலைப்படுகிறேன்....''

குளிரிலும் இருட்டிலும் பெத்ரொகிராதை நோக்கி விரைந்த எங்கள் ரயிலிலிருந்து நாங்கள் சன்னல் வழியே பார்த்த போது, கணப்புத் தீயைச் சுற்றி ஆங்காங்கே சிறு திரள்களில் படையாட்கள் கைகளை ஆட்டி விவாதித்ததும், சாலைச் சந்திப்புகளில் கூட்டமாய் நின்றிருந்த கவச மோட்டார்களின் கூடுகளிலிருந்து உடலை வெளியே துருத்திக் கொண்டு அவற்றின் டிரைவர்கள் ஒருவரோடொருவர் கத்திப் பேசியதும் தெரிந்தன....

அமைதியில்லாத அந்த இரவு முழுதும் துயரார்ந்த தட்டை நிலப் பரப்புகளில் தலைமை தாங்குவோர் யாரும் இல்லாத படையாட்களும் செங்காவலர்களுமான தொகுதியோர் குழப்பமுற்று மோதிக் கொண்டு அலைந்து திரிந்தனர்; புரட்சி இராணுவக் கமிட்டியின் கமிசார்கள் ஒரு தொகுதியிலிருந்து இன்னொன்றுக்கு விரைந்து சென்று பாதுகாப்புப் படையணி அமைத்திட முயன்று கொண்டிருந்தார்கள்....

நகருக்குத் திரும்பி வந்து சேர்ந்த போது நேவ்ஸ்கி சாலையில் பரபரப்புற்ற திரளினர் போய் வரக் கண்டோம். ஏதோ நடைபெறப் போகிறது என்ற உணர்வு எங்கும் நிறைந்திருந்தது. தொலைவில் எழுந்த பீரங்கி வெடியோசை வார்சா ரயில்

நிலையத்திலிருந்து காதுக்கு எட்டிற்று. யூன்கெர் பள்ளிகளில் மும்முரமாய் வேலைகள் நடைபெற்றுக் கொண்டிருந்தன. நகர டூமாவின் உறுப்பினர்கள் ஒவ்வொரு கொட்டடிக்கும் சென்று வாதாடினார்கள், மன்றாடினார்கள், போல்ஷிவிக்கு வன்முறையைப் பற்றிய பயங்கர கதைகளை எடுத்துரைத் தார்கள்—குளிர்கால அரண்மனையில் யூன்கெர்கள் படுகொலை செய்யப்பட்டதாகவும், பெண் படையாட்கள் கற்பழிக்கப் பட்டதாகவும், டூமாவுக்கு முன்னால் ஒரு பெண் சுடப்பட்ட தாகவும், கோமகன் துமானவ் கொலையுண்டதாகவும் இன்ன பலவாறாகவும் கூறினார்கள்.... டூமா கட்டடத்தில் அலெக் சாந்திரொவ்ஸ்கி மண்டபத்தில் இரட்சணியக் கமிட்டியின் சிறப்புக் கூட்டம் நடைபெற்றுக் கொண்டிருந்தது. கமிசார் கள் வந்து கொண்டும் போய்க் கொண்டும் வெற்றிச் செய்தி கள் கூறிக் கொண்டுமிருந்தனர்.... ஸ்மோல்னியிலிருந்து வெளியேற்றப்பட்ட பத்திரிகையாளர்கள் எல்லோரும் இங்கே இருந்தார்கள், இவர்கள் அளவு கடந்த உற்சாகத் துடன் காணப்பட்டனர். ஜார்ஸ்கயெ செலோவில் இருந்த நிலைமை கள் குறித்து நாங்கள் கூறியதை அவர்கள் நம்ப மறுத்துவிட் டனர். ஜார்ஸ்கயெ கேரென்ஸ்கி கைக்கு வந்துவிட்டதும், கசாக்குகள் இப்போது பூல்க்கொவொ வந்தடைந்து விட்ட தும் எல்லாரும் நன்கறிந்த விவரமாயிற்றே என்றனர். காலை யில் ரயில் நிலையத்தில் கேரென்ஸ்கியைச் சந்திப்பதற்காக ஒரு பேராட் குழு தேர்ந்தெடுக்கப்பட்டு வந்தது....

வெளியே தெரியக் கூடாது, இரகசியம் என்று என்னை எச்சரித்து, நள்ளிரவில் எதிர்ப்புரட்சி ஆரம்பமாகிவிடு மென்ற தகவலை ஒரு பத்திரிகையாளர் அந்தரங்கமாய் என் னிடம் கூறினார். அவர் இரண்டு பிரகடனங்களை என்னிடம் காட்டினார்: கோட்ஸும் பல்க்கோவ்னிக்கவும் கையொப் பமிட்டிருந்த ஒரு பிரகடனம் போருக்குத் தயாராய் அணி திரண்டு, இரட்சணியக் கமிட்டியின் கட்டளைக்காகக் காத் திருக்கும்படி யூன்கெர் பள்ளிகளுக்கும் மருத்துவ மனைகளில் நலமடைந்து வந்த படையாட்களுக்கும் ஜார்ஜ் வீரமறவர் களுக்கும் உத்தரவிட்டது; நேரடியாய் இரட்சணியக் கமிட்டி வெளியிட்டிருந்த மற்றொன்று கூறியதாவது:

*பெத்ரொகிராது நகரவாசிகளுக்கு!*

*தோழர்களே, தொழிலாளர்களே, படையாட்களே, புரட்சிகர பெத்ரொகிராது நகரவாசிகளே!*

*போல்ஷிவிக்குகள் போர்முனையிலே சமாதானம் வேண்டுமென வேண்டுகோள் விடுத்துக் கொண்டு, அதேபோது உட்பகுதிகளில் உள்நாட்டுப் போரைத் தூண்டிவிட்டு வருகிறார்கள்.*

*தூண்டிவிடும் அவர்களது சதிகார வேண்டுகோள்களுக்குச் செவி மடுக்காதீர்கள்!*

*அகழ்வரிகள் தோண்டாதீர்கள்!*

*தேசத் துரோகச் சாலைத் தடையரண்கள் ஒழிக!*

*படைக்கலன்களைத் துறந்து விடுங்கள்!*

*படையாட்களே, உங்களது கொட்டடிகளுக்குத் திரும்பி விடுங்கள்!*

*பெத்ரொகிராதில் துவக்கப்படும் போர்—புரட்சியைச் சாகடிக்கும் போராகும்!*

*தாய்நாட்டின், புரட்சியின் இரட்சணியக் கமிட்டியை மையமாகக் கொண்டு ஒன்றுதிரள்வீர்—சுதந்திரத்துக்காக நிலத்துக்காக, சமாதானத்துக்காக!*

நாங்கள் டூமாவை விட்டு வெளியே வந்த போது செங்காவலர்களது படைக் குழு ஒன்று வெறிச்சோடிய இருட்டுச் சாலையில் அணி வகுத்து வரக் கண்டோம். முகத்தில் கடுகடுப்பும் வைராக்கியமும் பளிச்சிட அவர்கள் பன்னிரண்டு கைதிகளைக் காவல் புரிந்து அழைத்துச் சென்றனர்—அந்தக் கைதிகள் கசாக்குகளது ஒன்றியத்தின் உள்ளூர் கிளையின் உறுப்பினர்கள், எதிர்ப்புரட்சிக்காகத் தமது தலைமையகத்தில் சதி புரிந்து கொண்டிருந்த போது கையும் மெய்யுமாகப் பிடிக்கப்பட்டவர்கள்....

பசை வாளியை எடுத்துக் கொண்டு ஒரு சிறுவன் உடன் வர, படையாள் ஒருவர் கொட்டை எழுத்துகளிலான பெரிய அறிவிப்புகளை சுவரில் ஒட்டிச் சென்றார்:

*தற்போதுள்ள நிலைமை காரணமாய், பெத்ரொகிராது நகரும் அதன் சுற்றுவட்டாரங்களும் முற்றுகை நிலைமைக்கு உட்பட்டதாகுமென அறிவிக்கப்படுகிறது. மேற்கொண்டு*

உத்தரவு அறிவிக்கப்படும் வரை, எல்லா அவை அமர்வுகளுக்கும், தெருக்களிலும் பொதுவாகத் திறந்த வெளியிலுமான எல்லாக் கூட்டங்களுக்கும் தடை விதிக்கப்படுகிறது.

என். பத்வோய்ஸ்கி,
**புரட்சி இராணுவக் கமிட்டியின் தலைவர்.**

நாங்கள் வீட்டுக்குச் சென்ற போது மோட்டார் ஒலிக் கருவிகளின் சப்தமும் கூச்சல்களும் தொலைவிலிருந்து கேட்ட வெடியோசையுமாய் ஒரே குழப்படியான இரைச்சல் காற்றிலே நிரம்பியிருந்தது. நகரம் அமைதியற்று, தூக்கமின்றி சலசலத்துக் கொண்டிருந்தது.

அதிகாலையில் **யூன்கெர்** படைப் பிரிவினர் செமியோனவ்ஸ்கி ரெஜிமெண்டின் படையாட்களைப் போல் வேடம் பூண்டு தொலைபேசி இணைப்பகத்தில் காவல் படையாட்கள் மாற்றப் படும் நேரத்திற்குச் சற்றே முன்னால் அங்கே ஆஜராயினர். போல்ஷிவிக்கு அடையாளக் குறியுரை அவர்களுக்குத் தெரிந்திருந்தது, ஆகவே யாருக்கும் சந்தேகம் எழாத முறையில் அவர்கள் அங்கே காவற் கடமை ஏற்றனர். சில நிமிடங்களுக்குப் பிற்பாடு மேற்பார்வை இட்டுச் சுற்றிச் சென்ற அந்தோனவ் அங்கே வந்து சேர்ந்தார். அவர்கள் அவரைப் பிடித்து ஒரு சிறு அறையில் அடைத்துப் பூட்டினர். பிறகு காவற் பணிக்கு மாற்றுப் படையினர் வந்த போது அவர்களைப் பார்த்துத் துப்பாக்கிகள் குண்டுகளைப் பொழிந்தன. வந்தவர்களில் சிலர் கொல்லப்பட்டார்கள்.

எதிர்ப்புரட்சி ஆரம்பமாகிவிட்டது....

*அத்தியாயம் 8*

## எதிர்ப்புரட்சி

*மறு நாள் ஞாயிற்றுக்கிழமை நவம்பர் 11 காலையில் கசாக்குகள், எல்லாக் கோயில்களிலும் மணிகள் முழக்கமிட ஜார்ஸ்கயெ செலோவுக்குள் நுழைந்தனர், அவர்களுடன் கேரென்ஸ்கி[1*] வெள்ளைக் குதிரையில் ஏறி வந்தார். நகருக்கு வெளியே ஒரு சிறு குன்றின் உச்சியிலிருந்து பார்த்த போது பொன்னிறக் கோபுரக் கூம்புகளும், வண்ண வில் மாடங்களும், தட்டை வெளியில் பரந்தமைந்த தலைநகரின் சாம்பல் நிறப் பெரும் பரப்பும், அதற்கு அப்பால் உருக்கு போல் தோன்றிய பின்லாந்து வளைகுடா நீர்ப் பரப்பும் கண்ணுக்குத் தெரிந்தன.*

*போர் ஏதும் இல்லை. ஆனால் கேரென்ஸ்கி பெருந் தவறிழைத்துத் தமது கேடுகாலத்தை உறுதி செய்து கொண்டார். இரண்டாவது ஜார்ஸ்கயெ செலோ துப்பாக்கிப் படையினர் படைக் கலன்களைத் துறந்து தமக்குக் கீழ்ப்படிய வேண்டுமெனக் காலை ஏழு மணிக்கு ஆணை அனுப்பினார். அந்தப் படையாட்கள் நடுநிலை வகிப்போம், ஆனால் படைக் கலன்களைத் துறக்க மட்டோம் என்று பதிலளித்தார்கள். கேரென்ஸ்கி அவர்களுக்குப் பத்து நிமிடம் அளித்து அதற்குள் அவர்கள் கீழ்ப்படிய வேண்டும் என்றார். இது அந்தப் படையாட்களைக் கொதிப்புறச் செய்தது; பத்து மாதங்களாய்*

* இந்த அத்தியாயத்தில் எண்ணிட்டுக் காட்டப்படும் சுட்டுக்குறிகள் அத்தியாயம் 8இன் அனுபந்தத்தைக் குறிப்பவை.

அவர்கள் தமது கமிட்டியின் மூலம் தம்மைத் தாமே நிர்வகித்து வந்திருந்தவர்கள், அவர்களுக்கு இந்த ஆணையில் பழைய ஆட்சியின் வீச்சம் வீசுவதாய் இருந்தது.... சில நிமிடங்களுக்கு எல்லாம் கசாக்குப் பீரங்கிகள் அவர்களது கொட்டடிகள் மீது சுட்டன, எட்டுப் பேர் உயிரிழந்தார்கள். அந்தக் கணம் முதலாக ஜார்ஸ்கயெ செலோவில் ''நடுநிலைப்'' படையாட்கள் யாரும் இல்லை என்றாகியது....

துப்பாக்கிகள் சுடப்படும் சப்தமும், அணி வகுத்துச் செல்லும் படையாட்களது காலடியின் தடதடப்பும் கேட்டுப் பெத்ரொகிராது விழித்தெழுந்தது. மேலே வானம் இருண்டிருந்தது, குளிர் காற்றில் வெண்பனியின் வாசனை கலந்திருந்தது. விடியற் காலையில் யூன்கெர்களது பெரும் படைகளால் இராணுவ ஒட்டலும் தந்தி நிலையமும் பிடிக்கப்பட்டன, இரத்தக் களரியான போருக்குப் பிற்பாடு இவை திருப்பிப் பிடிக்கப்பட்டன. தொலைபேசி இணைப்பகத்தை மாலுமிகள் முற்றுகையிட்டிருந்தனர். இம்மாலுமிகள் மர்ஸ்காயா சாலையின் நடுவில் பீப்பாய்கள், பெட்டிகள், தகரத் தகடுகள் ஆகியவற்றாலான தடையரண்களுக்குப் பின்னால் படுத்துக் கொண்டும், காரோஹவயா, இஸாக்கியெவ்ஸ்கயா சதுக்கத்தின் மூலையில் பதுங்கிக் கொண்டும் இணைப்பகத்துள் சென்றவை, வெளியே வந்தவை யாவற்றையும் சுட்டுக் கொண்டிருந்தார்கள். செஞ்சிலுவைக் கொடியைப் பறக்க விட்டுக் கொண்டு ஓடிய மோட்டார் வண்டி எப்போதாவது உள்ளே சென்றுவிட்டு வெளியே திரும்பி வந்தது. மாலுமிகள் அதைச் சுடாமல் போகவிட்டனர்....

ஆல்பர்ட் ரைஸ் வில்லியம்ஸ்* அப்போது தொலைபேசி இணைப்பகத்தினுள் இருந்தார். காயமுற்றவர்கள் நிறைந்திருந்ததாகச் சொல்லப்பட்ட அந்த செஞ்சிலுவை மோட்டார் வண்டியில் அவர் அங்கிருந்து வெளியே போய்ச் சேர்ந்தார். நகரில் இந்த வண்டி அங்குமிங்கும் சென்றபின் சுற்று வழியில், எதிர்ப்புரட்சியின் தலைமையகமான மிகாய்லொவ்ஸ்கொயெ

* ஆல்பர்ட் ரைஸ் வில்லியம்ஸ்—ஜான் ரீடின் நண்பர், அமெரிக்க முற்போக்காளர், கருத்துரைக் கட்டுரையாளர், சோவியத் நாட்டில் சோஷலிசப் போராட்டம் குறித்துப் பல புத்தகங்கள் எழுதிய நூலாசிரியர்.—[பதிப்பாசிரியர்.]

யூன்கெர் பள்ளியை அடைந்தது. இணைப்பகத்தின் வெளிமுற்றத்தில் பிரெஞ்சுப் படையதிகாரி ஒருவர் தலைமை தாங்கியதாகத் தெரிந்தது.... இவ்விதம் போர்த் தளவாடங்களும் தேவைப் பொருள்களும் தொலைபேசி இணைப்பகத்துக்குக் கொண்டுவரப்பட்டன. மருத்துவச் சேவை புரியும் செஞ்சிலுவை வண்டிகளாக வேடம் பூண்ட இம்மாதிரியான மிகப் பல மோட்டார் வண்டிகள் யூன்கெர்களுக்குப் போக்குவரத்துச் சாதனங்களாகவும் போர்த் தளவாட வண்டிகளாகவும் பணி புரிந்தன.

கலைக்கப்பட்ட பிரிட்டிஷ் கவச மோட்டார் டிவிஷனைச் சேர்ந்த ஐந்தாறு கவச மோட்டார்கள் யூன்கெர்களின் வசமிருந்தன. இசாக்கியெவ்ஸ்கயா சதுக்கத்தின் வழியே லூயிசா பிராயன்ட்* போய்க் கொண்டிருந்தபோது இந்தக் கவச மோட்டார்களில் ஒன்று கடற்படைத் தலைமையகக் கட்டடத்திலிருந்து கிளம்பி தொலைபேசி இணைப்பகத்தை நோக்கி உருண்டோடிற்று. கோகல் சாலையின் முனையில் லூயிசா பிராயன்ட்டுக்கு நேர் எதிரே வந்ததும் அதன் இஞ்சினில் கோளாறு ஏற்பட்டு நின்றுவிட்டது. மரக் கட்டை அடுக்குகளுக்குப் பின்னால் மறைந்திருந்த மாலுமிகள் சிலர் சுட ஆரம்பித்தார்கள். கவச மோட்டாரின் சுழற்கூட்டு இயந்திரத் துப்பாக்கி சுழன்று திரும்பிக் குருட்டாம் போக்கில் மர அடுக்குகள் மீதும் கூட்டத்தினர் மீதும் சடசடவெனச் சுட்டது. திருமதி பிராயன்ட் நின்றிருந்த வளைவில் ஏழு பேர் சுட்டுக் கொல்லப்பட்டனர், இவர்களில் இருவர் சிறு பையன்கள். திடுமெனக் கூச்சலிட்டவாறு மாலுமிகள் தாவிக் குதித்து முன்னால் பாய்ந்தோடினர், குண்டு கக்கிய அந்தப் பூதத்தைச் சூழ்ந்து கொண்டு உச்சக் குரலில் கூச்சலிட்டுத் தமது துப்பாக்கிக் குத்தீட்டிகளை அதன் புழைவாய்களினுள் மீண்டும் மீண்டும் குத்தி எடுத்தனர்.... கவச மோட்டாரின் டிரைவர் காயம் பட்டுவிட்டதாகப் பாசாங்கு செய்தார், மாலுமிகள் அவரை ஓடிச் செல்லும்படி விட்டனர்—போல்ஷிவிக்கு

---

* லூயிசா பிராயன்ட் (1890—1936)—ஜான் ரீடின் மனைவியும் தோழருமான அமெரிக்க எழுத்தாளர்.—[பதிப்பாசிரியர்.]

அட்டூழியங்களைப் பற்றிய கதைகளை மேலும் பெருகச் செய்வதற்காக அந்த ஆள் நேரே டூமாவுக்கு ஓடினார்.... மோட்டாரில் மடிந்தோரில் ஒருவர் பிரிட்டிஷ் படையதிகாரி....

மற்றொரு பிரெஞ்சுப் படையதிகாரி யூன்கெர் கவச மோட்டாரிலிருந்து பிடிக்கப்பட்டு பெத்ரொபாவ்லொவ்ஸ்கயா கோட்டைக்கு அனுப்பட்ட செய்தி பிற்பாடு செய்தியேடுகளில் வெளிவந்தது. பிரெஞ்சுத் தூதரகம் உடனே இதை மறுத்தது, ஆனால் நகர டூமாவின் உறுப்பினர்களில் ஒருவர் தாமே நேரில் முயற்சி செய்து இந்தப் பிரெஞ்சுப் படையதிகாரி சிறையிலிருந்து விடுதலை செய்யப்படும்படி வைத்ததாக என்னிடம் கூறினார்....

நேசநாட்டுத் தூதரகங்களது அதிகாரபூர்வமான நிலை எப்படிப்பட்டதாக இருந்திருப்பினும், தனிப்பட்ட பிரெஞ்சு, பிரிட்டிஷ் படையதிகாரிகள் இந்நாட்களின் போது முன்னின்று செயல்படவே செய்தனர், இரட்சணியக் கமிட்டியின் செயற்குழு அமர்வுகளில் வல்லுநர்களாய் ஆலோசனை அளித்திடும் அளவுக்குங்கூட சென்றனர்.

நாள் முழுதும் நகரின் ஒவ்வொரு பகுதியிலும் யூன்கெர்களுக்கும் செங்காவலர்களுக்கும் கைகலப்புகள் ஏற்பட்டன, கவச மோட்டார்களுக்கிடையே போர்கள் நடைபெற்றன.... அலையலையாக இணைந்தும் தனித்தனியாகவும் சுடப்படும் சப்தமும், இயந்திரத் துப்பாக்கிகளது கீச்சிடும் சடசடப்பும் தொலைவிலிருந்தும் அருகாமையிலிருந்தும் காதுக்கு எட்டின. கடைகளின் கிராதிக் கதவுகள் மூடப்பட்டிருந்தன, ஆனால் வியாபாரம் தொடர்ந்து நடைபெற்று வந்தது. திரைப்படக் கூடங்களின் வெளிவிளக்குகள் யாவும் நிறுத்தப்பட்டு, முழு அளவுக்குக் கூட்டம் நிரம்பியிருக்க உள்ளே படக் காட்சிகள் நடைபெற்று வந்தன. டிராம் வண்டிகள் எப்போதும் போல் ஓடின. தொலைபேசிகள் வேலை செய்து வந்தன, இணைப்பகத்தைக் கூப்பிட்ட போது துப்பாக்கி சுடப்படும் சப்தம் கம்பி வழியே வந்து தெளிவாய்க் காதில் விழுந்தது.... ஸ்மோல்னி துண்டிக்கப்பட்டிருந்தது, ஆனால் நகர டூமாவும் இரட்சணியக் கமிட்டியும் எல்லா யூன்கெர் பள்ளிகளோடும், ஜார்ஸ்கயெ‌விலிருந்த கேரென்ஸ்கியோடும் இடையறாது தொலைபேசித் தொடர்பு கொண்டிருந்தன.

காலை ஏழு மணிக்கு விளதீமிர் யூன்கெர் பள்ளிக்குப் படையாட்களையும் மாலுமிகளையும் செங்காவலர்களையும் கொண்ட படைக் குழு சென்று, யூன்கெர்கள் படைக் கலன்களைத் துறந்துவிட்டுச் சரணடைய அவர்களுக்கு இருபது நிமிடம் அளித்தது. இந்த இறுதி எச்சரிக்கையை யூன்கெர்கள் நிராகரித்தனர். ஒரு மணி நேரத்துக்குப் பிற்பாடு அவர்கள் வெளியே அணி வகுத்துச் செல்ல முயன்ற போது, கிரிபேத்ஸ்கயாவுடன் பொல்ஷோய் சாலை சேரும் மூலையிலிருந்து எழுந்த கடுமையான குண்டுமாரியால் திருப்பியடிக்கப்பட்டனர். சோவியத்துப் படைகள் அந்தக் கட்டடத்தைச் சுற்றி வளைத்துக் கொண்டு சுட ஆரம்பித்தன, இரண்டு கவச மோட்டார்கள் முன்னும் பின்னுமாகச் சென்று இயந்திரத் துப்பாக்கிகள் கொண்டு சுட்டன. யூன்கெர்கள் உதவி வேண்டுமென்று தொலைபேசியில் கேட்டனர். கசாக்குகள் தம்மால் வெளியே வருவதற்கில்லை, தமது கொட்டடிகளை ஒரு பெருந்தொகுதியான மாலுமிகள் வளைத்துக் கொண்டு விட்டனர், அவர்களிடம் இரண்டு பீரங்கிகள் இருக்கின்றன என்று பதிலளித்தார்கள். பாவ்லவ்ஸ்க் பள்ளியும் சூழ்ந்து கொள்ளப் பட்டுவிட்டது. மிகாயீலவ்ஸ்காயே யூன்கெர்களில் மிகப் பெரும்பாலோர் தெருக்களில் போர் புரிந்து கொண்டிருந்தார்கள்....

பதினொன்றரை மணிக்கு மூன்று களப்பீரங்கிகள் வந்து சேர்ந்தன. சரணடையும்படி இன்னொரு தரம் கோரப்பட்டது. ஆனால் யூன்கெர்கள் வெள்ளைக் கொடியை ஏந்தி வந்த சோவியத்துப் பிரதிநிதிகளில் இருவரைச் சுட்டு வீழ்த்தி இந்தக் கோரிக்கைக்குப் பதிலளித்தார்கள். உடனே முழு மூச்சுடன் குண்டு வீச்சு ஆரம்பமாயிற்று. பள்ளியின் சுவர்களில் பெரும் பெரும் பொந்துகள் பிய்த்தெடுக்கப்பட்டன. யூன்கெர்கள் தம்மைப் பாதுகாத்துக் கொள்வதற்காக மூர்க்கமாகப் போராடினர். கூச்சலிட்டு அலையலையாக எழுந்து தாக்குதல் தொடுத்த செங்காவலர்கள் நாசகாரக் குண்டு மாரியில் சுருண்டு விழுந்தார்கள்.... புரட்சி இராணுவக் கமிட்டியுடன் எவ்விதமான பேச்சுவார்த்தையும் நடத்த மறுக்கும்படி ஜார்ஸ்கயெஸிலிருந்து கேரென்ஸ்கி தொலைபேசியில் கூறியிருந்தார்.

தோல்வியையும் தம்மவர்களில் மாண்டு விழுந்து கிடந்தோரது குவியல்களையும் கண்டு மூர்க்கம் கொண்டுவிட்ட சோவியத்துப் படையினர் இடிந்து தகர்ந்த அந்தக் கட்டடத்தின் மீது உருக்கையும் தீயையும் கிளர்த்திவிட்டுச் சூறுவளித் தாக்குதல் தொடுக்க முற்பட்டனர். அவர்களது படையதிகாரிகளாலுங்கூட அந்தப் பயங்கரக் குண்டுத் தாக்குதலை நிறுத்த முடியாமற் போயிற்று. ஸ்மோல்னியிலிருந்து வந்த கிரீலவ் என்ற கமிசார் ஒருவர் இதைத் தடுக்க முயன்முர், ஆனுல் அவரையே கொன்று தீர்த்துவிடுவோமென படையினர் அச்சுறுத்தினர். செங்காவலர்களுக்கு இரத்தம் அப்படிக் கொதித்துக் கொண்டிருந்தது.

இரண்டரை மணிக்கு யூன்கெர்கள் வெள்ளைக் கொடிகள் இரண்டை உயர்த்தினர். தமக்குப் பாதுகாப்பு உறுதி செய்யப்படுமாயின் சரணடைவதாகக் கூறினர். இந்த வாக்குறுதி அளிக்கப்பட்டது. கூச்சலெழுப்பி அடித்து மோதிக் கொண்டு ஆயிரக் கணக்கான படையாட்களும் செங்காவலர்களும் சன்னல்கள், வாயில்கள், சுவர்களிலிருந்த பொந்துகள் ஆகிய யாவற்றின் வழியாகவும் வெள்ளம் போல் உள்ளே பாய்ந்தனர். தடுத்து நிறுத்துவதற்குள் ஐந்து யூன்கெர்கள் அடிபட்டும் குத்தப்பட்டும் கொல்லப்பட்டு விட்டார்கள். ஏனையோர்—சுமார் இருநூறு பேர் இருக்கும்—காவலுடன் பெத்ரொபாவ்லொவ்ஸ்கயா கோட்டைக்கு அனுப்பப்பட்டார்கள். கவனத்தைக் கவராதிருக்கும் பொருட்டு சிறு சிறு கோஷ்டிகளாகவே அனுப்பிவைக்கப் பட்டார்கள். ஆயினும் வழியில் ஒரு கோஷ்டி கும்பலால் தாக்கப்படலாயிற்று, மேலும் எட்டு யூன்கெர்கள் கொலையுண்டு போயினர்.... நூற்றுக்கும் அதிகமான செங்காவலர்களும் படையாட்களும் இந்தப் போரில் உயிர் நீத்தனர்....

வெற்றியாளர்கள் பொறியாளர் பள்ளியை நோக்கிச் செல்கிமுர்களென இரண்டு மணி நேரத்துக்குப் பிற்பாடு தொலைபேசி மூலம் நகர டூமாவுக்குச் செய்தி வந்தது. உடனே இரட்சணியக் கமிட்டியின் கடைசிப் பிரகடனங்களை இவர்களிடையே வினியோகிப்பதற்காகக் கை நிறைய சுமந்து கொண்டு பன்னிரண்டு உறுப்பினர்கள் புறப்பட்டார்கள். இவர்கள் சிலர் திரும்பி வரவில்லை.... ஏனைய எல்லாப்

பள்ளிகளும் எதிர்ப்பில்லாமலே சரணடைந்தன, இவற்றின் யூன்கெர்கள் எந்தத் தீங்குமின்றி பெத்ரொபாவ்லொவ்ஸ் கயா கோட்டைக்கும் கிரன்ஷ்தாத்து கோட்டைக்கும் அனுப் பப்பட்டார்கள்....

தொலைபேசி இணைப்பகம் பிற்பகல் வரை எதிர்த்து நின்றது. பிறகு போல்ஷிவிக்குக் கவச மோட்டார் ஒன்று வந்த பின் மாலுமிகள் அதனுள் பாய்ந்தனர். பீதியுற்ற தொலைபேசிப் பெண்கள் வீறிட்டுக் கத்திக் கொண்டு அங்கும் இங்கும் ஓடினார்கள், யூன்கெர்கள் தமது உடுப்புகளிலிருந்து எல்லாச் சின்னங்களையும் பிய்த்தெறிந்தார்கள். இவர்களில் ஒருவர் அடையாளம் தெரியாதபடி வேடம் பூண்டு ஓடிச் செல்வதற்காக வில்லியம்ஸின் மேல் கோட்டை இரவல் தரும்படிக் கேட்டு, அந்த உதவிக்காக வில்லியம்ஸுக்கு எவ்வளவு வேண்டுமானாலும் தருவதாகச் சொல்லி மன்றாடினா ராம்.... ''அவர்கள் எங்களைப் படுகொலை செய்துவிடுவார் கள்! படுகொலை செய்துவிடுவார்கள்!'' என்று யூன்கெர்கள் கதறினார்கள். அவர்களில் பலரும் மக்களுக்கு விரோதமாய் ஆயுதம் ஏந்துவதில்லை என்று முன்பே குளிர்கால அரண் மனையில் வாக்களித்தவர்கள். அவர்கள் அந்தோனவை விடு தலை செய்தால் அவர்கள் சார்பில் தாம் பேசிப் பார்ப்ப தாய் வில்லியம்ஸ் கூறினார். இது உடனே செய்யப்பட்டது. வெற்றி பெற்ற மாலுமிகள் தமது தரப்பினர் பலரும் மாண்டு விட்டதால் கொதிப்புற்றிருந்தார்கள், இவர்களுக்கு அந்தோ னவும் வில்லியம்சும் சொற்பொழிவாற்றினர்—மீண்டும் ஒரு தரம் யூன்கெர்கள் தடையின்றி வெளியே போய்ச் சேர்ந்தார் கள்.... ஒரு சிலர் மட்டும்தான் பீதியடைந்து கூரைகள் மீது ஏறி ஓடி, அல்லது மச்சில் பதுங்கித் தப்பித்துக் கொள்ள முயன்ற போது விரட்டிப் பிடிக்கப்பட்டுக் கீழே தெருவில் தூக்கியெறியப்பட்டார்கள்.

களைத்துப் போய், ஆவேசம் மிக்கவராய், வெற்றிக் களிப்புடன் மாலுமிகளும் தொழிலாளர்களும் இணைப்புப் பொறி அறைக்குள் வந்து குவிந்தனர். அங்கே கண்ணுக்கினிய பெண்கள் அத்தனை பேர் இருக்கக் கண்டதும் குழம்பிப் போய் பின்வாங்கித் தடுமாறிக் கொண்டு நின்றனர். ஒரு பெண்ணுக்குங்கூட எவ்வித தீங்கும் நேர்ந்துவிடவில்லை,

யாரும் அவமானத்துக்கு உள்ளாகி விடவில்லை. மிரண்டு போய் இந்தப் பெண்கள் மூலை முடுக்குகளில் ஒடுங்கிக் கொண்டார்கள். பிறகு அபாயம் ஏதும் இல்லை என்பது தெரிந்ததும் தமது பகைமையையும் வெறுப்புணர்ச்சியையும் வெளிப்படுத்த ஆரம்பித்தார்கள். ''ஐயே, அசிங்கம் பிடித்தவர்கள்! அறிவில்லாத முரடர்கள்! முட்டாள்கள்!''... மாலுமிகளும் செங்காவலர்களும் சங்கடப்பட்டுக் கொண்டு விழித்தார்கள். ''தடியர்கள்! பன்றிகள்!'' என்று கீச்சிட்டவாறு இந்தப் பெண்கள் ஆத்திரமாய்த் தமது கோட்டுகளையும் தொப்பிகளையும் எடுத்துப் போட்டுக் கொண்டார்கள். முன்பு யூன்கெர்களுடன் இருந்து கொண்டு அவர்களுக்குத் தோட்டாக்களை எடுத்துக் கொடுத்து உதவிய போதும், அந்த நவநாகரிக இளம் காவலர்களது காயங்களுக்குக் கட்டு போட்டுக் கட்டிய போதும் அந்த அனுபவம் இந்தப் பெண்களுக்கு அகமகிழத் தக்கதாய், உணர்ச்சி வயப்படுத்துவதாய் இருந்தது. அந்த யூன்கெர்களில் பலரும் பிரபுக் குடும்பத்தவர்கள், அருமையும் பெருமையும் வாய்ந்த ஜார் வேந்தனை மீண்டும் அரியாசனத்தில் அமர்த்துவதற்காகப் போராடியவர்கள்! ஆனால் இந்த ஆட்கள் எல்லாரும் சாதாரணத் தொழிலாளர்கள், விவசாயிகள், ''இருண்ட மக்கள்''....

புரட்சி இராணுவக் கமிட்டியின் கமிசாராகிய சின்னஞ்சிறிய விஷ்னியாக் இந்தப் பெண்களை இங்கேயே இருந்து தொடர்ந்து வேலை செய்ய இணங்க வைப்பதற்கு முயன்று பார்த்தார். மிகவும் உருக்கமாய், பணிவன்புடன் வேண்டிக் கொண்டார். ''நீங்கள் மோசமான முறையில் நடத்தப் பட்டு வந்தவர்கள்'' என்றார் அவர். ''தொலைபேசி அமைப்பு நகர டூமாவின் நிர்வாகத்திற்கு உட்பட்டது. உங்களுக்கு அறுபது ரூபிள் மாதச் சம்பளமே தரப்படுகிறது, நீங்கள் பத்து மணி நேரமும், அதற்கு மேலுங்கூட வேலை செய்ய வேண்டியிருக்கிறது.... இனி இவை யாவும் மாற்றப்பட்டு விடும். தொலைபேசி அமைப்பை அரசாங்கம் தபால், தந்தி அமைச்சகத்தின் கீழ் கொண்டு வரப் போகிறது. உங்கள் சம்பளம் உடனடியாக நூற்று ஐம்பது ரூபிளாய் உயர்த்தப்படும், உங்கள் வேலை நேரம் குறைக்கப்படும். தொழி

லாளி வர்க்கத்தின் உறுப்பினர்கள் என்ற முறையில் நீங்கள் மகிழ்ச்சியடைய வேண்டியவர்கள்—''

தொழிலாளி வர்க்கத்தின் உறுப்பினர்களாமே! இந்த ஆட்களுக்கும்—இந்த மிருகங்களுக்கும்—எங்களுக்கும் பொதுவான இயல்புகள் எவையும் இருப்பதாக நினைத்தா இப்படிக் கூறுகிறார் இவர்? இங்கேயே இருந்து வேலை செய்வதாவது! முடியாது, ஆயிரம் ரூபிள் கிடைப்பதாயினும் முடியாது!... கர்வமும் வெறுப்பும் மிக்கவர்களாக இந்தப் பெண்கள் தொலைபேசி இணைப்பகத்திலிருந்து வெளியேறினார்கள்....

கம்பி வழிக் காப்போரும் தொழிலாளர்களும் பணியாட்களும் தங்கியிருந்தார்கள். ஆனால் இணைப்புப் பொறிகள் இயக்கப்பட்டாக வேண்டும்—தொலைபேசி இன்றியமையாதது.... பயிற்சி பெற்ற இணைப்புப் பொறி இயக்கப் பெண்கள் ஆறு பேர் மட்டுமே இருந்தார்கள். தொண்டர்கள் வேண்டுமென்று அறைகூவப்பட்டதும், மாலுமிகளும் படையாட்களும் தொழிலாளர்களுமாக நூறு பேர் முன்வந்தார்கள். ஆறு பெண்கள் முன்னும் பின்னுமாய் விரைந்து சென்று, சொல்லித் தந்தார்கள், உதவி செய்தார்கள், ஏசவும் செய்தார்கள்.... இவ்விதம் முடமான நிலையில் தட்டுத் தடுமாறிக் கொண்டு தந்திக் கம்பிகள் மெதுவாகச் செயல்பட ஆரம்பித்தன, தட்டுத் தடுமாறிய போதிலும் தொடர்ந்து இயங்கிக் கொண்டிருந்தன. முதல் வேலையாக, ஸ்மோல்னியைக் கொட்டடிகளோடும் ஆலைகளோடும் இணைத்தாக வேண்டியிருந்தது; அடுத்து டூமாவையும் யூன்கெர் பள்ளிகளையும் துண்டிக்க வேண்டியிருந்தது.... பிற்பகலின் கடைப் பகுதியில் இது பற்றிய பேச்சு நகரெங்கும் பரவிற்று, முதலாளித்துவப் பிரதிநிதிகள் நூற்றுக் கணக்கில் இணைப்பகத்தை அழைத்துக் கூச்சலிட்டனர்: ''முட்டாள்கள்! பைசாங்கள்! அதிக நேரம் நீடிப்பீர்கள் என்று நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள்? இருங்கள், கசாக்குகள் வரட்டும், பார்ப்போம்!''

இருட்டாகி வந்தது. ஆள் நடமாட்டம் அனேகமாய் இல்லாமல் வெறிச்சென்றிருந்த நேவ்ஸ்கியில் கடுப்பான காற்று வீசிச் சென்றது, கஸான் தேவாலயத்துக்கு எதிரே கூடியிருந்த கூட்டத்தினர் முடிவில்லாத விவாதத்தைத் தொடர்ந்து நடத்திச் சென்றார்கள். ஒரு சில தொழிலாளர்களையும்

படையாட்களேயும் தவிர ஏனையோர் கடைக்காரர்களும் எழுத் தர்களும் இன்ன பிறவோருமாய் இருந்தார்கள்.

''ஜெர்மனியைச் சமாதனத்துக்கு வரும்படி செய்ய முடியாது இந்த லெனினுல்!'' என்று ஒருவர் இரைந்தார்.

ஓர் இளம் படையாள் கோபமாகப் பதிலளித்தார்: ''யாருடைய குற்றம் அது? இந்தச் சனியன் பிடித்த கேரென்ஸ்கி, இந்த முதலாளித்துவக் கழிசடைதான் காரணம்! நாசமாகப் போக இந்தக் கேரென்ஸ்கி! எங்களுக்கு வேண்டாம் அவர்! எங்களுக்கு வேண்டியவர் லெனின்தான்....''

டூமாவுக்கு வெளியே வெள்ளேக் கைப்பட்டையுடன் கூடிய படையதிகாரி ஒருவர் பலத்த குரலில் சபித்தவாறு சுவரிலிருந்து சுவரொட்டிகளேக் கிழித்துக் கொண்டிருந்தார். அவற்றில் ஒன்று வருமாறு:

பெத்ரொகிராது நகரவாசிகளுக்கு!

அபாயம் மிகுந்த இந்நேரத்தில், நகர டூமா முழு பலத்தையும் உபயோகித்து நகரவாசிகளே அமைதி கொள்ளச் செய்வதற்கும், அவர்களுக்கு ரொட்டியும் அவசியமான பிற பொருள்களும் கிடைக்கும்படி உறுதி செய்வதற்கும் பாடுபட வேண்டிய இந்தேரத்தில், வலதுசாரி சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களும் கடேட்டுகளும் தமது கடமையை மறந்து, நகர டூமாவை எதிர்ப்புரட்சிக் கூட்டமாக மாற்றியிருக்கிருர்கள், நகரவாசிகளில் ஒரு பகுதியோரைப் பிற பகுதியோருக்கு எதிராய்க் கிளர்த்தவிட முயலுகிருர்கள், இதன் மூலம் அவர்கள் கர்னீலவ்-கேரென்ஸ்கி வெற்றிக்கு அனுசரணேயாகச் செயல்படுகிருர்கள். தமது கடமையை நிறைவேற்றுவதற்குப் பதில் வலதுசாரி சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களும் கடேட்டுகளும் நகர டூமாவை தொழிலாளர்கள், படையாட்கள், விவசாயிகள் பிரதிநிதிகளது சோவியத்துகள் மீது அரசியல் தாக்குதல் தொடுப்பதற்கும், சமாதானத்துக்கும் ரொட்டிக்கும் சுதந்திரத்துக்குமான புரட்சிகர அரசாங்கத்தை எதிர்ப்பதற்குமாகிய அரங்காய் மாற்றிக் கொண்டுவிட்டனர்.

பெத்ரொகிராது நகரவாசிகளே, உங்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட போல்ஷிவிக்கு நகர டூமா உறுப்பினர்களாகிய நாங்கள் உங்களுக்குத் தெரிவித்துக் கொள்ள விரும்புவது

என்னவென்ருல், வலதுசாரி சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களும் கடேட்டுகளும் எதிர்ப்புரட்சி நடவடிக்கைகளில் ஈடுபட்டு வருகிருர்கள், தமது கடமையை மறந்து விட்டார்கள், நகரவாசிகளைப் பஞ்சத்தையும் உள்நாட்டு யுத்தத்தையும் நோக்கி இட்டுச் செல்கிருர்கள். 1,83,000 வாக்குகள் பெற்றுத் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களாகிய நாங்கள் நகர டூமாவில் நடைபெறுவதை உங்கள் கவனத்துக்குக் கொண்டு வருவது எங்கள் கடமையாகுமெனக் கருதுகிருேம்; இதன் பயங்கரமான, ஆனுல் தவிர்க்க முடியாத விளைவுகளுக்கு எவ்விதத்திலும் பொறுப்பானவர்களாய் இருக்க மறுக்கிருேம் என்பதை அறிவிக்கின்ருேம்....

எப்போதாவது சுடப்படும் சப்தம் நெடுந்தொலைவிலிருந்து இன்னமும் கேட்டுக் கொண்டுதான் இருந்தது. ஆனுல் நகரம் அதனை ஆட்டிக் குலுக்கிய கடுமையான அதிர்ச்சிகளால் களைத்து ஓய்ந்துவிட்டாற் போல் அமைதியாக, குளிராக இருந்தது.

நிக்கலாயெவ்ஸ்கி மண்டபத்தில் நகர டூமாவின் அமர்வு முடிவடைந்து கொண்டிருந்தது. வெறித்தனமான டூமாவுங்கூட சற்று கதி கலக்கமுற்றுவிட்டதாகத் தோன்றியது. கமிசார்கள் ஒவ்வொருவராய் நடைபெற்றவற்றைக் கூறிச் சென்றனர்—தொலைபேசி இணைப்பகம் பிடிக்கப்பட்டது, தெருக்களில் நடைபெற்ற சண்டைகள், விளதீமிர் பள்ளி கைப்பற்றப்பட்டது முதலான பலவற்றையும் கூறிச் சென்றனர்.... ''தான்தோன்றித் தனமான வன்முறையை எதிர்த்துப் போராடும் டூமாவானது ஜனநாயகத்தை ஆதரித்து நிற்கிறது'' என்ருர் துரூப். ''எப்படியும், எத்தரப்பினர்வெற்றியடைந்தாலும்,டூமா எப்போதும் கொலைகளையும் சித்திரவதையையும் எதிர்க்கவே செய்யும்....''

கொடூர முகங்கொண்ட நெட்டைக்கிழவரான காடேட்டு கனேவ்ஸ்கி கூறினுர்: ''சட்ட பூர்வமான அரசாங்கத்தின் படைகள் பெத்ரொகிராதுக்குள் வந்ததும், அவை இந்தக் கலகக்காரர்களைச் சுட்டு வீழ்த்தும். அது கொலைச் செயலாய் இராது!'' மண்டபம் எங்குமிருந்து, அவருடைய கட்சியினரிடமிருந்துங்கூட கண்டனக் குரல்கள் எழுந்தன.

இங்கே சஞ்சலமும் மனச் சோர்வும் நிலவியது தெளிவாகவே தெரிந்தது. எதிர்ப்புரட்சியானது நசுக்கப்பட்டு வந்தது. சோஷலிஸ்டுப் புரட்சியாளர் கட்சியின் மத்தியக் கமிட்டி அதன் தலைவர்களிடம் தனக்கு நம்பிக்கை இல்லை என்று பெரும்பான்மை வாக்குகள் மூலம் தெரிவித்தது, இடது சாரி ஆதிக்க நிலை பெற்று வந்தது, அவ்க்சேன்தியெவ் ராஜிநாமா செய்ய வேண்டியதாயிற்று. கேரென்ஸ்கியை வரவேற்பதற்காக ரயில்நிலையத்துக்கு அனுப்பப்பட்ட வரவேற்புக் கமிட்டி கைது செய்யப்பட்டு விட்டதென்று செய்தித் தூதர் ஒருவர் அறிவித்தார். தொலைவில், தெற்கிலும் தென்மேற்கிலும், பீரங்கிகள் வெடிமுழக்கமிட்டதன் உறுமல் தெருக்களில் காதில் விழுந்தது. இன்னமும் கேரென்ஸ்கி வந்து சேரவில்லை....

**பிராவ்தா, நியேலோ நரோதா, நோவயா ழீஸின்** ஆகிய மூன்று செய்தியேடுகள் மட்டுமே அன்று வெளிவந்தன. புதிய ''கூட்டணி'' அரசாங்கம் பற்றிய தகவல்களுக்கு மூன்று செய்தியேடுகளும் நிறைய இடம் ஒதுக்கியிருந்தன. சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களது செய்தியேடு காடேட்டுகளோ, போல்ஷிவிக்குகளோ இல்லாத அமைச்சரவை வேண்டுமெனக் கோரிற்று. கோர்க்கி நம்பிக்கை தெரிவித்தார்; ஸ்மோல்னி ஓரளவு விட்டுக் கொடுத்திருக்கிறது, முதலாளித்துவ வர்க்கத்தைத் தவிர ஏனைய எல்லாக் கூறுகளையும் கொண்ட முற்றிலும் சோஷலிஸ்டு அரசாங்கமான ஒன்று உருவாகி வருகிறது என்றார். **பிராவ்தாவைப்** பொறுத்த வரை அது எள்ளி நகையாடிற்று:

ஐயத்துக்கு இடமான புகழுடைத்த ஒரு சிறு குழுவோராகிய பத்திரிகையாளர்களை முதன்மையான உறுப்பினர்களாகக் கொண்ட அரசியல் கட்சிகளுடனான இந்தக் கூட்டுகளை நாங்கள் ஏளனம் புரிகிறோம். எங்களுடைய ''கூட்டு'', பாட்டாளி வர்க்கமும் புரட்சிகரச் சேனையும் ஏழை விவசாயிகளுடன் கொண்டிருக்கும் கூட்டாகும்....

**விக்ழேல்** வீண்பெருமை கொண்டு இறுமாப்புடன் வெளியிட்ட அறிக்கை ஒன்று சுவர்களில் காணப்பட்டது; இரு

தரப்பாளரும் சமரசத்துக்கு வராவிடில் வேலைநிறுத்தம் செய்யப்படும் என்று அது அச்சுறுத்திற்று:

இந்தக் கலகங்களை வெற்றி கொள்ளப் போகிறவர்கள், நமது நாட்டை அழிவிலிருந்து காப்பாற்றப் போகிறவர்கள் போல்ஷிவிக்குகளோ, இரட்சணியக் கமிட்டியோ, கேரென்ஸ்கியின் படைகளோ அல்ல; ரயில்வேத் தொழிற் சங்கமாகிய நாம்தான் இதைச் செய்யப் போகிறோம்....

ரயில்வேக்களைப் போன்ற சிக்கல் வாய்ந்த ஓர் அமைப்பினை நிர்வகிப்பதற்குச் செங்காவலர்கள் திறனற்றவர்கள். இடைக்கால அரசாங்கத்தைப் பொறுத்த மட்டில் ஆட்சியதிகாரம் வகிப்பதற்குத் தான் திறனற்றதென்பதைக் காட்டிக் கொண்டுவிட்டது....

அனைத்து ஜனநாயகத்தின் நம்பிக்கையையும் அடிப்படையாகக் கொண்ட ஓர் அரசாங்கத்தினுடைய... அதிகாரத்தின் பேரில் செயல்படாத எந்தக் கட்சிக்கும் நாங்கள் சேவை புரிய மறுக்கின்றோம்....

வற்றாத மனித சக்தியினது செயற்பாட்டின் அளவு கடந்த ஜீவ ஆற்றலால் அதிர்ந்து கொண்டிருந்தது ஸ்மோல்னி.

தொழிற் சங்கங்களது தலைமையகத்தில் லஸோவ்ஸ்கி என்னை நிக்கலாய் ரயில் பாதையைச் சேர்ந்த ரயில்வேத் தொழிலாளர்களது பிரதிநிதியிடம் அறிமுகம் செய்து வைத்தார். இந்தப் பிரதிநிதி ரயில்வேத் தொழிலாளர்கள் மாபெரும் பொதுக் கூட்டங்கள் நடத்தித் தமது தலைவர்களது செயலைக் கண்டிக்கிறார்கள் என்று சொன்னார்.

''அனைத்து ஆட்சியதிகாரமும் சோவியத்துகளுக்கே!'' என்று மேசையில் ஓங்கித் தட்டிப் பலக்கக் கூவினார் அவர். ''மத்தியக் கமிட்டியிலுள்ள அபரோன்த்ஸி கட்சியினர் கர்னீலவின் வேலையைச் செய்து வருகிறார்கள். இராணுவத் தலைமை அலுவலகத்துக்கு அவர்கள் தமது தூதுக் குழுவினை அனுப்பினார்கள், ஆனால் நாங்கள் இக்குழுவினரை மீன்ஸ்கில் கைது செய்தோம்.... எங்கள் கிளை அனைத்துருஷ்ய மாநாடு கூட்டப்பட வேண்டுமென்று கோரியுள்ளது, இவர்கள் இம்மாநாட்டைக் கூட்ட மறுக்கிறார்கள்....''

சோவியத்துகளிலும் சேனைக் கமிட்டிகளிலும் இருந்த அதே நிலைமைதான் இங்கும் நிலவிற்று. ருஷ்யா எங்கும் பல்வேறு ஜனநாயக நிறுவனங்களும் ஒவ்வொன்றாகப் பிளவு பட்டு மாற்றமடைந்து வந்தன. கூட்டுறவு நிறுவனங்கள் தம்முள்ளான போராட்டங்களால் குலுக்கப்பட்டன. விவசாயிகள் பிரதிநிதிகளது செயற் கமிட்டிக் கூட்டங்கள் கடும் பூசல்கள் ஏற்பட்டுக் கலைந்தன. கசாக்குகளிடையிலுங்கூட சச்சரவுகள் எழுந்தன....

உச்சி மாடியில் புரட்சி இராணுவக் கமிட்டி முழு மூச்சுடன் செயல்பட்டு சக்கை போடு போட்டது, சிறிதும் தளரவே இல்லை. புது முறுக்கோடும் வலிவோடும் ஆட்கள் உள்ளே சென்றார்கள். ஓயாமல் ஒழியாமல் இராப் பகலாய் அவர்கள் இந்த பயங்கரப் பொறியமைவினுள் குதித்தார்கள், களைத்து ஓய்ந்து குரல் கம்மிப் போய் மேலெல்லாம் அழுக் கேறிய நிலையில் அதிலிருந்து வெளியே வந்தார்கள், தரையிலே விழுந்து அப்படியே தூங்கி எழுவதற்காக வெளியே வந்தார்கள்.... இரட்சணியக் கமிட்டி சட்ட விரோதமானதாக்கப் பட்டது. புதிய பிரகடனங்கள்[2] பெரும் குவியல்களாகத் தரையில் ஆங்காங்கே குவிக்கப்பட்டிருந்தன:

...நகரக் காவற் படையிடமோ தொழிலாளி வர்க்கத்திடமோ எந்த ஆதரவும் இல்லாத இந்தச் சதிகாரர்கள் தமது தாக்குதலைத் திடீரென நடத்துவதையே யாவற்றுக்கும் முதலாவதாக நம்பியிருந்தனர். செங்காவலர்களில் ஒருவரான படையாளின் விழிப்புணர்ச்சியின் விளைவாக—இந்தப் படையாளின் பெயர் எல்லாருக்கும் தெரியும் படி அறிவிக்கப் படும்—துணை லெப்டினண்டு பிளகன்ராவவால் இவர்களது திட்டம் தக்க தருணத்தில் கண்டுபிடிக்கப்பட்டது. இரட்சணியக் கமிட்டி இந்தச் சதித் திட்டத்தின் மையமாய் இருந்தது. இவர்களது படைகளுக்குத் தலைவராய் இருந்தவர் கர்னல் பல்க்கோவ்னிக்கவ். முன்னாள் இடைக்கால அரசாங்கத்தின் உறுப்பினரும், சொந்த வாக்குறுதி அளித்து அதன் பேரில் விடுதலை பெற்று வெளியே வந்தவருமான கோட்ஸ் சதித்திட்ட உத்தரவுகளில் கையொப்பமிட்டார்....

பெத்ரொகிராது நகரவாசிகளின் கவனத்துக்கு இந்த உண்மைகளைக் கொண்டு வந்து, புரட்சி இராணுவக் கமிட்டி இந்தச் சதியில் சம்பந்தப்பட்டவர்கள் எல்லோரையும் கைது செய்யும்படி உத்தரவிடுகிறது. இவர்கள் புரட்சி நீதி மன்றத்தின் முன்னால் விசாரணைக்குக் கொண்டு வரப்படுவார்கள்....

மாஸ்கோவிலிருந்து வந்த செய்தியின்படி யூன்கெர்களும் கசாக்குகளும் கிரெம்ளினை வளைத்துக் கொண்டு, சோவியத்துப் படைகளைப் படைக் கலன்களைத் துறந்து வெளியே வரும்படிக் கட்டளையிட்டனர். சோவியத்துப் படைகள் இதற்கு இணங்கின, அவை கிரெம்ளினிலிருந்து வெளியே சென்ற போது அவைத் தாக்கப்பட்டுச் சுட்டு வீழ்த்தப்பட்டன. போல்ஷிவிக்குகளாலான சிறு படைகள் தொலைபேசி, தந்தி அலுவலகங்களிலிருந்து விரட்டியடிக்கப்பட்டன. நகரின் மையப் பகுதி இப்போது யூன்கெர்களுடைய கையில் இருந்தது.... ஆனால் அவர்களைச் சுற்றிலும் சோவியத்துப் படைகள் திரண்டெழுந்து வந்தன. தெருக்களில் போர் மெதுவாய் மூண்டு வந்தது. சமரசத்துக்குகான எல்லா முயற்சிகளும் தோற்றுவிட்டன.... சோவியத்துகளின் தரப்பில் பத்தாயிரம் நகரக் காவற் படையினரும் சொற்ப எண்ணிக்கையிலான செங்காவலர்களும் இருந்தார்கள்; அரசாங்கத் தரப்பில் ஆறு ஆயிரம் யூன்கெர்களும் இரண்டாயிரத்து ஐந்நூறு கசாக்குகளும் இரண்டாயிரம் வெண்காவலர்களும் இருந்தார்கள்.

பெத்ரொகிராது சோவியத்தின் கூட்டம் நடைபெற்றுக் கொண்டிருந்தது. பக்கத்து அறையில் புதிய இத்ஸே-யி-க கூடி, மாடியில் அமர்வு நடத்திய மக்கள் கமிசார் அவையிலிருந்து சரமாரியாய் வந்து கொண்டிருந்த அரசாணைகள், கட்டளைகளின்[3] பேரில் செயல்பட்டுக் கொண்டிருந்து. சட்டங்கள் அங்கீகரிக்கப்பட்டு வெளியிடப்படுவதற்கான ஒழுங்கு முறை, தொழிலாளர்களுக்கு எட்டு மணி நேர வேலை நாளை நிலைநாட்டுதல், லுனச்சார்ஸ்கியின் ''பொது மக்கள் கல்விக்கான அமைப்பின் அடித்தளம்'' ஆகியவை பரிசீலிக்கப்பட்டு வந்தன. இந்த இரு கூட்டங்களிலும் சில நூறு பேர்களே இருந்தார்கள், பெரும்பாலோர் ஆயுதம்

ஏந்தியவர்கள். ஸ்மோல்னி அனேகமாய்க் காலியாக இருந்தது, கட்டடத்தின் இரு புறங்களேயும் ஆதிக்கம் புரியும் வண்ணம் கூடத்து சன்னல்களில் இயந்திரத் துப்பாக்கிகளே வைத்து அமைத்துக் கொண்டிருந்த காவல் படையினரைத் தவிர வேறு யாரையும் காண முடியவில்லே.

இத்ஸே-யி-கவில் விக்ழேல் பிரதிநிதி ஒருவர் பேசிக் கொண்டிருந்தார்:

''எத்தரப்பினரது படைகளேயும் நாங்கள் ஏற்றிச் செல்ல மறுக்கின்ருேம்.... கேரென்ஸ்கி தொடர்ந்து பெத்ரொகிராதின் மீது படையெடுத்து வருவாராஞல் அவருடைய போக்குவரத்து வழிகளே நாங்கள் துண்டித்து விடுவோமென்று கூறுவதற்காக அவரிடம் எங்கள் குழு ஒன்றை அனுப்பி வைத்திருக்கிருேம்....''

புதிய அரசாங்கம் ஒன்றை நிறுவ எல்லா சோஷலிஸ்டுக் கட்சிகளேயும் கொண்ட மாநாடு கூட்டப்பட வேண்டுமென்ற வழக்கமான பரிந்துரையை அவர் முன்வைத்து வற்புறுத்திஞர்....

காமெனெவ் மிகவும் எச்சரிக்கையுடன் பதிலளித்தார். போல்ஷிவிக்குகள் இந்த மாநாட்டில் மகிழ்ச்சியோடு கலந்து கொள்வார்கள். ஆஞல் ஈர்ப்பு மையம் இம்மாதிரியான ஓர் அரசாங்கத்தை நிறுவுவதில் அமைந்திருக்கவில்லே,சோவியத்துகளின் காங்கிரசினுடைய வேலேத்திட்டத்தை இந்த அரசாங்கம் ஏற்றுக் கொள்வதிலேதான் அமைந்திருக்கிறது.... இடது சாரி சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களும் சமூக-ஜனநாயக சர்வதேசியவாதிகளும் முன்வைத்ததை இத்ஸே-யி-க விவாதித்து, விகிதாசாரப் பிரதிநிதித்துவத்தின் அடிப்படையில் இம்மாநாடு கூட்டப்பட வேண்டும், சேனேக் கமிட்டிகளேயும் விவசாயிகளது சோவியத்துகளேயும் சேர்ந்த பிரதிநிதிகளும் கூட அடங்கியிருக்க வேண்டும் என்ற அவர்களது முன்மொழிவை ஏற்றுக் கொண்டது....

மாமண்டபத்தில் திரோத்ஸ்கி அன்றைய நிகழ்ச்சிகளே எடுத்துரைத்தார்.

''விளதீமிர் யூன்கெர்கள் சரணடைவதற்கு நாங்கள் வாய்ப்பினே அளித்தோம்'' என்ருர் அவர். ''இரத்தம் சிந்தாமலே விவகாரங்களேத் தீர்த்துக் கொள்ள நாங்கள் விரும்

பினேம். ஆனால் இப்போது இரத்தம் சிந்தப்பட்டுவிட்ட தால், இனி ஒரேயொரு வழியே இருக்கிறது—ஈவிரக்கமில் லாப் போராட்டம் ஒன்றே வழி. வேறு எந்த வழியிலும் நாம் வெற்றி பெற முடியுமென நினைப்பது சிறுபிள்ளைத்தனமா கும்.... முடிவு கட்டும்படியான தருணமாகும் இது. ஒவ்வொரு வரும் புரட்சி இராணுவக் கமிட்டியுடன் ஒத்துழைக்க வேண் டும், முட்கம்பிகள், பெட்ரோல், துப்பாக்கிகள் முதலான பண்ட இருப்புகள் எங்கே இருப்பினும் அவற்றைத் தெரி விக்க வேண்டும் ....நாம் ஆட்சியதிகாரம் வென்று கொண்டு விட்டோம், இப்போது அதை நமது கையிலிருந்து நழுவி விடாதபடி பாதுகாத்துக் கொள்ள வேண்டும்!''

மென்ஷிவிக்கு யோஃபெ தமது கட்சியின் பிரகடனத்தைப் படிக்க முயன்றார், ஆனால் திரோத்ஸ்கி ''கோட்பாடு பற்றிய விவாதத்துக்கு'' அனுமதியளிக்க மறுத்துவிட்டார்.

''இப்போது நமது விவாதங்கள் தெருக்களில் நடை பெறுகின்றன'' என்று அவர் உரக்கக் கூறினார். ''தீர்மானகர மான நடவடிக்கை எடுக்கப்பட்டுவிட்டது. நடைபெற்று வரு கின்றவற்றுக்கு நாம் எல்லோரும் பொறுப்பேற்கின்றோம், குறிப்பாக நான் பொறுப்பேற்கின்றேன்....''

போர்முனையிலிருந்து, காத்சினவிலிருந்து வந்த படை யாட்கள் பேசினார்கள். சாவுப் பட்டாளத்திலிருந்து, நானூற்று எண்பத்தொன்றாவது பீரங்கிப் படையிலிருந்து வந் தவர் ஒருவர் கூறினார்: ''அகழ்வரிகளில் இருப்போர் இதைப் பற்றிக் கேள்விப்பட்டதும் 'இது **எங்களது** அரசாங்கம்!' என்றே அவர்கள் முழங்குவார்கள்.'' பீட்டர்ஹாப் பள் ளியைச் சேர்ந்த **யூன்கெர்** ஒருவர் தானும் மற்றும் இருவரும் சோவியத்துகளை எதிர்த்துச் செயல்பட மறுத்துவிட்டதாகக் கூறினார். தனது தோழர்கள் குளிர்கால அரண்மனைக்கான போரிலிருந்து திரும்பியதும் அவர்கள் தன்னைத் தமது கமிசா ராக நியமித்து, ஸ்மோல்னிக்குச் சென்று **மெய்யான** புரட்சிக் காக தாம் சேவையாற்ற தயாராயிருப்பதைத் தெரிவிக்கச் சொன்னார்கள் என்றார்....

பிறகு திரோத்ஸ்கி மீண்டும் உரைமேடையில் நின்றார், தளராத ஊக்கத்துடன் பொறி பறக்க பேசினார், கட்டளை களைப் பிறப்பித்தார், கேள்விகளுக்குப் பதிலளித்தார்.

''தொழிலாளர்களையும் படையாட்களையும் விவசாயிகளையும் தோற்கடிக்கும் பொருட்டு குட்டிமுதலாளித்துவப் பகுதியினர் சைத்தானுடனும் கூட்டு சேர்ந்து கொள்வார்கள்!'' என்று அவர் தமது பேச்சினிடையே குறிப்பிட்டார். குடி போதை கொண்டவர்கள் கடந்த இரு நாட்களில் பலரும் காணப்பட்டதாகக் கூறப்பட்டது.''தோழர்களே,குடிக்க வேண்டாம்! அந்தி எட்டு மணிக்குப் பிற்பாடு முறையான காவல் பணி புரியும் படையினரைத் தவிர யாரும் தெருக்களில் இருக்கலாகாது. மதுபானக் கிடங்குகள் இருக்குமென்ற சந்தேகத்தை உண்டாக்கும் எல்லா இடங்களையும் சோதனையிட வேண்டும், மது இருப்புகள் ஒழிக்கப்பட வேண்டும்.[4] மது விற்பனையாளர்களுக்கு எவ்வித இரக்கமும் காட்டலாகாது....''

புரட்சி இராணுவக் கமிட்டி வீபர்க் வட்டாரத்தின் பிரதிநிதிகளையும், பிறகு புத்தீலவ் ஆலையின் பிரதிநிதிகளையும் வருமாறு கூப்பிட்டு அனுப்பிற்று. இவர்கள் அவசரமாய் எழுந்து சென்றார்கள்.

''கொல்லப்படும் ஒவ்வொரு புரட்சியாளருக்கும் பதிலாக நாங்கள் ஐந்து எதிர்ப்புரட்சியாளர்களைக் கொல்வோம்!'' என்றார் திரோத்ஸ்கி.

மீண்டும் நாங்கள் நகருக்குள் சென்றோம். டூமாவில் விளக்கொளி பிரகாசித்தது, பெரும் கூட்டங்கள் அதனுள் பிரவாகமெனப் புகுந்து கொண்டிருந்தன. கீழ் மண்டபத்தில் புலம்பலும் அழு குரல்களும் கேட்டன. செய்தியறிக்கைப் பலகையின் முன்னால் கூட்டம் நெருக்கடித்துக் கொண்டு போவதும் வருவதுமாக இருந்தது. அந்த பலகையில் பெயர்ப் பட்டியல் ஒட்டப்பட்டிருந்து—அன்றைய போரில் கொல்லப் பட்ட, அல்லது கொல்லப்பட்டதாக நினைக்கப்பட்ட யூன் கெர்களது பட்டியல். உயிரிழந் தோராகக் குறிக்கப்பட்டோரில் பெரும்பாலோர் நல்லபடியாகவே இருந்தார்கள் என்பது பிற்பாடு தெரிய வந்தது.... மேலே அலெக்சாந்திரொவ்ஸ்கி மண்டபத்தில் இரட்சணியக் கமிட்டியின் கூட்டம் நடைபெற்றுக் கொண்டிருந்தது. படையதிகாரிகளது பொன்னிறமும் சிவப்புமான தோள் பட்டிகள் எடுப்பாகக் கண்ணில் பட்டன; மென்ஷிவிக்குகளையும் சோஷலிஸ்டுப் புரட்சி



திபேன்கோவின் தலைமையில் மாலுமிகளின் படைப் பிரிவு ஒன்று கேரென்ஸ்கியின் படைகளை எதிர்த்துப் போராடுவதற்காகச் செல்கிறது



டிராம் வண்டியின் அடிபகுதி காப்பரணிடப்பட்டு,
மாஸ்கோவின் ஸமஸ்க்வோரெச்சியெ வட்டார்த்தில்
நடைபெற்ற நவம்பர்
போராட்டத்தின் போது உபயோகிக்கப்பட்டது

யாளர்களையும் சேர்ந்த அறிவுத் துறையினரது நன்கு அறி முகமான முகங்களும், வங்கி முதலாளிகள், தூதுத் துறை யினர், பழைய ஆட்சியின் அதிகாரிகள், நேர்த்தியான ஆடை கள் அணிந்த பெண்கள் ஆகியோரது கடுகடுப்பான கண் களும் பருத்த ஜொலிப்பும் தெரிந்தன....

தொலைபேசிப் பெண்கள் சாட்சியம் அளித்துக் கொண் டிருந்தார்கள். அளவுக்கு மீறி ஆடையலங்காரம் செய்தவர் கள், புதுப் பாணிகளைக் காப்பியடிக்கும் சிறு பெண்கள், களைப்புற்ற முகமுடையோரும் பாதம் தேய்ந்த பூட்சுகள் அணிந்தோரும் ஒவ்வொருவராய் உரைமேடையில் வந்து நின்றனர். பெத்ரொகிராதின் ''சிறந்த'' மக்களும் படையதி காரிகளும் செல்வச் சீமான்களும் அரசியலில் பெயர் பெற்ற வர்களுமாகியோரது கையொலி முழக்கத்தைக் கேட்டு முகம் செண்டிப்புற்ற இந்தப் பெண்கள் ஒவ்வொருவராய் பாட் டாளி வர்க்கத்தின் கைகளில் அகப்பட்டுத் தமக்கு ஏற்பட்ட துன்பங்களை எடுத்துரைத்து, பழையதும் நிலைநாட்டப் பெற்ற தும் சக்தி மிக்கதும் ஆகியவை யாவற்றுக்கும் தமது விசு வாசத்தைப் பிரகடனம் செய்தனர்....

நிக்கலாயெவ்ஸ்கி மண்டபத்தில் டூமா திரும்பவும் அமர்வு நடத்திற்று. பெத்ரொகிராது காவற் படைகள் தமது செயல் களுக்காக அவமானப்படுவதாக நகரமேயர் நம்பிக்கை மிக்க வராய் அறிவித்தார். பிரசாரம் பயனளித்து வந்தது என் ருர்.... டூமாவால் அனுப்பப்பட்டவர்கள் திரும்பி வருவதும் போவதுமாய் இருந்தார்கள், இவர்கள் போல்ஷிவிக்கு களுடைய பயங்கரச் செயல்களை விவரித்தார்கள், யூன்கெர் களைக் காப்பாற்றுவதற்காக ஆங்காங்கும் சென்று பேச்சுகள் நடத்திஞர்கள், பலவுங் குறித்து விசாரணை செய்தார்கள்....

''போல்ஷிவிக்குகள் வெல்லப்படுவார்கள்'' என்ருர் துரூப், ''துப்பாக்கிக் குத்தீட்டிகளால் அல்ல, நன்னெறியின் சக்தியால் வெல்லப்படுவார்கள்....''

இதற்கிடையில் புரட்சிப் போர்முனையில் யாவும் நல்ல படியாக நடந்தேறியதாகச் சொல்வதற்கில்லை. பீரங்கிகள் பொருத்தப்பட்ட கவச ரயில் வண்டிகளைப் பகைவர்கள் கொண்டு வந்து நிறுத்தினர். மிகப் பெரும்பாலோரும் பயிற்சி பெருத செங்காவலர்களைக் கொண்டமைந்த

சோவியத் படைகளுக்குப் படையதிகாரிகளும் இல்லை, தெளிவான திட்டமும் இல்லை. முறையான படையாட்களில் ஐயாயிரம் பேர் மட்டுமே இவர்களுடன் சேர்ந்திருந்தார்கள்; ஏனையோர் யூன்கெர் கலகத்தை நசுக்குவதிலும் நகரைக் காவல் புரிவதிலும் ஈடுபட்டிருந்தார்கள், அல்லது என்ன செய்வதென்று இன்னும் தீர்மானத்துக்கு வராதோராய் இருந்தார்கள். நகரப் படையணிகளின் பிரதிநிதிகளது கூட்டத்தில் இரவு பத்து மணிக்கு லெனின் சொற்பொழிவாற்றினார். மிகப் பெரும்பான்மை வாக்குகளின் பேரில் இவர்கள் போர் புரிவதென்று தீர்மானம் செய்தனர். பொதுத் தலைமை அலுவலர்களாகச் செயல்படுவதற்காக ஐந்து படையாட்கள் அடங்கிய கமிட்டி ஒன்று தேர்ந்தெடுக்கப்பட்டது. அதிகாலையில் இந்தப் படையணிகள் போர்க் கோலம் பூண்டு தமது கொட்டடிகளிலிருந்து புறப்பட்டுச் சென்றன.... வீட்டுக்குத் திரும்புகையில் நான், முதுபெரும் படையாட்களுக்குரிய முறையில், துப்பாக்கிக் குத்தீட்டிகளின் வரிசை ஒழுங்கில் குற்றங் குறையின்றி, வெற்றி கொள்ளப்பட்ட நகரின் சந்தடியற்ற தெருக்களின் வழியே இவர்கள் நடைபோட்டுச் செல்லக் கண்டேன்....

அதே நேரத்தில் சதோவயாவில் விக்ழேல் தலைமையகத்தில், புதிய அரசாங்கம் ஒன்றை அமைத்திடுவதற்காக எல்லா சோஷலிஸ்டுக் கட்சிகளின் மாநாடு நடைபெற்று வந்தது. மையவாத மென்ஷிவிக்குகளின் சார்பில் பேசிய அப்ரமோவிச், வெற்றியாளர்கள் என்றே, வெற்றி கொள்ளப்பட்டோர் என்றே வேண்டாம்—கடந்தது கடந்ததாகிவிட வேண்டும் என்றார்.... இடதுசாரிக் கட்சிகள் யாவும் இதற்கு உடன்பாடு தெரிவித்தன. வலதுசாரி மென்ஷிவிக்குகளின் சார்பில் பேசிய டான், போர் நிறுத்தத்துக்குப் போல்ஷிவிக்குகளுக்குப் பின்வரும் நிபந்தனைகளை முன்வைத்தார்: செங்காவலர்களிடமிருந்து படைக் கலன்கள் அகற்றப்பட வேண்டும், பெத்ரொகிராது நகரக் காவற் படைகள் டூமாவின் அதிகாரத்துக்கு உட்பட்டனவாய் இருத்தப்பட வேண்டும்; கேரென்ஸ்கியின் படைகள் ஒரு குண்டுகூட சுடவோ, ஓர் ஆளைக்கூட கைது செய்யவோ கூடாது; போல்ஷிவிக்குகளைத் தவிர்த்து எல்லா சோஷலிஸ்டுக் கட்சிகளையும் கொண்ட

அமைச்சரவை நிறுவப்பட வேண்டும். ஸ்மோல்னியிலிருந்து ரியஸானவும் காமெனெவும் எல்லாக் கட்சிகளையும் கொண்ட கூட்டு அமைச்சரவை ஏற்புடையதுதான் என்று அறிவித்தார்கள், ஆனால் டானின் பிரேரணைகளை அவர்கள் கண்டித்தார்கள். சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களிடையே கருத்து வேற்றுமை நிலவிற்று. விவசாயிகள் சோவியத்துகளின் செயற்கமிட்டியினரும் நரோத்னிக் சோஷலிஸ்டுகளும் போல்ஷிவிக்குகளுக்கு இடமளிக்க தீர்மானமாய் மறுத்தனர்.... செயல்படக் கூடிய திட்டம் ஒன்றை வகுத்திடுவதற்கான ஆணைக்குழு ஒன்று கடுமையான சர்ச்சைக்குப் பிற்பாடு தேர்ந்தெடுக்கப்பட்டது....

அன்று இரவு பூராவும் இந்த ஆணைக்குழுவில் சர்ச்சை தொடர்ந்தது, பிறகு மறு நாள் பகலிலும் அடுத்த இரவிலும் இதே போல் நடைபெற்றது. இதற்கு முன்பே நவம்பர் 9ல் சமரசம் காண்பதற்கு மார்த்தவ், கோர்க்கி இவர்களது தலைமையில் இம்மாதிரியான ஒரு முயற்சி நடைபெற்றிருந்தது. ஆனால் கேரென்ஸ்கி நெருங்கி வந்ததையும் இரட்சணியக் கமிட்டியின் செயற்பாட்டையும் அடுத்து, மென்ஷிவிக்குகள், சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களது வலதுசாரியினரும் நரோத்னிய சோஷலிஸ்டுகளும் திடுமென விலகிக் கொண்டார்கள். இப்போது **யூன்கெர்** கலகம் நசுக்கப்பட்டதைக் கண்டதும் இவர்கள் கதி கலங்கிப் போயினர்....

நவம்பர் 12 திங்கட்கிழமை—என்ன நடைபெறுமோ என்று பரபரப்போடு காத்திருந்த நாள் அது. அனைத்து ருஷ்யாவின் கண்களும் பெத்ரொகிராதின் தலைவாயில்களுக்கு அப்பால் அமைந்த மங்கலான சமவெளியை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தன. பழைய அமைப்புக்குக் கிடைத்த பலம் அனைத்தும் புதியதன் ஒழுங்கமைப்பற்ற ஆற்றலை, யாரும் அறிந்திராத இதனை எதிர்த்து இந்தச் சமவெளியில் திரண்டிருந்தது. மாஸ்கோவில் போர்நிறுத்தம் அறிவிக்கப்பட்டு இருதரப்புகளும் தலைநகரில் போரின் விளைவை எதிர்பார்த்துக் கொண்டு தமக்கிடையே பேச்சுவார்த்தைகள் நடத்தி வந்தன. சோவியத்துகளின் காங்கிரசிற்கு வந்திருந்த பிரதிநிதிகள் இப்போது விரைவு ரயில்களில் ஆசியாவின்

தொலைக் கோடிகளுக்குத் தமது சொந்த ஊர்களுக்குப் புரட்சித் தீயினை எடுத்துச் சென்றார்கள். விந்தையான நிகழ்ச்சிகளைப் பற்றிய செய்திகள் விரிந்து பரவும் அதிர்வலைகளில் நாடெங்கும் பரவின. இதைத் தொடர்ந்து நகரங்களும் தொலைதூரக் கிராமங்களும் அதிர்ந்தாடிப் பிளவுண்டு, டூமாக்களுக்கும் ஸேம்ஸ்த்வொக்களுக்கும் அரசாங்கக் கமிசார்களுக்கும் எதிராக சோவியத்துகளும் புரட்சி இராணுவக் கமிட்டிகளும், வெண்காவலர்களுக்கு எதிராகச் செங்காவலர்களும் உதித்தெழுந்து, தெருச் சண்டையும் அனல் பறக்கும் பேச்சும் மூண்டன.... இவற்றின் விளைவு பெத்ரொகிராதிலிருந்து வரும் செய்தியை எதிர்பார்த்துக் காத்திருந்தது....

ஸ்மோல்னி காலியாகிவிட்டது. ஆனால் டூமாவில் நெரிசலும் சப்தமுமாய் இருந்தன. வயது முதிர்ந்த மேயர் அவரது உயர்சிறப்புக்கு ஏற்ற முறையில் போல்ஷிவிக்கு டூமா உறுப்பினர்களது வேண்டுகோளைக் கண்டித்துக் கொண்டிருந்தார்.

''டூமாவானது எதிர்ப்புரட்சியின் மையம் அல்ல'' என்று அவர் அடித்துக் கூறினார். ''கட்சிகளிடையிலான தற்போதைய போராட்டத்தில் டூமாவுக்கு எந்தப் பங்கும் இல்லை. அதே போது சட்ட முறையிலான ஆட்சியதிகாரம் நாட்டில் இல்லாத ஒரு நேரத்தில் ஒழுங்குக்கான ஒரே மையமாக இருப்பது நகரத் தன்னாட்சிதான். சமாதான நேசம் கொண்ட நகர மக்கள் இந்த உண்மையை அங்கீகரிக்கிறார்கள்; வெளிநாட்டுத் தூதரகங்கள் நகர மேயரால் கையெழுத்திடப்படும் ஆவணங்களை மட்டுமே அங்கீகரிக்கின்றன. ஐரோப்பியர் ஒருவரின் மனம் வேறு எம்மாதிரியான நிலைமையையும் ஏற்றுக் கொள்ள இடம் தரவில்லை, ஏனெனில் நகர மக்களின் நலன்களைப் பாதுகாக்க வல்ல ஒரே உறுப்பு இந்த நகரத் தன்னாட்சிதான். நகரத்தின் வரவேற்பைப் பெற்று ஆதாயமடைய விரும்பும் எல்லா நிறுவனங்களுக்கும் வரவேற்பு அளிக்க நகரம் கடமைப்பட்டது. ஆகவே டூமா கட்டடத்தினுள் எந்த விதமான செய்தியேடும் வினியோகிக்கப்படுவதை டூமா தடுப்பதற்கில்லை. நமது பணியின் எல்லைகள் விரிவடைந்து செல்கின்றன, நமக்கு முழு அளவில் செயல் சுதந்திரம் அளிக்கப்பட வேண்டும், நமது உரிமைகள் இரு தரப்புகளாலும் மதிக்கப்படுதல் வேண்டும்....

''நாம் முற்றிலும் நடுநிலை வகிப்பவர்கள். தொலைபேசி இணைப்பகம் யூன்கெர்களால் பிடிக்கப்பட்ட போது கர்னல் பல்க்கோவ்னிக்கவ் ஸ்மோல்னியின் தொலைபேசிகளைத் துண்டிக்கும்படி உத்தரவிட்டார். ஆனால் நான் இச்செயலைக் கண்டித்தேன், தொலைபேசிகள் துண்டிக்கப்படாமல் தொடர்ந்து இயங்கின....''

இதைக் கேட்டதும் போல்ஷிவிக்குப் பெஞ்சுகளிலிருந்து கிண்டலான சிரிப்பும், வலதுசாரியினரிடமிருந்து வசை மொழிகளும் எழுந்தன.

''இருந்த போதிலும் இவர்கள் நம்மை எதிர்ப்புரட்சியாளர்களாகக் கருதுகிறார்கள்'' என்று ஷ்ரேய்தர் தொடர்ந்து பேசிச் சென்றார். ''நம்மை எதிர்த்து நகரமக்களுக்கு அறிக்கைகள் விடுக்கிறார்கள். எம்மிடம் எஞ்சியிருக்கும் கடைசி மோட்டார் வண்டிகளையும் கைப்பற்றிக் கொண்டு நமக்குப் போக்குவரத்துச் சாதனம் இல்லாதபடி செய்கிறார்கள். நகரில் பஞ்சம் ஏற்பட்டால் அதற்கு நாங்களல்ல குற்றவாளிகள். கண்டனங்களால் எந்தப் பயனும் இல்லை....''

நகராண்மைக் குழுவின் போல்ஷிவிக்கு உறுப்பினரான கோபஸெவ் நகர டூமாவின் மோட்டார் வண்டிகளை புரட்சி இராணுவக் கமிட்டி கைப்பற்றிக் கொண்டதென்பது நம்பத் தக்கதாக இல்லை என்றார். அப்படி நடைபெற்றது உண்மையே என்று கொண்டாலும், அதிகாரம் பெறாத தனியாட்கள்தான் அவசர நிலைமையை முன்னிட்டு இப்படிச் செய்திருக்க வேண்டும் என்றார் அவர்.

''டூமாவை அரசியல் கூட்டங்களுக்கான அரங்கமாக்கிக் கொள்ளக் கூடாது என்கிறார் மேயர்'' என்று அவர் தொடர்ந்து கூறினார். ''ஆனால் இங்கே ஒவ்வொரு மென்ஷிவிக்கும் சோஷலிஸ்டுப் புரட்சியாளரும் கட்சிப் பிரசாரப் பேச்சை அன்றி வேறு எதுவும் பேசவில்லை, டூமாவின் வாயிலில் இவர்கள் சட்ட விரோதமான தமது செய்தியேடுகளாகிய **ஈஸ்க்ராவையும்** (தீப்பொறி), **சல்தாத்ஸ்கி கோலஸையும்**, **ரபோச்சயா கஸேத்தாவையும்** வினியோகிக்கிறார்கள், இவை யாவும் கலத்தைத் தூண்டிவிடுகிறவை. போல்ஷிவிக்குகளாகிய நாங்களும் இங்கே எங்களது செய்தியேடுகளை வினியோகிக்க முற்பட்டால் எப்படி இருக்கும்? ஆனால் நாங்கள் அப்படிச்

செய்யப் போவதில்லை, நாங்கள் டூமாவை மதித்து நடப்பவர்கள். நகரத் தன்னாட்சியின் மீது நாங்கள் தாக்குதல் தொடுக்க வில்லை, தொடுக்கப் போவதும் இல்லை. ஆனால் நகர மக்களுக்கு நீங்கள் வேண்டுகோள் விடுத்தீர்கள், அதே போல் செய்ய எங்களுக்கும் உரிமை உண்டு....''

அவரை அடுத்து, காடேட்டாகிய ஷிங்கரியோவ் பேசினார். அரசாங்க வழக்கறிஞரால் குற்றம் சாற்றப்பட்டு தேசத் துரோகத்துக்காக விசாரணைக்குக் கொண்டுவரப்பட வேண்டியவர்களுடன் தாம் பேசுவதற்குப் பொதுமொழி எதுவும் இல்லை என்றார் அவர்.... போல்ஷிவிக்கு உறுப்பினர்கள் எல்லோரும் டூமாவிலிருந்து விலக்கப்பட வேண்டுமென்று மீண்டும் அவர் முன்மொழிந்தார். ஆனால் அது ஏற்கப்படாமல் ஒதுக்கப்பட்டது, ஏனெனில் உறுப்பினர்களுக்கு எதிரான தனிப்பட்ட குற்றச்சாட்டு எதுவும் அதில் இல்லை, இந்த உறுப்பினர்கள் நகராட்சி நிர்வாகத்தில் செயல் முனைப்புடன் பங்கெடுத்துக் கொண்டவர்கள்.

பிறகு இரண்டு மென்ஷிவிக்கு சர்வதேசியவாதிகள், போல்ஷிவிக்கு டூமா உறுப்பினர்களது வேண்டுகோளானது நேரடியாகப் படுகொலையைத் துண்டிவிடும் முயற்சியாகுமென்று கூறினர். ''போல்ஷிவிக்குகளுக்கு எதிரானவை யாவுமே எதிர்ப்புரட்சி ஆகிவிடுமாயின், புரட்சிக்கும் அராஜகத்துக்கும் என்னதான் வேறுபாடென்று தன்னால் புரிந்து கொள்ள முடியவில்லை'' என்றார் பின்கேவிச் ''....கட்டற்ற வெகுஜனங்களது ஆவேசங்களைப் போல்ஷிவிக்குகள் தமக்கு ஆதாரமாகக் கொண்டிருக்கிறார்கள். நம்மிடம் இருப்பது நன்னெறியின் சக்தியே அன்றி வேறு எதுவுமில்லை. படுகொலைகளையும் இரு தரப்பாரது வன்முறையையும் நாங்கள் கண்டனம் செய்கிறோம், சமாதான தீர்வு காண்பதே எங்களது பணி.''

''மென்ஷிவிக்குகளையும் சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களையும் ஒழித்துக் கட்டும்படி மக்களுக்கு அறைகூவல் விடுத்து, 'நிந்தனை மேடையிலே' என்று தலைப்பிட்டுத் தெருக்களில் ஒட்டப்பட்டிருக்கும் அறிக்கையானது, போல்ஷிவிக்குகளாகிய நீங்கள் புரிந்திருக்கும் கொடுங் குற்றமாகும்'' என்றார் நஸாரியெவ். ''உங்கள் கைகளிலிருந்து இதனை நீங்கள் கழுவிக் கொள்ள முடியப் போவதில்லை. இம்மாதிரியான

ஒரு பிரகடனத்தின் மூலம் நீங்கள் தயார் செய்து வருகிறீர்களே, அதற்கு நேற்று நடைபெற்ற பயங்கரங்கள் ஒத்திகைகளே அன்றி வேறல்ல.... உங்களுக்கும் பிற கட்சிகளுக்கும் இணக்கம் காணவே நான் எப்போதும் முயன்று வந்திருக்கிறேன். ஆனல் தற்போது உங்கள் பால் எனக்கு இருப்பதெல்லாம் வெறுப்பும் இகழ்ச்சியுமே தவிர வேறு ஒன்றுமில்லை!''

போல்ஷிவிக்கு டூமா உறுப்பினர்கள் உடனே எழுந்து ஆத்திரமாகக் கண்டனக் கூச்சலிட்டனர், அவர்களை எதிர்த்து கடுப்பும் வெறுப்பும் மிக்க குரல்கள் எழுந்தன, கைகள் ஆட்டி வீசப்பட்டன....

மண்டபத்துக்கு வெளியே நான் நகரப் பொறியாளரான மென்ஷிவிக்கு கோம்பெர்குடனும் மூன்று, நான்கு பத்திரிகையாளர்களுடன் மோதிக் கொண்டேன். அவர்கள் உற்சாகமாகப் பேசினர்.

''பார்த்தீர்களா?'' என்முர்கள். ''கோழைகள் எங்களைக் கண்டு அஞ்சுகிமுர்கள். டூமாவைக் கைது செய்யத் துணிவில்லை அவர்களுக்கு! அவர்களது புரட்சி இராணுவக் கமிட்டிக்கு இந்தக் கட்டடத்துக்குள் ஒரு கமிசாரை அனுப்ப தைரியமில்லை. அதைச் சொல்வானேன், இன்று நான் சதோவயாவின் முனையில் சல்தாத்ஸ்கி கோலஸை விற்றுக் கொண்டிருந்த ஒரு சிறுவனைச் செங்காவலர் ஒருவர் தடுத்து நிறுத்த முயன்றதைக் கண்டேன்.... அந்தச் சிறுவன் அந்தச் செங்காவலரைக் கேலி செய்து சிரித்தான், அங்கு கூடிவிட்ட கூட்டத்தினர் அந்த மூர்க்கரை அடித்துக் கொல்ல விரும்பினுர்கள். இனி ஒரு சில மணி நேரத்துக்கு மேல் நீடிக்காது. கேரென்ஸ்கி வந்து சேராவிட்டாலுங்கூட இவர்களால் நீடிக்க முடியாது, அரசாங்கம் நடத்துவதற்கு இவர்களிடம் ஆட்கள் இல்லை. கேலிக் கூத்துதான்! ஸ்மோல்னியில் இவர்கள் தமக்குள்ளேயுங்கூட சண்டை போட்டுக் கொண்டு நிற்பதாக எனக்குக் கேள்வி!''

எனக்குத் தெரிந்த சோஷலிஸ்டுப் புரட்சியாளர் ஒருவர் என்னைத் தனியே அழைத்துச் சென்று என்னிடம் சொன்னுர்: ''இரட்சணியக் கமிட்டி எங்கே ஒளிந்து கொண்டிருக்கிறது என்று எனக்குத் தெரியும். அவர்களிடம் சென்று நீங்கள் பேச விரும்புகிறீர்களா?...''

அதற்குள் அந்தி இருட்டு கவிழ்ந்து கொண்டுவிட்டது. நகரம் மறுபடியும் அதன் வழக்கமான நிலைமைகளுக்குத் திரும்பி வந்துவிட்டது—கடைகளின் அடைப்புகள் உயர்த்தப்பட்டு விட்டன, விளக்குகள் எரிந்தன, தெருக்களில் இரு திசைகளிலும் நெரிசலாய் மக்கள் நடமாடினர், வாதாடினர்....

நேவ்ஸ்கி சாலையில் 86ஆம் எண் கட்டடத்தின் நடை வழியே நடந்து, பல குடித்தனத் தொகுதிகளைக் கொண்ட உயரமான மாடிகளால் சூழப்பெற்ற வெளிமுற்றத்துள் நுழைந்தோம். 229ஆம் எண் குடித்தனப் பகுதியின் கதவில் என் நண்பர் ஒரு விநோத முறையில் தட்டினார். உள்ளிருந்து சலசலப்பு கேட்டது, உட்கதவு ஒன்று தடாலென மூடிற்று, பிறகு முன் கதவு சற்றே திறக்கப்பட்டு ஒரு பெண்ணின் முகம் இடுக்கு வழியே தெரிந்தது. சற்று நேரம் உற்றுப் பார்த்தபின் கதவைத் திறந்து எங்களை உள்ளே அழைத்துச் சென்றார் சாந்தமான தோற்றமுடைய நடுத்தர வயதான அந்தப் பெண்; உள்ளே சென்றதும் ''கிரீல், நம்மவர்கள்தான்!'' என்று குரல் கொடுத்தார். சாப்பாட்டு அறையில் மேசையின் மீது சமவாரிலிருந்து ஆவி வந்து கொண்டிருந்தது, ரொட்டியும் மீனும் நிறைந்த தட்டுகள் இருந்தன. நாங்கள் நுழைந்ததும் இராணுவ உடுப்பு உடுத்தியவர் ஒருவர் சன்னல் திரைச்சீலைகளுக்குப் பின்னாலிருந்து வெளியே வந்தார், தொழிலாளியைப் போல் உடுத்தியிருந்த வேறொருவர் ஒரு கிடங்கறையிலிருந்து வந்தார். அமெரிக்கப் பத்திரிகையாளன் என்றதும் இருவரும் மகிழ்ச்சி தெரிவித்து சந்தித்துப் பேச முன்வந்தனர். போல்ஷிவிக்குகள் பிடித்தார்களானால் நிச்சயம் தம்மை அவர்கள் சுட்டுக் கொன்றுவிடுவார்கள் என்று ஓரளவு ஆர்வமும் வீறுப்பும் தொனிக்கக் கூறிக் கொண்டார்கள். தமது பெயர்களைத் தெரிவிக்க அவர்கள் விரும்பவில்லை. ஆனால் இருவரும் சோஷலிஸ்டுப் புரட்சியாளர்கள்....

''உங்கள் செய்தியேடுகளில் ஏன் இம்மாதிரியான பொய்களை எல்லாம் வெளியிடுகிறீர்கள்?'' என்று நான் கேட்டேன்.

இப்படி நான் கேட்டதற்காகக் குறைபட்டுக் கொள்ளாமல் அந்தப் படையதிகாரி பதிலளித்தார்: ''ஆம், எனக்குத்

தெரியும்தான், ஆனால் நாங்கள் என்ன செய்வது?'' தோளை உலுக்கிக் கொண்டார் அவர். ''மக்களிடத்தே ஒரு வகை மன நிலையை நாங்கள் உண்டாக்க வேண்டியிருக்கிறது, இதை நீங்கள் ஒத்துக் கொள்வீர்கள் என்றே நினைக்கிறேன்....''

இன்னொருவர் இதற்குள் இடைமறித்தார். ''போல்ஷிவிக்குகளின் செயல் வெறும் சாகசமே அன்றி வேறல்ல. அவர்களிடம் அறிவுத்துறையினர் யாரும் இல்லை.... அமைச்சகங்கள் செயல்படப் போவதில்லை.... ருஷ்யா ஒரு நகரத்தைப் போன்றதல்ல, அது மிகப் பெரிய ஒரு நாடு.... அவர்களால் ஒருசில நாட்களுக்கு மேல் நீடிக்க முடியாதென்பதை நாங்கள் உணருவதால், அவர்களுக்கு எதிரான மிகவும் வலிமை வாய்ந்த சக்தியாக இருக்கும் கேரென்ஸ்கியிற்குத் துணையாக நின்று ஒழுங்கை மீண்டும் நிலைநாட்ட உதவி புரிவதென்று தீர்மானித்திருக்கிறோம்.''

''அதெல்லாம் சரிதான், ஆனால் காடேட்டுகளுடன் ஏன் சேர்ந்து கொள்கிறீர்கள்?'' என்று கேட்டேன்.

தொழிலாளியாக வேடம் பூண்டிருந்தவர் ஒளிவுமறைவின்றி புன்னகை புரிந்து கொண்டார். ''உண்மையைச் சொல்வதெனில், இத்தருணத்தில் மக்கள் பெருந் திரளினர் போல்ஷிவிக்குகளைப் பின்தொடர்வோராய் இருக்கிறார்கள். எங்களைப் பின்தொடர்வோர் யாருமில்லை—தற்போது. ஒரு சிறு எண்ணிக்கையிலுங்கூட படையாட்களை நாங்கள் ஒன்று திரட்ட முடியவில்லை. எங்களிடம் படைக்கலன்கள் இல்லை.... போல்ஷிவிக்குகள் சொல்வது ஓரளவுக்குச் சரிதான்; ருஷ்யாவில் இத்தருணத்தில் எவ்விதத்திலும் சக்தி வாய்ந்தனவாய் இருக்கும் கட்சிகள் இரண்டே இரண்டுதான்—போல்ஷிவிக்குகளும் பிற்போக்குவாதிகளும். பிற்போக்குவாதிகள் எல்லோரும் காடேட்டுகளின் பின்னால் மறைந்து கொண்டிருக்கிறார்கள். காடேட்டுகள் தாம்தான் எங்களைப் பயன்படுத்திக் கொள்வதாய் நினைக்கிறார்கள், ஆனால் உண்மை என்னவென்றால் நாங்கள்தான் அவர்களைப் பயன்படுத்திக் கொள்கிறோம். போல்ஷிவிக்குகளை நாங்கள் ஒழித்துக் கட்டியதும், உடனே காடேட்டுகளுக்கு எதிராகத் திரும்பிவிடுவோம்....''

''புதிய அரசாங்கத்தில் போல்ஷிவிக்குகள் சேர்த்துக் கொள்ளப்படுவார்களா?''

அவர் தலையைச் சொறிந்து கொண்டார். ''அது ஒரு பிரச்சினைதான்'' என்று ஒத்துக் கொண்டார். ''அவர்கள் சேர்த்துக் கொள்ளப்படவில்லை என்றால், திரும்பவும் அவர்கள் பழையபடி யாவற்றையும் செய்ய முற்படலாம் என்பது மெய்தான். எப்படியும் அரசியல் நிர்ணயச் சபையில் சக்திகளது சமநிலையை அவர்கள் தம் கைக்குள் வைத்துக் கொள்ளும் வாய்ப்பைப் பெறவே செய்வர்—அதாவது, அரசியல் நிர்ணயச் சபை ஒன்று இருக்குமாயின்.''

''அது மட்டுமல்ல'' என்றார் படையதிகாரி. ''காடேட்டுகளையும் புதிய அரசாங்கத்தில் சேர்த்துக் கொள்ளும்படியான பிரச்சினையையும், இதே காரணங்களை முன்னிட்டு இது எழுச் செய்துவிடும். காடேட்டுகள் உண்மையில் அரசியல் நிர்ணயச் சபை வேண்டுமென விரும்புகிறவர்களல்ல—போல்ஷிவிக்குகளை இப்போதே ஒழித்துவிட முடியுமானால்.'' அவர் தலையை வேகமாய் ஆட்டிக் கொண்டார். ''ருஷ்யர்களாகிய எங்களுக்கு அரசியலானது எளிதாய் இருக்கவில்லை. அமெரிக்கர்களாகிய நீங்கள் பிறக்கும் போதே அரசியல்வாதிகளாக இருக்கிறீர்கள், வாழ்வெல்லாம் அரசியலில் நீந்தியவர்கள் நீங்கள். ஆனால் எங்களுக்கு அப்படியல்ல—அரசியலில் எங்களுக்கு ஓராண்டுகூட பூர்த்தியாகவில்லை!''

''கேரென்ஸ்கியைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?'' என்று வினவினேன்.

''ஓ, கேரென்ஸ்கிதான் காரணம் இடைக்கால அரசாங்கம் புரிந்த எல்லா பாபங்களுக்கும்'' என்று பதிலளித்தார் இரண்டாவது ஆள். ''முதலாளித்துவ வர்க்கத்தாருடன் கூட்டணி கொள்ளும்படி கேரென்ஸ்கிதான் எங்களை வலுக் கட்டாயம் செய்தார். அவர் அச்சுறுத்தியது போல் அவர் ராஜிநாமா செய்திருந்தால், அரசியல் நிர்ணயச் சபைக்கு ஆறே மாதங்கள் முன்னதாக புதிய அமைச்சரவை நெருக்கடி ஏற்பட்டிருக்கும், இதை நாங்கள் தவிர்த்துக் கொள்ள விரும்பினோம்.''

''ஆனால் எப்படியும் முடிவு அதே மாதிரிதானே ஆகியது, இல்லையா?''

''ஆமாம், அன்று எங்களுக்கு எப்படித் தெரியும் இப்படி நடைபெறும் என்று? எங்களை ஏமாற்றிவிட்டார்கள் அவர்கள்—இந்தக் கேரென்ஸ்கிகளும் அவ்க்சேன்தியெவ்களும். கோட்ஸ் இன்னும் கொஞ்சம் தீவிரப் போக்குடையவர். நான் செர்னேவையே ஆதரிக்கிறேன், அவர் மெய்யான புரட்சிவாதி.... ஏன், லெனினுங்கூட அரசாங்கத்தில் செர்னேவ் சேர்ந்து கொள்ளலாம், தாம் ஆட்சேபிக்கப் போவதில்லை என்று இன்று சொல்லி அனுப்பியிருக்கிருரே.

''கேரென்ஸ்கி அரசாங்கத்தையும் நாங்கள் அகற்றிவிட வேண்டுமென்றுதானே விரும்பினேம். ஆனல் அரசியல் நிர்ணயச் சபை கூடும் வரையில் காத்திருப்பது நல்லதென்று இருந்தோம்.... இந்த விவகாரத்தின் தொடக்கத்தில் நான் போல்ஷிவிக்குகளுக்கு ஆதரவாகவே இருந்தேன், ஆனல் எனது கட்சியின் மத்தியக் கமிட்டி ஒருமனதாய் இதை எதிர்த்துத் தீர்மானித்துவிட்டது—நான் என்ன செய்ய முடியும்? கட்சிக் கட்டுப்பாடு குறித்த பிரச்சினை ஆயிற்றே....''

''ஒரு வாரத்துக்குள் போல்ஷிவிக்கு அரசாங்கம் தகர்ந்து போய்விடும். சோஷலிஸ்டுப் புரட்சியாளர்கள் ஒதுங்கி நின்று காத்திருந்தால் போதும், அரசாங்கம் அவர்கள் கைகளில் வந்து விழுந்துவிடும். ஆனல் நாங்கள் ஒரு வாரம் காத்திருப்போமாயின் நாடு ஒழுங்கு குலைந்து சின்னபின்னமாகி ஜெர்மன் ஏகாதிபத்தியவாதிகள் வெற்றி பெறுவதில் போய் முடிவுற்றுவிடும். எனவேதான் படையாட்களில் இரண்டே இரண்டு படையணி மட்டும்தான் எங்களுக்கு ஆதரவளிப்பதாக வாக்களித்த ஒரு நிலைமையிலும் நாங்கள் எங்களது கலகத்தை ஆரம்பித்தோம்—அந்த இரண்டு படையணியுங்கூட எங்களுக்கு எதிராகத் திரும்பிவிட்டது.... எங்களிடம் எஞ்சியவர்கள் யூன்கெர்கள் மட்டுமேதான்....''

''கசாக்குகள் என்ன ஆயினர்?''

படையதிகாரி பெருமூச்செறிந்துவிட்டுக் கூறினர்: ''அவர்கள் தம் இடத்தை விட்டு நகரவே இல்லை. காலாட் படையினரின் ஆதரவு இருந்தால் தாம் வருவோம் என்று ஆரம்பத்தில் கூறினர்கள். தவிரவும் தமது ஆட்கள் கேரென்ஸ்கியுடன் இருப்பதாகவும் தமக்குரிய பங்கைத் தாம் செய்து வருவதாகவும் சொல்லிக் கொண்டார்கள்.... பிறகு கூறினர்

க்ள், கசாக்குகள் ஜனநாயகத்தின் பாரம்பரியப் பகைவர் களாக எப்போதுமே தூற்றப்பட்டு வந்தவர்கள் என்று கூறி ஞர்கள்.... முடிவில் சொன்ஞர்கள், 'எங்கள் நிலங்களை எங் களிடமிருந்து எடுத்துக் கொள்ளப்போவதில்லை என்று போல் ஷிவிக்குகள் வாக்களிக்கிருர்கள். எங்களுக்கு அபாயம் வந்து விடவில்லை. நாங்கள் நடுநிலை வகிக்கிறோம்' என்று.''

நாங்கள் பேசிக் கொண்டிருந்த போது பலரும் ஓயாமல் வந்து கொண்டும் போய்க் கொண்டும் இருந்தார்கள்—இவர்களில் மிகப் பெரும்பாலோர் படையதிகாரிகள், தோள் களிலிருந்து பட்டிகளைக் கிழித்து எடுத்திருந்தார்கள். முன் னறையில் அவர்கள் வந்து சென்றதை நாங்கள் பார்க்க முடிந் தது, கடுமையான தணிந்த குரலில் அவர்கள் பேசியது காதில் விழுந்தது. குளிப்பறை ஒன்றின் கதவு எப்போதாவது திறக் கப்பட்டது, பாதியளவுக்கு இழுத்து மூடப்பட்டிருந்த கத வுத் திரைகளின் வழியே நாங்கள் இதைப் பார்க்க முடிந்தது. அந்தக் குளிப்பறையில் கர்னல் உடுப்பு அணிந்த வாட்டசாட்ட மான படையதிகாரி ஒருவர் கழிப்பிட ஆசனத்தில் அமர்ந்து தமது மடியின் மீதிருந்த ஓர் அட்டையில் ஏதோ எழுதிக் கொண்டிருந்தார். அந்தப் படையதிகாரி பெத்ரொகிராதின் முன்னுள் தளபதியான கர்னல் பல்கோவ்னிக்கவ் என்பது எனக்கு அடையாளம் தெரிந்தது. இவரைக் கைது செய் வதற்குப் புரட்சி இராணுவக் கமிட்டி பெரிய அளவில் சன் மானம் தந்திருக்கும்.

''எங்களது வேலைத்திட்டம் என்னவென்ரு கேட்கிறீர் கள்?'' என்ருர் எங்களோடு பேசிக் கொண்டிருந்த படையதிகாரி. ''இதுதான் எங்கள் வேலைத்திட்டம். நிலங் கள் நிலக் கமிட்டிகள் வசம் ஒப்படைக்கப்பட வேண்டும். தொழிலாளர்களுக்குத் தொழில் துறையின் கண்காணிப்பில் முழுப் பிரதிநிதித்துவம் தரப்பட வேண்டும். ஆற்றல் வாய்ந்த சமாதான வேலைத்திட்டம் வேண்டும், ஆனுல் போல்ஷி விக்குகள் வெளியிட்டிருப்பதைப் போல் உலகுக்கு இறுதி எச்சரிக்கை விடுக்கப்படலாகாது. உள்நாட்டிலுங்கூட போல் ஷிவிக்குகளால் மக்கள் திரளினருக்குத் தாம் அளித்த வாக் குறுதிகளை நிறைவேற்ற முடியப் போவதில்லை. நாங்கள் அதற்கு இடமளிக்கப் போவதில்லை.... அவர்கள் விவசாயி

களுடைய ஆதரவைப் பெறுவதற்காக எங்களுடைய நில வேலைத்திட்டத்தைக் களவாடிக் கொண்டுவிட்டார்கள். நேர்மையில்லாத செயல் அது. அவர்கள் அரசியல் நிர்ணயச் சபைக்காகக் காத்திருந்தார்களானால்—''

''அரசியல் நிர்ணயச் சபையல்ல விவகாரம்!'' என்று இடை மறித்தார் இன்னொருவர். ''போல்ஷிவிக்குகள் இங்கே ஒரு சோஷலிச அரசை அமைத்திட விரும்பலாம், ஆனால் எப்படியும் எங்களால் அவர்களுடன் சேர்ந்து வேலை செய்ய முடியாது! கேரென்ஸ்கி பெரிய தவறு செய்தார். போல்ஷிவிக்குகளைக் கைது செய்யும்படி தாம் உத்திரவிட்டிருப்பதாகக் குடியரசு அவையில் அறிவித்ததன் மூலம் அவர் தாம் செய்ய நினைத்ததை போல்ஷிவிக்குகளுக்குத் தெரியப்படுத்திவிட்டார்....''

''ஆனால் இப்போது நீங்கள் என்ன செய்ய நினைக்கிறீர்கள்?'' என்று நான் கேட்டேன்.

இருவரும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள். ''சில நாட்களில் நீங்கள் இதை நேரில் கண்டறிந்து கொள்வீர்கள். போர்முனையிலிருந்து எங்கள் பக்கத்துக்குப் போதுமான படைகள் கிடைத்தால் நாங்கள் போல்ஷிவிக்குகளுடன் சமரசம் செய்து கொள்ள மாட்டோம். இல்லையேல், வேறு வழியில்லாமற் போகலாம்....''

திரும்பவும் நேவ்ஸ்கி சாலைக்கு வந்த நாங்கள் பயணிகள் நிரம்பி வழிந்தி டிராம் வண்டியின் படியில் தாவியேறித் தொத்திக் கொண்டோம். பளு தாங்கமாட்டமல் வண்டியின் தளங்கள் தரையில் உராய்வதாகத் தோன்றும் அளவுக்கு வளைந்து அழுந்தியிருந்தன. வேதனையோடு மெதுவாய் நீண்ட பல மைல்களுக்கு ஊர்ந்து சென்று ஸ்மோல்னிக்கு வந்து சேர்ந்தோம்.

நேர்த்தியும் மென்னயமும் வாய்ந்து சிற்றுருவமுடையவரான மெஷ்கோவ்ஸ்கி முகத்தில் கவலைக் குறிகள் தெரிய நடை வழியே வந்து கொண்டிருந்தார். அமைச்சகங்களில் நடைபெறும் வேலைநிறுத்தங்கள் பாதித்து வருவதாக அவர் எங்களிடம் சொன்னார். உதாரணமாக, இரகசிய உடன்படிக்கைகளை வெளியிடுவதாய் மக்கள் கமிசாரவை வாக்களித்திருந்தது, ஆனால் இவற்றுக்குப் பொறுப்பான அதிகாரியாகிய

நெராத்தவ் இந்த ஆவணங்களையும் தம்முடன் எடுத்துக் கொண்டு எங்கோ மறைந்துவிட்டார். பிரிட்டிஷ் தூதரகத்தில் இந்த ஆவணங்கள் ஒளித்து வைக்கப்பட்டிருப்பதாக ஊகிக்கப்பட்டு வந்தது....

ஆனால் இவற்றையும் விட கேடு விளைவிப்பதாக இருந்தது வங்கிகளின் வேலைநிறுத்தம். ''பணம் இல்லாததால் நாங்கள் ஒன்றும் செய்ய முடியாமல் தவிக்கிறோம்'' என்றார் மென்ழீன்ஸ்கி. ''ரயில்வேத் தொழிலாளர்கள், தபால், தந்தி ஊழியர்கள் முதலானோருக்குச் சம்பளம் தந்தாக வேண்டும்.... வங்கிகள் மூடிக் கிடக்கின்றன, நிலைமையைச் சமாளிப்பதற்கு மிகவும் கேந்திரமான அரசு வங்கியும் மூடப்பட்டிருக்கிறது. ருஷ்யாவில் வங்கி எழுத்தர்கள் எல்லோருக்கும் லஞ்சம் அளித்து அவர்களை வேலைநிறுத்தம் செய்யச் சொல்லியிருக்கிறார்கள்....

''ஆனால் அரசு வங்கியின் காப்பு அறைகளை வெடி வைத்து உடைத்துத் திறப்பதற்கு லெனின் கட்டளை பிறப்பித்திருக்கிறார். தனியார் வங்கிகள் நாளைக்குத் திறக்கப்பட வேண்டுமென்றும், இல்லையேல் நாங்கள் அவற்றைத் திறப்போமென்றும் அரசாணை ஒன்று வெளியாகியிருக்கிறது!''

பெத்ரொகிராது சோவியத்து முழு மூச்சுடன் செயல்பட்டுக் கொண்டிருந்தது. ஆயுதம் தாங்கிய ஆட்கள் அங்கே குழுமியிருந்தார்கள். திரோத்ஸ்கி உரை நிகழ்த்திக் கொண்டிருந்தார்:

''கசாக்குகள் கிராஸ்னொயெ செலோவிலிருந்து பின்வாங்கிச் செல்கிறார்கள்'' (காது செவிடு படும்படியான ஆனந்த வாழ்த்தொலி முழக்கம்.) ''ஆனால் போர் இப்போதுதான் சரியானபடி ஆரம்பித்திருக்கிறது. பூல்கொவொவில் கடும்போர் நடைபெற்று வருகிறது. கிடைக்கக்கூடிய எல்லாப் படைகளையும் சீக்கிரமாய் அங்கே அனுப்பி வைக்க வேண்டும்....

''மாஸ்கோவிலிருந்து வரும் செய்திகள் நன்றாயில்லை. கிரெம்ளின் யூன்கெர்களின் கையில் இருக்கிறது, தொழிலாளர்களிடம் இருக்கும் படைக் கலன்கள் மிகச் சொற்பம். விளைவு பெத்ரொகிராதையே பொறுத்திருக்கிறது.

''சமாதானத்தையும் நிலத்தையும் பற்றிய அரசாணைகள் போர்முனையிலே மிகுந்த உற்சாகத்தை உண்டாக்கி

வருகின்றன. கேரென்ஸ்கி பெத்ரொகிராது எரிவதாகவும் இரத்தம் பெருகியோடுவதாகவும் போல்ஷிவிக்குகளால் பெண்களும் குழந்தைகளும் கொல்லப்படுவதாகவும் கதை கட்டி அகழ்வரிகளில் இவற்றைப் பரப்பி வருகின்ருர். ஆனல் யாரும் அவர் சொல்வதை நம்பவில்லை....

''ஒலேக், அரோரா, ரெஸ்பூப்ளிக்கா ஆகிய போர்க் கப்பல்கள் நேவா ஆற்றில் நங்கூரமிட்டு நிற்கின்றன, அவற்றின் பீரங்கிகள் நகரை அணுகி வரும் பாதைகளைக் குறி பார்த்துச் சுடத் தயாராய் இருக்கின்றன....''

''நீங்கள் ஏன் அங்கே செங்காவலர்களிடம் செல்லாமல் இங்கே இருக்கிறீர்கள்?'' என்று கூச்சலிட்டது முரட்டுக் குரல் ஒன்று.

''இதோ நான் போகிறேன்!'' என்று பதிலளித்து மேடையிலிருந்து கீழே இறங்கினர் திரோத்ஸ்கி. வழக்கமாக இருந்ததைக் காட்டிலும் முகம் சற்று வெளுப்பாகத் தெரிய அவர் அந்தக் கூடத்தின் ஓரமாய்ச் சென்ருர். ஆவல் மிக்க நண்பர்கள் புடை சூழ்ந்து வர வேகமாய் வெளியே சென்று அங்கே காத்திருந்த மோட்டார் வண்டியில் ஏறினர்.

இப்போது காமெனெவ் பேசினர். இணக்கம் காணும் மாநாட்டு விவாதங்களை அவர் விவரித்தார். மென்ஷிவிக்குகள் முன்மொழிந்த போர்நிறுத்த நிபந்தனைகள் இகழ்ச்சியுடன் நிராகரிக்கப்பட்டன என்று அவர் அறிவித்தார். ரயில்வேத் தொழிலாளர்களது சங்கத்தின் கிளைகளுங்கூட இந்தப் பிரேரணையை எதிர்த்து வாக்களித்தன....

''இப்போது நாம் ஆட்சியதிகாரம் வென்று அனைத்து ருஷ்யாவிலும் ஓங்கி எழுந்து கொண்டிருக்கிறோம்'' என்ருர் அவர். ''ஆகவே இந்நிலைமையில் அவர்கள் நம்மை மூன்று சிறு காரியங்கள் செய்யச் சொல்லிக் கேட்கிருர்கள்: 1. ஆட்சியதிகாரத்தைக் கைவிட்டுவிட வேண்டும்; 2. படையாட்களைத் தொடர்ந்து யுத்தத்தில் ஈடுபடச் செய்ய வேண்டும்; 3. விவசாயிகளை நிலத்தைப்பற்றி மறந்துவிடச் செய்ய வேண்டும்....''

நிமிட நேரத்துக்கு லெனின் மேடையிலே தோன்றி, சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களது குற்றச்சாட்டுகளுக்குப் பதிலளித்தார்;

''அவர்களது நிலத்துறை வேலைத்திட்டத்தைத் திருடிக் கொண்டுவிட்டோமென எங்கள் மீது அவர்கள் குற்றம் சாட்டு கிறார்கள்.... அப்படியானால் நாங்கள் அவர்களுக்குச் சிரம் தாழ்த்துகிறோம். எங்களுக்கு அது போதுமானதாகும்....''

இவ்விதம் கூட்டம் தொடர்ந்து விறுவிறுப்பாய் நடந்து சென்றது. தலைவருக்குப் பின் தலைவராய் மேடையியே வந்து நின்று விளக்கிக் கூறினார்கள், வலியுறுத்தினார்கள், வாதாடினார்கள்; படையாளை அடுத்துப் படையாளும் தொழிலாளியை அடுத்துத் தொழிலாளியுமாய் எழுந்து நின்று தமது சிந்தனையிலும் உள்ளத்திலும் இருந்தவற்றை எடுத்துரைத்தார்கள்.... கூடியிருந்தவர்கள் எழுந்து சென்றார்கள், புதியவர்கள் வந்து உட்கார்ந்தார்கள், கூட்டம் இடையறாது புதியதாகி வந்தது. இடையிடையே ஆட்கள் உள்ளே வந்து, இன்ன பெயர் கொண்ட படைப்பிரிவைச் சேர்ந்தவர்கள் போர்முனைக்குச் செல்ல வேண்டுமென்று கூவி அறிவித்தார்கள். போர்முனையிலிருந்து விடுவிக்கப்பட்டோரும் காயமுற்றோரும் படைக் கலன்களுக்காக ஸ்மோல்னிக்கு வந்தோரும் மண்டபத்துக்குள் திரள் திரளாய் வந்தார்கள்....

காலை சுமார் மூன்று மணிக்கு நாங்கள் மண்டபத்திலிருந்து வெளியே சென்ற போது, புரட்சி இராணுவக் கமிட்டியைச் சேர்ந்த ஹோல்த்ஸ்மன் மலர்ச்சியுற்று மாறிய முகத்துடன் மண்டபத்துக்குள் ஓடி வந்தார்.

''யாவும் சிறப்பாகவே நடைபெறுகின்றன!'' என்று அவர் என் கைகளைப் பிடித்துக் கொண்டு கூவினார். ''போர்முனையிலிருந்து தந்தி வந்திருக்கிறது. கேரென்ஸ்கி நொறுக்கப்பட்டு விட்டார்! இதைப் பாருங்கள்!''

அவசரமாகப் பென்சிலால் கிறுக்கப்பட்ட ஒரு காகிதத்தை அவர் எங்களிடம் நீட்டினார். எங்களால் அதைப் படிக்க முடியவில்லை என்பதைக் கண்டதும் பலத்த குரலில் அவர் அதைப் படித்துக் காட்டினார்:

பூல்க்கொவொ. படைத்தலைமை அலுவலகம். காலை மணி 2-10.

நவம்பர் 12க்கும் 13க்கும் இடைப்பட்ட இரவு வரலாற்றிலே இடம் பெறப் போகிறது. புரட்சியின் தலைநகருக்கு

எதிராக எதிர்ப்புரட்சிப் படைகளைக் கொண்டு வருவதற்குக் கேரென்ஸ்கி செய்த முயற்சி தீர்மானகரமாய் எதிர்த்தடிக் கப்பட்டிருக்கிறது. கேரென்ஸ்கி பின்வாங்கிச் செல்கிறார், நாம் முன்னேறுகின்றோம். பெத்ரோகிராதின் படையாட் களும் மாலுமிகளும் தொழிலாளர்களும் தாம் ஆயுதமேந்தி ஜனநாயகத்தின் சித்தத்தையும் அதிகாரத்தையும் செயல் பட வைக்க முடியும், செயல்பட வைப்போம் என்பதைத் தெளிவுபடக் காட்டியிருக்கிறார்கள். முதலாளித்துவ வர்க்க மானது புரட்சியின் சேனையைத் தனிமைப்படுத்த முயன்றது. கேரென்ஸ்கி கசாக்குகளின் படைகளைக் கொண்டு இந்தச் சேனையை முறித்திட முயன்றார். இரண்டு திட்டங்களும் பரி தாபகரமான படுதோல்வி அடைத்துவிட்டன.

தொழிலாளர்கள், விவசாயிகளது ஜனநாயகம் ஆதிக்க நிலை பெற வேண்டுமென்ற மகத்தான கருத்தானது சேனை யின் அணிகளை ஒருசேர இணைத்து, அதன் சித்தத்தைத் திண்மை பெறச் செய்தது. சோவியத்துகளின் ஆட்சியதிகாரம் அநித்தியமானதல்ல, அசைக்க முடியாதபடி நிலைநாட்டப் பெற்ற உண்மையாகும் என்பதை இத்தருணம் முதலாய் நாடு அனைத்தும் ஐயப்பாட்டுக்கு இடமின்றித் தெரிந்து கொள்ளும்.... கேரென்ஸ்கி எதிர்த்தடிக்கப்பட்டதானது நிலப்பிரபுக்களும் முதலாளித்துவ வர்க்கத்தாரும் பொது வாகக் கர்னீலவியர்களும் எதிர்தடிக்கப்பட்டதைக் குறிப்ப தாகும். கேரென்ஸ்கி எதிர்த்தடிக்கப்பட்டதானது சமாதான மான சுதந்திர வாழ்வும் நிலமும் ரொட்டியும் ஆட்சியதி காரமும் பெற மக்களுக்குள்ள உரிமை உறுதி செய்யப்படு வதைக் குறிப்பதாகும். பூல்க்கொவொ பட்டாளம் வீரமும் தீரமும் மிக்க முறையில் கொடுத்த இந்த அடியின் மூலம், தொழிலாளர்கள், விவசாயிகளது புரட்சியின் இலட்சி யத்தை பெரும் பலம் பெறச் செய்திருக்கிறது. கடந்த காலத்துக்குத் திரும்பிச் செல்வது முடியாத காரியமாகும். போராட்டங்களும் தடைமதில்களும் தியாகங்களும் நம் முன்னால் இருக்கின்றன. ஆனால் பாதை தெளிவாகத் தெரி கின்றது, வெற்றி உறுதியாகிவிட்டது.

புரட்சிகர ருஷ்யாவும் சோவியத்து ஆட்சியதிகாரமும் கர்னல் வால்டனின் தலைமையில் செயல்படும் தமது பூல்க்

கொவொ பட்டாளம் குறித்துப் பெருமை கொள்ளலாம். உயிர்த் தியாகம் புரிந்தோரது நினைவு என்றும் நிலைத்து வாழ்க! புரட்சியின் வீரச் செம்மல்களின் புகழ், பற்றுறுதி யோடு மக்களுக்காகப் போராடிய படையாட்கள், படை யதிகாரிகளின் புகழ் ஓங்குக!

புரட்சிகரமான, மக்களுடையதான, சோஷலிச ருஷ்யா நீடூழி வாழ்க!

அவையின் பெயரில்,
**மக்கள் கமிசார்** லி. திரோத்ஸ்கி.

வீட்டை நோக்கி ஸ்னமென்ஸ்கி சதுக்கத்தின் குறுக்கே நாங்கள் வண்டியில் போய்க் கொண்டிருந்த போது நிக்கலா யெவ்ஸ்கி ரயில் நிலையத்தின் முன்னால் சாதாரணமாகப் பார்க்க முடியாத பெரிய கூட்டம் கூடியிருந்தது. பல ஆயிரம் மாலுமி கள் திரண்டிருந்தார்கள், துப்பாக்கிக் குத்தீட்டிகள் அடர்த்தி யாய்க் குத்திட்டு நின்றன.

படிகளில் நின்று கொண்டு **விக்ஷேல்** உறுப்பினர் ஒருவர் அவர்களிடம் விளக்கிக் கூறினார்:

''தோழர்களே, நாங்கள் உங்களை மாஸ்கோவுக்கு இட்டுச் செல்வதற்கில்லை. நாங்கள் நடுநிலை வகிப்பவர்கள். எத்தரப் பாரது படைகளையும் நாங்கள் ஏற்றிச் செல்வதில்லை. நாங் கள் உங்களை மாஸ்கோவுக்கு ஏற்றிச் செல்ல முடியாது, ஏற்கெனவே அங்கே கொடிய உள்நாட்டுப் போர் நடை பெற்று வருகிறது....''

மக்கள் வெள்ளம் அலை மோதிய அந்தச் சதுக்கம் அனைத் துமே அவரைக் கண்டித்து இரைச்சல் எழுப்பிற்று. மாலுமி கள் முண்டிக் கொண்டு முன்னே செல்ல முற்பட்டார்கள். திடீரென வேறொரு கதவு விரியத் திறக்கப்பட்டது, ரயில் ஓட்டும் தொழிலாளர்கள் இரண்டு, மூன்று பேர் அந்த வாயி லில் நின்றிருந்தார்கள்.

''தோழர்களே, இப்படி வாருங்கள்!'' என்று கூச்சலிட் டார் அவர்களில் ஒருவர். ''நாங்கள் உங்களை மாஸ்கோ வுக்கு ஏற்றிச் செல்கிறோம்—விளதிவஸ்தோக்குக்கு வேண்டு மானாலும் ஏற்றிச் செல்கிறோம்! புரட்சி வாழ்க!''

*அத்தியாயம் 9*

## வெற்றி

**கட்டளை எண் 1**

*பூல்கொவொ பட்டாளத்தினருக்கு*
***1917, நவம்பர் 13, காலை மணி 9.38***

*உக்கிரமான போரின் இறுதியில் பூல்க்கொவொ பட்டாளத்தினர் எதிர்ப்புரட்சிப் படைகளை அறவே முறியடித்தனர். எதிர்ப்புரட்சிப் படைகள் ஒழுங்கிழந்து தமது நிலைகளிலிருந்து பின்வாங்கி ஓடி ஜார்ஸ்கயெ செலோவினுள் மறைந்து இரண்டாவது பாவ்லவ்ஸ்கொயெவையும் காத்சினாவையும் நோக்கிப் பின்னடைந்தன.*

*நமது முன்னணிப் பிரிவுகள் ஜார்ஸ்கயெ செலோவின் வடகிழக்குக் கோடியையும் அலெக்சாந்திரொவ்ஸ்கயா ரயில் நிலையத்தையும் பிடித்துக் கொண்டன. கோல்ப்பினொ பட்டாளம் எங்கள் இடப்புறத்திலும் கிராஸ்னொயெ செலோ பட்டாளம் எங்கள் வலப்புறத்திலும் இருந்தன.*

*ஜார்ஸ்கயெ செலோவைப் பிடிக்கும்படியும், அதை அணுகும் வழிகளையும், குறிப்பாக காத்சினாவின் பக்கத்திலிருந்து வரும் போது இருக்கக் கூடிய வழிகளையும் அரண் செய்யும்படியும் பூல்க்கொவொ படைகளுக்கு நான் ஆணையிட்டேன்.*

*அதோடு பாவ்லவ்ஸ்கொயெவைக் கடந்து அப்பால் செல்லும்படியும், அதைப் பிடிக்கும்படியும், அதன் தெற்குப் பக்கத்தை அரண் செய்யும்படியும், தினோ வரையில் ரயில் பாதையைப் பிடித்துக் கொள்ளும்படியும் ஆணையிட்டேன்.*

*துருப்புகள் தாம் பிடித்துக் கொண்ட நிலைகளைப் பலப்படுத்துவதற்காக அகழ்வரிகளையும் பிற பாதுகாப்பு ஏற்*

பாடுகளையும் அமைத்து எல்லா நடவடிக்கைகளும் எடுத்துக் கொண்டாக வேண்டும்.

கோல்ப்பினொவிலும் கிராஸ்னொயெ செலோவிலும் இருக்கும் பட்டாளங்களோடும், மற்றும் பெத்ரொகிராதின் பாதுகாப்புக்கான தலைமைப் படைத் தலைவரோடும் அவை நெருங்கிய தொடர்பு நிறுவிக் கொள்ள வேண்டும்.

ஒப்பம்,

**கேரென்ஸ்கியின் எதிர்ப்புரட்சிப் படைகளை எதிர்த்துச் செயல்படும் எல்லாப் படைகளுக்கும் தலைமைப் படைத் தலைவர், லெப்டினண்டு-கர்னல்** முரவியோவ்.

செவ்வாய்க் கிழமை காலை. எப்படி இது? இரண்டு நாட்களுக்கு முன்புதான் பெத்ரொகிராது சுற்றுப் பிரதேசங்களில் படைத்தலைவரில்லாத கும்பல்களாய்க் குறிக்கோளின்றி திரிந்து கொண்டிருந்தார்கள், இவர்களிடம் உணவு இல்லை, பீரங்கிகள் இல்லை, எந்தத் திட்டமும் இல்லை. கட்டுப்பாடில்லாச் செங்காவலர்களும் படையதிகாரிகளில்லாப் படையாட்களுமாய், ஒழுங்கமைப்பற்ற அந்தத் திரள்களை, தானே தேர்ந்தெடுத்துக் கொண்ட உயர் தலைமைக்குக் கீழ் படிந்து செயல்படும் சேனையாக, பீரங்கிகளின், கசாக்குக் குதிரைப் படையின் தாக்குதல்களை[1]* எதிர்த்து நின்று அதைத் தகர்த்திடும்படியான உறுதியும் பக்குவமும் கொண்ட சேனையாக ஒருசேர இணைத்திட்டது எது?

எழுச்சி புரியும் மக்கள் முந்திய இராணுவ நியதிகளைச் செல்லத் தகாதனவாக ஆக்கிவிடும் திறன் படைத்தவர்கள். பிரஞ்சுப் புரட்சியின் கந்தலுடுத்திய சேனைகளும், வல்மீயிலும் வெய்சம்பூர்கிலும்** அவை கண்ட வெற்றிகளும் மறக்க

---

* இந்த அத்தியாயத்தில் எண்ணிட்டுக் காட்டப்படும் சுட்டுக் குறிகள் அத்தியாயம் 9இன் அனுபந்தத்தைக் குறிப்பவை.

** வரலாற்றுச் சிறப்புடைத்த வல்மீப் போரில், 1792 செப்டம்பர் 20ல், பிரெஞ்சுப் புரட்சிச் சேனையின் தொண்டர் படைகள், பாரிஸ் மீது படையெடுத்து முன்னேறி வந்து

முடியாதவை. சோவியத்துப் படைகளுக்கு எதிராக யூன்கேர் களும் கசாக்குகளும் நிலப்பிரபுக்களும் பிரபுக் குலத்தோரும் கறுப்பு நூற்றுவரும் அணி திரண்டு நின்றார்கள்—ஜார் மன்னனும் அஹ்ரான்க்காவும் சைபீரிய அடிமைச் சங்கிலிகளும் திரும்பி வந்துவிடும் என்பதைக் குறித்தவர்கள் இவர்கள்; அதோடு ஜெர்மானியர்களாலாகிய பிரம்மாண்ட, பயங்கர அபாயம்.... வெற்றியானது, கார்லைலின் சொற்களில், ''வான்புகழையும் என்றென்றுக்குமான பொற்காலத்தையும்'' குறித்தது!

ஞாயிற்றுக்கிழமை இரவில், புரட்சி இராணுவக் கமிட்டியின் கமிசார்கள் போர்க் களத்திலிருந்து பதறிக் கொண்டு திரும்பி வந்தார்கள்; பெத்ரொகிராது நகரக் காவல் படை அதன் போர்த்தலைமை அலுவலர்களாகிய ஐவர் குழுவினைத் தேர்ந்தெடுத்தது, மூன்று படையாட்களையும் இரு படையதிகாரிகளையும் கொண்ட ஐவர் குழு—இவர்கள் எல்லோரும் எதிர்ப்புரட்சிச் சாயம் கிஞ்சித்தும் இல்லாதவர்களென ஊர்ஜிதம் பெற்றவர்கள். முன்னாள் தேச பக்தவாதி கர்னல் முரவியோவ் பொதுத் தலைமை ஏற்றார்—திறமைசாலிதான், ஆனால் கவனமாகக் கண்காணிக்கப்பட வேண்டியவர்.* கோல்ப்பினொவிலும், அபூஹவாவிலும், பூல்க்கொவொவிலும், கிராஸ்னொயெ செலோவிலும் தற்காலிகப் படைப் பிரிவுகள் அமைக்கப்பட்டன, சுற்றுப்புறப் பகுதிகளில் திரிந்து கொண்டிருந்தவர்கள் வந்து சேர்ந்து கொள்ள முற்பட்டதும்

---

கொண்டிருந்த பிரஷ்யப் படைகளைத் தோற்றோடச் செய்தன. 1794ல் நடைபெற்ற வெய்சம்பூர்க் போரில் பிரெஞ்சுப் புரட்சிப் படைகள்—உண்மையில் இவற்றுக்குத் தலைமை தாங்கியவர் செயின்ட் ஜூஸ்டு—ஆஸ்திரிய சேனையைத் தகர்த்துப் பிரெஞ்சு எல்லைகளிலிருந்து விரட்டியடித்தன.—[பதிப்பாசிரியர்.]

* முரவியோவ் திடமான அரசியல் கருத்துகள் இல்லாதவர். சோவியத்துகளுக்கு ஆதரவாகத் திரும்புமுன் அவர், வெற்றி கிட்டும் வரை யுத்தம் என்னும் கோஷத்தை ஆதரித்து வந்தவர். கர்னீலவ் கலகத்தின் போது இடதுசாரி சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களுடன் கூடிக் கொண்டவர். பிற்பாடு அவர் சோவியத்து ஆட்சியதிகாரத்தின் பகைவர்களது பக்கத்துக்குப் போய்ச் சேர்ந்தார்.—[பதிப்பாசிரியர்.]

பருமனில் இவை பெரிதாகிச் சென்றன—கலப்படமான படையாட்களும் மாலுமிகளும் செங்காவலர்களுமாய், காலாட் படையும் குதிரைப்படையும் பீரங்கிப் படையுமாகிய பல் வேறு ரெஜிமெண்டுகளேயும் சேர்ந்த பகுதிகளாய் வந்து சேர்ந்தார்கள், சில கவச மோட்டார்களும் வந்து சேர்ந்தன.

பொழுது புலர்ந்தது, கேரென்ஸ்கியின் கசாக்குகளது காவல் பிரிவினர் தென்பட்டனர். அங்கும் இங்குமாகத் துப்பாக்கிகள் சுடப்படும் சப்தம் கேட்டது. சரணடையும்படி அழைப்புகள் விடுக்கப்பட்டன. குளிரும் அமைதியுமாயிருந்த காற்றில் அந்த மங்கலான சமவெளி எங்கும் போரின் ஒலிகள் பரவின. சுற்றித் திரிந்து சிறு கணப்புத் தீயைச் சுற்றிலும் கூடி ஆங்காங்கே காத்திருந்த உதிரிப் படையினரின் காதில் இந்த ஒலிகள் விழுந்தன.... ஓகோ, ஆரம்பமாகிவிட்டதே! அவர்கள் போர் நடைபெற்ற இடத்துக்குப் புறப்பட்டார்கள். நேரான சாலேகள் வழியே வெள்ளமெனப் பெருகி வந்த தொழிலாளர் திரளினருடன் சேர்ந்ததும் அவர்களது நடையின் வேகம் அதிகரிக்கலாயிற்று.... தாக்குதலுக்கு உள்ளான எல்லா முனேகளிலும் ஆத்திரம் கொண்ட மனிதக் கூட்டங்கள் இவ்விதம் தன்மூப்பான முறையில் வந்து சேர்ந்தன. கமிசார்கள் இவர்களே உடனே எதிர் கொண்டு அழைத்து, போர் முனேயில் இவர்களுக்குரிய இடங்களே நிர்ணயித்துக் கொடுத்தார்கள், அல்லது வேலேகளே வகுத்து அளித்தார்கள். இது இவர்களது உலகைப் படைப்பதற்கான இவர்களது போராகும்; தலேமையிலிருந்த படையதிகாரிகள் இவர்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள். இசைவின்றி மிகப் பலவாய் இருந்த சித்தங்கள் அத்தருணத்தில் ஒரே சித்தமாய் ஒருங்கிணேந்தன....

இந்தப் போரில் பங்கு கொண்டவர்கள் பிற்பாடு என்னிடம் விவரித்துச் சொன்னர்கள், மாலுமிகள் எப்படித் தம்மிடமிருந்த தோட்டாக்கள் யாவும் தீர்ந்து போகும் வரை போராடிவிட்டுப் பிறகு புயலெனஎழுந்துத் தாக்குதல் தொடுத்தார்கள், பயிற்சியில்லாத் தொழிலாளர்கள் தம்மை நோக்கிப் பாய்ந்து வந்த கசாக்குகள் மீது தாவி அவர்களேக் குதிரைகளிலிருந்து பிய்த்திழுத்தார்கள், பேரில்லாத மக்கள் படைத் திரள்கள் போர்க் களத்தைச் சுற்றிலும் இருளில்

ஒன்று திரண்டு கடலெனப் பொங்கியெழுந்துப் பகைவன் மீது பாய்ந்து மூழ்க்கடித்தனர் என்பதை எல்லாம் சொன்னூர் கள்.... திங்கட்கிழமை நள்ளிரவுக்குள் கசாக்குகள் முறி யடிக்கப்பட்டனர். பீரங்கிகளை அப்படி அப்படியே போட்டு விட்டு அவர்கள் ஓட்டமெடுத்தனர். பாட்டாளி வர்க்கத்தின் சேனை கோணல் மாணலான நீண்ட போர்முனை நெடுக முன் னேறி ஜார்ஸ்கயெவினுள் புகுந்தது, அரசாங்கத்தின் பெரிய ஒலிபரப்பி நிலையத்தைப் பகைவன் அழிப்பதற்கு வாய்ப்பு பெறுமுன் நகரைப் பிடித்துக் கொண்டுவிட்டது. இந்த நிலை யத்திலிருந்துதான் ஸ்மோல்னியின் கமிசார்கள் வெற்றி எட்டுத் திக்கும் எட்ட முரசறைந்தார்கள்....

**தொழிலாளர்கள், படையாட்கள் பிரதிநிதிகளது**
**எல்லா சோவியத்துகளுக்கும்**

நவம்பர் 12ல் ஜார்ஸ்கயெ செலோவுக்கு அருகே இரத் தம் பெருகிய கடும் போரில் புரட்சி சேனை கேரென்ஸ்கியின், கர்னீலவின் எதிர்ப்புரட்சிப் படைகளைத் தோற்கடித்தது. புரட்சிகர ஜனநாயகத்தின் பகைவர்களுக்கு எதிராகத் தாக் குதல் நடத்தும்படியும், கேரென்ஸ்கியைக் கைது செய் வதற்கு எல்லா நடவடிக்கைகளும் எடுக்கும்படியும், மற்றும் புரட்சியின் சாதனைகளுக்கும் பாட்டாளி வர்க்கத்தின் வெற் றிக்கும் அபாயம் உண்டாக்கக் கூடிய எந்தச் சாகசத்தை யும் எதிர்க்கும்படியும் புரட்சி அரசாங்கத்தின் பெயரில் நான் எல்லா ரெஜிமெண்டுகளுக்கும் கட்டளையிடுகிறேன்.

புரட்சி சேனை நீடூழி வாழ்க!

**முரவியோவ்.**

மாநிலங்களிலிருந்து வந்த செய்திகள்....

செவஸ்தோபலில் உள்ளூர் சோவியத்து ஆட்சியதி காரத்தை மேற்கொண்டுவிட்டது. துறைமுகத்திலிருந்த போர்க்கப்பல்களில் நடைபெற்ற மாலுமிகளது மாபெரும் பொதுக் கூட்டமானது பலவந்தம் செய்து அவர்களது படைய திகாரிகளை வரிசையாய் நிற்க வைத்துப் புதிய அரசாங்கத் திடம் பற்றுறுதியுடன் இருப்போமெனச் சத்தியம் அளிக்கச்

செய்தது. நீழ்னி நோவ்கரது சோவியத்தின் கண்காணிப்புக்கு வந்துவிட்டது. கஸானில் போல்ஷிவிக்கு நகரக் காவற் படையை எதிர்த்துத் தெருக்களில் யூன்கெர்களும் பீரங்கிப் படைப் பிரிவும் போர் புரிந்ததாகச் செய்தி வந்தது....

மாஸ்கோவில் மிகக் கடும் போர் மீண்டும் மூண்டுவிட்டது. கிரெம்ளினும் நகரின் மையப் பகுதியும் யூன்கெர்களிடமும் வெண்காவலர்களிடமும் இருந்தன, எல்லாப் பக்கங்களிலிருந்தும் புரட்சி இராணுவக் கமிட்டியின் படைகள் இவர்களைக் கடுமையாகத் தாக்கி வந்தன. ஸ்கோபெலெவ் சதுக்கத்தில் நிறுத்தப்பட்டிருந்த சோவியத் பீரங்கிகள் நகர டூமாவின் கட்டடத்தையும் போலீஸ் தலைமையகத்தையும் ஓட்டல் மெட்ரோப்போலையும் குண்டுகள் கொண்டு தாக்கி வந்தன. திவெர்ஸ்காயாவிலும் நிக்கீத்ஸ்கயாவிலும் சதுக்கத் தளவரிசைக் கற்களைப் பெயர்த்தெடுத்து அகழ்வரிகளும் தடையரண்களும் அமைக்கப்பட்டன. பெரிய வங்கிகள், வாணிப நிலையங்களின் கட்டடங்கள் மீது இயந்திரத் துப்பாக்கிகள் சடசடத்துக் குண்டுகள் பாய்ச்சின. விளக்குகள் இல்லை, தொலைபேசி இல்லை. முதலாளித்துவக் குடும்பங்கள் நிலவறைகளில் வசித்தன. கிரெம்ளின் உடனடியாகச் சரணடைய வேண்டும், இல்லையேல் குண்டுவீச்சு ஆரம்பமாகிவிடும் என்று புரட்சி இராணுவக் கமிட்டி சமுதாயப் பாதுகாப்புக் கமிட்டிக்கு* இறுதி எச்சரிக்கை அளித்திருப்பதாகக் கடைசியாக வந்த செய்திகள் கூறின.

''கிரெம்ளின் மீது குண்டுவீச்சா?'' என்று வியந்து கூவினார் சாதாரண நகரவாசி. ''துணியமாட்டார்கள்!''

வோலக்தாவிலிருந்து தொலைச் சைபீரியாவில் சித்தா வரையில், பிஸ்கோவிலிருந்து கருங் கடற் பகுதியில் செவஸ்தோபல் வரையில், பெரிய நகரங்களிலும் சிறிய கிராமங்களிலும் உள்நாட்டு யுத்தம் கொழுந்து விட்டு எரிய முற்பட்டது. ஆயிரக் கணக்கான ஆலைகளிலிருந்தும், விவசாயிகளது கம்யூன்களிலிருந்தும், ரெஜிமெண்டுகளிலிருந்தும், சேனைகளிலிருந்தும், விரிகடலில் சென்ற கப்பல்களிலிருந்தும் வாழ்த்

* மாஸ்கோவில் 1917 நவம்பரில் இந்தச் சமுதாயப் பாதுகாப்புக் கமிட்டிதான் எதிர்ப்புரட்சியின் பிரதான மையமாக இருந்தது.—[பதிப்பாசிரியர்.]

துரைகள் பெத்ரொகிராதுக்கு வந்து குவிந்தன—மக்களது அரசாங்கத்துக்கு எல்லாரும் வாழ்த்துரைத்தார்கள்.

நோவொச்செர்க்காஸ்கிலிருந்த கசாக்கு அரசாங்கம் கேரென்ஸ்கியிற்குத் தந்தி அனுப்பிற்று: **''கசாக்குப் படைகளின் அரசாங்கம், இடைக்கால அரசாங்கத்தையும் குடியரசு அவையின் உறுப்பினர்களையும் இது சாத்தியமெனில், நோவொச்செர்க்காஸ்கிற்கு வருமாறு அழைக்கிறது; போல்ஷிவிக்குகளுக்கு எதிரான போராட்டத்தை இங்கே நாம் ஒன்று சேர்ந்து ஒழுங்கமைக்கலாம் என்கிறது.''**

பின்லாந்திலும் அதிர்ச்சி ஏற்பட்டது. ஹெல்சிங்போர்ஸ் சோவியத்தும் **இத்ஸேன்திரபால்ட்டும்** (பால்டிக் கடற்படையின் மத்தியக் கமிட்டி) ஒன்று சேர்ந்து முற்றுகை நிலைமையைப் பிரகடனம் செய்தன; போல்ஷிவிக்குப் படைகளுக்கு எதிராகத் தலையிடுவதற்கான எல்லா முயற்சிகளும், அதன் கட்டளைகளுக்குக் காட்டப்படும் ஆயுதமேந்திய எதிர்ப்பும் கடுமையான முறையில் நசுக்கப்படும் என்று அறிவித்தன. 1917 ஜூனில் கேரென்ஸ்கியால் கலைக்கப்பட்ட சோஷலிஸ்டு தியெத்தால் நிறைவேற்றப்பட்ட சட்டங்கள் செயல்படுத்தப்பட வேண்டுமென்று அதே நேரத்தில் பின்லாந்து ரயில்வேத் தொழிலாளர் சங்கம் நாடு தழுவிய வேலைநிறுத்தத்துக்கு அறைகூவல் விடுத்தது....

அதிகாலையில் நான் ஸ்மோல்னிக்குச் சென்றேன். வெளிவாயிலிருந்து சென்ற மரப் பலகைத் தளமிடப்பட்ட நீளமான நடைபாதையில் நடந்த நான் காற்றசையாத சாம்பல் நிற வானத்திலிருந்து முதலாவது மெல்லிய வெண்பனிச் செதில்கள் தயங்கியவாறு கீழே தணிந்து வரக் கண்டேன். ''வெண்பனி!'' என்று கூவி மகிழ்ச்சியால் முகம் மலர்ந்து, ''உடம்புக்கு நல்லது!'' என்றார் வாயிலில் நின்ற படையாள். உள்ளே நீண்டு சென்ற மங்கலான நடைகள் ஆளரவமற்று வெறிச்சோடிக் கிடந்ததாக நினைத்தேன். அந்தப் பெரிய கட்டடத்தில் ஆள் நடமாட்டமே இல்லாதது போலத் தோன்றியது. ஆழமான கரகரப்பு ஓசை காதில் விழவே சுற்றிலும் திரும்பிப் பார்த்தேன். தரை நெடுக சுவர்களின் ஓரத்தில் ஆட்கள் தூங்கிக் கொண்டிருந்ததை அப்போது

தான் கவனித்தேன். தொழிலாளர்களும் படையாட்களுமான அழுக்கேறிய முரட்டு ஆட்கள், மேலெல்லாம் சேறும் சகதியும் திட்டுத் திட்டாய்த் தெரிய, கண்டபடிக் கைகால்களை நீட்டி விரித்துக் கொண்டு தனித் தனியாகவும் திரள் திரளாகவும் படுத்துக் கிடந்தார்கள். சிலர் இரத்தக் கறை படிந்த அழுக்கேறிய காயக் கட்டுகள் போட்டிருந்தார்கள். துப்பாக்கிகளும் தோட்டா வார்களும் இறைந்து கிடந்தன.... வெற்றி கண்ட பாட்டாளி வர்க்கச் சேனை இது!

மாடியில் சிற்றுண்டிச் சாலையில் யாரும் நடக்க இயலாதபடி இவர்கள் நெரிசலாய்ப் படுத்துக் கிடந்தனர். காற்று கெட்டு போய் வீச்சமடித்தது. ஆவி படிந்து மங்கியிருந்த சன்னல்கள் வழியே மங்கலான வெளிச்சம் உள்ளே வந்தது. நசுங்கிப் போன சமவார் நெருப்பின்றி குளிர்ந்து போன நிலையில் மேசையில் இருந்தது. தேநீர் அடிமண்டியுடன் கூடிய பல கிளாசுகள் அதனருகே இருந்தன. புரட்சி இராணுவக் கமிட்டியின் கடைசிச் செய்தியறிக்கையின் பிரதி இவற்றின் பக்கத்தில் குப்புறப் புரட்டி வைக்கப்பட்டிருந்தது, அதில் மிகவும் சிரமப்பட்டு எழுத்துகள் கிறுக்கப்பட்டிருந்ததைக் கண்டேன். கேரென்ஸ்கிக்கு எதிரான போரில் உயிர் நீத்த தம் தோழர்களின் நினைவில் படையாள் ஒருவர் எழுதியிருந்த எழுத்துகள் அவை. தரையிலே தூங்கி விழுமுன் அவர் எழுதியிருந்தவை, அவர் விட்டுச் சென்ற அதே நிலையில் இருந்தன. எழுத்துகள் கலைந்திருந்தன, கண்ணீர் பட்டிருக்கும் போல் தெரிந்தது....

அலெக்சேய் வினகிராதொவ்
டி. மஸ்க்வீன்
எஸ். ஸ்தோல்பிக்கவ்
எ. வஸ்கிரெசேன்ஸ்கி
டி. லியோன்ஸ்கி
டி. பிரெயபிரழேன்ஸ்கி
வி. லய்தான்ஸ்கி
எம். பேர்ச்சிக்கவ்

1916 நவம்பர் 15ல் இவர்கள் இராணுவ சேவைக்கு அழைக்கப்பட்டுச் சேனையில் சேர்க்கப்பட்டவர்கள். இவர்களில் மூவர்தான் தற்போது உயிரோடு இருந்தார்கள்.

மிகயீல் பேர்ச்சிக்கவ்
அலெக்சேய் வஸ்கிரெசேன்ஸ்கி
திமீத்ரி லியோன்ஸ்கி

* * *

**மீளாத் துயில் கொண்டீர், வீரத் திலகங்காள்!**
**ஆத்ம சாந்தி கண்டு உறங்குவீரே அமைதியாய்!**
**யாவும் பெற எல்லாத் தகுதியும் உண்டு உமக்கு,**
**ஓங்கு புகழும் முதிவிலா அமைதியும் கொள்வீரே!**

புரட்சி இராணுவக் கமிட்டி மட்டும்தான் தூக்கமின்றி தொடர்ந்து செயல்பட்டுக் கொண்டிருந்தது. உள் அறையிலிருந்து ஸ்கிரீப்னிக் வெளியே வந்தார். கோத்ஸ் கைது செய்யப்பட்டு விட்டதாகக் கூறினார் அவர். இரட்சணியக் கமிட்டியின் பிரகடனத்தில் தாம் ஒன்றும் கையெழுத்திட வில்லை என்று அவர் மறுத்தாராம், அதே போல் அவ்க்சேன்தியெவும் மறுத்தாராம். இரட்சணியக் கமிட்டியுங்கூட நகரக் காவல் படைக்குத் தான் விடுத்த வேண்டுகோளை நிராகரித்து வாக்குமூலம் அளித்ததாம். நகரில் சில படைப் பிரிவுகளிடம் நேசப்பாங்கற்ற நிலை இருந்து வந்ததென ஸ்கிரீப்னிக் கூறினார். வொலீன்ஸ்கி ரெஜிமெண்டு கேரென்ஸ்கியை எதிர்த்துப் போராட மறுத்துவிட்டது என்றார்.

''நடுநிலைத்'' துருப்புகளைக் கொண்ட சில படைப் பிரிவுகள் செர்னோவின் தலைமையில் காத்சினாவில் இருந்து கொண்டு, பெத்ரொகிராது மீதான தாக்குதலை நிறுத்தும்படி கேரென்ஸ்கிக்கு உணர்த்த முயன்று வந்தன.

இதைச் சொல்லிவிட்டு ஸ்கிரீப்னிக் சிரித்துக் கொண்டார். ''இப்போது 'நடுநிலையாளர்கள்' யாரும் இருக்க முடியாது. நாங்கள் வெற்றி பெற்றுவிட்டோம்!'' என்றார் அவர். தாடியுடன் கூடிய அவரது கூர்மையான முகம் பக்திப் பரவசமெனச் சொல்லத் தக்கதான களிபேருவகை கொண்டு ஒளிர்ந்தது. ''போர்முனையிலிருந்து அறுபதுக்கும் மேற்பட்ட பிரதிநிதிகள் வந்திருக்கிறார்கள், எல்லாச் சேனைகளிடமிருந்தும் ஆதரவு உறுதிமொழிகள் கொண்டு வந்திருக்கிறார்கள். ருமேனியப் போர்முனையிலிருந்து மட்டும்தான் தகவல் ஒன்றும் கிடைக்கவில்லை. பெத்ரொகிராதைப் பற்றிய செய்தி

களைச் சேனைக் கமிட்டிகள் படையாட்களுக்குத் தெரியாத படி இருட்டடிப்பு செய்துவிட்டன. ஆனால் இப்போது நாம் ஆட்கள் மூலமான முறையான செய்தித் தொடர்புக்கு ஏற்பாடு செய்திருக்கிறோம்....''

கீழே முன் கூடத்தினுள் காமெனெவ் நுழைந்தார். புதிய அரசாங்கம் ஒன்றை அமைப்பதற்கான மாநாடு இரவு முழுதும் கூடி நடத்திய விவாதங்களில் கலந்து கொண்டு அவர் ஓய்ந்து போயிருந்தார், ஆயினும் மகிழ்ச்சி மிக்கவராகத் தோன்றினார். ''புதிய அரசாங்கத்தில் எங்களை ஏற்றுக் கொள்ள சோஷலிஸ்டுப் புரட்சியாளர்கள் உடன்படும் நிலைக்கு வந்துவிட்டார்கள்'' என்று அவர் என்னிடம் சொன்னார். ''புரட்சி நீதிமன்றங்களைக் கண்டு வலதுசாரிக் கோஷ்டிகள் பயந்து நடுங்குகின்றன, மேற்கொண்டு செல்லுமுன் நாங்கள் இந்நீதிமன்றங்களைக் கலைத்துவிட வேண்டுமென்று ஒரு வகை பீதியுடன் இவர்கள் கோருகிறார்கள்.... ஒருபடித்தான சோஷலிஸ்டு அமைச்சரவை நிறுவப்பட வேண்டுமென்ற விக்ஷேல் பிரேரணையை நாங்கள் ஏற்றுக் கொண்டுவிட்டோம், அவர்கள் இப்போது இதற்கான திட்டத்தை வகுத்து வருகிறார்கள். யாவற்றுக்கும் மூல காரணம் எங்களது வெற்றி தான். நாங்கள் கீழ்நிலையில் இருக்கையில் என்னதான் ஆவதாயினும் எங்களை ஏற்றுக் கொள்ள முடியாதென்று கூறி வந்தார்கள். ஆனால் இப்போது எல்லோருமே சோவியத்துகளுடன் ஓரளவுக்கு உடன்பாட்டுக்கு வர வேண்டுமென்பதை ஆதரிக்கிறார்கள்.... எங்களுக்குத் தேவையானது மெய்யாகவே தீர்மானகரமான வெற்றிதான். கேரென்ஸ்கி போர் நிறுத்தும் செய்ய விரும்புகிறார், ஆனால் அவர் சரணடைந்தாக வேண்டும்[2]....''

இவ்வாறே இருந்தது போல்ஷிவிக்குத் தலைவர்களது மனநிலை.* திரோத்ஸ்கியிடம் வெளிநாட்டுப் பத்திரிகையாளர் ஒருவர், உலகுக்கு அவர் அளிக்க விரும்பிய வாக்குமூலம் என்ன என்று கேட்டதற்கு, திரோத்ஸ்கி பதிலளித்தார்:

---

* ரயில்வேத் தொழிலாளர்களது தொழிற் சங்கத்தின் அனைத்துருஷ்ய செயற் கமிட்டியான விக்ஷேல் நவம்பர் புரட்சிக்குப் பிற்பாடு சோவியத்-எதிர்ப்பு நடவடிக்கைகளுக்கான ஒரு பிரதான மையமாக இருந்தது. நவம்பர் 11ல் விக்ஷேல்

''இத்தருணத்தில் சாத்தியமான ஒரே வாக்குமூலம், எங்களது பீரங்கிகளின் வாயிலாய் நாம் அளித்து வருகிறோமே அதுதான்!''

ஆனால் வெற்றியின் மன எழுச்சிக்கிடையில் உள்ளூர மெய்யான மனப் பதைப்பும் இருந்து வந்தது: நிதி நிலைமை பற்றிய மனப் பதைப்பு. புரட்சி இராணுவக் கமிட்டியின் உத்தரவுக்கு ஏற்ப வங்கிகளைத் திறப்பதற்குப் பதிலாக, வங்கி ஊழியர்களின் சங்கம் ஒரு கூட்டம் நடத்தி முறையான வேலைநிறுத்தத்தை அறிவித்தது. அரசு வங்கியிடம் ஸ்மோல்னி சுமார் மூன்றரைக் கோடி ரூபிள் வேண்டுமென்று கோரியது. ஆனால் காஷியர் இடைக்கால அரசாங்கத்தின் பிரதிநிதிகளுக்கு மட்டும் பணத்தைக் கொடுத்துவிட்டுக் காப்பறைகளை

---

''எல்லா சோஷலிஸ்டுக் கட்சிகளையும்'' கொண்ட ஓர் அரசாங்கம் வேண்டுமென்று கோரி தீர்மானம் நிறைவேற்றியது. விக்ழேலுடனை பேச்சுவார்த்தைகள், லெனினும் மத்தியக் கமிட்டியும் அவை குறித்துக் கொண்டிருந்த கருத்தோட்டத்தின்படி, ''யுத்தத்துக்கான அரசு தந்திர மூடுதிரையாகவே'' செயல்பட்டிருக்க வேண்டும். ஆனால் போல்ஷிவிக்குகளின் பிரதிநிதிகளாக இந்தப் பேச்சுவார்த்தைகளில் கலந்து கொண்ட காமெனெவும் சக்கோல்னிக்கவும், லெனினும் மத்தியக் கமிட்டியும் அளித்த தாக்கீதுகளுக்கு விரோதமாகச் சென்று, விக்ழேலின் கோரிக்கைகளுக்கு அடிபணிந்து, எதிர்ப் புரட்சிக் கட்சிகளாகிய மென்ஷிவிக்கு, சோஷலிஸ்டுப் புரட்சியாளர் கட்சிகளது பிரதிநிதிகளை அரசாங்கத்தில் சேர்த்துக் கொள்ள ஒத்துக் கொண்டுவிட்டனர்.

இந்தக் கட்சிகளுடன் உடன்பாட்டுக்கு வருவதை நிராகரித்து மத்தியக் கமிட்டியானது நவம்பர் 15ல், லெனினது முன்மொழிவின் பேரில் தீர்மானம் ஏற்றது. ''சோவியத்து ஆட்சியதிகாரம் என்னும் கோஷத்துக்குத் துரோகமிழைக்காமல் கலப்பற்ற போல்ஷிவிக்கு அரசாங்கத்தைக் கைவிடுவது சாத்தியமன்று'', ஏனெனில் சோவியத்துகளின் அனைத்து ருஷ்யக் காங்கிரஸ் நாட்டின் ஆட்சியதிகாரத்தை இந்த அரசாங்கத்திடமே ஒப்படைத்தது என்று இந்தத் தீர்மானம் வலியுறுத்திற்று. ஆகவே ரீடின் மேற்கோளில், காமெனெவின் சொற்கள் எல்லா போல்ஷிவிக்குகளின் கருத்துகளையும் பிரதிபலிக்கவில்லை, மத்தியக் கமிட்டியிலிருந்த ஒரு சிறிய சந்தர்ப்பவாதக் கோஷ்டியின், ருஷ்யாவில் சோஷலிசப் புரட்சி சாத்தியமல்ல என்று கருதிய இக்கோஷ்டியின் கருத்துகளையே பிரதிபலிக்கின்றன.—[பதிப்பாசிரியர்.]

இழுத்துப் பூட்டிவிட்டார். பிற்போக்குவாதிகள் அரசு வங்கியை அரசியல் ஆயுதமாகப் பயன்படுத்தி வந்தார்கள். எடுத்துக் காட்டாக, விக்ழேல் அரசாங்க ரயில்வேப் பணியாளர்களுக்குச் சம்பளம் தருவதற்காகப் பணம் வேண்டுமென்று கோரிய போது, ஸ்மோல்னியிடம் கேட்கும்படி அரசு வங்கியிலிருந்து அதற்குப் பதில் கிடைத்தது....

நான் புதிய கமிசாரைப் பார்ப்பதற்காக அரசு வங்கிக்குச் சென்றேன். அவர் செம்முடிகள் கொண்ட உக்ரைனியப் போல்ஷிவிக்கு, பெத்ரோவிச் என்று பெயர். வேலைநிறுத்தம் செய்த எழுத்தர்கள் யாவற்றையும் விட்டுச் சென்றிருந்த குழப்படி நிலையிலிருந்து ஒழுங்கை உண்டாக்க முயன்று கொண்டிருந்தார். அந்தப் பெரிய கட்டடத்தில் இருந்த வங்கியின் எல்லா அலுவலகங்களிலும் தொண்டர்களாக வேலை செய்ய முன்வந்த தொழிலாளர்களும் படையாட்களும் மாலுமிகளும் முயற்சியின் கடுமையால் வியர்த்து விறுவிறுத்துப் போய் வாயிலிருந்து நாக்கை வெளியே நீட்டி, திகைப்புற்ற நிலையில் பெரும் பெரும் பேரேட்டுப் புத்தகங்களின் மீது கவிழ்ந்து கொண்டு வேலை செய்தார்கள்....

டூமா கட்டடம் கூட்டமாகவே இருந்தது. புதிய அரசாங்கத்துக்குப் பணிய மறுத்து அடம் பிடித்த தனிப்பட்ட உதாரணங்கள் இன்னமும் இருக்கவே செய்தன, ஆனால் அவை மிகச் சொற்பமாகி வந்தன. சோவியத்துகளின் காங்கிரசால் நிறைவேற்றப்பட்ட நில அரசாணையை அங்கீகரிக்கக் கூடாதென்று மத்திய நிலக் கமிட்டி விவசாயிகளுக்கு உத்தரவிட்டு அறிக்கை வெளியிட்டிருந்தது, இந்த நில அரசாணை குழப்பத்தையும் உள்நாட்டு யுத்தத்தையும் உண்டாக்கும் என்று அது தனது இந்த உத்தரவுக்குக் காரணம் கூறியிருந்தது. மேயர் ஷ்ரேய்தர் போல்ஷிவிக்குகளுடைய எழுச்சியின் காரணமாய் அரசியல் நிர்ணயச் சபைத் தேர்தல்களைக் கால வரையறையின்றி ஒத்திப் போட வேண்டியிருப்பதாக அறிவித்தார். உள்நாட்டு யுத்தத்தின் உக்கிரத்தைக் கண்டு அதிர்ச்சியுற்றுவிட்ட எல்லோரது மனத்திலும் இரு பிரச்சினைகள் முன்னிலையில் இருந்தன: முதலாவது, இரத்தக் களரிக்கு முடிவு கட்டும் போர்நிறுத்தம்[3]; இரண்டாவது, புதிய அரசாங்கத்தை அமைத்திடுவது. ''போல்ஷிவிக்குகளை ஒழித்துக் கட்ட

வேண்டும்'' என்பதாக இப்போது யாரும் பேசவில்லை—நரோத்னிய சோஷலிஸ்டுகளையும் விவசாயிகளது சோவியத்துகளின் செயற் கமிட்டியினரையும் தவிர்த்து வேறு யாரும் போல்ஷிவிக்குகளுக்கு அரசாங்கத்தில் இடம் தரலாகாது என்பதாக இப்போது அதிகமாகப் பேசவில்லை. ஸ்மோல்னியின் மிகவும் வைராக்கியமான பகையாக, இராணுவத் தலைமை அலுவலகத்தில் இருந்த மத்திய சேனைக் கமிட்டியுங் கூட மொகிலோவிலிருந்து தொலைபேசி மூலம் தெரிவித்தது: ''புதிய அமைச்சரவையை நிறுவ போல்ஷிவிக்குகளுடன் உடன்பாட்டுக்கு வருவது அவசியமாக இருக்குமாயின், அவர்களைச் சிறுபான்மை அளவில் அமைச்சரவையில் சேர்த்துக் கொள்ள நாங்கள் ஒத்துக் கொள்கிறோம்.''

பிராவ்தா கேலி புரியும் முறையில் கேரென்ஸ்கியின் ''மனிதாபிமான உணர்ச்சிகளைக்'' குறிப்பிட்டுக் காட்டி, இரட்சணியக் கமிட்டிக்கு அவர் அனுப்பிய செய்தியுரையை வெளியிட்டது:

*இரட்சணியக் கமிட்டியும் அதை மையமாகக் கொண்டு ஒன்றுபட்டிருக்கும் எல்லா ஜனநாயக நிறுவனங்களும் தெரிவித்த முன்மொழிவுகளுக்கு இணங்க, நான் கலகக்காரர்களுக்கு எதிரான எல்லா இராணுவ நடவடிக்கைகளையும் நிறுத்தியிருக்கிறேன். கமிட்டியின் பிரதிநிதி ஒருவர் பேச்சுவார்த்தைகள் நடத்துவதற்காக அனுப்பப்பட்டிருக்கிறார். வீணில் இரத்தம் சிந்தப்படுவதை நிறுத்த எல்லா நடவடிக்கைகளையும் எடுத்துக் கொள்ளுங்கள்.*

விக்ஜேல் பின்வரும் தந்தியை அனைத்து ருஷ்யாவுக்கும் அனுப்பிற்று:

*ரயில்வேத் தொழிலாளர் சங்கம் போரிடும் இரு தரப்புகளின், ஓர் உடன்பாடு அவசியமென்று ஒத்துக் கொள்ளும் இவ்விரு தரப்புகளின் பிரதிநிதிகளோடு நடத்திய மாநாடு, உள்நாட்டு யுத்தத்தில், முக்கியமாக புரட்சிகர ஜனநாயகத்தின் வெவ்வேறு கட்சிப் பிரிவுகளிடையில் நடத்தப்படும் படியான உள்நாட்டு யுத்தத்தில், அரசியல் பயங்கரவாதம் உபயோகிக்கப்படுவதை எதிர்த்து வன்மையாகக் கண்டனம்*

*செய்கிறது. அரசியல் பயங்கரவாதம், அது எந்த வடிவத்தில் இருப்பதாயினும், ஒரு புதிய அரசாங்கத்துக்காகப் பேச்சு வார்த்தைகள் நடத்தும் கருத்துக்கே முரண்பட்டதாகும் என்று இந்த மாநாடு பறைசாற்றுகிறது....*

*மாநாட்டிலிருந்து* பிரதிநிதிக் குழுக்கள் போர்முனைக்கு, காத்சினுவுக்கு அனுப்பப்பட்டன. இந்த மாநாட்டில் யாவும் இறுதித் தீர்வு ஏற்படும்படியான ஒரு நிலைக்கு வந்துவிட்டாற் போலவே தோன்றின. இடைக்கால மக்கள் அவை ஒன்றைத் தேர்ந்தெடுப்பதென்றுகூட தீர்மானிக்கப்பட்டு விட்டது. இந்த அவை சுமார் நானூறு உறுப்பினர்களைக் கொண்டதாய் இருக்கும்—ஸ்மோல்னியின் பிரதிநிதிகள் எழுபத்தைந்து பேரும், பழைய இத்ஸே-யி-கவின் பிரதிநிதிகள் எழுபத்தைந்து பேரும் இருப்பார்கள், ஏனைய உறுப்பினர்கள் நகர டூமாக்கள், தொழிற் சங்கங்கள், நிலக் கமிட்டிகள், அரசியல் கட்சிகள் ஆகியவற்றுக்குப் பகிர்ந்தளிக்கப் படுவார்கள். செர்னேவ் புதிய பிரதமராகலாம் என்று கூறப் பட்டது. லெனினும் திரோத்ஸ்கியும் விலக்கப்படுவார்கள் என்பதாய் வதந்தி உலாவிற்று....*

*பகல் சுமார் பன்னிரண்டு மணிக்கு நான் திரும்பவும் ஸ்மோல்னியின் முன்னால் இருந்தேன், புரட்சிப் போர்முனைக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்த மருத்துவப் பணி வண்டியின் டிரைவருடன் பேசிக் கொண்டிருந்தேன். அவருடன் நானும் வரலாமா? நன்றாய் வரலாமே! தொண்டராகப் பணி புரிய முன்வந்த பல்கலைக்கழக மாணவர் அவர். தெருவிலே கோட்டார் வண்டியை ஓட்டிச் செல்கையில் அவர் தோள் பக்கம் திரும்பி பின்புறத்தில் இருந்த என்னிடம் ஜெர்மன் மொழியைக் கொலை புரியும் விதத்தில் அம்மொழியில் பலக்கக் கூவினார்:* "Also, gut! Wir nach die Kasernen zu essen gehen!"**

---

* *இங்கு குறிக்கப்படுவது ''இணக்கம் காண்பதற்கான மாநாடு'', ஒரு புதிய அரசாங்கத்தை அமைத்திடுவதற்கான மாநாடு.—[பதிப்பாசிரியர்.]*

** *ஏறத்தாழ பின்வருமாறு இதைப் பொருள் படுத்தலாம்: ''நல்லது, நாம் போய்க் கொட்டடியில் உணவு அருந்தலாம்.''—[பதிப்பாசிரியர்.]*

எங்கோ ஒரு படைக் கொட்டடியில் பகல் சாப்பாடு கிடைக்கும் என்பதாகப் புரிந்து கொண்டேன்.

கீரச்னயா சாலேயில் நாங்கள் ஒரு பெரிய முற்றத்தினுள் நுழைந்தோம், அதைச் சுற்றிலும் இராணுவக் கட்டடங்களாக இருந்தன. அங்கே இருண்ட படிக்கட்டு ஒன்றில் ஏறித் தணிவான ஓர் அறையினுள் சென்றோம், ஒரேயொரு சன்னலிலிருந்து வெளிச்சம் பெற்ற அறை அது. நீளமான மேசையைச் சுற்றி சுமார் இருபது படையாட்கள் அமர்ந்து ஒரு பெரிய தகரத்தொட்டியிலிருந்து மரக் கரண்டிகளால் மொண்டு **இஷ்ஷி** (முட்டைக்கோசு சூப்பு) சாப்பிட்டுக் கொண்டும், அதே போது பலக்கப் பேசிச் சிரித்துக் கொண்டும் இருந்தார்கள்.

''ஆறுவது ரிசர்வ் பொறியாளர் பட்டாளத்தின் பட்டாளக் கமிட்டி இது. உங்களுக்கு நல்வரவு கூறுகிறேன்!'' என்றார் என்னே அழைத்துச் சென்றவர். பிறகு அவர் என்னே அமெரிக்க சோஷலிஸ்டு என்று அவர்களுக்கு அறிமுகம் செய்தார். உடனே அவர்கள் ஒவ்வொருவராய் எழுந்து என்னுடன் கை குலுக்கினார்கள். வயது முதிர்ந்த படையாள் ஒருவர் என்னைக் கட்டித் தழுவிக் கொண்டு ஆர்வமிக்க முறையில் முத்தமிட்டார். மரக் கரண்டி ஒன்று கொண்டு வரப்பட்டது, மேசையின் முன்னல் நானும் ஓர் இடத்தில் அமர்ந்து கொண்டேன். இன்னொரு தொட்டி—அதில் **காஷா** (கூழ்) நிறைந்திருந்தது—கொண்டு வரப்பட்டது, அதோடு ஒரு பெரிய கறுப்பு ரொட்டிப் பாளமும் தவிர்க்க முடியாத தேநீர்க் கலன்களும் வந்து சேர்ந்தன. உடனே எல்லாரும் அமெரிக்காவைப் பற்றி என்னிடம் கேள்விகள் கேட்க ஆரம்பித்தார்கள். சுதந்திர நாட்டில் மக்கள் தமது வாக்குகளேப் பணத்துக்கு விற்பது மெய்தானு? அப்படியாஞல் அவர்களால் தாம் விரும்புவதை எப்படிப் பெற முடியும்? ''தம்மனி'' விவகாரத்தைப்* பற்றி என்ன சொல்கிறீர்கள்? சுதந்திர நாட்டில் ஒரு சிறு கோஷ்டியினர் ஒரு நகரம் முழுதையுமே தமது ஆதிக்கத்தில்

---

* தம்மனி மண்டபம், நியூயார்க்கில் அமெரிக்க ஜனநாயகக் கட்சியின் தலைமையகமாகும்; அக்காலத்தில் அம்பலமாக்கப்பட்ட பல ஊழல்களுக்கும் பிற்பாடு இது லஞ்சத்தையும் கொடுங்குற்றத்தையும் குறிக்கும் சிலேடைப் பெயராகியது.—[பதிப்பாசிரியர்,]

கொண்டு, தமது சொந்த நலனுக்காக அதைச் சுரண்டுகிருர் கள் என்பது உண்மைதாஞ? மக்கள் ஏன் இதைப் பொறுத்துக் கொண்டிருக்கிருர்கள்? ஜார் ஆதிக்கம் புரிந்த போதுகூட இம் மாதிரியான காரியங்கள் ருஷ்யாவில் நடைபெறவில்லையே, இங்கே லஞ்சம் எப்போதும் இருந்தது மெய்தான் என்ரு லும், மக்கள் நிறைய வாழும் ஒரு முழு நகரத்தையே வாங்கு வதும் விற்பதும் கேட்டறியாதனவாயிற்றே! அதுவும் சுதந் திர நாட்டில் இப்படி நடைபெறுவதா? மக்களிடம் புரட்சி உணர்வு இல்லவே இல்லாமலா போய்விட்டது? எனது நாட் டில் மக்கள் சட்ட வழியில் நிலைமைகளை மாற்ற முயன்ருர்கள் என்று விளக்கிச் சொல்ல முயன்றேன் நான்.

''அது சரிதான்'' என்று தலையை ஆட்டிக் கொண்டார், பிரெஞ்சு மொழி பேசிய பக்லானவ் என்ற இளம் சார்ஜண்டு. ''ஆனால் வெகுவாய் வளர்ச்சி பெற்ற முதலாளித்துவ வர்க் கம் உங்கள் நாட்டில் இருக்கிறது அல்லவா? அந்த முதலாளித் துவ வர்க்கம் சட்ட மன்றங்களையும் நீதி மன்றங்களையும் தனது ஆதிக்கத்திற்கு உட்படச் செய்து கொண்டுவிடும் அல் லவா? இந்த நிலைமையில் மக்களால் நிலைமைகள் எப்படி மாற்ற முடியும்? திட முடிவுக்கு வந்துவிடாமல் திறந்த மனத்தோடு தான் இருக்கிறேன், ஏனென்ருல் உங்கள் நாட்டை அறியாத வன் நான். ஆயினும் எனக்கு இது நம்ப முடியாததாக அல்லவா இருக்கிறது....''

நான் ஜார்ஸ்கயெ செலோவுக்குப் போவதாய் அவர்களி டம் சொன்னேன். ''நானும்தான்'' என்ருர் பக்லானவ் திடு மென. ''நானும்தான்—நானும்தான்''—அந்த அறையில் இருந்த எல்லோருமே ஜார்ஸ்கயெ செலோவுக்குப் புறப் படுவதென்று உடனே தீர்மானித்தார்கள்.

அதே கணத்தில் அறைக் கதவு தட்டப்பட்டது. கத வைத் திறந்து கொண்டு கர்னல் ஒருவரின் உருவம் எங்கள் முன்னுல் வந்து நின்றது. யாரும் எழுந்துநிற்கவில்லை, ஆனுல் எல்லோருமாகச் சேர்ந்து அவருக்கு வந்தனம் கூறினர். ''நான் உள்ளே வரலாமா?'' என்று கேட்டார் கர்னல். ''புரோசிம்! புரோசிம்!'' என்று அவர்கள் ஆர்வமோடு பதிலளித்தார்கள். அவர் உள்ளே வந்தார்—சிரித்த முகமும், சரிகைப் பூப்பின்னல்களைக் கொண்ட ஆட்டுத் தோல் மேலங்கி

அணிந்த உயரமான, சிறப்புக்குரிய உருவமும் கொண்டவர். ''தோழர்களே, நீங்கள் ஜார்ஸ்கயெ செலோவுக்குப் போவதாகக் கூறியது போல் என் காதில் விழுந்தது'' என்றார் அவர். ''நானும் உங்களுடன் வரலாமா?''

பக்லானவ் சற்றே ஆலோசித்துவிட்டு ''இன்று இங்கே செய்ய வேண்டியது எதுவும் இருப்பதாக நான் நினைக்கவில்லை'' என்று பதிலளித்தார். ''தோழரே, நீங்களும் வாருங்கள், நாங்கள் மகிழ்ச்சியுடன் வரவேற்கிறோம்'' என்றார். கர்னல் அவருக்கு நன்றி தெரிவித்துவிட்டு ஒரு கிளாசில் தேநீரை நிரப்பிக் கொண்டு உட்கார்ந்தார்.

கவுரவக் குறைவு ஏற்பட்டுவிட்டதாக நினைத்துக் கர்னல் மனம் வருந்துவாரோ என்று அஞ்சி பக்லானவ் மெல்ல என் காதுக்குள் கூறினார்: ''நான்தான் கமிட்டியின் தலைவன். பட்டாளம் முழுக்க முழுக்க எங்களுடைய கண்காணிப்பின் கீழ் தான் இருக்கிறது, போர்ச் செயற்பாட்டின் போது மட்டும் தான் நாங்கள் தலைமையை அவரிடம் ஒப்படைக்கிறோம். போரின் போது அவருடைய கட்டளைகளுக்குக் கீழ்ப்படிந்தாக வேண்டும், ஆனால் அவர் எங்களுக்குப் பொறுப்பு கூறியாக வேண்டும். கொட்டடிகளில் எச்செயலையும் மேற்கொள்ளுமுன் அவர் எங்களிடம் அனுமதி பெற்றாக வேண்டும்.... நீங்கள் அவரை எங்களது நிர்வாக அதிகாரி என்று அழைக்கலாம்....''

ரிவால்வர்களும் துப்பாக்கிகளுமான ஆயுதங்கள் எங்களுக்கு வினியோகிக்கப்பட்டன—''நாம் கசாக்குகளை எதிர்பட நேர்ந்தாலும் நேரலாம்.'' நாங்கள் எல்லோரும் மருத்துவ வண்டியினுள் ஏறி உட்கார்ந்து கொண்டோம், போர் முனைக்கு வேண்டிய செய்தியேடுகளில் மூன்று பெருங் கட்டுகளை எங்களுடன் எடுத்துக் கொண்டோம். நேரே லித்தேய்னியிலும் பிறகு ஸாகரொத்னி சாலையிலும் எங்கள் மோட்டார் வண்டி தடதடத்துச் சென்றது. எனக்குப் பக்கத்தில் அமர்ந்திருந்தவர் லெப்டினண்டின் தோள் பட்டிகளைக் கொண்ட ஓர் இளைஞர். எல்லா ஐரோப்பிய மொழிகளிலும் அவர் சரளமாகப் பேசக் கூடியவராகத் தோன்றினார். பட்டாளக் கமிட்டியில் அவர் உறுப்பினராக இருந்தவர்.

''நான் ஒன்றும் போல்ஷிவிக்கு அல்ல'' என்று அழுத்தம் திருத்தமாய் என்னிடம் சொன்னார். ''எனது குடும்பம்

தொன்மையானது, உயர் குலத்தைச் சேர்ந்தது. என்னையுங் கூட ஒரு காடேட்டு என்றே சொல்ல வேண்டும் நீங்கள்....''

''அது எப்படி, நீங்கள்—?'' என்று திகைப்புடன் நான் கேட்க ஆரம்பித்தேன்.

''ஆம், நான் கமிட்டியில் உறுப்பினனுக இருப்பவன்தான். எனது அரசியல் கருத்துகளை வெளியே தெரியாமல் இரகசிய மாக வைத்துக் கொள்ளவில்லை. ஆனால் ஏனையோர் இதைப் பொருட்படுத்தவில்லை. ஏனெனில் பெரும்பான்மையோரது விருப்பத்தை நான் எதிர்த்து நிற்பவனல்ல என்பது அவர் களுக்குத் தெரியும்.... இந்த உள்நாட்டு யுத்தத்தில் செயல் பட மறுக்கிறவன் நான், எனது ருஷ்யச் சோதரர்களை எதிர்த்து ஆயுதமேந்திப் போர் புரிவதில் எனக்கு நம்பிக்கை இல்லை....''

''சதிவேலை புரியும் பகையாள்! கர்னீலவியர்!'' என்று, என்னை அழைத்துச் சென்றவர் அவரைப் பார்த்து வேடிக்கை யாகக் கூறி அவர் தோளில் தட்டினுர்.

பொன்னிறச் சித்திர எழுத்துகளும் மாட்சிமை மிக்க கழுகுச் சின்னங்களும் ஜார்களின் பெயர்களும் பதிக்கப்பட்ட பிரம்மாண்டமான சாம்பல் நிற கல் வளைவாகிய மாஸ் கோவ்ஸ்கி வளைவினுள் சென்று, ஆரம்ப வெண்பனி மங் கலாய் மூடிய அகலமான நெடுஞ் சாலையில் எங்கள் கார் ஓடிற்று. செங்காவலர்கள் திரள் திரளாய்க் கூச்சலிட்டுக் கொண்டும் பாடிக் கொண்டும் புரட்சிப் போர்முனையை நோக்கி ஆடி நடந்தனர்; ஏனையோர் முகம் கன்னிப் போய், சேறு படிந்த நிலையில் திரும்பி வந்து கொண்டிருந்தனர். பெரும் பகுதியோர் பார்ப்பதற்குச் சிறு பையன்களைப் போல் இருந்தவர்கள். பெண்களில் பலர் மண்வெட்டியோ டும், சிலர் துப்பாக்கியோடும் தோட்டாவாரோடும் காணப் பட்டனர்; வேறு சிலர் கையில் செஞ்சிலுவைப் பட்டை கட்டி யிருந்தனர்—குடிசைகளைச் சேர்ந்த, உடலம் தேய்ந்து கூனல் விழுந்த பெண்கள் இவர்கள். தொகுதி தொகுதியான படை யாட்கள் சந்தம் தவறிப் போய் நடை போட்டனர், செங் காவலர்களைப் பார்த்து நேசம் வாய்ந்த முறையில் ஏளனம் புரிந்தனர். கடுப்பான தோற்றம் கொண்ட மாலுமிகளையும், தம் தாய் தந்தையருக்குச் சாப்பாடு எடுத்துச் சென்ற குழந் தைகளையும் கண்டோம். நெடுங் சாலையின் சரளைக் கற்கள்

மீது மூடியிருந்த வெள்ளை பூத்த மண்ணில் இவர்கள் எல்லோரும் நடந்து போய்க் கொண்டும் வந்து கொண்டும் இருந்தார்கள். சக்கரப் பீடங்களில் கணகணத்து ஒலித்துத் தெற்கு நோக்கிச் சென்ற பீரங்கிகளைக் கடந்து சென்றோம். ஆயுதம் தரித்த ஆட்கள் கும்பலாயிருந்த லாரிகள் இரு திசைகளிலும் உருண்டோடின. காயமுற்றோரை ஏற்றிக் கொண்டு மருத்துவ மோட்டார் வண்டிகள் போர்முனையிலிருந்து வந்தன. விவசாயிப் பாரவண்டி ஒன்று கிரீச்சிட்டு ஊர்ந்து வந்தது, வயிற்றில் காயம் பட்ட பையன் முகம் வெள்ளையாய் வெளுத்துப் போய் வயிற்றைப் பிடித்துக் குனிந்து கொண்டு அலறியவாறு அதனுள் அமர்ந்திருந்தான். சாலையின் இரு புறங்களிலும் வெளிகளில் பெண்களும் கிழவர்களும் அகழ்வரிகள் தோண்டிக் கொண்டும், முட்கம்பித் தடுப்புகள் அமைத்துக் கொண்டும் இருந்தார்கள்.

மேகங்கள் வடக்கு நோக்கித் திடுமெனப் பெயர்ந்தோடவே, மங்கலான சூரியன் வானத்திலே வெளிப்பட்டான். தட்டையான சதுப்பு வெளிக்கு அப்பால் பெத்ரொகிராது பளிச்சிட்டது. வலப் புறத்தில் வெள்ளையிலும் பொன்னிறத்திலும் மற்றும் பல வண்ணங்களிலுமான வில்மாடங்களும் கோபுரக் கூம்புகளும் தெரிந்தன. இடப்புறத்தில் இருந்த நெடிதுயர்ந்த புகைபோக்கிகளில் சிற்சிலவற்றிலிருந்து கரும் புகை மூண்டெழுந்தது. இவற்றுக்கு எல்லாம் அப்பால் வானம் பின்லாந்தின் மீது தணிந்து கவிழ்ந்து சென்றது. எங்களுக்கு இரு பக்கங்களிலும் கோயில்களும் மடாலயங்களுமாய் இருந்தன.... எப்போதாவது இடையில் பாதிரியார் தென்பட்டார், சாலையிலே அலைமோதிச் சென்ற பாட்டாளி வர்க்கச் சேனையின் நாடித் துடிப்பை வாய் பேசாமல் பார்த்துவிட்டு விரைந்து நடந்தார்.

பூல்க்கொவொவில் சாலை மூன்று கிளைகளாகப் பிரிந்தது. அங்கே பெரும் கூட்டத்தினிடையே எங்கள் வண்டி நின்றது. மூன்று திசைகளிலிருந்து வந்த மனித வெள்ளம் அவ்விடத்தில் சங்கமித்தது; நண்பர்கள் சந்தித்து உணர்ச்சிப் பரவசமுற்று வாழ்த்து கூறிக் கொண்டார்கள்; நடைபெற்ற போரினை ஒருவருக்கொருவர் விவரித்துக் கூறிக் கொண்டார்கள். சாலைச் சந்திப்புக்கு எதிரே வரிசையாக இருந்த வீடுகளில்

குண்டுகள் தடம் பதித்திருந்தன, சுற்றிலும் அரை மைல் தொலைவுக்குத் தரை மிதித்துத் துவம்சம் செய்யப்பட்டிருந்தது. இவ்விடத்தில் கடும் போர் நடைபெற்றிருக்க வேண்டுமென்பது தெரிந்தது.... சற்றே தொலைவில் ஆட்களில்லாத கசாக்குக் குதிரைகள் பசியால் வாடிய நிலையில் திரிந்து கொண்டிருந்தன, அந்தப் புல்வெளி நெடு நாட்களுக்கு முன்பே புல்லற்றதாகிவிட்டது. குதிரை ஏறிப் பழக்கமில்லாத செங்காவலர் ஒருவர் எங்களுக்கு எதிரே அந்தக் குதிரைகளில் ஒன்றின் மீது ஏறி அமர முயன்று திரும்பத் திரும்பக் கீழே விழுந்து கொண்டிருந்தார், முரட்டுப் பாங்கினரான ஓராயிரம் ஆட்கள் இதைப் பார்த்துச் சிறு பிள்ளைகளைப் போல் ஆனந்தமாய்ச் சிரித்தார்கள்.

கசாக்குப் படைகளில் எஞ்சியவை பின்வாங்கி ஓடிய இடப்புறத்துச் சாலையானது, ஒரு சிறு குன்றின் மீது ஏறி ஒரு குக்கிராமத்துக்குச் சென்றது. அங்கிருந்து தெரிந்த காட்சி, கண் கொள்ளாக் காட்சியாக இருந்தது. பிரம்மாண்டமான சமவெளி காற்றில்லாக் கடல் போல் மங்கலாய் விரிந்து பரந்திருக்க கொந்தளிப்புற்ற மேகங்கள் உயரத்தில் உருண்டோடின, தலைநகரிலிருந்து மக்கள் திரளினர் ஆயிரமாயிரமாய் எல்லாச் சாலைகளிலும் பெருக்கெடுத்துச் சென்றார்கள். இடது பக்கத்தில் தொலைவிலே தெரிந்தன, சிறு குன்றான கிராஸ்னயெ செலோவும், மன்னரது காவற் படைமுகாமின் ஒத்திகை மைதானமும் மன்னரது பாற் பண்ணையும். இவற்றுக்கு இடைப்பட்ட தொலைவு சலிப்பு தட்டும்படி தட்டையாய் விரிந்து கிடந்தது; சுற்றுச் சுவரைக் கொண்ட ஒரு சில மடாலயங்களையும், கன்னி மடங்களையும், இங்கும் அங்குமாய்ச் சில ஆலைகளையும், கவனிப்பின்றி விடப்பட்ட சுற்றுவெளிகளைக் கொண்ட உளநோயாளிக் காப்பிடங்களையும், அனாதைக் குழந்தை அகங்களையும் தவிர வேறு எதுவுமின்றி பொட்டலாய் இருந்தது.

வெற்றுக் குன்றின் மீது நாங்கள் சென்று கொண்டிருந்த போது ''வேரா ஸ்லூத்ஸ்கயா இங்குதான் உயிரிழந்தார்'' என்று எங்கள் டிரைவர் கூறினார். ''ஆம், டூமாவின் போல்ஷிவிக்கு உறுப்பினர் அந்த அன்னை. இன்று அதிகாலையில் இது நடைபெற்றது. ஸால்கிந்தும் இன்னொருவரும் உடன் வர

அவர் ஒரு காரில் போய்க் கொண்டிருந்தார். போர்நிறுத்த நேரம் அது. போர்முனை அகழ்வரிகளுக்குச் சென்ற அவர்கள் சிரித்துக் கொண்டும் பேசிக் கொண்டும் இருந்தார்கள். கவச ரயில் வண்டியில் இருந்தவர்கள்—கேரென்ஸ்கியும் அதில்தான் சென்று கொண்டிருந்தார்—அந்தக் காரைப் பார்த்து திடீரென பீரங்கியால் சுட்டார்கள். வெடிகுண்டு நேரே வேரா ஸ்லூத்ஸ்கயாவின் மீது வெடித்து அவரைக் கொன்றது...''

இவ்விதம் நாங்கள் ஜார்ஸ்கயெ வந்து சேர்ந்தோம். பாட்டாளி வர்க்கச் சேனையின் வெற்றி வீரர்களது அமளி எங்கும் நிறைந்திருந்தது. சோவியத்துத் தலைமையகமாக இருந்த அரண்மனையில் வேலைகள் மிக மும்முரமாக நடைபெற்றன. செங்காவலர்களும் மாலுமிகளும் வெளிமுற்றத்தில் குழுமியிருந்தார்கள். வாயில்களில் காவலாட்கள் காவல் புரிந்து நின்றார்கள், தகவல் பணியாளர்களும் கமிசார்களும் ஓயாமல் உள்ளே போவதும் வெளியே வருவதுமாய் இருந்தார்கள். சோவியத்து அறையினுள் சமவார் ஒன்று கொதித்துக் கொண்டிருந்தது. ஐம்பதுக்கு மேற்பட்ட தொழிலாளர்களும் படையாட்களும் மாலுமிகளும் படையதிகாரிகளும் அதைச் சுற்றிலும் நின்று தேநீர் அருந்திக் கொண்டும் உச்சக்குரலில் பேசிக் கொண்டும் இருந்தார்கள். ஒரு மூலையில் தந்தித் தட்டெழுத்துப் பொறியை இயங்க வைப்பதற்காக இவ்வேலையில் பழக்கமில்லாத இரு தொழிலாளர்கள் முயன்று கொண்டிருந்தார்கள். அசானுபாகுவான திபேன்கோ அறையின் நடுவில் ஒரு மேசை மீது விரிக்கப்பட்டிருந்த நிலப் படத்தில் படைகளுக்கான நிலைகளைச் சிவப்பு, நீலப் பென்சில்களால் குறித்துக் கொண்டு நின்றார். இன்னொரு கையில் எப்போதும் போல் அவர் தமது பெரிய நீல உருக்கு ரிவால்வரை வைத்திருந்தார். அவ்வப்போது அவர் தட்டெழுத்துப் பொறியின் முன்னால் உட்கார்ந்து ஒற்றை விரலால் எழுத்துகளைத் தட்ட முற்பட்டார். இடையில் சற்று நேரம் தட்டுவதை நிறுத்திவிட்டுத் தமது ரிவால்வரைக் கையில் எடுத்து அருமையாய் அதன் தோட்டாப் புழையைச் சுழற்றிப் பார்த்துக் கொண்டார்.

சுவர் ஓரத்தில் ஒரு சோபா இருந்தது, அதில் இளம் தொழிலாளி ஒருவர் படுத்திருந்தார். இரு செங்காவலர்கள் அவர் மீது கவிழ்ந்து கொண்டு நின்றூர்கள், ஆனால் அறையில் இருந்த ஏனையோர் கவலைப்பட்டதாகக் காட்டிக் கொள்ள வில்லை. படுத்திருந்தவரின் நெஞ்சில் காயம் பட்டிருந்தது, நாடித் துடிப்பு ஒவ்வொன்றுடனும் இணைந்து இரத்தம் பீறிட்டு அவருடைய உடுப்புகளில் கசிந்தது. அவர் கண்கள் மூடியிருந்தன, தாடியுடன் கூடிய அவரது இளம் முகத்தில் பசுமை கலந்த வெள்ளைச் சாயல் படிந்திருந்தது. சன்னமாக வும் மெல்லவும் இன்னும் அவர் மூச்சு விட்டுக் கொண்டுதான் இருந்தார், ஒவ்வொரு மூச்சோடும் வாய்க்குள் முனகிக் கொண்டார்: ''மீர் பூதித்! மீர் பூதித்! (சமாதானம் வரு கிறது! சமாதானம் வருகிறது!)''

நாங்கள் அறைக்குள் சென்றதும் திபேன்கோ தலையை உயர்த்திப் பார்த்து விட்டு, ''தோழரே வாருங்கள்!'' என்று பக்லானவை அழைத்தார். ''நீங்கள் தளபதியின் தலைமை யகத்துக்குச் சென்று பொறுப்பேற்றுக் கொள்ள வேண்டும், சரிதானா?... இருங்கள், இதோ உத்தரவு கையெழுத்திட்டுத் தருகிறேன்'' என்றார். உடனே அவர் தட்டெழுத்துப் பொறி யிடம் சென்று ஒவ்வோர் எழுத்தாகத் தேடிப் பிடித்துத் தட்டினார்.

ஜார்ஸ்கயெ செலோவின் புதிய தளபதியும் நானும் சேர்ந்து எக்கத்தரீனா அரண்மனைக்குச் சென்றோம். பக்லானவ் பரபரப்புற்று, முக்கியமான தமது புதிய பொறுப்பில் முழுக் கவனம் செலுத்தலானார். முன்பு நான் சென்றிருந்த அலங் கார வேலைப்பாடுகளோடு கூடிய அதே வெண்ணிற அறைக் குள் நுழைந்தோம். அங்கே இருந்தவற்றை இரு செங்காவ லர்கள் ஆவலுடன் பரிசீலனை செய்து கொண்டிருந்தார்கள், எனது பழைய நண்பரான கர்னல் மீசை நுனியைக் கடித்துக் கொண்டு சன்னலருகே நின்றிருந்தார். காணமற் போய் நெடு நாட்களுக்குப் பிற்பாடு திரும்பி வந்து சேர்ந்த சகோதரனை வரவேற்பது போல என்னை அவர் உற்சாகமாக வரவேற்றார். கதவுக்கு அருகே ஒரு மேசைக்குப் பக்கத்தில் உட்கார்ந்திருந் தார், அந்த பிரெஞ்சு பெஸ்ஸராபியர். போல்ஷிவிக்குகள் அவரை இங்கேயே இருந்து தொடர்ந்து வேலை செய்யும்படி உத்தரவிட்டிருந்தார்கள்.

''நான் என்ன செய்ய முடியும்?'' என்று அவர் முணு முணுத்துக் கொண்டார். ''என் போன்றோருக்குக் கும்பலின் சர்வாதிகாரம் மனதுக்குப் பிடிக்காத ஒன்றுதான் என்றாலும், இம்மாதிரியான ஒரு யுத்தத்தில் நாங்கள் எத்தரப்பிலும் சேர்ந்து போர் புரிவதற்கில்லை.... நான் வருந்துவது எல்லாம் பெஸ்ஸராபியாவில் இருக்கும் என் அம்மாவிடம் போக முடியாமல் இவ்வளவு தொலைவில் இருக்க வேண்டியுள்ளதே என்பதுதான்!''

பழைய தளபதியிடமிருந்து பக்லானவ் இந்தத் தலைமை யகத்துக்குப் பொறுப்பேற்றுக் கொண்டார். ''மேசை சாவிகள் இதோ இருக்கின்றன'' என்று பதற்றத்துடன் கூறினார், கர்னல்.

செங்காவலர் ஒருவர் இடைமறித்தார். ''பணம் எங்கே இருக்கிறது?'' என்று கடுமையான குரலில் கேட்டார் அவர். கர்னல் வியப்புற்றுவராகத் தோன்றினார். ''பணமா? என்ன பணம்? ஓ, பொக்கிஷப் பெட்டியா? அதோ இருக்கிறது'' என்றார் கர்னல். ''மூன்று நாட்களுக்கு முன்பு நான் பொறுப் பேற்றுக் கொண்டபோது இருந்த அதே நிலையில் இருக்கிறது அது.... சாவிகளா?'' கர்னல் தோளை உலுக்கிக் கொண்டார். ''எனக்குத் தெரியாது, என்னிடம் இல்லை.''

செங்காவலர் இந்தச் சூது தமக்குத் தெரியாததல்ல என்ற பாவனையோடு கேலிச் சிரிப்பு சிரித்துக் கொண்டார். ''சாமர்த்தியமான வேலைதான்!'' என்றார் அவர்.

''பெட்டியைத் திறந்து பார்ப்போம்'' என்று பக்லானவ் கூறினார். ''கோடரியை எடுத்து வாருங்கள். இதோ அமெரிக்கத் தோழர் ஒருவர் இருக்கிறார். அவர் இந்தப் பெட்டியை உடைத்து அதனுள் இருப்பவற்றை நமக்குக் குறிப்பெழுதித் தருவார்.''

கோடரியால் நான் ஓங்கி அடித்தேன். அந்த மரப் பெட்டி காலியாக இருந்தது.

''இவரைக் கைது செய்ய வேண்டும்'' என்று ஆத்திரமாகச் சொன்னார் செங்காவலர். ''கேரென்ஸ்கி ஆள் இவர். பணத்தைக் களவாடி கேரென்ஸ்கியிடம் கொடுத்திருக்கிறார்.''

ஆனால் பக்லானவ் அவரைக் கைது செய்ய விரும்பவில்லை. ''இல்லை, இல்லை'' என்றார் அவர். ''இவருக்கு முன்பிருந்த

கர்னீலவியர் செய்த வேலே இது. குற்றம் இவருடையது அல்ல.''

''நாசமாய்ப் போக!'' என்று கத்திஞர் செங்காவலர். ''இவர் கேரென்ஸ்கி ஆள் என்கிறேன். இவரை **நீங்கள்** கைது செய்யவில்லேயாளுல், **நாங்கள்** கைது செய்கிருேம். கைது செய்து பெத்ரொகிராதுக்குக் கொண்டு போய், அங்கே பெத்ரொபாவ்லொவ்ஸ்கயா கோட்டையில் அடைக் கிருேம், இவருக்கு உரிய இடம் அதுதான்!'' உடனே அது தான் சரி என்று ஏனைய செங்காவலர்கள் சம்மதம் தெரிவித் தார்கள். கர்னலே அவர்கள் வெளியே அழைத்துச் சென்ற போது அவர் எங்களேப் பார்த்த பார்வை பரிதாபமாக இருந்தது....

சோவியத்து அரண்மனேக்கு முன்ஞல் மோட்டார் லாரி ஒன்று போர்முனேக்குப் புறப்பட தயாராய் நின்றிருந்தது. ஆறு செங்காவலர்களும் சில மாலுமிகளும் இரண்டொரு படையாட்களும் வாட்டசாட்டமான ஒரு தொழிலாளியின் தலேமையில் அடித்து மோதிக் கொண்டு அதனுள் ஏறிஞர் கள். பிறகு என்னேயும் ஏறிக் கொள்ளும்படிக் கூச்சலிட்டு அழைத்தார்கள். சிறிய அலேவரி இரும்புக் குண்டுகளேக் கை நிறைய அள்ளிச் சுமந்து கொண்டு செங்காவலர்கள் தள்ளா டியவாறு சோவியத்துத் தலேமையகத்திலிருந்து வரிசையாக வந்தார்கள். இந்தக் குண்டுகளில் நிரப்பப்பட்டிருந்த குருபித் சாதாரண வெடிமருந்தைக் காட்டிலும் பத்து மடங்கு அதிக வலிமையும் ஐந்து மடங்கு அதிக நுண்ணுணர்வும் வாய்ந்ததென்று கூறப்பட்டது. இந்தக் குண்டுகளே அவர்கள் லாரியினுள் எறிந்தார்கள். மூன்று அங்குல பீரங்கி ஒன்றில் வெடிகுண்டு வைத்தடைத்து அதன் சக்கர பீடத்தைக் கயிறும் கம்பியும் கொண்டு லாரியின் பின்முனேயுடன் இணேத்துக் கட்டிஞர்கள்.

பலத்த கூச்சல் எழுப்பி நாங்கள் புறப்பட்டோம். உச்ச வேகத்தில் சென்றோம் என்பதைக் கூறத் தேவையில்லே. அந்தக் கனத்த லாரி மாறிமாறி இரு புறமும் சாய்ந்தாடியா வாறு ஓடிற்று. அதன் பின்ஞல் பீரங்கி ஒரு சக்கரத்திலிருந்து இன்ஞென்றுக்குச் சாய்ந்து தாவி உருண்டோடி வந்தது.

லாரியினுள் எங்கள் பாதங்களின் மீது குருபித் குண்டு கள் அப்படியும் இப்படியுமாய் உருண்டு புரண்டு லாரியின் அடைப்புப் பக்கங்களில் மோதித் தடதடத்தன.

அந்த வாட்டசாட்டமான செங்காவலரின் பெயர் விளதீமிர் நிக்கலாயேவிச். அமெரிக்காவைப் பற்றி அவர் சரமாரி யாய் என் மீது கேள்விகளைப் பொழிந்து கொண்டிருந்தார். ''அமெரிக்கா ஏன் இந்த யுத்தத்தில் சேர்ந்து கொண்டது? அமெரிக்கத் தொழிலாளர்கள் அவர்களது முதலாளிகளை வீழ்த்துவதற்குத் தயாராகிவிட்டார்களா? மூனி* வழக்கு விசாரணை இப்போது எம்மட்டில் இருக்கிறது? பெர்க்மனை** அமெரிக்காவிடம் ஒப்படைத்து சான் பிரான்சிஸ்கோவுக்குக் கொண்டு போய்விடுவார்களா?'' இப்படி அவர் மற்றும் பல கேள்விகளை அடுக்கிச் சென்ருர், யாவும் பதிலளிக்க மிகவும் கடினமானவை. நாங்கள் ஒருவரையொருவர் பிடித் துக் கொண்டு, உருண்டோடிய குண்டுகளுக்கிடையே குதித் தாடிக் கொண்டிருக்கையில் அவர் இந்தக் கேள்விகளை லாரி யின் இரைச்சலுக்கு மேல் பலமாய்ச் சப்தம் போட்டுக் கேட்டு வந்தார்.

இடையில் எப்போதாவது சுற்றுக் காவல் குழுவினர் எங்களை நிறுத்த முயன்ருர்கள். எங்களுக்கு எதிரே படை

---

* டாம் மூனி—இரும்பு ஆலைத் தொழிலாளி, அமெரிக்கத் தொழிலாளி வர்க்க இயக்கத்தில் முன்னிலையில் நின்று செயல் பட்டு வந்தவர். 1916 ஜூலை 22ல் சான் பிரான்சிஸ்கோவில் நடைபெற்ற படை அணிவகுப்பின் மீது வெடிகுண்டு வீசினுர் என்பதாக அவர் மீது பொய்க் குற்றம் சுமத்தி ஜோடிக்கப் பட்ட வழக்கில் அவருக்கு மரண தண்டனை அளித்தார்கள். பொது மக்களிடையே எழுந்த ஆத்திரத்தால் நிர்ப்பந்திக் கப்பட்டு ஜனுதிபதி வில்சன் தலையிட்டு மரண தண்டனையை ஆயுள் தண்டனையாக மாற்ற வேண்டியதாயிற்று. பிற்பாடு டாம் மூனி குற்றமற்றவர் என்பது முற்ருகவும் முடிவாகவும் நிரூபிக்கப்பட்டது என்ருலுங்கூட அவர் இருபது ஆண்டு களுக்கு மேல் சிறையில் அடைபட்டுக் கிடக்க நேர்ந்தது. ரூஸ்வெல்ட் ஜனுதிபதியான பிறகே அவர் விடுதலை செய்யப் பட்டார்.—[பதிப்பாசிரியர்.]

** பெர்க்மன்—டாம் மூனியுடன் கூட குற்றம் சாட்டப் பட்டு வழக்கு தொடரப்பட்டவர்.—[பதிப்பாசிரியர்.]

யாட்கள் சாலையினுள் ஓடிவந்து ''ஸ்தோய்!'' [நில்!] என்று கூச்சலிட்டு துப்பாக்கிகளை மேலே உயர்த்திக் காட்டினர்.

நாங்கள் கவனித்துக் கொள்ளவில்லை. ''நாசமாய்ப் போங்க!'' என்று கத்தினார்கள் செங்காவலர்கள். ''யாருக்காகவும் நாங்கள் நிற்கப் போவதில்லை! நாங்கள் செங்காவலர்களாக்கும்!'' வீறுப்புடன் தடதடத்துக் கொண்டு சென்றோம். இதற்கிடையில் விளதீமிர் நிக்கலாயெவிச் என்னைப் பார்த்துப் பனுமா கால்வாய் சர்வதேசியமய மாக்கப்படுவதையும் இன்ன பிற விவகாரங்களையும் பற்றிக் கூச்சலிட்டுக் கேட்டுக் கொண்டிருந்தார்....

இப்படி நாங்கள் சுமார் ஐந்து மைல் சென்றதும் எதிர்த் திசையிலே மாலுமிகள் குழு ஒன்று நடை போட்டு வருவதைக் கண்டோம். எங்கள் லாரியின் வேகம் குறைந்து சென்றது.

''சோதரர்களே, போர்முனை எங்கே இருக்கிறது?''

முன்னுல் வந்துகொண்டிருந்த மாலுமி நடையை நிறுத்தி விட்டுத் தலையைச் சொறிந்து கொண்டார். ''இன்று காலை இந்தச் சாலையில் சுமார் அரை கிலோமீட்டர் தொலைவில் இருந்தது'' என்ருர் அவர். ''ஆனுல் இப்போது அந்தச் சனியனை எங்கேயும் காணும். நாங்களும் நடநடவென்று எவ்வளவோ நடந்துவிட்டோம், அதைக் கண்டுபிடிக்க முடியவில்லை.''

அவர்களும் எங்கள் லாரியினுள் ஏறிக் கொண்டதும் நாங்கள் தொடர்ந்து மேலே சென்ருேம். ஒரு மைல்தான் சென்றிருப்போம், விளதீமிர் நிக்கலாயெவிச் கையால் காதைக் குவித்துக் கொண்டு கேட்டுவிட்டு, லாரியை நிறுத்தும்படி டிரைவரிடம் கத்தினுர்.

''துப்பாக்கி சுடப்படுகிறது!'' என்ருர் அவர். ''காதில் விழுகிறதா?'' கணப் பொழுதுக்கு நிசப்தமாக இருந்தது, பிறகு சற்று முன்னுல் இடது பக்கத்தில் அடுத்து அடுத்து வேகமாய் மூன்று தரம் சுடப்பட்டது கேட்டது. இங்கே சாலையின் ஓராமாய் அடர்ந்த காடு இருந்தது. நாங்கள் பெரிதும் பரபரப்புற்றவர்களாய் முணுமுணுத்துப் பேசிக் கொண்டே மெல்ல மேலே சென்ருேம். துப்பாக்கி சுடப்பட்ட இடத்துக்கு அனேகமாய் எதிரே எங்கள் லாரி வந்ததும் நாங்கள் கீழே இறங்கினேம். ஆளுக்கு ஒரு துப்பாக்கியுடன் சிதறி விலகிச் சென்று ஓசையின்றி காட்டுக்குள் நடந்தோம்.

ИСПОЛНИТЕЛЬНЫЙ КОМИТЕТ
ПЕТРОГРАДСКОГО СОВЕТА
РАБОЧИХЪ и СОЛДАТСКИХ
ДЕПУТАТОВЪ
Военныи Отделъ

28 Октября 191 г
26/435

УДОСТОВѢРЕНІЕ.

Настоящее удостовѣреніе дано представите Американской Соціалъ - демократіи Интернаціоналисту товарищу ДЖОНУ РИДЪ въ томъ, Военно - Революціонный Комитетъ Петербургскаг Совѣта Рабочихъ и Солдатскихъ Депутатовъ пред - ставиеъ имъ права свободнаго проѣзда по всѣм Сѣверкому фронту въ цѣляхъ освѣдомленія нашихъ Американскихъ товарищей интернаціоналистовъ съ событіями въ Россіи.




Предсѣдатель:

Секретарь:

வடக்குப் போர்முனைக்குச் செல்வதற்காக ஜான் ரீடுக்குத் தரப்பட்ட அறிமுகச் சீட்டு

இதற்குள் பீரங்கியை இரு தோழர்கள் தனியே எடுத்து அதைத் திருப்பி ஏறத்தாழ எங்கள் முதுகைக் குறி பார்க்கும்படி வைத்தார்கள்.

காட்டுக்குள் நிசப்தம் குடி கொண்டிருந்தது. இலைகள் யாவும் மறைந்துவிட்டன, தணிந்து தொங்கிய சோகை கொண்ட இலையுதிர் காலச் சூரியனது கிரணங்களில் அடிமரங்கள் வெளிறிய மங்கல் நிறமுடையனவாய்த் தோன்றின. எங்கள் பாதங்களுக்கு அடியில் முல்லை நிலத்தில் ஆங்காங்கே தேங்கி நின்ற நீரில் அதிர்ந்த பனிக்கட்டிச் செதில்களைத்

தவிர எதுவுமே அசையவில்லை. பதுங்கி நின்று பாய்வதற்கான திட்டமாக இருக்குமோ?

நிகழ்ச்சி ஏதுமின்றி நாங்கள் தொடர்ந்து முன்னே சென்றோம், மரங்களின் அடர்த்தி குறைந்து விட்டது. அங்கே நின்று கவனித்தோம். அப்பால் தெரிந்த சிறிய வெளியில் தீ மூட்டிச் சுற்றிலும் மூன்று படையாட்கள் எதையும் கவனியாது அமர்ந்திருக்கக் கண்டோம்.

விளதீமிர் நிக்கலாயெவிச் முன்னால் சென்று, ''தோழர்களே, ஸ்தராஸ்த்துய்த்தே!'' என்றார். அவருக்குப் பின்னால் ஒரு பீரங்கியும் இருபது துப்பாக்கிகளும் ஒரு லாரி குருபித் குண்டுகளும் செயல்படத் தயாராயிருந்தன. அந்தப் படையாட்கள் திடுக்கிட்டுக் குதித்தெழுந்தார்கள்.

''இங்கே துப்பாக்கி சுடப்படும் சப்தம் கேட்டதே, என்ன அது?''

அந்தப் படையாட்களில் ஒருவர் கலவரம் நீங்கியவராய், ''ஓ, அதுவா? நாங்கள் தான் தோழர், முயல்கள் சுட்டோம்....''

எங்கள் லாரி ரமானவொவை நோக்கிப் பறந்தோடிற்று. பொழுது வெளிச்சமாகவும் நிகழ்ச்சிகளின்றியும் இருந்தது. முதலாவது சாலைச் சந்திப்பில் இரு படையாட்கள் தமது துப்பாக்கிகளைத் ஆட்டிக் காட்டியவாறு எங்கள் முன்னால் சாலையின் குறுக்கே ஓடி வந்தார்கள். வேகத்தைக் குறைத்துச் சென்று அவர்களுக்குப் பக்கத்தில் வந்து நின்றோம்.

''தோழர்களே, சீட்டுகளை எடுங்கள்!''

செங்காவலர்கள் கோபக் கூச்சல் எழுப்பினார்கள். ''நாங்கள் செங்காவலர்கள். நாங்கள் சீட்டுகளைக் காட்டத் தேவையில்லை.... இவர்கள் கிடக்கிறார்கள், வண்டியை விடுங்கள்!''

ஆனால் மாலுமி ஒருவர் ஆட்சேபித்தார். ''தோழர்களே, இது சரியல்ல. நாம் புரட்சிகரக் கட்டுப்பாடுடையவர்களாக இருத்தல் வேண்டும். எதிர்ப்புரட்சியாளர்கள் சிலர் லாரியில் வந்து 'நாங்கள் சீட்டுகளைக் காட்டத் தேவையில்லை' என்று சொல்வதாக வைத்துக் கொள்ளுங்கள். இந்தத் தோழர்கள் உங்களை அறியாதவர்கள் அல்லவா?''

உடனே வாக்குவாதம் நடைபெற்றது. ஒவ்வொருவராக மாலுமிகளும் படையாட்களும் முதலாவது மாலுமியுடன்

சேர்ந்து கொண்டு பேசினார்கள். முடிவில் முணுமுணுத்துக் கொண்டு செங்காவலர்கள் ஒவ்வொருவராக அழுக்கேறிய தமது புமாகாவை [காகிதம்] எடுத்துக் காட்டினார். என்னுடையது ஒன்றை மட்டும் தவிர ஏனையவை யாவும் ஒரே மாதிரியாக இருந்தன. என்னுடையது ஸ்மோல்னியில் புரட்சி இராணுவக் கமிட்டியால் அளிக்கப்பட்டது. சுற்றுக் காவல் படையாட்கள் நான் கீழே இறங்கி அவர்களுடன் வர வேண்டுமென்று அறிவித்தார்கள். செங்காவலர்கள் கடுமையாய் ஆட்சேபித்தார்கள். ஆனால் முதலாவதாகப் பேசிய அந்த மாலுமி காவல் படையாட்கள் சொற்படியே செய்ய வேண்டும் என்றார். ''இந்தத் தோழர் மெய்யான தோழர்தான், நமக்குத் தெரியும்'' என்றார் அவர். ''ஆனாலும் கமிட்டியின் உத்தரவுகள் இருக்கின்றன, இவற்றுக்குக் கீழ்ப்படியவே வேண்டும். இது புரட்சிகரக் கட்டுப்பாடு....''

சச்சரவு வேண்டாமென்று நான் லாரியிலிருந்து கீழே இறங்கினேன். அதில் இருந்தவர்கள் எல்லோரும் கையை வீசி விடை பெற்றுக் கொள்ள லாரி அந்தச் சாலையிலே ஓடி மறைந்ததைப் பார்த்துக் கொண்டு நின்றேன். சுற்றுக் காவல் படையாட்கள் இருவரும் சற்று நேரம் தமக்குள் மெல்லப் பேசிக் கலந்தாய்வு நடத்தினார்கள். பிறகு அவர்கள் என்னை ஒரு சுவரின் அருகே அழைத்துச் சென்று அதன் ஓரத்தில் நிற்க வைத்தார்கள். அதற்குப் பிற்பாடுதான் திடுமென என் மனத்தில் அந்த எண்ணம் பளிச்சிட்டது: இவர்கள் என்னைச் சுடுவதற்கு அல்லவா தயார் செய்கிறார்கள்!

மூன்று திசைகளிலும் ஓர் ஆளுங்கூட கண்ணில் படவில்லை. பக்கவாட்டில் பிரிந்து சென்ற சாலையில் கால் மைலுக்கு அப்பால் ஒரு சிறு மர வீடாகிய தாச்சாவின் [குடில்] புகை போக்கியிலிருந்து வெளிவந்த புகையைத் தவிர மனித வாழ்வுக்கான அறிகுறி வேறு எதையும் காண முடியவில்லை. படையாட்கள் இருவரும் சாலையை நோக்கிச் சென்று கொண்டிருந்தார்கள். பதைத்துத் துடித்துக் கொண்டு நான் அவர்களிடம் ஓடினேன்.

''தோழர்களே! இதைப் பாருங்கள் நீங்கள்! புரட்சி இராணுவக் கமிட்டியின் முத்திரை இதோ இருக்கிறது பாருங்கள்!''

அசட்டு முழி முழித்துக் கொண்டு இருவரும் எனது அனுமதிச் சீட்டைப் பார்த்தார்கள், பிறகு ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள்.

''இது ஏனையோருடையதைப் போன்றதாய் இல்லை'' என்று சிடுசிடுப்பு தொனிக்கப் பிடிவாதமாகக் கூறினார் அவர்களில் ஒருவர். ''சோதரனே, எங்களுக்குப் படிக்கத் தெரியாது'' என்றார்.

நான் அவருடைய கரத்தைப் பற்றிக்கெண்டேன்.''வாருங்கள்!'' என்றேன். ''வாருங்கள், அதோ அந்த வீட்டுக்குச் சென்று கேட்போம். படிக்கத் தெரிந்தவர் யாராவது அங்கே நிச்சயம் இருப்பார்.'' இருவரும் தயங்கினார்கள். ''வேண்டாம்'' என்றார் ஒருவர். மற்றொருவர் என்னை மேலும் கீழுமாய்ப் பார்வையிட்டார். ''போய்க் கேட்போமே, ஏன் வேண்டாம் என்கிறாய்?'' என்று முணுமுணுத்தார். ''குற்றமற்றவரைக் கொல்வது கொடுங் குற்றம் அல்லவா?'' என்றார்.

நாங்கள் அந்த வீட்டுக்குச் சென்று வாயிற் கதவில் தட்டினோம். குட்டையான, குண்டான ஒரு பெண் கதவைத் திறந்து பார்த்ததும் கிலி கொண்டவராய்ப் பின்வாங்கியவாறு, ''அவர்களைப் பற்றி எனக்கு ஒன்றும் தெரியாது! அவர்களைப் பற்றி எனக்கு ஒன்றும் தெரியாது!'' என்று முனகினார். படையாட்களில் ஒருவர் எனது அனுமதிச் சீட்டை அவரிடம் நீட்டினார். அந்தப் பெண் கூச்சலிட்டுக் கதறினார். ''தோழரே, ஒன்றுமில்லை; படித்துக் காட்டும்படிச் சொல்கிறோம்.'' தயங்கியவாறு அவர் அந்தச் சீட்டை வாங்கி வேகமாகவும் உரக்கவும் படித்தார்:

இந்த அனுமதிச் சீட்டை வைத்திருக்கும் ஜான் ரீடு, அமெரிக்க சமூக-ஜனநாயகத்தின் பிரதிநிதி, சர்வதேசியவாதி....

மீண்டும் சாலைக்கு வந்ததும் இரு படையாட்களும் கலந்தாய்வு நடத்தினர். ''உங்களைப் படைப் பிரிவுக் கமிட்டிக்கு அழைத்துச் செல்கிறோம்'' என்றனர். வேகமாய் இருட்டி வந்த அந்திப் பொழுதில் மண் சாலையில் நாங்கள் நடக்கலானோம். இடையில் எப்போதாவது படையாட் குழுக்களைச்

சந்தித்தோம். அவர்கள் நடையை நிறுத்தி, அச்சம் தரும் பார்வையோடு சுற்றிலுமிருந்து என்னை உற்று நோக்கினர்; எனது அனுமதிச் சீட்டை ஒவ்வொருவராய் வாங்கிப் பார்த்து விட்டு என்னைக் கொல்ல வேண்டுமா, இல்லையா என்று ஆவேசமாக வாதம் புரிந்தனர்....

ஜார்ஸ்கயெ செலோ இரண்டாவது துப்பாக்கிப் படைப் பிரிவின் கொட்டடிகளுக்கு நாங்கள் வந்து சேர்ந்த போது இருட்டாகிவிட்டது. சாலையின் ஓரத்தில் நீண்டு பரந்தமைந்த தணிவான கட்டடங்களாகும் அவை. நுழை வாயிலில் வெற்றுப் பொழுது போக்கிக் கொண்டிருந்த படையாட்கள் சிலர் ஆவல் மிக்கோராய்க் கேள்விகள் கேட்டனர். உளவாளியா? சதிகாரனா? சுருள் படிக்கட்டில் ஏறி, நடுவில் ஒரு பெரிய கணப்படுப்பும் தரையில் வரிசை வரிசையாகக் கட்டில்களும் இருந்த ஒரு பெரிய கூடத்தை வந்தடைந்தோம். அங்கே சுமார் ஆயிரம் படையாட்கள் சீட்டாடிக் கொண்டும், பேசிக் கொண்டும், பாடிக் கொண்டும், தூங்கிக் கொண்டும் இருந்தார்கள். கூரையில் கேரென்ஸ்கியின் பீரங்கிக் குண்டு பெரிய ஓட்டை போட்டிருந்தது....

நான் வாயிற் கதவருகே நின்று கொண்டிருந்தேன். உள்ளே இருந்த கோஷ்டிகள் திடுமென நிசப்தமாகி, எல்லோரும் கதவின் பக்கம் திரும்பி என்னை வெறிக்கப் பார்த்தார்கள். திடுதிப்பென்று அவர்கள் என்னருகே நகர்ந்து வரலாயினர்; முதலில் மெல்லவும், பிறகு உள்ளத்தில் எழுந்த வெறுப்பு முகத்தில் தெரிய தடதடத்து மோதிக் கொண்டும் வரலாயினர். ''தோழர்களே! தோழர்களே!'' என்று கூச்சலிட்டார் என்னைக் காவல் புரிந்த படையாட்களில் ஒருவர். ''கமிட்டி! கமிட்டியிடம் ஒப்படைக்க வேண்டும்!'' என்றார். கூட்டத்தினர் முணுமுணுத்துச் சபித்தவாறு என்னைச் சுற்றிலும் அப்படியப்படியே நின்றுவிட்டார்கள். கையில் சிவப்புப் பட்டை அணிந்த ஒல்லியான இளைஞர் ஒருவர் முண்டியடித்துக் கொண்டு என்னிடம் வந்து சேர்ந்தார்.

''யார் இது?'' என்று அவர் கோபமாகக் கேட்டார். என்னை அழைத்து வந்த படையாட்கள் விளக்கிச் சொன்னதும் ''அந்தச் சீட்டைக் காட்டுங்கள்!'' என்றார். அதை வாங்கிக் கவனமாகப் படித்த அவர் என்னை ஊடுருவும் முறையில்

உற்றுப் பார்த்தார். பிறகு புன்னகை புரிந்தவாறு எனது அனுமதிச் சீட்டை என்னிடம் தந்தார். ''தோழர்களே, அமெரிக்கத் தோழர் இவர். கமிட்டியின் தலைவன் நான், எங்கள் படையணியின் சார்பில் உங்களுக்கு நல்வரவு கூறுகிறேன்....'' திடுமென எங்கும் பரவிய சலசலப்பு வரவேற்பு முழக்கமாக மூண்டெழுந்தது. நெருக்கியடித்துக் கொண்டு வந்து பலரும் என் கையைப் பிடித்துக் குலுக்கினார்கள்.

''சாப்பிட்டீர்களா? இங்கே நாங்கள் சாப்பிட்டு முடித்து விட்டோம். நீங்கள் படையதிகாரிகளது மன்றத்துக்குச் செல்லுங்கள், உங்கள் மொழியைப் பேசக் கூடியவர்கள் அங்கே சிலர் இருக்கிறார்கள்....''

அவர் என்னை வெளிமுற்றத்தின் குறுக்கே அழைத்துச் சென்றார். நாங்கள் வேறொரு கட்டடத்துக்குள் சென்றோம். பிரபுக் குலத்தவரது தோற்றமும் லெப்டினண்டின் தோள் பட்டை அணிந்தவருமான இளைஞர் ஒருவர் அப்போது உள்ளே வந்து கொண்டிருந்தார். படையணிக் கமிட்டியின் தலைவர் என்னை அவருக்கு அறிமுகம் செய்து வைத்தார், பிறகு கையைப் பிடித்துக் குலுக்கி விடை பெற்றுக் கொண்டு திரும்பிச் சென்றார்.

''நான் ஸ்திபான் ஜார்ஜியெவிச் மரோவ்ஸ்கி, உங்களுக்கு ஆவன செய்யக் காத்திருக்கிறேன்'' என்றார் தூய பிரெஞ்சு மொழியில், அந்த லெப்டினண்ட். வேலைப்பாடுகளுடன் கூடிய நுழைவறையிலிருந்து நாங்கள் பளிச்சிட்டு மின்னிய சரவிளக்குடன் கூடிய அலங்காரமான படிக்கட்டில் ஏறினோம். முதல் மாடியில் பிலியர்டு அறைகளும் சீட்டாட்ட அறைகளும் இருந்தன, கூடத்திலிருந்து ஒரு கதவு நூலகத்துக்கு இட்டுச் சென்றது. நாங்கள் சாப்பாட்டுக் கூடத்துக்குள் நுழைந்தோம், அங்கே இருந்த நீளமான மேசையின் மையப் பகுதியின் எதிரே முழு இராணுவ உடுப்புடன் படையதிகாரிகள் சுமார் இருபது பேர் அமர்ந்திருந்தனர். தங்க, வெள்ளிக் கைப்பிடிகளைக் கொண்ட போர்வாட்களும் ஜார் காலத்திய விருதுகளுக்குரிய ரிப்பன்களும் சிலுவைகளும் அணிந்திருந்த அவர்கள் நான் உள்ளே நுழைந்ததும் பணிவன்புடன் எழுந்து வரவேற்றனர். நரைத்த தாடியுடன் எடுப்பான பெரிய உருவத்தினராக இருந்த கர்னலுக்குப் பக்கத்தில் உட்கார

எனக்கு இடம் அமைத்துத் தந்தார்கள். பணியாட்கள் சுறு சுறுப்பாய் வேலை செய்து சாப்பாடு பரிமாறினார்கள். அங்கு நிலவிய சுழல் ஐரோப்பாவில் படையதிகாரிகளது உண்டிக் கூடம் எதிலும் இருக்கக் கூடியது போன்றதாகவே இருந்தது. புரட்சி—எங்கே அது?

''போல்ஷிவிக்குகள் இல்லையா நீங்கள்?'' என்று நான் மரோவ்ஸ்கியிடம் கேட்டேன்.

மேசையைச் சுற்றிலும் புன்சிரிப்பு பரவிச் சென்றது, ஆனால் இரண்டொருவர் ஓரக் கண்ணால் பணியாளரைப் பார்த்துக் கொண்டதை நான் கவனித்தேன்.

''இல்லை'' என்று பதிலளித்தார் எனது புதிய நண்பர். ''இந்தப் படைப்பிரிவில் போல்ஷிவிக்குப் படையதிகாரி ஒரே யொருவர்தான் இருக்கிறார், இன்று அவர் பெத்ரோகிராது போயிருக்கிறார். கர்னல் ஒரு மென்ஷிவிக்கு. அங்கே இருக்கும் காப்டன் ஹெர்லோவ் ஒரு காடேட்டு. நான் வலதுசாரி சோஷலிஸ்டுப் புரட்சியாளன்.... சேனையில் மிகப் பெரும்பாலான படையதிகாரிகள் போல்ஷிவிக்குகள் அல்ல, ஆனால் என்னைப் போல் ஜனநாயகத்தில் நம்பிக்கை கொண்டவர்கள், படையாள் பெருந் திரளினரைத் தாமும் பின்தொடர்ந்து செல்ல வேண்டுமென்று நம்புகிறவர்கள்....''

சாப்பாடு முடிந்ததும் நிலப்படங்கள் கொண்டுவரப்பட்டன. கர்னல் அவற்றை மேசையின் மீது விரித்தார். ஏனையோர் சுற்றிலும் கூடி நின்று கொண்டு பார்வையிட்டனர்.

''இன்று காலையில் நமது நிலைகள் இவ்விடங்களில் இருந்தன'' என்று பென்சில் குறிகளைச் சுட்டிக் காட்டினார் கர்னல். ''விளதீமிர் கிரீலவிச், உங்கள் படைப் பிரிவு இப்போது எங்கே இருக்கிறது?''

காப்டன் ஹெர்லோவ் படத்தில் சுட்டிக் காட்டினார். ''கட்டளைகளின் படி நாங்கள் இந்தச் சாலையை ஒட்டிய நிலையைப் பிடித்துக் கொண்டோம். ஐந்து மணிக்கு கர்சாவின் பொறுப்பேற்றுக் கொண்டு என்னை விடுவித்தார்.''

அப்போது கூடத்தின் கதவு திறக்கப்பட்டது. படையணிக் கமிட்டியின் தலைவரும் வேறொரு படையாளும் உள்ளே வந்தார்கள். அவர்கள் இருவரும் கர்னலின் பின்னால் நின்றவர்களுடன் சேர்ந்து கொண்டு கழுத்தை நீட்டிப் படத்தை உற்று நோக்கினர்.

''நல்லது'' என்றார் கர்னல். ''இப்போது நமது பகுதியில் கசாக்குகள் பத்து கிலோமீட்டர் பின்வாங்கிவிட்டனர். நாம் மேலும் முன்னே சென்று நிலைகள் ஏற்பது அவசியமென நான் நினைக்கவில்லை. கனவான்களே, இன்று இரவுக்கு நீங்கள் தற்போதைய அணியினை விடாமல் வைத்திருப்பீர்கள், நம் நிலைகளைப் பலப்படுத்திக் கொள்வதற்காக நீங்கள்—''

''மன்னிக்க வேண்டும்'' என்று இடைமறித்தார் படையணிக் கமிட்டியின் தலைவர். ''நமக்கு வந்திருக்கும் கட்டளைகள் முழு வேகத்தில் நாம் முன்னேறிச் சென்று, காலையில் காத்சினுவுக்கு வடக்கில் கசாக்குகளை எதிர்த்துப் போராடத் தயார் செய்ய வேண்டுமெனக் கூறுகின்றன. தகர்த்து நொறுக்கும்படியான தோல்வி அளித்தாக வேண்டும். அதற்கேற்ற படை நிலைகளை வகுத்தளிக்கும்படி வேண்டுகிறேன்.''

சற்று நேரத்துக்கு மௌனம் நிலவிற்று. கர்னல் மீண்டும் படத்தின் பக்கம் திரும்பினார். ''நல்லது'' என்றார், அவர் குரலின் தொனி இப்போது வேறு விதமாக இருந்தது. ''ஸ்திபான் ஜியார்ஜியெவிச், நீங்கள்—'' நீலப் பென்சிலால் வேகமாகக் கோடுகள் கிழித்துக் காட்டி கர்னல் தமது கட்டளைகளை அளித்தார்; சார்ஜெண்ட் ஒருவர் சுருக்கெழுத்துக் குறிப்புகள் எழுதிக் கொண்டார். பிறகு சார்ஜெண்ட் வெளியே சென்றார்; கட்டளைகளைத் தட்டெழுத்தில் அசலும் படியுமாக இரு பிரதிகளில் அடித்துக் கொண்டு பத்து நிமிடங்களில் திரும்பி வந்தார். கமிட்டியின் தலைவர் கட்டளைகளின் படியைத் தன் முன்னால் வைத்துக் கொண்டு நிலப்படத்தைப் பரிசீலனை செய்தார்.

''நல்லது'' என்று சொல்லி அவர் எழுந்து நின்றார். படிப் பிரதியை மடித்துத் தமது கோட்டுப் பைக்குள் வைத்துக் கொண்டார். மற்றொரு பிரதியில் கையெழுத்திட்டு, தமது பைக்குள்ளிருந்து வட்ட முத்திரை ஒன்றை எடுத்து முத்திரை பதித்து அந்தப் பிரதியைக் கர்னலிடம் கொடுத்தார்....

புரட்சி—இதுதான் புரட்சி!

படையணித் தலைமை அலுவலர்களது காரில் நான் ஜார்ஸ்கயெவுக்கு, சோவியத்து அரண்மனைக்குத் திரும்பி வந்தேன். தொழிலாளர்களும் படையாட்களும் மாலுமிகளும் கூட்டம்

கூட்டமாய் வருவதும் போவதும் இன்னமும் நின்றபாடில்லை. வாயிலுக்கு முன்னால் முன்பு போலவேதான் லாரிகளும் கவச மோட்டார்களும் பீரங்கிகளும் நெருக்கியடித்துக் கொண்டு வந்து நின்றன. கூச்சலும், வியத்தகு வெற்றியின் மகிழ்ச்சி ஆரவாரமும் நிறையவே இருந்தன. செங்காவலர்கள் ஆறு பேர், பாதிரியார் ஒருவரை அழைத்துக் கொண்டு இந்த நெரிசலுக்கிடையே முட்டிமோதித் தமக்கு வழியமைத்து உள்ளே வந்து சேர்ந்தார்கள். இந்தப் பாதிரியார்தான் திருத் தந்தை இவான், கசாக்குகள் நகருக்குள் வந்த போது அவர் களுக்கு ஆசி கூறி வாழ்த்தியவர் என்று கூறினார்கள். இந்தப் பாதிரியார் சுடப்பட்டதாக நான் பிற்பாடு கேள்விப்பட் டேன்....[4]

திபென்கோ வரிசையாகப் பல கட்டளைகளை அளித்த வாறு அப்போதுதான் வெளியே வந்து கொண்டிருந்தார். அந்தப் பெரிய ரிவால்வர் அவர் கையில்தான் இருந்தது. இஞ்சின் படபடக்க நடைபாதை ஓரத்தில் நின்ற மோட்டார் வண்டியின் பின் இருக்கையில் தனியே ஏறி அமர்ந்து கொண்டு வேகமாய்ப் புறப்பட்டார்—கேரென்ஸ்கியை வெற்றி கொள்ள காத்சினாவுக்கு.

இரவு நெருங்கிய நேரத்தில் அவர் அந்நகரின் சுற்றுவட் டாரத்தை அடைந்தார். அங்கிருந்து நடந்து சென்றார். கசாக்கு களிடம் அவர் என்ன சொன்னாரோ, யாருக்கும் தெரியாது. ஆனால் என்ன நடந்ததென்றால், ஜெனரல் கிரஸ்னோவும் அவரது தலைமை அலுவலர்களும் சில ஆயிரம் கசாக்குகளும் சரணடைந்துவிட்டார்கள், இதே போல் செய்யும்படிக் கேரென்ஸ்கிக்கும் ஆலோசனை கூறினார்கள்.[5]

கேரென்ஸ்கி என்ன செய்தார்?—நவம்பர் 14ஆம் நாள் காலையில் ஜெனரல் கிரஸ்னோவ் அளித்த வாக்குமூலத்தை அப்படியே இங்கு எடுத்துரைக்கிறேன்:

*''காத்சினா, 1917 நவம்பர் 14. இன்று அதிகாலை மூன்று மணி இருக்கும், உச்சப் படைத்தலைவர் (கேரென்ஸ்கி) என்னைக் கூப்பிட்டனுப்பினார். அவர் பெரிதும் கிளர்ச்சி யுற்றுக் கலவரமடைந்திருந்தார்.*

'' 'ஜெனரல்' என்ருர் அவர் என்னிடம். 'நீங்கள் என்னைக் காட்டிக் கொடுத்துவிட்டீர்கள். உங்களுடைய கசாக்குகள் என்னைக் கைது செய்து மாலுமிகளிடம் ஒப்படைக்கப் போவ தாகத் திட்டவட்டமாய்க் கூறுகிருர்கள்.'

'' 'ஆம்' என்றேன் நான். 'இம்மாதிரிதான் பேசப்படு கிறது, எவ்விடத்திலும் உங்களுக்கு ஆதரவோ அனுதாபமோ இல்லை என்பது தெரிகிறது.'

'' 'படையதிகாரிகளுங்கூட இதே போல்தான் சொல்கி ருர்கள்.'

'' 'ஆம், யாவரையும்விட அதிகமாகப் படையதிகாரி கள்தான் உங்களிடம் அதிருப்தி கொண்டவர்களாக இருக் கிருர்கள்.'

'' 'நான் என்ன செய்யலாம்? தற்கொலை செய்து கொண்டு விடலாம் போலிருக்கிறதே!'

'' 'நீங்கள் கண்யவானுய் இருந்தால் உடனே வெள்ளைக் கொடியுடன் பெத்ரொகிராது சென்று, புரட்சி இராணுவக் கமிட்டியிடம் போய் இடைக்கால அரசாங்கத்தின் அதிபர் என்ற முறையில் பேச்சுவார்த்தை ஆரம்பியுங்கள்.'

'' 'சரி, அப்படியே செய்கிறேன், ஜெனரல்.'

'' 'உங்களுக்கு மெய்க்காவலரை அளிக்கிறேன், ஒரு மாலுமியை உங்களுடன் வரச் சொல்கிறேன்.'

'' 'வேண்டாம்,வேண்டாம், மாலுமி வேண்டாம். திபேன் கோ இங்கே இருப்பது மெய்தானு? உங்களுக்குத் தெரியுமா?'

'' 'திபேன்கோ யார் என்று எனக்குத் தெரியாது?

'' 'அவர் என் பகைவர்.'

'' 'ஒன்றும் செய்வதற்கில்லை. நீங்கள் பெரிய பணயங் களுக்காக ஆட நினைத்தால், வருவது வரட்டுமென்று துணிந்து இறங்கத்தான் வேண்டும்.'

'' 'ஆம், இன்று இரவு நான் புறப்பட்டுச் செல்கிறேன்!'

'' 'ஏன் அப்படி? தப்பி ஓடுவது போலல்லவா இருக்கும். அமைதியாகவும் பகிரங்கமாகவும் புறப்பட்டுச் செல்லுங் கள், நீங்கள் தப்பி ஓடவில்லை என்பது எல்லார்க்கும் தெரியும் படிச் செல்லுங்கள்.'

'' 'சரி, அப்படியே செய்கிறேன். நான் நம்பக் கூடிய மெய்க்காப்பாளர்களை நீங்கள் அளிக்க வேண்டும்.'

'' 'நல்லது.'

''நான் வெளியே சென்று தோனின் பத்தாவது படையணியைச் சேர்ந்த கசாக்கு ருஸ்க்கோவை அழைத்து, உச்சப் படைத்தலைவருடன் கூடச் செல்வதற்குப் பத்து கசாக்குகளைப் பொறுக்கியெடுத்துக் கொள்ளும்படி அவருக்குக் கட்டளையிட்டேன். அரை மணி நேரத்துக்குப் பிற்பாடு இந்தக் கசாக்குகள் என்னிடம் வந்து கேரென்ஸ்கி அவரது இருப்பிடத்தில் இல்லை, ஓடிவிட்டார் என்று சொன்னார்கள்.

''நான் அபாய அறிவிப்பு கொடுத்து, அவரைத் தேடிப் பிடிக்கும்படி கட்டளையிட்டேன். அவர் காத்சினாவை விட்டுப் போயிருக்க முடியாதென்று நினைத்தேன். ஆனால் அவர் அகப்படவில்லை....''

இவ்விதம் தன்னந் தனியே கேரென்ஸ்கி ஓடிச் சென்று விட்டார், ''மாலுமியின் உடுப்பை அணிந்து மாறுவேடம் பூண்டு'' ஓடிவிட்டார். ருஷ்ய மக்கள் திரளினரிடம் அவருக்கு எஞ்சியிருந்த சொற்ப ஆதரவையும் இந்தச் செயலின் மூலம் அவர் இழந்துவிட்டார்....

மோட்டார் லாரி ஒன்றில் முன் இருக்கையில் அமர்ந்து கொண்டு நான் பெத்ரொகிராதுக்குத் திரும்பிச் சென்றேன். தொழிலாளர் ஒருவர் அதை ஓட்டிச் சென்றார், செங்காவலர்கள் அதில் நிறைந்திருந்தார்கள். எங்களிடம் மண்ணெண்ணை இல்லை, ஆகவே எங்கள் வண்டியின் விளக்குகள் எரியவில்லை. வீட்டுக்குத் திரும்பிச் சென்று கொண்டிருந்த பாட்டாளி வர்க்கச் சேனை சாலையை நிரப்பியிருந்தது, இவற்றின் இடத்தில் அமர்ந்து போர் புரிவதற்காக புதிய படைகள் எதிர்த் திசையில் பிரவாகமெனத் திரண்டெழுந்து போய்க் கொண்டிருந்தது. எங்களுடையதை ஒத்த பெரும் பெரும் லாரிகளும் பீரங்கிப் படை வரிசைகளும் வண்டிகளும் இரவிலே விளக்குகளின்றி கரு நிழல்கள் போல் கண்ணெதிரே எழுந்தன. தலை தெறிக்கும் வேகத்தில் நாங்கள் தடதடத்துச் சென்றோம். நிச்சயம் மோதிக் கொள்ளவே போகிறோம் என்பதாகவே தோன்றிற்று. இவற்றைத் தவிர்ப்பதற்காகச் சறுக்கென வலப் பக்கமாகவும் இடப் பக்கமாகவும் திரும்பிச் சக்கரங்கள் உரசித் தேய்க்க மயிரிழையில் தப்பி யோடினோம்,

சாலையில் சென்றவர்களது வசைமொழிகள் எங்கள் பின்னு லிருந்து எழுந்தன.

தலைநகரின் மினுமினுக்கும் விளக்குகள் அடிவானத்தின் குறுக்கே பல்கிப் பரவியிருந்தன. பொட்டல் வெளியில் மலை போல் குவிக்கப்பட்ட மணியாரங்களென விளங்கிய இவை, நகரக் காட்சியை பகற் பொழுதில் தெரிவதைக் காட்டிலும் விவரிக்க இயலாத அளவுக்கு இரவில் சிறப்புறச் செய்தன.

லாரியை ஓட்டிச் சென்ற வயது முதிர்ந்த தொழிலாளி ஒரு கையால் இயக்காழியைப் பிடித்துக் கொண்டு, இன் னொரு கையைத் தொலைவிலே பளிச்சிட்ட தலைநகரின் முழு வீச்சுக்கும் ஆனந்தமாய் வீசிக் காட்டினார்.

''என்னுடையது!'' என்று பூரிப்பால் முகம் ஒளிர, அவர் பலக்கக் கூவினார். ''இப்போது எனக்கே உரியதாகிவிட்டது! எனது பெத்ரொகிராது!''

*அத்தியாயம் 10*

## மாஸ்கோ

*புரட்சி இராணுவக் கமிட்டி அதன் வெற்றியைத் தொடர்ந்து மிக மும்முரமாகச் செயல்பட்டு அதை நிலை நிறுத்திச் சென்றது:*

*நவம்பர் 14.*

*சேனைப் போரணி, படைத்தொகுதி, படையணிக் கமிட்டிகள் யாவற்றுக்கும், தொழிலாளர்கள், படையாட்கள், விவசாயிகள் பிரதிநிதிகளது சோவியத்துகள் யாவற்றுக்கும் —யாவற்றுக்கும், யாவற்றுக்கும்.*

*கசாக்குகள், யூன்கெர்கள், படையாட்கள், மாலுமிகள், தொழிலாளர்கள் ஆகியோருக்கு இடையிலான உடன்பாட்டுக்கு இணங்க, அலெக்சாந்தர் ஃபியோதரவிச் கேரென்ஸ்கியை மக்களது நீதி மன்றம் ஒன்றின் முன்னால் விசாரணைக்குக் கொண்டு வந்து நிறுத்துவதென்று முடிவு செய்யப்பட்டிருக்கிறது. கேரென்ஸ்கியைக் கைது செய்யும்படி நாங்கள் கோருகிறோம், உடனே பெத்ரொகிராதுக்கு வந்து நீதி மன்றத்தின் முன்னால் ஆஜராகுமாறு, அடியிற் கண்ட நிறுவனங்களின் பெயரில் அவருக்குக் கட்டளையிடும்படிக் கோருகிறோம்.*

*ஒப்பம்:* **உஸ்ஸூரிக் குதிரைப் படையின் முதற் படையணியின் கசாக்குகள்; பெத்ரொகிராதுப் படைப் பிரிவாகிய பிரான்ஸ்-திரீயர்ஸ் படைப் பிரிவின் யூன்கெர்களது கமிட்டி; ஐந்தாவது சேனையின் பிரதிநிதி. மக்கள் கமிசார்,** *திபேன்கோ.*

இரட்சணியக் கமிட்டி, டூமா, கேரென்ஸ்கியைத் தனது உறுப்பினன் என்று பெருமிதத்துடன் கூறிக் கொண்ட சோஷலிஸ்டுப் புரட்சியாளர் கட்சி ஆகிய யாவும் அரசியல் நிர்ணயச் சபை ஒன்றுக்கு மட்டுமே அவரைப் பொறுப்புக் கூற வேண்டியவராகக் கருத வேண்டுமென ஆவேசமாக ஆட்சேபித்தன.

நவம்பர் 16ஆம் நாள் மாலையில் இரண்டாயிரம் செங் காவலர்கள் கையை வீசி ஸாகரொத்னி சாலையில் நடை போட்டுச் சென்ற காட்சியைக் கண்ணுற்றேன். அவர்களுக்கு முன்னால் இராணுவ வாத்தியக் குழுவினர் மர்செலேஸ் கீதமி சைத்துச் சென்றார்கள் (அந்த அணிவகுப்புக்கு அது எவ்வளவு பொருத்தமாயிருந்தது!), தொழிலாளர்களது அடர்ந்த அணி வரிசைகளுக்கு மேலே இரத்தச் சிவப்புக் கொடிகள் பறந்தன. ''சிவப்புப் பெத்ரொகிராதைப்'' பாதுகாத்த தமது சோதரர் களை வரவேற்று வீட்டுக்கு அழைத்துச் செல்வதற்காக அவர் கள் நடை போட்டுச் சென்றார்கள். குளிராயிருந்த அந்தி இருளில் ஆடவரும் பெண்டிருமாய்த் தடதடத்து நடந்து சென் றார்கள், அவர்களது உயரமான துப்பாக்கிக் குத்தீட்டிகள் அசைந்தாடின. விளக்கொளி மங்கலாய்த் தெரிந்த தெருக் கள் வழியே, வழுக்கியடித்தச் சேற்றில் அவர்கள் சென்று கொண்டிருந்தார்கள். அச்சம் கொண்டதாயினும் இளக்கார மாய்ப் பார்த்துக் கொண்டு மௌனமாக நின்ற முதலாளித்து வக் கூட்டங்களுக்கிடையே நடந்தார்கள்....

தொழில் வட்டாரத்தினர், கள்ளச் சந்தை வணிகர்கள், முதலீட்டுக்காரர்கள், நிலப்பிரபுக்கள், சேனைப் படையதி காரிகள், அரசியல்வாதிகள், ஆசிரியர்கள், மாணவர்கள் தனிப் பணித்துறையினர், கடைக்காரர்கள், எழுத்தர்கள், தரகர்கள்—எல்லோருமே இவர்களை எதிர்த்தார்கள். ஏனைய சோஷலிஸ்டுக் கட்சிகள் கட்டுக் கடங்காத வெறுப்புடன் போல்ஷிவிக்குகளை எதிர்த்தன. சோவியத்துகளின் தரப்பில் இருந்தவர்கள் சாதாரணத் தொழிலாளர்கள், மாலுமிகள், சோர்வடையாத படையாட்கள், நிலமில்லாத விவசாயிகள், மற்றும் ஒரு சில—மிகச் சொற்பமான ஒரு சில—அறிவுத் துறையினர்....

கேரென்ஸ்கி தோற்றுேடிய செய்தி மாபெரும் ருஷ்யாவின் தொலை முடுக்குகளுக்கு எல்லாம் சென்று உக்கிரமான தெருப் போர்களைப் பேரலையெனக் கிளர்ந்தெழச் செய்து, பாட்டாளி வர்க்க வெற்றியின் வீர கர்ஜனையாக எதிரொலித்துத் திரும்பி வந்தது. தெருக்களிலே இரத்தம் பெருக்கெடுத்து ஓடிய கஸானிலிருந்து, சராத்தவிலிருந்து, நோவ்கரதிலிருந்து, வின்னித்ஸாவிலிருந்து எதிரொலித்தது; போல்ஷிவிக்குகள் தமது பீரங்கிகளை முதலாளித்துவ வர்க்கத்தின் கடைசி வலுவரணுகிய கிரெம்ளினுக்கு எதிராகத் திருப்பிவிட்ட மாஸ்கோவிலிருந்து எதிரொலித்தது.

''கிரெம்ளினைப் பீரங்கிக் குண்டுகள் கொண்டு தாக்குகிறுர்கள்!'' பெத்ரொகிராது தெருக்களில் கதிகலக்கம் உண்டாக்கும்படியான முறையில் இந்தச் செய்தி வாய்க்கு வாய் அடிபட்டுப் பரவிற்று. ''வெண்மணியாம் எமது அன்னை மாஸ்கோ''விலிருந்து வந்தவர்கள் பயங்கரக் கதைகள் சொன்னுர்கள். ஆயிரம் ஆயிரமாய்க் கொல்லப்பட்டுவிட்டார்கள்; திவெர்ஸ்காயாவும் குஸ்னேத்ஸ்கி மோஸ்தும் தீக்கு இரையாயின; வசீலி பிளழேன்னவா மாதாகோயில் புகையும் பாழிடமாயிற்று; உஸ்பேன்ஸ்கி தேவாலயம் தகர்ந்து விட்டது; கிரெம்ளினின் ஸ்பாஸ்கி வாயில் வளைவு ஆட்டங் கண்டுவிட்டது; டூமா தகர்ந்து தரைமட்டமாயிற்று.[1*]

புனித ருஷ்யாவின் இதய பீடத்தில் நிகழ்ந்த இந்த அபாண்டக் கொடுமையுடன் ஒப்பிடுகையில், போல்ஷிவிக்குகள் செய்த மற்றெந்தச் செயலும் குறுகிச் சிறுத்துவிட்டதாகத் தோன்றியது. புனித சத்திய சமயச் சபையின் முன்னுல் வெடித்த பீரங்கிக் குண்டுகளும், ருஷ்ய தேசத்தின் கருவூலத்தைத் தகர்த்துத் தவிடு பொடியாக்கிய குண்டுகளும் பக்திமான்களது காதுகளில் ஒலித்து அதிர்ச்சி உண்டாக்கின....

கல்விக் கமிசார் லுனச்சார்ஸ்கி நவம்பர் 15ல் மக்கள் கமிசார் அவையின் கூட்டத்தில் கண்ணீர் வடித்துக் கதறினுர். ''பொறுக்க முடியவில்லை என்னுல்! எழிலும் மரபும் இப்படிப் பேய்த்தனமாய் அழிக்கப்படுவதை என்னுல் சகிக்க முடிய

---

* இந்த அத்தியாயத்தில் எண்ணிட்டுக் காட்டப்படும் சுட்டுக்குறிகள் அத்தியாயம் 10இன் அனுபந்தத்தைக் குறிப்பவை.

வில்லே!...'' என்று கூச்சலிட்டவாறு அறையிலிருந்து வெளியே ஓடினர்.

அன்று பிற்பகலில் அவருடைய ராஜிநாமாக் கடிதம் செய்தியேடுகளில் வெளிவந்தது:

மாஸ்கோவிலிருந்து இங்கு வந்து சேருவோரிடமிருந்து அங்கே நடைபெற்றுள்ளதைச் சற்று முன்புதான் தெரிந்து கொண்டேன்.

வசீலி பிளழேன்னவா தேவாலயமும் உஸ்பேன்ஸ்கி தேவாலயமும் பீரங்கிக் குண்டுகளால் தாக்கப்படுகின்றன. பெத்ரோகிராதையும் மாஸ்கோவையும் சேர்ந்த மிக முக்கிய கலைச் செல்வங்கள் தற்போது திரட்டி வைக்கப்பட்டிருக்கும் கிரெம்ளினனது பீரங்கித் தாக்குதலுக்கு உள்ளாகி வருகிறது.

ஆயிரக் கணக்கானேர் பலியாகியிருக்கிருர்கள்.

பயங்கரப் போராட்டம் அங்கே மிருகத்தனமான மூர்க்கம் கொண்டதாகியுள்ளது.

இனியும் நடைபெறப் போவது என்ன? மேற்கொண்டு என்ன ஆகும்?

என்னல் இதனைப் பொறுத்துக் கொண்டிருக்க முடியவில்லே. எனது கோப்பை நிறைந்துவிட்டது. இந்தப் பயங்கரங்களை என்னல் சகித்துக் கொள்ள முடியவில்லே.

என்னைச் சித்தம் கலங்கச் செய்வதாக இருக்கும் இந்தச் சிந்தனைகளின் சுமைக்கு உட்பட்டு வேலே செய்ய இயலவில்லே!

எனவேதான் நான் மக்கள் கமிசார் அவையிலிருந்து வெளியேறுகிறேன்.

எனது இந்த முடிவு எவ்வளவு கடுமையானது என்பதை நான் நன்கு உணருகிறேன். ஆனல் மேலும் என்னல் சகித்துக் கொண்டிருக்க முடியவில்லே[2]....

அதே நாளன்று கிரெம்ளினில் வெண்காவலர்களும் யூன்கெர்களும் சரணடைந்தார்கள். தீங்கின்றி அவர்கள் வெளியே போய்ச் சேர அனுமதிக்கப்பட்டார்கள். அந்தச் சமாதான உடன்பாடு வருமாறு:

1. சமுதாயப் பாதுகாப்புக் கமிட்டி இல்லை என்றுகிறது.

2. வெண்காவலர் அமைப்பு தனது படைக்கலன்களைச் சரண் செய்து தன்னைக் கலைத்துக் கொண்டுவிட வேண்டும். படையதிகாரிகள் அவர்களது போர்வாட்களையும் முறைப் படியான துணை ஆயுதங்களையும் வைத்துக் கொள்ளலாம். இராணுவப் பள்ளிகளில் பயிற்சிக்குத் தேவையான படைக் கலன்கள் மட்டுமே இருக்க வேண்டும், ஏனையவை யாவற் றையும் யூன்கெர்கள் சரண் செய்துவிட வேண்டும். புரட்சி இராணுவக் கமிட்டி எல்லோருடைய சுதந்திரத்துக்கும் ஆளுரிமைக் காப்புக்குக்கும் உத்தரவாதம் செய்கிறது.

3. படைக்கல விலக்கப் பிரச்சினைக்குப் பிரிவு 2ல் குறிக் கப்பட்டிருக்கும் வழியில் தீர்வு காண்பதற்காக, சமாதானப் பேச்சுவார்த்தைகளில் பங்கு கொண்ட நிறுவனங்கள் யாவற் றின் பிரதிநிதிகளும் அடங்கிய சிறப்புக் குழு ஒன்று நியமிக் கப்படுகிறது.

4. இந்தச் சமாதான உடன்பாடு கையெழுத்தாகும் தருணம் முதலாக, இரு தரப்பாரும் போர்நிறுத்தத்துக்காக வும் எல்லா இராணுவ நடவடிக்கைகளும் நிறுத்தப்படுவதற் காகவும் உடனே கட்டளையிட வேண்டும், கால தாமதமின் றிக் கீழ்ப்படிந்து இந்தக் கட்டளை நிறைவேற்றப்படுவதற் கான நடவடிக்கைகளை எடுத்துக் கொள்ள வேண்டும்.

5. இரு தரப்பாரும் தாம் கைது செய்தவர்கள் எல்லோ ரையும் இந்த ஒப்பந்தம் கையெழுத்தானதும் விடுதலை செய்ய வேண்டும்....

நகரம் போல்ஷிவிக்குகளின் கைக்கு வந்து ஏற்கெனவே இரண்டு நாட்களாகிவிட்டன. பீதியுற்ற குடிமக்கள் தமது நிலவறைகளை விட்டு மெல்ல வெளியே வந்து தம்மவரில் உயிரிழந்தவர்களைத் தேட முற்பட்டனர். தெருக்களில் இருந்த தடையரண்கள் அகற்றப்பட்டு வந்தன. ஆயினும் மாஸ்கோ அழிக்கப்படுவது பற்றிய கதைகள் குறைவதற்குப் பதிலாகத் தொடர்ந்து பெருகி வந்தன.... அச்சம் தரும் இந்தக் கதைகளைக் கேட்ட பிறகே நாங்கள் அங்கே நேரில் சென்று பார்ப்பதென முடிவு செய்தோம்.

பெத்ரொகிராது நகர் நூறு ஆண்டுகளாக அரசாங்கத் தின் தலைமையிடமாக இருந்து வந்திருப்பினும் இன்னமும்

அது செயற்கை நகரமாகவே விளங்கிற்று. மாஸ்கோதான் மெய்யான ருஷ்யாவை, உண்மையில் இருந்து வருவதும் இனி இருக்கப் போவதுமான ருஷ்யாவைக் குறிக்கும் நகரமாகும். புரட்சியைப் பற்றி ருஷ்ய மக்களது மெய்யான உள்ளப் பாங்கு என்னவென்பதை மாஸ்கோவில் நாங்கள் தெரிந்து கொள்ள முடியும். வாழ்க்கை அங்கே மேலும் மும்முரமாக நடைபோடுகின்றது.

கடந்த வாரத்தில் பெத்ரொகிராது புரட்சி இராணுவக் கமிட்டி சாதாரண ரயில்வேத் தொழிலாளர்களது துணை கொண்டு நிக்கலாயிவ்ஸ்கி ரயில் நிலையத்தைத் தன் கைக்கு வரும்படிச் செய்து, அங்கிருந்து மாலுமிகளையும் செங்காவலர்களையும் வண்டி வண்டியாக நிரப்பி தென்மேற்குத் திசையில் அனுப்பிக் கொண்டிருந்தது.... ஸ்மோல்னியில் நாங்கள் அனுமதிச் சீட்டுகள் வாங்கிக் கொண்டோம். அனுமதிச் சீட்டு இல்லாமல் யாரும் தலைநகரிலிருந்து வெளியே விடப் படவில்லை.... நிலையத்துக்குள் ரயில் வண்டி கொண்டு வந்து நிறுத்தப்பட்டதும், அழுக்கேறிய உடுப்புகள் உடுத்திய படையாட்கள் சாப்பிடுவதற்கு வேண்டியவை அடங்கிய பெரும் பெரும் மூட்டைகளைத் தூக்கிக் கொண்டு கூட்டம் கூட்டமாய் வண்டிக் கதவுகளில் அடித்து மோதிக் கொண்டு, சன்னல்களை உடைத்துக் கொண்டு உள்ளே ஏறி எல்லா அறைகளிலும் பிறகு நடைவழிகளிலும் நிரம்பிவிட்டனர்; வண்டிக் கூண்டுகளுக்கு மேலுங்கூட ஏறிக் கொண்டு விட்டார்கள். நாங்கள் மூன்று பேர் இடித்துத் தள்ளிக் கொண்டு எப்படியோ ஒரு வழியாகப் பெட்டியினுள் ஏறி ஓர் அறைக்குள் போய்ச் சேர்ந்தோம். ஆனால் சற்று நேரத்துக்கெல்லாம் சுமார் இருபது படையாட்கள் உள்ளே நுழைந்து, நெருக்கித் தள்ளினார்கள்.... அங்கே நான்கு பேருக்கே இடமிருந்தது. நாங்கள் வாதாடினோம், வற்புறுத்தினோம், கண்டக்டரும் எங்களுடன் சேர்ந்து கொண்டு வாதாடினார்—ஆனால் படையாட்கள் கேலியாகச் சிரித்துக் கொண்டார்களே ஒழிய வெளியே செல்லவில்லை. முதலாளித்துவ ஆட்கள் சிலரின் வசதிக்குக் குறைவு ஏற்பட்டால் என்னவாம்? ஸ்மோல்னியிலிருந்து நாங்கள் வாங்கி வந்திருந்த அனுமதிச் சீட்டுகளைக் காட்டினோம், உடனே அவர்களுடைய போக்கு மாறிவிட்டது.

''தோழர்களே, நகருங்கள்'' என்று கத்தினர் ஒருவர். ''இவர்கள் அமெரிக்கத் தவாரிஷ்ஷி. நம்முடைய புரட்சியைப் பார்ப்பதற்காக முப்பதாயிரம் வெர்ஸ்தாக்களுக்கு மேல் பயணம் செய்து இங்கே வந்திருக்கிறார்கள், களைத்துப் போயிருக்கிறார்கள்....''

பணிவன்பும் நேசமும் மிக்கவர்களாக மன்னிப்பு கேட்டவாறு இந்தப் படையாட்கள் வெளியே செல்லத் தொடங்கினர். சற்று நேரத்துக்குப் பிற்பாடு அவர்கள் சிறப்பான ஆடைகள் அணிந்த இரண்டு பருத்த ருஷ்யர்கள் அமர்ந்திருந்த அறையை உடைத்துக் கொண்டு உள்ளே புகுந்த சப்தம் எங்கள் காதுக்கு எட்டிற்று. அந்த இரு ருஷ்யர்களும் கண்டக்டருக்கு லஞ்சமளித்துவிட்டுக் கதவை இழுத்துப் பூட்டியிருந்தனர்....

அந்தி ஏழு மணி இருக்கும், எங்கள் ரயில் வண்டி புறப்பட்டு நிலையத்திலிருந்து மெல்ல நகர்ந்தது. விறகை எரித்துச் சென்ற பலமில்லாத சிறிய இஞ்சினால் இழுக்கப்பட்ட மிக நீளமான வண்டி முக்கித் திணறி முன்னே சென்றது. கூண்டுக்கு மேல் உட்கார்ந்திருந்த படையாட்கள் பாதங்களால் தட்டி விவசாயிப் பாட்டுகள் பாடினர். யாரும் போக முடியாமல் நெரிசலாக இருந்த நடைவழியில் இரவு முழுதும் பலத்த வாக்குவாதங்கள் நடைபெற்றன. பழக்கத்தின் காரணமாய் இந்தக் கூட்டத்துக்குள் கண்டக்டர் புகுந்து டிக்கெட்டுகளைப் பரிசோதிக்க முயன்றார். எங்களை அன்னியில் ஒரு சிலரிடமே டிக்கெட்டுகள் இருந்தன. அரை மணி நேரம் வரை வீணில் சர்ச்சை செய்தபின் ஒன்றும் செய்ய முடியாமல் கைகளை உயர்த்தி தமது அவல நிலைமையைத் தெரியப்படுத்தி விட்டுப் போய்ச் சேர்ந்தார் அவர். ஒரே புகையும் கெட்ட வீச்சமும் நிறைந்து பெட்டியினுள் மூச்சுத் திணறும் போலிருந்தது. உடைந்த போன சன்னல்கள்தான் அன்று இரவு நாங்கள் மூச்சடைத்துப் போகாதபடி எங்களைக் காப்பாற்றின.

பொழுது விடிந்து பல மணி நேரம் கழிந்தபின் வெளியே வெண்பனி மூடிய உலகினை நாங்கள் உற்று நோக்கினோம். குளிர் கடுமையாய் இருந்தது. சுமார் பன்னிரண்டு மணிக்கு ஒரு கூடை நிறைய ரொட்டித் துண்டுகளும் வெதுவெதுப்பான போலிக் காப்பி நிறைந்த ஒரு பெரிய தகரக் கலமும்

எடுத்துக் கொண்டு ஒரு விவசாயிப் பெண் எங்கள் பெட்டியினுள் ஏறிக் கொண்டார். அதிலிருந்து இருட்டும் வரை, நெரிசலான ரயில் வண்டியையும் ஆடிக் குலுங்கி அது போய்க் கொண்டிருந்ததையும் எப்போதாவது வந்த ரயில் நிலையங்களில் அது நின்றதையும் தவிர வேறு சொல்வதற்கு ஒன்றுமில்லை. கொடும் பசி கொண்ட பயணிகள் இந்த ரயில் நிலையங்கள் வந்ததும் அடித்து மோதிக் கொண்டு இறங்கிச் சென்று அற்ப சொற்ப உண்டிகள் இருந்த சிற்றுண்டிச் சாலையைத் துடைத்துக் காலி செய்துவிட்டுத் திரும்பி வந்தனர்.... இப்படி வண்டி நின்ற இடங்களில் ஒன்றில் நொகீன், ரீக்கவ் இருவர்கள் மீதும் நான் முட்டிக் கொண்டேன். இருவரும் கமிசார் அவையிலிருந்து பிரிந்து வந்த கமிசார்கள், தமது முறையீடுகளை தமது சொந்த சோவியத்திடம் சமர்ப்பிப்பதற்காக* மாஸ்கோவுக்குத் திரும்பிச் சென்று கொண்டிருந்தார்கள். பிறகு இன்னொரு இடத்தில் புகாரினைச் சந்தித்தேன். சென்னிறத் தாடியுடைய குட்டையான ஆள், வெறித்தனம் கொண்டவருக்குரிய கண்களுடன் கூடியவர்—''லெனினைக் காட்டிலும் இடதுசாரியானவர்'' என்பதாக அவரைப் பற்றிச் சொன்னார்கள்....

மணி மூன்று தரம் ஒலித்தது, கூட்டமும் இரைச்சலுமாய் இருந்த கூடத்தினுள் புகுந்து ரயில் வண்டியை நோக்கி விரைந்தோம்.... நல்ல உள்ளம் கொண்டவர்கள், சிரமங்களைப் பொறுமையுடன் சிரித்துச் சகித்துக் கொண்டார்கள், பெத்ரொகிராதின் நிலைமை முதல் பிரிட்டிஷ் தொழிற் சங்க அமைப்பு ஈறாக யாவும் குறித்து முடிவின்று விவாதித்தார்கள், ரயிலில் வந்த ஒருசில முதலாளித்துவ வர்க்கத்தாருடன் பலத்த குரலில் சர்ச்சை புரிந்தார்கள். நாங்கள் மாஸ்கோ வந்து சேர்வதற்குள் அனேகமாய் ஒவ்வொரு பெட்டியிலும் உணவு தருவிப்பதற்கும் வினியோகிப்பதற்குமான ஒரு கமிட்டி அமைக்கப்பட்டுவிட்டது. அடிப்படை கோட்பாடுகள் குறித்து வாதம் புரிந்து மோதிக் கொண்ட அரசியல் கட்சிக் குழுக்களாய் இந்தக் கமிட்டிகள் பிளவுற்றுவிட்டன....

மாஸ்கோ ரயில் நிலையம் காலியாக இருந்தது. நாங்கள் திரும்பிச் செல்வதற்கு டிக்கெட்டுகளுக்கு ஏற்பாடு செய்

* அத்தியாயம் 11ஐப் பார்க்கவும்.

வதற்காக கமிசாரின் அலுவலகத்துக்குப் போனோம். லெப்டினண்டின் தோள் பட்டிகள் அணிந்த சிடுசிடுப்பான இளைஞர் அவர். ஸ்மோல்னியிலிருந்து நாங்கள் கொண்டுவந்திருந்த அடையாளச் சீட்டுகளை அவரிடம் காட்டியதும் அவருக்குக் கோபம் வந்துவிட்டது. தாம் ஒன்றும் போல்ஷிவிக்கு அல்ல, சமுதாயப் பாதுகாப்புக் கமிட்டியைச் சேர்ந்தவர் என்பதாக அறிவித்தார்.... இயல்பான ஒரு நிலைமைதான் இது—நகரம் வெற்றி கொள்ளப்பட்டதைத் தொடர்ந்து ஏற்பட்ட அமளியில் பிரதான ரயில் நிலையத்தை வெற்றியாளர்கள் மறந்து விட்டனர்....

வாடகை வண்டி ஒன்றுகூட காணப்படவில்லை. தெருவில் சிறிது தூரம் சென்றபின் ஒரு சிறு சறுக்கு வண்டியின் பெட்டியில் பஞ்சடைத்து விநோதமாயிருந்த கோட்டு அணிந்து நேரே அமர்ந்தபடி தூங்கிக் கொண்டிருந்த வண்டிக்காரரை எழுப்பினோம். ''நகரின் மையப் பகுதிக்குப் போக வேண்டும், எவ்வளவு?''

அவர் தலையைச் சொறிந்து கொண்டார். ''எந்த ஓட்டலிலும் எசமானுக்கு அறை கிடைக்காது.... நூறு ரூபிள் தந்தால் அழைத்துச் செல்கிறேன்'' என்றார். புரட்சிக்கு முன்பு இரண்டு ரூபிள்தான் இருந்திருக்கும். நாங்கள் ஆட்சேபித்தோம், ஆனால் தோளை உலுக்கிக் கொண்டார். ''இந்நாட்களில் சறுக்கு வண்டி ஓட்டிச் செல்வதற்கு மிகுந்த துணிச்சல் வேண்டியிருக்கிறதே, என்ன செய்வது'' என்றார். ஐம்பது ரூபிளுக்குக் கீழ் குறைந்து வர மறுத்துவிட்டார்.... வெண்பனி மூடிய நிசப்தமான தெருக்களின் அரைகுறை வெளிச்சத்தில் ஓடிற்று வண்டி. அப்போது அவர் போர் நடைபெற்ற ஆறு நாட்களின் போது தமக்கு ஏற்பட்ட அனுபவங்களை எடுத்துரைத்துச் சென்றார். ''சாலையிலே வண்டியை ஓட்டிச் செல்லுகையிலோ, மூலையிலே காத்து நிற்கையிலோ திடீரென **டமார்!** இங்கு ஒரு பீரங்கிக் குண்டு, **டமார்!** அங்கே ஒரு பீரங்கிக் குண்டு. **டப்-டப்-டப்!** இயந்திரத் துப்பாக்கி.... நான் வண்டியை விரட்டிச் செல்லுவேன், சுற்றிலுமிருந்து சைத்தான்கள் சுடும். அமைதியான ஒரு நல்ல தெரு, அங்கே வண்டியைக் கொண்டு போய் நிறுத்திவிட்டுச் சற்று கண்ணயருவேன். அவ்வளவுதான் **டமார்!** இன்னொரு பீரங்கிக் குண்டு,

டப்-டப்-டப்!... சைத்தான்கள்! ஆமாம், சைத்தான்களே தான்!...''

நகரின் மையப் பகுதியில் வெண்பனி குவிந்திருந்த வீதிகளில் நோய் நீங்கி நலமுறும் காலத்துக்குரிய அமைதி நிலவிற்று. மின் வில் விளக்குகள் ஒரு சிலவே எரிந்தன, நடைபாதைகளில் ஒரு சிலரே விரைந்து சென்று கொண்டிருந்தார்கள். பெரு வெளியிலிருந்து வீசிய கடுங் குளிர்க் காற்று ஊனை உறையச் செய்வதாயிருந்தது. நாங்கள் எதிர்ப்பட்ட முதலாவது ஓட்டலில் இரண்டு மெழுகு வத்திகள் எரிந்து வெளிச்சம் அளித்த அலுவலறையினுள் நுழைந்தோம்.

''ஆம், வசதியான அறைகள் சில எங்களிடம் இருப்பது மெய்தான், ஆனால் சன்னல் கதவுகள் யாவும் குண்டுகளின் அதிர்வால் நொறுங்கிவிட்டன. தூய்மையான காற்று கொஞ்சம் வீசும், கஸ்பதீனுக்கு (கனவானுக்கு) ஆட்சேபமில்லை எனில்....''

திவெர்ஸ்காயாவில் கடைகளின் சன்னல்கள் உடைந்திருந்தன. தெருவில் பீரங்கிக் குண்டுக் குழிகள் இருந்தன, சரளைக் கற்கள் பெயர்த்தெறியப் பட்டிருந்தன. ஓட்டல் ஓட்டலாகப் போய்ப் பார்த்தோம், யாவும் ஏற்கெனவே நிறைந்திருந்தன, அல்லது ''இல்லை, இல்லை, இங்கு அறை இல்லை!'' என்பதற்கு மேல் அதிகம் பேச முடியாதபடி அவற்றின் முதலாளிகள் கதி கலங்கிப் போயிருந்தார்கள். பெரிய வங்கிகளும் வாணிப நிலையங்களும் இருந்த பிரதான வீதிகளில் போல்ஷிவிக்குப் பீரங்கிகள் கண்ணை மூடிக் கொண்டு செயல் பட்டிருந்தன. சோவியத்து ஊழியர் ஒருவர் என்னிடம் கூறிய சொற்களில் சொல்வதெனில், ''யூன்கெர்களும் வெண்காவலர்களும் எங்கே இருக்கிறார்கள் என்பது புலப்படாமற் போன போது, நாங்கள் அவர்களது பணப் பைகளைப் பார்த்துக் குண்டுகளைச் சுட்டோம்....''

முடிவில் எங்களுக்குப் பெரிய ஓட்டலான நாஷனல் ஓட்டலில் இடம் கிடைத்தது; ஏனெனில் நாங்கள் வெளிநாட்டவர்கள், வெளிநாட்டவர்களது இடங்கள் பாதுகாக்கப்படுமென புரட்சி இராணுவக் கமிட்டி வாக்களித்திருந்தது.... உச்சி மாடியில் குண்டுச் சிதறல்கள் பட்டு சில சன்னல்கள் நொறுக்கப்பட்டிருந்த இடத்தை ஓட்டல் நிர்வாகி எங்களி

டம் காட்டினார். ''மிருகங்கள்!'' என்று அவர் தமக்கு எதிரே இருந்ததாகக் கற்பனை செய்து கொண்ட போல்ஷிவிக்குகளைப் பார்த்து முட்டியை உயர்த்தி ஆட்டிவாறு கூறினார். ''இருங்கள், இருங்கள்! இன்னும் எத்தனை நாளைக்கு ஆடுகிறீர்கள், பார்ப்போம்! கேலிக்குரியதான உங்களது அரசாங்கம் ஒரு சில நாட்களில் தகர்ந்து விழுந்துவிடும், அதன் பிறகு நாங்கள் உங்களுக்குச் சரியானபடி பாடம் கற்பிப்போம்!''

''நான் யாரையும் சாப்பிடுவதில்லை'' என்று ஆசை காட்டி அழைக்கும் பெயருடைத்த மரக் கறி உண்டிச் சாலையில் நாங்கள் உணவருந்தினோம். தல்ஸ்தோயின் உருவப் படங்கள் எடுப்பாய்ச் சுவர்களில் காட்சியளித்தன. சாப்பாடு முடிந்ததும் தெருக்களில் சென்று சுற்றிப் பார்த்தோம்.

மாஸ்கோ சோவியத்தின் தலைமையகம் முன்னாள் கவர்னர்-ஜெனரலின் மாளிகையில் இருந்தது, ஸ்கோபெலெவ் சதுக்கத்தைப் பார்க்க முன்னமைந்த அந்தக் கட்டடம் கண்ணைக் கவரும்படியானது. செங்காவலர்கள் அதன் வாயிலில் காவல் புரிந்து நின்றனர். அகலமான அதன் முகப்புப் படிக்கட்டின் சுவர்களில் கமிட்டிக் கூட்ட அறிவிப்புகளும் அரசியல் கட்சிகளது முகவரிகளும் ஒட்டப்பட்டிருந்தன. படிக்கட்டின் உச்சிக்கு ஏறி வரிசையாகப் பல இடைக் கூட அறைகளைக் கடந்து சென்றோம். சிவப்புத் திரையிட்டு மூடப்பட்ட சித்திரங்கள் பொன்னிறச் சட்டமிடப்பட்டு இந்த அறைகளில் மாட்டப்பட்டிருந்தன. இவற்றைத் தாண்டிக் கொண்டு நாங்கள், எழிலார்ந்த சர விளக்குகளையும் பொன்னிறச் சுவர் அலங்கார வேலைப்பாடுகளையும் கொண்ட நேர்த்தியான கொலு மண்டபத்துக்குப் போய்ச் சேர்ந்தோம். தணிந்த குரலில் பலரும் பேசியதன் இரைச்சலுடன் பதினைந்து, இருபது தையல் இயந்திரங்களின் கடகடப்பும் சேர்ந்து காதை அடைத்தது, சிவப்பிலும் கறுப்பிலுமான பெரிய துணிச் சுருள்கள் பிரித்து விடப்பட்டு, மரக் கட்டைத் தளமிடப்பட்ட தரையிலும் மேசைகள் மீதும் பாம்பு போல் வளைந்து நெளிந்து சென்றன. இந்த மேசைகளைச் சுற்றி சுமார் ஐம்பது பெண்கள் அமர்ந்து கொண்டு, புரட்சியின் வீரத் தியாகிகளது சவ அடக்க ஊர்வலத்துக்கு வேண்டிய பதாகை

களையும் கொடிகளையும் கத்தரித்துக் கொண்டும் தைத்துக் கொண்டும் இருந்தார்கள். இந்தப் பெண்களின் முகங்கள் மிகக் கடுமையான வாழ்க்கையின் தழும்பேறி மெருகிழந் திருந்தன. இப்போது அவர்கள் ஆத்திரமாய் வேலை செய்து கொண்டிருந்தார்கள், அழுது அழுது பலரின் கண்கள் சிவந் திருந்தன.... செஞ்சேனைக்கு மிகக் கடுஞ் சேதங்கள் ஏற்பட் டிருந்தன.

ஒரு மூலையில் எழுதுமேசையின் பின்னால் ரோகவ் அமர்ந் திருந்தார்—தாடி வைத்துக் கொண்டு மூக்குக் கண்ணாடி போட்டிருந்தார், அவர் முகத்தில் அறிவின் ஒளி பளிச்சிட் டது. தொழிலாளியின் கறுப்பு ஆடை அணிந்திருந்தார். மறு நாள் காலையில் நடைபெற இருந்த சவ அடக்க ஊர்வலத்தில் சோவியத்தின் மத்தியச் செயற் கமிட்டியினருடன் சேர்ந்து கலந்து கொள்ளுமாறு எங்களை அவர் அழைத்தார்....

''என்னதான் ஆயினும் இந்த மென்ஷிவிக்குகளும் சோஷ லிஸ்டுப் புரட்சியாளர்களும் எதையும் கற்றுக் கொள்ள மாட்டார்கள் போலிருக்கிறது!'' என்று அவர் வியந்து கூறி னார். ''சமரசம் செய்து கொள்வதே அவர்களது தொழிலாகி விட்டது. பாருங்களேன்! **யூன்கெர்**களுடன் சேர்ந்து கூட்டாக நாம் சவ அடக்க ஊர்வலம் நடத்தலாமென்று முன்மொழிந் தார்கள்!''

படையாளின் பழைய கோட்டும் தொப்பியும் அணிந்த வர் ஒருவர் அம்மண்டபத்தின் குறுக்கே நடந்து வந்தார். நான் நன்கு அறிந்த முகமாகத் தெரிகிறதே என்று நினைத் தேன். பிறகுதான் அவர் பயோனில் (நியூ ஜெர்சி மாநிலம்) 'ஸ்டான்டர்டு ஆயில்' கம்பெனி வேலைநிறுத்தத்தின் போது நான் அறிந்திருந்த ஜார்ஜ் மெல்ச்சர் என்ற கடிகாரத் தயா ரிப்பாளர் என்று அடையாளம் தெரிந்தது. இப்போது அவர் மெல்னிச்சான்ஸ்கி என்றழைக்கப்பட்டார். மாஸ்கோ உலோகத் தொழிலாளர் சங்கத்தின் செயலாளராக இருப் பதாகவும், இங்கே போராட்டத்தின் போது புரட்சி இராணு வக் கமிட்டியின் ஒரு கமிசாராகச் செயல் புரிவதாகவும் கூறி னார்....

''எனது நிலைமையைப் பாருங்கள்!'' என்று கூவி, தமது கந்தல் உடுப்புகளைக் காட்டினார். ''கிரெம்ளினில், **யூன்கெர்**

கள் அங்கே முதல் தரம் வந்த போது நான் எமது ஆட்களு டன் இருந்தேன். என்னை அவர்கள் நிலவறையில் அடைத்துப் பூட்டினார்கள், எனது மேல்கோட்டு, என்னிடமிருந்த பணம், கைக்கடிகாரம், நான் போட்டிருந்த மோதிரத்தையும் கூட விட்டு வைக்காமல் யாவற்றையும் கிளப்பிக் கொண்டு விட் டார்கள். என்னிடம் எஞ்சியிருப்பது இந்த உடுப்புதான்!''

மாஸ்கோவை இரண்டாய்ப் பிளந்து இரத்தத்தைப் பெருகியோடச் செய்த அந்த ஆறு நாளையப் போரைப் பற்றிய பல விவரங்களும் அவரிடமிருந்து நான் தெரிந்து கொண் டேன். பெத்ரொகிராதைப் போலல்லாது மாஸ்கோவில் நகர டூமா யூன்கெர்களுக்கும் வெண்காவலர்களுக்கும் தலைமை தாங்கிற்று. மேயரான ரூத்னெவும் டூமா தலைவரான மினோ ரும் சமுதாயப் பாதுகாப்புக் கமிட்டியின் செயல்களுக்கும் படைகளுக்கும் தலைமை வகித்தனர். நகரின் தளபதியான ரியாப்த்செவ் ஜனநாயக உணர்வுடையவர், புரட்சி இராணு வக் கமிட்டியை எதிர்க்க அவர் தயங்கினார். ஆனால் டூமா அவ ரை வலுக் கட்டாயம் செய்தது.... கிரெம்ளினைப் பிடித்துக் கொள்ளும்படி மேயர்தான் வற்புறுத்தினார்; ''அங்கே உங்கள் மீது சுட அவர்கள் துணிய மாட்டார்கள்'' என்று கூறினார் அவர்....

நகரக் காவற் படையைச் சேர்ந்த ரெஜிமெண்டு ஒன்று நெடு நாளாய்ச் செயலின்றி சும்மாயிருந்ததன் விளைவாய் வெகுவாய் ஊக்கமிழந்திருந்தது. இரு தாப்பினரும் அதை அணுகினர். என்ன செய்வதென்று தீர்மானிப்பதற்காக அது கூட்டம் நடத்திற்று. ரெஜிமெண்டு நடுநிலை வகிப்பதென் றும், தற்போது தான் செய்து வந்த காரியங்களையே தொ டர்ந்து செய்வதென்றும் அது தீர்மானித்தது—சிகரெட்டுக் கொளுவிகளும் சூரியகாந்தி விதைகளும் விற்பதுதான் தற் போது அது செய்து வந்த காரியங்கள்!

''இவற்றை எல்லாம்விட கடினமாக இருந்தது எதுவெ னில் நாங்கள் போர் புரிந்து கொண்டு அதே போது ஒழுங்க மைப்பு செய்து கொள்ள வேண்டியிருந்ததுதான்'' என்றார் மெல்னிச்சான்ஸ்கி. ''எதிர்த் தரப்புக்குத் தனக்கு வேண்டி யது என்னவென்று தெரிந்திருந்தது; ஆனால் இங்கே படை யாட்கள் அவர்களது சோவியத்தையும் தொழிலாளர்கள்

அவர்களுடையதையும் பெற்றிருந்தார்கள்.... யார் படைத் தலைவராக இருப்பதென்று பயங்கரமான சர்ச்சை நடை பெற்று வந்தது. சில ரெஜிமெண்டுகள் என்ன செய்வ தென்று முடிவு செய்வதற்கே பல நாட்களுக்கு ஓயாமல் விவாதம் புரிந்து கொண்டிருந்தன. படையதிகாரிகள் திடு மென எங்களைத் துறந்துவிட்டு ஓடியதும், கட்டளை அளிக்க போர்த் தலைமையாட்கள் இல்லாமல் விடப்பட்டோம்....''

உயிருள்ள சிறு சித்திரங்கள் பலவும் எனக்கு அவர் தீட்டிக் காட்டினார். குளிராய், மங்கலாய் இருந்த ஒரு பகற் பொழு தில் அவர் நிக்கீத்ஸ்காயா சாலையில் ஒரு மூலையில் நின்றிருந் தார், அங்கே இயந்திரத் துப்பாக்கி படபடத்துச் சுட்டுக் கொண்டிருந்தது. கூட்டமாய்ச் சிறு பையன்கள் அங்கே கூடி யிருந்தார்கள்—முன்பு செய்தியேடு விற்பவர்களாய் இருந்த தெருப் பையன்கள். புதிய விளையாட்டு ஒன்று விளையாட வாய்ப்பு கிடைத்தாற் போல் பரபரத்துக் கூச்சலிட்டுக் கொண்டு நின்ற அவர்கள் குண்டுமாரி கொஞ்சம் தணியும் வரை காத்திருந்துவிட்டு, பிறகு சாலையின் குறுக்கே ஓட முயன்றார்கள்.... பலர் கொல்லப்பட்டனர், ஆனல் ஏனை யோர் ஒருவருக்கொருவர் சவால் விட்டுச் சிரித்தவாறு முன்னும் பின்னுமாகப் பாய்ந்தோடினார்கள்....

அந்தியின் பிற்பகுதியில் நான் **திவரியான்ஸ்கயெ சப்ரா னியேவுக்கு** — பிரபுக்களது மன்றத்துக்கு — சென்றேன்; மக்கள் கமிசார் அவையிலிருந்து விலகிக் கொண்ட நொகீ னும் ரீக்கவும் பிறரும் அளிக்கும் உரையைக் கேட்டு விவா திப்பதற்காக மாஸ்கோவின் போல்ஷிவிக்குகள் அங்கே கூடி னார்கள்.

கூட்டம் நடைபெற்ற இடம் ஒரு நாடக மன்றம். பழைய ஆட்சியில் இங்கே படையதிகாரிகளும் மினுமினுக் கும் சீமாட்டிகளும் கூடியிருக்க, அமெச்சூர் கலைஞர்கள் மிக நவீன பிரெஞ்சு இன்சுவை நாடகங்கள் நடித்துக் காட்டுவது வழக்கம்.

ஆரம்பத்தில் அறிவுத்துறையினர் வந்து கூட்ட மன்றத் துள் நிரம்பினர்—நகரின் மையப் பகுதியில் வசித்தவர்கள் இவர்கள். நொகீன் பேசினார், அவர் பேச்சைக் கேட்டவர் களில் பெரும்பாலோரும் அவரை ஆதரித்தார்கள் என்பது

தெரிந்தது. தொழிலாளர்கள் வந்து சேர்வதற்குள் நெடுநேர மாகிவிட்டது — தொழிலாளர்களது வசிப்பிடங்கள் நகரின் சுற்று வட்டாரங்களில் இருந்தன, டிராம் வண்டிகள் ஓட வில்லை. நள்ளிரவு நெருங்கிய நேரத்தில் பத்துப் பேரும் இருபது பேருமான தொகுதிகளில் படிகளில் ஏறி மேலே வரத் தொடங்கினுர்கள்—முரட்டு ஆடைகள் உடுத்திய வாட்ட சாட்டமான, வலுமிக்க ஆட்கள், போரணியிலே நின்று வைராக்கியத்துடன் ஒரு வாரம் வரை போராடியவர்கள், தம்மைச் சுற்றிலும் தம் தோழர்கள் மடிந்து விழுவதைக் கண்டு ஆவேசமாகப் போர் புரிந்தபின் இப்போது கூட்டத் துக்கு வந்தவர்கள்.

அதிகார பூர்வமான முறையில் கூட்டம் துவக்கி வைக் கப்பட்டபின் சற்று நேரத்துக்கு எல்லாம் நொகீனை எதிர்த்து மன்றம் முழுவதிலிருந்தும் கேலிக் குரல்களும் கோபக் கூச் சல்களும் புயலென மூண்டெழுந்தன. அவர் வாதாடவும், விளக்கிக் கூறவும் முயன்று பார்த்தார்; ஆனுல் பயனில்லை, யாரும் அவர் பேச்சைக் கேட்கத் தயாராயில்லை. அவர் மக்கள் கமிசார் அவையைத் துறந்துவிட்டு ஓடி வந்தவர்; கடும் போர் நடைபெற்ற ஒரு நேரத்தில் தமது பணியிடத்தை விட்டு விலகியவர். முதலாளித்துவ ஏடுகள் எவையும் இல்லை இங்கே மாஸ்கோவில்; நகர டூமாவுங்கூட கலைக்கப்பட்டுவிட் டது.[3,4] புகாரின் எழுந்து நின்ருர்; மூர்க்கமாக, தர்க்கவாத வலிமையுடன் பேசினுர்; மீண்டும் மீண்டும் குத்திக் குடைந்த கடுமையான குரலில் பேசினுர்.... கண்கள் கனன்று ஒளிர அவர்கள் அவர் பேச்சைக் கேட்டுக் கொண்டு அமர்ந்திருந் தார்கள். மிகப் பெரும்பான்மை வாக்குகளின் பேரில் தீர் மானம் நிறைவேற்றப்பட்டது, மக்கள் கமிசார் அவையின் செயலுக்கு ஆதரவு தெரிவித்து. இதுதான் மாஸ்கோவின் குரல்....

இரவு நெடு நேரம் கழித்து நாங்கள் காலியான சாலை களில் நடந்தோம், இவேர்ஸ்கி வளைவுக்குள் நுழைந்து கிரெம்ளினுக்கு முன்னுல் மாபெரும் செஞ்சதுக்கத்துக்கு வந்து சேர்ந்தோம். வசீலி பிளழேன்னவா தேவாலயத்தின் நெடிது யர்ந்த விசித்திர உருவம் தெரிந்தது, பளிச்சிடும் வண்ணங் களில் முறுக்கிவிடப்பட்ட அலைவரிகளுடன் கூடிய புகழ்

மண்டிய குவி மாடங்கள் இருட்டிலே மங்கலான உருவரை காட்டி நின்றன. அவற்றுக்கு எந்தச் சேதமும் ஏற்பட்டுவிட வில்லை.... சதுக்கத்தின் ஒரு பக்கத்தில் கிரெம்ளினின் கரிய கோபுரங்களும் சுவர்களும் தெரிந்தன. மறைந்திருந்த கனப் புத் தீக்கொழுந்துகளின் செவ்வொளி அந்த உயரமான சுவர் களில் படபடத்து ஆடிற்று. சுவரின் ஓரத்திலிருந்து பேச்சுக் குரல்களும் மண்வெட்டிகள், குத்துகோடரிகளின் ஓசையும் அந்தப் பெரும் பரப்பைக் கடந்து வந்து எங்கள் காதில் விழுந்தன. நாங்கள் அவற்றை நோக்கிச் சதுக்கத்தின் குறுக் கே நடந்தோம்.

சுவரடிக்கு அருகே மலை மலையாய் மண்ணும் கற்களும் குவிந்திருந்தன. இவற்றின் மீது ஏறி கீழே இரு பெரும் குழி களுக்குள் பார்த்தோம். பத்து, பதினைந்து அடி ஆழமும் ஐம்பது கஜம் நீளமுள்ள இந்தக் குழிகளுக்குள் பெரிய சொக் கப்பனைகளை எரிய விட்டு அவற்றின் வெளிச்சத்தில் நூற்றுக் கணக்கான படையாட்களும் தொழிலாளர்களும் நின்று தோண்டிக் கொண்டிருந்தார்கள்.

இளம் மாணவர் ஒருவர் ஜெர்மன் மொழியில் எங்க ளுடன் பேசினார். ''சோதரத்துவச் சமாதி இது'' என்று அவர் விளக்கிக் கூறினார். ''புரட்சிக்காக உயிரைத் தியாகம் புரிந்த ஐந்நூறு பாட்டாளிகளை நாளைக்கு இங்கே அடக்கம் செய்யப் போகிறோம்'' என்றார்.

எங்களைக் குழிக்குள் அழைத்துச் சென்றார் அவர். குத்து கோடரிகளும் மண்வெட்டிகளும் வேகம் வேகமாய் வேலை செய்தன, மண் மலைகள் உயர்ந்து சென்றன. யாரும் பேச வில்லை. தலைக்கு மேலே இரவு வானத்தில் விண்மீன்கள் அடர்ந்திருந்தன, பழம் பெரும் கிரெம்ளின் சுவர் வானைத் தொடும்படி உயர்ந்து சென்றது.

''புனிதமான இடம் இது. அனைத்து ருஷ்யாவிலும் மிகப் புனிதமான இவ்விடத்தில் எமது மிகப் பெரும் புனிதர்களை அடக்கம் செய்யப் போகிறோம்'' என்றார் அம்மாணவர். ''ஜார்களுடைய சமாதிகள் இருக்கும் இவ்விடத்தில் எங் களது ஜாராகிய மக்கள் இங்கே துஞ்சப் போகிறார்கள்....'' அம்மாணவரின் கை கவணக் கட்டுக்குள் இருந்தது, போரில் குண்டடி பட்டிருந்தது. அவர் அதைப் பார்த்துக் கொண்

டார். ''மத்திய காலத்திய முடியாட்சியினை நாங்கள் சகித்துக் கொண்டிருந்தோமென்று வெளிநாட்டவர்களாகிய நீங்கள் எங்களை இளக்காரமாய்ப் பார்க்கிறீர்கள்'' என்ருர். ''ஆனுல் உலகிலுள்ள கொடுங்கோலன் ஜார் மட்டுமல்ல, முதலாளித்துவம் இன்னுங்கூட மோசமானது, உலகின் எல்லா நாடுகளிலும் முதலாளித்துவமே பேரரசன் என்பதை நாங் கள் கண்டு கொண்டு செயல்பட்டோம்.... ருஷ்யப் புரட்சி யின் போர்த்தந்திரம் மிகச் சிறந்தது....''

நாங்கள் அவ்விடத்தை விட்டு நகர்கையில், குழியிலிருந்த தொழிலாளர்கள் அந்தக் குளிரிலும் வியர்த்து வழிய ஓய்ந்து போய் மேலே ஏறத் தொடங்கினர். செஞ்சதுக்கத்தின் குறுக்கே கரிய வரிசையில் ஆட்கள் வேகமாக நடந்து வந்தார்கள். அவர்கள் மளமளவென்று குழிக்குள் இறங்கி மண்வெட்டிகளையும் குத்துகோடாரிகளையும் எடுத்துக் கொண்டு வாய்பேசாமல் தோண்ட ஆரம்பித்தார்கள்....

இவ்விதம் அன்று இரவு முழுதும் மக்களின் தொண்டர் கள் ஒருவரையொருவர் விடுவித்துக் கொண்டு ஓயாமல் முழு வேகத்தில் வேலை செய்தார்கள்; உதயத்தின் குளிர் ஒளி வெண்பனி மூடிய அந்தப் பெரும் சதுக்கத்தின் முழுப் பரப் பையும் தெரியச் செய்தது. சோதரத்துவச் சமாதியின் பழுப்பு நிறக் குழிகள் தோண்டி முடிக்கப்பட்டுவிட்டன.

விடியும் முன்பே நாங்கள் விழித்தெழுந்து இருண்ட சாலைகளின் வழியே ஸ்கோபெலெவ் சதுக்கத்துக்கு விரைந் தோம். மாபெரும் நகரில் யாரும் கண்ணில் படவில்லை, கடுங் காற்று மூண்டெழப் போவது போல தொலைவிலும் அருகா மையிலும் ஒருவித சலசலப்பு கேட்டது. மங்கலான வெளிச் சத்தில் சோவியத்தின் தலைமையகத்துக்கு எதிரே ஆடவரும் பெண்டிருமான ஒரு சிறு திரள் பொன்னிற எழுத்துகள் பொறிக்கப்பட்ட செம்பதாகைகளை வைத்துக் கொண்டு நின்றது தெரிந்தது—மாஸ்கோ சோவியத்துகளின் மத்தியச் செயற் கமிட்டியின் பதாகைகள் அவை. வெளிச்சம் அதிகமா யிற்று. தொலைவிலே சலசலப்பு சப்தம் ஆழமாகி, இடையருத பேரிரைச்சலாகப் பெருகிற்று. நகரம் கிளர்ந்தெழுந்து கொண்டிருந்தது. தலைக்கு மேலே பதாகைகள் படபடக்க நாங்கள் புறப்பட்டு திவெர்ஸ்காயா சாலை வழியே சென்ருேம்.

நாங்கள் சென்ற வழியில் தெருக்களிலிருந்த சிறிய திருக்கோயில்கள் யாவும் இழுத்து மூடப்பட்டு இருட்டாய் இருந்தன. இவேர்ஸ்கி தேவ அன்னையின் கோயிலுங்கூட மூடப்பட்டிருந்தது. ஒவ்வொரு புதிய ஜாரும் கிரெம்ளினுக்குச் சென்று முடி சூட்டிக் கொள்ளும் முன்பு இந்தக் கோயிலுக்கு வந்து செல்வது வழக்கம். இரவும் பகலுமாய் எந்நேரமும் இது திறந்தே இருக்கும்; எப்போதும் கூட்டமாகவே இருக்கும்; பக்தர்கள் ஏற்றி வைக்கும் மெழுகுத் திரிகளின் ஒளி தேவ உருவங்களின் தங்கத்திலும் வெள்ளியிலும் மணிக் கற்களிலும் பளிச்சிட்டுத் தகதகத்துக் கொண்டிருக்கும். நெப்போலியன் முன்பு மாஸ்கோ வந்த போது அணைக்கப்பட்டதற்குப் பிற்பாடு, இப்போதுதான் இந்த மெழுகுத் திரிகள் முதன் முதலாக அணைக்கப்பட்டிருந்தாய்க் கூறினார்கள்.

புனித சத்திய சமயச் சபை தனது கடாட்சத்தின் ஒளி மாஸ்கோவுக்குக் கிட்டாதபடிச் செய்தது, பீரங்கிக் குண்டுகள் கொண்டு கிரெம்ளினைத் தாக்கியவர்களின், பக்தி நெறி அறியாத இந்த விரியன் பாம்புகளின் உறைவிடமாகிவிட்ட இந்த மாஸ்கோவுக்குக் கிட்டாதபடிச் செய்தது. திருக்கோயில்கள் இருண்டு, நிசப்தமும் குளிரும் குடி கொண்டனவாகி விட்டன; பாதிரிமார்கள் மறைந்து விட்டார்கள். செஞ்சவ அடக்கத்தின் போது சமயச் சபைப் பெரியவர்கள் பிரார்த்தனை நடத்தவில்லை; நீத்தாருக்குச் சமயச் சடங்கு ஏதும் இல்லை; தேவநிந்தனையாளர்களது சமாதியின் முன்னால் பிரார்த்தனைகள் வேண்டியதில்லை. மாஸ்கோவின் தலைமை மேற்றிராணியார் தீஹன் விரைவில் சோவியத்துகளைச் சமய விலக்கம் செய்யவிருந்தார்....

கடைகளும் மூடப்பட்டுதான் இருந்தன, சொத்துடைத்த வர்க்கத்தார் வீட்டிலே இருந்தார்கள்—ஆனால் இதற்குக் காரணம் வேறொன்று. மக்களது தினமாகும் இது, மக்கள் எல்லாரும் தெருக்களிலே பிரவாகமெடுக்கப் போகிறார்கள் என்னும் செய்தி கடல் அலையென எழுந்து இடி முழக்கமிட்டது....

இவேர்ஸ்கி வளைவு வழியே மக்கள் வெள்ளம் ஏற்கெனவே கரைபுரண்டு ஓட ஆரம்பித்துவிட்டது. ஆயிரம் ஆயிரமாய் மக்கள் திரள் செஞ்சதுக்கத்தின் பெரும் பரப்

பெங்கும் குழுமி வந்தது. முன்பெல்லாம் இவேர்ஸ்கித் திருக் கோயிலின் எதிரே செல்லும் போது எல்லாரும் சிலுவைக் குறி யிட்டுக் கொள்வது வழக்கம். ஆனால் இப்போது கூட்டத்தினர் அதைக் கடந்து சென்ற போது அதைக் கவனித்ததாகவே தெரியவில்லை....

கிரெம்ளின் சுவர் அருகே நெருக்கமாய் நின்றிருந்த கூட் டத்துக்குள் புகுந்து நாங்கள் இடித்துத் தள்ளிக் கொண்டு முன்னே சென்று மண் மலைகளில் ஒன்றின் மீது ஏறி நின்றோம். ஏற்கெனவே அங்கே பலரும் இருந்தார்கள், அவர்களி டையே முரானவும் ஒருவர்—மாஸ்கோவின் தளபதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்த படையாள் அவர், தாடியுடைய இதமான முகமும் நெட்டையான எளிய தோற்றமும் கொண்டவர்.

செஞ்சதுக்கத்துக்கு வந்து சேரும் எல்லாத் தெருக்களி லும் மக்கள் பெருக்கெடுத்து வந்து கொண்டிருந்தார்கள். ஆயிரம் ஆயிரமானோர், பஞ்சையருக்கும் உழைப்பாளருக்கு முரிய தோற்றமுடையோர் திரண்டெழுந்து வந்து கொண் டிருந்தார்கள். இராணுவ வாத்தியக் குழு சர்வதேசிய கீதம் இசைத்து நடைபோட்டு நெருங்கி வந்து கொண்டிருந்தது. தன்முனைப்பான முறையில் ஏனையோரும் சேர்ந்து கொண்டு இசைக்க அந்தக் கீதம் மக்கள் வெள்ளத்தின் மீது மெதுவாக வும் இதமான உருக்கத்தோடும் காற்றலைகள் போல் பரவிச் சென்றது. கிரெம்ளின் சுவரின் உச்சியிலிருந்து பிரம்மாண்ட மான பதாகைகள் கீழே தரைக்கு விரித்து விடப்பட்டன. அந்தச் செம்பதாகைகளில் பொன்னிலும் வெள்ளையிலுமான எழுத்துகள் பொறிக்கப் பட்டிருந்தன: ''உலக சோஷலிசப் புரட்சியின் முன்னணிப் படையைச் சேர்ந்த வீரத் தியாகி கள்'', ''உலகத் தொழிலாளர்களது சோதரத்துவம் நீடூழி வாழ்க!''

சதுக்கத்துக்குள் வீசிய குளிர் காற்று பதாகைகளை விம்மிப் புடைத்தெழச் செய்தது. நகரின் தொலைப் பகுதிகளிலிருந்து பற்பல ஆலைகளிலிருந்தும் தொழிலாளர்கள் தமது வீரத் தியாகிகளைச் சுமந்து கொண்டு வந்தார்கள். வளைவின் வழியே அவர்கள் வந்து கொண்டிருந்ததையும், அவர்களது பதாகைகள் பளிச்சிட்டதையும், அவர்கள் சுமந்து வந்த

சவப்பெட்டிகளின் இரத்தச் சிவப்பையும் பார்க்க முடிந்தது. இந்த பெட்டிகள் மட்ட ரகமானவை, இழைக்கப்படாத பலகை கொண்டு செய்யப்பட்டுக் கருஞ் சிவப்பு வர்ணம் பூசப்பட்டவை. முரட்டு ஆட்கள் அவற்றை உயரத் தம் தோள் மீது தூக்கி வந்தனர். முகத்தில் கண்ணீர் வழிந்தோட அவர்கள் நடை போட்டனர், அவர்களுக்குப் பின்னுல் வந்த பெண்கள் விம்மியழுது கொண்டும் அலறிக் கொண்டுமிருந் தார்கள், அல்லது உயிரற்று வெள்ளேயாய் வெளுத்துப் போன முகங்களுடன் விரைப்பாய் நடந்தார்கள். சில சவப் பெட்டிகள் திறந்திருந்தன, அவற்றின் மூடிகளேப் பின்னுல் வந்தவர்கள் எடுத்து வந்தார்கள். ஏனேயவை பொன் அல்லது வெள்ளிச் சரிகைத் துணிகளால் மூடப்பட்டிருந்தன, அல்லது உச்சியில் படையாளின் தொப்பி வைத்தடிக்கப் பட்டிருந்தது. பல பெட்டிகளின் மீது கோரமான செயற் கைப் பூ வளேயங்கள் இருந்தன....

கூட்டத்தினர் விலகி நின்று வழிவிட்டனர், இப்படித் தோன்றி பிற்பாடு மூடிக் கொண்டுவிட்ட வளேந்து நெளிந்து சென்ற சந்து வழியே இந்த ஊர்வலம் மெல்ல எங்களே நோக்கி நகர்ந்து வந்தது. வளேவு வழியே முடிவில்லாத நீள் வரிசையில் பதாகைகள் வந்து கொண்டிருந்தன. சிவப்பின் எல்லா விதமான சாயல்களிலும் அமைந்த இந்தப் பதாகை களில் வெள்ளியிலும் பொன்னிலுமான எழுத்துகள் பொறிக் கப்பட்டிருந்தன, இவற்றின் உச்சியிலிருந்து தோரணங்கள் தொங்கின. கறுப்பில் வெள்ளே எழுத்துகளேக் கொண்ட அராஜகவாதிகளது கொடிகள் சிலவும் காணப்பட்டன. வாத்தியக் குழு புரட்சிகர சவ அடக்க ஊர்வலக் கீதத்தை இசைத்தது. நெரிசலாய் வெற்றுத் தலேயுடன் நின்ற பெருங் கூட்டத்தினர் கனத்த பெருங் குரலில் பாட, ஊர்வலத்தினர் கரகரக்கும் குரலில் விம்மித் திணறியவாறு பாடினர்....

ஆலேக் தொழிலாளர்களது திரள்களுக்கு இடையிடையே படையாட்களது குழுக்கள் தமது சவப்பெட்டிகளேச் சுமந்து கொண்டு வந்தன, குதிரைப் படையினர் குதிரையில் மரி யாதை அணி வகுத்து வந்தார்கள். பீரங்கிப் படையினரும் வந்தார்கள், அவர்களுடைய பீரங்கி சிவப்பு, கறுப்புத் துணி களால்—என்றென்றுக்குமாய் என்று நினேக்கும்படி—மூடப்

பட்டிருந்தது. ''மூன்றுவது அகிலம் நீடூழி வாழ்க!'', ''நேர்மையான, ஜனநாயகமான, பொது சமாதானம் வேண்டும்'' என்ற கோஷங்களைக் கொண்ட பதாகைகளை இவர்கள் எடுத்து வந்தார்கள்.

சவப்பெட்டிகளைச் சுமந்து கொண்டு ஊர்வலத்தினர் மெதுவாக நகர்ந்து சமாதியின் ஓரத்தை வந்தடைந்தனர். பெட்டிகளைத் தூக்கி வந்தவர்கள் தமது சுமையுடன் மேட்டின் மீது ஏறிக் குழிக்குள் இறங்கினர்கள். தூக்கி வந்தவர்களில் பலரும் பெண்கள்—கட்டை குட்டையான, வலுமிக்க பாட்டாளி வர்க்கப் பெண்கள். மாண்டோரின் பின்னல் ஏனைய பெண்கள் வந்தார்கள் — உள்ளம் ஒடிந்து போன இளம் பெண்கள், அல்லது வயது முதிர்ந்து சுருக்கங்கள் விழுந்த தாய்மார்கள் இவர்கள். அடிபட்ட விலங்குகளைப் போல் இந்தத் தாய்மார்கள் முனகிச் சப்தம் எழுப்பியவாறு தமது புதல்வர்களையும் கணவன்மார்களையும் பின்தொடர்ந்து சோதரத்துவச் சமாதிக்குள் இறங்கினர்கள். இரக்கங் கொண்ட கரங்கள் அவர்களை அணைத்துத் தடுத்த போது கதறிக் கூச்சலிட்டு அழுதார்கள். ஏழைகள் ஒருவரையொருவர் அப்படி உளமார நேசிப்பவர்கள்!

அன்று பகல் முழுதும் சவ அடக்க ஊர்வலம் ஓயாமல் வந்து சென்றது. இவேர்ஸ்கி வளைவின் வழியே உள்ளே நுழைந்து நிக்கோல்ஸ்கயா வழியே போய்ச் சேர்ந்தது. ஆற்று வெள்ளம் போல் செம்பதாகைகள் சென்று கொண்டிருந்தன, ஐம்பது ஆயிரம் மக்கள் சதுக்கத்திலே குழுமி நிற்க அவை நம்பிக்கையையும் சோதரத்துவத்தையும் மகத்தான தொலைநோக்குடைத்த வாக்குகளையும் வலியுறுத்தும் சொற்களைத் தாங்கிச் சென்றன—உலகின் தொழிலாளர்களும் இனி வருங்காலத்தில் தோன்றப் போகும் அவர்களது சந்ததியினர் எல்லோரும் கண் கொண்டு இக்காட்சியைப் பார்த்திருக்க, சென்றது இந்த ஊர்வலம்....

ஒவ்வொன்றுக ஐந்நூறு சவப்பெட்டிகள் குழிகளினுள் வைக்கப்பட்டன. இருட்டாகி வந்தது, அப்போதும் தொடர்ந்து கொடிகளும் பதாகைகளும் தணிந்து தொங்கியும், படபடத்துப் புடைத்தெழுந்தும் வந்து கொண்டிருந்தன. வாத்தியக் குழு சவ அடக்க ஊர்வலக் கீதமிசைத்தது.

அம்மாபெரும் கூட்டம் அனைத்தும் சேர்ந்து இசைத்தது. சமாதிக்கு மேல் இருந்த இலைகளில்லா மரக் கிளைகளில் விசித்திரமான பல்வண்ண மலர்க் கொத்துகள் போல் மலர் வளையங்கள் தொங்கவிடப்பட்டன. இருநூறு ஆடவர்கள் மண்வெட்டியால் மண்ணைக் குழிகளுக்குள் தள்ள ஆரம்பித்தார்கள். சவப் பெட்டிகள் மீது விழுந்து அது எழுப்பிய ஆழமான தடதடப்பு கூட்டத்தினர் இசைத்த கீதத்துடன் சேர்ந்து தணிவாய் ஒலித்தது....

விளக்குகள் ஏற்றப்பட்டன. கடைசிப் பதாகைகளும் கொடிகளும் கடந்து சென்றன. அழுது புலம்பிய கடைசிப் பெண்களும் மெள்ள விலகிச் சென்றார்கள், நெஞ்சு பொறுக்காத சோகத்துடன் திரும்பிப் பார்த்தவாறு நடந்தார்கள். பாட்டாளி வர்க்கப் பெருவெள்ளம் அந்தப் பெரிய சதுக்கத்திலிருந்து சிறிது சிறிதாக வடிந்து அடங்கிற்று....

பக்தி உணர்ச்சி வாய்ந்த ருஷ்ய மக்கள் விண்ணுலகை அடைய இனி பாதிரிமார்கள் வந்திருந்து பிரார்த்தனை நடத்தத் தேவையில்லை என்பதை நான் திடுமென உணர்ந்தேன். விண்ணுலகம் வழங்கக் கூடியதைக் காட்டிலும் ஒளி படைத்ததான ஓர் அருளாட்சியை இங்கே இம்மண்ணுலகில் அமைத்திடுகிறார்கள் இவர்கள், இதற்காக இன்னுயிரை அளிப்பது தனிப்பெரும் சிறப்பாகும் என்பது தெரிந்து....

அத்தியாயம் 11

# ஆட்சியதிகாரத்தைக் கைக்கொள்ளுதல்[1]*

## ருஷ்யாவின் மக்கள்களது உரிமைப் பிரகடனம்[2]

...இவ்வாண்டு ஜூனில் சோவியத்துகளது முதலாவது காங்கிரஸ், ருஷ்யாவின் மக்கள்களது சுயநிர்ணய உரிமையைப் பிரகடனம் செய்தது.

கடந்த நவம்பரில் சோவியத்துகளது இரண்டாவது காங்கிரஸ், ருஷ்யாவின் மக்கள்களுக்குள்ள மாற்றவோ துறக்கவோ முடியாத இந்த உரிமையை மேலும் தீர்மானமாகவும் திட்டவட்டமாகவும் உறுதிப்படுத்திற்று.

இந்தக் காங்கிரசுகளின் சித்தத்தைச் செயல்படுத்தும் மக்கள் கமிசார் அவையானது, தேசிய இனங்களைப் பற்றிய பிரச்சினையில் தனது செயற்பாட்டுக்கு ஆதார அடித்தளமாகப் பின்வரும் கோட்பாடுகளைக் கொள்வதென்று தீர்மானித்துள்ளது:

1) ருஷ்யாவின் மக்கள்களது சரிசமத்துவமும் அரசுரிமையும்.

2) ருஷ்யாவின் மக்கள்கள், பிரிந்து சென்று சுயேச்சை அரசை நிறுவிக் கொள்ளும் அளவுக்குங்கூட செல்லும்படியான பூரண சுதந்திரச் சுயநிர்ணய உரிமை பெற்றவர்கள்.

---

* இந்த அத்தியாயத்தில் எண்ணிட்டுக் காட்டப்படும் சுட்டுக் குறிகள் அத்தியாயம் 11இன் அனுபந்தத்தைக் குறிப்பவை.

3) எல்லா வகையான, எந்த வகையான தேசிய, தேசிய-சமயத் தனியுரிமைகளும், உரிமைத்தகுதி இன்மையும் ஒழிக்கப்படுதல்.

4) ருஷ்யாவின் பரப்பில் வாழும் தேசியச் சிறுபான்மையோரும் இனத் தொகுதியோரும் தங்குதடையின்றி சுதந்திரமாக வளர்ச்சி பெறுதல்.

தேசிய இன விவகாரங்களுக்கான ஆணைக்குழு அமைக்கப்பட்டதும் உடனடியாகத் துல்லியமான அரசாணைகள் தயாரிக்கப்படும்.

**தேசிய இன விவகாரங்களுக்கான மக்கள் கமிசார்**
இயோசிப் ஜுகஷ்வீலி-ஸ்டாலின்.
**ருஷ்யக் குடியரசின் பெயரில்,**
**மக்கள் கமிசார் அவைத் தலைவர்**
வி. உலியானவ் (லெனின்).

கீவில் இருந்த மத்திய ராதா உடனே உக்ரைனைச் சுயேச்சை குடியரசாகப் பிரகடனம் செய்தது; பின்லாந்து அரசாங்கமும் ஹெல்சிங்போர்சில் இருந்த செனட்டு சபையின் மூலம் இதே போல் செய்தது. சைபீரியாவிலும் காக்கசஸிலும் சுயேச்சை ''அரசாங்கங்கள்'' உதித்தெழுந்தன. போலிஷ் தலைமை இராணுவக் கமிட்டியானது ருஷ்யச் சேனையில் இருந்த போலிஷ் துருப்புகளை அவசரமாய் ஒன்று சேர்த்து அவற்றின் கமிட்டிகளைக் கலைத்துவிட்டு உருக்குக் கட்டுப்பாட்டை நிறுவிற்று....

இந்த எல்லா ''அரசாங்கங்களும்'' ''இயக்கங்களும்'' பொதுவான இரு தனியியல்புகள் கொண்டனவாய் இருந்தன: இவை யாவும் சொத்துடைத்த வர்க்கங்களின் பிடியில் இருந்தன, போல்ஷிவிசத்தின் பால் இவை யாவும் அச்சமும் வெறுப்பும் கொண்டிருந்தன....

அதிர்ச்சி உண்டாக்கிய மாறுதல்களின் குழப்பத்தினிடையே மக்கள் கமிசார் அவை விடாப்பிடியாக வேலை செய்து சோஷலிச ஒழுங்கு முறைக்கு அவசியமான சாரக்கட்டுகளை அமைத்திட்டது. வரிசையாய் அது அரசாணைகளைப் பிரகடனம் செய்தது: சமூக ஈட்டுறுதி (இன்ஷ்யூரன்ஸ்) அரசாணை; தொழில் துறை மீதான தொழிலாளர் கண்காணிப்பு அர

சாஸனே; வோலஸ்து நிலக் கமிட்டிகளுக்கான விதிமுறைகள்; படித்தரங்கள், பட்டங்களை ஒழிக்கும் அரசாணை; பழைய நீதிமன்றங்களை அகற்றி மக்கள் நீதிமன்றங்களை அமைத்திடுவது பற்றிய அரசாணை[3]....

சேனையை அடுத்து சேனையும், கப்பற்படையை அடுத்து கப்பற்படையும் தூதுக் குழுக்களை அனுப்பி ''புதிய மக்கள் அரசாங்கத்துக்கு மகிழ்ச்சி மிக்க வாழ்த்துகள்'' தெரிவித்தன.

ஸ்மோல்னிக்கு எதிரே ஒரு நாள் கந்தல் உடுப்புகள் உடுத்திய படையணி ஒன்று, போர்முனை அகழ்வரிகளிலிருந்து வந்து நிற்கக் கண்ணுற்றேன். பெரிய வெளிவாயில்களுக்கு முன்னால் மெலிந்து வெளிறிட்டுவிட்ட முகங்களுடைய படையாட்கள் அணி வகுத்து நின்று, ஆண்டவனே அதனுள் எழுந்தருளியிருப்பது போல் பக்திப் பரவசத்தோடு ஸ்மோல்னிக் கட்டடத்தை உற்று நோக்கினார்கள். நுழை வாயிலுக்கு மேலிருந்த பேரரசக் கழுகுச் சின்னத்தைச் சிலர் சுட்டிக் காட்டிச் சிரித்தார்கள்.... வெளிவாயிலில் காவல் புரிவதற்காகச் செங்காவலர்கள் வந்தார்கள். படையாட்கள் எல்லோரும் ஆவலோடு அவர்கள் பக்கம் திரும்பினார்கள்; இவர்களைப் பற்றி நிறைய கேட்டிருக்கிறோம், ஆனால் நேரில் பார்த்ததில்லை என்று கூறுவது போலிருந்தது அந்தப் படையாட்கள் பார்த்த பார்வை. நேசமும் பாசமும் மிக்க முறையில் அவர்கள் சிரித்துக் கொண்டார்கள், அணிவகுப்பை விட்டுக் கலைந்து முன்னால் வந்து செங்காவலர்களின் முதுகில் தட்டி வேடிக்கையும் பாராட்டும் தொனிக்கப் பேசினார்கள்....

இடைக்கால அரசாங்கம் இனி இல்லை என்றாகிவிட்டது. அதற்காகப் பிரார்த்தனை செய்வதைத் தலைநகரின் எல்லா கோவில்களிலும் பாதிரிமார்கள் நவம்பர் 15ல் நிறுத்திக் கொண்டுவிட்டனர். ஆனால் இத்ஸே-யி-கவிடம் லெனின் கூறியது போல், இவை எல்லாம் ''ஆட்சியதிகாரத்தைக் கைக்கொள்ளுதலின் துவக்கமே'' ஆகும். படைக்கலன்கள் பறிக்கப்பட்டுவிட்டது என்றாலும் எதிர்த்தரப்புதான் நாட்டின் பொருளாதார வாழ்வில் ஆதிக்கம் புரிந்து வந்தது. இந்த எதிர்த்தரப்பு இப்போது சீர்குலைவை உண்டாக்குவதற்காக முனைந்து வேலை செய்தது. கூட்டு நடவடிக்கைகளுக்கு ஏற்

பாடு செய்வதில் ருஷ்யர்களுக்கு இருக்கும் கைத்திறமைஅனைத்தையும் பிரயோகித்து அது தடை போடவும் முடமாக்கவும் சோவியத்துகளை மதிப்பிழக்கச் செய்யவும் முயன்றது.

அரசாங்க ஊழியர்களது வேலைநிறுத்தம் திறம்பட ஒழுங்கமைக்கப்பட்டிருந்தது, வங்கிகளும் வாணிப நிலையங்களும் இதற்கு நிதி வசதிகளை அளித்து உதவின. அரசாங்கப் பொறியமைவினை வசப்படுத்திக் கொள்ள போல்ஷிவிக்குகள் மேற்கொண்ட ஒவ்வொரு முயற்சிக்கும் வலுமிக்க எதிர்ப்பு காட்டப்பட்டது.

திரோத்ஸ்கி அயல் துறை அமைச்சகத்துக்குச் சென்றார், அங்கே அலுவலர்கள் அவரை அங்கீகரிக்க மறுத்து உள்ளே வர முடியாமல் கதவுகளைத் தாளிட்டுப் பூட்டிக் கொண்டார்கள்; கதவுகளை உடைத்துக் கொண்டு உள்ளே புகுந்ததும் அவர்கள் ராஜிநாமா செய்தார்கள். ஆவணக் காப்பிடங்களின் சாவிகளைத் தரும்படி திரோத்ஸ்கி கோரினார்; பூட்டுகளை உடைப்பதற்காக அவர் தொழிலாளர்களை அழைத்து வந்த பிற்பாடு சாவிகள் அவரிடம் தரப்பட்டன. அதன் பிறகு தான் முன்னாள் அயல் துறைத் துணை அமைச்சர் நெராத்தவ் இரகசிய உடன்படிக்கைகளை எடுத்துக் கொண்டு ஓடி மறைந்து விட்டது தெரிய வந்தது....

ஷிலியாப்னிக்கவ் தொழிலாளர் துறை அமைச்சகத்துக்குப் பொறுப்பேற்க முயற்சி செய்தார். அமைச்சகத்துக்குள் கடுங் குளிராய் இருந்தது, கணப்படுப்புகளைப் பற்ற வைக்க அங்கே ஆள் யாரும் இல்லை. அமைச்சரின் அலுவல் அறை எங்கே இருந்ததென்று அவருக்குக் காட்டுவதற்கு, அமைச்சகத்தின் நூற்றுக் கணக்கான அலுவலர்களில் ஒருவர்கூட தயாராயில்லை....

அலெக்சாந்திரா கொலந்தாய் நவம்பர் 13ல் அறக் கட்டளை, பொது நிலையங்களது துறையாகிய பொது நலத் துறைக் கமிசாராக நியமிக்கப்பட்டார். அமைச்சகத்தின் அலுவலர்களில் நாற்பது பேரைத் தவிர ஏனையோர் வேலை நிறுத்தம் செய்து அவரை வரவேற்றார்கள். உடனே பெரிய நகரங்களைச் சேர்ந்த பஞ்சையர்கள்—தரும நிலையங்களில் வசித்தவர்கள்—ஏதும் இல்லாமல் தவிக்க வேண்டியதாயிற்று. பட்டினி கிடந்த முடவர்கள், முகம் வாடி வதங்கி நீலம்

படர்ந்துவிட்ட அனுதைகள் முதலியோரின் தூதுக் குழுக் கள் அமைச்சகக் கட்டடத்தைச் சூழ்ந்து கொண்டுவிட்டன. கொலந்தாயின் முகத்தில் கண்ணீர் வழிந்தோடிற்று, வேலை நிறுத்தம் செய்தோரை அவர் கைது செய்து, அலுவலகம், பொக்கிஷப் பெட்டிகள் இவற்றின் சாவிகளைத் தரும்படி வற்புறுத்த வேண்டியதாயிற்று, ஆனால் சாவிகள் கிடைத்த பிறகு, முன்னாள் அமைச்சர் கோமகள் பானினு நிதிகளை முன்பே எடுத்துச் சென்று விட்டார் என்பது தெரிந்தது. அரசியல் நிர்ணயச் சபை கட்டளையிட்டாலன்றி கோமகள் இந்நிதிகளைத் தர முடியாது என்றார்.[4]

விவசாய அமைச்சகம், வழங்கல் துறை அமைச்சகம், நிதி அமைச்சகம் முதலானவற்றிலும் இதே போலத்தான் நடைபெற்றன. அலுவலர்கள் வேலைக்குத் திரும்பி வர வேண்டும், இல்லையேல் அவர்கள் தமது பதவிகளையும் ஓய் வூதியங்களையும் இழக்க நேரிடும் என்று அறிவிக்கப்பட்டது. அவர்கள் திரும்பி வர மறுத்தார்கள், அல்லது திரும்பி வந்து சீர்குலைவு செய்தார்கள்.... அறிவுத்துறையினரில் அனேகமாக எல்லோருமே போல்ஷிவிக்கு-எதிர்ப்பாளர் களாக இருந்ததால், சோவியத்து அரசாங்கம் புதிய அலு வலர்களைத் தேடி அமர்த்திக் கொள்வதற்கு வழி இல்லை....

தனியார் வங்கிகள் பிடிவாதமாய் அடைக்கப்பட்டு கிடந் தன, புழைக்கடை வழிகள் மட்டும் ஊக வணிகர்களுக்காகத் திறக்கப்பட்டிருந்தன. போல்ஷிவிக்குக் கமிசார்கள் இந்த வங்கிகளுக்குள் வந்ததும் எழுத்தர்கள் பேரேட்டுப் புத்தகங் களை ஒளித்து வைத்துவிட்டு, நிதி இருப்புகளை எடுத்துக் கொண்டு வெளியே போய்ச் சேர்ந்தார்கள். அரசு வங்கியின் அலுவலர்களில், காப்பிடங்களுக்கும் பண நோட்டு வெளி யீட்டுக்கும் பொறுப்பானேரைத் தவிர்த்து ஏனைய எல்லோ ரும் வேலைநிறுத்தம் செய்தார்கள். வேலை செய்த அலுவ லர்கள் ஸ்மோல்னியின் கோரிக்கைகளுக்குக் கீழ்ப்படிந்து பணம் தர மறுத்துவிட்டு, இரட்சணியக் கமிட்டிக்கும் நகர டூமாவுக்கும் பெரும் பெரும் தொகைகளைக் கொடுத்துக் கொண்டிருந்தார்கள்.

அரசாங்கச் செலவுகளுக்காகப் பெருந் தொகைகள் கொடுக்கும்படி வற்புறுத்துவதற்காக கமிசார் ஒருவர் செங்

காவலர் படைப் பிரிவுடன் கூட இரண்டு தரம் வந்திருந் தார். முதல் தரம், நகர டூமா உறுப்பினர்களும் மென்ஷி விக்கு, சோஷலிஸ்டுப் புரட்சியாளர் கட்சிகளின் தலைவர் களும் பெரிய எண்ணிக்கையில் அங்கே குழுமியிருந்தார்கள், ஏற்படக் கூடிய விளைவுகள் குறித்து அவர்கள் மிகவும் கடு மையாகப் பேசவே கமிசார் பீதியடைந்துவிட்டார். இரண் டாவது தரம் அவர் அங்கே கைப்பற்று ஆணையுடன் போய்ச் சேர்ந்தார், முறைப்படி இந்த ஆணையைப் பலத்த குரலில் அங்கே படித்துக் காட்டினர். ஆனல் அதில் தேதியும் இல்லை, முத்திரையும் இடப்படவில்லை என்பதை யாரோ ஒருவர் அவரிடம் சுட்டிக் காட்டியதும், ''ஆவணங்களுக்கு'' ருஷ்ய மரபுப்படிக் காட்டப்பட வேண்டிய மரியாதை உணர்வு அவரைத் திரும்பவும் பின்வாங்கும்படிச் செய்துவிட்டது....

அயல்நாட்டுக் கடன் நிறுவனத்தின் அதிகாரிகள் தமது கணக்குப் புத்தகங்களை அழித்து விட்டார்கள், வெளிநாடு களுடன் ருஷ்யாவுக்கு இருந்த நிதி உறவுகள் பற்றிய பதிவே டுகள் எவையும் இல்லாமற் போயின.

பொருள் வழங்கல் கமிட்டிகளும் நகராண்மை கழகத் தின் உடைமையிலிருந்த பொதுச் சேவைத் துறைகளும் இயங்காது நின்று போயின, அல்லது சீர்குலைக்கப்பட்டு வந் தன. நகரவாசிகளது அவசர அவசியத் தேவைகளால் நிர்ப் பந்திக்கப்பட்டு போல்ஷிவிக்குகள் பொதுச் சேவை துறை களுக்குத் துணை புரியவோ, அவற்றைக் கண்காணிக்கவோ முயற்சி செய்ததும், அவற்றின் அலுவலர்கள் எல்லோரும் உடனே வேலைநிறுத்தம் செய்தார்கள்; போல்ஷிவிக்குகள் ''நகரத் தன்னுட்சியினை மீறுகிருர்கள்'' என்று நகர டூமா ருஷ்யா முழுதும் தந்திகளைப் பறக்கச் செய்தது.

இராணுவத் தலைமையகங்களிலும் யுத்த, கடற்படை அமைச்சகங்களின் அலுவலகங்களிலும் பழைய அலுவலர் கள் தொடர்ந்து வேலை செய்ய உடன்பட்டனர் என்ருலும், சேனைக் கமிட்டிகளும் இராணுவ மேலிடத் தலைமையும் எல்லா வழிகளிலும் சோவியத்துகளுக்கு முட்டுக்கட்டை போட்டு வந்தன, போர்முனையில் படைகளைக் கவனியாது விட்டுவிடும் அளவுக்குங்கூட சென்றன அவை. **விக்ழேல்** பகைமை பாராட்டிற்று, சோவியத்துப் படைகளை ரயில்

களில் ஏற்றி செல்ல மறுத்தது. பெத்ரொகிராதிலிருந்து புறப்பட்ட துருப்பு ரயில்வண்டி ஒவ்வொன்றும் பலவந்தமாகத்தான் எடுத்துச் செல்லப்பட வேண்டியிருந்தது. ஒவ்வொரு தரமும் ரயில் அதிகாரிகளைக் கைது செய்ய வேண்டிருந்தது—உடனே அவர்களை விடுதலை செய்யாவிடில் பொது வேலைநிறுத்தம் ஆரம்பமாகிவிடுமென்று **விக்ழேல்** மிரட்டிற்று.

ஸ்மோல்னியால் ஒன்றும் செய்ய முடியவில்லை. எரிபொருள் இல்லாமல் பெத்ரொகிராது ஆலைகள் மூன்று வாரங்களில் மூடப்பட வேண்டியிருக்குமென செய்தியேடுகள் கூறி வந்தன. டிசம்பர் முதல் தேதிக்குள் ரயில் வண்டிகள் ஓடாமல் நின்றாக வேண்டுமென **விக்ழேல்** அறிவித்தது. பெத்ரொகிராதில் மூன்றே மூன்று நாட்களுக்குத்தான் உணவு இருந்தது. எங்கிருந்தும் உணவு வரவில்லை. போர்முனையில் சேனை பட்டினி கிடந்தது.... இரட்சணியக் கமிட்டியும் பல்வேறு மத்தியக் கமிட்டிகளும் அரசாங்கம் பிறப்பிக்கும் அரசாணைகளைப் பொருட்படுத்தாமல் ஒதுக்குமாறு மக்களுக்கு அறிவுறுத்தி வந்தன. நேசநாடுகளின் தூதரகங்கள் மிக அலட்சியமாய் இருந்தன, அல்லது பகிரங்கமாகவே பகைமை பாராட்டின....

எதிர்த்தரப்புச் செய்தியேடுகள் தடை விதிக்கப்பட்டு ஒரு நாள் மூடப்பட்டதும் புதிய பெயர்களில் மறு நாளே வெளித் தோன்றி புதிய ஆட்சியின் மீது நச்சுத்தனமான வசை மாரி பொழிந்தன.[5] **நோவயா ழீஸின்** செய்தியேடுங்கூட "வாய்ச்சவடாலும் கையாலாகாத அவல நிலையும் இணைந்தமைந்ததே" இந்தப் புதிய ஆட்சி என்று குண நிர்ணயம் செய்து தாக்கிற்று. அது எழுதியதாவது:

*மக்கள் கமிசார்களது அரசாங்கம் அவசரக் கோலமான உதவாக்கரை வாய்ப் பேச்சிலே நாளுக்கு நாள் மேலும் மேலும் ஆழமாக மூழ்கிச் செல்கிறது. ஆட்சியதிகாரத்தைச் சுலபமாகவே கைப்பற்றிக் கொண்டுவிட்ட இந்தப் போல்ஷிவிக்குகள்... அதைப் பயன்படுத்தும் திறனற்றவர்களாக இருக்கிறார்கள்.*

அரசாங்கத்தின் தற்போதையப் பொறியமைமையை நெறி யாண்மை புரிந்து செயல்படுத்தும் சக்தியற்ற இவர்கள், சமுதாயச் சோதனை ஆய்வாளர்களது தத்துவங்களின்படி எளிதாகவும் தடங்கலின்றியும் செயல்படும்படியான ஒரு புதிய பொறியமைமவினைத் தோற்றுவிக்கும் திறனும் இல்லாத வர்களாக இருக்கின்றனர்.

வளர்ந்து வரும் அவர்களது கட்சியை நடத்த சிறிது காலத்துக்கு முன்பு வரை போல்ஷிவிக்குகளிடம் போதிய ஆட்கள் இல்லை—யாவற்றுக்கும் முதலாய்ப் பேச்சாளர்களும் எழுத்தாளர்களுமே தேவைப்படும் ஒரு வேலை அது. ஆகவே அரசாங்கத்தின் சிக்கல் வாய்ந்த பல்வேறு வகைப்பட்ட பணிகளையும் செய்வதற்கு வேண்டிய பயிற்சி பெற்ற ஆட் களை அவர்கள் எங்கிருந்து பெறப் போகிறார்கள்?

புதிய அரசாங்கம் ஆடிக் குதிக்கிறது, அச்சுறுத்துகிறது; புதுப் புது அரசாணைகளை நாட்டின் மீது பொழிகின்றது— ஒவ்வொன்றும் முந்தியதைக் காட்டிலும் தீவிரமான, ''சோஷலிசமான'' அரசாணைகளாகும் இவை. ஆனால் காகித அளவிலான இந்த சோஷலிசத்தின் வெளிப்பாட்டில்—நமது வருங்காலத் தலைமுறையினரைத் திகைத்துத் திணறடிக்கும் படியான முறையில் திட்டமிடப்பட்டதாகத் தோன்றும் இதில்—உடனடியான அன்றாடப் பிரச்சினைகளுக்குத் தீர்வு காண்பதற்கான விருப்பமோ, திறனோ இருக்கக் காணோம்!

இதற்கிடையில் புதிய அரசாங்கத்தை உருவாக்குவதற் காக விக்ஷேல் கூட்டிய மாநாடு இராப் பகலாகத் தொடர்ந்து நடைபெற்று வந்தது. இந்த அரசாங்கத்தின் அடிப்படை குறித்து கோட்பாட்டு அளவில் இரு தரப்பாரும் ஏற் கெனவே உடன்பாடுக்கு வந்துவிட்டனர். மக்கள் அவையின் இயைபு குறித்து இப்போது விவாதிக்கப்பட்டு வந்தது. செர் னேவைப் பிரதமராகக் கொண்டு பூர்வாங்கமாக அமைச் சரவை ஒன்று தேர்வு செய்யப்பட்டது, போல்ஷிவிக்குகள் பெரிய சிறுபான்மையினராய் இதில் சேர்த்துக் கொள்ளப் பட்டனர், ஆனால் லெனினும் திரோத்ஸ்கியும் ஒதுக்கி விலக் கப் பட்டார்கள். மென்ஷிவிக்கு, சோஷலிஸ்டுப் புரட்சி யாளர் கட்சிகளின் மத்தியக் கமிட்டிகளும், விவசாயிகளது

சோவியத்துகளின் செயற் கமிட்டியும், போல்ஷிவிக்குகளுடைய ''கொலைபாதக அரசியலை'' எப்போதும் போல் கடுமையாகவே எதிர்த்தாலுங்கூட, ''சோதரர்களிடையே இரத்தக் களரி நடைபெறுவதை நிறுத்தும் பொருட்டு'' மக்கள் அவையில் போல்ஷிவிக்குகள் இடம் பெறுவதை எதிர்ப்பதில்லை என்று தீர்மானம் செய்து கொண்டன.

ஆனால் கேரென்ஸ்கி ஓடிவிட்டதையும், எங்கும் சோவியத்துகளுக்குக் கிட்டிய வியத்தகு வெற்றிகளையும் தொடர்ந்து நிலைமையில் மாற்றம் ஏற்பட்டது. நவம்பர் 16ல் இத்ஸே-யி-கவின் கூட்டத்தில் இடதுசாரி சோஷலிஸ்டுப் புரட்சியாளர்கள், பிற சோஷலிஸ்டுக் கட்சிகளுடன் சேர்ந்து போல்ஷிவிக்குகள் கூட்டு அரசாங்கம் ஒன்றை நிறுவ வேண்டுமென வற்புறுத்தினர்கள். போல்ஷிவிக்குகள் இதைக் செய்யத் தவறினல் தாம் புரட்சி இராணுவக் கமிட்டியிலிருந்தும் இத்ஸே-யி-கவிலிருந்தும் வெளியேறி விடுவோம் என்று அவர்கள் பேசினர்கள். மால்க்கின் கூறியதாவது: ''மாஸ்கோவில் எங்கள் தோழர்கள் தடுப்பரண்களின் இரு பக்கத்திலிருந்தும் உயிர் விடுகிருர்கள், மாஸ்கோவிலிருந்து வரும் செய்திகள் ஆட்சியதிகார ஒழுங்கமைப்புப் பிரச்சினையை மீண்டும் ஒரு தரம் எழுப்பும் படி எங்களை வற்புறுத்துகின்றன. இப்பிரச்சினையை எழுப்ப வேண்டியது எங்களுக்குள்ள உரிமை மட்டுமின்றி எங்களது கடமையும் ஆகும்.... இங்கே ஸ்மோல்னி கழகத்தின் கட்டடத்துக்குள் போல்ஷிவிக்குகளுடன் கூட அமர்வதற்கும், இந்த மேடையிலிருந்து பேசுவதற்குமான உரிமையை வென்று கொண்டுவர்கள் நாங்கள். நீங்கள் சமரசம் செய்து கொள்ள மறுப்பீர்களாயின், கடுமையான உட்கட்சிப் போராட்டத்துக்குப் பிற்பாடு, நாங்கள் வெளியே சென்று பகிரங்கமாகப் போர் புரிய வேண்டிய நிலைக்கு மாறிச் செல்ல வேண்டியதாகிவிடும்.... ஏற்புடைத்த சமரசத்துக்குகான அடிக்கூறுகளை நாங்கள் ஜனநாயக அணிவரிசைகளுக்கு முன்மொழிந்தாக வேண்டும்....''

இந்த இறுதி எச்சரிக்கையைப் பரிசீலிப்பதற்காக விடப்பட்ட இடைநேரம் முடிவுற்றதும் போல்ஷிவிக்குகள் ஒரு தீர்மானத்துடன் திரும்பி வந்தார்கள். காமெனெவ் இந்தக் தீர்மானத்தைப் படித்துக் காட்டினர்:

தொழிலாளர்கள், படையாட்கள், விவசாயிகள் பிரதிநிதிகளது சோவியத்துகளைச் சேர்ந்தவையும், நவம்பர் 7 புரட்சியின் வெற்றிச் சாதனைகளை—அதாவது, சோவியத்துகளாலாகிய ஓர் அரசாங்கம் நிறுவப்பட்டதையும், சமாதானத்தையும் நிலத்தையும் தொழில் துறை மீதான தொழிலாளர் கண்காணிப்பையும் பற்றிய அரசாணை களையும், தொழிலாளி வர்க்கம் ஆயுதபாணியாக்கப் பட்டிருப்பதை யும் — அங்கீகரிக்கின்றவையுமான எல்லா சோஷலிஸ்டுக் கட்சி களின் பிரதிநிதிகளும் அரசாங்கத்தில் சேர்ந்து கொள்வது அவசியமென்று இத்ஸே-யி-க கருதுகிறது. ஆகவே சோவியத் துகளைச் சேர்ந்த எல்லாக் கட்சிகளுக்கும், அரசாங்கத்தின் ஒழுங்கமைப்பு சம்பந்தமான பேச்சுவார்த்தைகளில் இறங் கும்படி இத்ஸே-யி-க முன்மொழிகிறது. பின்வரும் கூறுகள் அடிப்படையாக இருக்க வேண்டுமென அது வலியுறுத்து கிறது:

இந்த அரசாங்கம் இத்ஸே-யி-கவுக்குப் பொறுப்பானதாக இருத்தல் வேண்டும். இத்ஸே-யி-க 150 உறுப்பினர்களைக் கொண்டதாய் விரிவாக்கப்பட வேண்டும். தொழிலாளர் கள், படையாட்கள் பிரதிநிதிகளது சோவியத்துகளின் இந்த 150 பிரதிநிதிகளுடன், விவசாயிகள் பிரதிநிதிகளது மாநில சோவியத்துகளைச் சேர்ந்த 75 பிரதிநிதிகளும், சேனையையும் கடற்படையையும் சேர்ந்த போர்முனை நிறுவனங்களுடைய 80 பேரும், தொழிற் சங்கங்களிலிருந்தான 40 பேரும் (பல் வேறு அனைத்து ருஷ்ய தொழிற் சங்கங்களிலிருந்தும் அவற் றின் முக்கியத்துக்கு ஏற்ற வீதாசாரத்தில் 25 பேர், விக்ழேலி லிருந்து 10 பேர், தபால், தந்தித் தொழிலாளர்களிட மிருந்து 5 பேர்), பெத்ரொகிராது நகர டூமாவிலுள்ள சோஷ லிஸ்டுக் கோஷ்டிகளிடமிருந்தான 50 பிரதிநிதிகளும் சேர்த்துக் கொள்ளப்பட வேண்டும். அமைச்சரவையில் குறைந்தது ஒரு பாதியான துறைகளாவது போல்ஷிவிக்கு களுக்காக ஒதுக்கப்பட வேண்டும். தொழிலாளர் துறை, உள்துறை, அயல் துறை அமைச்சகங்கள் போல்ஷிவிக்குகளி டம் இருக்க வேண்டும். பெத்ரொகிராதிலும் மாஸ்கோவி லும் நகரக் காவற் படைகளின் தலைமை பெத்ரொகிராது, மாஸ்கோ சோவியத்துகளது பிரதிநிதிகளின் கையில் இருத் தல் வேண்டும்.

அனைத்து ருஷ்யாவின் தொழிலாளர்களையும் முறையான படி ஆயுதபாணியாக்குவதென்று அரசாங்கம் பொறுப்பேற்கின்றது.

தோழர்கள் லெனினும் திரோத்ஸ்கியும் அரசாங்கத்தில் இடம் பெற வேண்டுமென்று வற்புறுத்துவதெனத் தீர்மானிக்கப் படுகிறது.

காமெனெவ் விளக்கிக் கூறினார்: ''மாநாட்டால் முன் மொழியப்பட்டிருக்கும் 'மக்கள் அவை' எனப்படுவதில் சுமார் 420 உறுப்பினர்கள் இருப்பார்கள், இவர்களில் சுமார் 150 பேர் போல்ஷிவிக்குகளாக இருப்பார்கள். தவிரவும் எதிர்ப்புரட்சிகர அமைப்பாகிய பழைய இத்ஸே-யி-கவின் பிரதிநிதிகளும், நகர டூமாக்களால் தேர்வு செய்யப் படும் 100 உறுப்பினர்களும் இருப்பார்கள்—இவர்கள் எல்லோரும் கர்னீலவியர்கள். மற்றும் விவசாயிகளது சோவியத்துகளுடைய 100 பிரதிநிதிகள் இருப்பார்கள்—இவர்கள் அவ்க்சேன்தியெவால் நியமிக்கப் படுவோர் ஆவர்; பழைய சேனைக் கமிட்டிகளைச் சேர்ந்த 80 பேர் இடம் பெறுவார்கள்—இவர்கள் படையாள் பெருந்திரளினரைப் பிரதிநிதித்துவம் செய்வோர் அல்லர்.

''பழைய இத்ஸே-யி-கவுக்கும், மற்றும் நகர டூமாக்களின் பிரதிநிதிகளுக்கும் இடமளிக்க நாங்கள் மறுக்கின்றோம். விவசாயிகள் சோவியத்துகளது பிரதிநிதிகள் விவசாயிகளது காங்கிரசால் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். நாங்கள் இந்தக் காங்கிரசை அழைத்திருக்கின்றோம், இந்தக் காங்கிரஸ் ஒரு புதிய செயற் கமிட்டியையும் தேர்ந்தெடுக்கும். லெனினையும் திரோத்ஸ்கியையும் விலக்க வேண்டுமென்ற முன்மொழிவு எங்களது கட்சியைச் சிரச்சேதம் செய்வதற்கான முன்மொழிவாகும், நாங்கள் இதற்கு இணங்க மறுக்கிறோம். முடிவில் 'மக்கள் அவை' என்பதான ஒன்றின் அவசியத்தை எங்களால் புரிந்து கொள்ள முடியவில்லை. சோவியத்துகளில் எல்லா சோஷலிஸ்டுக் கட்சிகளும் இடம் பெறுகின்றன, மக்கள் திரளினரிடையே இக்கட்சிகளுக்கு இருக்கும் ஆதரவின் மெய்யான விகிதாசாரத்தில் இத்ஸே-யி-க இவற்றைப் பிரதிநிதித்துவம் செய்கிறது....''

இடதுசாரி சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களின் சார்பில் கரேலின், தமது கட்சி போல்ஷிவிக்குத் தீர்மானத்தை ஆதரித்து வாக்களிக்குமென்றும், விவசாயிகளுக்கான பிரதி நிதித்துவம், விவசாய அமைச்சகம் இடதுசாரி சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களுக்காக ஒதுக்கப்பட வேண்டுமெனக் கோருதல் என்பவை போன்ற சிற்சில விவரங்களில் திருத்தம் செய்யும் உரிமையை மட்டும் விட்டுவிடாமல் தன்னிடம் வைத்துக் கொள்கிறது என்றும் அறிவித்தார். அவருடைய கோரிக்கை ஏற்றுக் கொள்ளப்பட்டது....

பிற்பாடு, பெத்ரொகிராது சோவியத்தின் கூட்டத்தில், புதிய அரசாங்கம் அமைக்கப்படுவது சம்பந்தமான கேள்வி ஒன்றுக்கு திரோத்ஸ்கி பதிலளித்தார்:

''அதைப் பற்றி எனக்குத் தெரியாது. அந்தப் பேச்சு வார்த்தைகளில் நான் பங்கெடுத்துக் கொள்ளவில்லை.... ஆனல் அவை அதிக முக்கியத்துவம் வாய்ந்தவையாக நான் நினைக்கவில்லை....''

அன்று இரவு மாநாட்டில் ஒரே கலவரமாகிவிட்டது. நகர டூமாவின் பிரதிநிதிகள் மாநாட்டிலிருந்து வெளியேறிச் சென்றுர்கள்....

ஸ்மோல்னியிலுங்கூட, போல்ஷிவிக்குக் கட்சியின் அணிகளிலுங்கூட, லெனினது கொள்கைக்குப் பெரிய அளவில் எதிர்ப்பு தலைதூக்கி வந்தது. நவம்பர் 17 இரவில் மாமண்டபம் நிரம்பி வழிந்தது, என்ன ஆகுமோ என்கிற பதைபதைப்பு குடி கொண்டிருந்தது—இத்ஸே-யி-கவின் கூட்டம் நடைபெற்றுக் கொண்டிருந்தது.

போல்ஷிவிக்கு உறுப்பினரான லாரின், அரசியல் நிர்ணயச் சபையின் தேர்தல்களுக்கான தருணம் நெருங்கி விட்டது, ''அரசியல் பயங்கரவாதத்தை'' விட்டொழித்து விட வேண்டும் என்று பேசினர்.

''பத்திரிகைச் சுதந்திரத்துக்கு எதிரான நடவடிக்கைகளில் மாற்றங்கள் செய்தாக வேண்டும். போராட்டத்தின் போது இந்த நடவடிக்கைகளுக்கு நியாயம் இருந்தது, ஆனல் இப்போது இவற்றுக்கு எந்த நியாயமும் இல்லை. கலகங்களுக்கும் கொலைத் தாண்டவங்களுக்கும் தூண்டுதல் அளிக்

காதபடி தடுப்பதைத் தவிர, பத்திரிகைகளுக்குச் சுதந்திரம் அளிக்க வேண்டும்.''

அவருடைய கட்சியாரிடமிருந்தே எதிர்ப்புக் கூச்சலும் கண்டனமும் புயலென எழ, பின்வரும் தீர்மானத்தை லாரின் முன்வைத்தார்:

பத்திரிகைகள் சம்பந்தமான மக்கள் கமிசார் அவையின் அரசாணை ரத்து செய்யப்படுகிறது.

இத்ஸே-யி-கவால் (இதில் பிரதிநிதித்துவம் பெற்றிருக்கும் பற்பல கட்சிகளின் பலத்துக்கு ஏற்ற விகிதாசாரத்தில்)* தேர்ந்தெடுக்கப்படும் ஒரு சிறப்பு நீதிமன்றத்தின் தீர்மானத்துக்கு உட்பட்டே அரசியல் அடக்குமுறை நடவடிக்கைகள் எடுக்கப்பட வேண்டும். இந்த நீதிமன்றம் ஏற்கெனவே எடுக்கப்பட்டிருக்கும் அடக்குமுறை நடவடிக்கைகளை மறு பரிசீலனை செய்வதற்கான உரிமையையும் பெற்றிருக்க வேண்டும்.

இடதுசாரி சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களிடமிருந்து மட்டுமின்றி, போல்ஷிவிக்குகளில் ஒரு பகுதியோரிடமிருந்தும் இந்தத் தீர்மானத்துக்கு ஆதரவாகப் பலத்த கையொலி முழக்கம் எழுந்தது.

லெனின் தரப்பினரது சார்பில் அவனேசவ் அவசரமாய் எழுந்து, சோஷலிஸ்டுக் கட்சிகள் தம்மிடையே ஒரு சமரசத்துக்கு வரும் வரை பத்திரிகைகளைப் பற்றிய பிரச்சினையை ஒத்திப் போடலாமென்று முன்மொழிந்தார். மிகப் பெரும்பான்மையான வாக்குகளின் பேரில் இந்த முன்மொழிவு நிராகரிக்கப்பட்டது.

''தற்போது சாதிக்கப்பட்டு வரும் புரட்சியானது தனியார் சொத்தினைத் தாக்குவதற்கு எவ்விதத்திலும் தயக்கம் காட்டவில்லை'' என்று அவனேசவ் தொடர்ந்து பேசிச் சென்றார். ''பத்திரிகை சம்பந்தமான பிரச்சினையையும் தனியார் சொத்து என்பதான அடிப்படையிலேதான் நாம் பரிசீலிக்க வேண்டும்....''

---

* அடைப்புகளுக்கு உள்ளிருக்கும் சொற்கள் இத்ஸே-யி-க நிகழ்ச்சிக் குறிப்புகளில் காணப்படவில்லை.—[பதிப்பாசிரியர்.]

இப்படிச் சொல்லி அவர் அதிகார பூர்வமான போல்ஷி விக்குத் தீர்மானத்தை முன்மொழிந்து படித்துக் காட்டினார்:

முதலாளித்துவப் பத்திரிகைகளை மூடுவது அவசியமானதற்குக் காரணம், எழுச்சியின் போது எழுந்த முற்றிலும் இராணுவத் தன்மையிலான தேவைகள் மட்டுமல்ல; எதிர்ப் புரட்சி நடவடிக்கைகளைத் தடுக்க வேண்டியிருந்தது மட்டு மல்ல; பத்திரிகைகள் சம்பந்தமாக ஒரு புதிய ஆட்சிமுறை— அச்சகங்களின், காகிதத்தின் முதலாளித்துவ உடைமை யாளர்கள், பொதுமக்கள் அபிப்பிராயத்தை உருவாக்கும் சர்வசக்தி வாய்ந்த ஏகபோக உற்பத்தியாளர்களாக இருக்க முடியாத ஒரு புதிய ஆட்சிமுறை—நிறுவப்படுவதை நோக்கி மாறிச் செல்வதற்குரிய ஒரு நடவடிக்கை என்ற முறையில் இது தேவையாக இருந்ததும் காரணமாகும்.

தனியார் அச்சகங்களையும் காகித இருப்புகளையும் பறி முதல் செய்வதற்கு மேலும் தொடர்ந்து நாம் நடவடிக்கை கள் எடுத்துச் சென்றாக வேண்டும். இந்தத் தனியார் சொத்து கள் தலைநகரிலும் மற்றும் மாநிலங்களிலும் சோவியத்து களுக்குச் சொந்தமான சொத்துகளாகப்பட வேண்டும். அப் போதுதான் அரசியல் கட்சிகளும் கோஷ்டிகளும் அவை பிரதி நிதித்துவப் படுத்தும் கருத்துகளுக்குள்ள மெய்யான நடை முறை பலத்துக்கு ஏற்ற வீதாசாரத்தில்—அதாவது அவற் றின் ஆதரவாளர்களது எண்ணிக்கைக்கு ஏற்ற வீதாசாரத் தில் அச்சக வசதிகளைப் பயன்படுத்திக் கொள்ள முடியும்.

''பத்திரிகைச் சுதந்திரம்'' எனப்படுவது மீண்டும் நிலை நாட்டப்படுவதானது, அதாவது மக்களின் மனதை நச்சுப் படுத்துவோராகிய முதலாளிகளுக்கு அச்சகங்களும் காகித மும் திருப்பித் தரப்படுவதானது, சிறிதும் அனுமதிக்க வொண்ணாத முறையில் மூலதனத்தின் சித்தத்துக்குச் சரண டைவதையே குறிக்கும்; புரட்சியின் மிக முக்கிய வெற்றிச் சாதனைகளில் ஒன்று கைவிடப்படுவதையே குறிக்கும்; வேறு விதமாகச் சொன்னால் இது சந்தேகத்துக்கு இடமில்லாத எதிர்ப்புரடசித் தன்மை வாய்ந்த ஒரு செயலாகவே அமையும்.

ஆகவே, பத்திரிகை உலகில் பழைய ஆட்சிமுறையைத் திரும்பவும் நிறுவும் நோக்கம் கொண்ட எல்லா முன்மொழிவு

களையும் இத்ஸே-யி-க திட்டவட்டமாய் நிராகரிக்கிறது; குட்டிமுதலாளித்துவத் தப்பெண்ணங்களால் உந்தப் பட்டோ, எதிர்ப்புரட்சி முதலாளித்துவ வர்க்கத்தின் நலன் களுக்கு அப்பட்டமாகச் சரணடையும் முறையிலோ, முன்வைக் கப்படும் போலி வாதங்களையும், அளிக்கப்படும் இறுதி எச் சரிக்கைகளையும் எதிர்த்து இத்ஸே-யி-க இந்தப் பிரச்சினையில் மக்கள் கமிசார் அவையின் கருத்தோட்டத்தை எவ்வித ஐயப் பாட்டுக்கும் இடமின்றி ஆதரிக்கிறது.

இந்தத் தீர்மானம் படிக்கப்பட்ட போது இடதுசாரி சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களிடமிருந்து ஏளனக் கூச்சல் களும், கலகக்கார போல்ஷிவிக்குகளிடமிருந்து ஆத்திரக் கூப்பாடுகளும் எழுந்து கொண்டிருந்தன. கரேலின் எழுந்து நின்று கண்டனம் புரிந்தார்: ''மூன்று வாரங்களுக்கு முன் பெல்லாம் போல்ஷிவிக்குகள் பத்திரிகைச் சுதந்திரத்தைப் பாதுகாப்பதில் அளவு கடந்த உற்சாகம் காட்டினார்கள் ....இந்தத் தீர்மானத்தில் அடங்கியுள்ள வாதங்கள் பழைய கறுப்பு நூற்றுவர்கள், ஜாராட்சியிலிருந்த தணிக்கையாளர் கள் ஆகியோரது கருத்தோட்டத்தை எடுப்பான முறையில் நினைவுபடுத்துவனவாய் இருக்கின்றன—ஏனென்றால் அவர் களுங்கூட 'மக்களின் மனதை நச்சுப்படுத்துவோர்' என்பதா கத்தான் பேசினார்கள்.''

தீர்மானத்தை ஆதரித்துத் திரோத்ஸ்கி விரிவான முறை யில் பேசினார். உள்நாட்டு யுத்தத்தின் போது பத்திரிகை களது நிலைமைக்கும், வெற்றிக்குப் பிற்பாடு பத்திரிகைகளது நிலைமைக்கும் இடையிலான வேறுபாட்டை அவர் எடுத் துரைத்தார். ''உள்நாட்டு யுத்தத்தின் போது வன்முறையை உபயோகிக்கும் உரிமை ஒடுக்கப்பட்டோருக்கு மட்டும்தான் உண்டு....'' (கூப்பாடுகள்: ''இப்போது ஒடுக்கப்பட்டோர் யார்? கோடாலிக் காம்பு!'')

''நமது பகைவர்கள் மீதான வெற்றி இன்னும் கிட்டி யாகவில்லை. பத்திரிகைகள் அவர்கள் கைக்குக் கிடைக்கும் ஆயுதங்களாகும். இந்த நிலைமைகளில் பத்திரிகைகள் மூடப் பட்டது நியாயமான தற்காப்பு நடவடிக்கையே ஆகும்....'' பிறகு வெற்றிக்குப் பிற்பாடு பத்திரிகைகளின் நிலைமையைப்

பற்றிய பிரச்சினை குறித்துப் பேசுகையில் திரோத்ஸ்கி கூறினார்:

''பத்திரிகைச் சுதந்திரத்தைப் பற்றிய பிரச்சினையில் சோஷலிஸ்டுகளின் போக்கு, தொழில் நடத்துவதற்கான சுதந்திரம் குறித்து அவர்களுக்குள்ள போக்கைப் போன்றதாகவே இருத்தல் வேண்டும்.... ருஷ்யாவில் நிறுவப்பட்டு வரும் ஜனநாயக ஆட்சியானது, எப்படித் தொழில் துறையில் தனியாரது சொத்து புரியும் ஆதிக்கம் ஒழிக்கப்பட வேண்டுமென்று கோருகிறதோ, அதே போல் பத்திரிகைத் துறையிலும் தனியார் சொத்துக்குள்ள ஆதிக்கம் ஒழிக்கப்பட வேண்டுமென்று கோருகிறது.... சோவியத்துகளின் ஆட்சியதிகாரம் எல்லா அச்சகங்களையும் பறிமுதல் செய்யவே வேண்டும்.'' (''பிராவ்தாவின் அச்சகத்தைப் பறிமுதல் செய்யேன்!'' என்ற கூச்சல்கள் எழுந்தன.)

''பத்திரிகைத் துறையில் முதலாளித்துவ வர்க்கத்துக்குள்ள ஏகபோகம் ஒழிக்கப்பட வேண்டும். இல்லையேல் ஆட்சியதிகாரத்தை நாம் கைப்பற்றுவதில் அர்த்தமில்லை! குடிமக்களில் ஒவ்வொரு கோஷ்டிக்கும் அச்சகமும் காகிதமும் கிடைக்கக் கூடியதாய் இருக்க வேண்டும்.... அச்சகம், காகிதம் இவற்றிலான உடைமை முதற்கண் தொழிலாளர்களுக்கும் விவசாயிகளுக்குமே உரித்ததாகும், பிற்பாடே இவை சிறுபான்மைப் பிரிவாகிய முதலாளித்துவக் கட்சிகளுக்கு உரித்தாக முடியும்.... ஆட்சியதிகாரம் சோவியத்துகளின் கைக்கு மாறுவதைத் தொடர்ந்து அவசியமான வாழ்க்கை நிலைமைகளில் தீவிர மாற்றம் ஏற்படவே செய்யும், இந்த மாற்றம் பத்திரிகைத் துறையிலும் தவிர்க்க முடியாத வகையில் தெளிவாக வெளிப்படவே செய்யும்.... நாம் வங்கிகளை நாட்டுடைமையாக்கப் போகிறோம் என்றால், நிதி முதலாளிகளது செய்தியேடுகளை அப்படியே விட்டுவைப்பது சாத்தியமா? பழைய ஆட்சிமுறை இறந்தொழிந்தாக வேண்டும்; முற்றாகவும் முடிவாகவும் இது புரிந்து கொள்ளப்பட வேண்டும்....'' கையொலி முழக்கமும் கோபக் கூச்சல்களும்.

இந்த முக்கியப் பிரச்சினை குறித்து முடிவு செய்ய இத்ஸே-யி-கவுக்கு உரிமை இல்லை, இதனை ஒரு தனிக் கமிட்டியின் பரிசீலனைக்கு விட வேண்டும் என்று கரேலின் வற்புறுத்தினார்.

பத்திரிகைகள் சுதந்திரமாக விடப்பட வேண்டுமென்று மீண்டும் அவர் ஆவேசமாகக் கோரினர்.

பிறகு லெனின் உணர்ச்சி ஆவேசமின்றி அமைதியாக, நெற்றியைச் சுளித்துக் கொண்டு, சொற்களைத் தேர்ந்தெடுத்து மெதுவாகப் பேசினர். அவரது வாக்கியம் ஒவ்வொன்றும் ஒரு சம்மட்டி அடி போல் விழுந்தது. ''உள்நாட்டு யுத்தம் இன்னமும் முடிவுற்றவிடவில்லை; பகைவன் இன்னமும் நம் முன்னேதான் இருக்கிறன்; ஆதலால் பத்திரிகைகள் சம்பந்தமாய் அடக்குமுறை நடவடிக்கைகளை ஒழிப்பது சாத்தியமன்று.

''ஆட்சியதிகார நிலையை வந்தடைந்ததும் முதலாளித்துவப் பத்திரிகைகளை நாங்கள் மூடுவோம் என்றே போல்ஷிவிக்குகளாகிய நாங்கள் எப்போதுமே கூறி வந்திருக்கிறேம். முதலாளித்துவப் பத்திரிகைகளை அப்படியே விட்டு வைப்பதற்கு, சோஷலிஸ்டாக இல்லாதொழிவதென்றுதான் அர்த்தம். புரட்சி நடத்தும் எவரும் காலங் கடத்திக் கொண்டு சும்மாயிருப்பது சாத்தியமல்ல; எப்போதும் முன்னேக்கிப் போய்க் கொண்டிருக்க வேண்டும்—இல்லையேல் பின்னேக்கிச் செல்கிறவரே ஆவார். இப்போது ''பத்திரிகைச் சுதந்திரம்'' என்பதாகப் பேசுகிறவர் பின்னேக்கிச் செல்கிறவராவார், சோஷலிசத்தை நோக்கி முழு முனைப்போடு நாம் முன்னேறுவதைத் தடுத்து நிறுத்துகிறவராவர்.

''முதலாவது புரட்சி எப்படி ஜாரிஸ்டு ஒடுக்குமுறையை வீழ்த்திற்றே, அதே போல இப்பொழுது நாம் முதலாளித்துவ ஒடுக்குமுறையை வீழ்த்தியுள்ளோம். முதலாவது புரட்சிக்கு முடியரசுவாதப் பத்திரிகைகளுக்குத் தடை விதிக்க உரிமை இருந்ததென்றல், இப்போது முதலாளித்துவப் பத்திரிகைகளுக்குத் தடை விதிப்பதற்கு நமக்கும் உரிமை உண்டு என்பதில் ஐயமில்லை. பத்திரிகைச் சுதந்திரம் என்னும் பிரச்சினையை வர்க்கப் போராட்டத்தின் ஏனைய பிரச்சினைகளிலிருந்து தனியே பிரித்திடுவது முடியாத காரியம். இந்தப் பத்திரிகைகளை மூடுவோமென்று நாங்கள் வாக்குறுதி அளித்திருந்தோம், அவ்வாறு இவற்றை மூடவே போகின்றேம். மக்களில் மிகப் பெரும்பான்மையோர் எங்கள் பக்கமே இருக்கிருர்கள்!

''இப்பொழுது எழுச்சி முடிவுற்றுவிட்டதால், பிற சோஷலிஸ்டுப் பத்திரிகைகளுக்குத் தடை போட்டு நசுக்கும் விருப்பம்—ஆயுதமேந்திய எழுச்சி நடத்தும்படியோ, சோவியத்து அரசாங்கத்துக்குக் கீழ்ப்படியாது இருக்கும்படியோ இந்தப் பத்திரிகைகள் அறைகூவும் சந்தர்ப்பங்களைத் தவிர்த்து பிற நேரங்களில்—எங்களுக்கு இம்மியளவும் இல்லை. ஆனால் சோஷலிஸ்டுப் பத்திரிகைகளது சுதந்திரம் என்பதை மூடு திரையாகக் கொண்டு முதலாளித்துவ வர்க்கத்தின் இரகசிய ஆதரவின் மூலம் அச்சகங்கள், மசி, காகிதம் ஆகியவற்றில் அவை ஏகபோகம் பெறுவதற்கு நாங்கள் அனுமதிக்கப் போவதில்லை.... இந்த அத்தியாவசிய சாதனங்கள் சோவியத்து அரசாங்கத்தின் உடைமையாகி, யாவற்றுக்கும் முதலாய் சோஷலிஸ்டுக் கட்சிகளுக்கு அவற்றுக்குக் கிடைக்கும் வாக்குகளுக்கு ஏற்ப கறாரான வீதாசார அளவில் வகுத்து ஒதுக்கப்பட வேண்டும்....''

பிறகு வாக்கெடுப்பு நடைபெற்றது. லாரினும் இடதுசாரி சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களும் கொண்டு வந்த தீர்மானம் 31க்கு 22 வாக்குகளில்* தோற்கடிக்கப்பட்டது. லெனினுடைய தீர்மானம் 34க்கு 24 வாக்குகளில் வெற்றி பெற்றது. போல்ஷிவிக்குகளாகிய ரியஸானவும் லஸோவ்ஸ்கியும் சிறு பான்மையோரது தரப்பில் இருந்தார்கள், பத்திரிகைச் சுதந்திரத்துக்கு எவ்விதத்திலும் விலங்கிடுவதற்கு ஆதரவாய்த் தாங்கள் வாக்களிக்க முடியாதென்று அவர்கள் அறிவித்தார்கள்.

இதன்பின் இடதுசாரி சோஷலிஸ்டுப் புரட்சியாளர்கள் இனி தாம் இங்கு நடைபெறுவதற்குப் பொறுப்பு ஏற்க முடியாதெனக் கூறி, புரட்சி இராணுவக் கமிட்டியிலிருந்தும் நிர்வாகப் பொறுப்புக்குரிய ஏனைய எல்லாப் பதவிகளிலிருந்தும் விலகிக் கொண்டார்கள்.

மக்கள் கமிசார் அவையிலிருந்து நொகீன், ரீக்கவ், மிலூத்தின், தெயொடரோவிச், ஷிலியாப்னிக்கவ் ஆகிய ஐந்து உறுப்பினர்களும் ராஜிநாமா செய்து பின்வருமாறு அறிவித்தார்கள்:

* இது சரியல்ல. லாரினும் இடதுசாரி சோஷலிஸ்டுகளும் முன்வைத்த தீர்மானம் 25க்கு 20 வாக்குகள் பெற்றுத் தோல்வியடைந்தது.—[பதிப்பாசிரியர்].

சோவியத்துகளிலுள்ள எல்லாக் கட்சிகளையும் கொண்ட ஒரு சோஷலிச அரசாங்கம் வேண்டுமென்பவர்கள் நாங்கள். இம்மாதிரியான ஓர் அரசாங்கத்தை ஏற்படுத்தினுல் மட்டுமே தொழிலாளி வர்க்கமும் புரட்சிகரச் சேனையும் புரியும் வீரப் போராட்டத்தின் விளைவுகளை உத்தரவாதம் செய்து கொள்ள முடியுமென நாங்கள் கருதுகிறேம். இதல்லாமல், இருக்கக் கூடிய பிற வழி ஒன்றே ஒன்றுதான்: முற்றிலும் போல்ஷி விக்குகளாலான ஓர் அரசாங்கத்தை அரசியல் பயங்கர வாதத்தின் மூலம் அமைத்துக் கொள்வதுதான். இந்தப் பிந்திய வழியைத்தான் மக்கள் கமிசார் அவை ஏற்றுக் கொண்டு பின்பற்றுகிறது. நாம் இதைப் பின்பற்ற முடியாது, பின் பற்றவும் போவதில்லை. இந்த வழியானது, பல பட்டாளி வர்க்க நிறுவனங்கள் அரசியல் வாழ்விலிருந்து அகற்றப்படு வதற்கும், பொறுப்பற்ற ஓர் ஆட்சி நிறுவப்படுவதற்கும், புரட்சியும் நாடும் அழிந்து படுவதற்கும்தான் நேரடியாக இட்டுச் செல்கிறது என்பதை நாங்கள் கண்ணுறுகின்றேம். இம்மாதிரியான ஒரு கொள்கைக்கு நாங்கள் பொறுப் பேற்றுக் கொள்ள முடியாது. மக்கள் கமிசார்களாக எங்களுக் குள்ள பணியை இத்ஸே-யி-கவின் முன்னுல் நாங்கள் துறந்து விட்டு விலகிக் கொள்கிறேம்.

பின்வரும் பிற கமிசார்கள் தமது பதவிகளை ராஜிநாமா செய்யாமல், இந்த அறிக்கையில் கையொப்பமிட்டனர்: ரியசானவ், பத்திரிகைத் துறையைச் சேர்ந்த தேர்பிஷெவ், அரசாங்க அச்சகத்தைச் சேர்ந்த அர்பூஸவ், செங்காவலர் களைச் சேர்ந்த யுரேனியெவ், தொழிலாளர் துறை கமிசாரகத் தைச் சேர்ந்த பியோதரவ், அரசாணைத் தயாரிப்புப் பிரிவின் செயலாளர் லாரின்.

அதே போது காமெனெவ், ரீக்கவ், மிலூத்தின், ஸினேவி யெவ், நொகீன் ஆகியோர் போல்ஷிவிக்குக் கட்சியின் மத்தியக் கமிட்டியிலிருந்து விலகிக் கொண்டு, தமது இந்தச் செயலுக்கான காரணங்களைப் பின்வருமாறு பொது மக் களுக்கு அறிவித்தனர்:

...இம்மாதிரியான ஓர் அரசாங்கம் (சோவியத்துகளி லுள்ள எல்லாக் கட்சிகளையும் கொண்ட ஓர் அரசாங்கம்) அத்தியாவசியமாகும்: புதிதாக இரத்தப் பெருக்கு ஏற்படு

வதையும், பஞ்சம் தலைதூக்குவதையும், புரட்சியைக் கலே தினியர்கள் அழித்திடுவதையும் தடுத்து நிறுத்துவதற்காக வும், அரசியல் நிர்ணயச் சபை அதற்குரிய நேரத்தில் கூட் டப்படுவதை உத்தரவாதம் செய்து கொள்வதற்காகவும், சோவியத்துகளின் காங்கிரசால் ஏற்கப்பட்ட வேலைத்திட்டத் தைப் பயன் தரத் தக்க முறையில் செயல்படுத்துவதற்காக வும் இது அத்தியாவசியமாகும்....

மத்தியக் கமிட்டி கடைப்பிடிக்கும் பெருவிபத்துக்குரிய கொள்கைக்கு நாங்கள் பொறுப்பேற்க முடியாது. பாட்டாளி வர்க்கத்தினரிலும் படையாட்களிலும் மிகப் பெரும் பெரும் பான்மையோரின் விருப்பத்துக்கு விரோதமாக இந்தக் கொள்கை கடைப்பிடிக்கப்படுகிறது. இந்த மிகப் பெரும் பான்மையோர் ஜனநாயகத்தின் பற்பல அரசியல் கட்சிகளுக் கும் இடையிலுமான இரத்தப் பெருக்கு விரைவாகத் தடுத்து நிறுத்தப்பட வேண்டுமென்று ஆவல் கொண்டிருக்கிறார்கள்.... தொழிலாளர்கள், படையாட்கள் பெருந் திரளினருக்கு நாங்கள் எங்களது அபிப்பிராயத்தைப் பகிரங்கமாக எடுத்துரைக்க விரும்புகிறோம், இதன் பொருட்டு மத்தியக் கமிட்டி உறுப்பினர் நிலையினை நாங்கள் துறக்கின்றோம்....

வெற்றித் தருணத்தில் நாங்கள் மத்தியக் கமிட்டியிலிருந்து விலகிக் கொள்கிறோம். மத்தியக் கமிட்டியின் தலைவர்கள் கடைப்பிடிக்கும் கொள்கையானது வெற்றியின் நற்பலன்கள் இழக்கப்படுவதையும், பாட்டாளி வர்க்கம் நசுக்கப்படு வதையும் நோக்கி இட்டுச் செல்லும் ஒரு நேரத்தில் நாங்கள் அமைதியாகப் பார்த்துக் கொண்டு சும்மாயிருக்க முடிய வில்லை....

பெருந் திரளினரான தொழிலாளர்களும் நகரக் காவற் படையாட்களும் அமைதியிழந்து கலக்கமுற்று, ஸ்மோல் னிக்கும் புதிய அரசாங்கத்தை அமைப்பதற்கான மாநாட் டுக்கும் தமது தூதுக் குழுக்களை அனுப்பிக் கொண்டிருந்தார் கள். போல்ஷிவிக்குகளது அணிகளில் ஏற்பட்ட பிளவானது இந்த மாநாட்டில் பரபரப்பான மகிழ்ச்சியை ஏற்படுத்தி வந்தது.

ஆனால் லெனினியவாதிகள் அதிவிரைவாகவும் இரக்க மற்ற உறுதியோடும் பதிலளித்தனர். ஷிலியாப்னிக்கவும் தெயொடரோவிச்சும் கட்சிக் கட்டுப்பாட்டுக்குப் பணிந்து தமது பணித் துறைக்குத் திரும்பி வந்தார்கள். காமெனெவிடமிருந்து இத்ஸே-யி-க தலைவருக்குரிய அதிகாரங்கள் பறிக்கப்பட்டு, அவருக்குப் பதில் ஸ்வெர்திலோவ் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். ஸினோவியெவ் பெத்ரொகிராது சோவியத்தின் தலைவர் பதவியிலிருந்து அகற்றப்பட்டார். நவம்பர் 20 காலையில் பிராவ்தாவில் அனல் பறக்கும் பிரகடனம் ஒன்று—ருஷ்ய மக்களுக்கு வேண்டுகோள்—வெளிவந்தது. லெனினால் எழுதப்பட்ட இந்தப் பிரகடனம் நூறாயிரக் கணக்கான பிரதிகளில் அச்சிடப்பட்டு, எங்கும் சுவர்களில் ஒட்டப்பட்டது; ருஷ்யா எங்கணும் வினியோகிக்கப்பட்டது:*

சோவியத்துகளின் இரண்டாவது அனைத்து ருஷ்யக் காங்கிரஸ் போல்ஷிவிக்குக் கட்சிக்குப் பெரும்பான்மை அளித்தது. ஆகவே இந்தக் கட்சியால் அமைக்கப்படும் அரசாங்கம் மட்டும்தான் சோவியத்து அரசாங்கமாக முடியும். போல்ஷிவிக்குக் கட்சியின் மத்தியக் கமிட்டியானது புதிய அரசாங்கம் அமைக்கப்படுவதற்கும், இந்த அரசாங்கத்தின் உறுப்பினர்களது பட்டியலை சோவியத்துகளின் அனைத்து ருஷ்யக் காங்கிரசிற்கு முன்னால் முன்மொழிவதற்கும் சில மணி நேரம் முன்பு இடதுசாரி சோஷலிஸ்டுப் புரட்சியாளர் கோஷ்டியின் மிக முக்கிய உறுப்பினர்களில் மூவராகிய தோழர்கள் கம்கோவையும், ஸ்பிரோவையும், கரேலினையும் தனது கூட்டத்துக்கு வருமாறு அழைத்தது என்பதும், புதிய அரசாங்கத்தில் பங்கு கொள்ளுமாறு அவர்களைக் கேட்டுக் கொண்டது என்பதும் அனைவரும் அறிந்ததே. இவ்வாறு அழைக்

* இங்கு குறிக்கப்படுவது நவம்பர் 18-19ல் லெனின் எழுதிய வேண்டுகோள்; நவம்பர் 20ல் இது பிராவ்தாவில் வெளிவந்தது. இதன் தலைப்பு வருமாறு: ''ருஷ்யாவின் சமூக-ஜனநாயகத் தொழிலாளர் கட்சியின் (போல்ஷிவிக்குகள்) மத்தியக் கமிட்டியிடமிருந்து. கட்சி உறுப்பினர்கள் எல்லாருக்கும், ருஷ்யாவின் உழைப்பாளி வர்க்கங்கள் யாவற்றுக்கும்.''—[பதிப்பாசிரியர்.]

கப்பட்ட தோழர்கள் இதற்கு மறுத்துவிட்டது குறித்து நாங்கள் பெரிதும் வருந்துகிறோம். அவர்கள் இவ்வாறு மறுத்ததானது புரட்சியாளர்களுக்கும் தொழிலாளி வர்க்கக் காவலர்களுக்கும் அனுமதிக்கத் தக்கதல்ல என்பதாய் நாங்கள் கருதுகின்றோம். அரசாங்கத்தில் இடதுசாரி சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களைச் சேர்த்துக் கொள்ள எந்நேரமும் நாங்கள் தயாராகவே இருக்கிறோம். ஆனால் சோவியத்துகளின் இரண்டாவது அனைத்து ருஷ்யக் காங்கிரசில் பெரும்பான்மைக் கட்சி என்ற முறையில், நாங்கள் ஓர் அரசாங்கத்தை அமைத்திட உரிமை பெற்றுள்ளோம், மக்களுக்கு நாங்கள் ஆற்ற வேண்டிய கடமையாகும் இது என்பதைப் பறைசாற்றுகின்றோம்....

...தோழர்களே! நமது கட்சியின் மத்தியக் கமிட்டியையும் மக்கள் கமிசார் அவையையும் சேர்ந்த சில உறுப்பினர்களாகிய காமெனெவ், ஸினோவியெவ், நொகீன், ரீக்கவ், மிலூத்தின் ஆகியோரும் வேறு சிலரும் நேற்று, நவம்பர் 17ல் நமது கட்சியின் மத்தியக் கமிட்டியிலிருந்து விலகினர், கடைசி மூவரும் மக்கள் கமிசார் அவையிலிருந்து விலகினர்....

விலகிய இந்தத் தோழர்கள் கடமை துறந்து ஓடியவர்களாகச் செயல்பட்டவர்களாவர்; ஏனெனில் இவர்கள் தம்மிடம் ஒப்படைக்கப்பட்ட பணிப் பொறுப்புகளை விட்டு விட்டு ஓடியதோடுகூட, விலகுமுன் பெத்ரொகிராது, மாஸ்கோ கட்சி நிறுவனங்களது தீர்மானங்களுக்காகக் காத்திருந்து பார்க்க வேண்டுமென்று நமது கட்சியின் மத்தியக் கமிட்டி அளித்த நேரடியான தாக்கீதுகளையும் இவர்கள் மீறிச் சென்றுவிட்டனர். இம்மாதிரியான கடமைத் துறப்பு குற்றகரமானதென்று நாங்கள் தீர்மானமாய்க் கண்டிக்கின்றோம். நமது கட்சியைச் சேர்ந்த, அல்லது அதற்கு அனுதாபமான, உணர்வு படைத்த எல்லாத் தொழிலாளர்களும் படையாட்களும் விவசாயிகளும் கடமை துறந்து ஓடிய இவர்களின் செயலைக் கண்டிக்கவே செய்வார்களென நாங்கள் திடமாக நம்புகிறோம்.

தோழர்களே, இந்தக் கடமை துறப்பாளர்களில் இருவர், காமெனெவும் ஸினோவியெவும் பெத்ரொகிராதில் எழுச்சிக்கு முன்பேகூட கடமை துறப்பாளர்களாகவும் கருங்

காலிகளாகவும் செயல்பட்டவர்கள் என்பதை நினைவில் கொள்ளுங்கள்: 1917 அக்டோபர் 23ல் மத்தியக் கமிட்டி யின் தீர்மானகரமான கூட்டத்தில் இவர்கள் எழுச்சிக்கு எதிராய் வாக்களித்தவர்கள் என்பதையும், மத்தியக் கமிட்டி யால் தீர்மானம் நிறைவேற்றப்பட்ட பிற்பாடும் கட்சி ஊழியர்களது கூட்டத்தில் தமது இயக்கத்தைத் தொடர்ந்து நடத்தியவர்கள் என்பதையும் நினைவில் கொள்ளுங்கள்... ஆனால் மக்கள் பெரும் திரளினரது மாபெரும் உணர்ச்சி வேகமானது, மாஸ்கோவிலும் பெத்ரொகிராதிலும் போர் முனையிலும் அகழ்வரிகளிலும் கிராமங்களிலும் பத்துலட்சக் கணக்கிலான தொழிலாளர்கள், படையாட்கள், விவசாயி களது மாபெரும் வீரமானது மரத்தூளை எப்படி ரயில் வண்டி ஒதுக்கித் தள்ளுமோ அது போல இந்தக் கடமை துறப்பாளர்களை ஒதுக்கித் தள்ளிவிட்டது....

நம்பிக்கையில்லாதவர்கள், தயங்குவோர், சந்தேகப்படு வோர், முதலாளித்துவ வர்க்கத்தாரின் பீதியூட்டலுக்குப் பலியாகிவிடுவோர், அவர்களது நேரடியான, அல்லது மறை முகமான உடந்தையாளர்களது கூச்சல்களுக்குப் பணிந்து விடுவோர்—இப்படிப்பட்டோர் எல்லாம் இழிவுக்குரியவர் கள்! பெத்ரொகிராதிலும் மாஸ்கோவிலும் ருஷ்யாவின் பிற இடங்களிலும் மக்கள் பெருந் திரளினரிடத்தே தயக்கம் கடுகளவும் இல்லை....

...மக்கள் பெருந்திரளினரது ஆதரவில்லாதோரும், நடைமுறையில் கர்னீலவியர்களாலும் சாவின்கொவியர்களா லும் யூன்கெர்களாலும் இன்னோரன்ன பிறராலும் மட்டுமே ஆதரிக்கப்படுவோருமான அறிவுத்துறையினரது சிறு கோஷ் டிகளின் இறுதி எச்சரிக்கைகள் எவற்றுக்கும் நாங்கள் பணிய மாட்டோம்....

நாடெங்கிலுமிருந்து கிடைத்த பதில் சீற்றம் மிக்கதா யிருந்தது. கலவரம் செய்தவர்கள் ''தொழிலாளர்கள், படையாட்கள் பெருந் திரளினரிடையே தமது அபிப்பிராயத் தைப் பகிரங்கமாகக் கூறுவதற்கு'' வாய்ப்பில்லாதபடி ஒதுக் கப்பட்டனர். ''கடமை துறந்து ஓடியோருக்கு'' எதிரான மக்கள் திரளினரது உக்கிரமான கண்டனமானது கடல்

அலைகளெனக் கிளர்ந்து எழுந்து இத்ஸே-யி-கவிடம் வந்து சேர்ந்தது. போர்முனையிலிருந்தும் வோல்காவிலிருந்தும் பெத்ரொகிராது ஆலைகளிலிருந்தும் ஆத்திரங் கொண்ட தூதுக்குழுக்களும் கமிட்டிகளும் நாட் கணக்காய் ஸ்மோல்னியில் வந்து குழுமிய வண்ணமிருந்தன. ''அரசாங்கத்தை விட்டு விலகும் துணிவு எப்படி அவர்களுக்கு வந்தது? புரட்சியை ஒழிப்பதற்காக முதலாளித்துவ வர்க்கம் கூலி கொடுத்து அவர்களைச் செயல்பட வைத்ததா? உடனே அவர்கள் திரும்பி வந்து மத்தியக் கமிட்டியின் முடிவுகளுக்குக் கீழ்ப்படிந்தாக வேண்டும்!''

நகரக் காவற் படையில் மட்டும்தான் இன்னமும் நிச்சயமில்லாத நிலைமை நீடித்தது. நவம்பர் 24ல் படையாட்களது மாபெரும் பொதுக் கூட்டம் ஒன்று நடைபெற்றது, எல்லா அரசியல் கட்சிகளின் பிரதிநிதிகளும் இந்தக் கூட்டத்தில் உரையாற்றினர். மிகப் பெரும்பான்மை வாக்குகளின் பேரில் லெனின் கொள்கை அங்கீகரிக்கப்பட்டது. இடதுசாரி சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களை அரசாங்கத்தில் சேர்ந்து கொள்ளும்படி இக்கூட்டம் கோரிற்று[6]....

மென்ஷிவிக்குகள் ஓர் இறுதி எச்சரிக்கை அளித்தார்கள், எல்லா அமைச்சர்களும் யூன்கெர்களும் விடுதலை செய்யப்பட வேண்டுமென்றும், எல்லாச் செய்தியேடுகளுக்கும் முழுச் சுதந்திரம் அளிக்கப்பட வேண்டுமென்றும், செங்காவலர்கள் நிராயுதபாணியாக்கப்பட வேண்டுமென்றும், நகரக் காவற் படை டூமாவின் தலைமை அதிகாரத்தின் கீழ் இருத்தப்பட வேண்டுமென்றும் கோரினார்கள். இதற்கு ஸ்மோல்னி அளித்த பதில் வருமாறு: எல்லா சோஷலிஸ்டு அமைச்சர்களும் யூன்கெர்களில் ஒரு சிலரைத் தவிர்த்து ஏனையோர் யாவரும் ஏற்கெனவே விடுவிக்கப்பட்டுவிட்டனர், முதலாளித்துவப் பத்திரிகைகளைத் தவிர்த்து எல்லாச் செய்தியேடுகளும் சுதந்திரமுடையவையே, ஆயுதப் படைகளுக்கு சோவியத்துதான் தொடர்ந்து படைத் தலைமை வகிக்கும்.... புதிய அரசாங்கம் அமைப்பதற்கான மாநாடு நவம்பர் 19ல் கலைந்து போயிற்று. எதிர்த் தரப்பாளர்கள் ஒவ்வொருவராக மொகிலேவுக்குப் போய்ச் சேர்ந்தார்கள், அங்கே இராணுவத் தலைமை அலுவலர்களின் காப்பில் இருந்து கொண்டு ஓயாமல்

இறுதிவரை அரசாங்கத்துக்கு அடுத்து அரசாங்கமாய் அமைத்துக் கொண்டிருந்தார்கள்....

இதற்கிடையில் போல்ஷிவிக்குகள் **விக்ழேலின்** அதிகாரத்துக்குக் குழி பறித்து வந்தார்கள். **விக்ழேலை** நிர்ப்பந்தம் செய்து அதன் அதிகாரங்களைக் கைவிடச் செய்யுமாறு எல்லா ரயில்வேத் தொழிலாளர்களுக்கும் பெத்ரொகிராது சோவியத்து வேண்டுகோள் விடுத்தது. **இத்ஸே-யி-க** விவசாயிகள் சம்பந்தமாக அனுசரித்த வழிமுறையைப் பின்பற்றி நவம்பர் 15ல் ரயில்வேத் தொழிலாளர்களது அனைத்து ருஷ்ய காங்கிரசினை டிசம்பர் முதல் நாளன்று கூடுமாறு அழைத்தது, உடனே **விக்ழேல்** அதற்கு இரண்டு வாரங்களுக்குப் பிற்பாடு தனது சொந்த காங்கிரசினைக் கூடும்படி அழைத்தது. நவம்பர் 16ல் **விக்ழேல்** உறுப்பினர்கள் **இத்ஸே-யி-கவில்** தமக்குரிய இடங்களை ஏற்றுக் கொண்டார்கள். டிசம்பர் 2 இரவில் ரயில்வேத் தொழிலாளர்களது அனைத்து ருஷ்யக் காங்கிரசின் துவக்க அமர்வில் **இத்ஸே-யி-க** அதிகாரபூர்மான முறையில் அனைத்து ருஷ்ய ரயில்வேப் போக்குவரத்துக் கமிசார் பதவியை **விக்ழேலுக்கு** அளித்தது, **விக்ழேலும்** இதனை ஏற்றுக் கொண்டது....

ஆட்சியதிகாரப் பிரச்சினைக்குத் தீர்வு கண்டதும் போல்ஷிவிக்குகள் தமது கவனத்தை இப்போது நடைமுறை நிர்வாகப் பிரச்சினைகளின் பக்கம் திருப்பினர். முதலாவதாக, நகருக்கும் நாட்டுக்கும் சேனைக்கும் உணவு அளித்தாக வேண்டியிருந்தது. மாலுமிகளும் செங்காவலர்களும் சிறு குழுக்களாகச் சென்று கிடங்குகளையும் ரயில் முடிவு நிலையங்களையும் கால்வாய்களில் நின்ற தெப்பங்களையும்கூட துருவிச் சோதனையிட்டனர். இவ்விதம் அவர்கள் கள்ளச் சந்தை வாணிபத் தனியார் நிலையங்கள் வசமிருந்த ஆயிரக் கணக்கான **பூடு*** தானியத்தைத் தேடிப் பிடித்து அவற்றைப் பறிமுதல் செய்தனர். ஆட்கள் மாநிலங்களுக்கு அனுப்பி வைக்கப்பட்டனர், அங்கே அவர்கள் நிலக் கமிட்டிகளின் துணை கொண்டு பெரிய தானிய வணிகர்களது கிடங்குகளைக் கைப்பற்றினர். கனத்த ஆயுதங்கள் தரித்த மாலுமிகள் ஐந்தாயி

---

* **பூடு** என்பது முப்பத்தாறு ராத்தலுக்குச் சமம்.

ரம் பேர் அடங்கிய படைத் தொகுதிகளாய் வகுக்கப்பட்டு, தென் பகுதிகளுக்கும் சைபீரியாவுக்கும் அனுப்பப்பட்டார்கள்; அங்கே இன்னமும் வெண்காவலர்கள் வசமிருந்து வந்த நகரங்களைப் பிடித்து ஒழுங்கை நிலைநாட்டி உணவு அனுப்பி வைக்கும்படிப் பணிக்கப்பட்டார்கள். டிரான்ஸ்சைபீரிய ரயில் மார்க்கத்தில் பயணிகளின் போக்குவரத்து இரண்டு வாரங்களுக்கு நிறுத்தி வைக்கப்பட்டது; துணிக் கட்டுகளும் ஆலைத் தொழிற்கூடக் கமிட்டிகளால் சேகரிக்கப்பட்ட இரும்புத் தளவாடங்களும் நிரப்பப்பட்ட பதின்மூன்று ரயில்வண்டிகள் கிழக்கு நோக்கி அனுப்பப்பட்டன. இந்த வண்டி ஒவ்வொன்றுக்கும் பொறுப்பாக ஒரு கமிசார் நியமிக்கப்பட்டு அனுப்பி வைக்கப்பட்டார். இவர் இப்பொருள்களைச் சைபீரிய விவசாயிகளிடம் கொடுத்து இவற்றுக்குப் பதில் தானியமும் உருளைக் கிழங்கும் அவர்களிடமிருந்து பெற்று வரவேண்டும்....

தோன் பிரதேசத்து நிலக்கரிச் சுரங்கங்கள் கலேதின் வசமிருந்ததால், எரிபொருள் பிரச்சினை மிகவும் அவசர அவசியமான பிரச்சினையாகிவிட்டது. நாடக மன்றங்கள், திரைப்படக் கூடங்கள், கடைகள், உண்டிச் சாலைகள் ஆகியவற்றின் மின்விளக்குகளுக்கு மின்விசையை நிறுத்தியது, ஸ்மோல்னி. எரிபொருள் விற்பனையாளர்கள் வசமிருந்த தனியார் விறகுக் கையிருப்புகளை ஸ்மோல்னி பறிமுதல் செய்தது.... பெத்ரொகிராது ஆலைகள் நிலக்கரி இல்லாமல் மூடப்பட வேண்டிய நிலைமையை வந்தடைந்ததும், பால்டிக் கடற் படையைச் சேர்ந்த மாலுமிகள் போர்க் கப்பல்களிடமிருந்து இரண்டு லட்சம் பூடு நிலக்கரியை தொழிலாளர்கள் வசம் ஒப்படைத்தார்கள்....

நவம்பர் மாத இறுதியில் ''மது வேட்டை''[7]—மது நிலவறைக் கிடங்குகளைச் சூறையாடும் வெறியாட்டம் — நடைபெற்றது. குளிர்கால அரண்மனையின் நிலவறைக் கிடங்கள் முதலில் சூறையாடப்பட்டன. குடி போதை கொண்ட படையாட்கள் பல நாட்களுக்குத் தெருக்களில் திரிந்து கொண்டிருந்தார்கள்.... இவை யாவற்றிலும் எதிர்ப்புரட்சியாளர்களது சதிவேலை அடியில் இருந்தது தெரியலாயிற்று. மதுக் கிடங்குகள் இருக்கும் இடங்கள் பற்றிய விவரக் குறிப்பு

களை இந்த எதிர்ப்புரட்சியாளர்கள் படையணிகளிடையே வினியோகித்தனர். ஸ்மோல்னியின் கமிசார்கள் ஆரம்பத்தில் வேண்டுகோள்கள் மூலமும் விளக்கப் பிரசாரத்தின் மூலமும் இதைத் தடுத்து நிறுத்த முயன்றார்கள். வளர்ந்து சென்ற ஒழுங்கின்மையை இவற்றால் தடுக்க முடியவில்லை. பிறகு படையாட்களுக்கும் செங்காவலர்களுக்கும் இடையே போர்களே நடைபெற்றன.... முடிவில் புரட்சி இராணுவக் கமிட்டி இயந்திரத் துப்பாக்கிகளைக் கொண்ட மாலுமிப் படைக் குழுக்களை அனுப்பி வைத்தது. குடித்துவிட்டுக் கலகம் புரிந்த கும்பல்கள் மீது இந்த மாலுமிகள் ஈவிரக்கமின்றி சுட்டார்கள், பலர் கொல்லப்பட்டார்கள். நிர்வாக உறுப்புகளின் உத்தரவின் பேரில் கைக் கோடரிக் குழுவினர் மதுக் கிடங்குகளைப் படையெடுத்து மதுப் புட்டிகளை உடைத்துத் தள்ளினார்கள், அல்லது வேட்டு வைத்துத் தகர்த்திட்டனர்....

வட்டார சோவியத்துகளின் தலைமையகங்களில் பழைய மிலிஷியாவுக்குப் பதில் கட்டுப்பாடு மிகுந்த, தக்க சம்பளம் தரப்பட்ட செங்காவலர் படைக் குழுக்கள் இராப் பகலாய்க் காவல் புரிந்தன. நகரின் எல்லாப் பகுதிகளிலும் சிறு குற்றங்களை விசாரித்துத் தீர்ப்பளிப்பதற்காக, தொழிலாளர்களாலும் படையாட்களாலும் தேர்ந்தெடுக்கப்பட்ட சிறுச் சிறு புரட்சி நீதிமன்றங்கள் நிறுவப்பட்டன....

கள்ளச் சந்தையினர் மும்முரமாய்த் தொழில் புரிந்து வந்த பெரிய ஓட்டல்களைச் செங்காவலர்கள் சுற்றி வளைத்துக் கொண்டார்கள், கள்ளச் சந்தையினர் சிறையில் தள்ளப்பட்டார்கள்[8]....

விழிப்பும் எச்சரிக்கை உணர்வும் மிக்க நகரத் தொழிலாளி வர்க்கம் விஸ்தாரமான உளவு அமைப்பாகத் தன்னை நிறுவிக் கொண்டு, வீட்டு வேலையாட்கள் மூலம் முதலாளித்துவக் குடும்பத்தாரின் இரகசிய வேலைகள் குறித்துத் தகவல்கள் அறிந்து எல்லா விவரங்களையும் புரட்சி இராணுவக் கமிட்டிக்குத் தெரிவித்து வந்தது. புரட்சி இராணுவக் கமிட்டி இரும்புக் கரங் கொண்டு ஓய்ச்சல் ஒழிவின்றி செயல்பட்டது. முன்னாள் டூமா உறுப்பினர் புரிஷ்கேவிச்சும் பிரபுக் குலத்தோரும் படையதிகாரிகளுமான ஒரு கோஷ்டியாரும் தலைமை

தாங்கி நடத்திய முடியாட்சிவாதச் சதி ஒன்று இவ்வாறுதான் கண்டுபிடிக்கப்பட்டது—இந்தச் சதிகாரர்கள் படையதிகாரிகளது கலகத்துக்கு ஏற்பாடு செய்து வந்தார்கள், கலேதினைப் பெத்ரொகிராதுக்கு வரும்படி அழைத்து அவருக்குக் கடிதம் எழுதியிருந்தார்கள்[9]... கலேதினுக்குப் பணமும் போருக்கு ஆட்களும் திரட்டி அனுப்பிக் கொண்டிருந்த பெத்ரொகிராது காடேட்டுகளது சதித் திட்டமும் இவ் வழியில்தான் அம்பலமாக்கப்பட்டது....

நெராத்தவ் தாம் ஓடிச் சென்று ஒளிந்து கொண்டதால் பொது மக்களிடையே எழுந்த ஆத்திரத்தைக் கண்டு பீதியடைந்து போய், திரும்பி வந்து இரகசிய உடன்படிக்கைகளைத் திரோத்ஸ்கியிடம் ஒப்படைத்தார். திரோத்ஸ்கி இவற்றைப் **பிராவ்தாவில்** வெளியிட ஆரம்பித்து மானக்கேட்டை உண்டாக்கி உலகை அதிரச் செய்தார்....

விளம்பரங்களை அதிகார பூர்வமான அரசாங்கச் செய்தியேட்டுக்குரிய ஏகபோகமாக்கிய அரசாணை[10] பிறப்பிக்கப்பட்டு, பத்திரிகைகள் மீதான தடை வரம்புகள் கூடுதலாக்கப்பட்டன. இதைக் கண்டித்து இதரப் பத்திரிகைகள் யாவும் வெளிவராமல் நின்றன; அல்லது இந்தச் சட்டத்தை மீறிச் சென்றதால், தடை விதிக்கப்பட்டு மூடப்பட்டன.... மூன்று வாரங்களுக்குப் பிற்பாடுதான் முடிவில் அவை இந்த அரசாணைக்குக் கீழ்ப்படியலாயின.

அமைச்சகங்களில் வேலைநிறுத்தமும் பழைய அதிகாரிகளது சீர்குலைவு வேலைகளும், முறையான பொருளாதார வாழ்வு குலைக்கப்படுவதும் தொடர்ந்து நடைபெற்று வந்தன. ஸ்மோல்னியின் பின்னால் ஆதரவாக நின்றது ஒழுங்கமைப்பு பெறாத மிகப் பெரிய அளவிலான மக்கள் பெருந் திரளினர் தான். இந்த மக்கள் பெருந் திரளினரைச் செயல்பட வைத்து, இவர்களது புரட்சிகரச் செயல்களை மக்கள் கமிசார் அவை தனது பகைவர்களுக்கு எதிராய் வழி நடத்தி நெறியாண்மை புரிந்தது.[11] ருஷ்யா எங்கும் பரப்பப்பட்ட எளிய சொற்களில் அமைந்த எழுச்சியூட்டும் பிரகடனங்கள்[12] மூலம் புரட்சியை லெனின் தெளிவுபட விளக்கிக் கூறினார்; ஆட்சியதிகாரத்தை மக்கள் தாமே மேற்கொள்ள வேண்டுமென்று, சொத்துடைத்த வர்க்கங்களது எதிர்ப்பினை அவர்

கள் தம் பலத்தைக் கொண்டு தகர்த்திட வேண்டுமென்று, அரசாங்க நிலையங்களை அவர்கள் தம் பலத்தைக் கொண்டு தன் கைக்குக் கொண்டு வந்துவிட வேண்டுமென்று அவர் களுக்கு அறிவுறுத்தினர். புரட்சிகர ஒழுங்கு, புரட்சிகர கட்டுப்பாடு! கண்டிப்பான கணக்குப் பதிவு முறை, கண் காணிப்பு! வேலைநிறுத்தங்கள் வேண்டாம்! சோம்பித் திரிதல் கூடாது![13]

நவம்பர் 20ல் புரட்சி இராணுவக் கமிட்டி எச்சரிக்கை செய்தது:

செல்வந்தர் வர்க்கங்கள் சோவியத்தின் ஆட்சியதிகா ரத்தை—தொழிலாளர்கள், படையாட்கள், விவசாயிகளது அரசாங்கத்தை—எதிர்க்கின்றன. அவற்றின் அனுதாபிகள் அரசாங்க ஊழியர்களது வேலைகளைத் தடுத்து நிறுத்துகிறார் கள். டூமாவானது வங்கிகளில் வேலைநிறுத்தங்களைத் தூண்டி விடுகிறது, ரயில் போக்குவரத்தையும் தபால், தந்தித் துறையையும் செயல்படாது வைக்க முயலுகிறது....

**இவர்கள் நெருப்புடன் விளையாடுகிறார்கள் என்று இவர்களை எச்சரிக்கின்றோம்.** நாட்டையும் சேனையையும் பஞ்சம் அச் சுறுத்துகிறது. இந்தப் பஞ்சத்தை எதிர்த்துப் போராடு வதற்கு, எல்லாப் பணித் துறைகளும் முறையாக வேலை செய்வது அத்தியாவசியமாகும். நாட்டுக்கும் சேனைக்கும் அவசியமானவை யாவும் கிடைக்கும்படி உத்தரவாதம் செய் வதற்கான எல்லா நடவடிக்கைகளையும் தொழிலாளர்கள், விவசாயிகளது அரசாங்கம் எடுத்து வருகிறது. **இந்த நடவடிக் கைகளை எதிர்த்திடுதல் மக்களுக்கு எதிரான பெருங்குற்ற மாகும்.** செல்வந்தர் வர்க்கங்களையும் அவற்றின் அனுதாபிகளை யும் நாங்கள் எச்சரிக்கின்றோம்: அவர்கள் தமது சீர்குலைவு வேலைகளையும் உணவுப் போக்குவரத்தை நிறுத்தும்படித் தூண்டிவிட்டுக் சதி புரிவதையும் விட்டொழிக்காவிட் டால், **எல்லாருக்கும் முதலாவதாக அவர்கள்தான் துன்புற வேண்டியிருக்கும்** என்று எச்சரிக்கின்றோம். **உணவு பெறுவ தற்கான உரிமையை அவர்கள் இழக்க வேண்டிவரும். அவர்கள் வசமுள்ள கையிருப்புகள் யாவும் கைப்பற்றப்படும். தலைமை யான குற்றவாளிகளது சொத்துகள் பறிமுதல் செய்யப்படும்.**

நெருப்புடன் விளையாடுவோரை நாங்கள் எச்சரிக்கை செய்துவிட்டோம், எங்களது கடமையை நாங்கள் செய்து விட்டோம்.

தீர்மானகரமான நடவடிக்கைகள் அவசியமாகும் பட்சத்தில் எல்லாத் தொழிலாளர்கள், படையாட்கள், விவசாயிகளது உறுதியான ஆதரவு எங்களுக்கு இருக்கும் என்று திடமாய் நம்புகிறோம்.

நவம்பர் 22ல் நகரின் சுவர்களில் ''விசேஷ அறிவிப்பு'' என்பதாக ஒரு சுவரொட்டி காணப்பட்டது:

மக்கள் கமிசார் அவைக்கு வடக்குப் போர்முனையின் தலைமை அலுவலர்களிடமிருந்து அவசரத் தந்தி ஒன்று வந்திருக்கிறது....

''மேற்கொண்டு தாமதம் செய்யலாகாது; சேனையைப் பட்டினியால் சாகும்படி விடாதீர்கள்; கடந்த சில நாட்களாய் வடக்குப் போர்முனையின் சேனைகளுக்கு ஒரு துண்டு ரொட்டிகூட கிடைக்கவில்லை; இன்னும் இரண்டு, மூன்று நாட்களில் அவற்றுக்குத் தருவதற்கு ரஸ்கும்கூட இல்லாமற் போய்விடும்—இது காறும் தொடப்படாத சேமக் காப்பு இருப்பிலிருந்து சிறு அளவில் இந்த ரஸ்குகள் இப்போது அவற்றுக்குத் தரப்பட்டு வருகின்றன.... போர்முனையின் எல்லாப் பகுதிகளிலிருந்தும் வரும் பிரதிநிதிகள், சேனையில் ஒரு பகுதியை நாட்டின் உட்பகுதிகளுக்கு அனுப்புவது அவசியமென ஏற்கெனவே பேசுகின்றார்கள். படையாட்கள் பட்டினியால் மடிகிறார்கள், அகழ்வரிகளில் மூன்று ஆண்டுக் காலப் யுத்தத்தால் கொடுமைப்பட்டு, பிணியுற்று, போதிய உடுப்புகளின்றி, வெறுங்காலினராகி, மனித சக்திக்கு அப்பாற்பட்ட கொடுந் துன்பம் தாங்காமல் சித்தம் கலங்கும் இந்த நிலைமையில் இன்னும் ஒரு சில நாட்களில் படையாட்கள் போர்முனையிலிருந்து ஓட்டமெடுக்க நேருமென இந்தப் பிரதிநிதிகள் கூறுகிறார்கள்.''

புரட்சி இராணுவக் கமிட்டி இதனைப் பெத்ரொகிராது நகரக் காவற் படையினரின் கவனத்துக்கும், பெத்ரொகிராது தொழிலாளர்களின் கவனத்துக்கும் கொண்டு வரு

கிறது. போர்முனையில் நிலவும் நிலைமையானது மிகவும் அவசரமான, தீர்மானகரமான நடவடிக்கைகளை அவசியமாக்குகிறது.... இதற்கிடையில் அரசாங்க நிலையங்கள், வங்கிகள், ரயில்வேக்கள், தபால், தந்தித் துறை ஆகியவற்றின் உயர் அலுவலர்கள் வேலைநிறுத்தம் செய்து, போர்முனைக்கு அவசியப் பொருள்களை வழங்குவதற்கான அரசாங்க வேலைகளுக்கு இடையூறு செய்து வருகிறார்கள்.... தமாதமாகும் ஒவ்வொரு மணி நேரமும் ஆயிரக் கணக்கான படையாட்களது உயிருக்கு உலை வைப்பதாகும். இந்த எதிர்ப்புரட்சி அலுவலர்கள் போர்முனையில் பட்டினி கிடக்கும், உயிரிழக்கும் சோதரர்களுக்குத் துரோகமிழைத்துக் கொலைபாதகக் குற்றம் புரிவோராவர்....

புரட்சி இராணுவக் கமிட்டி இந்தக் கொலைபாதகர்களைக் கடைசி முறையாக எச்சரிக்கை செய்கிறது. அவர்களிடமிருந்து இம்மியளவு எதிர்ப்பு காட்டப்படுமாயினும், அவர்களது குற்றத்தின் கடுமைக்கு ஒத்த அளவுக்கு உக்கிரமான நடவடிக்கைகள் அவர்களுக்கு எதிராய் எடுக்கப்படும்....

பெருந்திரளினரான தொழிலாளர்களும் படையாட்களும் இதைக் கேட்டு சீற்றங் கொண்டு எழுந்து குரல் கொடுத்தனர். அனைத்து ருஷ்யாவிலும் ஆத்திரம் அலை மோதிற்று. தலைநகரில் அரசாங்கத்தின், வங்கிகளின் அலுவலர்கள் அடியிற் கண்டது போன்ற நூற்றுக் கணக்கான பிரகடனங்களையும் வேண்டுகோள்களையும்[14] வெளியிட்டுக் கண்டனம் தெரிவிக்கவும், தம்மைத் தற்காத்துக் கொள்ளவும் முயன்றார்கள்:

**குடிமக்களே கவனியுங்கள்.**

*அரசு வங்கி மூடப்பட்டிருக்கிறது!*

*ஏன்?*

ஏனென்றால், அரசு வங்கிக்கு எதிராகப் போல்ஷிவிக்குகள் புரியும் வன்முறையானது எங்களை வேலை செய்ய முடியாதபடி செய்திருக்கிறது. மக்கள் கமிசார்கள் தமது முதற் செயலாக, ஒரு கோடி ரூபிள் தரும்படிக் கோரினார்கள், பிறகு நவம்பர் 27ல் அவர்கள் இரண்டரைக் கோடி

கொடுக்கும்படிக் கோரினார்கள், இந்தப் பணம் எங்கே போகப் போகிறது என்பது குறித்து அவர்கள் எந்த விவரமும் தெரிவிக்கவில்லை.

...அலுவலர்களாகிய நாங்கள் மக்களது சொத்து கொள்ளையடிக்கப்படுவதற்குத் துணை புரியலாகாது. நாங்கள் வேலை நிறுத்தம் செய்தோம்.

குடிமக்களே! அரசு வங்கியிலுள்ள பணம் உங்களுடையது. மக்களுடைய பணம், உங்கள் உழைப்பால், உங்கள் வியர்வையாலும் இரத்தத்தாலும், கைவரப் பெற்றது. குடிமக்களே! மக்களுடைய சொத்து சூறையாடப்படாதபடி பாதுகாத்திடுங்கள், வன்முறையிலிருந்து எங்களைக் காப்பாற்றுங்கள், உடனே நாங்கள் வேலைக்குத் திரும்பி விடுவோம்.

**அரசு வங்கியின் அலுவலர்கள்.**

வழங்கு துறை அமைச்சகம், நிதி அமைச்சகம், தனிப் பொருள் வழங்கீட்டுச் கமிட்டி ஆகியவற்றின் அலுவலர்களும் அறிக்கைகள் வெளியிட்டார்கள். அலுவலர்கள் தொடர்ந்து வேலை செய்வதைச் சாத்தியமற்றதாக்கிவிட்டது புரட்சி இராணுவக் கமிட்டி என்று அவர்கள் அறிவித்தார்கள்; ஸ்மோல்னிக்கு எதிராய்த் தமக்கு ஆதரவளிக்க வேண்டும் என்று நகரவாசிகளை அவர்கள் கேட்டுக் கொண்டார்கள்.... ஆனால் அவர்கள் கூறியதைச் சாதாரணத் தொழிலாளர்களும் படையாட்களும் நம்பவில்லை. அலுவலர்கள்தான் சீர்குலைவு செய்கிறார்கள், சேனையைப் பட்டினி போடுகிறார்கள், மக்களைப் பட்டினி கிடக்கச் செய்கிறார்கள் என்ற கருத்து மக்கள் திரளினரின் மனத்தில் ஆழப் பதிந்திருந்தது.... முன்பு போலவே ரொட்டிக்காகக் காத்துக் கொண்டு கொடுங் குளிரில் தெருக்களிலே நீள் வரிசைகளில் நின்றோர், முன்பு கேரென்ஸ்கி இருந்த போது செய்தது போல், இப்போது அரசாங்கத்தைக் குற்றம் கூறவில்லை; அலுவலர்களையே சீர்குலைவு புரியும் சதிகாரர்களென ஏசினார்கள்; ஏனெனில் இப்பொழுது அரசாங்கம் அவர்களது அரசாங்கமாக, அவர்களது சோவியத்துகளாக இருந்தது—அமைச்சகங்களது அலுவலர்கள்தான் இந்த அரசாங்கத்துக்கு விரோதமாக இருந்தார்கள்....

இந்த எதிர்ப்புக்கு நடு நாயகமாக இருந்தவை டூமாவும் அதன் போராட்ட உறுப்பாகிய இரட்சணியக் கமிட்டியும் தான். மக்கள் கமிசார் அவையின் எல்லா அரசாணைகளையும் இவை கண்டித்துக் கொண்டும், சோவியத்து அரசாங்கத்தை அங்கீகரிக்க மறுத்து மீண்டும் மீண்டும் தீர்மானம் நிறைவேற்றிக் கொண்டும் இருந்தன; மொகிலோவ் நகரத்தில் அமைக்கப்பட்ட புதிய எதிர்ப்புரட்சி ''அரசாங்கங்களுடன்'' பகிரங்கமாகவே ஒத்துழைத்து வந்தன.... உதாரணமாய் நவம்பர் 17ல் இரட்சணியக் கமிட்டி ''எல்லா நகரத் தன்னாட்சி அமைப்புகளுக்கும், ஸேம்ஸ்துவொக்களுக்கும், விவசாயிகள், தொழிலாளர்கள், படையாட்கள், ஏனைய குடிமக்களது எல்லா ஜனநாயக, புரட்சிகர நிறுவனங்களுக்கும்'' பின்வருமாறு வேண்டுகோள் விடுத்தது:

போல்ஷிவிக்குகளுடைய அரசாங்கத்தை அங்கீகரிக்காதீர்கள், அதை எதிர்த்துப் போராடுங்கள்.

உள்ளூரில் தாய்நாட்டின், புரட்சியின் இரட்சணியக் கமிட்டிகள் நிறுவுங்கள், இந்தக் கமிட்டிகள் எல்லா ஜனநாயக சக்திகளையும் ஐக்கியப்படுத்தி, அனைத்து ருஷ்ய இரட்சணியக் கமிட்டி தனக்கு வகுத்துக் கொண்டுள்ள பணிகளைச் செய்து முடிக்க அதற்குத் துணை புரிய வேண்டும்....

இதற்கிடையில் அரசியல் நிர்ணயச் சபைக்குப் பெத்ரொகிராதில் நடைபெற்ற தேர்தல்களில்[15] போல்ஷிவிக்குகளுக்கு ஆதிக்க நிலையிலான பிரம்மாண்ட அளவில் வாக்குகள் கிடைத்தன. இதைக் கண்டதும் மென்ஷிவிக்கு சர்வதேசியவாதிகளுங்கூட பெத்ரொகிராது நகரவாசிகளது அரசியல் இயைபினை நகர டூமா பிரதிபலிக்கவில்லை, ஆகவே டூமாவுக்கு மறு தேர்தல்கள் நடைபெற வேண்டுமென்று கூறினார்கள்.... அதே போது தொழிலாளர் நிறுவனங்களிலிருந்தும், இராணுவப் படைகளிலிருந்தும், சுற்றுப்புறக் கிராமங்களைச் சேர்ந்த விவசாயிகளிடமிருந்தும் கூட டூமாவானது ''எதிர்ப்புரட்சி, கர்னீலவிய'' அமைப்பாகுமென்றும், அது ராஜிநாமா செய்துவிட வேண்டுமென்றும் கூறி டூமாவின் மீது முடிவின்றித் தீர்மானங்கள் பொழியப்பட்டன.

டூமாவின் இறுதி நாட்கள் கொந்தளிப்பு மிக்கனவாக இருந்தன, நகராண்மைக் கழகத் தொழிலாளர்கள் வாழ்வதற்குரிய தரமான கூலி வேண்டுமென்று கொதித்தெழுந்தார்கள், வேலைநிறுத்தங்கள் மூண்டுவிடும்படியான அபாயம் எழுந்தது....

நவம்பர் 23ல் புரட்சி இராணுவக் கமிட்டியின் அதிகாரபூர்வமான ஆணை இரட்சணியக் கமிட்டியைக் கலையச் செய்தது. நவம்பர் 29ல் மக்கள் கமிசார் அவை பெத்ரொகிராது நகர டூமாவைக் கலையும் படியும், மறுதேர்தல் நடைபெற வேண்டுமென்றும் உத்தரவிட்டது:

செப்டம்பர் 2ல் தேர்ந்தெடுக்கப்பட்ட பெத்ரொகிராது நகர மத்திய டூமா.... பெத்ரொகிராது நகரவாசிகளது மனநிலைக்கும் ஆர்வங்களுக்கும் முற்றிலும் ஒவ்வாததாகி, இவர்களது பிரதிநிதியாக இருக்கும் உரிமையைத் தெட்டத் தெளிவாகவே இழந்து விட்டது என்பதாலும்.... டூமாவின் பெரும்பான்மையைச் சேர்ந்தவர்கள் அனைத்து அரசியல் ஆதரவையும் இழந்துவிட்ட போதிலும், எதிர்ப்புரட்சி வழியில் தொழிலாளர்கள், படையாட்கள், விவசாயிகளது சித்தத்தை எதிர்ப்பதற்கும், அரசாங்கத்தின் முறையான செயற்பாட்டைச் சீர்குலைக்கவும் தடுத்து நிறுத்தவும் தொடர்ந்து தமது அதிகார உரிமைகளைப் பயன்படுத்தி வருகிறார்கள் என்பதாலும்—நகரத் தன்னாட்சி உறுப்பின் கொள்கை குறித்து தீர்ப்பு கூறும்படித் தலைநகரின் மக்களை அழைத்திடுவது தனது கடமையாகுமென மக்கள் கமிசார் அவை கருதுகின்றது.

இந்நோக்கத்துடன் மக்கள் கமிசார் அவை உத்தரவிடுகின்றது:

1. பெத்ரொகிராது நகர டூமா கலைக்கப்படுகிறது; 1917 நவம்பர் 30ல் இந்தக் கலைவு செயலுக்கு வருகிறது.

2. தற்போதுள்ள டூமாவால் தேர்ந்தெடுக்கப்பட்ட, அல்லது நியமிக்கப்பட்ட எல்லா அலுவலர்களும் புதிய டூமாவின் பிரதிநிதிகள் அவர்களது இடங்களில் அமர்த்தப்படும் வரை, தொடர்ந்து அவர்களது பணியிடங்களில் இருந்து, அவர்களிடம் ஒப்படைக்கப்பட்ட கடமைகளை நிறைவேற்ற வேண்டும்.

3. நகராண்மைக் கழகப் பணியாளர்கள் எல்லோரும் தொடர்ந்து அவர்களது கடமைகளை நிறைவேற்றி வர வேண்டும்; தாமாகவே தமது பணியிலிருந்து விலகுவோர் வேலை நிக்கம் செய்யப்பட்டவர்களாகக் கருதப்படுவார்கள்.

4. பெத்ரொகிராது நகர டூமாவுக்கான புதிய தேர்தல் களுக்குரிய நாள் 1917 டிசம்பர் 9 ஆக நிர்ணயிக்கப்படு கிறது....

5. பெத்ரொகிராது நகர டூமாவின் புதிய அமர்வு 1917 டிசம்பர் 11ல் பிற்பகல் 2 மணிக்குக் கூட வேண்டும்.

6. இந்த அரசாணையை மீறுவோரும், நகராண்மைக் கழக சொத்துகளுக்கு வேண்டுமென்றே தீங்கிழைப்போரும் சேதம் உண்டாக்குவோரும் உடனே கைது செய்யப்பட்டு, புரட்சி நீதிமன்றங்களில் விசாரணைக்குக் கோண்டு வரப் படுவர்....

இந்த அரசாணையைப் பொருட்படுத்தாமலே டூமா கூடி ''இறுதிச் சொட்டு இரத்தம் இருக்கும் வரை தனது நிலையை விட்டுக் கொடுக்காமல் தற்காத்துக்'' கொள்ளப் போவதாகச் சொல்லித் தீர்மானங்கள் நிறைவேற்றியது; நகர மக்கள் ''தாம் தேர்ந்தெடுத்த தமது நகரத் தன்னுட்சியினைப்'' பாது காத்துக் கொள்ள வேண்டுமென்று அவர்களுக்கு அவசர அறைகூவல் விடுத்தது. ஆனுல் நகர மக்கள் இந்தக் கூப்பாடு களைப் பொருட்படுத்தாமலும், பகைமை கொண்டோராக வுமே இருந்தார்கள். நவம்பர் 30ல் மேயர் ஷ்ரேய்தரும் சில உறுப்பினர்களும் கைது செய்யப்பட்டு, விசாரிக்கப்பட்ட பின் விடுதலை செய்யப்பட்டனர். அந்நாளன்றும், அதற்கு மறு தினமும் நகர டூமா தொடர்ந்து கூட்டம் நடத்திற்று; அடிக்கடி செங்காவலர்களும் மாலுமிகளும் இடைமறித்து, எல்லாரும் கலைந்து சென்றுவிட வேண்டுமென்று பணிவுடன் கேட்டுக் கொண்டிருந்தார்கள். டிசம்பர் 2ல் நடைபெற்ற கூட்டத்தின் போது, டூமா உறுப்பினர் ஒருவர் பேசிக் கொண் டிருக்கையில் படையதிகாரி ஒருவரும் சில மாலுமிகளும் நிக்கலாயிவ்ஸ்கி மண்டபத்துக்குள் வந்து எல்லோரும் வெளியே சென்றுவிட வேண்டும், இல்லையேல் பலாத்காரமாக வெளியேற்றப்படுவார்கள் என்று அறிவித்தார்கள். உறுப்

பினர்கள் விடாப்பிடியாக ஆட்சேபித்துப் பார்த்துவிட்டு முடிவில் ''வன்முறைக்கு விட்டுக் கொடுத்து விலகுவதாகச்'' சொல்லி வெளியேறிஞர்கள்.

பத்து நாட்களுக்குப் பிற்பாடு புதிய டூமா தேர்ந்தெடுக்கப்பட்டது, ''மிதவாத'' சோஷலிஸ்டுகள் இந்தத் தேர்தலில் பங்கு கொள்ள மறுத்தனர். புதிதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டது அனேகமாய் முழு அளவுக்குப் போல்ஷிவிக்கு டூமாவாக இருந்தது....[16]

அபாயம் விளைவிக்கும் எதிர்ப்புக்குரிய சில மையங்கள்—உக்ரைன், பின்லாந்துக் ''குடியரசுகள்'' போன்றவை—இருந்து வந்தன. இவை இரண்டும் திட்டவட்டமான சோவியத்து-எதிர்ப்புப் போக்குகளை வெளிக்காட்டி வந்தன. ஹெல்சிங்போர்சிலும், கீவிலும் இருந்த அரசாங்கங்கள் தமக்கு ஆதாரமாக இருக்கக் கூடிய துருப்புகளை ஒரு சேரத் திரட்டிக் கொண்டு, போல்ஷிவிசத்தை நசுக்குவதற்கும் ருஷ்யத் துருப்புகளிடமிருந்துபடைக்கலன்களைப்கைப்பற்றிக் கொண்டு அவற்றை வெளியேற்றுவதற்குமான போர் இயக்கங்களில் இறங்க முற்பட்டிருந்தன. உக்ரைனிய ராதா தெற்கு ருஷ்யா அனைத்துக்கும் படைத் தலைமை ஏற்றுக் கொண்டு, கலேடினுக்குத் துணைப் படைகளும் தளவாடங்களும் அனுப்பிக் கொண்டிருந்தது. பின்லாந்தும் உக்ரைனும் ஜெர்மானியர்களுடன் இரகசியப் பேச்சுவார்த்தைகள் ஆரம்பித்திருந்தன. நேசநாட்டு அரசாங்கங்களும் சிறிதும் தாமதமின்றி உடனே பின்லாந்தையும் உக்ரைனையும் அங்கீகரித்து இவற்றுக்குப் பெருந் தொகைகளைக் கடனுக உதவின; சோவியத்து ருஷ்யாவின் மீது தாக்குவதற்கான எதிர்ப்புரட்சி மையங்களை உருவாக்குவதற்காக அவை பின்லாந்தையும் உக்ரைனையும் சேர்ந்த சொத்துடைத்த வர்க்கங்களோடு கூடிக் கொண்டு செயல்பட்டன. முடிவில் இவ்விரு நாடுகளிலும் போல்ஷிவிசம் வெற்றி வாகை சூடியதும், தோல்வியுற்ற முதலாளித்துவ வர்க்கத்தினர் ஜெர்மானியர்களை உள்ளே அழைத்து வந்து, மீண்டும் தம்மை ஆட்சியதிகாரத்தில் அமர்த்தும் படிச் செய்து கொண்டனர்....

ஆனல் சோவியத்து அரசாங்கத்துக்கு மிகவும் பயங்கர ஆபத்து உள்நாட்டிலிருந்து எழுந்தது. அது இரு தலைகள்

கொண்டதாக இருந்தது—ஒன்று கலேடினது இயக்கம், மற்றொன்று மொகிலோவிலிருந்த இராணுவத் தலைமை அலுவலர்கள் குழு. ஜெனரல் துஹோனின் இந்தத் தலைமை அலுவலர்கள் குழுவுக்குப் படைத்தலைமை ஏற்றுக் கொண்டு விட்டார்.

எங்கும் முன்னால் வந்து நிற்பவரான முரவியோவ், கசாக்குகளுக்கு எதிரான யுத்தத்துக்குப் படைத்தலைவராய் நியமிக்கப்பட்டார். ஆலைத் தொழிலாளர்களிடமிருந்து ஒரு செஞ்சேனை திரட்டப்பட்டது. நூற்றுக் கணக்கான பிரசார கர்கள் தோன் பிரதேசத்துக்கு அனுப்பி வைக்கப்பட்டார் கள். மக்கள் கமிசார் அவை கசாக்குகளுக்கு ஒரு பிரகடனம்[17] வெளியிட்டது. சோவியத்து அரசாங்கம் என்பது என்ன, சொத்துடைத்த வர்க்கத்தினர்—அலுவலர்களும் நிலப்பிரபுக் களும் வங்கி முதலாளிகளும் இவர்களது கூட்டாளிகளாகிய கசாக்குக் கோமான்களும் ஜெனரல்களும்—எப்படி இந்தப் புரட்சியை ஒழித்திட முயலுகிறார்கள், இவர்களது செல்வம் மக்கள் கைக்குச் சென்று விடுவதை எப்படித் தடுக்கப் பார்க்கிறார்கள் என்று இந்தப் பிரகடனம் விளக்கிக் கூறிற்று.

நவம்பர் 27ல் கசாக்குகளது தூதுக் குழு ஒன்று லெனினை யும் திரோத்ஸ்கியையும் பார்த்துப் பேசுவதற்காக ஸ்மோல் னிக்கு வந்தது. கசாக்குகளுடைய நிலங்களை சோவியத்து அரசாங்கம் மாருஷ்ய விவசாயிகளுக்குப் பகிர்ந்து அளிக்க விரும்புவது மெய்தானா என்று இந்தத் தூதுக் குழுவினர் கேட் டார்கள். ''இல்லை'' என்று பதிலளித்தார் திரோத்ஸ்கி. பிறகு கசாக்குகள் தம்முள் சற்று நேரம் கலந்தாலோசித்து விட்டு, ''சரி, எங்களுடைய பெரிய கசாக்கு நிலப்பிரபுக்களுடைய பண்ணைகளை சோவியத்து அரசாங்கம் பறிமுதல் செய்து அவற் றை உழைக்கும் கசாக்குகளிடையே பகிர்ந்தளிக்கவா விரும் புகிறது?'' என்று கேட்டார்கள். இதற்கு லெனின் பதிலளித் தார். ''அது நீங்கள் செய்ய வேண்டிய காரியம்'' என்றார் அவர். ''உழைக்கும் கசாக்குகள் மேற்கொள்ளும் எல்லாச் செயல்களிலும் அவர்களுக்கு நாங்கள் ஆதரவு அளிப்போம்.... ஆரம்பிப்பதற்கான சிறந்த வழி என்னவென்றால், நீங்கள் கசாக்கு சோவியத்துகள் அமைத்துக் கொள்ள வேண்டும்; அப்பொழுது நீங்கள் இத்ஸே-யி-கவில் பிரதிநிதித்தும் பெறு

வீர்கள், அப்பொழுது இது உங்களுக்கும் உரித்தான அரசாங்கமாகிவிடும்....''

கசாக்குகள் ஆழ்ந்த ஆலோசனை செய்தவாறு புறப்பட்டுச் சென்றார்கள். இரண்டு வாரங்களுக்குப் பிற்பாடு ஜெனரல் கலேடினை அவரது படைகளின் தூதுக் குழு ஒன்று சந்தித்துப் பேசிற்று. ''கசாக்கு நிலப்பிரபுக்களுடைய பெரிய பண்ணைகளை உழைக்கும் கசாக்குகளிடையே பகிர்ந்தளிப்பதாக நீங்கள் வாக்குறுதி தருவீர்களா?'' என்று தூதுக் குழுவினர் அவரிடம் கேட்டனர்.

''நான் பிணமானாலன்றி அம்மாதிரி எதுவும் நடைபெறாது'' என்று கலேடின் பதிலளித்தார். ஒரு மாதத்துக்கெல்லாம் அவர் கண்ணெதிரே அவரது சேனை கரைந்து செல்லக் கண்டதும் கலேடின் தற்கொலை செய்துகொண்டார். கசாக்கு இயக்கம் அதோடு மறைந்து போயிற்று....

இதற்கிடையில் மொகிலேவில் பழைய இத்ஸே-யி-கவைச் சேர்ந்த ''மிதவாத'' சோஷலிஸ்டுத் தலைவர்கள் எல்லோரும்—அவ்க்சேன்தியெவ் முதல் செர்னேவ் வரையிலான எல்லோரும்—மற்றும் பழைய சேனைக் கமிட்டிகளது செயல் முனைப்புள்ள தலைவர்களும் பிற்போக்குவாதப் படையதிகாரிகளும் ஒன்று கூடிவிட்டனர். இராணுவத் தலைமை அலுவலர்கள் குழு மக்கள் கமிசார் அவையை அங்கீகரிக்க விடாப்பிடியாய் மறுத்து வந்தது. அது தனக்கு ஆதரவாய்ச் சாவுப் பட்டாளங்களையும் ஜார்ஜ் வீரமறவர்களையும் போர்முனைக் கசாக்குகளையும் ஒன்றுதிரட்டிக் கொண்டு, நேசநாட்டுத் தூதராக இராணுவக் குழுவோருடனும் கலேடின் இயக்கத்துடனும் உக்ரைனிய ராதாவுடனும் நெருங்கிய இரகசியத் தொடர்புகள் கொண்டு வேலை செய்தது....

நேசநாட்டு அரசாங்கங்கள் சோவியத்துகளின் காங்கிரஸ் பொதுப் போர்நிறுத்தம் வேண்டுமென்று கோரியிருந்த நவம்பர் 8ஆம் நாளைய சமாதான அரசாணைக்குப் பதிலளிக்காமலே இருந்து வந்தன.

நவம்பர் 20ல் நேசநாட்டுத் தூதுவர்களுக்குத் திரோத்ஸ்கி ஒரு குறிப்பு[18] அனுப்பினார்:

*திருவாளர் தூதுவர் அவர்களே, தங்களுக்கு விண்ணப்பிக்கும் சிறப்பு பெற்றுள்ள நான் தெரிவித்துக் கொள்வது என்னவெனில், சோவியத்துகளின் அனைத்து ருஷ்யக் காங்கிரசானது.... மக்கள் கமிசார் அவையின் வடிவில் ருஷ்யக் குடியரசுக்கு நவம்பர் 8ல் ஒரு புதிய அரசாங்கத்தை அமைத்தது. இந்த அரசாங்கத்தின் தலைவர் விளதீமிர் இலியீச் லெனின். அயல் துறை மக்கள் கமிசாராகிய என்னிடம் அயல்துறை விவகாரங்களுக்கான பொறுப்பு ஒப்படைக்கப் பட்டது....*

*போர்நிறுத்தத்தையும், பிரதேசச் சேர்ப்புகளோ இழப்பீடுகளோ இல்லாததும் நாடுகளது மக்களின் சுயநிர்ணய உரிமையை அடிப்படையாகக் கொண்டதுமான ஜனநாயக சமாதானத்தையும் முன்மொழிந்து அனைத்து ருஷ்யக் காங்கிரசால் ஏற்கப்பட்ட பிரகடனத்தை உங்கள் கவனத்துக் கொண்டு வரும் நான், எல்லாப் போர்முனைகளிலும் உடனே போர்நிறுத்தம் ஏற்படுவதற்கும், உடனே சமாதானப் பேச்சு வார்த்தைகள் துவக்கப்படுவதற்குமான அதிகார பூர்வமான முன்மொழிவாக இந்தப் பிரகடனத்தைக் கொள்ளுமாறு உங்களைக் கேட்டுக் கொள்கிறேன். ருஷ்யக் குடியரசின் அதிகார பூர்வமான அரசாங்கம் இம் முன்மொழிவை யுத்தத்தில் ஈடுபட்டிருக்கும் எல்லா நாடுகளது மக்களுக்கும் அரசாங்கங்களுக்கும் தெரிவித்துக் கொள்கிறது.*

*முன்பின் கண்டிராத இந்தக் கொலைத் தாண்டவத்தால் ஓய்ந்து போய் நலிவுற்றிருக்கும் ஏனைய எல்லா நாடுகளின் மக்களையும் போலவே சமாதானத்தையே விரும்புவோராகிய தங்கள் நாட்டு மக்கள் பால் சோவியத்து அரசாங்கத்துக்குள்ள ஆழ்ந்த மதிப்புணர்வினை திருவாளர் தூதுவர் அவர்களுக்குத் தெரிவித்துக் கொள்கிறோம்....*

*அதே நாள் இரவில் மக்கள் கமிசார் அவை ஜெனரல் துஹோனினுக்குத் தந்தி அனுப்பிற்று:*

*...போர்நிறுத்த முன்மொழிவை அதிகார பூர்வமாக எல்லா அரசுகளுக்கும், பகை அரசுகளுக்கு மட்டுமின்றி நேச நாட்டு அரசுகளுக்கும் தாமதமின்றி உடனே செய்வது*

அத்தியாவசியமென மக்கள் கமிசார் அவை கருதுகின்றது. இந்த முடிவுக்கு இணங்க, அயல் துறைக் கமிசார் பெத்ரொகிராதில் உள்ள நேசநாட்டுப் பிரதிநிதிகளுக்கு ஒரு குறிப்பு அறிக்கையினை அனுப்பியிருக்கின்றார்.

திருவாளர் உச்சப் படைத் தலைவரே, மக்கள் கமிசார் அவை உங்களுக்கு உத்தரவிடுகிறது.... போர் நடவடிக்கைகளை உடனே நிறுத்திச் சமாதானப் பேச்சுகளில் இறங்கும் படிப் பகை இராணுவத்தாருக்கு முன்மொழியும்படி உங்களுக்கு உத்தரவிடுகிறது. இந்தப் பூர்வாங்கப் பேச்சுவார்த்தைகளை நடத்தும்படி உங்களுக்குப் பொறுப்பளித்து, மக்கள் கமிசார் அவை உங்களுக்குக் கட்டளையிடுகிறது:

1. பகைச் சேனைகளின் பிரதிநிதிகளுடனான பேச்சுவார்த்தைகள் சம்பந்தமான எல்லா நடவடிக்கைகள் குறித்தும் உடனே நேரடித் தந்தி மூலம் மக்கள் கமிசார் அவைக்குத் தெரிவியுங்கள்.

2. போர் நிறுத்தத்துக்கான எந்த ஒப்பந்தமும் மக்கள் கமிசார் அவையால் அங்கீகரிக்கப்படுவதற்கு முன்பு அதில் நீங்கள் கையொப்பமிடக் கூடாது.

திரோத்ஸ்கி அனுப்பிய குறிப்பினை நேசநாட்டுத் தூதுவர்கள் மதிக்காமலே மௌனமாக இருந்தார்கள். அதே போது குரோதமும் இகழ்ச்சியும் மிகுந்த அநுமதேய பேட்டிகளைச் செய்தியேடுகளுக்கு அளித்து வந்தார்கள். துஹோனினுக்கு அனுப்பப்பட்ட உத்தரவு தேசத் துரோகச் செயலாகுமென்று பகிரங்கமாகவே குறிப்பிடப்பட்டு வந்தது....

துஹோனினைப் பொறுத்த வரை, அவரிடமிருந்து இந்த உத்தரவு குறித்து எந்தத் தகவலும் வரவில்லை. நவம்பர் 22 இரவில் தொலைபேசி மூலம் அவருடன் தொடர்பு கொண்டு, இந்த உத்தரவுக்குக் கீழ்ப்படியும் எண்ணம் அவருக்கு உண்டா என்று கேட்டார்கள். ''சேனையாலும் நாட்டினாலும் ஆதரிக்கப்படும் ஓர் அரசாங்கத்திடமிருந்து'' வரும் உத்தரவுக்கு மட்டுமே தாம் கீழ்ப்பட முடியுமென்று துஹோனின் பதிலளித்தார்.

உடனே தந்தி மூலம் அவர் உச்சப் படைத்தலைவர் பதவியிலிருந்து விலக்கப்பட்டு, அவரிடத்தில் குரிலேன்கொ நிய

மிக்கப்பட்டார். நேரே மக்கள் பெருந் திரளினருக்கு வேண்டு கோள் விடுத்துச் செயல்பட வைக்கும் தமது போர்த்தந்திர முறையைக் கடைப்பிடித்து, லெனின் வாஞெலி மூலம் எல் லாப் படையணி, படைத் தொகுதி, போரணிக் கமிட்டி களுக்கும், சேனையையும் கடற்படையையும் சேர்ந்த எல்லாப் படையாட்களுக்கும் மாலுமிகளுக்கும் துஹோனின் கீழ்ப் படிய மறுத்துவிட்டதைத் தெரிவித்து, ''போர்முனையிலுள்ள படையணிகள் தமது படைநிலைகளுக்கு எதிரே அமைந்த பகைப் படைப்பிரிவுகளுடன் பேச்சுவார்த்தைகள் தொடங்கு வதற்காகப் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்க வேண்டுமென்று'' கட்டளையிட்டார்....

நவம்பர் 23ல் நேசநாட்டுத் தூதரகங்களது இராணுவக் குழுவோர் தத்தமது அரசாங்கங்களது கட்டளையின் பேரில் துஹோனினுக்குக் குறிப்பறிக்கை அனுப்பினுர்கள்; ''ஆன் டான்ட் அரசுகளிடையே செய்து கொள்ளப்பட்ட உடன்படிக் கைகளின் வரையறைகளை மீறக் கூடாது'' என்று அதிகார பூர்வமான முறையில் இந்தக் குறிப்பறிக்கை துஹோனினை எச்சரிக்கை செய்தது. ஜெர்மனியுடன் தனியே போர்நிறுத்த ஒப்பந்தம் செய்து கொள்ளப்படுமாயின், ருஷ்யாவுக்கு அத ஞல் ''மிகவும் கடுமையான விளைவுகள் ஏற்படும்'' என்று அது அறிவித்தது. இந்தக் குறிப்பறிக்கையைத் துஹோனின் படையாட்கள் கமிட்டிகள் யாவற்றுக்கும் உடனே தெரியப் படுத்திஞர்....

மறுநாள் காலையில் திரோத்ஸ்கி எல்லாத் துருப்புகளுக் கும் மற்ருெரு வேண்டுகோள் வெளியிட்டு, நேசநாட்டுப் பிரதிநிதிகளது குறிப்பறிக்கை ருஷ்யாவின் உள்நாட்டு விவ காரங்களில் அப்பட்டமாகத் தலையிடும் செயலாகுமென்றும், ''ஜார் செய்து கொண்ட உடன்படிக்கைகளை அனுசரித்து யுத்தத்தைத் தொடர்ந்து நடத்திச் செல்லும்படி ருஷ்யச் சேனையையும் ருஷ்ய மக்களையும் அச்சுறுத்தல்கள் மூலம் பல வந்தம் செய்வதற்கான'' அடாத முயற்சியாகுமென்றும் வலி யுறுத்திஞர்....

ஸ்மோல்னியிலிருந்து பிரகடனத்துக்கு மேல் பிரகடனம்[19] வெளியிடப்பட்டது. துஹோனினையும், அவரைச் சுற்றிய மைந்த எதிர்ப்புரட்சிப் படையதிகாரிகளையும், மற்றும்

மொகிலோவில் கூடியிருந்த பிற்போக்கு அரசியல்வாதிகளையும் இந்தப் பிரகடனங்கள் கண்டித்து நிந்தனை செய்தன; ஆயிரம் மைலுக்கு நீண்டிருந்த போர்முனையின் ஒரு கோடியிலிருந்து இன்னொரு கோடி வரையில் ஆத்திரமும் அவநம்பிக்கையும் கொண்ட லட்சோப லட்சக் கணக்கான படையாட்களை இவை கிளர்ந்தெழச் செய்தன. அதே நேரத்தில், பற்றுறுதி வாய்ந்த மாலுமிகளது மூன்று படைப் பிரிவுகள் உடன் வர, தக்கபடி பாடம் கற்பிப்போமென[20] அச்சுறுத்தியவாறு குரிலேன்கொ மொகிலோவை நோக்கிப் புறப்பட்டார். எங்கும் படையாட்கள் அவரை அளவு கடந்த ஆர்வ முழக்கமோடு வரவேற்க அவரது பயணம் வெற்றி முழக்க விஜயமாக நடந்தேறியது. மத்தியச் சேனைக் கமிட்டி துஹோனினை ஆதரித்து அறிக்கை வெளிட்டது. மறுகணமே பத்தாயிரம் துருப்புகள் மொகிலோவை நோக்கிச் சென்றன....

டிசம்பர் 2ல் மொகிலோவின் நகரக் காவற் படை கிளர்ந்தெழுந்து நகரைக் கைப்பற்றி, துஹோனினையும் சேனைக் கமிட்டியையும் கைது செய்துவிட்டு, வெற்றிகரச் செங்கொடிகளுடன் புதிய உச்சப் படைத்தலைவரை எதிர்கொண்டு அழைக்கப் புறப்பட்டது. மறுநாள் காலையில் மொகிலோவுக்குள் வந்து சேர்ந்த குரிலேன்கொ, ஆவேசங் கொண்ட கூட்டத்தினர் துஹோனின் சிறை பிடித்து வைக்கப்பட்டிருந்த ரயில் வண்டிப் பெட்டியைச் சூழ்ந்து கொண்டு கூச்சலிடக் கண்டார். குரிலேன்கொ இந்தக் கூட்டத்தினருக்குச் சொற்பொழிவாற்றினார், துஹோனினுக்கு எந்தத் தீங்குமின்றி பெத்ரொகிரொதுக்கு அவரை அனுப்பி வைக்க வேண்டும், அங்கே புரட்சிகர நீதிமன்றம் விசாரணை நடத்தி அவருக்குத் தீர்ப்பளிக்கும் என்று அவர் படையாட்களைக் கேட்டுக் கொண்டார். அவர் பேசி முடித்தும் திடீரென துஹோனின் அந்தக் கூட்டத்தினரிடையே பேச வருவது போல வண்டிப் பெட்டியின் சன்னலின் பின்னால் வந்து நின்று காட்சியளித்தார். உடனே கூட்டத்தினர் ஆத்திரக் கூச்சலிட்டவாறு வண்டிப் பெட்டியினுள் புகுந்து வயது முதிர்ந்த ஜெனரலைப் பிடித்து வெளியே பிளாட்பாரத்திற்கு இழுத்து, அவரை அடித்துக் கொன்றார்கள்....

இராணுவத் தலைமை அலுவலர்களது கலகம் இவ்வாறு முடிவுற்றது....

ருஷ்யாவில் பகை இராணுவ அதிகாரத்தின் முக்கியமான கடைசிக் கோட்டை தகர்க்கப்பட்டதால் வன்மையும் திண்மையும் பெரிதும் ஓங்கவே, சோவியத்து அரசாங்கம் திட நம்பிக்கையுடன் அரசின் ஒழுங்கமைப்புப் பணியை ஆரம்பித்தது. பழைய அலுவலர்களில் பலரும் சோவியத்து அரசாங்கத்தினது கொடியின் கீழ் வந்து திரண்டனர். ஏனைய கட்சிகளின் உறுப்பினர்கள் பலரும் சோவியத்து அரசாங்கப் பணியாளர்களாக வேலை செய்ய முன்வந்தனர். ஆனால் பண ஆசை கொண்டோருக்கு சோவியத்துப் பணியாளர்களது சம்பளங்களைப் பற்றிய அரசாணை தடை மதிலாய் இருந்தது, இந்த அரசாணை மிக அதிக சம்பளமான மக்கள் கமிசார்களது சம்பளத்தை மாதத்துக்கு ஐந்நூறு ரூபிளாய் (சுமார் ஐம்பது டாலர்) நிர்ணயம் செய்தது.... ஒன்றியங்களது ஒன்றியத்தால் தலைமை தாங்கப்பட்ட அரசாங்கப் பணியாளர்களின் வேலைநிறுத்தமானது, அதற்கு ஆதரவளித்து வந்த நிதித் துறை, வாணிபத் துறைக் கோஷ்டியார் கைவிட்டு விலகியதும், தகர்ந்து போயிற்று. வங்கி எழுத்தர்கள் அவர்களது வேலைகளுக்குத் திரும்பி வந்தனர்....

வங்கிகள் நாட்டுடைமையாக்கப்பட்ட அரசாணை, மக்கள் பொருளாதாரத்தின் உச்ச மன்றம் நிறுவப்படுதல், கிராமங்களில் நில அரசாணை நடைமுறையில் செயலுக்குக் கொண்டு வரப்படுதல், ஜனநாயக வழியில் சேனை திருத்தியமைக்கப்படுதல், அரசாங்கத்தின் எல்லாக் கிளைகளிலும் வாழ்க்கையின் எல்லாத் துறைகளிலும் மாபெரும் மாற்றங்கள் செய்யப்படுதல்—பெருந் திரளினரான தொழிலாளர்கள், படையாட்கள், விவசாயிகளது சித்தத்தால் மட்டுமே சாத்தியமான இவை யாவற்றையும் தொடர்ந்து, பாட்டாளி வர்க்க ருஷ்யா சிறிது சிறிதாய், பல தவறுகளுக்கும் தடங்கல்களுக்கும் இடையில் உருவாக்கப்படலாயிற்று.

போல்ஷிவிக்குகள் ஆட்சியதிகாரம் வென்று கொண்டது, சொத்துடைத்த வர்க்கங்களுடன், அல்லது பிற அரசியல் தலைவர்களுடன் சமரசம் செய்ததன் மூலமல்ல; பழைய அரசாங்கப் பொறியமைவுடன் இணக்கம் கண்டதன் மூலமல்ல; குறுங் குழு ஒன்றின் ஒழுங்கமைந்த வன்முறையின் மூலமுமல்ல. மக்கள் பெருந்திரளினர் ருஷ்யாவெங்கும் எழுச்சி

நடத்தத் தயாராய் இருந்திராவிடில், அந்த எழுச்சி நிச்சயம் தோல்வியுற்றிருக்கும். போல்ஷிவிக்குகளது வெற்றிக்குக் காரணம் ஒன்றே ஒன்றுதான்—மக்களின் மிக விரிவான படிவத்தோரை அறைகூவி அழைத்துப் பழையனவற்றைத் தகர்த்து ஒழித்திடும் பணியில் ஈடுபடச் செய்தும், பிறகு இந்தத் தகர்வின் புகையினிடையே புதியனவற்றின் கட்டுமானத்தை எழுப்புவதில் இம்மக்கள் திரளினருடன் சேர்ந்து பாடுபட்டும், இவர்களது மிகப் பரவலான எளிய விருப்பங்களை நிறைவேறச் செய்தனர் என்பதுதான் காரணம்....

அத்தியாயம் 12

## விவசாயிகளது காங்கிரஸ்

நவம்பர் 18—வெண்பனி கொட்ட ஆரம்பித்த நாள் அது. காலையில் நாங்கள் விழித்தெழுந்தோம், சன்னல் சட்டங்களில் வெள்ளையாய்க் குவிந்திருக்கக் கண்டோம், பத்தடித் தொலைவுக்கு அப்பால் எதையும் பார்க்க முடியவில்லை, வெண்பனிச் செதில்கள் அவ்வளவு அடர்த்தியாய்ச் சுழன்று விழுந்து கொண்டிருந்தன. மண்ணும் சேறும் மறைந்து விட்டன, அழுது வடிந்து கொண்டு மங்கலாக இருந்த நகரம் திடுதிப்பென்று கண் கூசும்படி வெள்ளை வெளேரெனத் தகதகக்க ஆரம்பித்துவிட்டது. பஞ்சடைத்த கோட்டு அணிந்த வண்டிக்காரர்கள் ஓட்டிச் சென்ற குதிரை வண்டிகள் இப்போது சறுக்கு வண்டிகளாகி, உயர்ந்தும் சரிந்தும் சென்ற சாலைகளில் தலை தெறிக்கும் வேகத்தில் வழுக்கி ஓடின. வண்டிக்காரர்களது தாடியில் ஆவி கெட்டியாக உறைந்து போய் அதை விறைப்பாய் நிற்கச் செய்தது.... புரட்சி நடைபெற்றுதான் வந்தது; கண்டும் கேட்டும் இருந்திராத, அச்சம் தரும்படியான எதிர்காலத்துள் ருஷ்யா பாய்ந்தோடிக் கொண்டுதான் இருந்தது; ஆயினும் வெண்பனியைக் கண்டதும் நகரம் களி நடனம் புரிந்தது. எல்லார் முகத்திலும் புன்னகை பூத்திருந்தது, மக்கள் தெருக்களில் ஓடி பொல பொலவென விழுந்து கொண்டிருந்த மிருதுவான வெண் பனிச் செதில்களுக்கிடையே கைகளை நீட்டி ஆனந்தமாகச் சிரித்தார்கள். மங்கலான மந்தாரச் சாயல்கள் எல்லாம் எங்கோ ஓடிவிட்டன, எங்கும் ஒரே வெண்மையாகிவிட்டது,

பொன்னிறத்திலும் பிற நிறங்களிலுமான கோபுரக் கூம்பு களும் வில்மாடங்களும் மட்டும்தான் முன்னிலும் எடுப்பான கம்பீரத்தோடு வெண்பனிப் பரப்புக்கு மேல் உயர்ந் தெழுந்து பளபளத்தன.

நண்பகலானதும் சூரியனுங்கூட வெளியே வந்தான்— வெளிறிட்டுப் போன, ஈரம் தோய்ந்த சூரியன். மழை மாதங்களில் மிகுதியாக இருந்த சளிப்பும் கீல்வாதமும் மறைந்து போயின. நகரின் வாழ்க்கை குதூகலமுற்றது, புரட்சியுங்கூட சூடு பிடித்து வேகங் கொண்டது....

ஒரு நாள் மாலையில் நான் திரக்தீர் ஒன்றில்—கீழ் வகுப் பினருக்கான ஒரு வகை மது விடுதி—உட்கார்ந்திருந்தேன். ஸ்மோல்னி வெளிவாயிலுக்கு முன்னல் தெருவின் எதிர்ப் பக்கத்தில் இருந்தது அது—தணிந்த கூரையைக் கொண்ட இரைச்சல் மிகுந்த இடம், "தோம் மாமாவின் குடில்" என்பதாக அழைக்கப்பட்டது. செங்காவலர்கள் அடிக்கடி இங்கு வருவ்து வழக்கம். நான் போயிருந்த போது அவர்கள் அங்கே நிரம்பியிருந்தார்கள், அழுக்கு விரிப்புகளிட்டு பெரும் பெரும் பீங்கான் தேநீர்க் கெட்டில்கள் வைக்கப்பட்டிருந்த சிறிய மேசைகளைச் சுற்றிலும் நெருக்கிக் கொண்டு அமர்ந்து, திணறடித்த சிகரெட்டுப் புகையைச் சுற்றிலும் நிரப்பிக் கொண்டிருந்தார்கள். அலைக்கழிக்கப்பட்ட மேசைப் பணி யாளர்கள் அங்கும் இங்கும் ஓடிய வண்ணம் "சிச்சாஸ்! சிச்சாஸ்! இதோ வருகிறேன்! இதோ ஒரு நிமிடம்!" என்று கத்தினர்கள்.

காப்டனின் உடுப்பணிந்தவர் ஒருவர் ஒரு மூலையில் அமர்ந்திருந்தார், அங்கு கூடியிருந்தோரைப் பார்த்து அவர் உரை நிகழ்த்துவது போல் பேசிக்கொண்டிருந்தார், ஆனல் கூட்டத்தினர் அவரைப் பேச விடாமல் குறுக்கிட்டுக் கொண் டிருந்தார்கள்.

"கொலைகாரர்களுக்கும் உங்களுக்கும் வித்தியாசம் இல்லை! தெருக்களில் உங்களது ருஷ்யச் சோதரர்களைச் சுட்டு வீழ்த்துகிறீர்கள்!" என்று அவர் கூச்சலிட்டார்.

"எப்போது நாங்கள் அப்படிச் செய்தோம்?" என்று கேட்டார் ஒரு தொழிலாளி.

''சென்ற ஞாயிறு அன்று செய்தீர்கள், யூன்கெர்கள் அப்போது—''

''அவர்கள் எங்களைச் சுடவில்லையா?'' என்று கேட்டு ஒருவர் கழுத்துத் தொங்கலுக்குள் இருந்த தமது கையைக் காட்டினார். ''பிசாசுகள், அவர்கள் சுட்டதை மறக்க முடியாதே என்னால்!'' என்றார்.

காப்டன் உச்சக் குரலில் கத்தினார். ''நீங்கள் நடுநிலை வகித்திருக்க வேண்டும்! ஆம், நடுநிலை வகித்திருக்க வேண்டும்! சட்டப்படி அமைந்த ஓர் அரசாங்கத்தை அழித்திட நீங்கள் யார்? யார் இந்த லெனின்? ஜெர்மானிய—''

''நீங்கள் யாராம்? எதிர்ப்புரட்சியாளர்! ஆத்திர மூட்டும் சதிகாரர்!'' என்று அவரைப் பார்த்து எல்லோரும் இரைந்தார்கள்.

இந்தக் கூச்சல் கொஞ்சம் தணிந்ததும், காப்டன் எழுந்து நின்றார். ''சரி, உங்களை நீங்கள் ருஷ்யாவின் மக்கள் என்பதாக அழைத்துக் கொள்கிறீர்கள்!'' என்று பலக்கக் கூறினார். ''நீங்களல்ல ருஷ்யாவின் மக்கள். விவசாயிகள்தாம் ருஷ்யாவின் மக்கள். விவசாயிகள் பேசுகிற வரை காத்திருங்கள்—''

''ஆம், விவசாயிகள் பேசட்டும்'' என்று கூட்டத்தினர் கத்தினர். ''விவசாயிகள் என்ன பேசுவார்கள் என்று எங்களுக்குத் தெரியும்.... அவர்களும் எங்களைப் போன்ற உழைப்பாளர்கள்தானே!''

முடிவாகப் பார்க்கையில், யாவும் விவசாயிகளையே பொறுத்திருந்தன. விவசாயிகள் அரசியல் வளர்ச்சியில் பிற்பட்ட நிலையில் இருந்தார்கள், இன்னமும் அவர்களுக்கே உரிய தனிக் கருத்துகளைக் கொண்டிருந்தார்கள், அதே போது அவர்கள் ருஷ்ய மக்களில் எண்பது சதவீதத்தினராக இருந்தார்கள். விவசாயிகளில் போல்ஷிவிக்குகளைப் பின்பற்றுவோர் ஒப்பளவில் சொற்பமானோராக இருந்தார்கள். ஆகவே ருஷ்யாவில் ஆலைத் தொழிலாளர்கள் நிலையான சர்வாதிகாரம் செலுத்துவது சாத்தியமன்று.... பாரம்பரியமாக விவசாயிகளது கட்சியாய் இருந்தது சோஷலிஸ்டுப் புரட்சியாளர் கட்சி. தற்போது சோவியத்து அரசாங்கத்தை ஆதரித்த எல்லாக் கட்சியினரிலும் இடதுசாரி சோஷலிஸ்டுப் புரட்சி

யாளர்கள்தான் விவசாயிகளது தலைமைக்கு நேர்வழி வாரிசுகளாக அமைந்தவர்கள். நிறுவன ஒழுங்கமைப்பு பெற்ற நகரப் பாட்டாளி வர்க்கத்தின் தயவை எதிர்பார்க்க வேண்டிய நிலையில் இருந்த இந்த இடதுசாரி சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களுக்கு விவசாயிகளுடைய ஆதரவானது இன்றியமையாத தேவையாக இருந்தது....

ஆனால் ஸ்மோல்னியும் விவசாயிகளைக் கவனத்தில் கொள்ளாமல் உதாசீனம் செய்துவிடவில்லை. நில அரசாணையைத் தொடர்ந்து, புதிய இத்ஸே-யி-க தனது முதற் பெரும் காரியங்களில் ஒன்றாக, விவசாயிகளது சோவியத்துகளின் நிர்வாகக் கமிட்டியை மீறிச் சென்று நேரடியாகத் தானே விவசாயிகளது காங்கிரசினைக் கூட்ட முற்பட்டது. இதற்குச் சில நாட்களுக்கு எல்லாம், வோலஸ்து (மாவட்ட) நிலக் கமிட்டிகளுக்குரிய விவரமான விதி முறைகளும், பிறகு லெனினது ''விவசாயிகளுக்கு அறிவுரைகளும்''[1*] வெளியிடப்பட்டன. லெனினது இந்த அறிவுரைகள் போல்ஷிவிக்குப் புரட்சியையும் புதிய அரசாங்கத்தையும் எளிய முறையில் விளக்கிக் கூறின. இதன்பின் நவம்பர் 16ல் லெனினும் மிலூத்தினும் ''மாநிலங்களுக்கு அனுப்பப்படும் முகவர்களுக்கு அறிவுரைகள்'' என்பதனை வெளியிட்டார்கள். இந்த முகவர்களை ஆயிரக் கணக்கில் சோவியத்து அரசாங்கம் கிராமங்களுக்கு அனுப்பி வைத்தது.

1. முகவரானவர், அதிகாரம் அளிக்கப்பட்டு அனுப்பி வைக்கப்படும் மாநிலத்துக்கு வந்து சேர்ந்ததும், தொழிலாளர்கள், படையாட்கள், விவசாயிகள் பிரதிநிதிகளது சோவியத்துகளின் மத்தியச் செயற் கமிட்டிகளது கூட்டுக் கூட்டத்தினைக் கூட்ட வேண்டும். இந்தக் கூட்டத்தில் அவர் நிலச் சட்டங்களைப் பற்றி உரை சமர்ப்பிக்க வேண்டும்; பிறகு அவர் சோவியத்துகள் யாவற்றின் முழுநிறையான கூட்டு அமர்வு கூட்டப்பட வேண்டுமெனக் கோர வேண்டும்...

---

* இந்த அத்தியாயத்தில் எண்ணிட்டுக் காட்டப்படும் சுட்டுக் குறிகள் அத்தியாயம் 12இன் அனுபந்தத்தைக் குறிப்பவை.

2. மாநிலத்தில் நிலப் பிரச்சினையின் இயல்புகளை அவர் ஆய்ந்து அறிந்து கொள்ள வேண்டும்.

அ) நிலப்பிரபுக்களுடைய நிலங்கள் கைப்பற்றப்பட்டு விட்டனவா? எந்தெந்த மாவட்டங்களில் கைப்பற்றப்பட்டன?

ஆ) கைப்பற்றப்பட்ட நிலங்களை நிர்வகிப்பவர் யார்? பழைய உரிமையாளரான நிலப்பிரபுவா, அல்லது நிலக் கமிட்டிகளா?

இ) விவசாய இயந்திரங்களுக்கும் பண்ணைக் கால்நடைகளுக்கும் செய்யப்பட்டது என்ன?

3. விவசாயிகள் சாகுபடி செய்யும் நிலப் பரப்பு அதிகமாகியிருக்கிறதா?

4. தற்போது சாகுபடி செய்யப்படும் நிலப் பரப்பு அரசாங்கத்தால் நிர்ணயம் செய்யப்பட்ட குறைந்தபட்ச சராசரி அளிவிலிருந்து எந்த அளவுக்கு, எந்த விதத்தில் வித்தியாசப்படுகிறது?

5. விவசாயிகள் நிலம் பெற்றுக் கொண்டபின், சாகுபடி செய்யப்படும் நிலப் பரப்பை அவர்கள் எவ்வளவு சீக்கிரமாய் முடியுமோ அவ்வளவு சீக்கிரமாய் அதிகமாக்கிச் செல்வதும், பஞ்சத்தைத் தவிர்க்கும் ஒரே மார்க்கமாக அவர்கள் நகரங்களுக்குத் தானியத்தை அனுப்புவதைத் துரிதப்படுத்துவதும் அவசர அவசியமாகும் என்று முகவர் வற்புறுத்த வேண்டும்.

6. நிலப்பிரபுக்களிடமிருந்து நிலத்தை நிலக் கமிட்டிகளுக்கும், சோவியத்துகளால் நியமிக்கப்பட்ட இவற்றையொத்த பிற அமைப்புகளுக்கும் மாற்றுவதற்காகத் திட்டமிடப்பட்டிருக்கும், அல்லது செயல்படுத்தப்பட்டிருக்கும் நடவடிக்கைகள் யாவை?

7. திறம்பட அமைந்து நன்கு ஏற்பாடு செய்யப்பட்டுள்ள விவசாயச் சொத்துகள், அவற்றின் முறையான ஊழியர்களைக் கொண்டமைந்த சோவியத்துகளால், தகுதி வாய்ந்த விவசாய விஞ்ஞானிகளது மேற்பார்வையின் கீழ் நிர்வகிக்கப்படுதல் விரும்பத்தக்கதாகும்.

கிராமங்களில் எல்லாம் மாற்றம் வேண்டுமென்ற உற்சாகப் பெருக்கு ஏற்படலாயிற்று. இதற்குக் காரணம் நில

அரசாணையின் சக்தி வாய்ந்த செயல் மட்டுமல்ல; புரட்சி மனப்பாங்கு கொண்ட ஆயிரக் கணக்கான விவசாயிப் படையாட்கள் போர்முனையிலிருந்து திரும்பி வந்ததும் இதற்குக் காரணமாகும்.... மிகவும் முக்கியமாய் இவர்கள் விவசாயிகளது காங்கிரஸ் கூட வேண்டுமென்ற அழைப்பினை வரவேற்றனர்.

தொழிலாளர்கள், படையாட்களது சோவியத்துகளின் இரண்டாவது காங்கிரஸ் சம்பந்தமாகப் பழைய இத்ஸே-யி-க செய்தது போலவே, விவசாயிகளது சோவியத்துகளின் செயற் கமிட்டி, ஸ்மோல்னியால் அழைக்கப்பட்டிருந்த விவசாயிகள் காங்கிரசைத் தடுத்து நிறுத்த முயன்றது. தனது எதிர்ப்பு பயனற்றது என்பது தெரிந்ததும், பழைய இத்ஸே-யி-கவைப் போலவே செயற் கமிட்டி, பழைமைவாதப் பிரதிநிதிகளாகத் தேர்ந்தெடுக்கும்படி உத்தரவிட்டு அவசரத் தந்திகள் அனுப்பிற்று. இந்தக் காங்கிரஸ் மொகிலேவில் கூடப் போவதாகக் கூட விவசாயிகளிடையே வதந்தி பரப்பப்பட்டது. இதனால் சில பிரதிநிதிகள் அங்கே போகும்படி நேர்ந்தது. ஆனால் நவம்பர் 23க்குள் சுமார் நானூறு பிரதிநிதிகள் பெத்ரொகிராதுக்கு வந்து சேரவே கட்சிக் குழுக்கள் செயல்பட ஆரம்பித்தன....

முதல் அமர்வு டூமா கட்டடத்தில் அலெக்சாந்திரொவ்ஸ்கி மண்டபத்தில் நடைபெற்றது. முதல் தரம் வாக்கெடுக்கப்பட்டதும் பிரதிநிதிகளில் பாதிப் பேருக்கு மேற்பட்டவர்கள் இடதுசாரி சோஷலிஸ்டுப் புரட்சியாளர்கள் என்பது தெரிந்தது. போல்ஷிவிக்குகள் ஐந்தில் ஒரு பகுதியோர்தான் இருந்தார்கள், பழைமைவாத சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களின் பக்கம் கால் பங்கினர் இருக்க, ஏனையோர் அவ்க்சேன்தியெவ், செய்க்கோவ்ஸ்கி, பெஷெஹோனவ் ஆகியோரின் ஆதிக்கத்திற்கு உட்பட்ட பழைய செயற் கமிட்டிக்குக் காட்டிய எதிர்ப்பில் மட்டும்தான் ஒன்றுபட்டிருந்தார்கள்....

அந்தப் பெரிய மண்டபம் நிரம்பி வழிந்தது, கூச்சல்களாலும் குழப்பத்தாலும் ஓயாமல் அதிர்ந்து கொண்டிருந்தது. விடாப்பிடியான ஆழ்ந்த காழ்ப்பும் பகைமையும் பிரதிநிதிகளை ஆத்திரங் கொண்ட கோஷ்டிகளாகப் பிளவுபடுத்தின. வலப் புறத்தில் படையதிகாரிகளது தோள் பட்டிகள்

இங்கும் அங்குமாகக் காணப்பட்டன, பழைய தந்தைவழி மரபைச் சேர்ந்த ஓரளவு வசதியான விவசாயிகளின் தாடியுடைய முகங்களாக இருந்தன. மையப் பகுதியில் சில விவசாயிகளும் படைத்துறைப் பதவியில்லாத படையதிகாரிகளும் சில படையாட்களும் அமர்ந்திருந்தார்கள். இடப் புறத்தில் இருந்த பிரதிநிதிகளில் அனேகமாய் எல்லோரும் சாதாரண படையாட்களது உடுப்புகள் அணிந்தவர்கள். இந்தக் கடைசிப் பிரிவினர் சேனையில் சேவை புரிந்த இளந் தலைமுறையினர்.... மேல் மாடங்களில் தொழிலாளர்கள் குழுமியிருந்தார்கள்—ருஷ்யாவில் தொழிலாளர்கள் தமது விவசாயிப் பூர்வோத்திரத்தை இன்னமும் மறக்காமல் நினைவில் கொண்டிருந்தனர்....

பழைய இத்ஸே-யி-கவைப் போலன்றி, செயற் கமிட்டியானது காங்கிரசின் துவக்க அமர்வில் இந்தக் காங்கிரசை அதிகார பூர்வமானதாக அங்கீகரிக்க மறுத்துவிட்டது; அதிகார பூர்வமான காங்கிரஸ் டிசம்பர் 13ல்தான் கூடப் போவதாக அது கூறிற்று. செயற் கமிட்டியின் சார்பில் பேசியவர், புயலென எழுந்த கையொலி முழக்கத்துக்கும் ஆத்திரக் கூச்சல்களுக்கும் இடையே, இந்தக் கூட்டம் ''சிறப்பு மாநாடே'' அன்றி காங்கிரஸ் அல்ல என்று பறைசாற்றினார். ஆனால் இந்தச் ''சிறப்பு மாநாடு'' இடதுசாரி சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களின் தலைவராகியாக மரீயா ஸ்பிரிதோனவாவைத் தனக்குத் தலைமை வகிப்பவராகத் தேர்ந்தெடுத்து, செயற் கமிட்டியின் பால் தனக்குள்ள போக்கினை விரைவாகவே தெளிவுபடுத்திக் காட்டிற்று.

வோலஸ்து (மாவட்ட) சோவியத்துகளின் பிரதிநிதிகளையும் பங்கு கொள்ளும்படி சேர்த்துக் கொள்வதா, அல்லது மாநில அமைப்புகளின் பிரதிநிதிகளை மட்டும் சேர்த்துக் கொண்டால் போதுமா என்பது பற்றிய பலத்த சர்ச்சையில் முதல் நாளின் பெரும் பகுதி கழிந்தது. தொழிலாளர்கள், படையாட்களது காங்கிரசில் நடைபெற்றது போலவே, இங்கும் மிகப் பெரும்பான்மையான பிரதிநிதிகள் சாத்தியமான முழு அளவுக்கு மிகவும் விரிவான பிரதிநிதித்துவத்துக்கு ஆதரவாக வாக்களித்தனர். உடனே பழைய செயற் கமிட்டி மண்டபத்திலிருந்து வெளிநடப்பு செய்தது....

இதன் பிறகு, அனேகமாய் உடனடியாகவே, பெரும்பா லான பிரதிநிதிகள் மக்கள் கமிசார்களது அரசாங்கத்தை எதிர்ப்பவர்கள் என்பது தெரியலாயிற்று. போல்ஷிவிக்கு களின் சார்பில் பேச முயன்ற ஸிஞேவியெவ் பேச முடியாத படி கூச்சல்கள் எழுப்பித் தடுத்துவிட்டனர். கேலிச் சிரிப் புக்கு இடையே அவர் மேடையிலிருந்து இறங்கிய போது, ''மக்கள் கமிசார் மூக்குடைபட்டார்!'' என்பது போன்ற கூச்சல்கள் எழுந்தன.

''தொழிலாளர்கள், விவசாயிகளது அரசாங்கம் எனப் படும் இதில் விவசாயிகள் பிரதிநிதித்துவம் பெறுகிற வரை, சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களாகிய நாங்கள் இதை அங்கீ கரிக்க மறுக்கிறோம்'' என்று கத்தினர், மாநிலங்களைச் சேர்ந்த பிரதிநிதிகளில் ஒருவரான நஸாரியெவ். ''தற்போது இது தொழிலாளர்களது சர்வாதிகாரமே அன்றி வேறல்ல.... அனைத்து ஜனநாயகத்தையும் பிரதிநிதித்துவம் செய்யக் கூடிய ஒரு புதிய அரசாங்கம் அமைக்கப்பட வேண்டுமென்று நாங் கள் கோருகிறோம்!'' என்றார்.

பிற்போக்குவாதப் பிரதிநிதிகள் இந்த உணர்ச்சியைச் சாமர்த்தியமாகத் தூண்டிவிட்டு வந்தனர். போல்ஷிவிக்கு களுடைய ஆட்சபக் கூச்சல்களுக்கிடையே அவர்கள் மக்கள் கமிசார் அவையானது இந்தக் காங்கிரசைத் தன் பிடிக்குள் கொண்டு வரப் பார்க்கிறதென்றும், இது முடியாமற் போனல் படை பலம் கொண்டு காங்கிரசைக் கலைக்கத் திட் டமிடுகிறதென்றும் அறிவித்தார்கள். இதைக் கேட்டதும் விவசாயிகள் ஆத்திரங் கொண்டு கூக்குரலிட்டனர்....

மூன்றும் நாளன்று திடுமென லெனின் உரைமேடையிலே ஏறினர், பத்து நிமிடங்களுக்கு மண்டபத்தில் ஒரே அமளியா கிவிட்டது. ''அவர் வேண்டாம்! ஒழிக!'' என்று தொண்டை கிழிய கூச்சலிட்டனர். ''உங்கள் மக்கள் கமிசார் எவரு டைய பேச்சையும் நாங்கள் கேட்கப் போவதில்லை! உங்கள் அரசாங்கத்தை நாங்கள் அங்கீகரிக்கவில்லை!''

சாய்வு மேசையை இரு கைகளாலும் பிடித்துக் கொண்டு அமைதியாய் மேடையிலே நின்றிருந்தார் லெனின். ஆழ்ந்த சிந்தனையோடு அவரது சிறிய கண்கள் கீழே அலைமோதிய அமளியை உற்று நோக்கின. முடிவில் மண்டபத்தின் வலப்

புறத்தைத் தவிர்த்து ஏனைய பகுதிகளில் ஆர்ப்பாட்டம் ஓரளவு அடங்கியது.

''மக்கள் கமிசார் அவையின் உறுப்பினனாக இங்கு நான் வரவில்லை'' என்று கூறினார் லெனின். சப்தம் ஓய்வதற்காகத் திரும்பவும் காத்திருந்துவிட்டு, ''இந்தக் காங்கிரசுக்கு முறைப்படி தேர்ந்தெடுக்கப் பெற்ற போல்ஷிவிக்குக் குழுவின் உறுப்பினனாகவே இங்கு வந்திருக்கிறேன்'' என்று சொல்லி, தமது பிரதிநிதிச் சீட்டை எல்லாருக்கும் தெரியும்படி உயரத் தூக்கிக் காட்டினார்.

சிறிதும் அசங்காத குரலில் அவர் தொடர்ந்து பேசிச் சென்றார்: ''ஆனால், ருஷ்யாவில் தற்போதுள்ள அரசாங்கம் போல்ஷிவிக்குக் கட்சியால் அமைக்கப்பட்டதென்பதை யாரும் மறுப்பதற்கில்லை—'' சற்று நேரம் அவர் காத்திருக்க வேண்டியிருந்தது. ''ஆகவே, எப்படிக் கொள்வதாயினும், இரண்டும் ஒன்றேதான்....'' வலப்புறத்துப் பெஞ்சுகளிலிருந்து இப்போது காது செவிடும்படியான காட்டுக் கூச்சல் எழுந்தது, ஆனால் மையப் பகுதியும் இடப் புறத்துப் பகுதியும் ஆவல் மிக்கதாகி, அமைதியை நிலை பெறச் செய்தன.

லெனினது வாதம் எளிமையானது. ''விவசாயிகளாகிய நீங்கள் ஒளிவு மறைவின்றி சொல்லுங்கள்: நிலப்பிரபுக்களுடைய நிலங்களை நாங்கள் உங்களுக்குத் தந்திருக்கிறோம்; இப்போது தொழிலாளர்கள் தொழில் துறையைத் தமது கண்காணிப்பின் கீழ் கொண்டு வருவதை நீங்கள் தடுக்கவா விரும்புகிறீர்கள்? இது வர்க்கப் போராட்டம். நிலப்பிரபுக்கள் விவசாயிகளை எதிர்க்கிறார்கள், சந்தேகமில்லை; அதே போல ஆலை முதலாளிகள் தொழிலாளர்களை எதிர்க்கிறார்கள். பாட்டாளி வர்க்கத்தின் அணிகள் பிளவுபடுத்தப்பட நீங்கள் அனுமதிக்கவா போகிறீர்கள்? நீங்கள் யார் பக்கம் நிற்க விரும்புகிறீர்கள்?

''போல்ஷிவிக்குகளாகிய நாங்கள் பாட்டாளி வர்க்கத்தின் கட்சியாவோம்—தொழில் துறைப் பாட்டாளி வர்க்கம் மட்டுமின்றி, விவசாயிப் பாட்டாளி வர்க்கத்தினது கட்சியுமாவோம். போல்ஷிவிக்குகளாகிய நாங்கள் சோவியத்துகளைப் பாதுகாப்பவர்கள்—தொழிலாளர்கள், படையாட்களது சோவியத்துகளை மட்டுமின்றி விவசாயிகளது சோவியத்

துகளேயும் பாதுகாக்கிறவர்கள். தற்போதுள்ள அரசாங்கம் சோவியத்துகளின் அரசாங்கம்; விவசாயிகளது சோவியத் துகளேயும் இந்த அரசாங்கத்தில் சேர்ந்து கொள்ளும்படி நாங்கள் அழைத்திருக்கிறோம்; அது மட்டுமல்ல, இடதுசாரி சோஷலிஸ்டுப் புரட்சியளர்களது பிரதிநிதிகளேயும் மக்கள் கமிசார் அவையில் சேர்ந்து கொள்ளும்படி நாங்கள் அழைத் திருக்கின்றோம்....

''சோவியத்துகள் மக்களது மிகச் சிறந்த பிரதிநிதிகளா கும்—ஆலேகளிலும் சுரங்கங்களிலும் வேலே செய்வோர், வயல் களில் வேலே செய்வோர் ஆகியோரது சிறந்த பிரதிநிதிகள். சோவியத்துகளே ஒழிக்க முயலுகிறவர் எவரும் ஜனநாயக விரோத, எதிர்ப்புரட்சி செயல் புரியும் குற்றவாளியாவார். தோழர்கள் **வலதுசாரி** சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களே உங்களுக்கும்—திருவாளர் காடேட்டுகளே உங்களுக்கும்— இம்மேடையிலிருந்து நான் முன்னறிவிப்பு செய்கிறேன்: அர சியல் நிர்ணயச் சபையானது சோவியத்துகளே ஒழித்திட முயலுமாயின், அரசியல் நிர்ணயச் சபை இதைச் செய்ய நாங்கள் அனுமதிக்க மாட்டோம்!''

நவம்பர் 25 பிற்பகலில் மொகிலோவிலிருந்து செர்னேவ் அவசரமாக வந்து சேர்ந்தார், செயற் கமிட்டி அவரை வரச் சொல்லி அழைத்திருந்தது. இரண்டு மாதங்களுக்கு முன்பெல்லாம் அதிதீவிரப் புரட்சிவாதியாகக் கருதப்பட் டவர், விவசாயிகளிடையே மிகுந்த செல்வாக்கு பெற்றிருந் தவர்—இப்பொழுது காங்கிரஸ் பயங்கர முறையில் இடது சாரித் திசையில் செல்வதைத் தடுத்து நிறுத்துவதற்காக இங்கே அழைக்கப்பட்டிருந்தார். நகருக்குத் திரும்பியதும் அவர் கைது செய்யப்பட்டு ஸ்மோல்னிக்குக் கொண்டு போகப்பட்டார். சற்று நேரம் நடைபெற்ற உரையாட லுக்குப் பிற்பாடு அவர் விடுதலே செய்யப்பட்டார்.

வந்ததும் முதற் காரியமாய் அவர், காங்கிரசை விட்டு வெளியேறியதற்காக செயற் கமிட்டியைக் கடுமையாகக் கண்டித்தார். செயற் கமிட்டியினர் திரும்பி வர ஒத்துக் கொண்டார்கள். பிறகு செர்னேவ் மண்டபத்துக்குள் வந்தார்,

பெரும்பாலோரும் ஆர்வ முழக்கமிட்டு வரவேற்றூர்கள், போல்ஷிவிக்குகள் ஏளனக் கூச்சல் எழுப்பினூர்கள்.

''தோழர்களே! நான் வெளியூர் சென்றிருந்தேன். மேற்குப் போர்முனையின் சேனைகளைச் சேர்ந்த விவசாயிப் பிரதிநிதிகள் எல்லோரையும் கொண்ட காங்கிரஸ் ஒன்றைக் கூட்டுவது சம்பந்தமாய் நடைபெற்ற பன்னிரண்டாவது சேனையின் மாநாட்டில் பங்கெடுத்துக் கொள்வதற்காகப் போயிருந்தேன். இங்கே நடந்த எழுச்சியைப் பற்றி எனக்கு அதிகமாகத் தெரியாது—''

ஸினேவியெவ் அவரது இருக்கையிலிருந்து எழுந்து நின்று கூச்சலிட்டார்: ''ஆம், நீங்கள் வெளியே சென்றிருந்தீர்கள்—சில நிமிடங்களுக்கு!'' பயங்கர அமளி ஏற்பட்டது. ''போல்ஷிவிக்குகள் ஒழிக!'' என்ற கூச்சல்கள் எழுந்தன.

செர்னேவ் தொடர்ந்து பேசினூர். ''பெத்ரொகிராதுக்கு எதிராக ஒரு சேனையை அனுப்ப நான் உதவியதாகக் கூறப்படும் குற்றச் சாட்டு ஆதாரமற்றதாகும், முழுக்க முழுக்க பொய்யாகும். இம்மாதிரியான ஒரு குற்றச்சாட்டு எங்கிருந்து வருகிறது? அதன் தோற்றுவாய் எது, சொல்லுங்கள் எனக்கு!''

ஸினேவியெவ்:''இஸ்வேஸ்தியாவும் தியேலொ நரோதாவும்— உங்களுடைய பத்திரிகைகள்தான் — அங்கிருந்துதான் வருகிறது!''

சிறு கண்களையும் சுருள் முடிகளும் நரைத்த தாடியும் கொண்ட செர்னேவின் முகம் கோபத்தால் செக்கச் சிவந்து விட்டது. ஆனூல் அவர் தம்மைக் கட்டுப்படுத்திக் கொண்டு தொடர்ந்து பேசிச் சென்றூர். ''நான் திரும்பவும் கூறுகிறேன்: இங்கு நடைபெற்றது பற்றி எனக்கு அனேகமாக ஒன்றும் தெரியாது. நான் ஒன்றும் சேனை அனுப்பவில்லை, நான் அனுப்பியது இங்கு இருக்கும் இந்தச் சேனையைத்தான்'', (கூடியிருந்த விவசாயிப் பிரதிநிதிகளை அவர் சுட்டிக் காட்டினூர்). இந்தச் சேனை இங்கே வந்து அமர்ந்திருப்பதற்குப் பெரும் அளவில் நானே காரணமாவேன்!'' சிரிப்பும், ''பலே! பலே!'' என்ற கூச்சல்களும்.

''திரும்பி வந்ததும் நான் ஸ்மோல்னிக்குப் போயிருந்தேன். அங்கே யாரும் என்மீது இம்மாதிரியான குற்றச் சாட்டைச் சுமத்தவில்லை.... சிறிது நேரம் உரையாடியபின்

அங்கிருந்து புறப்பட்டேன்—அவ்வளவுதான்! இங்கு இருப்பவர் எவரும் இம்மாதிரி குற்றச் சாட்டை எனக்கு எதிராய்க் கூறட்டும் பார்க்கலாம்!''

பேரிரைச்சல் எழுந்தது. போல்ஷிவிக்குகளும் இடதுசாரி சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களில் சிலரும் உடனே எழுந்து நின்று முட்டியை உயர்த்திக் கட்டி பலக்கக் கத்தினர்கள், ஏனையோர் எதிர்த்துக் கூச்சலிட்டு இவர்களை உட்கார வைக்க முயன்றார்கள்.

''இது கேலிக்கூத்து! காங்கிரஸ் அமர்வல்ல!'' என்று செர்னேவ் கூச்சலிட்டுக் காத்திவிட்டு மண்டபத்திலிருந்து வெளியேறினர். சப்தமும் ஒழுங்கின்மையும் தாங்க முடியாமல் அமர்வு ஒத்திப் போடப்பட்டது....

இதற்கிடையில், செயற் கமிட்டியின் நிலை பற்றிய பிரச்சினை எல்லோரையும் கிளர்ச்சி கொள்ளச் செய்து வந்தது. புதிய செயற் கமிட்டி தேர்ந்தெடுக்கப்படுவதைத் தடுத்துவிடலாமென்று திட்டமிட்டு இங்கு நடைபெற்றது ''சிறப்பு மாநாடே'' ஆகுமென அறிவிக்கப்பட்டிருந்தது. ஆனல் இந்த அறிவிப்பு இரு திசைகளிலும் செயல்பட்டது; இந்தக் காங்கிரசிற்குச் செயற் கமிட்டியின் மீது அதிகாரமில்லை என்றால், செயற் கமிட்டிக்கும் இந்தக் காங்கிரசின் மீது அதிகாரமில்லையென இடதுசாரி சோஷலிஸ்டுப் புரட்சியாளர்கள் முடிவு செய்தனர். செயற் கமிட்டியின் அதிகாரங்களைச் சிறப்பு மாநாடு மேற்கொள்வதென்றும், மாநாட்டுப் பிரதிநிதிகளாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட செயற் கமிட்டி உறுப்பினர்களுக்கு மட்டுமே வாக்குரிமை உண்டென்றும் நவம்பர் 25ல் இம்மாநாடு தீர்மானம் செய்தது....

மறு நாளன்று போல்ஷிவிக்குகளின் கடுமையான எதிர்ப்பை மீறி, இந்தத் தீர்மானம் திருத்தப்பட்டது: பிரதிநிதிகளாகத் தெர்ந்தெடுக்கப்பட்டிருந்தாலும் இல்லாவிட்டாலும் செயற் கமிட்டி உறுப்பினர்கள் எல்லார்க்கும் வாக்குரிமை உண்டென்று திருத்தப்பட்டது.

நவம்பர் 27ல் நிலப் பிரச்சினை பற்றிய விவாதம் நடைபெற்றது. நிலம் குறித்து போல்ஷிவிக்குகளின் வேலைத்திட்டத்திற்கும் இடதுசாரி சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களுடை

யதற்கும் இடையிலான வேறுபாடுகளை இந்த விவாதம் தெளிவாகப் புலப்படுத்திற்று.

இடதுசாரி சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களின் சார்பில் பேசிய கல்ச்சீன்ஸ்கி, புரட்சியின் போது நிலப் பிரச்சினை சம் பந்தமான நடவடிக்கைகளின் வரலாற்றைச் சுருக்கமாய் எடுத்துரைத்தார். நிலப் பிரபுக்களுடைய பண்ணைகள் உட னடியாக நிலக் கமிட்டிகளின் கைக்கு மாற்றப்பட வேண்டு மென்பதை ஆதரித்து விவசாயிகள் சோவியத்துகளது முத லாவது காங்கிரஸ் திட்டவட்டமாகவும் அதிகார பூர்வமாக வும் தீர்மானம் நிறைவேற்றியது என்றார் அவர். ஆனால் புரட்சியின் நெறியாளர்களும் அரசாங்கத்தில் இருந்த முத லாளிகளும் அரசியல் நிர்ணயச் சபை கூடுவதற்கு முன்னால் இந்தப் பிரச்சினை தீர்க்கப்பட முடியாதென்று கூறிவிட் டனர்.... அமைச்சரவையில் செர்னேவ் சேர்ந்து கொண்ட தானது, புரட்சியின் இரண்டாவது கட்டம், ''சமரசவாதக்'' கட்டம் ஆரம்பமாகியதை அறிவித்தது. நிலப் பிரச்சினைக்கு நடைமுறைத் தீர்வு காண்பதற்கு இனி முயற்சிகள் மேற் கொள்ளப்படுமென விவசாயிகள் முழு நம்பிக்கையுடன் எதிர்பார்த்தார்கள். ஆனால் முதலாவது விவசாயிகளது காங் கிரசின் கண்டிப்பான தீர்மானத்தையும் மீறி, எந்தச் செய லும் மேற்கொள்ளப்பட முடியாதவாறு செயற் கமிட்டியின் பிற்போக்குவாதிகளும் சமரசவாதிகளும் தடுத்துவிட்டார் கள். இந்தக் கொள்கையின் விளைவாக கிராமப் புறங்களில் வரிசையாக பல குழப்பங்களும் கலகங்களும் வெடித்தெழுந் தன—விவசாயிகள் பொறுமையிழந்து விட்டதன், அவர்களது முயற்சிகள் விரயமாக்கப்பட்டதன் இயற்கையான வெளி யீடுகளே அவை. புரட்சியின் திட்டவட்டமான பொருளை விவசாயிகள் புரிந்து வைத்திருந்திருந்தார்கள்—சொற்களை அவர்கள் செயல்களாக மாற்ற முயற்சி செய்தார்கள்....

''அண்மையில் நடைபெற்றிருக்கும் நிகழ்ச்சிகள் சாதா ரண கலகத்தையோ, 'போல்ஷிவிக்குகளது சாகசவாதத் தையோ' குறிப்பவை அல்ல'' என்றார் பேச்சாளர். ''நேர் மாறாக, பெருந் திரள் மக்களின் மெய்யான எழுச்சியை அவை குறிக்கின்றன, நாடு அனைத்துமே முழு ஆதரவு தெரி வித்து இந்த எழுச்சியை வரவேற்றுள்ளது....

''நிலப் பிரச்சினை குறித்து போல்ஷிவிக்குகள் மொத்தத்தில் பிழையற்ற போக்கினை அனுசரித்தார்கள்; ஆனால் விவசாயிகள் பலவந்தமாக நிலங்களைக் கைப்பற்றிக் கொள்ளாமென்று ஆலோசனை கூறியதன் மூலம் அவர்கள் மிகப் பெருந் தவறிழைத்துள்ளனர்.... ''புரட்சிகர வெகுஜனச் செயலின்'' மூலம் விவசாயிகள் நிலங்களைக் கைப்பற்றிக் கொள்ள வேண்டுமென்று ஆரம்ப நாள் முதற் கொண்டே போல்ஷிவிக்குகள் கூறினார்கள். இது அராஜகமே அன்றி வேறல்ல.ஒழுங்கமைந்த முறையில்தான் நிலங்களை விவசாயிகள் எடுத்துக் கொள்ள வேண்டும்.... புரட்சியின் பிரச்சினைகள் சடுதியில் தீர்க்கபட வேண்டுமென்பதையே போல்ஷிவிக்குகள் முக்கியமானதாகக் கருதுகிறார்கள்—இந்தப் பிரச்சினைகளுக்கு எப்படித் தீர்வுகாண வேண்டுமென்பது குறித்துப் போல்ஷிவிக்குகள் கவலைப்படவில்லை....

''சோவியத்துகளின் காங்கிரஸ் பிறப்பித்த நில அரசாணை அதன் அடிப்படைகளில் முதலாவது விவசாயிகள் கங்கிரசின் தீர்மானங்களை அப்படியே ஒத்திருக்கிறது. இந்த நிலைமையில் புதிய அரசாங்கம் ஏன் முதலாவது விவசாயிகள் காங்கிரஸ் விவரித்த செயல் முறையைப் பின்பற்றவில்லை? ஏனென்றால் நிலப் பிரச்சினையின் தீர்வை மக்கள் கமிசார் அவை துரிதப்படுத்த விரும்பிற்று, அரசியல் நிர்ணயச் சபை ஒன்றும் செய்வதற்கில்லாதபடி ஆக்கி விட வேண்டுமென நினைத்தது....

''ஆனால் அதேபோது நடைமுறைச் செயல்களுக்கான நடவடிக்கைகளை ஏற்பது அவசியமென்பதையும் இந்த அரசாங்கம் கண்ணுற்றது. ஆகவே மேற்கொண்டு ஆலோசிக்காமலே நிலக் கமிட்டிகளுக்கான விதிமுறைகளை ஏற்றுக் கொண்டது. இவ்விதம் அது ஒரு விபரீத நிலைமையை ஏற்படுத்திற்று, எப்படியென்றால், மக்கள் கமிசார் அவை நிலத்தில் தனியார் உமையை ஒழித்தது, ஆனால் நிலக் கமிட்டிகளால் வகுக்கப்பட்ட விதிமுறைகள் தனியார் உடைமையின் அடிப்படையில் அமைந்தவை.... ஆயினும், இதனால் தீங்கு ஏதும் ஏற்பட்டுவிடவில்லை, ஏனெனில் நிலக் கமிட்டிகள் சோவியத்து அரசாணைகளைப் பற்றிக் கவலைப்பட்டுக் கொள்ளாமலே, தமது சொந்த நடைமுறைத் தீர்மானங்

களைச் செயல்படுத்தி வருகின்றன—மிகப் பெரும்பாலான விவசாயிகளுடைய சித்தத்தை அடிப்படையாகக் கொண்ட தீர்மானங்கள் இவை....

''இந்த நிலக் கமிட்டிகள் நிலப் பிரச்சினைக்குச் சட்ட வழியிலான தீர்வு காண்பதற்கு முயலவில்லை; சட்டவழியிலான தீர்வு காண்பது அரசியல் நிர்ணயச் சபைக்கு மட்டுமே உரித்தான் பணி.... ஆனால் அரசியல் நி।ணயச் சபை ருஷ்ய விவசாயிகளது சித்தத்தை நிறைவேற்ற விரும்புமா.... நமக்கு நிச்சயமாகத் தெரிவதெல்லாம், விவசாயிகளது புரட்சிகர வைராக்கியம் இப்பொழுது விழித்தெழுந்துவிட்டது என்பதும், நிலப் பிரச்சினைக்கு விவசாயிகள் தீர்வு காண விரும்பும் வழியில் தீர்வு காணும்படி அரசியல் நிர்ணயச் சபை பலவந்தம் செய்யப்படும் என்பதும் தான்.... மக்களுடைய சித்தத்துக்கு விரோதமாகச் செல்வதற்கு அரசியல் நிர்ணயச் சபை துணியாது....''

அடுத்து லெனின் பேசினார், ஆழ்ந்த அக்கறையோடு பிரதிநிதிகள் இப்பொழுது அவரது உரையைக் கேட்டனர். ''இத் தருணத்தில் நாம் தீர்வு காண முயலுவது நிலப். பிரச்சினை மட்டுமல்ல, சமுதாயப் புரட்சிப் பிரச்சினைக்கும் தீர்வுகாண முயலுகிறோம்—இங்கே ருஷ்யாவில் மட்டுமின்றி அனைத்து உலகிலும். சமுதாயப் புரட்சியின் ஏனையப் பிரச்சினைகளுடன் சார்பின்றி சுயேச்சையான ஒன்றாக நிலப் பிரச்சினைக்குத் தீர்வு கண்டுவிட முடியாது.... உதாரணமாக, நிலப்பிரபுக்களுடைய பண்ணைகள் பறிமுதல் செய்யப்படுகையில், அது ருஷ்யாவின் நிலப்பிரபுக்களுடைய எதிர்ப்பை மட்டுமல்லாமல், வெளிநாட்டு மூலதனத்தின் எதிர்ப்பையும் மூளச் செய்யும்—பெரிய நிலவுடைமைகள் வங்கிகள் மூலமாக வெளிநாட்டு மூலதனத்தோடு பிணைப்பு கொண்டுள்ளன....

''ருஷ்யாவில் நிலவுடைமையானது பிரம்மாண்ட ஒடுக்குமுறைக்கான அடித்தளமாக இருக்கிறது. விவசாயிகள் நிலத்தைக் கைப்பற்றிக் கொள்வது நமது புரட்சியின் மிக முக்கிய செயலாகும். ஆனால் இதனைப் புரட்சியின் ஏனைய செயல்களிலிருந்து தனியே பிரித்துவிட முடியாது. புரட்சியானது கடந்து செல்ல வேண்டியிருந்துள்ள கட்டங்களால் இது தெளிவாகவே காட்டப்பட்டிருக்கிறது. இடதுசாரி

சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களது தவறு எதில் அடங்கியிருக்கிறது என்ருல், அந்தக் காலத்தில் அவர்கள் சமரசவாத கொள்கையை எதிர்க்காமல் இருந்ததில்தான். மக்கள் பெருந் திரளினரது உணர்வு இன்னும் முழு அளவுக்கு வளர்ச்சி பெறவில்லை என்பதான தத்துவத்தை அவர்கள் கொண்டிருந்ததுதான் அவர்கள் எதிர்க்காமால் இருந்ததற்கான காரணம்....

''**மக்கள் அனைவரது அறிவுத் துறை வளர்ச்சி அனுமதிக்கையில் மட்டும்தான் சோஷலிசத்தைக் கைகூடச் செய்ய முடியுமெனில், குறைந்தது ஐந்நூறு ஆண்டுகளுக்கு நம்மால் சோஷலிசத்தைப் பார்க்க இயலாது என்ருகிவிடும்....** சோஷலிஸ்டு அரசியல் கட்சியானது தொழிலாளி வர்க்கத்தின் முன்னணிப் படையாகும், மக்கள் பெருந் திரளினரது சராசரிக் கல்வி நிலையின் பற்ருக்குறை தன்னைத் தடுத்து நிறுத்துவதற்கு இக்கட்சி இடந் தரலாகாது. இதற்கு மாருக, இந்தக் கட்சி சோவியத்துகளைப் புரட்சிகர முன்முயற்சிக்கான செயல் உறுப்புகளாகப் பயன்படுத்தி மக்கள் பெருந் திரளினருக்குத் தலைமை தாங்கி அழைத்துச் செல்ல வேண்டும்... ஆனுல் தயங்குவோருக்குத் தலைமை தாங்கி அழைத்துச் செல்ல வேண்டுமாயின், தோழர்கள் இடதுசாரி சோஷலிஸ்டுப் புரட்சியாளர்கள் முதலில் தமது தயக்கத்துக்கு முடிவு கட்டிக் கொண்டாக வேண்டும்....

''கடந்த ஜூலையிலேயே மக்கள் பெருந் திரளினருக்கும் 'சமரசவாதிகளுக்கும்' இடையே வரிசையாகப் பல பகிரங்க முறிவுகள் ஏற்பட்டன; ஆனுல் இப்போது நவம்பரிலுங்கூட இடதுசாரி சோஷலிஸ்டுப் புரட்சியாளர்கள் அவ்க்சேன்தியெவுக்கு, செல்வாக்கிழந்துவிட்ட பரிதாப நிலையிலும் மக்களைப் பின்னேக்கி இழுக்க முயலும் இவருக்குக் கை கொடுத்து உதவப் பார்க்கிருர்கள்....சமரசவாதம் தொடருமாயின் புரட்சி மறைந்து ஒழிந்துவிடும். முதலாளித்துவ வர்க்கத்தாருடன் சமரசம் சாத்தியமன்று, இவர்களுடைய அதிகாரம் அறவே நசுக்கப்பட்டாக வேண்டும்....

''போல்ஷிவிக்குகளாகிய நாங்கள் எமது நிலத் துறை வேலைத்திட்டத்தை மாற்றிக் கொண்டுவிடவில்லை. நிலத்தில் தனியார் உடைமையை ஒழிக்க வேண்டுமென்ற எமது திட்

டத்தை நாங்கள் கைவிட்டுவிடவில்லை, கைவிடும் உத்தேசமும் எங்களுக்கு இல்லை. நிலக் கமிட்டிகளுக்கான விதிமுறைகளை—இவை ஒன்றும் தனியார் சொத்தின் அடிப்படையில் அமைந்தவை அல்ல—நாங்கள் ஏற்றுக் கொண்டோம்; காரணம் என்னவென்ருல், பொது மக்களது சித்தத்தை எவ்வழியில் நிறைவேறச் செய்வதென மக்கள் தாமே முடிவு செய்து கொண்டார்களோ அதே வழியில் அதை நிறைவேறச் செய்வதற்கு நாங்கள் விரும்புகிருேம், இதன் மூலம் நாங்கள் சமுதாயப் புரட்சிக்காகப் போராடும் எல்லாச் சக்திக்கூறுகளது கூட்டணியை மேலும் நெருக்கமாக ஒன்றுபடச் செய்ய விரும்புகிருேம்.

''இடதுசாரி சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களை இந்தக் கூட்டணியில் சேர்ந்து கொள்ளும்படி நாங்கள் அழைக்கிருேம், அதேபோது அவர்கள் பின்னேக்கிப் பார்ப்பதை நிறுத்திக் கொள்ள வேண்டுமென்றும் அவர்களது கட்சியிலுள்ள 'சமரசவாதிகளிடமிருந்து அவர்கள் முறித்துக் கொள்ள வேண்டுமென்றும் வற்புறுத்துகிருேம்....

''அரசியல் நிர்ணயச் சபையைப் பொறுத்த வரை, எனக்கு முந்தி பேசியவர் கூறியது போல், இச்சபை ஆற்றும் பணி மக்கள் பெருந் திரளினரது புரட்சிகார வைராக்கியத்தையே பொறுத்திருக்கும் என்பது மெய்தான். நான் சொல்வது என்னவெனில், 'அந்தப் புரட்சிகர வைராக்கியத்தை ஆதாரமாகக் கொள்ளுங்கள், அதேபோது கையிலுள்ள துப்பாக்கியைக் கீழே போட்டுவிடாதீர்கள்!''

பிறகு லெனின் போல்ஷிவிக்குகளுடைய தீர்மானத்தைப் படித்துக் காட்டிஞர்:

*விவசாயிகளது காங்கிரஸ் நவம்பர் 8 நில அரசாணைக்கு முழு ஆதரவு தெரிவிக்கிறது... தொழிலாளர்கள், படையாட்கள் பிரதிநிதிகளது சோவியத்துகளின் இரண்டாவது அனைத்து ருஷ்யக் காங்கிரசால் அமைக்கப்பட்ட ருஷ்யக் குடியரசின் தொழிலாளர்கள், விவசாயிகளது இடைக்கால அரசாங்கத்தை அங்கீகரிக்கிறது.*

*விவசாயிகளது காங்கிரசானது... அந்தச் சட்டத்தை ஒருமனதுடன் ஆதரித்து நிலைநாட்டுமாறும், உடனடியாகத்*

தாமே அதைச் செயல்படுத்துமாறும் எல்லா விவசாயிகளுக்கும் அழைப்பு விடுக்கின்றது. அதே போது, சுரண்டப்படுவோரும் உழைப்பாளர்களுமான விவசாயிகளது நலன்களிடத்து தமது முழு முனைப்பான பற்றுறுதியையும், பெரிய நிலப்பிரபுக்கள், முதலாளிகள், இவர்களது கட்சிக்காரர்கள், கூட்டாளிகள் ஆகியோருடைய எதிர்ப்பு அனைத்துக்கும் எதிராய் இந்த நலன்களைப் பாதுகாப்பதற்குத் தமக்குள்ள விருப்பத்தையும் செயல்திறனையும் சொற்களில் அல்ல, செயல்கள் நிரூபித்துக் காட்டியுள்ளவர்களை மட்டுமே பொறுப்பான பதவிகளிலும் நிலைகளிலும் நியமிக்கும்படி விவசாயிகளுக்கு இந்தக் காங்கிரஸ் அழைப்பு விடுக்கின்றது....

அதே நேரத்தில், நில அரசாணையில் அடங்கியிருக்கும் எல்லா நடவடிக்கைகளும் முழு அளவில் நிறைவேற்றப்பட்டுவது, 1917 நவம்பர் 7ல் ஆரம்பமாகிய தொழிலாளர்களது சோஷலிசப் புரட்சியினது வெற்றியின் மூலமாக மட்டுமே சித்தி பெற முடியுமென்ற தனது திடமான முடிவினை விவசாயிகளது காங்கிரசானது வெளியிடுகின்றது. ஏனென்றால், சோஷலிசப் புரட்சியால் மட்டுமே திட்டவட்டமான முறையில் நிலமானது உழைக்கும் விவசாயிகளுக்கு மாற்றப்படுவதையும் மீண்டும் திருப்பி வாங்கப் படுவதற்குரிய சாத்தியப்பாட்டுக்குஇடமின்றி மாற்றப்படுவதையும், முன்மாதிரிப் பண்ணைகள் பறிமுதல் செய்யப்பட்டு விவசாயிகளதுகிராமச் சமுதாயங்களிடம் ஒப்படைக்கப்படுவதையும், பெரிய நிலப்பிரபுக்களுக்குச் சொந்தமான விவசாய இயந்திரங்கள் பறிமுதல் செய்யப்படுவதையும், கூலியடிமை முறையினை அடியோடு ஒழிப்பதன் மூலம் விவசாயத் தொழிலாளர்களுடைய நலன்கள் பாதுகாக்கப் படுவதையும், விவசாயம், தொழில் துறை இவற்றின் உற்பத்திப் பொருள்கள் ருஷ்யாவின் எல்லாப் பிராந்தியங்களிடையிலும் ஒழுங்காகவும் முறையாகவும் வினியோகிக்கப்படுவதையும், வங்கிகள் கைப்பற்றப்படுவதையும் (இதைச் செய்யாமல், தனியார் சொத்துடைமை ஒழிக்கப்பட்ட பிறகு அனைத்து மக்களும் நிலத்தின் உடைமையாளர்களாக இருப்பது சாத்தியமன்று), உழைப்போரும் சுரண்டப்படுவோருமானவர்களுக்கு அரசின் எல்லா

வித உதவியும் அளிக்கப்படுவதையும் சித்தி பெறச் செய்ய முடியும்....

இக்காரணங்களை முன்னிட்டு விவசாயிகளது காங்கிரசானது நவம்பர் 7 புரட்சிக்கு... முழுநிறை ஆதரவளிக்கிறது, சோஷலிச புரட்சியாகக் கொண்டு இதற்கு முழுநிறை ஆதரவளிக்கிறது; ருஷ்யக் குடியரசின் சமுதாய மாற்றத்தினை, தேவைப்படும்படியான திருத்தங்களோடு, ஆனால் எவ்விதமான தயக்கமுமின்றி, செயல்படுத்தத் தனது அசைக்க முடியாத திடச் சித்தத்தினை வெளியிடுகிறது.

நில அரசாணையின் நிலையான வெற்றிக்கும் முழுநிறையில் அது சித்தி பெறுவதற்கும் சோஷலிசப் புரட்சி ஒன்றுல் மட்டுமே உத்தரவாதம் செய்ய முடியும். சுரண்டப்படுவோரும் உழைப்பாளர்களுமாகிய விவசாயிகள் ஆலைத் தொழிலாளி வர்க்கத்துடன், முன்னேறிய எல்லா நாடுகளது பாட்டாளி வர்க்கத்துடன் நெருங்கிய கூட்டணி கொண்டிருப்பது தான் இந்த சோஷலிசப் புரட்சியின் வெற்றிக்குரிய அத்தியாவசிய நிபந்தனையாகும். ருஷ்யக் குடியரசில் அரசின் நிறுவன அமைப்பு அனைத்தும், நிர்வாகம் அனைத்தும் அடியிலிருந்து உச்சி வரை, இந்தக் கூட்டணியையே ஆதாரமாகக் கொண்டிருக்க வேண்டும். முதலாளித்துவ வர்க்கத்தாரோடு, முதலாளித்துவ அரசியலின் அதிபர்களோடு இணக்கத்துக்கான—அனுபவத்தால் நிந்தித்துச் சபிக்கப்பட்டிருக்கும் இந்த இணக்கத்துக்கான—கொள்கைக்குத் திரும்புவதற்காக நேரடியாகவோ மறைமுகமாகவோ, பகிரங்கமாகவோ திருட்டுத்தனமாகவோ மேற்கொள்ளப்படும் முயற்சிகளை எல்லாம் தகர்த்து நொறுக்கும் இந்தக் கூட்டணி ஒன்றுல் மட்டுமே உலகெங்கும் சோஷலிசம் வெற்றிவாகை சூடுவதை உத்தரவாதம் செய்ய முடியும்....

செயற் கமிட்டியின் பிற்போக்குவாதிகள் இப்போது பகிரங்கமாக வந்து செயல்படத் துணியவில்லை. ஆனால் செர்னேவ் மட்டும் வந்து இரண்டொரு தரம் பேசினர், பணிவன்புடனும் கவரும்படியான பாரபட்சமின்றியும் பேசினர். மேடையிலே அமரும்படி அவர் அழைக்கப்பட்டார்.... காங்கிரசின் இரண்டாம் நாள் இரவில், செர்னேவ் கவுரவத் தலை

வராக்கப்பட வேண்டுமென்று கேட்டுக் காங்கிரஸ் தலைவருக்கு ஒரு அனுமதேயக் குறிப்பு கொண்டு வந்து தரப்பட்டது. உஸ்தீனவ் அந்தக் குறிப்பை உரக்கப் படித்தார்; உடனே ஸினேவியெவ் எழுந்து நின்று, காங்கிரசைக் கைப்பற்றிக் கொள்ள பழைய செயற் கமிட்டி செய்யும் தந்திரம் இது என்று கூச்சலிட்டார். கணப் பொழுதுக்குள் இரு தரப்புகளும் வீசும் கரங்களும் கொதிப்புற்ற முகங்களுமாகி மண்டபமெங்கும் காட்டுக் கூச்சல் எழுப்பின.... ஆயினும் செர்னேவ் செல்வாக்கு மிக்கவராகவே இருந்து வந்தார்.

நிலப் பிரச்சினை குறித்தும், லெனின் தீர்மானம் குறித்தும் நடைபெற்ற ஆவேசங் கொண்ட விவாதங்களின் போது போல்ஷிவிக்குகள் இரு முறை காங்கிரசை விட்டே வெளியேறிவிடும் நிலைக்கு வந்தனர், இரு முறையும் அவர்களது தலைவர்களால் தடுக்கப்பட்டனர்.... காங்கிரஸ் தொடர்ந்து நடைபெற வழியின்றி முடக்கப்பட்டு விட்டதாகத் தோன்றியது எனக்கு.

ஆனால் இடதுசாரி சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களுக்கும் போல்ஷிவிக்குகளுக்குமிடையே ஸ்மோல்னியில் ஏற்கெனவே இரகசியப் பேச்சுகள் நடைபெற்று வந்தது எங்களில் யாருக்கும் தெரியாது. ஆரம்பத்தில் இடதுசாரி சோஷலிஸ்டுப் புரட்சியாளர்கள் சோவியத்துகளில் இருப்பவையும் இல்லாதவையுமான எல்லா சோஷலிஸ்டுக் கட்சிகளையும் கொண்ட ஓர் அரசாங்கம் வேண்டுமென்றும், தொழிலாளர்கள், படையாட்களது நிறுவனத்திலிருந்தும் விவசாயிகளது நிறுவனத்திலிருந்தும் சம எண்ணிக்கையிலான பிரதிநிதிகளையும், மற்றும் டூமாக்கள், ஸேம்ஸ்த்வொக்களின் பிரதிநிதிகளையும் கொண்ட ஒரு மக்கள் அவைக்கு இந்த அரசாங்கம் பொறுப்புடையதாக இருக்க வேண்டுமென்றும் கோரினர்; அதோடு லெனினும் திரோத்ஸ்கியும் இந்த அரசாங்கத்திலிருந்து ஒதுக்கப்பட வேண்டும், புரட்சி இராணுவக் கமிட்டியும் ஏனைய அடக்குமுறை அதிகார உறுப்புகளும் கலைக்கப்பட வேண்டும் என்றனர்.

இரவு முழுதும் தொடர்ந்து நடைபெற்ற மிகக் கடும் போராட்டத்துக்குப் பிற்பாடு நவம்பர் 28 புதன்கிழமை காலையில் உடன்பாடு வந்தடையப் பெற்றது. 108 உறுப்

பினர்களைக் கொண்ட இத்ஸே-யி-கவில் கூடுதலாக வீதாசார அடிப்படையில் விவசாயிகளது காங்கிரசிலிருந்து 108 உறுப்பினர்களையும், நேரடியாக சேனையிலிருந்தும் கடற்படையிலிருந்தும் தேர்ந்தெடுக்கப்பட்ட 100 பிரதிநிதிகளையும், தொழிற் சங்கங்களிலிருந்து 50 பிரதிநிதிகளையும் (பொது ஒன்றியங்களிலிருந்து 35 பேர், ரயில்வேத் தொழிலாளர்களிடமிருந்து 10 பேர், தபால், தந்தித் தொழிலாளர்களிடமிருந்து 5 பேர்) சேர்த்துக் கொள்வதென்று முடிவாயிற்று. டூமாக்களும் ஸேம்ஸ்த்வொக்களும் சேர்க்கப்படுவதில்லை என்றாகியது. லெனினும் திரோத்ஸ்கியும் அரசாங்கத்தில் தொடர்ந்து இருப்பார்கள், புரட்சி இராணுவக் கமிட்டி தொடர்ந்து செயல்படும்.

விவசாயிகளது காங்கிரசின் அமர்வுகள் இப்போது விவசாயிகளது சோவியத்தின் தலைமையகமாகிய ஃபன்தான்கா எண் 6க்கு, மாட்சிமைச் சட்டக் கல்லூரிக் கட்டிடத்துக்கு மாற்றப்பட்டன. அங்கே பெரிய கூட்ட மண்டபத்தில் புதன் கிழமை பிற்பகலில் பிரதிநிதிகள் ஒன்று கூடினர். பழைய செயற் கமிட்டி விலகிச் சென்றுவிட்டது; வெளியேறிய பிரதிநிதிகளும் சேனைக் கமிட்டிகளது பிரதிநிதிகளுமாகத் தன்னிடம் எஞ்சியிருந்தவர்களைக் கொண்டு அது தனது சொந்த மாநாடு ஒன்றை அதே கட்டடத்தில் இன்னொரு இடத்தில் நடத்திக் கொண்டிருந்தது.

செர்னேவ் ஒரு கூட்டத்திலிருந்து இன்னொன்றுக்குச் சென்று நிகழ்ச்சிகளை விழிப்புடன் கவனித்து வந்தார். போல்ஷிவிக்குகளுடன் உடன்பாட்டுக்கு வருவதற்காக விவாதம் நடைபெற்று வந்தது அவருக்குத் தெரியும், ஆனால் உடன்பாடு முடிவாகிவிட்டதென்பது அவருக்குத் தெரியாது.

எச்ச மாநாட்டில் அவர் உரை நிகழ்த்தினார்: ''தற்போது எல்லோருமே அனைத்து-சோஷலிஸ்டு அரசாங்கம் ஒன்று அமைக்கப்பட வேண்டுமென்பதை ஆதரிக்கிறார்கள். ஆனால் முதலாவது அமைச்சரவை குறித்துப் பலரும் மறந்துவிடுகிறார்கள், அந்த அமைச்சரவை கூட்டணி அரசாங்கமாக இருக்கவில்லை, அதில் ஒரேயொரு சோஷலிஸ்டுதான் இடம் பெற்றிருந்தார்—கேரென்ஸ்கி மட்டும்தான். அந்த அரசாங்கம் அதன் காலத்தில் மக்களிடையே செல்வாக்கு மிக்கதாகவே

இருந்தது. இன்று பலரும் கேரென்ஸ்கியை ஏசுகிறார்கள்; அவரை அதிகாரத்தில் அமர்த்தியது சோவியத்துகள் மட்டுமல்ல, மக்கள் பெருந்திரளினரும்தான் என்பதை மறந்துவிடுகிறார்கள்....

''கேரென்ஸ்கி குறித்துப் பொது மக்கள் அபிப்பிராயம் மாறியதற்குக் காரணம் என்ன? காட்டுமிராண்டிக் குடிகள் ஆண்டவர்களை நிறுவுகிறார்கள், இந்த ஆண்டவர்களைப் பிரார்த்தனை செய்து தொழுதெழுகிறார்கள், தமது பிரார்த்தனைகளில் ஏதேனும் ஒன்று நிறைவேறாமற் போனதும் உடனே அந்த ஆண்டவர்களைத் தண்டிக்க முற்படுகிறார்கள்.... இதுவேதான் இத்தருணத்தில் நம்மிடையிலும் நடைபெறுகின்றது.... நேற்று கேரென்ஸ்கி; இன்று லெனினும் திரோத்ஸ்கியும்; நாளைக்கு வேறொருவர்....

''அதிகாரத்திலிருந்து விலகிவிடும்படி கேரென்ஸ்கி, போல்ஷிவிக்குகள் ஆகிய இருவருக்கும் நாம் முன்மொழிந்துள்ளோம். கேரென்ஸ்கி ஏற்றுக் கொண்டு விட்டார்—தலைமை அமைச்சர் பதவியிலிருந்து தாம் ராஜிநாமா செய்துவிட்டதாக இன்று அவர் தமது மறைவிடத்திலிருந்து அறிவித்தார். ஆனால் போல்ஷிவிக்குகள் அதிகாரத்தைத் தம்மிடமே வைத்துக் கொள்ள விரும்புகிறார்கள், இந்த அதிகாரத்தை எப்படி உபயோகிப்பது என்று அவர்களுக்குத் தெரியவில்லை....

''போல்ஷிவிக்குகள் வெற்றி பெறுவதாயினும், அவர்கள் தோல்வியுறுதாயினும் ஒன்றுதான்—அதனால் ருஷ்யாவின் எதிர்காலம் மாறிவிடப் போவதில்லை. ருஷ்யக் கிராமங்கள் தமக்கு வேண்டியது என்னவென்பதை நன்றாகவே தெரிந்து வைத்திருக்கின்றன, இப்போது அவை தமது சொந்த நடவடிக்கைகளை மேற்கொண்டு செயல்படுத்தி வருகின்றன.... முடிவில் கிராமங்கள்தான் நம்மைக் காப்பாற்றப் போகின்றன....''

இதற்கிடையில் பெரிய மண்டபத்தில் உஸ்தீனவ், விவசாயிகளது காங்கிரசுக்கும் ஸ்மோல்னிக்குமிடையே உடன்பாடு ஏற்பட்டுவிட்டதை அறிவித்தார். கட்டுக்கு அடங்காத ஆனந்தத்துடன் பிரதிநிதிகள் இச்செய்தியினை வரவேற்றார்கள். திடுமென செர்னேவ் அங்கே தோன்றி, தாம் பேச வேண்டுமெனக் கோரினார்.

''விவசாயிகளது காங்கிரசுக்கும் ஸ்மோல்னிக்குமிடையே உடன்பாடு முடிக்கப்படுவதாகத் தெரிகிறது'' என்று அவர் ஆரம்பித்தார். ''இம்மாதிரியான உடன்பாடு சட்ட விரோதமானது, ஏனென்றால் விவசாயிகள் சோவியத்துகளது மெய்யான காங்கிரஸ் அடுத்த வாரத்தில்தான் கூடப் போகின்றது....

''தவிரவும், நான் உங்களை எச்சரிக்கின்றேன், போல் ஷிவிக்குகள் உங்களுடைய கோரிக்கைகளை ஒருபோதும் ஏற்றுக் கொள்ள மாட்டார்கள்....''

வெடித்தெழுந்த பலத்த சிரிப்பொலி அவரை இடை மறித்து நிறுத்திற்று. நிலைமையைப் புரிந்து கொண்டு அவர் மேடையிலிருந்தும் மண்டபத்திலிருந்தும் வெளியே போய்ச் சேர்ந்தார், தமது செல்வாக்கினையும் தம்முடன் எடுத்துக் கொண்டு நடையைக் கட்டினார்.

நவம்பர் 29, வியாழக்கிழமை பிற்பகலின் கடைப் பகுதியில் காங்கிரசின் சிறப்பு அமர்வு ஆரம்பமாயிற்று. விழாவுக்குரிய குதூகல மனப்பாங்கு எங்கும் நிலவியிருந்தது, எல்லார் முகத்திலும் புன்சிரிப்பு பளிச்சிட்டது....காங்கிரசின் நிகழ்ச்சி நிரலில் எஞ்சியிருந்தவை அவசரமாக முடிக்கப் பட்டன. பிறகு சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களின் இடது சாரியைச் சேர்ந்த தாடி நரைத்த மூதாளர் நத்தன்சோன் குரல் கரகரக்க, கண்களில் கண்ணீர்த் துளிகள் ததும்ப, விவசாயிகளது சோவியத்துகளுக்கும் தொழிலாளர்கள், படையாட்களது சோவியத்துகளுக்கும் ஏற்பட்ட ''வாழ்க்கை ஒப்பந்தம்'' பற்றிய அறிக்கையினைப் படித்தார். ''ஒன்று படுகின்றன'' என்று அவர் குறிப்பிட்ட ஒவ்வொரு தரமும் குதூகலமான கையொலி முழக்கம் எழுந்தது....இதன் முடிவில் உஸ்தீனவ், ஸ்மோல்னியிலிருந்து ஒரு தூதுக் குழுவும், அத னுடன் கூட செஞ்சேனையின் பிரதிநிதிகளும் வந்திருப்பதாக அறிவித்தார். வாழ்த்து முழக்கமிட்டு எல்லோரும் இதனை வரவேற்றனர். ஒவ்வொருவராக ஒரு தொழிலாளியும் ஒரு படையாளும் ஒரு மாலுமியும் மேடை மீது வந்து நின்று காங்கிரசுக்கு வாழ்த்துரைத்தனர்.

பிறகு அமெரிக்க சோஷலிஸ்டுத் தொழிலாளர் கட்சியின் பிரதிநிதியாகிய போரீஸ் ரெயின்ஷ்தேயின் பேசினர்: ''விவசாயிகளது காங்கிரசும் தொழிலாள்கள், படையாட்கள் பிரதிநிதிகளது சோவியத்துகளும் ஒன்றுபடும் இந்நாள், புரட்சியின் மாபெரும் நாட்களில் ஒன்ருகும். இதன் சங்கநாதம் உலகெங்கும்—பாரிசிலும் லண்டனிலும் மாகடலுக்கு அப்பால் நியூயார்க்கிலும்—ஒலித்து எதிரொலிக்கும். இந்த ஒருங்கிணைவு உழைப்பாளர்கள் அனைவரது உள்ளங்களிலும் இன்பம் பொங்கச் செய்யும்.

''மகத்தான ஒரு கருத்து வெற்றி வாகை சூடியுள்ளது. மேற்குலகும் அமெரிக்காவும் ருஷ்யாவிடமிருந்து, ருஷ்யப் பாட்டாளி வர்க்கத்திடமிருந்து, மிகப் பிரமாதமான ஒன்றை எதிர்ப்பார்த்தன.... உலகப் பாட்டாளி வர்க்கம் ருஷ்யப் புரட்சியை எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருக்கிறது, இப்புரட்சி கண்டு வரும் பெரும் சாதனைகளுக்காகக் காத்துக் கொண்டிருக்கிறது....''

இத்ஸே-யி-கவின் தலைவர் ஸ்வெர்திலோவ் அவர்களுக்கு வாழ்த்துரைத்தார். ''உள்நாட்டுப் போரின் முடிவு நீடூழி வாழ்க! ஐக்கிய ஜனநாயகம் நீடூழி வாழ்க!'' என்று கோஷமிட்டவாறு விவசாயிகள் அந்தக் கட்டடத்திலிருந்து வெளிப்பட்டு வெள்ளமெனப் பெருகிச் சென்றனர்.

ஏற்கெனவே இருட்டிவிட்டது. கட்டிப் பனி மூடிய கால்வாயின் வெண்பனிப் பரப்பில் சந்திரன், விண்மீன்கள் இவற்றின் வெளிறிய ஒளி பளிச்சிட்டு மின்னிற்று. கால்வாயின் கரையில் பாவ்லவ்ஸ்கி ரெஜிமெண்டின் படையாட்கள் முழு அணி வகுப்பு வரிசையில் நின்றிருந்தார்கள், அவர்களது வாத்தியக் குழு மார்சேலஸ் கீதமிசைத்தது. படையாட்களது வாழ்த்து முழக்கம் காது செவிடுபட வெடித்தெழ, விவசாயிகள் வரிசை அமைத்து நின்று விவசாயிகளது சோவியத்துகளின் அனைத்து ருஷ்யச் செயற் கமிட்டியின் மிகப் பெரிய செம்பதாகையைப் பிரித்து உயர்த்திப் பிடித்தனர், அதில் புதிய பொன்னெழுத்துகளில் பொறிக்கப்பட்டிருந்தது: ''புரட்சிகர உழைப்பாளிப் பெருந் திரளினரின் ஒருங்கிணைப்பு நீடூழி வாழ்க!'' மாவட்ட சோவியத்துகளின் பதாகைகளும் மற்றும் பலவும் விரிக்கப்பட்டன. புத்திலவ் ஆலைத் தொழி

லாளர்களது பதாகை கூறியதாவது: ''அனைத்து நாடுகளது மக்களின் சோதரத்துவத்தைத் தோற்றுவிப்பதற்காக நாங்கள் இந்தப் பதாகைக்குத் தலை வணங்குகிறோம்!''

எங்கிருந்தோ தீப் பந்தங்கள் தோன்றின, இரவில் அவை ஆரஞ்சு வண்ண ஒளியுடன் சுடர்ந்து கட்டிப் பனிப் பொறுக்கு களில் ஆயிரக் கணக்கில் பிம்பங்களைப் பளிச்சிடச் செய்தன; ஃபன்தான்காவின் கரையின் இரு மருங்கிலும் திகைப்புற்று மௌனமாக நின்ற கூட்டங்களுக்கிடையே பாட்டுப் பாடிய வாறு சென்ற வரிசைகளுக்கு மேல் புகை பரப்பி ஒளி வீசின.

''புரட்சி சேனை நீடூழி வாழ்க! செங்காவலர்கள் நீடூழி வாழ்க! விவசாயிகள் நீடூழி வாழ்க!''

இவ்விதம் இந்த மாபெரும் ஊர்வலம் நகரத்தினிடையே வளைந்து நெளிந்து மேலும் மேலும் பெருகிச் சென்றது, பொன்னெழுத்துகள் பொறிக்கப்பட்ட புதிய பதாகைகள் ஆங்காங்கே வந்து சேர்ந்து கொண்டன. வயது முதிர்ந்த இரு விவசாயிகள், ஓயாத உழைப்பால் உடலம் ஒடுங்கியவர் கள், சிறு பிள்ளைகளைப் போல் மகிழ்ச்சியால் முகம் மலர்ந்து ஒளிர கைகோத்துக் கொண்டு நடந்தனர்.

''நமது நிலத்தை இப்போது அவர்கள் நம்மிடமிருந்து திரும்பவும் எப்படிப் பறிப்பார்கள், பார்க்கலாம்!'' என்றார் அவர்களில் ஒருவர்.

ஸ்மோல்னிக்கு அருகே சாலையின் இரு ஓரங்களிலும் செங்காவலர்கள் மகிழ்ச்சி பொறுக்க மாட்டாதவர்களாய் அணி வகுத்து நின்றனர். மற்றொரு விவசாயி தமது தோழ ரிடம் சொன்னார்: ''கொஞ்சங்கூட நான் களைப்படைய வில்லை; முழுத் தொலைவும் நான் காற்றிலே மிதந்து வந்திருக் கிறேன்!''

ஸ்மோல்னியின் படிக்கட்டில் தொழிலாளர்கள், படை யாட்கள் பிரதிநிதிகள் சுமார் நூறு பேர் கூடியிருந்தார்கள், அவர்களது பதாகை வளைவுகளுக்கு இடையிலிருந்து வீசிய விளக்கொளியின் பின்னணியில் கருமையாகத் தெரிந்தது. கடல் அலை போல அவர்கள் கீழே பாய்ந்தோடி வந்து விவ சாயிகளைக் கட்டிப் பிடித்து முத்தமிட்டனர். ஊர்வலம் பெரிய வாயில் வழியே உள்ளே புகுந்து இடியென சப்தமெழுப்பிய வாறு படிக்கட்டில் ஏறிச் சென்றது....

மிகப் பெரிய வெண்ணிற மாமண்டபத்தில் இத்ஸே-யி-க காத்துக் கொண்டிருந்தது, பெத்ரொகிராது சோவியத்தும் மற்றும் ஓராயிரம் பார்வையாளரும் அங்கே இருந்தனர். உணர்ச்சி பொங்கும் வரலாற்றின் மகத்தான தருணங்களுக்குரிய புனித உணர்வோடு அனைவரும் காத்திருந்தார்கள்.

விவசாயிகளது காங்கிரசுடன் ஏற்பட்ட உடன்பாட்டினை ஸினோவியெவ் அறிவித்ததும் மண்டபம் அதிர எழுந்த மகிழ்ச்சி ஆரவாரம் புயலென மூண்டு முழங்கிற்று. சரியாக அந்த நேரத்தில் வெளியே நடைவழியில் வாத்தியக் குழுவின் இசைவெள்ளம் பெருக்கெடுக்க ஊர்வலத்தின் தலைப் பகுதி உள்ளே நுழைந்தது. மேடையிலிருந்த தலைமைக் குழுவினர் எழுந்து விவசாயிகளது தலைமைக் குழுவுக்கு இடம் ஒதுக்கித் தந்தார்கள், இரு குழுவினரும் கட்டித் தழுவிக் கொண்டார்கள். அவர்களுக்குப் பின்னால் ஜாரின் படம் கிழித்தெறியப் பட்ட சட்டத்துக்கு மேலே வெண்ணிறச் சுவருக்கு முன்னால் இரு பதாகைகளும் இணைந்து பிணைந்து கொண்டன....

பிறகு ''வெற்ற முழக்க அமர்வு'' ஆரம்பமாயிற்று. ஸ்வெர்திலோவ் வரவேற்பு உரை நவின்றதும் மரீயா ஸ்பிரிதோனவா பேச்சுமேடையிலே வந்து நின்றார். மெலிந்த உருவம், மூக்குக் கண்ணாடி அணிந்த வெளிறிய முகம், வகிடு எடுத்து அழுத்தி வாரிவிடப்பட்ட கேசம்—இவற்றுடன் பார்ப்பதற்கு அவர் நியூ இங்கிலாந்துப் பள்ளி ஆசிரியைப் போன்றவராய் இருந்தார்; அனைத்து ருஷ்யாவிலும் பெரிதும் நேசிக்கப்பட்டு, பெருஞ் சக்தி படைத்த பெண்ணாக விளங்கியவர்:

''...ருஷ்யாவின் தொழிலாளர்களுக்கு முன்னால், இது காறும் வரலாறு கண்டறியா வாய்ப்புகள் இப்பொழுது விரிந்தெழுகின்றன.... கடந்த காலத்தில் தொழிலாளர் இயக்கங்கள் யாவும் தோற்கடிக்கப்பட்டு வந்தன. ஆனால் தற்போதைய இயக்கம் சர்வதேச வீச்சுடையது, எனவே தான் இது தோற்கடிக்க முடியாததாக இருக்கின்றது. புரட்சியின் தீயை அணைக்கவல்ல சக்தி உலகில் இல்லை! பழைய உலகம் நொறுங்கி விழுகிறது, புதிய உலகம் உதிக்கின்றது....''

பிறகு திரோத்ஸ்கி உணர்ச்சிப் பொறி பறக்கப் பேசினார்: ''தொழர்கள் விவசாயிகளே, வருக, வருக என்று உங்களை

வரவேற்கின்றேன்! நீங்கள் இங்கு விருந்தினர்களாக வரவில்லை, ருஷ்யப் புரட்சியினது இதயத்தின் இருப்பிடமான இந்த இல்லத்தின் எசமானர்களாக இங்கு வருகின்றீர்கள். இலட்சோப இலட்சம் தொழிலாளர்களது சித்தம் இப்போது இந்த மண்டபத்தில் ஒன்றுகுவிகின்றது.... ருஷ்ய நாட்டுக்கு இனி ஒரேயொரு எசமானன்தான்: தொழிலாளர்கள், படையாட்கள், விவசாயிகள் இவர்களது கூட்டிணைவுதான் அந்த எசமானன்....''

கூர்முனை கொண்டு குத்தி நையாண்டி புரியும் முறையில் அவர் நேசநாட்டுத் தூதரகத் துறையினரைப் பற்றி பேசமுற்பட்டார். போர் நிறுத்தம் செய்வோமென ருஷ்யா விடுத்த அழைப்பை இதுகாறும்இவர்கள்இகழ்ச்சியுடன் கவனியாது இருந்து வந்தனர்; இப்போது இந்தப் போர்நிறுத்த அழைப்பினை மத்திய அரசுகள் ஏற்றுக் கொண்டுவிட்டன என்றார்.

''இந்த யுத்தத்திலிருந்து ஒரு புதிய மனித குலம் அவதரிக்கப் போகிறது.... எமது புரட்சிக் கடமைக் களத்தில் நாங்கள் உறுதியுடன் நிற்போமென எல்லா நாட்டுத் தொழிலாளர்களுக்கும் இந்த மண்டபத்திலிருந்து சூளுரைக்கின்றோம். அப்படி நாம் முறிக்கப்படுவோமாயின், அது எங்களது கொடியினைப் பாதுகாத்து நிற்கையில் நிகழ்வதாகவே இருக்கும்....''

அடுத்தபடி பேசியவர் குரிலேன்கொ, போர்முனை நிலைமையை விளக்கிக் கூறினார். அங்கே துஹோனின் மக்கள் கமிசார் அவையை எதிர்ப்பதற்காகத் தயார் செய்து வந்ததை அவர் குறிப்பிட்டார். ''சமாதானத்துக்குரிய பாதையில் தடையாக நிற்போருக்கு நாம் சிறிதும் தயவு காட்ட மாட்டோம், துஹோனினும் அவரைச் சேர்ந்தோரும் இதை நன்கு உணர்ந்து கொள்வது நல்லது!''

கடற்படையின் சார்பில் திபேன்கோ அவையினருக்கு வாழ்த்துரைத்தார். பிறகு **விக்ழேலின்** உறுப்பினரான குருஷீன்ஸ்கி கூறினார்: ''மெய்யான எல்லா சோஷலிஸ்டுகளின் ஐக்கியம் கைகூடிவிட்ட இந்தத் தருணம் முதலாய் ரயில்வேத் தொழிலாளர்களது சேனை அனைத்தும் புரட்சிகர ஜனநாயகத்தினது செயலாட்சிக்குத் தன்னை முற்றிலும் கீழ்ப்படுத்திக் கொள்கிறது!'' பிறகு லுனச்சார்ஸ்கி

அனேகமாய் கண்ணீர் வடிக்கும் நிலையில் பேசினர், இடதுசாரி சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களின் சார்பில் பிரொஷியானும் முடிவில், மார்த்தவ் கோஷ்டியையும் கோர்க்கி கோஷ்டியையும் சேர்ந்தவர்கள் அடங்கிய ஐக்கிய சமூக-ஜனநாயக சர்வதேசியவாதிகளின் சார்பில் சஹரஷ்வீலியும் பேசினர். சஹரஷ்வீலி கூறியதாவது:

''போல்ஷிவிக்குகள் சமரசத்துக்கு இடமில்லாத ஒரு கொள்கையைப் பின்பற்றியதால் முன்பு நாங்கள் இத்ஸே-யி-கவிலிருந்து விலகிக் கொண்டோம்; புரட்சிகர ஜனநாயகம் அனைத்தின் ஐக்கியம் கைகூடும் பொருட்டு அவர்களை விட்டுக் கொடுக்கும்படிக் கட்டாயப்படுத்துவதற்காக நாங்கள் விலகி வெளியே வந்தோம். இப்போது அந்த ஐக்கியம் சாதிக்கப் பெற்றுவிட்டதால், நாங்கள் இத்ஸே-யி-கவில் எங்களது இடங்களுக்குத் திரும்பி வருவது எங்களது புனித கடமையாகுமெனக் கருதுகிறோம்.... இத்ஸே-யி-கவிலிருந்து வெளியே சென்றவர்கள் எல்லாரும் இப்போது திரும்பி வந்துவிட வேண்டுமென நாங்கள் வலியுறுத்துகின்றோம்.''

விவசாயிகளது காங்கிரசின் தலைமைக் குழுவைச் சேர்ந்த மாண்புக்குரிய முதுபெரும் விவசாயியாகிய ஸ்தஷ்கோவ், மண்டபத்தின் நான்கு மூலைகளையும் நோக்கித் தலை குனிந்து வணக்கம் தெரிவித்தார். ''புதிய ருஷ்ய வாழ்வுக்கும் சுதந்திரத்துக்கும் பெயர் சூட்டு விழா நடந்தேறும் இத்தருணத்தில் உங்கள் எல்லோருக்கும் நான் வாழ்த்துரைக்கின்றேன்!'' என்றார் அவர்.

போலந்து சமூக-ஜனநாயகத்தின் சார்பில் புரோன்ஸ்கியும், ஆலைக் கமிட்டிகளின் சார்பில் ஸ்கிரீப்னிக்கும், சலோனிக்காவில் இருந்த ருஷ்யப் படையாட்களின் சார்பில் திரீஃபனெவும், இப்படி முடிவின்றி மற்றும் பலரும் உள்ளம் நிறைந்தவர்களாய், நம்பிக்கைகள் நிறைவேறிய இன்பப் பூரிப்பால் ஊக்குவிக்கப்பட்டவர்களாய் மடை திறந்து விட்டாற்போல் பேசினார்கள்....

இரவு நேடுநேரமாகிவிட்டது, அப்போது பின்வரும் தீர்மானம் முன்மொழியப் பெற்று ஒருமனதாய் நிறைவேற்றப்பட்டது:

‘‘இத்ஸே-யி-க, பெத்ரொகிராது சோவியத்துடனும் விவசாயிகளது காங்கிரசுடனும் இந்தச் சிறப்பு அமர்வில் ஒன்று சேர்ந்து, தொழிலாளர்கள், படையாட்கள் பிரதிநிதிகளது சோவியத்துகளின் இரண்டாவது காங்கிரசால் ஏற்கப்பட்ட நில அரசாணையையும், சமாதான அரசாணையையும், மற்றும் இத்ஸே-யி-கவினுல் ஏற்கப்பட்ட தொழிலாளர்கள் கண்காணிப்பு பற்றிய அரசாணையையும் அங்கீகரித்து உறுதி செய்கின்றது.

‘‘இத்ஸே-யி-க, விவசாயிகளது காங்கிரஸ் இவற்றின் இந்தக் கூட்டு அமர்வானது, தொழிலாளர்கள், படையாட்கள், விவசாயிகளது கூட்டிணைவு, உழைப்போரும் சுரண்டப்படுவோருமாகியோரது இந்தச் சோதரக் கூட்டிணைவு இவர்களால் வெற்றி கொள்ளப்பட்ட ஆட்சியதிகாரத்தினை உறுதி பெறச் செய்யுமென்றும், பிற நாடுகளில் தொழிலாளி வர்க்கத்தின் கைக்கு ஆட்சியதிகாரம் வந்து சேருவதைத் துரிதப்படுத்துவதற்குரிய புரட்சிகர நடவடிக்கைகள் யாவற்றையும் தனது நாட்டில் மேற்கொள்ளுமென்றும், இவ்வழியில், நேர்மையான சமாதானத்தின் இலட்சியமும் சோஷலிசத்தின் இலட்சியமும் வெற்றி வாகை சூடும்படி உத்தரவாதம் செய்யுமென்றும் தனக்குள்ள திடமான நம்பிக்கையை வெளியிடுகின்றது.’’

## அத்தியாயம் 1இன் அனுபந்தம்

### 1.

**அபரோன்த்ஸி** — ''பாதுகாப்புவாதிகள்''. ''மிதவாத'' சோஷலிஸ்டுக் கோஷ்டிகள் யாவும் தமக்குத் தாமே ஏற்றுக் கொண்ட, அல்லது இவை யாவற்றுக்கும் ஏனையோரால் சூட் டப்பட்ட பெயர் இது. தேசப் பாதுகாப்புக்காக நடைபெறும் யுத்தமாகும் என்று சொல்லி இவை யாவும் நேசநாட்டுத் தலைமையின் கீழ் தொடர்ந்து இந்த யுத்தம் நடைபெறுவதற்கு உடன்பட்டதால் இவை இப்பெயர் பெறலாயின. போல்ஷி விக்குகளும், இடதுசாரி சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களும், மென்ஷிவிக்குச் சர்வதேசியவாதிகளும் (மார்த்தவின் குழு), சமூக-ஜனநாயகச் சர்வதேசியவாதிகளும் (கோர்க்கியின் கோஷ்டி) நேசநாடுகளை ஜனநாயக யுத்த-நோக்கங்களைப் பிரகடனம் செய்யும்படிக் கட்டாயப்படுத்தி, இந்த வரை யறைகளின் அடிப்படையில் ஜெர்மனிக்கு சமாதானத்தை முன்மொழிவதை ஆதரித்தனர்.

### 2.

### புரட்சிக்கு முன்பும் புரட்சியின் போதும் கூலி விகிதங்களும் வாழ்க்கைச் செலவும்

பின்வரும் கூலி விகித, வாழ்க்கைச் செலவு அட்டவணை கள் 1917 அக்டோபரில் மாஸ்கோ வாணிபச் சபையையும், தொழிலாளர் துறை அமைச்சகத்தின் மாஸ்கோ பிரிவையும்

சேர்ந்த கூட்டுக் கமிட்டியால் தொகுக்கப்பட்டு, 1917 அக்டோபர் 26ல் நோவயா ழீஸின் ஏட்டில் வெளிவந்தவை:

நாள் விகிதக் கூலி (ருபிள், கப்பேக்கில்)

| வேலைத் துறை | 1914 ஜூலை | 1916 ஜூலை | 1917 ஆகஸ்டு |
|---|---|---|---|
| தச்சர், நிலைப்பெட்டி தயாரிப்பாளர் . . . | 1.60—2.0 | 4.0 —6.0 | 8.50 |
| மண் வெட்டுகிறவர் . . . | 1.30—1.50 | 3.0 —3.50 | — |
| கொல்லத்துக்காரர், காரை பூசுகிறவர் . . | 1.70—2.35 | 4.0 —6.0 | 8.0 |
| வர்ணம் பூசுகிறவர், திண்டு, மெத்தை அமைப்பாளர் . . . | 1.80—2.20 | 3.0 —5.50 | 8.0 |
| கொல்லர் . . . . . . | 1.0 —2.25 | 4.0 —5.0 | 8.50 |
| புகை போக்கித் துப்புரவுத் தொழிலாளர் | 1.50—2.0 | 4.0 —5.50 | 7.50 |
| பூட்டுக் கொல்லர் . . . | 0.90—2.0 | 3.50—6.0 | 9.0 |
| கூலியாள் . . . . . . | 1.0 —1.50 | 2.50—4.50 | 8.0 |

1917 மார்ச்சுப் புரட்சியை அடுத்து உடனடியாகவே கூலி விகிதங்கள் பிரமாதமாக உயர்ந்தாக எண்ணற்ற கதைகள் கூறப்பட்டன. ஆனால் தொழிலாளர் துறை அமைச்சகம் ருஷ்யா அனைத்திலுமான நிலைமைகளைக் குறிப்பனவாக வெளியிட்ட புள்ளிவிவரங்கள், புரட்சியைத் தொடர்ந்து உடனடியாகக் கூலி விகிதங்கள் உயர்ந்து விடவில்லை, சிறிது சிறிதாகவே அதிகமாயின என்பதைக் காட்டுகின்றன. சராசரியாகக் கூலி விகிதங்கள் 500 சதவீதத்துக்குச் சற்று அதிகமாய் உயர்ந்தன....

ஆனால் அதேபோது ரூபிளின் மதிப்பும் அதன் பழைய வாங்கு சக்தியில் மூன்றில் ஒரு பகுதிக்கும் குறைவாகியது,

அவசியப் பொருள்களின் விலைகள் பிரமண்டமாய் அதிகரித்தன.

அடியிற் கண்ட அட்டவணை மாஸ்கோ நகர டூமாவினுல் தொகுக்கப்பட்டது; பெத்ரொகிராதைவிட மாஸ்கோவில் உணவுப் பொருள்கள் மலிவாகவும் அதிக அளவிலும் கிடைத்தன:

**உணவுப் பொருள்களின் விலை**

**(ரூபிள், கப்பேக்கில்)**

| | | 1914 ஆகஸ்டு | 1917 ஆகஸ்டு | அதிகரிப்பு % |
|---|---|---|---|---|
| கறுப்பு ரொட்டி | (ஃபூன்த்)* | $0.02^1/_2$ | 0.12 | 330 |
| வெள்ளை ரொட்டி | ,, | 0.05 | 0.20 | 300 |
| மாட்டிறைச்சி | ,, | 0.22 | 1.10 | 400 |
| கன்றிறைச்சி | ,, | 0.26 | 2.15 | 727 |
| பன்றிறைச்சி | ,, | 0.23 | 2.0 | 770 |
| ஹெர்ரிங் மீன் | ,, | 0.06 | 0.52 | 767 |
| பாலாடைக்கட்டி | ,, | 0.40 | 3.50 | 754 |
| வெண்ணெய் | ,, | 0.48 | 3.20 | 557 |
| முட்டை | (டஜன்) | 0.30 | 1.60 | 443 |
| பால் | (ஒரு குவளை) | 0.07 | 0.40 | 471 |

உணவுப் பொருள்களில் ஏற்பட்ட சராசரி விலை உயர்வு 556 சதவீதமாகும், அதாவது கூலி விகித உயர்வைக் காட்டிலும் 51 சதவீதம் அதிகமாகும்.

பிற தேவைப் பண்டங்களைப் பொறுத்த வரை, அவற்றின் விலை உயர்வு பிரமிக்கத் தக்கது.

பின்வரும் அட்டவணை மாஸ்கோ தொழிலாளர்கள் பிரதிநிதிகளது சோவியத்தின் பொருளாதாரப் பிரிவினுல் தொகுக்கப்பட்டது, இடைக்கால அரசாங்கத்தின் பண்ட வழங்கீட்டு அமைச்சகத்தால் சரியென ஏற்றுக் கொள்ளப்பட்டது:

---

* ஃபூன்த்—ருஷ்ய ராத்தல், 410 கிராம்.

பிற தேவைப் பண்டங்களின் விலைகள்
(ரூபிள், கப்பேக்கில்)

| | 1914 ஆகஸ்டு | 1917 ஆகஸ்டு | % அதிகரிப்பு |
|---|---|---|---|
| கலிக்கோ துணி (அர்ஷின்)* | 0.11 | 1.40 | 1.173 |
| பருத்தித்துணி . . . . . | 0.15 | 2.0 | 1.233 |
| கம்பளித்துணி . . . . . | 2.0 | 40.0 | 1.900 |
| கஸ்தோர் துணி . . . . . | 6.0 | 80.0 | 1.233 |
| ஆடவர் மிதியடி (ஜோடி) | 12.0 | 144.0 | 1.097 |
| மிதியடிப் பாதத் தோல் (அர்ஷின்) . . . . . . | 20.0 | 400.0 | 1.900 |
| ரப்பர் புதைமிதி (ஜோடி) | 2.50 | 15.0 | 500 |
| ஆடவர் ஆடைத் தொகுதி | 40.0 | 400—455 | 900—1.109 |
| தேயிலை (ஃபூன்த்) . . . . | 4.50 | 18.0 | 300 |
| தீப்பெட்டி (கட்டு) . . . | 0.10 | 0.50 | 400 |
| சோப்பு (பூடு) . . . . . | 4.50 | 40.0 | 780 |
| மண்ணெண்ணெ (வெத்ரோ)** | 1.70 | 11.0 | 547 |
| மெழுது வத்தி (பூடு) . . . | 8.50 | 100.0 | 1.076 |
| கருவெல்ல மிட்டாய் (ஃபூன்த்) . . . . . . . | 0.30 | 4.50 | 1.400 |
| விறகு (சுமை) . . . . . | 10.0 | 120.0 | 1.100 |
| கட்டைக் கரி . . . . . . | 0.80 | 13.0 | 1.525 |
| பல வகை உலோகப் பொருள்கள் . . . . . | 1.0 | 20.0 | 1.900 |

மேற்கண்ட அவசியத் தேவைப் பண்டங்களின் விலை சராசரி சுமார் 1,109 சதவீதம் அதிகரித்தன; சம்பளங்களில் ஏற்பட்ட உயர்வைக் காட்டிலும் இது இரண்டு மடங்குக்கும் அதிகமாகும். வித்தியாசத் தொகை கள்ளச் சந்தையர், ஊக வணிகர் முதலானோரது பைகளில் குவிந்தது.

1917 செப்டம்பரில் நான் பெத்ரொகிராது வந்து சேர்ந்த

---

* அர்ஷின்—71.12 சென்டிமீட்டர்; பூடு—16.38 கிலோகிரம்; கஸ்தோர்—மணிக் கம்பளித்துணி.—[பதிப்பாசிரியர்.]

** வெத்ரோ—முகத்தல் அளவை, சுமார் 10 லிட்டர்.—[பதிப்பாசிரியர்.]

போது, தேர்ச்சி வாய்ந்த ஆலைத் தொழிலாரின்—உதாரணமாய், புத்திலவ் ஆலையின் உருக்குத் தொழிலாளரின்—சராசரி நாட் கூலி சுமார் 8 ரூபிளாக இருந்தது. அதேபோது இலாபங்கள் அளவு மீறியனவாக இருந்தன. பெத்ரொகிராதின் சுற்று வட்டாரத்தில் இருந்த ஆங்கிலேய ஆலையான தார்ன்டன் கம்பளி ஆலையின் முதலாளிகளில் ஒருவர் தமது ஆலையில் கூலி விகிதங்கள் சுமார் 300 சதவீதம் உயர்ந்த அதே காலத்தில் தமது இலாபங்கள் 900 சதவீதம் அதிகமாகியதாக என்னிடம் கூறினர்.

3.

### சோஷலிஸ்டு அமைச்சர்கள்

ஜூலை இடைக்கால அரசாங்கத்தில் முதலாளித்துவ அமைச்சர்களோடு கூட்டு சேர்ந்து சோஷலிஸ்டுகள் தமது வேலைத்திட்டத்தைச்செயல்படுத்துவதற்காகச்செய்தமுயற்சிகளின் வரலாறு, அரசியலில் வர்க்கப் போராட்டத்துக்குக் கண் கூடான எடுத்துக்காட்டாகும். இந்த நிகழ்வினை விளக்குகையில் லெனின் கூறுவதாவது:

''முதலாளிகள்... அரசாங்கத்தால் இனி தாக்கு பிடிக்க முடியாதென்பதைக் கண்டதும், தமக்குரிய ஒரு செயல் முறையை மேற்கொண்டார்கள்; தொழிலாளி வர்க்கத்தைக் கண்தெரியாமல் தடுமாறச் செய்வதற்காகவும்,அதைப் பிளவுபடுத்துவதற்காகவும், முடிவில் பணிய வைப்பதற்காகவும் 1848 முதலாய் முதலாளிகள் பல பத்தாண்டுகளாகக் கையாண்டு வந்திருக்கும் ஒரு செயல்முறை இது—முதலாளித்துவத்தினரையும் சோஷலிஸ்டு முகாமிலிருந்தான ஓடுகாலிகளையும் கொண்ட 'கூட்டு அமைச்சரவை' எனப்படுதே இந்தச் செயல்முறை.

''தொழிலாளர்களது புரட்சி இயக்கத்துடன் கூடவே அரசியல் சுதந்திரமும் ஜனநாயகமும் நிலவும் நாடுகளில்—உதாரணமாக இங்கிலாந்திலும் பிரான்சிலும்—முதலாளிகள் பல தரம் இந்த சூழ்ச்சியைக் கையாண்டு, பெரிய அளவில் வெற்றியும் பெற்றிருக்கிருர்கள். 'சோஷலிஸ்டுத்' தலைவர்கள் அமைச்சரவையினுள் நுழைந்ததும் அவர்கள்

அனேகமாய் விதிவிலக்கின்று வெறும் அலங்கார பொம்மைகளாக, கைப்பாவைகளாக, முதலாளிகளுக்கான ஒரு கவசமாக, தொழிலாளர்களை ஏமாற்றுவதற்கான கைக்கருவியாக செயல்படுகிருர்கள். இதே சூழ்ச்சித் திட்டத்தைத்தான் ருஷ்யாவிலும் 'ஜனநாயக', 'குடியரசுவாத' முதலாளிகளும் செயல்படுத்தினர்கள். சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களும் மென்ஷிவிக்குகளும் இதற்குப் பலியாயினர். செர்னேவ், திஸெரெத்தேலி, ஸ்கோபெலெவ், அவ்க்சேன்தியெவ், சாவின்கவ், ஸருத்னி, நிக்கீத்தின்* ஆகியோர் அடங்கிய 'கூட்டு' அமைச்சரவை மே 6ல் எதார்த்த உண்மையாகியது....''—**புரட்சியின் பிரச்சினைகள்.**

**4.**

**மாஸ்கோவில் செப்டம்பரில் நடைபெற்ற நகராண்மைக் கழகத் தேர்தல்கள்**

இந்தத் தேர்தல் முடிவுகள் பற்றிய பின்வரும் ஒப்பீட்டு அட்டவணையை 1917 அக்டோபர் முதல் வாரத்தில் **நோவயா ழீஸின்** ஏடு வெளியிட்டு, சொத்துடைத்த வர்க்கங்களுடன் கூட்டு சேரும் கொள்கை உதவாக்கரை கொள்கையாக இருப்பதை இது காட்டுகிறதென்று எழுதிற்று. ''உள்நாட்டு யுத்தத்தை இனியாவது தவிர்க்க முடியுமானல், புரட்சிகர ஜனநாயகம் அனைத்தின் ஐக்கிய அணி ஒன்ருல் மட்டுமே அதைச் செய்ய முடியும்....''

**மாஸ்கோ மத்திய, வட்டார டூமாக்களுக்கான தேர்தல்கள்**

| | 1917 ஜூன் | | 1917 செப்டம்பர் | |
|---|---|---|---|---|
| சோஷலிஸ்டுப் புரட்சியாளர்கள் . . | 58 | உறுப்பினர் | 14 | உறுப்பினர் |
| காடேட்டுகள் . . . | 17 | ,, | 30 | ,, |
| மென்ஷிவிக்குகள் . . | 12 | ,, | 4 | ,, |
| போல்ஷிவிக்குகள் . . | 11 | ,, | 47 | ,, |

* ருஷ்ய மூலம் செர்னேவையும் திஸெரெத்தேலியையும் மட்டுமே குறிப்பிடுகிறது.—[பதிப்பாசிரியர்.]

## 5.

## பிற்போக்குவாதிகள் மேன்மேலும் ஆணவமுடையோராதல்

*செப்டம்பர் 18. காடேட்டு ஷுல்கின் கீவ் நகரச் செய்தியேடு ஒன்றில் எழுதினுர்: ருஷ்யா ஒரு குடியரசாகுமென இடைக்கால அரசாங்கம் செய்துள்ள பிரகடனம், இந்த அரசாங்கத்துக்குரிய அதிகாரங்களை அப்பட்டமான முறையில் துஷ்பிரயோகம் செய்வதாகும். ''ஒரு குடியரசினையோ, தற்போதுள்ள குடியரசு அரசாங்கத்தையோ நம்மால் ஒத்துக் கொள்ள முடியாது.... ருஷ்யாவில் நாம் ஒரு குடியரசைத் தான் விரும்புகிருேமா என்று நிச்சயமாகச் சொல்வதற்கில்லை....''*

*அக்டோபர் 23. ரியஸானில் நடைபெற்ற காடேட்டுக் கட்சிக் கூட்டம் ஒன்றில் எம். துஹோனின் கூறினுர்: ''மார்ச் 1க்குள் நாம் சட்டவழி முடியரசை நிறுவ வேண்டும். அரியாசனத்துக்குரிய நியாயமான வாரிசாகிய மிகயீல் அலெக்சாந்திரவிச்சை நாம் நிராகரிக்கலாகாது....''*

*அக்டோபர் 27. மாஸ்கோவில் தொழில், வாணிப வட்டாரத்தினரது மாநாட்டில் நிறைவேற்றப்பட்ட தீர்மானம்*:*

*''இம்மாநாடு... இடைக்கால அரசாங்கமானது உடனடியாகச் சேனையில் பின்வரும் நடவடிக்கைகளை எடுக்க வேண்டுமென்று வற்புறுத்துகிறது:*

*''1. அரசியல் பிரசாரம் அனைத்துக்கும் தடை விதித்தல்; சேனையானது அரசியலுக்குப் புறம்பானதாக்கப்படுதல்.*

*''2. தேசியவிரோத, சர்வதேசியக் கருத்துக்களையும் தத்துவங்களையும் பற்றிய பிரசாரம் சேனைகளின் அவசியத்தை மறுத்து, கட்டுப்பாட்டுக்குத் தீங்கு விளைவிக்கிறது; இந்தப் பிரசாரத்துக்குத் தடை விதிக்கப் பட்டு, இந்தப் பிரசாரகர்கள் தண்டிக்கப்பட வேண்டும்.*

---

** ஜான் ரீடு இந்தத் தீர்மானத்தில் கூறப்படும் நடவடிக்கை விவரங்களை இங்கே வெகுவாகச் சுருக்கித் தருகின்ருர். தவிரவும் இந்தத் தீர்மானத்தை நிறைவேற்றியது தொழில், வாணிப வட்டாரத்தினரது மாநாடு அல்ல, பொதுப் பிரமுகர்களது மாநாடு.—[பதிப்பாசிரியர்.]*

''3. சேனைக் கமிட்டிகளது செயற்பாடு முற்றிலும் பொருளாதாரப் பிரச்சினைகளுக்கு மட்டும் உரித்தானதாக வரம்பிடப்பட வேண்டும். இவற்றின் தீர்மானங்கள் யாவும் மேல் அதிகாரிகளிடம் ஊர்ஜிதம் பெற வேண்டும். எந்நேரத்திலும் இந்தக் கமிட்டிகளைக் கலைப்பதற்கு மேல் அதிகாரிகள் உரிமை பெற்றவர்களாக இருக்க வேண்டும்.

''4. சலாமிடுதல் திரும்பவும் நிலைநாட்டப்பெற்று கட்டாயக் கடமையாக்கப்பட வேண்டும். கட்டுப்பாட்டுக்கான அதிகாரம் படையதிகாரிகளது கையில் திரும்பவும் முழு அளவில் நிலைநாட்டப்பட்டு, தண்டனையை மறுபரிசீலனை செய்வதற்கான உரிமையும் அவர்களுக்கு அளிக்கப்பட வேண்டும்.

''5. கீழ்ப்படியாமையைக் கற்றுத் தரும் படையாள் திரளினர் இயக்கத்தில் பங்கு கொண்டு படையதிகாரிகளுக்குரிய மேன்மைக்குப் பங்கம் உண்டாக்குவோர் படையதிகாரிகளது தொகுதியிலிருந்து நீக்கப்பட வேண்டும். இதற்காக மேன்மை நீதிமன்றங்கள் திரும்பவும் அமைக்கப்படுதல் வேண்டும்.

''6. சேனைக் கமிட்டிகள், பொறுப்பற்ற ஏனைய நிறுவனங்கள் இவற்றின் செல்வாக்குக்கு உட்பட்டு நியாயமின்றி விலக்கப்பட்ட ஜெனரல்களும் பிற படையதிகாரிகளும் சேனைக்குத் திரும்புவதற்கு வேண்டிய நடவடிக்கைகளை இடைக்கால அரசாங்கம் எடுக்க வேண்டும்.''

## அத்தியாயம் 2இன் அனுபந்தம்

### 1.

வரவிருக்கும் எனது புத்தகமான ''கர்னீலவ் முதல் பிரேஸ்த்-லித்தோவ்ஸ்க் வரையில்'' என்பதில் கர்னீலவ் கலகத்தின் முழு விவரமும் தரப்படுகின்றது. கர்னீலவின் முயற்சிக்கு இடம் தரும்படியான நிலைமை தோன்றியதில் கேரென்ஸ்கிக்கும் பொறுப்புண்டு என்பது தற்போது தெளிவாகவே நிலைநாட்டப்பட்டிருக்கிறது. கேரென்ஸ்கியிற்காக பரிந்து பேசுவோர் பலரும், கர்னீலவின் திட்டங்கள் அவருக்குத் தெரியும் என்றும், தந்திரம் செய்து காலத்துக்கு

முன்னதாகவே கர்னீலவைப் பகிரங்கமாகச் செயலில் இறங்க வைத்து அவரை நசுக்கி விட்டார் என்றும் வாதாடுகிறார்கள். திரு எ. ஜே. சாக் போன்றவருங்கூட, ''ருஷ்ய ஜனநாயகத்தின் பிறப்பு'' என்ற புத்தகத்தில் பின்வருமாறு கூறுகிறார்:

''சில விவரங்கள்... அனேகமாய்ச் சந்தேகத்துக்கு இடமின்றி தெளிவாகியுள்ளன. முதலாவதாக, போர்முனையிலிருந்து சில படைப்பிரிவுகள் பெத்ரொகிராதை நோக்கி வந்து கொண்டிருந்தது பற்றி கேரென்ஸ்கியிற்குத் தெரிந்திருந்தது. தலைமை அமைச்சரும் யுத்த அமைச்சருமான அவர் போல்ஷிவிக்கு அபாயம் கடுமையாகிவந்ததை உணர்ந்து கொண்டு, இந்தப் படைப்பிரிவுகளை வரச் சொல்லி அழைத்திருக்கக் கூடும்....''

இந்த வாதத்தில் இருக்கும் ஒரேயொரு குறை என்னவெனில், அந்த நேரத்தில் ''போல்ஷிவிக்கு அபாயம்'' எதுவும் இருக்கவில்லை; போல்ஷிவிக்குகள் அப்போது சோவியத்துகளில் பலமற்ற சிறுபான்மையோராகவே இருந்தார்கள்; அவர்களது தலைவர்கள் சிறைச்சாலையிலோ தலைமறைவாகவோ இருந்து வந்தார்கள்.

## 2.

## ஜனநாயக மாநாடு

ஜனநாயக மாநாடு பற்றிய முன்மொழிவு முதலில் கேரென்ஸ்கியிடம் செய்யப்பட்ட போது, அவர் தேச மக்களின் எல்லாக் கூறுகளும்—''உயிர்ச் சக்திகள்'' என்பதாக இவற்றைக் குறிப்பிட்டார் அவர்—வங்கி முதலாளிகள், ஆலை அதிபர்கள், நிலப்பிரபுக்கள், காடேட்டுக் கட்சியின் பிரதிநிதிகள் ஆகியோரும் அடங்கலாக எல்லாக் கூறுகளும் கூட்டப்பட வேண்டுமென்று ஆலோசனை கூறினார். ஆனால் சோவியத்து இதற்கு இணங்க மறுத்து, பிரதிநிதிகளுக்கான பின்வரும் அட்டவணையை வகுத்திடவே, கேரென்ஸ்கி ஒத்துக் கொண்டார்:

100 பிரதிநிதிகள்—அனைத்து ருஷ்யத் தொழிலாளர்கள், படையாட்கள் பிரதிநிதிகளது சோவியத்துகள்

| | | |
|---|---|---|
| 100 | ,, | —அனைத்து ருஷ்ய விவசாயிகள் பிரதிநிதிகளது சோவியத்து |
| 50 | ,, | —தொழிலாளர்கள், படையாட்கள் பிரதிநிதிகளது மாநில சோவியத்துகள் |
| 50 | ,, | —விவசாயிகளது மாநில நிலக்கமிட்டிகள் |
| 100 | ,, | —தொழிற்சங்கங்கள் |
| 84 | ,, | —போர்முனைச் சேனைக் கமிட்டிகள் |
| 150 | ,, | —தொழிலாளர், விவசாயிகளது கூட்டுறவுக் கழகங்கள் |
| 20 | ,, | —ரயில்வேத் தொழிலாளர்களது ஒன்றியம் |
| 10 | ,, | —தபால், தந்தித் தொழிலாளர்களது ஒன்றியம் |
| 20 | ,, | —வாணிபத் துறை எழுத்தர்கள் |
| 15 | ,, | —டாக்டர்கள், வழக்கறிஞர்கள், பத்திரிகையாளர் போன்ற சுயேச்சைக் பணித் துறையினர் |
| 50 | ,, | —மாநில ஸேம்ஸ்த்வொக்கள் |
| 50 | ,, | —தேசிய இன நிறுவனங்கள்—போலிஷ்காரர்கள், உக்ரைனியர்கள் முதலானோர் |

இந்த வீதாசாரம் இரண்டு, மூன்று தரம் திருத்தப்பட்டது. முடிவில் ஏற்கப்பட்ட பிரதிநிதித்துவ வினியோகம் வருமாறு:

| | | |
|---|---|---|
| 300 | பிரதிநிதிகள் | —அனைத்து ருஷ்யத் தொழிலாளர்கள், படையாட்கள், விவசாயிகள் பிரதிநிதிகளது சோவியத்துகள் |
| 300 | ,, | —கூட்டுறவுக் கழகங்கள் |
| 300 | ,, | —நகராண்மைக் கழகங்கள் |
| 150 | ,, | —போர்முனைச் சேனைக் கமிட்டிகள் |
| 150 | ,, | —மாநில ஸேம்ஸ்த்வொக்கள் |
| 200 | ,, | —தொழிற் சங்கங்கள் |
| 100 | ,, | —தேசிய இன நிறுவனங்கள் |
| 200 | ,, | —சிற்சில சிறு கோஷ்டிகள் |

## 3.

## சோவியத்துகளின் பணி முடிவுறுகிறது

இத்ஸே-யி-கவின் ஏடாகிய இஸ்வேஸ்தியாவில் 1917 செப்டம்பர் 28ல் வெளிவந்த ஒரு கட்டுரை, கடைசி இடைக் கால அமைச்சரவை குறித்துக் கூறியது:

''இறுதியில் இப்போது மெய்யாகவே ஜனநாயகத் தன்மையதான ஓர் அரசாங்கம், ருஷ்ய மக்களது எல்லா வர்க்கங்களுடைய சித்தத்திலிருந்து உதித்தெழுந்த ஒன்று, வருங்கால மிதவாத நாடாளுமன்ற ஆட்சியின் குத்துமதிப்பான முதலாவது வடிவமான இது, அமைக்கப்பட்டிருக்கின்றது. இனி நமக்கு முன்னுல் இருப்பது அரசியல் நிர்ணயச் சபை. அடிப்படை அரசியல் சட்டம் சம்பந்தமான எல்லாப் பிரச்சினைகளுக்கும் இது தீர்வு காணப் போகிறது. இச்சட்டம் மிகப் பெருமளவுக்கு ஜனநாயகத் தன்மையதாக இருக்கும். சோவியத்துகளின் பணி இப்போது முடிவுறுகின்றது. சோவியத்துகள் விலகிக் கொண்டுவிட வேண்டிய தருணம் நெருங்கி வருகிறது. வெற்றிவாகை சூடிய சுதந்திர மக்களின் அரங்கிலிருந்து ஏனையப் புரட்சிப் பொறியமைவுடன் சேர்ந்து சோவியத்துகளும் விலகிக் கொண்டுவிட வேண்டும், இனி இம்மக்களுக்குரிய ஆயுதங்கள் அரசியல் செயலுக்கான சமாதான ஆயுதங்களாகவே இருத்தல் வேண்டும்.''

''சோவியத்து நிறுவனங்களில் நெருக்கடி'' என்று மகுடமிட்டு அக்டோபர் 25ல் **இஸ்வேஸ்தியாவில்** தலையங்கக் கட்டுரை ஒன்று வெளிவந்தது. எங்கும் வட்டார சோவியத்துகளது செயற்பாடு குன்றி வருவதாக மாநிலங்களிலிருந்து வருவோர் கூறுகிருர்கள் என்று ஆரம்பித்தது இந்தக் கட்டுரை. ''இது இயற்கையே'' என்ருர் கட்டுரை ஆசிரியர். ''ஏனெனில், மேலும் நிலையான சட்ட மன்றங்களாகிய நகர டூமாக்களிலும் ஸேம்ஸ்த்வொக்களிலும் மக்கள் நாட்டமுடையவர்களாகி வருகிருர்கள்....

''சோவியத்துகள் சிறந்த முறையில் ஒழுங்கமைந்திருக்கும் முக்கிய மையங்களாகிய பெத்ரொகிராதிலும் மாஸ்கோவிலும், ஜனநாயகப் பகுதியோர் அனைவரையும் சோவியத்துகள் தம்முள் கொண்டிருக்கவில்லை.... அறிவுத்துறையினரில் பெரும்பான்மையோர் இவற்றில் பங்கு கொள்வதில்லை. அதே போல் பல தொழிலாளர்களும் பங்கு கொள்வதில்லை. அரசியலில் பின்தங்கியவர்கள் என்பதால் சில தொழிலாளர்களும், தொழிற்சங்கங்களே தமக்குக் கவர்ச்சி மையம் என்பதால் ஏனையோரும் சோவியத்துகளில் பங்கு கொள்ளாமல் இருக்கிருர்கள்.... தொழிற் சங்கங்கள் பெருந் திரளின

ருடன் உறுதியாய் ஒருசேர இணைந்திருப்பவை, இவர்களது அன்றாடத் தேவைகளைத் திறம்பட பூர்த்தி செய்கிறவை என்பது மறுக்க முடியாதது....

''வட்டார ஜனநாயக நிர்வாகங்கள் முழு மூச்சுடன் ஒழுங்கமைக்கப்படுவது மிகவும் முக்கியமாகும். நகர டூமாக்கள் அனைத்து மக்களுக்குமான வாக்குரிமையின் அடிப்படையில் தேர்ந்தெடுக்கப்பட்டவை. முற்றிலும் வட்டாரங்களுக்குரிய விவகாரங்களில் இவை சோவியத்துகளைக் காட்டிலும் அதிக அதிகாரம் பெற்றவை. இதில் தவறு ஏதும் இருப்பதாக எந்த ஜனநாயகவாதியும் கருதமாட்டார்....

''...நகராண்மைக் கழகங்களுக்கான தேர்தல்கள் சோவியத்துகளுக்கான தேர்தல்களைக் காட்டிலும் சிறப்பான, அதிக ஜனநாயகத் தன்மையதான முறையில் நடத்தப்படுகின்றன.... எல்லா வர்க்கங்களும் நகராண்மைக் கழகங்களில் பிரதிநிதித்துவம் பெற்றிருக்கின்றன.... நகரங்களில் வட்டாரத் தன்னாட்சி உறுப்புகள் வாழ்க்கையினை ஒழுங்கமைக்க முற்பட்டதும் வட்டார சோவியத்துகளின் பணி இயற்கையாகவே முடிவுற்றுவிடும்.

''...சோவியத்துகளில் அக்கறை குன்றி வருவதற்கு இரண்டு காரணக் கூறுகளைக் குறிப்பிடலாம். முதலாவதாக, மக்கள் பெருந் திரளினரிடத்தே அரசியல் அக்கறை குறைந்து வருகிறது; இரண்டாவதாக, மாநில, வட்டார ஆட்சி மன்றங்கள் புதிய ருஷ்யா கட்டியமைக்கப்படுவதற்காக ஏற்பாடு செய்வதற்கு மேற்கொள்ளும் முயற்சிகள் ஓங்கி வருவதைக் குறிப்பிட வேண்டும்.... பின்னால் குறிக்கப்பட்ட இந்தத் திசையிலான போக்கு ஓங்க ஓங்க, சோவியத்துகளுக்குள் முக்கியத்துவம் மேலும் மேலும் சீக்கிரமாய் மறைந்து செல்லும்....

''எமது நிறுவனத்துக்கு நாமே சவக்குழி 'தோண்டுகிறோம்' என்பதாகக் கூறப்படுகிறது. உண்மை என்னவெனில், புதிய ருஷ்யாவைக் கட்டியெழுப்புவதற்காக அரும்பாடுபட்டு உழைப்பவர்களாவோம் நாம்....

''எதேச்சாதிகாரமும் அனைத்து அதிகாரவர்க்க ஆட்சியும் வீழ்ச்சியுற்றதும், ஜனநாயகம் முழுமையும் தற்காலிகமாகத் தங்கியிருப்பதற்கான கொட்டடிகளாக நாம் சோவி

யத்துகளை அமைத்துக் கொண்டோம். இப்போது நாம் கொட்டடிகளுக்குப் பதில் புதிய அமைப்பின் நிரந்தரக் கட்டடத்தைக் கட்டியெழுப்புகின்றோம். இந்த நிலைமையில் இயற்கையாகவே, கொட்டடிகளை விட்டு சிறுகச் சிறுக வெளியேறி, வசதியான வசிப்பிடங்களில் மக்கள் குடியேறவே செய்வார்கள்.''

## 4.

## ருஷ்யக் குடியரசு அவையில் திரோத்ஸ்கியின் உரை*

**இத்ஸே-யி-க** கூட்டிய ஜனநாயக மாநாட்டின் நோக்கம் என்னவெனில், கர்னீலவைத் தோற்றுவித்த பொறுப்பற்ற தனியாள் அரசாங்கத்துக்கு முற்றுப்புள்ளி வைத்து, யுத்தத்துக்கு முடிவு கட்ட வல்லதும் குறிப்பிட்ட காலத்தில் அரசியல் நிர்ணயச் சபை கூட்டப்படுவதை உறுதி செய்யக் கூடியதுமான பொறுப்புள்ள ஓர் அரசாங்கம் நிறுவப்பட வேண்டும் என்பதுதான். ஆனால் இதற்கிடையில் ஜனநாயக மாநாட்டின் முதுகுக்குப் பின்னால் சூழ்ச்சி செய்யப்பட்டு, குடிமையாளர் கேரென்ஸ்கியிற்கும் காடேட்டுகளுக்கும் மென்ஷிவிக்கு, சோஷலிஸ்டுப் புரட்சியாளர் கட்சிகளது தலைவர்களுக்கும் இடையே சமரசம் முடித்துக் கொள்ளப்பட்டது. இதனால், நமக்கு அதிகார பூர்வமாக அறிவிக்கப்பட்ட நோக்கத்துக்கு நேர்விரோதமான முடிவு கிடைத்திருக்கிறது. இவ்வாறு ஓர் அதிகாரம் உருவாக்கப்பட்டிருக்கிறது; இதனுள்ளும் இதைச் சுற்றிலும் பகிரங்கமாகவும் இரகசியமாகவும் கர்னீலவியர்கள் தலைமையான பங்காற்றக் காண்கிறோம். ருஷ்யக் குடியரசு அவையானது **ஆலோசனை** மன்றமாக இருக்குமே அன்றி **சட்டமியற்றும்** மன்றமாக இராது என்று அறிவிக்கப்பட்டு, இதன்மூலம் அரசாங்கம் பொறுப்பற்றதாக இருக்குமென்று அதிகார பூர்வமாகப் பிரகடனம் செய்யப்பட்டிருக்கிறது.

---

* இது திரோத்ஸ்கியின் உரையல்ல, போல்ஷிவிக்குக் கட்சிக் குழுவின் அறிக்கை. 1917 அக்டோபர் 7ல் குடியரசு அவையில் திரோத்ஸ்கி இதைப் படித்தளித்தார்.—[பதிப்பாசிரியர்.]

பொறுப்பற்ற அரசாங்கம், புரட்சியின் இந்த எட்டாவது மாதத்தில் புலீகின் டூமாவின்* இந்தப் புதிய பதிப்பின் மூலம் தனக்கு ஒரு மூடுதிரையை அமைத்துக் கொள்கிறது.

''சொத்துடைத்த வர்க்கங்கள் இந்த இடைக்கால அவையில் பெரிய வீதாசாரத்தில் இடம் பெற்றிருக்கின்றன. ஆனால் நாடெங்கிலுமான தேர்தல்கள் இவ்வர்க்கப் பிரதிநிதிகளில் பலருக்கு இங்கு இடம் பெற எந்த உரிமையும் இல்லை என்பதைத் தெளிவாகவே காட்டுகின்றன. ஆயினும் காடேட்டுக் கட்சி, அரசாங்க டூமாவுக்கு இடைக்கால அரசாங்கம் பொறுப்புடையதாகவே இருக்க வேண்டுமென்று நேற்று வரை விரும்பி வந்த இந்தக் கட்சி, குடியரசு அவையிலிருந்து அரசாங்கம் சுயேச்சை பெறும்படிச் செய்து கொண்டுவிட்டது. சொத்துடைத்த வர்க்கங்களுக்கு இந்த அவையில் இருப்பதைப் போல் இவ்வளவு சாதகமான நிலை அரசியல் நிர்ணயச் சபையில் கிடைக்கப் போவதில்லை, அரசியல் நிர்ணயச் சபையில் இவை பொறுப்பற்றதாக நடந்து கொள்ள முடியப் போவதில்லை என்பது தெளிவு.

''சொத்துடைத்த வர்க்கங்கள் இன்னும் ஆறே வாரங்களில் கூடுவதாக இருக்கும் அரசியல் நிர்ணயச் சபைக்கு மெய்யாக தயார் செய்கின்றவையாக இருந்தால், இப்போது அரசாங்கத்தின் பொறுப்பில்லா நிலையை நிறுவிக் கொள்வதற்கு எந்தக் காரணமும் இல்லை. முழு உண்மை என்னவென்றால், இடைக்கால் அரசாங்கத்தின் கொள்கைகளை நெறியாண்மை புரியும் முதலாளித்துவ வர்க்கத்தின் அரசியல் நிர்ணயச் சபையை முறியடிப்பதையே தமது நோக்கமாகக் கொண்டுள்ளனர். உள்நாட்டுக் கொள்கை, அயல்துறைக் கொள்கை ஆகிய நமது தேசக் கொள்கை அனைத்தையும் கண்காணித்து இயக்கும் சொத்துடைத்த வர்க்கங்களது பிரதான நோக்கம் தற்போது இதுவேதான். தொழில் துறை

* புலீகின் டூமா—சட்ட ஆலோசனை மன்றம். ஜார் மன்னனின் உத்தரவுபடி உள்துறை அமைச்சர் அ. க. புலீகின் மக்கள் பெருந் திரளினரது கவனத்தைப் புரட்சியிடமிருந்து திசை திருப்பும் நோக்கத்துடன் ஆகஸ்டு 1905ல் இந்த டூமாவுக்கான சட்ட திட்டத்தைத் தயாரித்தார். ஆனால் புரட்சிகர வெகுஜன நடவடிக்கைகள் வளர்ச்சியுற்று விட்டதால் டூமா தேர்தல்கள் நடைபெற முடியவில்லை. — (பதிப்பாசிரியர்.)

யிலும் விவசாயத்திலும் பொருள் வழங்கீட்டுத் துறையிலும் அரசாங்கத்துடன் சேர்ந்து செயல்படும் சொத்துடைத்த வர்க்கங்களது அரசியலானது யுத்தத்தால் ஏற்பட்ட இயற்கையான ஒழுங்கு குலைவினை அதிகமாக்குகின்றது. சொத்துடைத்த வர்க்கங்கள் ஆத்திர மூட்டி விவசாயிகளது கலத்தைத் தூண்டுகின்றன! சொத்துடைத்த வர்க்கங்கள் உள்நாட்டு யுத்தத்துக்குத் தூபமிடுகின்றன! பட்டினிப் பேயைத் தாண்டவமாடச் செய்யும் பாதையிலே இவ்வர்க்கங்கள் பகிரங்கமாகவே நடைபோடுகின்றன! இதைக் கொண்டு புரட்சியை வீழ்த்தவும், அரசியல் நிர்ணயச் சபைக்கு முடிவு கட்டவும் அவை திட்டமிடுகின்றன!

''முதலாளித்துவ வர்க்கமும் அதன் அரசாங்கமும் பின்பற்றும் சர்வதேசக் கொள்கையும் இதே போலக் கொலை பாதகத் தன்மை வாய்ந்ததாகவே இருக்கிறது. நாற்பது மாதங்களாக நடைபெறும் யுத்தத்துக்குப் பிற்பாடு தலைநகருக்குப் பேராபத்து எழுகிறது. அதற்குப் பதிலளிக்கும் முறையில் அரசாங்கத்தை மாஸ்கோவுக்கு மாற்ற ஒரு திட்டம் உருவாகிறது. தலைநகரைத் துறந்து செல்லும் கருத்து முதலாளித்துவ வர்க்கத்தைக் கொதிப்படையச் செய்வதநய் இல்லை. இதற்கு நேர்மாறான விளைவே ஏற்படுகிறது. எதிர்ப்புரட்சிச் சதிவேலையை ஊக்குவிப்பதென்ற பொதுவான கொள்கையில் இதுவும் இயற்கையான ஒரு பகுதியாக ஏற்றுக் கொள்ளப்படுகிறது.... நாடு கரையேற சமாதானம் முடித்துக் கொள்வது ஒன்றே வழியென்பதை அங்கீகரிப்பதற்குப் பதில், தூதுத் துறையினர், ஏகாதிபத்தியவாதிகள் இவர்களது தலைக்கு மேல், ஓய்ந்து போய்விட்ட பல நாடுகளின் மக்களுக்கே நேரில் உடனடிச் சமாதானமெனும் கருத்தை முன்வைத்து பகிரங்கமாகவே அறைகூவி, யுத்தம் தொடர்ந்து நடைபெற முடியாதபடிச் செய்வதற்குப் பதில்—இடைக்கால அரசாங்கம் காடேட்டுகள், எதிர்ப்புரட்சியாளர்கள், நேசநாடுகளது ஏகாதிபத்தியவாதிகள் இவர்களது ஆணையின்படி, அர்த்தமின்றி, நோக்கமின்றி, திட்டமின்றி இந்தக் கொலைகார யுத்தம் தொடர்ந்து நீடிக்க வகை செய்கிறது, புதிய நூறாயிரக் கணக்கான படையாட்களையும் மாலுமிகளையும் பயனற்ற மரணத்துக்கு இலக்காகச் செய்கிறது, பெத்

ரொகிராதை விட்டொழிக்கவும் புரட்சியைக் குலைந்தொழிய வைக்கவும் தயார் செய்கிறது. ஏனையோரது தவறுகளின் விளைவாகவும் கொடுங் குற்றங்களின் விளைவாகவும் போல் ஷிவிக்குப் படையாட்களும் மாலுமிகளும் ஏனைய படையாட்களுடனும் மாலுமிகளுடனும் சேர்ந்து செத்து மடியும் ஒரு நேரத்தில் உச்சப் படைத்தலைவர் எனப்படுவரான கேரென்ஸ்கி தொடர்ந்து போல்ஷிவிக்குப் பத்திரிகைகளை நசுக்கி நிறுத்துகிறார், குடியரசு அவையின் தலைமையான கட்சிகள் தாமே மனமுவந்து இந்தக் கொள்கைகளுக்கு மூடு திரையாகச் செயல்படுகின்றன.

''சமூக-ஜனநாயகப் போல்ஷிவிக்குக் கட்சிக் குழுவினரான நாங்கள், மக்களுக்குத் துரோகமிழைக்கும் இந்த அரசாங்கத்துடன் எங்களுக்குப் பொதுவானது ஏதும் இல்லையெனப்* பிரகடனம் செய்கிறோம். ஆதிகார பூர்வமான திரைகளின் மறைவில் மக்களைக் கொன்று குவிக்கும் இந்தக் கொலைகாரர்களது செயலுடன் எங்களுக்குப் பொதுவானது ஏதுமில்லை. இந்த வேலையில் ஒரேயொரு நாளைக்குரியதையுங்கூட மூடுதிரையிட்டு மறைப்பதில் நேரடியாகவோ, மறைமுகமாகவோ நாங்கள் பங்கு கொள்ள மறுக்கின்றோம். வில்ஹேல்மின் படைகள் பெத்ரொகிராதை அச்சுறுத்தும் ஒரு நேரத்தில் கேரென்ஸ்கியையும் கர்னீலவையும் கொண்டு நடைபெறும் இந்த அரசாங்கம் பெத்ரொகிராதிலிருந்து ஓடிச் சென்று மாஸ்கோவை எதிர்ப்புரட்சித் தளமாக்கிக் கொள்ள தயார் செய்து வருகிறது!

''மாஸ்கோ தொழிலாளர்களையும் படையாட்களையும் விழிப்புடன் இருக்கும்படி நாங்கள் எச்சரிக்கை செய்கின்றோம். இந்தக் குடியரசு அவையிலிருந்து வெளியேறும் நாங்கள், அனைத்து ருஷ்யாவையும் சேர்ந்த தொழிலாளர்கள், விவசாயிகள், படையாட்களது ஆண்மைக்கும் அறிவுடைமைக்கும் வேண்டுகோள் விடுக்கின்றோம். பெத்ரொகிராதுக்கு அபாயம்! புரட்சிக்கு அபாயம்! அரசாங்கம் இந்த

* ''எதிர்ப்புரட்சிக்கு உடந்தையாக இருக்கும் இந்தக் குடியரசு அவையுடன் எங்களுக்குப் பொதுவானது எதுவும் இல்லையென.... ''என்னும் தொடரை ஜான் ரீடு இங்கே விட்டுவிடுகின்றார்.—[பதிப்பாசிரியர்.]

அபாயத்தை அதிகரிக்கச் செய்துள்ளது, ஆளும் வர்க்கங்கள் இதைச் கடுமையாக்குகின்றன. மக்கள்தான் தம்மையும் தமது நாட்டையும் பாதுகாத்துக் கொள்ள வேண்டும்.

''மக்களுக்கு நாங்கள் வேண்டுகோள் விடுக்கின்றோம்: உடனடியான, நேர்மையான, ஜனநாயக சமாதானம் நீடூழி வாழ்க! அனைத்து ஆட்சியதிகாரமும் சோவியத்துகளுக்கே! நிலம் அனைத்தும் மக்களுக்கே! அரசியல் நிர்ணயச் சபை நீடூழி வாழ்க!''

## 5.

### ஸ்கோபெலெவுக்குத் தரப்பட்ட ''நக்காஸ்''
### (சாரம்)

இத்ஸே-யி-கவினல் நிறைவேற்றப்பட்டு, பாரிஸ் மா நாட்டில் ருஷ்யாவின் புரட்சிகர ஜனநாயகத்தின் பிரதிநிதிக்கான கட்டளையாக ஸ்கோபெலெவுக்குத் தரப்பட்டது.)*

சமாதான உடன்படிக்கையானது ''பிரதேசச் சேர்ப்புகள் இல்லை, இழப்பீடுகள் இல்லை, தேசங்களது சுய-நிர்ணய உரிமை'' எனும் கோட்பாட்டை அடிப்படையாகக் கொண்டிருக்க வேண்டும்.

### பிரதேசம் குறித்த பிரச்சினைகள்

1. படையெடுத்துப் பிடிக்கப்பட்ட ருஷ்யப் பகுதிகளிலிருந்து ஜெர்மன் படைகள் வெளியேறிச் செல்லுதல். போலந்துக்கும் லித்துவேனியாவுக்கும் லாட்வியாவுக்கும் முழுச் சுய-நிர்ணய உரிமை.

2. துருக்கிய ஆர்மீனியாவுக்குத் தன்னாட்சி வழங்கப்பட வேண்டும், பிற்பாடு உள்நாட்டு ஆட்சியதிகாரம் நிறுவப்பட்டதும் முழுச் சுய-நிர்ணய உரிமை வழங்கப்பட வேண்டும்.

---

* ஜான் ரீடு இங்கே பின்வரும் வாக்கியத்தைச் சேர்க்காமல் விட்டிருக்கிறார்: ''யுத்தத்தின் நோக்கங்கள் சம்பந்தமாகப் புதிய ஒப்பந்தம் மக்களுக்குப் பகிரங்கமாக வெளியிடப்பட வேண்டும்.''—[பதிப்பாசிரியர்.]

3. அல்சாஸ்-லொரைன் பிரச்சினையானது, அந்நியப் படைகள் யாவும் அங்கிருந்து வெளியேறியபின் அனைத்து மக்கள் வாக்கெடுப்பின் மூலம் தீர்க்கப்பட வேண்டும்.

4. பெல்ஜியம் மீட்டமைக்கப்பட வேண்டும். சர்வதேச நிதியிலிருந்து சேதங்களுக்காக அதற்கு இழப்பீடு அளிக்கப் பட வேண்டும்.

5. செர்பியாவும் மான்டெனிக்ரோவும் மீட்டமைக்கப் பட்டு சர்வதேச நிவாரண நிதி உதவப்பட வேண்டும். செர்பியாவுக்கு அட்ரியாட்டிக் கடலை அடைவதற்கான வெளிச்செல் வழி தரப்பட வேண்டும். பாஸ்னியாவும் ஹெர்சகவீனுவும் தன்னாட்சி பெற வேண்டும்.

6. பால்கனில் சச்சரவுக்குரிய மாநிலங்களுக்கு மாநிலத் தன்னாட்சி தரப்பட்டு, அதைத் தொடர்ந்து அனைத்து மக்கள் வாக்கெடுப்பு நடத்தப்பட வேண்டும்.

7. ருமேனியா மீட்டமைக்கப்பட வேண்டும், அதேபோது அது தொப்ரூத்ஜாவுக்கு முழுச் சுய-நிர்ணயம் தரும்படிக் கட்டாயப் படுத்தப்பட வேண்டும்.... யூதர்கள் சம்பந்த மான பெர்லின் உடன்படிக்கையின் வரையறைகளை ருமேனியா செயல்படுத்தும் படியும், யூதர்களை அது ருமேனியக் குடிமையாளர்களாக அங்கீகரிக்கும்படியும் கட்டாயப்படுத் தப்பட வேண்டும்.

8. ஆஸ்திரியாவின் இத்தாலிய மாநிலங்களுக்கு இடைக் காலத் தன்னாட்சியும் அதைத் தொடர்ந்து அது எந்த அரசைச் சேர்ந்ததாக வேண்டுமென்பது குறித்து அனைத்து மக்கள் வாக்கெடுப்பும்.

9. ஜெர்மன் காலனிகள் திருப்பித் தரப்படுதல்.

10. கிரீசும் பாரசீகமும் மீட்டமைக்கப்படுதல்.

## கடல் சுதந்திரம்

உட்பகுதிக் கடல்களுக்கு வெளிச்செல் வழியாக அமைந்த கடற்கால்கள் யாவும், மற்றும் சூயெஸ் கால் வாயும் பனமா கால்வாயும் நடுநிலையாக்கப்பட வேண்டும். வாணிபக் கப்பல் போக்குவரத்து சுதந்திரமாக நடைபெற

வேண்டும். தனியார் தன்மையாக்கப்படுவதற்கான உரிமை அகற்றப்படுதல் வேண்டும். வாணிபக் கப்பல்கள் நீர்செல் குண்டுகளால் தாக்கப்படுதலுக்குத் தடை விதிக்க வேண்டும்.

## இழப்பீடுகள்

போர் நாடுகள் யாவும் எவ்வித இழப்பீடுகளும், நேர்முகமானவை ஆயினும் சரி, மறைமுகமானவை ஆயினும் சரி—உதாரணமாகப் போர்க் கைதிகளது பராமரிப்புக்குரிய செலவுகள் வடிவிலானவை—கோருவதைக் கைவிடுதல் வேண்டும். யுத்தத்தின் போது வசூலிக்கப்பட்ட இழப்பீடுகளும் பங்குத் தொகைகளும் திருப்பித் தரப்பட வேண்டும்.

## பொருளாதார வரையறைகள்

வாணிப உடன்படிக்கைகள் சமாதான வரையறைகளில் ஒரு பகுதியாக்கப்படலாகாது. அந்தந்த நாடும் அதன் வாணிப உரிமைகளில் சுயேச்சை பெற்றதாக இருத்தல் வேண்டும், சமாதான உடன்படிக்கையால் பொருளாதார உடன்படிக்கை முடித்துக் கொள்ளும்படியான கடமைக்கு உட்படுத்தப்படவோ, முடித்துக் கொள்ள கூடாதென தடை செய்யப்படவோ கூடாது. ஆயினும், யுத்தத்துக்குப் பிற்பாடு பொருளாதார முற்றுகை நடத்தவோ, தனிப்பட்ட சுங்க வரி ஒப்பந்தங்கள் நிறுவிக் கொள்ளவோ செய்வதில்லை என்று சமாதான உடன்படிக்கையில் எல்லா நாடுகளும் தம்மைக் கட்டுப்படுத்திக் கொள்ள வேண்டும். வாணிபத்தில் அதிக சலுகையுடைய நாடாகும் உரிமை வேறுபாடின்றி எல்லா நாடுகளுக்கும் அளிக்கப்பட வேண்டும்.

## சமாதானத்துக்குரிய உத்தரவாதங்கள்

ஒவ்வொரு நாட்டின் தேசியப் பிரதிநிதித்துவ மன்றங்களால் தேர்ந்தெடுக்கப்படும் பிரதிநிதிகளால் சமாதான மாநாட்டில் சமாதானம் முடித்துக் கொள்ளப்பட வேண்டும்.

இந்த நாடாளுமன்றங்களால் சமாதான வரையறைகள் ஊர்ஜிதம் செய்யப்பட வேண்டும்.

அரசுகளுக்கு இடையிலான இரகசிய சூழ்ச்சிச் செயல்முறை ஒழிக்கப்பட வேண்டும், எல்லாத் தரப்பினரும் எவ்வித இரகசிய உடன்படிக்கைகளும் செய்து கொள்வதில்லையென்று தம்மைக் கட்டுப்படுத்திக் கொள்ள வேண்டும். இம்மாதிரியான உடன்படிக்கைகள் சர்வதேசச் சட்டத்துக்கு முரணானவை என்றும் செல்லத்தக்கவை அல்ல என்றும் அறிவிக்கப்பட வேண்டும். பல்வேறு நாடுகளின் நாடாளுமன்றங்களால் ஊர்ஜிதம் செய்யப்படும் வரை எல்லா உடன்படிக்கைகளும் செல்லத் தகாதனவாகக் கருதப்பட வேண்டும்.

தரையிலும் கடலிலும் படிப்படியான படைக்கலக் குறைப்பும், காவல் துறை அமைப்பு ஒன்று நிறுவப்படுதலும். ஜனாதிபதி வில்சன் முன்வைத்துள்ள ''சர்வதேச சங்கம்'', பின்வரும் நிலைமைகள் பூர்த்தி செய்யப்படும் பட்சத்தில் சர்வதேசச் சட்டத்துக்கு மதிப்பு மிக்க உதவியாக அமையக் கூடும்: 1) எல்லா தேசங்களும் சமத்துவ உரிமைகளின் பேரில் இதில் பங்கு கொள்ளக் கடமைப்பட்டனவாகப்பட வேண்டும், 2) சர்வதேச அரசியல் ஜனநாயகத் தன்மையதாக்கப்பட வேண்டும்.

## சமாதானத்துக்குரிய வழிகள்

பகை அரசுகள் பலவந்தப் பிரதேசச் சேர்ப்புகள் யாவற்றையும் கைவிடத் தமது உடன்பாட்டை அறிவித்ததும் சமாதானப் பேச்சுவார்த்தைகளை ஆரம்பிக்கத் தயாராயிருக்கிறோமென நேச நாடுகள் உடனே பிரகடனம் செய்ய வேண்டும்.

நடுநிலை நாடுகள் யாவற்றின் பிரதிநிதிகளும் கலந்து கொள்ளும் பொதுவான சமாதான மாநாட்டின் மூலமே தவிர வேறு எவ்விதமாகவும் சமாதானப் பேச்சுவார்த்தைகள் ஆரம்பிப்பதில்லை, சமாதானம் முடித்துக் கொள்வதில்லை என்று நேச நாடுகள் தம்மைக் கட்டுப்படுத்திக் கொள்ள வேண்டும்.

ஸ்டாக்ஹோம் சோஷலிஸ்டு மாநாட்டுக்கு இடப்பட்ட எல்லாத் தடைமதில்களும் அகற்றப்பட வேண்டும்; அதில் கலந்து கொள்ள விரும்பும் கட்சிகள், நிறுவனங்களது எல்லாப் பிரதிநிதிகளுக்கும் பாஸ்போர்ட்டுகள் தரப்பட வேண்டும்.

*(விவசாயிகள் சோவியத்துகளது நிர்வாகக் கமிட்டியும் மேற்கண்டதிலிருந்து எவ்விதத்திலும் அதிக வேறுபாடில்லாத* **நக்காஸ்** *ஒன்றை வெளியிட்டது.)*

## 6.

## ருஷ்யாவின் செலவில் சமாதானம்

பிரான்சுக்கு ஆஸ்திரியா முன்மொழிந்த சமாதானத்தைப் பற்றி ரிபோ* வெளிப்படுத்தியிருக்கும் தகவல்கள்; ''சமாதான மாநாடு'' என்பதாக ஸ்விட்சர்லாந்தில் பேர்ன் நகரில் 1917ஆம் ஆண்டு கோடையில் நடத்தப்பட்டு, போரிடும் எல்லா நாடுகளின் பிரதிநிதிகளும் இந்நாடுகளது பெரிய நிதியாதிக்க நலன்களைப் பிரதிநிதித்துவம் செய்வோராய் இதில் பங்கு கொண்டது; ஆங்கிலேய முகவர் ஒருவர் பல் காரிய மதச் சபைப் பிரமுகர் ஒருவருடன் பேச்சுவார்த்தைகள் நடத்துவதற்காக மேற்கொள்ளப்பட்ட முயற்சிகள் ஆகிய இவை யாவும், ருஷ்யாவைப் பலியிட்டு அதன் செலவில் ஒருவித சமாதானத்தை ஜோடித்துக் கொள்வதற்கு ஆதரவாக இரு தரப்புகளிலும் வலுவாய்ந்த போக்குகள் இருந்ததைச் சுட்டிக் காட்டின. ''கர்னீலவ் முதல் பிரேஸ்த்-லித்தோவ்ஸ்க் வரையில்'' என்ற எனது அடுத்த புத்தகத்தில் இது பற்றி, பெத்ரொகிராதில் அயல் துறை அமைச்சகத்தில் கண்டுபிடிக்கப்பட்ட சில இரகசிய ஆவணங்களையும் வெளியிட்டு, சற்று விரிவாகவே பரிசீலிப்பதாக இருக்கிறேன்.

---

* அலெக்சாந்தர் ஃபெலிக்ஸ் ஜோசெப் ரிபோ—பிரெஞ்சு அரசியல் தலைவர். 1917ல் பிரான்சின் பிரதமராக இருந்தவர்.—[பதிப்பாசிரியர்.]

7.

பிரான்சில் ருஷ்யப் படையாட்கள்

## இடைக்கால அரசாங்கத்தின் அதிகார பூர்வமான அறிக்கை*

''ருஷ்யப் புரட்சி பற்றிய செய்தி பாரிசுக்குத் தெரிய வந்ததும், தீவிரப் போக்குடைத்த ருஷ்யச் செய்தியேடுகள் உடனே அங்கே வெளிவர ஆரம்பித்தன. இந்தச் செய்தியேடுகளும் மற்றும் தனியாட்களும் படையாள் திரளினரிடையே தங்குதடையின்றி செய்திகளைப் பரவச் செய்ததோடு, போல்ஷிவிக்குப் பிரசாரத்தையும் துவக்கி, பிரெஞ்சு ஏடுகளில் வெளிவந்த பொய்ச் செய்திகளையும் பல சந்தர்ப்பங்களில் பரப்பினர். அதிகார பூர்வமான செய்திகளும் திட்டவட்டமான விவரங்களும் இல்லாமற் போகவே, இந்த இயக்கமானது படையாட்களிடையே அதிருப்தியை மூண்டெழச் செய்தது. இதன் விளைவாக ருஷ்யாவுக்குத் திரும்பி வர வேண்டுமென்ற ஆசையும், படையதிகாரிகள் மீது வெறுப்பும் உண்டாயின.

''முடிவில் இவை யாவும் கலகமாக மாறின. படையாட்களின் பொதுக் கூட்டம் ஒரு வேண்டுகோள் விடுத்தது; இனி போர் புரியப் போவதில்லை என்று படையாட்கள் தீர்மானித்து விட்டதால் பட்டாளத்து அணிவகுப்புப் பயிற்சிகளில் ஈடுபட மறுக்கும்படி இந்த வேண்டுகோள் அறைகூவிற்று. கலகக்காரர்களைத் தனிமைப்படுத்துவதென முடிவு செய்யப்பட்டது, இடைக்கால அரசாங்கத்திடம் பற்றுறுதி கொண்ட எல்லாப் படையாட்களும் குர்த்தீன் முகாமைவிட்டு வெளியே வந்துவிடும்படியும், ஆயுத தளவாடங்களை எல்லாம் தம்முடன் கொண்டு வந்து விடும்படியும் ஜெனரல் ஸங்கேவிச் உத்தரவிட்டார். ஜூன் 25ல் இந்த உத்தரவு செயல்படுத்தப்பட்டது. இடைக்கால அரசாங்கத்துக்கு 'நிபந்தனையுடன்' தான் கீழ்ப்படுவோம் என்று கூறிய படையாட்கள்

---

* இந்த அறிக்கையை ஜான் ரீடு இங்கு ஓரளவு சுருக்கித் தருகிறார்.—[பதிப்பாசிரியர்.]

மட்டுமே முகாமில் எஞ்சியிருந்தார்கள். குர்த்தீன் முகாமில் இருந்த இந்தப் படையாட்களிடம் வெளிநாடுகளிலிருந்த ருஷ்யச் சேனைகளின் தலைமைப் படைத்தலைவர் ஸங்கேவிச்சும், யுத்த அமைச்சகத்தின் கமிசார் ராப்பும், இப்படையாட்களை வயப்படுத்த விரும்பிய நாடுகடந்து வாழ்ந்து வந்த முக்கியமான முன்னுள் அரசியல் அகதிகள் சிலரும் சென்று பேசிப் பார்த்தார்கள். ஆனால் இந்த முயற்சிகள் வெற்றி பெறவில்லை. முடிவில் கமிசார் ராப், கலகக்காரர்கள் தமது ஆயுதங்களைத் துறந்துவிட்டு, தாம் கீழ்படிவதற்கு அடையாளமாக, கிளரவோ என்னுமிடத்துக்கு ஒழுங்காக அணி வகுத்துச் செல்ல வேண்டுமென்று வற்புறுத்தினர். இந்தக் கட்டளைக்கு ஒரு பகுதியினரே கீழ்ப்படிந்தனர். முதலில் 500 பேர் முகாமை விட்டு வெளியே சென்றூர்கள், இவர்களில் 22 பேர் கைது செய்யப்பட்டார்கள். 24 மணி நேரத்துக்குப் பிற்பாடு சுமார் 6.000 பேர் வெளியேறினர்.... சுமார் 2.000 பேர் எஞ்சியிருந்தார்கள்....

''நிர்ப்பந்தத்தை அதிகமாக்குவதெனத் தீர்மானிக்கப்பட்டது. இவர்களுடைய உணவுப் பங்கீடு குறைக்கப்பட்டது; சம்பளம் தரப்படாமல் நிறுத்தி வைக்கப்பட்டது; குர்த்தீன் கிராமத்துக்குச் செல்லும் சாலைகளைப் பிரெஞ்சுப் படையாட்கள் காவல் புரிந்தனர். ருஷ்யப் பீரங்கிப் படைப்பிரிவு ஒன்று பிரான்சு வழியே செல்வது தெரிய வந்ததும் ஜெனரல் ஸங்கேவிச், கலகக்காரர்களின் எண்ணிக்கையைக் குறைக்கும் பொருட்டு, காலாட் படையினரும் பீரங்கிப் படையினருமான கலப்படப் படைப்பிரிவை அமைப்பதெனத் தீர்மானித்தார். கலகக்காரர்களிடம் பேசுவதற்காக ஒரு தூதுக்குழு அனுப்பி வைக்கப்பட்டது. பேச்சுவார்த்தைகளால் பயனில்லை என்பதைத் தெரிந்து கொண்டு இக்குழுவினர் சில மணி நேரத்துக்கெல்லாம் திரும்பி வந்தனர். கலகக்காரர்கள் தமது ஆயுதங்களைத் துறந்துவிட வேண்டுமென்று கோரி செப்டம்பர் 1ஆம் தேதியன்று ஜெனரல் ஸங்கேவிச் அவர்களுக்கு இறுதி எச்சரிக்கை விடுத்தார், செப்டம்பர் 3ஆம் தேதி காலை 10 மணிக்குள் இந்தக் கட்டளைக்கு அவர்கள் கீழ்ப்படியவில்லை எனில் பீரங்கிகள் கொண்டு சுட்டப்படும் என்று அச்சுறுத்தினர்.

''இந்தக் கட்டளைக்குக் கீழ்ப்படியாமற் போனதும் குறிக்கப்பட்ட நேரத்தில் அம்முகாமின்மீது இலேசான பீரங்கித் தாக்குதல் நடத்தப்பட்டது. பதினெட்டு வெடி குண்டுகள் சுடப்பட்டன. குண்டுத் தாக்குதல் கடுமையாக்கப் படுமென்று கலகக்காரர்கள் எச்சரிக்கை செய்யப்பட்டார் கள். செப்டம்பர் 3ஆம் தேதி இரவில் 160 பேர் சரணடைந் தார்கள். செப்டம்பர் 4ல் பீரங்கித் தாக்குதல் திரும்பவும் ஆரம்பமாயிற்று, 36 வெடிகுண்டுகள் சுடப்பட்டபின் காலை 11 மணிக்குக் கலகக்காரர்கள் இரு வெள்ளைக் கொடிகளை உயர்த்தி, ஆயுதங்கள் இல்லாமலே முகாமை விட்டு வெளியே வரத் தொடங்கினார்கள். மாலைக்குள் 8,300 பேர் சரணடைந்துவிட்டனர். முகாமில் எஞ்சியிருந்த 150 படை யாட்கள் அன்று இரவு இயந்திரத் துப்பாக்கிகள் கொண்டு சுட்டார்கள். செப்டம்பர் 5ல் இந்த விவகாரத்துக்கு முற்றுப் புள்ளி வைக்கும் பொருட்டு முகாமின் மீது கனத்த குண்டு வீச்சு நடத்தப்பட்டு, எமது படையாட்கள் சிறிது சிறிதாக முகாமைப் பிடித்துக் கொண்டார்கள். கலகக்காரர்கள் அவர் களது இயந்திரத் துப்பாக்கிகள் கொண்டு பலமாகச் சுட்டுக் கொண்டிருந்தார்கள். செப்டம்பர் 6ல் காலை 9 மணிக்கு முகாம் முழுதும் பிடிபட்டுவிட்டது.... கலகக்காரர்கள் நிராயுதபாணிகளாக்கப்பட்டனர், 81 பேர் கைது செய்யப் பட்டனர்....''

இதுவே அரசாங்கத்தின் அறிக்கை. ஆனால் அயல்துறை அமைச்சகத்தில் கண்டுபிடிக்கப்பட்ட இரகசிய ஆவணங் களின்படி, இந்த விளக்கவுரை முழு அளவுக்குச் சரியல்ல என்பது தெளிவாயிற்று. படையாட்கள் ருஷ்யாவில் தமது தோழர்கள் செய்தது போலக் கமிட்டிகள் அமைக்க முற் பட்ட போதுதான் முதலில் தகராறு ஆரம்பமாயிற்று. படையாட்கள் தாம் ருஷ்யாவுக்குத் திருப்பி அனுப்பப்பட வேண்டுமென்று கோரினார்கள், இது மறுக்கப்பட்டது. பிறகு இவர்களது செல்வாக்கு பிரான்சுக்கு அபாயகரமாக இருக் கும் என்று கருதப்பட்டடு, இவர்களைச் சலோனிக்காவுக்குப் போகும்படி கட்டளை பிறப்பிக்கப்பட்டது. இவர்கள் போக மறுத்தார்கள், இதைத் தொடர்ந்து போர் ஆரம்பமா யிற்று.... படையதிகாரிகள் இல்லாமல் இவர்கள் சுமார்

இரண்டு மாதங்களுக்கு முகாமுக்குள் இருத்தப்பட்டு, மோசமாக நடத்தப்பட்டனர், இதன் பிறகே இவர்கள் கலக மனப்பான்மை கொள்ளலாயினர் என்பது தெரிய வந்தது. இவர்கள் மீது சுட்ட ''ருஷ்யப் பீரங்கிப் படைப்பிரிவின்'' பெயரைக் கண்டுபிடிப்பதற்காக எடுக்கப்பட்ட முயற்சிகள் யாவும் பயனற்றுப் போயின. அமைச்சகத்தில் கண்டுபிடிக்கப்பட்ட தந்திகளிலிருந்து, பிரெஞ்சுப் பிரங்கிப் படையே உபயோகிக்கப்பட்டதென்று ஊகிக்க வேண்டியிருக்கிறது....

இவர்கள் சரணடைந்தபின், கலகக்காரர்களில் இருநூறு பேருக்கு மேற்பட்டோர் வேண்டுமென்றே திட்டமிடப்பட்டுச் சுட்டுக் கொல்லப்பட்டார்கள்.

8.

## தெரேஷ்ச்சென்கொவின் சொற்பொழிவு
(சாரம்)

''...அயல்துறைக் கொள்கை சம்பந்தமான பிரச்சினைகள் தேசப் பாதுகாப்பு சம்பந்தமானவற்றுடன் நெருங்கிய உறவு கொண்டவை.... ஆகவே, தேசப் பாதுகாப்புப் பிரச்சினைகள் குறித்து இரகசிய அமர்வு நடத்துவது அவசியமென எப்படி நீங்கள் நினைக்கிறீர்களோ, அதே போல நமது அயல்துறைக் கொள்கையிலும் இம்மாதிரியான இரகசிய முறையைக் கைக்கொள்ளும்படி நாம் சில சமயம் நிர்ப்பந்திக்கப்படுகிறோம்....

''ஜெர்மன் அரசுறவுத் தந்திரம் பொதுமக்கள் அபிப்பிராயத்தைத் தன் வழிக்கு வரச் செய்ய முயலுகிறது.... ஆகவே பெரிய ஜனநாயக நிறுவனங்களது நெறியாளர்கள் புரட்சிகரக் காங்கிரசைப் பற்றியும் மற்றொரு குளிர்காலப் படையியக்கம் சாத்தியமல்ல என்பதாகவும் பலக்கப் பேசிவிடுக்கும் பிரகடனங்கள் ஆபத்தானவை.... இந்தப் பிரகடனங்கள் யாவும் மனித உயிர்ச் சேதம் விளைவிப்பவை....

''அரசின் கவுரவம், மாண்பு இவை குறித்த பிரச்சினைகளை இழுக்காமல், அரசாங்கத்துக்கு அறிவு சார்ந்த போக்கு எது என்கிற கண்ணோட்டத்திலிருந்து மட்டுமே நான் பேச

விரும்புகிறேன். அறிவு சார்ந்த போக்கு என்கிற கண்ணேட்டத்திலிருந்து பார்த்தோமாஞல், ருஷ்யாவின் அயல்துறைக் கொள்கையானது ருஷ்யாவின் **நலன்களை** மெய்யாகவே புரிந்து கொண்டு அதன் அடிப்படையில் அமைந்ததாக இருத்தல் வேண்டும்.... இந்த நலன்கள் கூறுவது என்னவெனில், நமது நாடு தனியே நிற்பது சாத்தியமன்று, தற்போது நம்முடன் சேர்ந்து நிற்கும் சக்திகளது அணி சேர்ப்பு (நேசநாடுகள்) திருப்திகரமானதே என்பதுதான்.... மனித குலம் அனைத்துமே சமாதானம் வெண்டுமென்றுதான் ஏங்குகிறது, ஆயினும் நமது தாயகத்தின் அரசு நலன்களுக்குத் தீங்கிழைக்கும்படியான, மானக் கேடான சமாதானம் முடிக்கப்படுவதற்கு ருஷ்யாவில் யாருமே அனுமதிக்க முடியாது!''

இம்மாதிரியான சமாதானம், பல நூறு ஆண்டுகளுக்கு இல்லையெனில், எப்படியும் நீண்ட பல ஆண்டுகளுக்கு உலகில் ஜனநாயகக் கோட்பாடுகளின் வெற்றிக்குத் தடை போடும், தவிர்க்க முடியாதவாறு புதிய யுத்தங்களை மூண்டெழச் செய்யும் என்று குறிப்பிட்டார், பேச்சாளர்.

''மே மாத நாட்கள் எல்லார்க்கும் நினைவில் இருக்கின்றன, அப்போது நமது போர்முனையில் சோதரத்துவம் தலை தூக்கி, இராணுவ நடவடிக்கைகளை முடிவுறச் செய்து, யுத்தத்துக்கு முடிவு கட்டி, இவ்விதம் அவமானகரமான தனிச் சமாதானத்துக்கு நாடு இட்டுச் செல்லப்படும்படியான அபாயத்தை உண்டாக்கிற்று... ருஷ்ய அரசு யுத்தத்துக்கு முடிவு கட்டித் தனது நலன்களுக்கு உத்தரவாதம் செய்து கொள்வதற்கு இதுவல்ல வழி என்று போர்முனையிலிருந்த படையாட் பெருந் திரளினரைப் புரிந்துகொள்ளச் செய்வதற்கு எப்படிப்பட்ட முயற்சிகள் எல்லாம் அவசியமாயின என்பது நினைவில் இருக்கின்றன....''

ஜூலை மாதத் தாக்குதலால் அதிசயிக்கத் தக்க பலன் கிடைத்ததென்று பேசினர் அவர். வெளிநாடுகளில் ருஷ்யத் தூதர்களின் சொற்களுக்கு அது எப்படிப்பட்ட பலம் அளித்தது, ருஷ்ய வெற்றிகளால் ஜெர்மனியில் எப்படிப்பட்ட கலக்கம் உண்டாயிற்று என்ருர். மற்றும், ருஷ்யத் தோல்வியைத் தொடர்ந்து நேசநாடுகளில் நம்பிக்கைக் குலைவு ஏற்பட்டதென்றும் கூறினர்....

''ருஷ்ய அரசாங்கத்தைப் பொறுத்த வரை, 'பிரதேசச் சேர்ப்புகள் இல்லை, தண்டனை இழப்பீடுகள் இல்லை' என்றுமே மாதம் நிர்ணயிக்கப்பட்ட கோட்பாட்டினைதான் அது கண்டிப்பான முறையில் கடைப்பிடித்து வந்துள்ளது. பல நாடுகளின் மக்களுக்கும் சுய-நிர்ணயத்தைப் பிரகடனம் செய்வதோடன்றி, ஏகாதிபத்தியக் குறிக்கோள்களை விட்டொழிப்பதும் அவசியமாகுமென நாங்கள் கருதுகிறோம்....''

ஜெர்மனி சமாதானம் செய்து கொள்ள இடையருது முயன்று வருகிறது. சமாதானம் என்பதே ஜெர்மனியில் அடிபடும் பேச்சு, தன்னால் வெற்ற பெற முடியாதென்பது அதற்குத் தெரியும்.

''யுத்தக் குறிக்கோள்களைப் பற்றி ருஷ்ய அயல்துறைக் கொள்கை போதிய தெளிவுடன் பேசவில்லை என்பதாக அரசாங்கத்துக்கு எதிராகக் கூறப்படும் குற்றச் சாட்டுகளை நான் நிராகரிக்கிறேன்....

''நேசநாடுகள் பின்பற்றும் நோக்கங்கள் என்ன என்னும் கேள்வி எழுப்பப்படுமாயின், மத்திய அரசுகள் தமக்குள் உடன்பட்டுக் கொண்ட நோக்கங்கள் என்ன என்று முதற்கண் கோருவது அத்தியாவசியமாகும்....

''நேசநாடுகளை ஒன்றிணைக்கும் உடன்படிக்கைகளுடைய விவரங்களை நாம் வெளியிட வேண்டுமென்ற விருப்பம் அடிக்கடி தெரிவிக்கப்படுகிறது; ஆனால் மத்திய அரசுகளை ஒன்றிணைக்கும் உடன்படிக்கைகளைப் பற்றி இதுகாறும் நாம் ஏதும் அறியோம் என்பதைப் பலரும் மறந்து விடுகிறார்கள்....''

பலமில்லாத இடைத் தடுப்பு அரசுகளை வரிசையாக அமைத்து ருஷ்யாவை மேலைய நாடுகளிடமிருந்து பிரித்திட வேண்டுமென ஜெர்மனி விரும்புவது தெளிவாகவே தெரிகிறது என்றார் தெரேஷ்ச்சென்கோ:

''ருஷ்யாவின் ஜீவாதார நலன்களுக்குக் குந்தகம் விளைவிக்கும் இந்தப் போக்கு தடுத்து நிறுத்தப்பட வேண்டும்....

''தமது எதிர்காலத்தைத் தாமே தீர்மானிப்பதற்குத் தேசங்களுக்குள்ள உரிமையினைத் தனது கோஷமாகக் கொண்டிருக்கும் ருஷ்ய ஜனநாயகம், ஆஸ்திரியா-ஹங்கேரியில் நாகரிக வளர்ச்சியில் உயர்ந்த தேசத்தோர் தொடர்ந்து

ஒடுக்கப்படுவதை அமைதியாகப் பார்த்துக் கொண்டிருக்கலாமா?

''நேசநாடுகள் எமது இக்கட்டான நிலைமையைப் பயன்படுத்திக் கொண்டு இலாபமடைய முயற்சிக்குமென்றும், யுத்தத்தின் சுமையில் நமக்குரியதற்கும் கூடுதலான ஒரு பங்கினை நம் தலையிலே இருத்தப் பார்க்குமென்றும், நமது செலவில் சமாதானப் பிரச்சினைகளுக்குத் தீர்வு காண எத்தனிக்குமென்றும் அஞ்சுவோர் முற்றிலும் தவறிழைப்போரே ஆவர்.... நமது பகைவன் ருஷ்யாவைத் தனது பொருள்களின் விற்பனைக்கான சந்தையாகக் கருதுகிறான். யுத்தத்தின் முடிவில் நாம் பலவீன நிலையில் விடப்பட நேரும், நமது எல்லைகள் திறந்து விடப்பட்டிருக்கையில், ஜெர்மன் உற்பத்திப் பொருள்கள் வெள்ளப் பெருக்கென உள்ளே புகுந்து நமது தொழில் துறை வளர்ச்சியினைப் பல ஆண்டுகளுக்குத் தடுத்து நிறுத்தவது சுலபமாகிவிடும். இப்படி ஏற்படாதபடி பாதுகாத்துக் கொள்ள நடவடிக்கைகள் எடுக்கப்பட்டாக வேண்டும்....

''ஒளிவு மறைவின்றிப் பகிரங்கமாகவே நான் கூறுகிறேன்: நம்மை நேசநாடுகளுடன் ஐக்கியப்படுத்தும் சக்திகளின் இணைவு ருஷ்யாவின் நலன்களுக்குச் சாதகமானதாகும்.... எனவே யுத்தம், சமாதானம் இவை சம்பந்தமான நமது கருத்தோட்டங்கள் கூடுமான அளவுக்குத் தெளிவாகவும் கறாராகவும் நேசநாடுகளுடைய கருத்தோட்டங்களுக்கு இசைவாக இருத்தல் அவசியமாகும்.... எந்த விதமான தவறான அபிப்பிராயத்துக்கும் இடமில்லாமற் போகும் பொருட்டு, நான் இதை ஒளிவு மறைவின்றிக் கூறியாக வேண்டும்: பாரிஸ் மாநாட்டில் ருஷ்யா ஒரே கருத்தோட்டத்தினை எடுத்துரைக்க வேண்டும்....''

ஸ்கோபெலெவுக்குத் தரப்பட்ட நக்காஸைப் பற்றிக் கருத்துரைக்க விரும்பவில்லை என்றார், ஆனால் தற்போது ஸ்டாக்ஹோமில் வெளியிடப்பட்ட டச்சு-ஸ்காண்டிநேவியக் கமிட்டியின் அறிக்கையை அவர் குறிப்பிட்டார். இந்த அறிக்கை லித்துவேனியா, லாத்வியா இவற்றுக்குத் தன்னாட்சி வேண்டுமென அறிவிக்கின்றது; ''ஆனால் இது தெளிவாகவே சாத்தியமற்றதாகும்'' என்றார் தெரேஷ்ச்சென்கோ,

''ஏனெனில், ருஷ்யாவுக்கு ஆண்டு முழுதும் தங்குதடையற்ற துறைமுகங்கள் இருந்தாக வேண்டும்....

''இந்தப் பிரச்சினையிலும் அயல்துறைக் கொள்கைப் பிரச்சினைகள் உள்நாட்டு அரசியலுடன் நெருங்கிய முறையில் பிணைந்தவை. மாருஷ்யா அனைத்தும் ஒருமித்த ஒன்றென்ற வலுமிக்க உணர்வு இருக்குமாயின், தேசத்தவர்கள் மத்திய அரசாங்கத்திடமிருந்து பிரிந்திட விரும்புவதாக எங்குமிருந்து மீண்டும் மீண்டும் அறிவிப்புகள் வெளிப்படுவதை நாம் காண வேண்டியிருக்காது.... இம்மாதிரிப் பிரிந்து செல்லுதல் ருஷ்யாவின் நலன்களுக்கு விரோதமானது, ருஷ்யப் பிரதிநிதிகள் இப்பிரச்சினையை எழுப்பலாகாது....''

## 9.

### பிரிட்டிஷ் கடற்படையும் பிறவும்

ரீகா வளைகுடாவில் நடைபெற்ற கடற்படைப் போரின் போது, போல்ஷிவிக்குகள் மட்டுமல்ல, இடைக்கால அரசாங்கத்தின் அமைச்சர்களுங்கூட, பிரிட்டிஷ் கடற்படை வேண்டுமென்றே பால்டிக்கைக் கைவிட்டு விட்டதாகக் கருதினர்; ''ருஷ்யாவின் கதை முடிவுற்றுவிட்டது! ருஷ்யா குறித்துக் கவலைப்பட்டுப் பயனில்லை!'' என்பதாக பிரிட்டிஷ் பத்திரிகைகள் பகிரங்கமாகவும், ருஷ்யாவிலிருந்த பிரிட்டிஷ் பிரதிநிதிகள் அரைகுறை மறைவோடும் அடிக்கடி கூறி வந்த இந்தப் போக்கிற்கு இது ஓர் அறிகுறியாகுமெனக் கருதினர்.

கேரென்ஸ்கியுடனான பேட்டியைப் பார்க்கவும் (அனுபந்தம் 13).

ஜெனரல் குர்க்கோ முன்பு ஜாராட்சியில் ருஷ்யச் சேனைகளின் தலைமை அலுவலர்களது தலைவராக இருந்தவர். லஞ்ச ஊழல் மலிந்த மாமன்னர் அவையில் இவர் ஒரு முக்கிய பிரமுகர். அவரது அரசியல் செயல்கள், தனிப்பட்ட முறையிலான செயல்கள் ஆகியவற்றுக்காக, புரட்சிக்குப் பிறகு நாடு நடத்தப்பட்ட மிகச் சொற்பமானோரில் ஒருவர் இவர். ரீகா வளைகுடாவில் ருஷ்யக் கடற்படை தோல்வியடைந்த அதே சமயத்தில், அபாயகரமான அளவுக்கு ஜெர்மன் ஆதரவாள

ரென்றும் பிற்போக்குவாதி என்றும் இடைக்கால அரசாங்கத்தால் கருதப்பட்ட ஜெனரல் குர்க்கோவுக்கு லண்டனில் ஜார்ஜ் மன்னர் வரவேற்பு விருந்தளித்தார்!

## 10.

### எழுச்சியைக் கண்டித்து வேண்டுகோள்கள்

### தொழிலாளர்களுக்கும் படையாட்களுக்கும்

''தோழர்களே! இருண்ட சக்திகள் பெத்ரொகிராதிலும் பிற நகரங்களிலும் **ஒழுங்கு குலைவும் இரத்த வெறியாட்டங்களும்** உண்டாக்குவதற்காக மேலும் மேலும் முனைந்து முயலுகின்றன. இருண்ட சக்திகளுக்கு ஒழுங்கு குலைவு தேவைப்படுகிறது, ஏனெனில் புரட்சி இயக்கத்தை இரத்தத்தில் மூழ்கடித்து நசுக்குவதற்கு ஒழுங்கு குலைவு இச்சக்திகளுக்கு வாய்ப்பளிக்கிறது. ஒழுங்கை நிலைநாட்டுவதாகவும், நகரவாசிகளைப் பாதுகாப்பதாகவும் கூறிக் கொண்டு இவை கர்னீலவின் ஆதிக்கத்தை—சிறிது காலத்துக்கு முன்பு புரட்சிகர மக்கள் வெற்றிகரமாக நசுக்கினார்களே அதே ஆதிக்கத்தை —நிறுவலாமென்று நினைக்கின்றன. இந்த நினைப்பு நிறைவேறினால் மக்கள் கதி அதோகதிதான்! வெற்றி பெறும் எதிர்ப்புரட்சி சோவியத்துகளையும் சேனைக் கமிட்டிகளையும் ஒழித்துவிடும், அரசியல் நிர்ணயச் சபையைக் கலைத்துவிடும், நிலம் நிலக் கமிட்டிகளின் கைக்கு மாறுவதை நிறுத்திவிடும், விரைவில் சமாதானம் கிட்டுமென்று மக்கள் நம்புகிறார்களே அதற்கு இடமில்லாதபடிச் செய்துவிடும், புரட்சிகரப் படையாட்களையும் தொழிலாளர்களையும் கொண்டு எல்லாச் சிறைக் கூடங்களையும் நிரப்பும்.

''உணவு வழங்கீடு குலைந்து போயிருப்பது குறித்தும், யுத்தம் தொடர்ந்து நடைபெற்று வருவது குறித்தும் பொதுவாக வாழ்க்கை இன்னல்கள் குறித்தும் மக்களில் அறிவொளி பெறாத பகுதியோரிடையே இருந்து வரும் கடுமையான அதிருப்தியை எதிர்ப்புரட்சியாளர்களும் கறுப்பு நூற்று வரும் ஆதாரமாய்க் கொண்டு தமது திட்டங்களைச் செயல்படுத்தப் பார்க்கிறார்கள். படையாட்கள், தொழிலாளர்

*களது ஒவ்வோர் ஆர்ப்பாட்டத்தையும் இரத்த வெறியாட்டமாக மாற்றிவிடலாமென்று இவர்கள் நம்புகிறார்கள், சமாதானத்தை நாடும் மக்களை இவ்வழியில் பயமுறுத்தி, சட்டத்தையும் ஒழுங்கையும் மீட்டமைக்கப் போவதாகக் கூறுவோரின் பிடிக்குள் இவர்களைத் தள்ளிவிட முடியுமென நினைக்கிறார்கள்.*

*''இந்த நிலைமைகளில், எவ்வளவுதான் மெச்சத் தகுந்த குறிக்கோளுடையதாக இருப்பினும் இந்நாட்களில் எந்த ஆர்ப்பாட்டத்துக்குமான எந்த முயற்சியும் கொடுங் குற்றமே ஆகும். அரசாங்கத்தின் கொள்கை குறித்து அதிருப்தி கொண்டுள்ள உணர்வு படைத்த தொழிலாளர்களும் படையாட்களும் ஆர்ப்பாட்டங்களில் ஈடுபடுவார்களாயின், அதன் மூலம் அவர்கள் தமக்கேதான் தீங்கிழைத்துக் கொள்வார்கள்.*

**''ஆகவே ஆர்ப்பாட்டம் புரியுமாறு விடுக்கப்படும் எந்த அறை கூவலுக்கும் செவி சாய்க்காதீர்கள் என்று இத்ஸே-யி-க எல்லாத் தொழிலாளர்களையும் கேட்டுக் கொள்கிறது.**

**''தொழிலாளர்களே, படையாட்களே! தூண்டிவிடுவோரின் சதித்திட்டத்துக்கு இணங்காதீர்கள்! உங்கள் நாட்டுக்கும் புரட்சிக்கும் உங்களுக்குள்ள கடமையினை நினைவில் கொள்ளுங்கள்! ஆர்ப்பாட்டங்கள் தோல்வியுறவே செய்யும், ஆர்ப்பாட்டங்கள் மூலம் புரட்சிகர முன்னணியின் ஒற்றுமைக்குக் குந்தகம் செய்யாதீர்கள்!''**

**தொழிலாளர்கள், படையாட்கள்
பிரதிநிதிகளது சோவியத்துகளின்
மத்தியச் செயற் குழு**

**(இத்ஸே-யி-க)**

**ருஷ்ய சமூக-ஜனநாயகத் தொழிலாளர் கட்சி
அபாயம் நெருங்குகிறது!**

*எல்லாத் தொழிலாளர்களுக்கும் படையாட்களுக்கும்*

**(படியுங்கள், ஏனையோருக்குக் கொடுங்கள்)**

**தோழர்கள் தொழிலாளர்களே, படையாட்களே!**

*''தாய்நாட்டுக்கு ஆபத்து! நமது சுதந்திரத்துக்கும் நமது புரட்சிக்கும் சோதனை வாய்ந்த நாட்கள் இவை. பகைவன் பெத்ரொகிராதின் தலைவாயிலுக்கு வந்துவிட்டான்.*

சீர்குலைவு மணிக்கு மணி அதிகமாகி வருகிறது. பெத்ரொகிராதுக்கு ரொட்டி கிடைக்கச் செய்வது மேலும் மேலும் கடினமாகி வருகிறது. எல்லாரும், மிகச் சிறுவரிலிருந்து மிகப் பெரியவர் வரையிலான அனைவரும் தமது முயற்சிகளை இரு மடங்காக அதிகரிக்கச் செய்ய வேண்டும், யாவற்றையும் ஒழுங்கு பெறச் செய்ய முயல வேண்டும்.... தாயகத்தை, சுதந்திரத்தை நாம் பாதுகாத்துக் கொண்டாக வேண்டும்.... சேனைக்கு அதிக ஆயுதங்கள், அதிக உணவுப் பொருட்கள்! பெரிய நகரங்களுக்கு ரொட்டி! நாடெங்கும் ஒழுங்கும் முறையும்....

"எங்கோ ஆர்ப்பாட்டத்துக்குத் தயார் செய்யப்படுவதாக, புரட்சிகர அமைதியையும் ஒழுங்கையும் ஒழிக்கும்படி படையாட்களுக்கும் தொழிலாளர்களுக்கும் யாரோ அறைகூவல் விடுப்பதாக இந்தக் கடு நெடுக்கடிக்குரிய நாட்களில் வதந்திகள் உலவுகின்றன.... போல்ஷிவிக்குகளுடைய செய்தியேடான ரபோச்சி பூத் நெருப்பிலே எண்ணெயை வார்க்கின்றது; அறிவொளி பெருத மக்களை அது துதி பாடுகிறது, உச்சி குளிரச் செய்ய முயலுகிறது, அரசாங்கத்துக்கு எதிராக அவர்களைத் தூண்டி விடுகிறது, அவர்களுக்கு மலை மலையாய்ப் பொன்னும் பொருளும் கிடைக்கச் செய்வோமென வாக்களிக்கிறது.... எதையும் நம்பும் மனப்பான்மை கொண்டவர்களான அறியாத மக்கள் நம்பிவிடுகிருர்கள், அவர்கள் சிந்தித்துப் பார்ப்பதில்லை.... எதிர் முனையிலிருந்தும் வதந்திகள் வருகின்றன—இருண்ட சக்திகள், ஜாரின் நண்பர்கள், ஜெர்மன் உளவாளிகள் இவர்கள் எல்லோரும் ஆனந்தப்படுவதாகக் கூறப்படுகிறது. போல்ஷிவிக்குகளுடன் கூடிக் கொள்ள, போல்ஷிவிக்குகளுடன் சேர்ந்து ஒழுங்கு குலைவைத் தீவிரமாக்கி உள்நாட்டு யுத்தமாக மூளச் செய்வதற்கு அவர்கள் தயாராக இருக்கிருர்கள்.

"போல்ஷிவிக்குகளும் அவர்கள் ஆசை காட்டி ஏமாற்றி வரும் அறியாத படையாட்களும் தொழிலாளர்களும் அர்த்தமின்றிக் கூச்சலிடுகிருர்கள்: 'ஒழிக இந்த அரசாங்கம்! அனைத்து ஆட்சியதிகாரமும் சோவியத்துகளுக்கே!' என்கிருர்கள். ஜாரின் இருண்ட கையாட்களும் வில்ஹேல்மின் உளவாளிகளும் இவர்களைத் துண்டிவிடுவார்கள்: 'யூதர்களை

உதையுங்கள், கடைக்காரர்களை அடியுங்கள், சந்தைகளைக் கொள்ளையிடுங்கள், கடைகளை நாசமாக்குங்கள், ஓயின் கிடங்குகளைச் சூறையாடுங்கள்! கொல்லுங்கள், தீக்கிரையாக்குங்கள், கொள்ளையடியுங்கள்!' என்று.

''பிறகு பயங்கரக் குழப்பம் ஏற்படும், மக்களில் ஒரு பகுதியோருக்கும் பிறிதொரு பகுதியோருக்கும் இடையிலான போர் மூண்டெழும். யாவும் மேலும் சீர்குலைந்து போகும், மீண்டும் தலைநகரின் தெருக்களில் இரத்தம் பெருக்கெடுக்க நேரலாம். பிறகு—பிறகு என்ன?

''பிறகு பெத்ரொகிராதுக்கு வருவதற்கான பாதை வில்ஹேல்முக்கு விரியத் திறக்கப்பட்டுவிடும். பிறகு, ரொட்டி வராது பெத்ரொகிராதுக்கு, குழந்தைகள் பட்டினியால் மடிவார்கள். பிறகு, போர் முனையில் இருக்கும் சேனை ஆதரவற்று நிற்கதியாகிவிடும், அகழ்வரிகளில் இருக்கும் நமது சோதரர்கள் பகைவனின் குண்டுகளுக்கு இரையாக வேண்டியதுதான். பிறகு, பிற நாடுகளில் ருஷ்யாவுக்கு இருக்கும் நற்பெயர் ஒழிந்து போகும், நமது பணம் மதிப்பிழந்துவிடும், யாவும் விலை உயர்ந்து போய் யாரும் வாழவே முடியாமற் போய்விடும். பிறகு, நெடுநாளாய் நாம் காத்திருக்கிறோமே அந்த அரசியல் நிர்ணயச் சபை ஒத்திப் போடப்படும், காலத்தில் அதைக் கூட்ட முடியாமற் போகும். பிறகு —புரட்சி சாக வேண்டியதுதான், நமது சுதந்திரம் ஒழிய வேண்டியதுதான்....

''தொழிலாளர்களே, படையாட்களே, நீங்கள் விரும்புவது இதுதானா? இல்லவே இல்லை! நீங்கள் இதை விரும்பவில்லை எனில், உடனே செல்லுங்கள், துரோகிகளால் ஆசை காட்டப்பட்டு வஞ்சிக்கப்படும் அறியாத மக்களிடம் செல்லுங்கள், இங்கே நாங்கள் உங்களுக்குக் கூறியிருக்கிறோமே, இந்த முழு உண்மையையும் அவர்களிடம் சொல்லுங்கள்!

''எல்லாரும் இதைத் தெரிந்து கொள்ளட்டும்: **இந்தப் பயங்கர நாட்களில் அரசாங்கத்துக்கு எதிராகத் தெருக்களுக்கு வருமாறு உங்களை அழைத்திடும் ஆள் ஒவ்வொருவரும் ஜாரின் இரகசியக் கையாளே, தூண்டிவிடும் சதியாளே ஆவார்; இல்லையேல் மக்களது பகைவர்களுக்கு உதவும் அறிவிலியே ஆவார்; இல்லையேல் வில்ஹேல்மிடம் கூலி பெறும் உளவாளியே ஆவார்!**

''உணர்வுள்ள தொழிலாளிப் புரட்சியாளர் ஒவ்வொரு வரும், உணர்வுள்ள ஒவ்வொரு விவசாயியும், புரட்சிகரமான ஒவ்வொரு படையாளும்—அரசாங்கத்துக்கு எதிரான ஆர்ப் பாட்டம், அல்லது கலகத்தால் மக்களுக்கு எப்படிப்பட்ட தீங்கு ஏற்படுமென்பதை உணருகிறவர்கள் எல்லோரும்— ஒன்று சேர்ந்து மக்களின் பகைவர்களால் நமது சுதந்திரம் அழிக்கப்படாதவாறு தடுத்து நிறுத்த வேண்டும்.''

**அபரோன்த்ஸி-மென்ஷிவிக்குகளது**
**பெத்ரொகிராது தேர்தல் கமிட்டி**

## 11.

## லெனின் எழுதிய ''தோழர்களுக்குக் கடிதம்''

*1917 அக்டோபர் பிற்பகுதியில்* **ரபோச்சி பூத்** *ஏட்டில் வரிசையாக வெளிவந்த கட்டுரைத் தொடராகும் இது. பின் வருகிறவை இந்தத் தொடரில் இரு கட்டுரைகளிலிருந்து எடுக்கப்பட்ட சில வாசகங்கள்:*

''மக்களிடம் நமக்குப் பெரும்பான்மை இல்லை, இந்த நிலை இல்லாமல் எழுச்சி குறித்து நம்பிக்கைக்கு இடமில்லை....''

இப்படிக் கூறக் கூடியவர்கள் உண்மையைத் திரித்துப் புரட்டுகிறவர்களாவர், அல்லது பகட்டுப் புலமையாளர்களா வர். இந்தப் பகட்டுப் புலமையாளர்கள், நாடெங்கிலும் மொத்த வாக்குகளில் போல்ஷிவிக்குகள் ஒருபாதியும் கூடுத லாக ஒன்றும் பெற்று முன்னதாகவே இவ்விதம் உத்தரவா தம் அளித்திட வேண்டும் என்கிறார்கள்; புரட்சியின் மெய் யான நிலைமைகளைக் கிஞ்சித்தும் கருதாமலே எது எப்படியா யினும் இப்படி உத்தரவாதம் அளித்திட வேண்டும் என்கிறார் கள்....

முடிவில், இன்றைய ருஷ்ய வாழ்வின் மிகவும் முதன்மை யான உண்மையாக இருப்பது **விவசாயிகளது எழுச்சியே....** தம்போவ் மாநிலத்தில் எழுந்த விவசாயி இயக்கம் பௌ திக அர்த்தத்திலும் அரசியல் அர்த்தத்திலும் எழுச்சியே

ஆகும். முதலாவதாக, நிலங்களை விவசாயிகளின் கைக்கு மாற்றுவதென்ற உடன்பாட்டைப் போன்ற அரும்பெரும் அரசியல் விளைவுகள் ஈந்திருக்கும் எழுச்சி இது, தியேலொ நரோதாவும் உட்பட சோஷலிஸ்டுப் புரட்சியாளர் கும்பல், எழுச்சியைக் கண்டு மிரளும் இந்தக் கும்பல், நிலங்கள் விவசாயிகளின் கைக்கு மாற்றப்படுவதன் அவசியம் குறித்து இப்போது கூச்சலிடுவது காரணமில்லால் செய்யப்படவில்லை.... தம்போவ் மாநிலத்தில் ரயில் நிலையங்களில் தானியம் கொண்டு வந்து ஒப்படைக்கப்பட்டிருப்பது விவசாயிகளது எழுச்சியினது மற்றோர் உன்னத அரசியல், புரட்சிகர விளைவாகும்....

முதலாளித்துவப் பத்திரிகைகளுங்கூட, ரூஸ்கயா வோல்யாவுங்கூட, தம்போவ் மாநிலத்தின் ரயில் நிலையங்கள் திணறும்படி தானியம் கொண்டு வந்து குவிக்கப்பட்ட தகவலை வெளியிட்டு, ரொட்டிப் பிரச்சினைக்கு இம்மாதிரியான ஒரு தீர்வு ஏற்படுவதால் (இது ஒன்றுதான் மெய்யான தீர்வு) கைகூடும் வியத்தகு பலன்களை ஒத்துக் கொள்ள வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது.... **அதுவும் விவசாயிகள் எழுச்சி நடத்தியதற்குப் பிற்பாடு!**

''ஆட்சியதிகாரத்தைக் கைப்பற்ற நாம் போதிய அளவு பலமுடையோராக இல்லை, அரசியல் நிர்ணயச் சபை கூட்டப்படுவதைத் தடுக்க முதலாளித்துவ வர்க்கம் போதிய அளவு பலமுடையதாக இல்லை.''

இந்த வாதத்தின் முதற் பகுதி முந்திய வாதத்தின் பொழிப்புரையே தவிர வேறல்ல. இந்த வாதத்தின் ஆசிரியர்களது குழப்பமும், முதலாளித்துவ வர்க்கத்திடம் அவர்களுக்குள்ள அச்சமும், தொழிலாளர்கள் சம்பந்தமான நம்பிக்கையின்மை வாயிலாகவும், முதலாளித்துவ வர்க்கம் சம்பந்தமான நன்னம்பிக்கை வாயிலாகவும் வெளியிடப்படுகின்றன; இவற்றால் வாதத்தின் வலிமையோ, ஏற்புடைமையோ ஏற்றமுற்றுவிடவில்லை. காடேட்டுகளும் கசாக்குகளும் கடைசிச் சொட்டு இரத்தம் உள்ளளவும் தாம் போல்ஷிவிக்குகளை எதிர்த்துப் போராடுவோமெனச் சொல்லுவார்களாயின், அது முழு அளவுக்கு அப்படியே நம்பத்தாக்கதாகும்; ஆனால் தொழிலாளர்களும் படையாட்களும் நூற்றுக் கணக்கான

கூட்டங்களில் போல்ஷிவிக்குகளிடம் முழு நம்பிக்கை தெரிவித்து, ஆட்சியதிகாரம் சோவியத்துகளுக்கு மாற்றப்படுவதற்காக இறுதி மூச்சு உள்ளளவும் போராடத் தயாரென உறுதி கூறுவார்களாயின், அப்போது மட்டும், வாக்களிப்பது ஒன்று, போராடுவது வேறொரு விவகாரம் என்பதை நினைவுகூர்தல் ''பொருத்தமுடையது'' ஆகும்!

இவ்விதம் வாதாடுவீர்களானால், எழுச்சி சாத்தியமென்பதை நீங்கள் ''பொய்யென நிரூபிப்பது'' மெய்தான். ஆனால் இங்கு ஒரு கேள்வி எழுகிறது: இந்த அதிவிஷேதப் போக்குடைத்த அதிவிஷேத ''நம்பிக்கையின்மைக்கும்'', முதலாளித்துவ வர்க்கத்தாரது தரப்புக்கு மாறிச் செல்வதைக் குறிக்கும் அரசியல் இடப்பெயர்ச்சிக்கும் வேறுபாடு ஏதேனும் உண்டோ?...

கர்னீலவ் கலகம் நிரூபித்தது என்ன? சோவியத்துகள் மெய்யானதொரு சக்தி என்பதை அது நிரூபித்தது....

முதலாளித்துவ வர்க்கம் அரசியல் நிர்ணயச் சபை கூட்டப்படுவதைத் தடுக்கும்படியான அளவுக்குப் பலம் பெற்றிருக்கவில்லையென நிரூபிக்க முடியுமா?

முதலாளித்துவ வர்க்கத்தை வீழ்த்த சோவியத்துகள் **பலமுடையனவாக இல்லை** எனில், அரசியல் நிர்ணயச் சபை கூட்டப்படுவதைத் தடுப்பதற்கு வேண்டிய பலம் முதலாளித்துவ வர்க்கத்திடம் இருக்கிறது என்றுதான் அதற்கு அர்த்தம். ஏனெனில் முதலாளித்துவ வர்க்கத்தைத் தடுத்து நிறுத்துவார் வேறு யாரும் இல்லை. கேரென்ஸ்கியும் அவரைச் சேர்ந்தோரும் அளித்திடும் வாக்குறுதியை நம்பிக் கொண்டிருப்பது, அடிவருடித் தன்மை கொண்ட பூர்வாங்க-நாடாளுமன்றத்தின் தீர்மானங்களை நம்பிக் கொண்டிருப்பது—பாட்டாளி வர்க்கக் கட்சியின் உறுப்பினரான, புரட்சியாளரான ஒருவருக்கு ஏற்றதாகுமா?

தற்போதுள்ள அரசாங்கம் வீழ்த்தப்படாத வரை, அரசியல் நிர்ணயச் சபை கூட்டப்படுவதைத் தடுப்பதற்கு முதலாளித்துவ வர்க்கம் **போதுமான பலமுடையதுதான்** என்பது மட்டுமல்ல; பெத்ரொகிராதை ஜெர்மானியர்களிடம் சரணடைய விட்டும், போர்முனையைத் திறந்து வைத்தும், கதவடைப்புகளை அதிகமாக்கியும், உணவுப் பண்ட

வழங்கீட்டைச் சீர்குலைத்தும் முதலாளித்துவ வர்க்கம் இதே விளைவை மறைமுகமாகச் சாதித்துக் கொண்டுவிடக் கூடியது தான்....

''அரசியல் நிர்ணயச் சபையைக் கூட்டு, கர்னீலவியச் சதித்திட்டங்கள் யாவற்றையும் நிறுத்து என்று கோரி அரசாங்கத்தின் மண்டையை நோக்கி நீட்டிப் பிடிக்கப்படும் ரிவால்வராக இருத்தல் வேண்டும் சோவியத்துகள்.''

எழுச்சியை நிராகரிப்பது ''அனைத்து ஆட்சியதிகாரமும் சோவியத்துகளுக்கே'' என்ற கோஷத்தை நிராகரிப்பதற்கே முழுதொத்ததாகும்....

செப்டம்பர் முதலாய், எழுச்சியெனும் பிரச்சினை குறித்துக் கட்சி விவாதித்து வந்திருக்கிறது....

எழுச்சியைக் கைவிடுதல், ஆட்சியதிகாரம் சோவியத்துகளுக்கு மாற்றப்பட வேண்டுமென்பதைக் கைவிடுவதே ஆகும்; அரசியல் நிர்ணயச் சபையைக் கூட்டுவதாக ''வாக்குறுதி தந்துள்ள'' காருண்யம் மிக்க முதலாளித்துவ வர்க்கத்திடம் நமது நம்பிக்கைகள், ஆவலுடன் நாம் எதிர்பார்ப்பவை ஆகியவை அனைத்தையும் ''ஒப்படைப்பதையே'' குறிப்பதாகும்....

ஆட்சியதிகாரம் சோவியத்துகளின் கைக்கு வந்துவிடுமாயின், அரசியல் நிர்ணயச் சபை கூட்டப்படும், அது வெற்றிவாகை சூடும் என்பது உத்தரவாதமாகிவிடும்....

எழுச்சியைக் கைவிடுவது, நேரே லீபெர்டான்களிடம் மாறிச் செல்வதைக் குறிப்பதாகும்....

லீபெர்டான்களின் தரப்புக்கு மாறிச் சென்று ''அனைத்து ஆட்சியதிகாரமும் சோவியத்துகளுக்கே'' என்ற கோஷத்தைப் பகிரங்கமாகவே விட்டொழி, அல்லது எழுச்சியை ஆரம்பி.

இடைப்பட்ட வழி ஏதும் இல்லை.

''ரத்ஸியான்கோ விரும்பினாலுங்கூட, முதலாளித்துவ வர்க்கத்தால் பெத்ரொகிராதை ஜெர்மானியர்களுக்குச் சரணடையச் செய்துவிட முடியாது, ஏனெனில் போராடுகிறவர்கள் வீரமிக்க நமது மாலுமிகளே அன்றி முதலாளித்துவ வர்க்கமல்ல''....

மறுக்க முடியாத உண்மை என்னவெனில், இராணுவத் தலைமை அலுவலகம் சீர்திருத்தப்படவில்லை, தலைமை அலுவலர்கள் கர்னீலவியர்களாகவே இருக்கிறார்கள்.

கர்னீலவியர்கள் (கேரென்ஸ்கியைத் தம் தலைவராகக் கொண்டிருக்கிறார்கள், ஏனெனில் இவரும் ஒரு கர்னீலவியர் தான்) பெத்ரொகிராதைச் சரணடையச் செய்ய விரும்பினால், இரண்டு வழிகளில், அல்லது மூன்று வழிகளிலுங்கூட அவர்கள் இதைச் செய்ய முடியும்.

முதலாவதாக, கர்னீலவியப் படையதிகாரிகளைத் துரோகச் செயல் புரிய வைத்து, வடக்கு நிலவழிப் போர் முனையை அவர்கள் திறந்து வைக்க முடியும்.

இரண்டாவதாக, நம்முடையதைக் காட்டிலும் வலிமை வாய்ந்ததான ஜெர்மன் கடற் படை அனைத்துக்கும் செயல் சுதந்திரம் அளிக்க அவர்கள் "உடன்பட முடியும்"; ஜெர்மன் ஏகாதிபத்தியவாதிகள், பிரிட்டிஷ் ஏகாதிபத்தியவாதிகள் ஆகிய இரு தரப்பாருடனும் அவர்கள் உடன்பாட்டுக்கு வர முடியும். தவிரவும், மறைந்து போய்விட்ட அட்மிரல்கள் திட்டங்களை ஜெர்மானியர்களிடம் தந்திருக்கலாம்.

மூன்றாவதாக, கதவடைப்புகள் மூலமாகவும், உணவு வழங்கீட்டைச் சீர்குலைப்பது மூலமாகவும் அவர்கள் நமது படைகளை முற்றும் நம்பிக்கை இழக்கச் செய்து செயலற்ற நிலைக்கு வரச் செய்துவிட முடியும்.

இந்த மூன்று வழிகளில் எதையும் மறுக்க இயலாது. ருஷ்யாவின் முதலாளித்துவ-கசாக்குக் கட்சி ஏற்கெனவே இந்த மூன்று கதவுகளையும் தட்டியிருக்கிறது, இவற்றில் ஒவ்வொன்றையும் உடைத்துத் தள்ளிக் கொண்டு நுழைய முயன்றுள்ளது என்பதை உண்மைகள் மெய்ப்பித்திருக்கின்றன.

முதலாளித்துவ வர்க்கம் புரட்சியின் மென்னியைப் பிடித்து நெரிக்கும் வரை காத்துக் கொண்டு நிற்பதற்கு நமக்கு எந்த உரிமையும் இல்லை....

ரத்ஸியான்கோ காரியவாதியாவார்....

சில பத்தாண்டுகளாய், இந்த ரத்ஸியான்கோ மூலதனத்தின் கொள்கைகளை விஸ்வாசமாகவும் மெய்யாகவும் செயல்படுத்தி வந்துள்ளவர்.

இவற்றிலிருந்து பெறப்படுவது என்ன? புரட்சியைப் பாதுகாப்பதற்குரிய ஒரே வழியாகிய எழுச்சி எனும் பிரச்சினை குறித்து ஊசலாடுவது, முதலாளித்துவ வர்க்கத்திடம் கோழைத்தனமான அசட்டு நம்பிக்கை கொள்ளும் நிலைக்குத் தாழ்ந்துவிடுவதாகும் என்பதுதான் பெறப்படுகிறது. இம் மாதிரியான நம்பிக்கை பாதி லீபெர்டானிய, சோஷலிஸ்டு-புரட்சியாளர்-மென்ஷிவிக்குத் தன்மையதும், பாதி ''விவசாயித்'' தன்மையதுமான அசட்டு நம்பிக்கையாகும், யாவற்றுக்கும் முதலாவதாக இதைத்தான் போல்ஷிவிக்குகள் எதிர்த்துப் போராடி வந்துள்ளனர்....

''நாம் நாளுக்கு நாள் மேலும் மேலும் பலம் பெற்று வருகிறோம். அரசியல் நிர்ணயச் சபையில் நாம் வலிமை வாய்ந்த எதிர்த் தரப்பாளராக முடியும். எதற்காக யாவற்றையும் பணயம் கட்டி ஆபத்துக்கு உள்ளாக்க வேண்டும்?...''

அரசியல் நிர்ணயச் சபை கூட்டப்படப் போகிறதெனப் ''படித்துவிட்டு'', அதை அப்படியே நம்பிக் கொண்டு, மிக மிக சட்ட வழியிலான, அரசு விசுவாசம் வாய்ந்த, அரசியலமைப்புக்கு உகந்த பாதையிலே செல்ல இசையும் அற்பவாதியின் வாதமாகும் இது.

ஆனால் வருந்தத்தக்கது என்னவெனில், பஞ்சப் பிரச்சினையோ, பெத்ரொகிராது சரணடையும் பிரச்சினையோ, அரசியல் நிர்ணயச் சபைக்காகக் காத்திருப்பதன் மூலம் தீர்க்கப்படவில்லை. இந்த ''அற்ப'' விவரத்தை மறந்துவிடுகிறார்கள், எளிதில் நம்பி ஏமாறும் அப்பாவிகளாகவோ, குழப்பமுற்றவர்களாகவோ, பீதிக்குத் தம்மை பலியாக்கிக் கொண்டவர்களாகவோ இருக்கும் இவர்கள்.

பஞ்சம் காத்துக் கொண்டிருக்கப் போவதில்லை. விவசாயிகளது எழுச்சி காத்திருக்கவில்லை. யுத்தம் காத்திருக்கப் போவதில்லை. மறைந்துவிட்ட அட்மிரல்கள் காத்திருக்கவில்லை....

ஜெனரல்களாலும் அட்மிரல்களாலும் துரோகமிழைக்கப்பட்டு, பட்டினி கிடக்கும் மக்களும், படையாட்களும், தேர்தல்கள் குறித்து கவனியாது இருக்கிறார்களென இன்னமும் வியப்புறுகிறார்கள் குருடர்களாகிய இவர்கள்! ஓ, எப்படிப்பட்ட மேதாவிகள்!

''கர்னீலவியர்கள் மீண்டும் ஆரம்பிப்பார்களாயின், சரி யானபடி அவர்களுக்குப் பாடம் கற்பிப்போம்! எதற்காக நம்மை ஆபத்துக்கு உள்ளாக்கிக் கொண்டு நாமே ஆரம் பித்து வைக்க வேண்டும்?''...

வரலாறு முன்பு நடைபெற்றது போல் திரும்பவும் நடைபெறுது. பின்பக்கம் திரும்பி நின்று, முதலாவது கர்னீ லவ் கலத்தை நினைத்து, ''கர்னீலவியர்கள் மட்டும் ஆரம் பிப்பார்களானுல்'' என்று கூறிக் கொண்டிருப்போமாயின், அந்தப் புரட்சிகரப் போர்த் தந்திரத்தின் சிறப்பு எத்தகைய தாய் இருக்கும்....

பாட்டாளி வர்க்கக் கொள்கைக்கு இது எவ்வளவு உறுதி யான அடித்தளமாய் இருக்கும்?

கர்னீலவியர்கள்.... பட்டினிக் கலகங்கள் ஆரம்பமாதற் காகவும், போர்முனை உடைக்கப்படுவதற்காகவும், பெத்ரொ கிராது சரணடைவதற்காகவும் காத்திருந்து, அதற்குப் பிறகு ஆரம்பித்தார்களாஞல், என்ஞவது?

கர்னீலவியர்கள் அவர்களது பழைய தவறுகளில் ஒன் றைத் திரும்பவும் செய்திடும் சாத்தியப்பாட்டை அடிப்படை யாகக் கொண்டு நாம் பாட்டாளி வர்க்கக் கட்சியின் போர்த் தந்திரத்தை வகுத்துக் கொள்ள வேண்டுமென்று முன் மொழியப்படுகிறது!

போல்ஷிவிக்குகளால் நூறு தரம் தெளிவுபடுத்தப்பட் டது, தெளிவுபடுத்தப்பட்டிருப்பது இவை யாவற்றையும் நாம் மறந்துவிட வேண்டுமாம்; நமது புரட்சியின் ஆறு மாத கால வரலாறு நிரூபித்துக் காட்டியிருப்பது அனைத்தையும், அதாவது கர்னீலவியர்களது சர்வாதிகாரம், அல்லது பாட் டாளி வர்க்கச் சர்வாதிகாரம் இதைத் தவிர வழி ஏதும் இல்லை, எதார்த்த வழி ஏதும் இல்லை, இருக்கவும் முடியாது என்பதை நாம் மறந்துவிட வேண்டுமாம். இதை மறந்து விட்டு, இது அனைத்தையும் நிராகரித்துவிட்டு நாம் காத் திருக்க வேண்டுமாம்! எதற்காகக் காத்திருக்க வேண்டும்? மாயமான விந்தை நடைபெறுவதற்காகக் காத்திருக்க வேண்டுமாம்....

## 12.

### மில்யுக்கோவின் சொற்பொழிவு
### (சாரம்)

''தேசப் பாதுகாப்பே நமது தலையாய பணி, இதை உறுதி செய்து கொள்ளும் பொருட்டு சேனையில் கட்டுப்பாடும் உள் நாட்டில் ஒழுங்கும் இருந்தாக வேண்டும் — எல்லாரும் இதை ஏற்றுக் கோள்வதாகவே தெரிகிறது. இதைச் சாதிக்க வேண்டுமாயின், நயமான அறிவுறுத்தல் மூலம் மட்டுமின்றி, வன்முறை மூலமும் துணிந்து செயலாற்ற வல்லதோர் ஆட்சியதிகாரம் இருந்தாக வேண்டும்.... நமது கேடுகள் யாவற்றுக்குமான மூலக் கிருமி அயல்துறைக் கொள்கை சம்பந்தமான கண்ணோட்டத்திலிருந்து, சுயமான, மெய்யாகவே ருஷ்யத் தன்மையதான இதிலிருந்து வருகிறது; சர்வதேசியவாதக் கண்ணோட்டம் என்பதாக இது வழங்கி வருகிறது.

''மாண்புமிக்க லெனின் மாண்புமிக்க கேரென்ஸ்கியை அப்படியே காப்பியடித்து, ருஷ்யாவிலிருந்து புது உலகம் உதிக்கப் போகிறதெனப் பறைசாற்றுகிறார்; இந்தப் புது உலகம் மூப்படைந்துவிட்ட மேலைய நாடுகளுக்குப் புத்துயிர் ஊட்டும், கோட்பாட்டு நெறியிலான சோஷலிசத்தின் பழைய பதாகைக்குப் பதில் பட்டினி கிடக்கும் பெருந் திரளினரது நேரடிச் செயலெனும் புது வழியினை உருவாக்கும்— இது மனித குலத்தை முன்னோக்கி உந்தித் தள்ளி, அதனைச் சமுதாயச் சுவர்க்கத்தின் கதவுகளை உடைத்துக் கொண்டு உள்ளே செல்ல வைக்கும் என்கிறார்....''

''ருஷ்யாவின் சிதைவு முதலாளித்துவ ஆட்சி அனைத்தையும் சிதைவுறச் செய்யுமென இந்த ஆட்கள் மனப் பூர்வமாய் நம்புகிறார்கள். இந்தக் கண்ணோட்டத்திலிருந்து ஆரம்பிக்கும் இவர்கள் மனமறியாமலே தேசத் துரோகம் புரியும் நிலையை வந்தடைகிறார்கள், யுத்த காலத்தில் அகழ்வரிகளைத் துறந்து ஓடுமாறு படையாட்களிடம் அமைதி குலையாது சொல்லுகின்றார்கள், வெளிநாட்டுப் பகைவனை எதிர்த்துப் போர் புரிவதற்குப் பதில் உள்நாட்டுப் போரை உண்டாக்கும்படி, நிலப்பிரபுக்களையும் முதலாளிகளையும் தாக்கும்படிச் சொல்கிறார்கள்....''

எந்த சோஷலிஸ்டு இம்மாதிரியான செயலில் இறங்குமாறு சொன்னூரெனக் கேட்டு இடதுசாரியிலிருந்து எழுந்த ஆத்திரக் கூச்சல்கள், இங்கே மில்யுக்கோவை இடைமறித்தன....

''மார்த்தவ் கூறுகிறூர், பாட்டாளி வர்க்கத்தின் புரட்சிகர நிர்ப்பந்தத்தால் மட்டும்தான் ஏகாதிபத்தியக் குழுவங்களது தீய சித்தத்தைக் கண்டித்துச் சாடவும், வெற்றி கொள்ளவும், இந்தக் குழுவங்களது சர்வாதிகாரத்தைத் தகர்த்திடவும் முடியும் என்று.... படைக்கலன்களுக்கு வரம்பிடுவதென அரசாங்கங்களுக்கிடையே ஏற்படும் உன்பாட்டின் மூலம் அல்ல, இந்த அரசாங்கங்களை நிராயுதபாணிகளாக்கி, இராணுவ அமைப்பைத் தீவிர முறையில் ஜனநாயகத் தன்மையதாக்குவதன் மூலம்தான் முடியுமாம்....''

மார்த்தவை அவர் கடுங் காழ்ப்புடன் தாக்கினூர்; பிறகு மென்ஷிவிக்குகள், சோஷலிஸ்டுப் புரட்சியாளர்கள் பக்கம் திரும்பி, இவர்கள் வர்க்கப் போராட்டம் நடுத்துவதென்ற வைராக்கியமான நோக்கத்துடன் அமைச்சர்களாக அரசாங்கத்தில் சேர்ந்து கொண்டவர்கள் என்று குற்றஞ் சாட்டினூர்!

''ஜெர்மனியையும் நேசநாடுகளையும் சேர்ந்த சோஷலிஸ்டுகள் அதிகம் மூடிமறைக்காமலே இகழ்ச்சியுடன்தான் இந்தக் கனவான்களைக் கருதி வந்தனர். இவர்கள் ருஷ்யாவுக்கே ஏற்றவர்கள் என்று முடிவு செய்து, அனைத்துலகத் தீயின் தூதர்கள் சிலரை நமக்கு அனுப்பி வைத்தனர்....

''நமது புரட்சிகர ஜனநாயகம் கடைப்பிடிக்கும் சூத்திரம் எளிமையிலும் எளிமையானது: அயல்துறைக் கொள்கை வேண்டாம், அரசுதந்திரக் கலையும் வேண்டாம், உடனடி ஜனநாயக சமாதானம், 'எமக்கு வேண்டியது ஏதும் இல்லை, போர் புரிய ஏதும் இல்லை எம்மிடம்!' என்பதாக நேசநாடுகளுக்குப் பிரகடனம் செய்வோம். உடனே எமது எதிரிகளும் இதே போல் பிரகடனம் செய்வார்கள், எல்லா நாடுகளது மக்களின் சோதரத்துவம் சித்தி பெற்றுவிடும்!''

ஸிம்மர்வால்டு அறிக்கையை மில்யுக்கோவ் சாடினூர்—கேரென்ஸ்கியாலுங்கூட அதன் செல்வாக்குக்கு உட்படாமல் தப்ப முடியவில்லை, ''கேடுகெட்ட ஆவணம், எந்நாளும் அது உங்கள் மீதான குற்றப் பத்திரிகையாக இருந்து வரும்.''

பிறகு அவர் ஸ்கோபெலெவைத் தாக்கினர், பாரிஸ் மாநாட்டில் அயல் நாட்டுப் பிரதிநிதிகளிடையே அவர் ருஷ்யப் பிரதிநிதியாக காட்சியளிப்பார், ஆயினும் தமது அரசாங்கத்தின் அயல்துறைக் கொள்கையை எதிர்ப்பார்—அவருடைய நிலே அதிவினேதமாகவே இருக்கும், 'இந்தக் கனவான் செய்ய விரும்புவது என்ன? இவருடன் நாம் என்ன பேச முடியும்?' என்பதாகவே அங்குள்ளோர் கூறிக் கொள்ள வேண்டியிருக்கும். நக்காஸைப் பற்றிப் பேசுகையில் தாமும் ஒரு சாத்வீகவாதியே என்று மில்யுக்கோவ் கூறினர்; சர்வ தேச நடுவர் குழு ஒன்று அமைக்கப்பட வேண்டுமென்றும், படைக் கலன்களுக்கு வரம்பிடுதல் அவசியமென்றும், இரகசிய அரசுதந்திரத்தின் மீது நாடாளுமன்றக் கண்காணிப்பு வேண்டுமென்றும்—இரகசிய அரசுதந்திரம் ஒழிக்கப்படுதல் அல்ல இதன் அர்த்தம்—தாம் நம்புவதாகக் கூறினர்.

நக்காஸிலுள்ள சோஷலிசக் கருத்துகளேப் பற்றி—வெற்றியின்றி சமாதானம், தேசங்களுக்குச் சுய-நிர்ணய உரிமை, பொருளாதார யுத்தம் நிராகரிக்கப்படுதல் ஆகிய இவற்றை ''ஸ்டாக்ஹோம் கருத்துகள்'' என்ருர்—அவர் கூறியதாவது:

''ஜெர்மானிய வெற்றிகள் புரட்சிகர ஜனநாயகவாதிகளெனத் தம்மைக் கூறிக் கொள்வோரது வெற்றிகளுடன் நேர்விகித உறவு கொண்டுள்ளன. 'புரட்சியின் வெற்றிகளுடன் நேர்விகித உறவு கொண்டிருப்பதாக' நான் கூறவில்லே, ஏனெனில் புரட்சிகர ஜனநாயகத்தின் தோல்விகள் புரட்சியின் வெற்றிகளாகுமென நான் நம்புகிறேன்....

''சோவியத்துத் தலேவர்களுக்கு வெளிநாடுகளிலுள்ள செல்வாக்கு முக்கியத்துவமற்ற ஒன்றல்ல. ஆனல் அயல் துறை அமைச்சருடைய உரை தெளிவாகப் புலப்படுத்துவது என்னவெனில், இந்த அவையில் புரட்சிகர ஜனநாயகம்தான் அயல்துறைக் கொள்கையின் மீது மிகுந்த செல்வாக்கு செலுத்துகிறது, அதற்கு நேர் நின்று ருஷ்யாவின் மாண்பு குறித்தும் கவுரவம் குறித்தும் பேச அமைச்சர் திராணியற்றவராக இருக்கிருர்!

''சோவியத்துகளுடைய நக்காஸில் ஸ்டாக்ஹோம் அறிக்கையின் கருத்துகள் இரு வழிகளில் எடுத்தாளப்படுகின்றன

—ஒன்று கற்பனுவாத வழி, மற்ருென்று ஜெர்மன் நலன்களுக்குரிய வழி....''

இடதுசாரியினரது கோபக் கூச்சல்களாலும், அவைத் தலைவரது கண்டன மொழியாலும் இடைமறிக்கப்பட்ட மில்யுக்கோவ், அரசுதந்திர உறவுத் துறையினரால் அல்லாமல் பொது மக்களது மன்றங்களால் சமாதானம் முடிவு செய்யப்பட வேண்டுமென்ற கருத்தும், பகைவன் பிரதேசச் சேர்ப்புகளை நிராகரித்ததும் அவனுடன் பேச்சுவார்த்தைகளை மேற்கொள்ள வேண்டுமென்ற ஆலோசனையும் ஜெர்மன்-ஆதரவு வாய்ந்தவையாகும் என்று வலியுறுத்திஞர். தனிப்பட்ட முறையில் செய்யப்படும் பிரகடனம் அதனைச் செய்பவரை மட்டுமே கட்டுப்படுத்துகிறது என்று அண்மையில் கூல்மன் கூறிஞர்.... ''எப்படியும் தொழிலாளர்கள், விவசாயிகள் பிரதிநிதிகளது சோவியத்துகளைக் காப்பியடிக்கு முன் நாம் ஜெர்மானியர்களையே காப்பியடிப்போம்....''

லித்துவேனியா, லாட்வியா இவற்றின் சுயேச்சை சம்பந்தமான பிரிவுகள் ருஷ்யாவின் பற்பல பகுதிகளிலும் நடைபெறும் தேசியவாதக் கிளர்ச்சியின் அறிகுறிகளாகும், ஜெர்மன் பணத்தின் ஆதரவோடு நடைபெறும் கிளர்ச்சி இது என்ருர் மில்யுக்கோவ்.... இடதுசாரியினர் செய்த குழப்பத்துக்கு இடையே அவர் அல்சாஸ்-லொரைன், ரூமேனியா, செர்பியா இவை பற்றிய நக்காஸ் பிரிவுகளை, ஜெர்மனியையும் ஆஸ்திரியாவையும் சேர்ந்த தேசிய இனங்கள் சம்பந்தமான பிரிவுகளுடன் ஒப்பிட்டு வேறுபடுத்திக் காட்டிஞர். ஜெர்மன், ஆஸ்திரிய நோக்கு நிலையே இந்த நக்காஸில் அடங்கியிருக்கிறது என்ருர் அவர்.

அடுத்து, தெரேஷ்ச்செென்கொவின் உரை குறித்துப் பேசிஞர். தமது மனதில் இருப்பதை எடுத்துரைக்கத் தைரியமில்லாதவர், ருஷ்யாவின் உயர்சிறப்புக்குரிய முறையில் சிந்திப்பதற்குக்கூட தைரியமில்லாதவர் என்று இகழ்ந்துரைத்து அவர் மீது குற்றம் சாட்டிஞர். டார்டனல்ஸ் ருஷ்யாவுக்கே உரியதாகும்....

''படையாளுக்குத் தான் போர் புரிவது எதற்காக என்பது தெரியவில்லை, தெரிந்ததும் அவன் போர் புரிவான் என்பதாக நீங்கள் ஓயாமல் கூறிக் கொண்டிருக்கிறீர்கள்....

எதற்காகப் போர் புரிகிருேமென்று படையாளுக்குத் தெரிய வில்லை என்பது மெய்தான், ஆனால் இப்போது நீங்கள் அவன் போர் புரியக் காரணம் ஏதும் இல்லை, நமக்குத் தேசிய நலன் கள் என்பதாக ஏதும் இல்லை, நமக்கு அன்னியமான நோக்கங் களுக்காகவே போர் புரிகிருேம் என்று படையாளிடம் கூறி யிருக்கிறீர்கள்....''

நேசநாடுகளை அவர் போற்றிப் புகழ்ந்தார், இவை அமெ ரிக்காவின் உதவியுடன் ''மனிதகுலத்தின் இலட்சியத்தைப் பாதுகாக்கும்'' என்று குறிப்பிட்டுத் தமது பேச்சைப் பின் வருமாறு முடித்தார்:

''முன்னேறிய மேலைய ஜனநாயகங்களே மனித குலத்தின் சுடரொளி, உறுதியின்றியும் தடுமாற்றத்தோடும் இப்போது தான் நாம் அடியெடுத்து வைத்து உள்ளே புகுந்திருக்கும் இந்தப் பாதையில் நெடுங்காலமாக முன்னேறிச் சென்று வந்திருப்பவை, இவை நீடூழி வாழ்க! வீரமிக்க நமது நேச நாடுகள் நீடூழி வாழ்க!''

## 13.

## கேரென்ஸ்கியுடன் பேட்டி

'அசோசியேட்டட் பிரஸ்' நிருபர் தமது கைவரிசை யைக் காட்டிப் பார்த்தார். ''கேரென்ஸ்கி அவர்களே, இங்கிலாந்திலும் பிரான்சிலும் எல்லாரும் இந்தப் புரட்சி குறித்து ஏமாற்றம் தெரிவிக்கிருர்கள்—'' என்று அவர் ஆரம் பித்தார்.

''ஆமாம், எனக்குத் தெரியும்'' என்று ஏளனம் தொனிக்க அவரை இடைமறித்தார் கேரென்ஸ்கி. ''வெளி நாடுகளில் இப்போது புரட்சி மவுசு இழந்துவிட்டது!''

''ருஷ்யர்கள் போர் புரிவதை நிறுத்திக் கொண்டுவிட் டார்களே, அதற்கு நீங்கள் கூறும் காரணம் என்ன?''

''அசட்டுத்தனமான கேள்வி.'' கேரென்ஸ்கியிற்கு எரிச் சல் வந்துவிட்டது. ''நேசநாடுகள் யாவற்றிலும் ருஷ்யாதான் முதலில் யுத்தத்தில் இறங்கிற்று, நீண்டதொரு காலத்துக்கு அது இந்த யுத்தத்தின் முழுப் பளுவையும் தானே தாங்கிக்

கொண்டது. அதற்கு ஏற்பட்ட சேதங்கள் ஏனைய எல்லா தேசங்களுக்கும் சேர்ந்து ஏற்பட்டத்தைக் காட்டிலும் கணக்கின்றி அதிகமாகும். நேசநாடுகள் மேலும் அதிக அளவில் படை பலத்தைச் செயலரங்கில் ஈடுபடுத்த வேண்டுமென்று இப்போது ருஷ்யா முழு உரிமையுடன் இந்நாடுகளிடம் கோரலாம்.'' கணப் பொழுதுக்குப் பேச்சை நிறுத்திவிட்டு, அவர் தம்மிடம் கேள்வி கேட்ட நிருபரை உற்றுப் பார்த்தார். ''ருஷ்யர்கள் போர் புரிவதை ஏன் நிறுத்தினுர்கள் என்று நீங்கள் கேட்கிறீர்கள், ஆனுல் ரீகா வளைகுடாவில் ஜெர்மன் போர்க் கப்பல்கள் இருக்கும் நேரத்தில் பிரிட்டிஷ் கடற்படை எங்கே போயிற்று என்று ருஷ்யர்கள் கேட்கிருர்கள்.'' திரும்பவும் திடுமெனப் பேச்சை நிறுத்தினுர், அதே போல் திடுமெனப் பொழிந்து தள்ளினுர். ''ருஷ்யப் புரட்சி தோல்வியுற்றுவிடவில்லை, புரட்சிகர சேனையும் தோல்வியுற்றுவிடவில்லை. சேனையில் சீர்குலைவை ஏற்படுத்தியது புரட்சியல்ல—பல ஆண்டுகளுக்கு முன்பே ஏற்பட்டுவிட்டது அந்தச் சீர்குலைவு—பழைய ஆட்சி அதை ஏற்படுத்திற்று. ருஷ்யர்கள் போர் புரிவதை ஏன் நிறுத்தினுர்கள்? ஏனென்று உங்களுக்குச் சொல்கிறேன். ஏனென்ருல் பெருந் திரள் மக்கள் பொருளாதார வழியில் பலம் எல்லாம் இழந்து ஓய்ந்து போயிருக்கிருர்கள்—ஏனென்ருல் அவர்கள் நேசநாடுகளிடம் வைத்திருந்த நம்பிக்கை தகர்ந்து போய்விட்டது!''

போட்டியில் ஒரு பகுதியே ஆகும் இது. இந்தப் பேட்டியின் முழு வாசகமும் அமெரிக்க ஐக்கிய நாட்டுக்கு கடல் தந்தி மூலம் அனுப்பப்பட்டது. சில நட்களுக்கு எல்லாம் அமெரிக்க அரசாங்கத் துறை இது ''மாற்றப்பட'' வேண்டுமென்று கோரி, இதைத் திருப்பியனுப்பிற்று. மாற்றுவதற்கு மறுத்துவிட்டார் கேரென்ஸ்கி. ஆனுல் அவரது செயலாளரான டாக்டர் டேவிட் சோஸ்கிஸ் இந்தக் காரியத்தைச் செய்தார். நேச்நாடுகளைப் பற்றிய இளக்காரமான எல்லா வாசகங்களும் களைந்தெறியப்பட்டு, உலகின் பத்திரிகைகளுக்குத் தரப்பட்டன....

# அத்தியாயம் 3இன் அனுபந்தம்

## 1.

## ஆலைக் கமிட்டிகளின் தீர்மானம்

*1. எதேச்சாதிகார ஜாரிஸ்டு ஆட்சியை அரசியல் துறையில் வீழ்த்தியிருக்கும் தொழிலாளி வர்க்கம், பொருளுற்பத்தித் துறையிலும் ஜனநாயக அமைப்பின் வெற்றியைக் கைகூடச் செய்வதற்காக முயலுகின்றது. இந்த முயற்சி தொழிலாளர்களது கண்காணிப்பு என்னும் கருத்தின் வாயிலாய் வெளியாகின்றது. ஆளும் வர்க்கங்களது படுபாதகக் கொள்கையால் உண்டாக்கப்பட்ட பொருளாதாரச் சீர்குலைவின் விளைவாக இயல்பாகவே உதித்தெழுந்த ஒரு கருத்து இது.*

*2. தொழிலாளர்களது கண்காணிப்பை ஏற்பாடு செய்வதென்பது, அரசியல் அரங்கில் கட்சி நிறுவனங்களும், வேலை அரங்கில் தொழிற் சங்கங்களும், பொருள் நுகர்வு அரங்கில் கூட்டுறவுக் கழகங்களும், கலாசார அரங்கில் இலக்கிய மன்றங்களும் ஆற்றும் ஆரோக்கியமான அதே செயற்பாடு தொழில்துறையின் அரங்கில் ஆற்றப்படுவதைக் குறிக்கின்றது.*

*3. ஆலைகள் ஒழுங்காகவும் தடங்கலின்றியும் இயங்க வேண்டும் என்பதில்.... முதலாளித்துவ வர்க்கத்தைக் காட்டிலும் தொழிலாளி வர்க்கம் மிக அதிக அக்கறை கொண்டுள்ளது. பொருளாதார இலாபங்கள் அல்லது அரசியல் தனியுரிமைகளைப் பெற வேண்டுமென்ற தமது தன்னல நாட்டத்தையே பற்றுக் கோடாகக் கொண்டிருக்கும் ஆலை முதலாளிகளது தான்தோன்றித் தனமான சித்தத்தைக் காட்டிலும் தொழிலாளர்களது கண்காணிப்பானது இவ்விதம் நவீன சமுதாயத்தின், மக்கள் அனைவரின் நலன்களுக்குச் சிறந்த பாதுகாப்பாகும். ஆகவே பாட்டாளி வர்க்கம் தொழிலாளர்களது கண்காணிப்பு நிறுவப்பட வேண்டுமெனக் கோருவது, அதன் சொந்த நலனுக்காக மட்டுமின்றி நாடு அனைத்தின் நலனுக்காகவும் எழுப்பப்படும் கோரிக்கையாகும், புரட்சிகர விவசாயிகளும் மற்றும் புரட்சிகர சேனையும் இதற்கு ஆதரவளிக்க வேண்டும்.*

4. புரட்சியின் பால் முதலாளித்துவ வர்க்கத்தின் பெரும் பகுதி பகைமைப் போக்கு கொண்டிருப்பதால், தொழிலாளர்களது கண்காணிப்பு இல்லாமல் மூலப் பொருள்களும் எரிபொருளும் ஒழுங்காக வினியோகமாவதும், மற்றும் ஆலைகள் மிகவும் திறம்பட நிர்வகிக்கப்படுதலும் சாத்தியமல்ல என்பதை அனுபவம் தெளிவுபடுத்துகிறது.

5. முதலாளித்துவத் தொழில் நிலையங்களின் மீது தொழிலாளர் கண்காணிப்பை நிறுவி, உழைப்பின் பால் தொழிலாளர்களுக்கு உணர்வு பூர்வமான போக்கை வளர்த்திட்டு, உழைப்பின் சமுதாய அர்த்தத்தைத் தெளிவாகப் புலப்படச் செய்வதன் மூலம் மட்டுமே தொழிலாளர்களிடத்தே உறுதி வாய்ந்த சுயக்கட்டுப்பாடு வளர்வதற்கும், சாத்தியமான முழு அளவுக்குத் தொழிலாளர்களது பொருளுற்பத்தித் திறன் வளர்வதற்கும் சாதகமான நிலைமைகள் தோன்ற முடியும்.

6. யுத்த அடிப்படையிலிருந்து சமாதான அடிப்படைக்குத் தொழில் துறை மாற்றப்படுவதும், தொழிலாளர்களின் சக்தி நாடெங்கிலும், மற்றும் வெவ்வேறு ஆலைகளிடையிலும் மறுவினியோகம் செய்யப்படுவதும்—இவை யாவும் செய்யப்பட வேண்டிய தருணம் நெருங்கி வருகிறது—தொழிலாளர்கள் தாமே தம்மை ஜனநாயக முறையில் தன்னாட்சி புரிந்து கொள்வதன் மூலம் மட்டுமே அதிகப் பூசல்களின்றி சாதிக்கப்பட முடியும்.... ஆகவே தொழிலாளர்களது கண்காணிப்பு நடைமுறைக்கு வருதல், தொழில் துறையின் யுத்த ஒழுங்கமைப்பைக் கலைப்பதற்கு அத்தியாவசியமான முன்னிபந்தனையாகும்.

7. ருஷ்யாவின் சமூக-ஜனநாயகத் தொழிலாளர் கட்சி (போல்ஷிவிக்குகள்) பிரகடனம் செய்த கோஷத்துக்கு ஏற்ப தொழிலாளர்களது கண்காணிப்பு தேச அளவில் பயனளிக்கும் பொருட்டு, எல்லா முதலாளித்துவத் தொழில் நிலையங்களும் உள்ளடங்குமாறு விரிந்து அமைந்திருக்க வேண்டும்; முறை ஏதுமின்றி தற்செயலாய் அமைந்த ஒன்றாக இருக்கலாகாது; நன்கு திட்டமிடப்பட்ட முறையில், அனைத்து நாட்டின் தொழில் துறை வாழ்விலிருந்து பிரிந்தமையாததாய் நிறுவப்பட வேண்டும்.

8. நாட்டின் பொருளாதார வாழ்வு அனைத்தும்—விவசாயம், தொழில் துறை, வாணிபம், போக்குவரத்து ஆகிய யாவும்—ஒருமித்த திட்டத்துக்கு உட்படுத்தப்பட்டாக வேண்டும்; இந்த ஒருமித்த திட்டம் மக்களின் பெருந் திரளானோரின் தனிப்பட்ட, சமுதாயத் தேவைகளைப் பூர்த்தி செய்யும்படி வகுக்கப்பட்டிருக்க வேண்டும். இந்தப் பெருந் திரளினரால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளால் இத்திட்டம் அங்கீகரிக்கப்பட்டதாக இருக்க வேண்டும், இந்தப் பிரதிநிதிகளது நெறியாண்மையின் கீழ்த் தேசிய, வட்டார நிறுவனங்கள் மூலம் இத்திட்டம் செயல்படுத்தப்பட வேண்டும்.

9. திட்டத்தில் நில வேலைகள் சம்பந்தமான பகுதியானது விவசாயிகள், நில வேலையினர் ஆகியோரது நிறுவனங்களுடைய மேற்பார்வையில் செயல்படுத்தப்பட வேண்டும்; தொழில் துறை, வாணிபம், போக்குவரத்து இவை சம்பந்தமான பகுதியானது கூலி உழைப்பாளர்களால் தொழிலாளர் கண்காணிப்பின் மூலம் செயல்படுத்தப்பட வேண்டும். தொழில் நிலையத்தினுள் ஆலைக் கமிட்டிகளும் இவற்றையொத்த பிற கமிட்டிகளும், உழைப்புச் சந்தையில் தொழிற் சங்கங்களுமே தொழிலாளர் கண்காணிப்புக்குரிய இயற்கையான செயல் உறுப்புகளாய் இருக்கும்.

10. உழைப்பின் எந்தவொரு கிளையையும் சேர்ந்த பெரும்பாலான தொழிலாளர்களுக்குத் தொழிற் சங்கங்களால் ஏற்பாடு செய்யப்படும் கூலி விகிதக் கூட்டு ஒப்பந்தங்கள் குறிப்பிட்ட அந்த மாவட்டத்தில் இவ்வகை உழைப்பை அமர்த்திக் கொள்ளும் எல்லா ஆலை முதலாளிகளையும் கட்டுப்படுத்துவனவாக இருக்க வேண்டும்.

11. வேலை தேடித்தரும் கழகங்கள், அனைத்துத் தொழில் துறைத் திட்டத்தின் வரம்புகளுக்கு உட்பட்டும், இத்திட்டத்திற்கு ஏற்பவும் செயல்படும் பாட்டாளி வர்க்க நிறுவனங்களாகிய தொழிற் சங்கங்களது கண்காணிப்புக்கும் நிர்வாகத்துக்கும் உட்பட்டனவாக இருத்தல் வேண்டும்.

12. உழைப்பு ஒப்பந்தங்களையோ, உழைப்புச் சட்டங்களையோ மீறும் எல்லா முதலாளிகள் மீதும் தொழிற் சங்கங்கள் தமது சொந்த முன்முயற்சியின் பேரிலும், மற்றும் அந்த

உழைப்புக் கிளையைச் சேர்ந்த தனிப்பட்ட எந்தத் தொழிலாளரின் சார்பிலும், சட்ட முறையிலான வழக்கு தொடர உரிமை பெற்றிருக்க வேண்டும்.

13. பொருளுற்பத்தி, விநியோகம், உழைப்புச் சந்தை ஆகியவற்றில் தொழிலாளர் கண்காணிப்பு சம்பந்தமான எல்லா பிரச்சினைகள் குறித்தும் தொழிற் சங்கங்கள் தனிப் பட்ட தொழில் நிலையத் தொழிலாளர்களுடன், அவர்களது ஆலை-தொழிற்கூடக் கமிட்டிகள் மூலம் கலந்தாலோசிக்க வேண்டும்.

14. வேலை அளித்தல், வேலையிலிருந்து நீக்குதல், விடு முறைகள், கூலி விகிதங்கள், வேலை செய்ய மறுத்தல், பொருளுற்பத்தி ஆற்றல் அளவு, தேர்ச்சி அளவு, ஒப்பந்தங் களை ரத்து செய்வதற்கான காரணங்கள், நிர்வாகத்துடனான தகராறுகள் ஆகிய விவகாரங்களும், ஆலையின் உள் துறை வாழ்க்கை சம்பந்தமான இவற்றையொத்த பிற பிரச்சினை களும் முற்றிலும் ஆலை-தொழிற்கூடக் கமிட்டியின் முடிவு களுக்கு ஏற்பவே தீர்க்கப்படுதல் வேண்டும். ஆலை நிர்வாகத் தின் உறுப்பினர்களை இந்த விவாதத்தில் பங்கு கொள்ள முடியாதபடி விலக்கிவைக்கும் உரிமை ஆலைக் கமிட்டிக்கு உண்டு.

15. ஆலைக்கு மூலப் பொருள்கள், எரிபொருள், உற் பத்திப் பொருள் வேண்டல்கள், உழைப்பு சக்தி, தொழில் நுட்ப ஊழியர் தொகுதி (சாதனங்களும் அடங்கலாய்) ஆகிய னவும் பிற எல்லாத் தளவாடங்களும் ஏற்பாடுகளும் வழங் கப்படுவதற்காகவும், மற்றும் பொதுவான தொழில் துறைத் திட்டத்தை ஆலை அனுசரித்துச் செயல்படும்படி உத்தரவா தம் செய்வதற்காகவும் ஆலைக் கமிட்டி ஓர் ஆணைக் குழுவினை அமைக்கின்றது. தொழிலாளர் கண்காணிப்பின் செயல் உறுப்பு களுக்கு, அவற்றுக்குத் துணையாய் இருக்கும் பொருட்டும் அவை தகவல் தெரிந்து கொள்ளும் பொருட்டும் ஆலை நிர் வாகமானது தொழில் சம்பந்தமான எல்லா விவரங்களையும் அளித்திடக் கடமைப்பட்டது; இந்தத் தகவல்களை இவ் வுறுப்புகள் சரிபார்ப்பதற்கு வகை செய்யவும், ஆலைக் கமிட்டி கேட்கும் போது ஆலைத் தொழில் கணக்குப் பதிவேடுகளை அதனிடம் தரவும் ஆலை நிர்வாகம் கடமைப்பட்டதாகும்.

16. ஆலே நிர்வாகம் சட்ட விரோதமான செயல்கள் எவையும் புரிந்ததாக ஆலைக் கமிட்டிகள் கண்டுபிடித்து, அல்லது இம்மாதிரியான சட்டவிரோதச் செயல்கள் புரிந்ததாகச் சந்தேகப்பட்டு, தொழிலாளர்கள் தனியே தாமே பரிசீலிக்கவோ, நிவர்த்திக்கவோ முடியாதனவாக அவை இருக்குமாயின், குறிப்பிட்ட அந்த உழைப்புக் கிளைக்குப் பொறுப்பான ஆலைக் கமிட்டிகளது மாவட்ட மத்திய நிறுவனத்திடம் இந்த விவகாரம் ஒப்படைக்கப்பட வேண்டும். அந்த நிறுவனம் பொதுவான தொழில் துறைத் திட்டத்தின் நிறைவேற்றத்துக்குப் பொறுப்பான நிலையங்களுடன் இந்த விவகாரம் குறித்து விவாதித்து, ஆலையைப் பறிமுதல் செய்யும் அளவுக்குக்கூட செல்வதும் அடங்கலாக இந்த விவகாரத்தில் செய்யப்பட வேண்டியவற்றைச் செய்வதற்கான வழிமுறைகளைத் தேடிக் கொள்ளும்.

17. பற்பல தொழில் நிலையங்களது ஆலைக் கமிட்டிகளின் ஐக்கியமானது வெவ்வேறு தொழிற் கிளைகளின் அடிப்படையில் சாதிக்கப்பட்டு, தொழிற் கிளை அனைத்தின் மீதும் கண்காணிப்புக்கு வகை செய்து, இதன் மூலம் பொதுவான தொழில் துறைத் திட்டத்துக்கு அக்கிளையை உட்படுத்துவதாகவும், உற்பத்திப் பொருள் வேண்டல்களும் மூலப் பொருள்களும் எரிபொருளும் தொழில்நுட்ப, உழைப்பு சக்தியும் வெவ்வேறு ஆலைகளிடையிலும் வினியோகமாவதற்குரிய பயனுள்ள திட்டத்தை உருவாக்குவதாகவும், மற்றும் தொழிற் கிளையின் அடிப்படையில் ஒழுங்கமைக்கப்பட்ட தொழிற் சங்கங்களுடன் ஒத்துழைப்புக்கு வகை செய்வதாகவும் இருத்தல் வேண்டும்.

18. தொழிற் சங்கங்கள், ஆலைக் கமிட்டிகள் இவற்றின் மத்திய நகரக் கவுன்சில்கள், பொதுவான தொழில் துறைத் திட்டத்தை வகுத்திடுவதற்கும் செயற்படுத்தி நிறைவேற்றுவதற்காகவும், நகரங்களுக்கும் கிராமங்களுக்கும் (தொழிலாளர்களுக்கும் விவசாயிகளுக்கும்) இடையே பொருளாதார உறவுகளை ஒழுங்கமைப்பதற்காகவும் மாநிலத்திலும் வட்டாரத்திலும் நிறுவப்படும் அமைப்புகளில் பாட்டாளி வர்க்கத்தைப் பிரதிநிதித்துவம் செய்கின்றன. இந்த மத்திய நகரக் கவுன்சில்கள், அவையவற்றுக்குமான மாவட்டத்தில்

தொழிலாளர் கண்காணிப்பைப் பொறுத்த மட்டில், ஆலைக் கமிட்டிகள், தொழிற் சங்கங்கள் ஆகியவற்றின் நிர்வாகத்தில் இறுதி அதிகாரம் பெற்றிருக்கின்றன. பொருளுற்பத்தி ஒழுங்கு நடப்பில் தொழிலாளர்களது கட்டுப்பாடு சம்பந்தமான கட்டாயக் கடமைகளாகிய விதிமுறைகளை இக்கவுன்சில்கள் வெளியிடும், ஆனால் இந்த விதிமுறைகள் நேரடியாகத் தொழிலாளர்களே வாக்களித்து அங்கீகரித்தனவாக இருக்க வேண்டும்.*

## 2.

### போல்ஷிவிக்குகள் குறித்து முதலாளித்துவப் பத்திரிகைகள்

**ருஸ்கயா வோல்யா,** *அக்டோபர் 28: "முடிவு கட்டும் படியான தருணம் நெருங்குகிறது.... போல்ஷிவிக்குகளுக்கு இது முடிவு கட்டும்படியான தருணமாகும். அவர்கள் ஜூலை 3—5ஆம் நாட்களது நிகழ்ச்சிகளின் இரண்டாம் பதிப்பு ஒன்றை.... நமக்கு அளித்தாக வேண்டும்; இல்லையேல் அவர்கள் தமது திட்டங்களுடனும் எண்ணங்களுடனும், உணர்வு பூர்வமாகத் தேசியத் தன்மை கொண்டவை யாவற்றிலுமிருந்தும் தம்மை வெட்டி விலக்கிக் கொள்ளும் தமது ஆணவக் கொள்கையுடனும் திட்டவட்டமாகத் தாம் தோற்கடிக்கப் பட்டுவிட்டதை ஒத்துக் கொண்டாக வேண்டும்....*

*"போல்ஷிவிக்குகள் வெற்றி பெறுவதற்குரிய நிகழ் தகவு என்ன?*

---

* *பாரா 19ஐ ஜான் ரீடு விட்டுவிடுகிறார். அது வருமாறு: "நாடு த்ழுவிய அளவில் தொழிலாளர்களது கண்காணிப்பு வேண்டுமெனக் கோரும் இம்மாநாடு, அந்தந்த இடத்திலும் சக்திகளது வினியோகம் அனுமதிக்கும் அளவுக்கு இப்போதே இந்தக் கண்காணிப்பை நடைமுறையில் அனுசரிக்கும்படி தோழர்களுக்கு அழைப்பு விடுக்கிறது; தொழிலாளர்களது சொந்த நலனுக்காகப் பயன்படுத்திக் கொள்ளப்படுவதற்காகத் தொழிலாளர்கள் தொழில் நிலையங்களைக் கைப்பற்றிக் கொள்வது, தொழிலாளர்களது கண்காணிப்பின் நோக்கங்களுக்கு ஏற்றதல்ல என்று பறைசாற்றுகிறது."—[பதிப்பாசிரியர்.]*

''இக்கேள்விக்குப் பதிலளிப்பது கடினம், போல்ஷிவிக்கு கள் தமக்குப் பிரதான ஆதாரமாகக் கொண்டிருப்பது.... வெகுஜனங்களின் அறியாமையைத்தான். இதை ஆதாரமாகக் கொண்டுதான் அவர்கள் சூதாட்டம் புரிகிறார்கள், எதனாலும் தடுத்து நிறுத்த முடியாத வாய்ச் சவடாலைப் பிரயோகித்து இந்த ஆதாரத்தின் மீது செயல்பட்டு வருகிறார்கள்....

''இந்த விவகாரத்தில் அரசாங்கம் அதற்குரிய பங்கினைச் செய்தாக வேண்டும். தார்மிக அளவில் குடியரசு அவையைத் தனக்கு ஆதரவாகக் கொண்டு, அரசாங்கம் போல்ஷிவிக்குகளின் பால் திட்டவட்டமாக வரையறுக்கப்பட்ட ஒரு போக்கினை அனுசரிக்க வேண்டும்....

''சட்ட முறையில் அமைந்த ஆட்சியதிகாரத்துக்கு எதிராகப் போல்ஷிவிக்குகள் சதி புரிந்து எழுச்சியைத் தூண்டிவிட்டு, இவ்விதம் ஜெர்மன் படையெடுப்புக்கு வகை செய்வார்களானால், அவர்களைக் கலகக்காரர்களாகவும் தேசத் துரோகிகளாகவும் கருதி ஆவன செய்ய வேண்டும்....''

**பீர்ழேவியே வேதமொஸ்தி,** அக்டோபர் 28: ''போல்ஷிவிக்குகள் தற்போது தம்மை ஜனநாயகத்தின் ஏனைய பகுதிகளிடமிருந்து பிரித்து விலக்கிக் கொண்டுவிட்டதால், அவர்களுக்கு எதிரான போராட்டம் மிகவும் எளிதாகிவிடுகிறது—போல்ஷிவிசத்தை எதிர்த்துப் போராடும் பொருட்டு, அவர்கள் எழுச்சியை ஆரம்பிக்கும் வரை காத்திருக்க வேண்டுமென்பது அறிவுடைமையாகாது. எழுச்சி நடைபெற அரசாங்கம் அனுமதிக்கலாகாது....

''எழுச்சிக்காகவும் அராஜகத்துக்காகவும் போல்ஷிவிக்குகள் வேண்டுகோள்கள் விடுப்பது குற்ற விசாரணை நீதி மன்றங்களால் தண்டிக்கப்படக் கூடிய செயலாகும். யாவற்றிலும் சுதந்திரமான நாடுகளிலும் இச்செயலைப் புரிவோருக்கு மிகக் கடுமையான தண்டனை விதிக்கப்படும். ஏனெனில் போல்ஷிவிக்குகள் செய்து வரும் காரியம் அரசாங்கத்துக்கு எதிரான அரசியல் போராட்டமல்ல, ஆட்சியதிகாரத்துக்கான போராட்டம்கூட அல்ல, அராஜகத்துக்கும் படுகொலைகளுக்கும் உள்நாட்டுப் போருக்குமான பிரசாரமாகும். இந்தப் பிரசாரத்தை பூண்டோடு ஒழித்திட வேண்டும். கொலை வெறியாட்டத்துக்கான கிளர்ச்சிக்கு எதிராகச் செயல்

தொடங்குவதற்காக, இந்தக் கொலை வெறியாட்டம் மெய்யாகவே நடந்தேறும் வரைக் காத்திருப்பது விபரீதமே....''

**நோவயெ வ்ரேமியா,** *நவம்பர் 1: ''...அரசாங்கம் செப்டம்பர் 12 குறித்தோ, அக்டோபர் 3 குறித்தோ அல்லாமல் நவம்பர் 2 (சோவியத்துகளின் காங்கிரஸ் கூடுவதற்கான தேதி) குறித்து மட்டும் பரபரப்படைகிறதே, ஏன் இது?*

*''ருஷ்யா தீ பிடித்துத் தகர்ந்து விழுவதும் இந்தக் கொடுந் தீயின் புகையில் நமது நேசநாடுகளுக்குக் கண் எரிவதும் இதுவல்ல முதல் தரம்...*

*''அதிகாரத்துக்கு வந்தது முதலாய் இந்த அரசாங்கம் அராஜகத்தைத் தடுத்து நிறுத்துவதற்காக ஒரேயொரு கட்டளையேனும் பிறப்பித்திருக்குமா? அல்லது ருஷ்யத் தீயினை அணைக்க யாரேனும் முயற்சி செய்தது உண்டா?*

*''செய்வதற்கு வேறு காரியங்கள் இருந்தன....*

*''மேலும் உடனடியான ஒரு பிரச்சினையில் அரசாங்கம் கவனம் செலுத்திற்று. ஒரு கலகத்தை (கர்னீலவின் முயற்சியை) அது நசுக்கிற்று—'அப்படி ஒன்று இருந்ததுண்டா?' என்று ஒவ்வொருவரும் இப்போது கேட்கிறரே அதுதான் அந்தக் கலகம்.''*

## 3.

## போல்ஷிவிக்குகள் குறித்து மிதவாத சோஷலிஸ்டுப் பத்திரிகைகள்

**தியேலொ நரோதா,** *அக்டோபர் 28 (சோஷலிஸ்டு-புரட்சியாளர்களின் ஏடு): ''புரட்சிக்கு போல்ஷிவிக்குகள் புரியும் பயங்கரக் குற்றம் என்னவெனில், மக்கள் பெருந் திரளினரைக் கொடிய முறையில் வருத்தும் கொடுந் துன்பங்கள் யாவற்றுக்கும் புரட்சிகர அரசாங்கத்தின் கெட்ட எண்ணங்களே முழுக்க முழுக்க காரணமென அவர்கள் குறிப்பிடுவதுதான். உண்மையில் இந்தக் கொடுந் துன்பங்கள் புறநிலைக் காரணங்களிலிருந்து உதிப்பவை.*

*''தாம் அளிக்கும் வாக்குறுதிகளில் எவற்றையும் நிறை*

வேற்ற முடியாதென்று முன்கூட்டியே அறிந்திருந்தும் வெகு ஜனங்களுக்கு இந்தப் போல்ஷிவிக்குகள் அதிமதுர வாக்குறுதிகள் அளிக்கிறார்கள்; வெகுஜனங்களது இன்னல்களுக்குரிய மூல காரணம் குறித்து அவர்களை ஏமாற்றி, தவறான பாதையிலே அவர்களை இட்டுச் செல்கிறார்கள்....

''புரட்சியின் மிகப் பயங்கர பகைவர்கள் இந்தப் போல்ஷிவிக்குகள்....''

**தியேன்,** அக்டோபர் 30 (மென்ஷிவிக்குகளின் ஏடு): ''உண்மையில் 'பத்திரிகைச் சுதந்திரமா' இது? நாள் தவறாமல் **நோவயா ரூஸ்** ஏடும், **ரபோச்சி பூத்** ஏடும் பகிரங்கமாகவே கலகத்தைத் தூண்டிவிட்டு வருகின்றன. கொலை வெறித் தாண்டவங்கள் வேண்டுமென்று நாள்தோறும் இவை வற்புறுத்தி வருகின்றன.... 'பத்திரிகைச் சுதந்திரம்' என்பது இதுதானா?....

''அரசாங்கம் தன்னைப் பாதுகாத்துக் கொள்ள வேண்டும், நம்மைப் பாதுகாக்க வேண்டும். இரத்த வெறி கொண்ட கலங்கள் மூண்டு குடிமக்களின் உயிருக்கு ஆபத்து உண்டாக்கும் அபாயம் எழுகையில், அரசாங்கப் பொறியமைவு செயலற்றுச் சும்மாயிருக்கலாகாது என்று கோருவதற்கு நமக்கு உரிமை உண்டு....''

## 4.

## ''எதீன்ஸ்துவொ''

பிளெஹானவின் ஏடாகிய **எதீன்ஸ்துவொ,** போல்ஷிவிக்குகள் ஆட்சியதிகாரத்தைக் கைப்பற்றியபின் சில வாரங்களுக்கு எல்லாம் நின்று போய்விட்டது. பரவலாகக் கூறப்பட்டதற்கு நேர் விரோதமாக, **எதீன்ஸ்துவொ** ஏடு சோவியத்து அரசாங்கத்தால் தடுத்து மூடப்பட்டு விடவில்லை. இந்த ஏட்டின் கடைசி இதழில் வெளியான ஓர் அறிவிப்பு இதை ஒத்துக் கொண்டது; தொடர்ந்து வெளிவர முடியவில்லை, **ஏனெனில் சந்தாதாரர்கள் மிகச் சொற்பமாகிவிட்டனர்** என்று அது கூறிற்று....

5.

### போல்ஷிவிக்குகள் சதிகாரர்களா?

பெத்ரொகிராதில் வெளியான பிரெஞ்சு ஏடான ஆன் தான்த்தில் நவம்பர் 15ல் வெளிவந்த கட்டுரையின் ஒரு பகுதி வருமாறு:

''கேரென்ஸ்கியின் அரசாங்கம் விவாதிக்கிறது, தயங்கு கிறது. லெனின், திரோத்ஸ்கி இவர்களது அரசாங்கம் தாக்குகிறது, செயல் புரிகிறது.

''பின்னது சதிகாரர்களது அரசாங்கம் என்பதாகச் சொல் லப்படுகிறது, அது சரியல்ல. தமது எதிராளிகளின் மீது வெற்றி ஈட்டும் புரட்சிகர அரசாங்கங்கள் யாவற்றையும் போல், தகாமுறையில் ஆட்சிக்கு வந்த அரசாங்கம் என்று சொல்லலாம்தான். ஆனுல் சதிகாரர்களது அரசாங்கம் என்பது சரியா—இல்லே!

''இல்லே! இவர்கள் சதி புரியவில்லே. மாருக, இவர்கள் பகிரங்கமாக, துணிகரமாக, சொற்களேத் திரிக்காமல், தமது எண்ணங்களே மூடி மறைக்காமல், தமது கிளர்ச்சியை மும் முரமாக்கினர்; ஆலேகளிலும் படைக் கொட்டடிகளிலும் போர் முனேயிலும், நாடெங்கிலும் தமது பிரசாரத்தைக் கடுமை யாக்கினர்; தாம் ஆயுதமேந்தித் தாக்குதல் நடத்தப் போகும் தேதியை, ஆட்சியதிகாரத்தைக் கைப்பற்றப் போகும் தேதியை முன்கூட்டியே பகிரங்கமாக்கினர்....

''சதிகாரர்களா இவர்கள்? இல்லவே இல்லே....''

6.

### எழுச்சிக்கு எதிராய் வேண்டுகோள்

## மத்தியச் சேனேக் கமிட்டியிடமிருந்து

''...மக்களின் பெரும்பான்மையோரது ஒழுங்கமைந்த சித்தம் உறுதியுடன் யாவற்றுக்கும் முதலாகச் செயல்படுத் தப்பட வேண்டுமென நாம் வற்புறுத்துகிருேம்—மக்களது இந்தச் சித்தம் மக்களது ஆட்சியதிகார உறுப்பின் வாயிலாக,

குடியரசு அவைக்கும் இத்ஸேட்-யி-கவுக்கும் இசைவான இடைக் கால அரசாங்கத்தின் வாயிலாக வெளியிடப்படுகிறது....

''இந்த ஆட்சியதிகாரத்தை வன்முறையின் மூலம் வீழ்த்துவதற்கான எந்த ஆர்ப்பாட்டமும், அரசாங்க நெருக்கடியானது நிச்சயமாகச் சீர்குலைவையும் நாட்டின் நாசத்தையும் உள்நாட்டுப் போரையுமே ஏற்படுத்தக் கூடிய ஒரு தருணத்தில் இம்மாதிரியான எந்த முயற்சியும், எதிர்ப்புரட்சிச் செயலாகவே சேனையால் கருதப்பட்டு, ஆயுத பலத்தைக் கொண்டு நசுக்கப்படும்....

''தனிப்பட்ட கோஷ்டிகள், வர்க்கங்களது நலன்கள் பொதுவான ஒரே நலனுக்குக் கீழ்ப்படுத்தப்பட்டாக வேண்டும்—தொழில் துறைப் பொருளுற்பத்தியைப் பெருகச் செய்தலும், இன்றியமையா வாழ்க்கைத் தேவைப் பொருள்கள் நியாயமான முறையில் வினியோகமாதலுமாகியப் பொது நலனுக்குக் கீழ்ப்படுத்தப்பட்டாக வேண்டும்....

''நாசவேலை, சீர்குலைவு அல்லது கலகம் புரியக் கூடியவர்கள் யாவரையும், கடமை துறப்பாளர்கள், கொள்ளைக்காரர்கள், சூறையாடுவோர் எல்லோரையும், சேனைக்குப் பின்னல் துணையாதரவான வேலைகளில் ஈடுபடும்படி வலுக்கட்டாயம் செய்தாக வேண்டும்....

''மக்களது சித்தத்தை மீறுவோரிடமிருந்து, புரட்சியின் இந்தப் பகைவர்களிடமிருந்து, உழைப்புப் பட்டாளங்கள் அமைத்து, பின்னணியிலும் போர்முனையிலும் பகைப் படைகளது குண்டு பொழிவுக்கு அடியில் அகழ்வரிகளிலும் வேலை செய்ய வைக்கும்படி இடைக்கால அரசாங்கத்துக்கு நாங்கள் அழைப்பு விடுக்கின்றோம்....''

## 7.

## நவம்பர் 6ஆம் நாள் இரவின் நிகழ்ச்சிகள்

அந்திப் பொழுதில் செங்காவலர் படைக் குழுவினர் முதலாளித்துவப் பத்திரிகைகளின் அச்சகங்களைப் பிடிக்க ஆரம்பித்தனர். இந்த அச்சகங்களில் ரபோச்சி பூத்,

சல்தாத் ஏடுகளையும் பல்வேறு பிரகடனங்களையும் இவர்கள் நூறுயிரக் கணக்கில் அச்சிட்டார்கள். இவ்விடங்களிலிருந்து இவர்களை வெளியேற்றும்படி நகரக் காவல் துறையினர் கட்டளையிடப்பட்டார்கள். ஆனால் தடுப்பரண்கள் அமைக்கப்பட்டு இந்த அலுவலகங்கள் ஆயுதமேந்திய ஆட்களால் பாதுகாக்கப்பட்டதை அவர்கள் கண்டார்கள். அச்சகங்கள் மீது தாக்குதல் தொடுக்குமாறு கட்டளையிடப்பட்ட படையாட்கள் தாக்குதல் தொடுக்க மறுத்தனர்.

ஏறத்தாழ நள்ளிரவில் யூன்கெர் படைக் குழு ஒன்றுடன் கர்னல் ஒருவர் ரபோச்சி பூத் ஆசிரியரைக் கைது செய்வதற்கான பிடியாணையுடன் ''சுதந்திர உள்ளம்'' மன்றத்துக்கு வந்து சேர்ந்தார். உடனே வெளியே தெருவில் பெருங் கூட்டம் திரண்டெழுந்து யூன்கெர்களைப் பிடித்துக் கொன்று விடுவோமெனப் பயமுறுத்திற்று. இதைக் கண்டதும் கர்னல் தம்மையும் யூன்கெர்களையும் கைது செய்து பெத்ரொபவ்லொவ்ஸ்கயா கோட்டையின் சிறைகூடத்துக்குப் பாதுகாப்பாக அழைத்துச் செல்லும்படி மன்றாடினார், அவருடைய வேண்டுகோள் ஏற்றுக் கொள்ளப்பட்டது.

இரவு 1 மணிக்கு ஸ்மோல்னியிலிருந்து வந்த படையாட்கள், மாலுமிகளது படைப்பிரிவு தந்தி நிறுவனத்தைப் பிடித்துக் கொண்டது.* 1.35 மணிக்குத் தபால் அலுவலகம் பிடிக்கப்பட்டது. பொழுது விடிவதற்குச் சற்று முன்னால் இராணுவ ஓட்டலும், 5 மணிக்குத் தொலைபேசி இணைப்பகமும் பிடிபட்டன.** பொழுது விடிந்ததும் அரசு வங்கி சூழ்ந்து கொள்ளப்பட்டது. காலை 10 மணிக்கு எல்லாம் குளிர்கால அரண்மனையைச் சுற்றி படைகள் வளையமிட்டு நின்றன.

---

* தந்தி நிறுவனம் 2.00 மணிக்குப் பிடிபட்டது.—[பதிப்பாசிரியர்.]

** தொலைபேசி இணைப்பகம் காலை 7 மணிக்குப் பிடிக்கப்பட்டது.—[பதிப்பாசிரியர்.]

# அத்தியாயம் 4இன் அனுபந்தம்

## 1.

### நவம்பர் 7ஆம் நாளின் நிகழ்ச்சிகள்

விடியற் காலே 4 மணியிலிருந்து விடியும் வரை கேரென்ஸ்கி, பெத்ரொகிராது இராணுவத் தலைமை அலுவலகத்தில் இருந்து கொண்டு, பெத்ரொகிராதிலும் சுற்றுப்புறங்களிலும் இருந்த கசாக்குகளுக்கும் படையதிகாரிகளது பள்ளிகளின் யூன்கெர்களுக்கும் கட்டளைகள் அனுப்பினர். இவர்கள் எல்லாரும் தாம் வெளியே எங்கும் போக வழியில்லை என்பதாகப் பதிலளித்தார்கள்.

நகரின் தலைவரான கர்னல் பல்க்கோவ்னிக்கவ் இராணுவத் தலைமை அலுவலர்களது தலைமையகத்துக்கும் குளிர்கால அரண்மனைக்கும் இடையே செயல் திட்டம் ஏதும் இல்லாதவராய் அங்குமிங்கும் ஓடிக் கொண்டிருந்தார். ஆற்றுப் பாலங்களை உயர்த்திவிடும்படி கேரென்ஸ்கி உத்தரவிட்டார். செயல் ஏதும் எடுக்கப்படாமலே மூன்று மணி நேரம் கழிந்த பின், படையதிகாரி ஒருவரும் ஐந்து ஆட்களும் தமது சொந்த முன்முயற்சியின் பேரில் புறப்பட்டுச் சென்று, காவல் புரிந்து நின்ற செஞ்காவலர்களது குழுவினை விரட்டியடித்து விட்டு, நிக்கலாயிவ்ஸ்கி பாலத்தை உயர்த்தினர்கள். ஆனல் இவர்கள் அங்கிருந்து சென்றபின் சிறிது நேரத்துக்கெல்லாம் மாலுமிகள் சிலர் பாலத்தைத் திரும்பவும் இறக்கிவிட்டனர்.

ரபோச்சி பூத் அச்சகத்தைப் பிடிக்கும்படி கேரென்ஸ்கி உத்தரவிட்டார். இப்பணிக்காக ஒதுக்கப்பட்ட படையதிகாரிக்குப் படையாட்கள் குழு ஒன்று தரப்படுமென்று வாக்களித்தார்கள், இரண்டு மணி நேரத்துக்குப் பிற்பாடு யூன்கெர்கள் சிலர் தரப்படுவர் என்றுர்கள். பிறகு இந்த உத்தரவு மறக்கப்பட்டுவிட்டது.

தபால் அலுவலகத்தையும் தொலைபேசி நிறுவனத்தையும் திருப்பிப் பிடிப்பதற்காக முயற்சி செய்யப்பட்டது. ஒரு சில குண்டுகள் சுடப்பட்டன. ஆனல் அரசாங்கத்தின் படை

யினர் இனி தாம் சோவியத்துகளை எதிர்த்துப் போராட மாட்டோமென அறிவித்துவிட்டார்கள்.

யூன்கெர்களது பிரதிநிதிக் குழு ஒன்றிடம் கேரென்ஸ்கி கூறினார்: ''இடைக்கால அரசாங்கத்தின் அதிபர் என்ற முறையிலும் உச்சப் படைத்தலைவர் என்ற முறையிலும் நான் ஏதும் அறியேன், என்றால் உங்களுக்கு ஆலோசனை கூற இயலாது; ஆனால் முதுபெரும் புரட்சியாளன் என்ற முறையில், உங்களது பணியிடங்களில் இருந்து நீங்கள் புரட்சியின் வெற்றிகளைப் பாதுகாக்க வேண்டுமென இளம் புரட்சியாளர்களாகி உங்களுக்கு நான் வேண்டுகோள் விடுக்கிறேன்.''

* * *

கீஷ்கினது கட்டளை, நவம்பர் 7:

''இடைக்கால அரசாங்கத்தின் ஆணையின்படி... பெத்ரொகிராதில் ஒழுங்கை நிலைநாட்டச் சிறப்பு அதிகாரங்கள் அளிக்கப்பட்டு, எல்லா சிவில், இராணுவ அதிகார அமைப்புகளுக்கும் முழுநிறைத் தளபதியாக நான் நியமிக்கப்பட்டிருக்கிறேன்....''

* * *

''இடைக்கால அரசாங்கம் எனக்கு அளித்திருக்கும் அதிகாரங்களுக்கு ஏற்ப, பெத்ரொகிராது இராணுவ மாவட்டத்தின் தளவாய்க்குரிய பொறுப்புகளிலிருந்து கர்னல் கியோர்கி பல்க்கோவ்னிக்கவை விடுவித்து விலக்குகிறேன்....''

* * *

**தேசமக்களுக்கு வேண்டுகோள், துணைப் பிரதமர் கனவாலவ் கையொப்பமிட்டது** நவம்பர் 7:

''குடி மக்களே! தாயகத்தையும் குடியரசையும் உங்கள் சுதந்திரத்தையும் பாதுகாத்திடுங்கள்! மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரே அரசாங்க ஆட்சியதிகாரமாகிய இடைக்கால அரசாங்கத்துக்கு எதிராய் வெறியர்கள் கலகம் புரிகிறார்கள்....

''இடைக்கால அரசாங்கத்தின் உறுப்பினர்கள் தமது கடமையை நிறைவேற்றுகிறார்கள், தமது பணியிடத்தில் இருந்து தொடர்ந்து பணியாற்றுகிறார்கள்—தாய்நாட்டின் நன்மைக்காக, ஒழுங்கை மீண்டும் நிலைநாட்டுவதற்காக, ருஷ்

யாவினது, அனைத்து ருஷ்யாவின் மக்களது வருங்கால அரசுரிமை அதிபதியாகிய அரசியல் நிர்ணயச் சபையைக் கூட்டுவதற்காக....

''குடிமக்களே, நீங்கள் இடைக்கால அரசாங்கத்துக்கு ஆதரவளிக்க வேண்டும். அதன் ஆட்சியதிகாரத்தைப் பலப் படுத்த வேண்டும். இந்த வெறியர்களை நீங்கள் எதிர்க்க வேண்டும்; சுதந்திரத்தின், ஒழுங்கின் பகைவர்கள் எல்லோ ரும், ஜார் ஆட்சியின் ஆதரவாளர்கள் எல்லோரும் இந்த வெறியர்களுடன் சேர்ந்து கொண்டுவிட்டார்கள், அரசியல் நிர்ணயச் சபையை முறியடித்து, புரட்சியின் வெற்றிகள் யாவற்றையும் நமது அருமைத் தாயகத்தின் எதிர்காலத் தையும் அழித்திடும் பொருட்டு....

''குடி மக்களே! இடைக்கால அரசாங்கத்தைச் சுற்றி ஒன்றுதிரளுங்கள், அதன் தற்காலிக ஆட்சியதிகாரத்தைப் பாதுகாப்பதற்காக, ஒழுங்கின் பெயரில், அனைத்து மக்களின் இன்ப வாழ்வின் பெயரில்....''

* * *

**இடைக்கால அரசாங்கத்தின் பிரகடனம்.**

''...இடைக்கால அரசாங்கம் வீழ்த்தப்பட்டுவிட்டதாக பெத்ரொகிராது சோவியத்து பறைசாற்றியிருக்கிறது; அர சாங்க ஆட்சியதிகாரம் தன்னிடம் ஒப்படைக்கப்பட வேண் டும் என்று அது கோரியிருக்கிறது, இல்லையேல் பெத்ரொ பாவ்லொவ்ஸ்கயா கோட்டையின் பீரங்கி கொண்டும், நேவாவில் நங்கூரமிட்டிருக்கும் **அரோரா** போர்க் கப்பலின் பீரங்கி கொண்டும் குளிர்கால அரண்மனை மீது குண்டு வீசப் படுமென்று அச்சுறுத்துகிறது.

''அரசாங்கம் தனது அதிகாரத்தை அரசியல் நிர்ணயச் சபையிடம் மட்டுமே சரணடைக்க முடியும். ஆகவே அர சாங்கம் பணியக் கூடாது என்றும், மக்களிடமிருந்தும் சேனை யிடமிருந்தும் தனக்கு உதவி கோருவதென்றும் தீர்மானம் செய்துள்ளது. இராணுவப் பொதுத் தலைமை அலுவலர் களுக்குத் தந்தி அனுப்பப்பட்டிருக்கிறது. வலுமிக்க படைப் பிரிவு ஒன்றை அனுப்பி வைப்பதாக அவர்களிடமிருந்து பதில் வந்திருக்கிறது....

''உள்நாட்டில் கலகத்தை உண்டாக்குவதற்காகப் போல்ஷிவிக்குகள் செய்து வரும் பொறுப்பற்ற முயற்சிகளைச் சேனையும் மக்களும் நிராகரிப்பார்களாக....''

காலை சுமார் 9 மணிக்குக் கேரென்ஸ்கி போர்முனைக்குப் புறப்பட்டுச் சென்றார்....*

மாலை நெருங்கியதும் இரண்டு படையாட்கள் இராணுவத் தலைமை அலுவலர்களது கட்டடத்தில் மிதிவண்டிகளில் வந்திறங்கி, பெத்ரொபாவ்லொவ்ஸ்கயா கோட்டையிலிருந்த காவற் படையினரின் பிரதிநிதிகளாகத் தம்மை அறிவித்துக் கொண்டனர். தலைமை அலுவலர்களது கூட்ட அறைக்குள் இருவரும் நுழைந்த போது, அங்கே கீஷ்கின், ருத்தென்பேர்க், பல்ச்சீன்ஸ்கி, ஜெனரல் பக்ரத்தூனி, கர்னல் பரடியேலவ், கோமகன் தல்ஸ்தோய் ஆகியோர் கூடியிருந்தார்கள். இராணுவத் தலைமை அலுவலர்கள் உடனே சரணடைந்து விட வேண்டுமென்று படையாட்கள் இருவரும் கோரினர், இல்லையேல் இராணுவத் தலைமையகத்தின் மீது பீரங்கித் தாக்குதல் நடத்தப்படும் என்று அறிவித்தனர்.... மிரண்டு போய் இரண்டுக் கலந்தாய்வுக் கூட்டங்கள் நடத்திய பின் தலைமை அலுவலர்கள் அங்கிருந்து பின்வாங்கி குளிர்கால அரண்மனைக்குச் சென்றுவிடவே, இராணுவத் தலைமையகம் செங்காவலர்களால் பிடித்துக் கொள்ளப்பட்டது....

பிற்பகலின் முடிவில் போல்ஷிவிக்குக் கவச மோட்டார்கள் சில அரண்மனைச் சதுக்கத்தில் ரோந்து சுற்றி வந்தன, சோவியத்துப் படையாட்கள் யூன்கெர்களுடன் பேச்சுவார்த்தைகள் நடத்த முயற்சி செய்தனர், இம்முயற்சி வெற்றி பெறவில்லை....

மாலை சுமார் 7 மணிக்குக் குளிர்கால அரண்மனையின் மீது பீரங்கிகள் குண்டுகளைச் சுட ஆரம்பித்தன....

மாலை 10 மணிக்கு மூன்று பக்கங்களிலிருந்து பீரங்கித் தாக்குதல் ஆரம்பமாயிற்று. மிகப் பெரும்பாலான குண்டுகள் வெற்றுக் குண்டுகள், மூன்று சிறு தெறிகுண்டுத் துண்டுகள் மட்டுமே அரண்மனையின் அலங்கார முகப்பில் பட்டன....

* கேரென்ஸ்கி, தாம் வரும்படி அழைத்திருந்த படைகளைச் ''சந்திப்பதற்காக'' காலை 11.30 மணிக்குப் பெத்ரொகிராதிலிருந்து புறப்பட்டுச் சென்றார்.—[பதிப்பாசிரியர்.]

## 2.

### கேரென்ஸ்கியின் ஓட்டம்

நவம்பர் 7 காலையில் பெத்ரொகிராதிலிருந்து புறப் பட்டு, காரில் காத்சினு வந்தடைந்த கேரென்ஸ்கி தனிர யில் வண்டி ஒன்று தமக்கு வேண்டுமெனக் கோரினர். மாலை நெருங்கியதும் அவர் பிஸ்கோவ் மாநிலத்தில் ஓஸ்திரொ வுக்கு வந்து சேர்ந்தார். மறுநாள் காலையில் வட்டாரத் தொழிலாளர்கள், படையாட்கள் பிரதிநிதிகளது சோவியத் தின் சிறப்புக் கூட்டம் நடைபெற்றது, கசாக்குப் பிரதிநிதி களும் இதில் கலந்து கொண்டனர்—ஓஸ்திரொவில் 6,000 கசாக்குப் படையினர் இருந்தனர்.

கேரென்ஸ்கி இந்தக் கூட்டத்தில் பேசினர், போல்ஷி விக்குகளுக்கு எதிராய் உதவி அளிக்கும்படி அவர் வேண்டி ஞர். அனேகமாய் முழு அளவுக்குக் கசாக்குகளுக்கே அவர் இந்த வேண்டுகோளை விடுத்தார். படையாட்கள் பிரதிநிதி கள் ஆட்சேபித்தார்கள்.

''நீங்கள் ஏன் இங்கே வந்தீர்கள்?'' என்று சில குரல்கள் கூச்சலிட்டன. ''போல்ஷிவிக்குகளுடைய கலகத்தை நசுக்கு வதற்காக கசாக்குகளின் உதவி வேண்டுமென்று கேட்பதற் காக'' என்று கேரென்ஸ்கி பதிலளித்தார். உடனே பலத்த ஆட்சேபங்கள் எழுந்தன, கேரென்ஸ்கி மேலும் தொடர்ந்து பேசிய போது இந்த ஆட்சேபக் கூச்சல்கள் மேலும் கடுமை யாகின. ''கர்னீலவ் முயற்சியை நான் முறியடித்தேன், போல் ஷிவிக்குகளுடைய முயற்சியையும் முறியடிப்பேன்'' என்று அவர் கூறிச் சென்றுர். கூச்சல்கள் காதடைக்கும்படி ஆகி, கேரென்ஸ்கி பேச்சுமேடையை விட்டு அகல வேண்டிய தாயிற்று....

படையாள் பிரதிநிதிகளும் உஸ்ஸுரி கசாக்குகளும் கேரென்ஸ்கியைக் கைது செய்வதெனத் தீர்மானித்தனர், ஆனுல் தோன் கசாக்குகள் அவர்களைத் தடுத்துக் கேரென்ஸ் கியை ரயில் மூலம் அங்கிருந்து அனுப்பி வைத்தனர்.... அன்று பகலில் நிறுவப்பட்ட புரட்சி இராணுவக் கமிட்டி

பிஸ்கோவின் நகரக் காவற் படைக்குத் தகவல் தெரிவிக்க முயன்றது, ஆனுல் தொலேபேசி, தந்தித் தொடர்புகள் துண்டிக்கப்பட்டிருந்தன....

கேரென்ஸ்கி பிஸ்கோவ் போய்ச் சேரவில்லே. தலேநகருக்கு எதிராய்ப் படைகள் அனுப்பப்படுவதைத் தடுப்பதற்காகப் புரட்சிகரப் படையாட்கள் ரயில் பாதையைத் துண்டித்திருந்தார்கள். நவம்பர் 8ல் கார் மூலம் இரவில் அவர் லூகா நகரம் போய்ச் சேர்ந்தார், அங்கு நிறுத்தப்பட்டிருந்த சாவுப் பட்டாளங்கள் அவருக்குச் சிறப்பான வரவேற்பு அளித்தன.

மறுநாள் அவர் தென்மேற்குப் போர்முனேக்கு ரயிலில் சென்று சேனேத் தலேமையகத்தில் சேனேக் கமிட்டியைச் சந்தித்தார். ஆனுல் ஐந்தாவது சேனே போல்ஷிவிக்குகளுடைய வெற்றியைப் பற்றிக் கேட்டு கட்டுக்கடங்காத மகிழ்ச்சி கொண்டிருந்தது. சேனேக் கமிட்டியால் கேரென்ஸ்கியிற்கு ஆதரவாக ஒன்றும் செய்ய முடியவில்லே.

அங்கிருந்து அவர் மொகிலேவுக்கு இராணுவத் தலேமை அலுவலரகத்துக்குச் சென்று போர்முனேயின் வெவ்வேறு பகுதிகளிலிருந்தும் பத்து ரெஜிமெண்ட்டுகளே பெத்ரொகிராதுக்கு எதிராகச் செல்லும்படி கட்டளேயிட்டார். படையாட்கள் அனேகமாய் ஒருமனதாய் மறுத்துவிட்டனர், புறப்பட்டுச் சென்ற சில ரெஜிமெண்ட்டுகள் நடுவழியில் நின்றுவிட்டன. சுமார் ஐந்தாயிரம் கசாக்குகள் மட்டும்தான் கேரென்ஸ்கியைப் பின்தொடர்ந்து சென்றனர்....

3.

## குளிர்கால அரண்மனேயில் நடைபெற்ற கொள்ளே

குளிர்கால அரண்மனேயில் கொள்ளே ஏதும் நடைபெறவில்லே என்பதாக நான் கூறவில்லே. குளிர்கால அரண்மனே பிடிபட்டதற்குப் பிற்பாடும் அதற்கு முன்பும் கணிச அளவில் களவாடல் நடைபெற்றது. ஆனுல் 50,00,00,000 ரூபிள் பெறுமான அரும்பெரும் பொருட்கள் சூறையாடப்பட்ட

தாக சோஷலிஸ்டு-புரட்சியாளர்களது நரோத் செய்தியேடும் நகர டூமாவின் உறுப்பினர்களும் கூறியதானது அபாண்டமான மிகைப்பாடாகும்.

அரண்மனேயின் மிக முக்கிய கலேச் செல்வங்கள்—ஓவியங்களும் சிற்பங்களும் சித்திரத் திரைச்சீலேகளும் அரிய பீங்கான்களும் போர்வாட்களும்—செப்டம்பர் மாதத்திலேயே மாஸ்கோவுக்கு எடுத்துச் செல்லப்பட்டுவிட்டன; போல்ஷிவிக்குப் படையினர் கிரெம்ளினேப் பிடித்துப் பத்து நாட்களுக்குப் பிற்பாடு அங்கே ஜார் அரண்மனேயின் நிலவறைகளில் இவை பத்திரமாகவே இருந்து வந்தன. நேரடியாக நான் இதற்குச் சாட்சியம் கூற முடியும்....

ஆயினும் தனிநபர்கள், முக்கியமாய்ப் பொதுமக்களேச் சேர்ந்தவர்கள், குளிர்கால அரண்மனே பிடிபட்டபின் சில நாட்களுக்கு அதனுள் தங்குதடையின்றி சுற்றிவர அனுமதிக்கப்பட்டனர்; இவர்கள் சாப்பாட்டு மேசை வெள்ளிச் சாமான்கள், கடிகாரங்கள், படுக்கைகள், கண்ணுடிகள், விலே உயர்ந்த பீங்கான ஜாடிகள், ரத்தினக் கற்கள் ஆகிய சுமார் 50,000 டாலர் பெறுமானமுள்ள பொருட்களே எடுத்துச் சென்றுவிட்டார்கள்.

இப்படித் திருடப்பட்ட பொருட்களேக் கண்டுபிடித்து மீட்பதற்காக, கலேஞர்களும் தொல்பொருள் ஆராய்ச்சியாளர்களும் அடங்கிய தனி ஆணேக் குழு ஒன்றை உடனே சோவியத்து அரசாங்கம் அமைத்தது. நவம்பர் 14ல் இரு பிரகடனங்கள் வெளியிடப்பட்டன:

**பெத்ரொகிராது நகரவாசிகளே!**

''நகர மக்கள் எல்லார்க்கும் அவசர வேண்டுகோள் விடுக்கிறேம்; நவம்பர் 7-8 இரவில் குளிர்கால அரண்மனேயிலிருந்து திருடப்பட்ட பொருள்களில் முடியுமானவற்றைத் தேடிக் கண்டுபிடித்து, அவற்றைக் குளிர்கால அரண்மனேயின் தளவாய்க்கு அனுப்பி வைக்க எல்லா முயற்சிகளேயும் மேற்கொள்ளும்படிக் கேட்டுக் கொள்கிறேம்.

''திருடப்பட்ட பொருள்களேப் பெற்றுக் கொள்வோரும், தொல்பொருள் சேகரிப்பாளர்களும், இம்மாதிரிப்

பொருள்களை மறைத்து வைத்திருப்பவர்களாக நிரூபிக்கப் படும் எல்லாரும் சட்டப்படி பொறுப்பானவர்களாகக் கொள்ளப்படுவர், கடுமையாகத் தண்டிக்கப்படுவர்.

**தொல்பொருட் காட்சிக் கூடங்கள், கலைச் சேகரிப்பு களின் பாதுகாப்புக் கமிசார்கள்,**
*ஜி. யத்மானவ், பி. மண்டெல்பாவும்.''*

* * *

**''படையணி, கப்பற் படைக் கமிட்டிகளுக்கு**

''ருஷ்ய மக்களுக்குரிய பிறப்புரிமைச் சொத்தாகிய குளிர்கால அரண்மனையிலிருந்து நவம்பர் 7-8 இரவில் உயர்மதிப்புள்ள கலைப் பொருட்கள் களவாடிச் செல்லப் பட்டன.

''திருடப்பட்ட இப்பொருட்கள் குளிர்கால அரண்மனை யிடம் திரும்பி வந்து சேரும் பொருட்டு எல்லா முயற்சிகளை யும் மேற்கொள்ளும்படி அவசர வேண்டுகோள் விடுக்கி றோம்.

**கமிசார்கள்...**

*ஜி. யத்மானவ், பி. மண்டெல்பாவும்.''*

களவாடப்பட்டவற்றில் சுமார் ஒரு பாதி மீட்கப்பட் டது, இதில் ஒரு பகுதி ருஷ்யாவிலிருந்து வெளியே சென்ற வெளிநாட்டவர்களது பெட்டிகளிலிருந்து எடுக்கப்பட்ட தாகும்.

ஸ்மோல்னியின் ஆலோசனைக்கு ஏற்ப நடத்தப்பட்ட கலைஞர்கள், தொல்பொருள் ஆராய்ச்சியாளர்களது மாநாடு குளிர்கால அரண்மனையின் பொக்கிஷங்களது பட்டியலைத் தயாரிப்பதற்காக ஓர் ஆணைக் குழுவினை நியமித்தது. குளிர் கால அரண்மனையும், மற்றும் பெத்ரொகிராதின் கலைப் பொருள் சேகரிப்புகள், அரசுத் தொல்பொருட் கூடங்கள் ஆகிய யாவும் இந்த ஆணைக் குழுவின் முழுப் பொறுப்பில் விடப்பட்டன. நவம்பர் 16ஆம் நாளன்று குளிர்கால அரண்மனை பொது மக்களுக்கு மூடப்பட்டு, அரண்மனையின் பொருட் பட்டியல் தயாரிக்கப் பட்டது....

நவம்பர் கடைசி வாரத்தில் மக்கள் கமிசார் அவை பிறப்பித்த அரசாணையின்படி குளிர்கால அரண்மனையின் பெயர் "மக்கள் தொல்பொருட் கூடம்'' என்பதாக மாற்றப்பட்டு, கலை-தொலைபொருள் ஆணைக் குழுவினிடம் ஒப்படைக்கப்பட்டது; இனி இதனுள் அரசாங்கச் செயற்பாடுகள் யாவற்றுக்கும் தடையிடப்படுவதாக அறிவிக்கப்பட்டது....

## 4.

### மகளிர் பட்டாளம் மானபங்கப்படுத்தப்பட்டது

குளிர்கால அரண்மனையைப் பாதுகாப்பதற்காக அதனுள் இருந்த மகளிர் பட்டாளத்துக்கு, அரண்மனை பிடிக்கப்பட்டதும் நேர்ந்த கதி குறித்து போல்ஷவிக்கு-எதிர்ப்புப் பத்திரிகைகளில் பரபரப்பூட்டும்படியான பல வகைக் கதைகளும் வெளியிடப்பட்டன, நகர டூமாவிலும் கூறப்பட்டன. பெண் படையாட்கள் சிலர் மாடி சன்னல்களிலிருந்து கீழே தெருவிலே தூக்கியெறியப் பட்டதாகவும், ஏனையோரில் மிகப் பலரும் பலவந்தம் செய்யப்பட்டதாகவும், தாம் அனுபவிக்க நேர்ந்த கொடுமைகள் தாங்க முடியாமற் போய் பலரும் தற்கொலை புரிந்து கொண்டதாகவும் கூறப்பட்டது.

இது குறித்து விசாரணை புரிவதற்காக நகர டூமா ஓர் ஆணை குழுவை நியமித்தது. மகளிர் பட்டாளத்தின் தலைமையகம் இருந்த லெவஷோவவுக்குச் சென்று விசரணை நடத்தி விட்டு ஆணைக் குழுவினர் நவம்பர் 16ல் திரும்பி வந்தார்கள். திருமதி திர்க்கோவா, இந்தப் பெண்கள் முதலில் பாவ்லவ்ஸ்கி ரெஜிமெண்ட்டின் கொட்டடிகளுக்குக் கொண்டு போகப்பட்டதாகவும், அங்கே இவர்களில் சிலர் சரிவர நடத்தப்படவில்லை என்றும், ஆனால் தற்போது மிகப் பெரும் பகுதியோர் லெவஷோவவில் இருப்பதாகவும், ஏனையோர் சிதறுண்டு நகரில் தனியார் வீடுகளில் தங்கியிருப்பதாகவும் அறிவித்தார். ஆணைக் குழுவின் மற்ெருரு உறுப்பினரான டாக்டர் மண்டெல்பாவும் இந்தப் பெண்களில் யாரும் குளிர்கால அரண்மனையின் சன்னல்களிலிருந்து எறியப்படவில்லை, யாருக்கும் காயம் ஏற்படவில்லை என்றும், மூன்று பேர் பல

வந்தம் செய்யப்பட்டதாகவும், ஒரு பெண் தான் ''தனது இலட்சியங்களில் ஏமாற்றமடைந்துவிட்டதாகக்'' குறிப் பெழுது வைத்துவிட்டு தற்கொலை புரிந்து கொண்டதாகவும் சிடுசிடுப்பு தொனிக்க, சாட்சியம் கூறினர்.

இந்தப் பெண்களின் வேண்டுகோளுக்கு இணங்க புரட்சி இராணுவக் கமிட்டி நவம்பர் 21ல் அதிகார பூர்வமான முறையில் மகளிர் பட்டாளத்தைக் கலைத்தது. இராணுவ சேவையிலிருந்து விடுபட்டு இவர்கள் சாதாரண உடுப்புகள் உடுத்திக் கொள்ளலாயினர்.

லூயிஸா பிராயன்ட்டின் ''ருஷ்யாவில் ஆறு செம்மாதங்கள்'' என்ற புத்தகத்தில் இந்தப் பெண் படையாட்கள் அந் நாட்களில் எப்படி இருந்தார்கள் என்பது குறித்து சுவை யான விளக்கம் தரப்படுகிறது.

## அத்தியாயம் 5இன் அனுபந்தம்

### 1.

### வேண்டுகோள்களும் பிரகடனங்களும்

**புரட்சி இராணுவக் கமிட்டியிடமிருந்து, நவம்பர் 8:**

''எல்லாச் சேனைக் கமிட்டிகளுக்கும் படையாட்கள் பிரதிநிதிகளது சோவியத்துகள் யாவற்றுக்கும்.

''புரட்சிக்கும் மக்களுக்கும் எதிராய் எழுந்த கேரென்ஸ்கி அரசாங்கத்தை பெத்ரொகிராது நகரக் காவற் படையினர் வீழ்த்திவிட்டனர்.... இந்தச் செய்தியைப் போர்முனைக்கும் நாட்டுக்கும் அனுப்பி வைக்கும் புரட்சி இராணுவக் கமிட்டியானது, படையதிகாரிகளது நடத்தையை விழிப்புடன் கவனித்து வருமாறு எல்லாப் படையாட்களையும் கேட்டுக் கொள்கிறது. ஒளிவுமறைவின்றிப் பகிரங்கமாகப் புரட்சிக்கு ஆதரவு தெரிவிக்காத படையதிகாரிகள் பகைவர்களாகக் கருதப்பட்டு உடனே கைது செய்யப்பட வேண்டும்.

''புதிய அரசாங்கத்தின் வேலைத்திட்டம் குறித்து பெத் ரொகிராது சோவியத்து அளித்திடும் விளக்கம் வருமாறு:

பொதுவான ஜனநாயக சமாதானத்துக்காக உடனடியாக முன்மொழிவது, பெரிய நிலப்பிரபுக்களுடைய பண்ணைகளை உடனடியாக விவசாயிகளுக்கு மாற்றுவது, அனைத்து ஆட்சி யதிகாரத்தையும் சோவியத்துகளுக்கு மாற்றுவது, நேர்மை யான முறையில் அரசியல் நிர்ணயச் சபையைக் கூட்டுவது. சந்தேகத்துக்குரிய மனோபாவமுடைத்த படைகள் பெத்ரொ கிராதுக்கு அனுப்பி வைக்கப்படுவதற்கு மக்களது புரட்சி கரச் சேனை அனுமதிக்கலாகாது. வாதங்களைக் கொண்டும், நயம்படக் கூறி அறிவுறுத்தும் முறைகளைக் கொண்டும் செயல்படுங்கள்—ஆனால் இவை தோல்வியுறுமாயின், படை கள் புறப்பட்டுச் செல்வதை வலுக்கட்டாய பலாத்கார முறையில் தடுத்து நிறுத்துங்கள்.

''இராணுவச் சேவையின் ஒவ்வொரு கிளையிலுமான எல்லா இராணுவப் பிரிவோருக்கும் இந்த உத்தரவு உடனே படித்துக் காட்டப்பட வேண்டும். படையாள் பெருந் திரளி னருக்கு இந்த உத்தரவு தெரியாதபடி மறைப்பவர் யாராய் இருப்பினும்.... புரட்சிக்கு எதிராய்க் கடுங் குற்றம் புரிகிற வர் ஆவார், புரட்சிகர சட்டத்தின் முழுக் கடுமையுடன் அவர் தண்டிக்கப்படுவார்.

''படையாட்களே! சமாதானத்துக்காக, ரொட்டிக்காக, நிலத்துக்காக, மக்கள் பெருந் திரளினரது அரசாங்கத்துக் காக!''

* * *

''போர்முனையிலும் உட்பகுதிகளிலுமுள்ள சேனை, போரணி, படைத் தொகுதி, படையணி, படைப் பிரிவுக் கமிட்டிகள் யாவற்றுக்கும்; தொழிலாளர்கள், படையாட்கள் விவசாயிகள் பிரதிநிதிகளது சோவியத்துகள் யாவற்றுக்கும்.

''படையாட்களே, புரட்சிகர படையதிகாரிகளே!

''புரட்சி இராணுவக் கமிட்டி, பெரும்பாலான தொழி லாளர்கள், படையாட்கள், விவசாயிகளது உடன்பாட்டுடன் பிறப்பித்திருக்கும் ஆணை என்னவெனில், ஜெனரல் கர்னீல வும் அவரது சதிக்கு உடந்தையாக இருந்தவர்கள் எல்லோ ரும் உடனே பெத்ரோகிராதுக்குக் கொண்டுவரப்பட்டு பெத்ரொபாவ்லொவ்ஸ்கயா கோட்டையில் அடைக்கப்பட

வேண்டும், புரட்சி இராணுவ நீதி மன்றத்தின் முன்னுல் விசாரணைக்குக் கொண்டுவரப்பட வேண்டும்....

''இந்த ஆணையின் நிறைவேற்றத்தை எதிர்ப்போர் எல்லோரும் புரட்சியின் துரோகிகளாவர் என்றும், இவர்களது உத்தரவுகள் செல்லத்தக்கவை அல்ல என்றும் இதன் மூலம் புரட்சி இராணுவக் கமிட்டி அறிவிக்கிறது.''

**தொழிலாளர்கள், படையாட்கள் பிரதிநிதிகளது பெத்ரோகிராது சோவியத்துடன் இணைந்த புரட்சி இராணுவக் கமிட்டி.**

* * *

''தொழிலாளர்கள், படையாட்கள், விவசாயிகள் பிரதிநிதிகளது மாநில, மாவட்ட சோவியத்துகள் யாவற்றுக்கும்.

''நிலக் கமிட்டிகளின் கைது செய்யப்பட்ட உறுப்பினர்கள் எல்லோரும், சோவியத்துகளின் அனைத்து ருஷ்யக் காங்கிரசினது தீர்மானத்தின்படி உடனடியாக விடுதலை செய்யப்படுகிருர்கள். அவர்களைக் கைதுசெய்த கமிசார்கள் கைது செய்யப்பட வேண்டும்.

''இக்கணம் முதல் அனைத்து ஆட்சியதிகாரமும் சோவியத்துகளுக்கே உரியதாகும். இடைக்கால அரசாங்கத்தின் கமிசார்கள் விலக்கப்படுகிருர்கள். பல்வேறு வட்டார சோவியத்துகளது தலைவர்களும் புரட்சி அரசாங்கத்துடன் நேரடி உறவுகள் கொள்ளும்படி அழைக்கப்படுகிருர்கள்.''

**புரட்சி இராணுவக் கமிட்டி.**

## 2.

## நகர டூமாவின் கண்டனம்

''மிகவும் ஜனநாயகமான அடிப்படையில் தேர்ந்தெடுக்கப்பட்ட பெத்ரோகிராது நகர மத்திய டூமா, மிகவும் அதிகமான சீர்குலைவுக்குரிய ஒரு நேரத்தில் நகராட்சி விவகாரங்களின் நிர்வாகத்துக்கும் உணவு வழங்கீட்டுக்குமான பொறுப்பை ஏற்றுக் கொண்டது. இத்தருணத்தில் போல்ஷிவிக்குக்

கட்சி, அரசியல் நிர்ணயச் சபைத் தேர்தல்களுக்கு மூன்றே வாரங்கள் முன்னதாக, புறப் பகைவனது அபாயத்தையும் கருதாமல், சட்டப்படி அமைந்த புரட்சிகரமான ஒரே அரசாங்கத்தை ஆயுத பலங் கொண்டு அகற்றிவிட்டு, நகரத் தன்னாட்சியினைத் தனது கமிசார்களுக்கும் சட்ட விரோதமான தனது அதிகாரத்துக்கும் பணியும்படிக் கோருகிறது, அதன் உரிமைகளையும் சுயேச்சையையும் ஒழித்திட எத்தனிக்கிறது.

''கொடுஞ் சோதனைக்குரிய இந்தச் சோக தருணத்தில், பெத்ரொகிராது நகர டூமா தனது தொகுதியோருக்கும், அனைத்து ருஷ்யாவுக்கும் முன்னால் பலக்கக் கூறுகிறது: தனது உரிமைகளும் தனது சுயேச்சையும் எவ்விதத்திலும் மீறப்படுவதற்குத் தான் பணிந்திடப் போவதில்லை, தலைநகரின் மக்களது சித்தத்தால் அமர்த்தப்பட்ட பொறுப்பு வாய்ந்த தனது பதவியில் தொடர்ந்து நின்று பணி புரிவேனெனப் பறைசாற்றுகிறது.

''மக்களது தன்னாட்சியின் சுயேச்சை நிலையும், மீறப்பட முடியாத அதன் உரிமைகளும் ருஷ்யப் புரட்சியால் கிட்டிய மிகப் பெரிய வெற்றிகளாகும், இவற்றைக் காப்பாற்ற ஒன்று திரளும்படி ருஷ்யக் குடியரசின் எல்லா டூமாக்களுக்கும் ஸேம்ஸ்த்வொக்களுக்கும் பெத்ரொகிராது நகரின் மத்திய டூமா வேண்டுகோள் விடுக்கிறது.''

## 3.

## நில அரசாணை—விவசாயிகளது ''நக்காஸ்''

நிலப் பிரச்சினை அனைத்து மக்களது அரசியல் நிர்ணயச் சபையால் மட்டுமே நிரந்தரமாய்த் தீர்க்கப்பட முடியும்.

நிலப் பிரச்சினைக்கு மிகவும் நியாயமான தீர்வு பின்வருமாறு அமைந்திருக்க வேண்டும்:

**1. தனியார் நிலவுடைமை உரிமை என்றென்றைக்குமாய் ஒழிக்கப்படுகிறது.** நிலம் விற்கப்படுதலோ, வாங்கப்படுதலோ, குத்தகைக்கு விடப்படுதலோ, அடமானம்* வைக்கப்படுதலோ, வேறு எந்த வழியிலும் பராதீனமாக்கப்படுதலோ

கூடாது.''எல்லா நிலங்களும்,அரசினுடையவையும்,அரச குடும்பத்தினுடையவையும், மடாலத்தினுடையவையும், மதச் சபையினுடையவையும், அனுபவ பாத்தியத்துக்குரியனவும், நீங்காச் சாசுவத உரிமையாக்கப்பட்டவையும், தனியுடைமையானவையும், பொதுத் துறைக்குரியவையும், விவசாயிகளுடையவையும், பிறவும் இழப்பீடின்றி பறிமுதல் செய்யப்பட்டு, மக்கள் அனைவருக்குமாகிய சொத்தாக்கப்பட்டு, உழுது பயிரிடுவோரின் கைக்கு மாற்றப்படுகிறது.

சொத்துரிமையிலான இந்த சமுதாயப் புரட்சியால் இழப்புக்கு உள்ளாவோர் புதிய வாழ்க்கை நிலைமைகளுக்குத் தம்மைத் தகவமைத்துக் கொள்வதற்கு அவசியமான காலத்துக்குப் பொதுக் காப்பாதரவுக்கு உரிமை பெற்றவர்களாவர்.

2. தரைக்கு அடியிலுள்ள எல்லா வளங்களும்—உலோகக் கனிகளும் எண்ணெயும் நிலக்கரியும் உப்பும் பிறவும்—மற்றும் தேசிய முக்கியத்துவமுள்ள எல்லாக் காடுகளும் நீர் வளங்களும் முற்றிலும் அரசுக்குரிய சொத்தாக்கப்படுகிறது. எல்லாச் சிறு அருவிகளும் ஏரிகளும் காடுகளும் கிராமச் சமுதாயங்களது கைக்கு மாற்றப்பட்டு, வட்டார ஆட்சி மன்றங்களால் நிர்வகிக்கப்படும்.

3. உயர்தர விஞ்ஞான முறையில் சாகுபடி செய்யப்படும் நிலங்கள் யாவும்—கனிச் சோலைகள், தோட்டக் காடுகள், விதை நிலங்கள், நாற்றங்கால்கள், சேமப் பண்ணைகள் முதலானவை — பங்கிடப்படலாகாது; இவை முன்மாதிரிப் பண்ணைகளாய் மாற்றப்பட்டு, இவற்றின் பரிமாணத்துக்கும் முக்கியத்துவத்துக்கும் ஏற்ப அரசு அல்லது கிராமச் சமுதாயங்களின் கைக்கு மாற்றப்படுகின்றன.

நகரங்களிலும் கிராமங்களிலுமுள்ள வீட்டுக் கொல்லை நிலங்கள், அவற்றின் கனி, காய்கறித் தோட்டங்களுடன், அவற்றின் தற்போதைய உடைமையாளர்களிடமே தொடர்ந்து இருந்து வரும்; இந்த நிலங்களின் பரிமாணமும் இவற்றின் உபயோகத்துக்காகச் செலுத்தப்பட வேண்டிய வரி விகிதங்களும் சட்டத்தால் நிர்ணயம் செய்யப்படும்.

4. குதிரைப் பண்ணைகளும், அரசாங்க, மற்றும் தனியார் ஜாதிக் கால்நடை வளர்ப்புப் பண்ணைகளும் கோழி,

வாத்துப் பண்ணைகளும் இன்ன பிறவும் பறிமுதல் செய்யப் பட்டு, அனைத்த மக்களின் சொத்தாக்கப்பட்டு, இப்பண்ணை களின் பரிமாணத்துக்கும் முக்கியத்துவத்துக்கும் ஏற்ப அரசு, அல்லது கிராமச் சமுதாயத்தின் கைக்கு மாற்றப்படுகின்றன.

மேற்கூறியவற்றுக்கான இழப்பீடு குறித்த எல்லாப் பிரச் சினைகளும் அரசியல் நிர்ணயச் சபையின் அதிகாரத்துக்கு உட் பட்டவை.

5. பறிமுதல் செய்யப்படும் நிலங்களைச் சேர்ந்தவை யாகப் பட்டியலிடப்பட்ட உழுபடைக் கருவிகளும், இயந் திரங்களும், கால்நடைகளும் அவற்றின் பரிமாணத்துக்கும் முக்கியத்துவத்துக்கும் ஏற்ப அரசு அல்லது கிராமச் சமு தாயத்துக்கு மாற்றப்பட வேண்டும், இவற்றுக்காக இழப் பீடு கொடுக்கப்படலாகாது.

சொற்ப அளவே நிலமுடைய விவசாயிகளது உழுபடைக் கருவிகளும் கால்நடைகளும் பரிமுதல் செய்யப்படக் கூடாது.

6. நிலத்தை உபயோகித்துக் கொள்வதற்கான உரிமை, தமது சொந்த உழைப்பைக் கொண்டும், தமது குடும்பத் தாரின் துணை கொண்டும், அல்லது கூட்டு சேர்ந்தும் இந்நிலத் தைச் சாகுபடி செய்ய விரும்பும் குடிமக்கள் எல்லார்க்கும், ஆடவர், பெண்டிர் என்ற பேதமின்றி, தரப்பட வேண்டும். அவர்கள் இந்நிலத்தைச் சாகுபடி செய்யக் கூடியோராக இருக்கும் வரையில்தான் அவர்களுக்கு இவ்வுரிமை தரப்பட வேண்டும். கூலி உழைப்பை அமர்த்திக் கொள்ளுதல் அனு மதிக்கப்படலாகாது.

கிராமச் சமுதாயத்தின் உறுப்பினர் எவரும் இரண்டு ஆண்டுகளுக்கு உட்பட்ட காலத்துக்குத் தற்காலிகமாய் வேலை ஆற்றல் இழந்து ஏலாதவராயின், அவர் மீண்டும் வேலை செய்யும் ஆற்றலுடையவராகும் வரையில் அவருடைய நிலத்தைக் கூட்டாகச் சாகுபடி செய்து அவருக்கு உதவ கிராமச் சமுதாயம் கடமைப்பட்டதாகும்.

முதிய வயது காரணமாகவோ, உடல் நலக் குறைவு கார ணமாகவோ நிரந்தரமாய் வேலை ஆற்றல் இழந்து ஏலாதோ ராகி, தாமே நிலத்தைச் சாகுபடி செய்ய முடியாமற் போன விவசாயிகள் இந்நிலத்தைத் திருப்பித் தந்துவிட வேண்டும், இந்நிலத்துக்குப் பதிலாக இவர்கள் அரசாங்கப் பென்ஷன் பெறுவார்கள்.

7. நிலத்தை உபயோகித்துக் கொள்வதற்கான உரிமை சமத்துவமாக்கப்பட வேண்டும் — அதாவது வட்டார நிலைமைகளுக்கும் உழைப்புத் தரத்துக்கும் அவரவரது தேவைகளுக்கும் ஏற்ப நிலம் பகிர்ந்தளிக்கப்படும்.

நிலத்தைப் பயன்படுத்திக் கொள்வதற்குரிய வடிவம் அந்தந்தக் கிராமம் அல்லது குடியேற்றம் தீர்மானித்துக் கொள்வதற்கு ஏற்ப, குடும்பச் சாகுபடி, தனிச் சாகுபடி, சமுதாயப் பொதுச் சாகுபடி, கூட்டுறவுச் சாகுபடி ஆகிய எதுவாகவும் இருக்கலாம்.

8. பறிமுதலுக்கு உள்ளாகும் நிலங்கள் பொதுவான மக்கள் நில நிதியைச் சேர்ந்தவையாகிவிடும். உழைப்பாளிகளிடையே இந்நிலங்களை வினியோகிக்கும் பொறுப்பு ஜனநாயகக் கிராம நிறுவனங்கள் முதல் மாநில மத்திய நிலையங்கள் வரையிலன வட்டார, மத்தியத் தன்னாட்சி மன்றங்களிடம் ஒப்படைக்கப்படும்.

இந்த நில நிதியானது மக்கள் தொகையின் பெருக்கத்துக்கும், பொருளுற்பத்தித் திறனின் அதிகரிப்புக்கும், கிராமப் பொருளாதாரத்தின் வளர்ச்சிக்கும் ஏற்ப காலத்துக்குக் காலம் மறுவினியோகம் செய்யப்படும்.

பிரித்தளிக்கப்படும் நிலங்களின் எல்லைகள் மாற்றப்படுகையில், ஆதியில் பிரித்தளிக்கப்பட்டதன் மையக் கூறு மாற்றமின்றி அப்படியே விடப்படும்.

கிராமச் சமுதாயத்தை விட்டுச் செல்லும் உறுப்பினர்களுடைய நிலம் நில நிதிக்குத் திரும்பி வந்து சேர்ந்துவிடும். விட்டுச் செல்லும் உறுப்பினர்களுடைய நெருங்கிய உறவினர்களுக்கு அல்லது இவ்வுறுப்பினர்கள் குறிப்பிட்டுச் செல்லும் நண்பர்களுக்கு இந்நிலங்களில் முன்னுரிமை தரப்படும்.

நில நிதிக்குத் திரும்பி வந்து சேரும் நிலங்களுக்கு உரமிடுவதற்காகவோ, அபிவிருத்தி செய்வதாகவோ பணம் செலவிடப்பட்டு, அது முழு அளவுக்குப் பயன்படுத்திக் கொள்ளப்படவில்லை எனில், அது பயன்படுத்தப்படாத அளவுக்கு ஈடு தரப்பட வேண்டும்.

சில வட்டாரங்களில் நில நிதியானது வட்டார மக்களது தேவைகளுக்குப் போதவில்லை எனில், உபரி மக்கள் தொகையினர் வெளியிடங்களுக்குக் குடியேற்றப்பட வேண்டும்.

இந்தக் குடிப் பெயர்ச்சிக்கு ஏற்பாடு செய்வதும், இதற்கு வேண்டிய செலவுக்கு வகை செய்வதும், குடி பெயருவோருக்கு வேண்டிய உழுபடைக் கருவிகளேயும் கால்நடைகளேயும் வழங்குவதும் அரசுக்கு உரிய பணியாகும்.

குடிப் பெயர்ச்சி பின்வரும் வரிசையில் செய்யப்பட வேண்டும்: முதலாவதாக, வெளியிடங்களுக்குக் குடி பெயர விரும்பும் நிலமில்லாத விவசாயிகள்; அடுத்து, விரும்பத்தகாதோராய் இருக்கும் உறுப்பினர்களும் துறந்தோடுவோரும்; முடிவில், உடன்பாட்டின் பேரில் சீட்டுக் குலுக்கித் தேர்வு செய்யப்படுவோர்.

ருஷ்யாவிலுள்ள வர்க்க உணர்வு படைத்த விவசாயிகளில் மிகப் பெருவாரியானோரின் முடிவான சித்தத்தை வெளியிடும் இந்த நக்காஸில் அடங்கியிருப்பவை யாவும் இடைக்காலச் சட்டமாய்ப் பிரகடனம் செய்யப்படுகிறது. அரசியல் நிர்ணயச் சபை கூட்டப்படும் வரையிலான இடைக்காலத்தில் கூடுமான அளவுக்கு உடனடியாகவும், விவசாயிகள் பிரதிநிதிகளது மாவட்ட சோவியத்துகள் நிர்ணயம் செய்வதற்கேற்ப குறிப்பிட்ட சில பிரிவுகள் படிப்படியாகவும் செயல் படுத்தப்படும்.

4.

## நிலமும் இராணுவத்தை விட்டுத் துறந்தோடியோரும்

சேனையை விட்டுத் துறந்து ஓடியவர்கள் நிலம் பெறுவதற்குரிய உரிமை குறித்து அரசாங்கம் தீர்மானிக்கும்படியான நிர்ப்பந்தம் எழவில்லை. யுத்தம் முடிவுற்று, சேனை கலேக்கப் பட்டதும், துறந்தோடியோர் பிரச்சினை தானுவே மறைந்து போயிற்று....

5.

## மக்கள் கமிசார் அவை

ஆரம்பத்தில் மக்கள் கமிசார் அவையானது முற்றிலும் போல்ஷிவிக்குகளேயே கொண்டிருந்தது. ஆனல் இந்த நிலேமைக்குப் போல்ஷிவிக்குகளே பொறுப்பெனச் சொல்ல முடி

யாது. நவம்பர் 8ல் அவர்கள் கமிசார் அவைப் பொறுப்பு களை இடதுசாரி சோஷலிஸ்டு-புரட்சியாளர் கட்சியின் உறுப் பினர்களுக்கும் அளிக்க முன்வந்தார்கள், ஆனால் இடதுசாரி சோஷலிஸ்டு-புரட்சியாளர்கள் மறுத்துவிட்டனர்.

## அத்தியாயம் 6இன் அனுபந்தம்

### 1.

### வேண்டுகோள்களும் கண்டன உரைகளும்

குடிமக்கள் எல்லோருக்கும், சோஷலிஸ்டு-புரட்சியாளர் கட்சியின் இராணுவ நிறுவனங்களுக்கும் வேண்டுகோள்.

''போல்ஷிவிக்குகளது புத்திகெட்ட முயற்சியானது படு தோல்வியுறும் தறுவாயில் உள்ளது, நகரக் காவற் படை யினர் அதிருப்தி தெரிவிக்கிறார்கள்.... அமைச்சகங்கள் செயலற்று முடங்கிக் கிடக்கின்றன, ரொட்டி கிடைக்கவில்லை. ஒருசில போல்ஷிவிக்குகளைத் தவிர ஏனைய எல்லாக் கட்சிக் குழுவோரும் சோவியத்துகளின் காங்கிரசை விட்டு வெளி யேறி விட்டனர். போல்ஷிவிக்குகள் தனிமைப்பட்டு நிற் கிறார்கள்! எல்லா வகையான முறைகேடுகள், நாசச் செயல் கள், குளிர்கால அரண்மனை மீது குண்டுத் தாக்குதல், வரை முறையின்றிக் கைது செய்தல்—இப்படி போல்ஷிவிக்குகள் புரிந்து வரும் கொடுங் குற்றங்கள் யாவும் பெரும்பாலான மாலுமிகள், படையாட்களுக்கு இடையே அவர்களுக்கு எதி ராய்க் கோபத்தைக் கிளர்த்திவிட்டிருக்கின்றன. போல்ஷி விக்குகளுடைய உத்திரவுகளுக்கு **இத்ஸேன்திரஃபுளோத்** பணிய மறுக்கிறது....

''தாய்நாட்டின், புரட்சியின் இரட்சணியக் கமிட்டியைச் சுற்றி ஒன்று திரளுமாறு நல்லறிவு கொண்டோர் எல்லார்க் கும் நாங்கள் அறைகூவல் விடுக்கின்றோம்; போல்ஷிவிக்கு களது சாகசத்தால் தூண்டிவிடப்படும் இந்த இன்னல்களைப் பயன்படுத்தி ஆதாயமடைய நிச்சயமாய் முயலப் போகும் எதிர்ப்புரட்சியாளர்களை எதிர்த்துச் செயல்பட, கட்சியின்

மத்தியக் கமிட்டியின் முதலாவது அழைப்புக்கே செவி சாய்த்துச் செயல்படத் தயாராக இருக்கும்படியும், போர் முனை பலவீனமாக்கப்படும் இந்தத் தக்க தருணத்தைத் தமக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ள விரும்புவோராகிய புறப் பகைவனையும் விழிப்புடன் கவனித்து வரும்படியும் அறைகூவுகின்றோம்....''

**சோஷலிஸ்டு-புரட்சியாளர் கட்சி**
**மத்தியக் கமிட்டியின் இராணுவப் பிரிவு.**

* * *

**பிராவ்தாவிலிருந்து:**

''யார் இந்தக் கேரென்ஸ்கி?''

''அடாத வழியில் அதிகாரத்தில் இருப்பவர், கர்னீலவுடனும் கீஷ்கினுடனும் சேர்ந்து பெத்ரொபாவ்லொவ்ஸ்கயா சிறைக்கூடத்தில் தள்ளப்பட வேண்டியவர்.

''அவரை நம்பிய தொழிலாளர்கள், படையாட்கள், விவசாயிகளுக்குக் கொடுங் குற்றமிழைத்தவர், துரோகம் புரிந்தவர்.

''கேரென்ஸ்கி—படையாட்களின் கொலைகாரர்!

''கேரென்ஸ்கி—விவசாயிகளுக்கு எமனாக வாய்த்தவர்!

''கேரென்ஸ்கி — தொழிலாளர்களின் மென்னியைப் பிடித்து நெரிக்கும் கொடியவர்!

''இத்தகையவரே ஆவார் தொழிலாளர்கள், படையாட்கள், விவசாயிகளது சுதந்திரத்தைத் தற்போது கொலை புரிய எத்தனிக்கும் இந்த இரண்டாவது கர்னீலவ்!''

## அத்தியாயம் 7இன் அனுபந்தம்

### 1.

### இரண்டு அரசாணைகள்

### பத்திரிகைகள் குறித்து

புரட்சியை அடுத்து உடனடியான இந்நாட்களில், புரட்சியின் தீர்மானகரமான இந்தக் கடுமையான தருணத்தில், புரட்சிகர இடைக்கால கமிட்டியானது எல்லா வகையான

எதிர்ப்புரட்சிப் பத்திரிகைகளுக்கும் எதிராய் வரிசையாகப் பல நடவடிக்கைகளை எடுக்கும்படியான நிர்ப்பந்தம் ஏற் பட்டிருக்கிறது.

உடனே நாற்புறமிருந்தும் கூச்சல்கள் எழுப்பப்படுகின் றன, புதிய சோஷலிச ஆட்சியதிகாரம் இச்செயலின் மூலம் பத்திரிகைச் சுதந்திரத்துக்கு விரோதமான முயற்சியை மேற் கொண்டு, தனது வேலைத்திட்டத்தின் ஆதாரக் கோட்பாடு களையே மீறுவாதாகக் கூக்குரல்கள் எழுப்பப்படுகின்றன.

தொழிலாளர்கள், விவசாயிகளது அரசாங்கம் தேசமக்க ளின் கவனத்துக்குக் கொண்டுவரும் உண்மை என்னவெனில், நமது நாட்டில் இந்த மிதவாத மூடுதிரைக்குப் பின்னல் அனைத்துப் பத்திரிகைத் துறையிலும் மிகப் பெரும் பகுதி யினைச் செல்வந்தர் வர்க்கங்கள் கைப்பற்றிக் கொண்டுவிடு வதற்கும், மக்கட் பெருந்திரளினரது உணர்வினைக் குழப்பி விடுவதற்குமான வாய்ப்பு ஒளிந்திருக்கிறது.

முதலாளித்துவப் பத்திரிகையானது முதலாளித்துவ வர்க் கத்தின் பெருஞ் சக்தி வாய்ந்த ஆயுதங்களில் ஒன்ருகும் என்பது ஒவ்வொருவருக்கும் தெரிந்ததுதான். முக்கியமாய் இத்தருணத்தில், தொழிலாளர்கள், விவசாயிகளது புதிய ஆட்சியதிகாரம் உறுதியடைந்து நிலைபெறும் நிகழ்ச்சிப் போக்கு நடந்தேறும் இந்த நெருக்கடி மிகுந்த தருணத்தில், வெடிகுண்டுகளையும் இயந்திரத் துப்பாக்கிகளையும் காட்டி லும் எவ்விதத்திலும் இந்த ஆயுதம் குறையாத ஆபாயத்துக் குரியதாக இருக்கும் ஒரு நேரத்தில், பகைவன் கையிலே இந்த ஆயுதத்தை விட்டு வைப்பது முடியாத காரியம். என வேதான் தற்காலிகமான அவசர நடவடிக்கைகள் எடுக்கப் பட்டிருக்கின்றன. மக்களுக்குக் கிட்டியிருக்கும் வெற்றியினை அதன் தொட்டில் பருவத்திலேயே நசுக்கிவிடத் துடித்துக் கொண்டு வேலை செய்யும் இந்த மஞ்சள் பத்திரிகைகளும் பச்சைப் பத்திரிகைகளும் மடை திறந்துவிடும் பொய்யும் புரட்டுமான அவதூற்றுச் சகதிக் கும்பியின் பெருக்கினைத் தடுத்து நிறுத்துவதேஇந்த நடவடிக்கைகளின் நோக்கமாகும்.

புதிய அமைப்பு உறுதி பெற்றதும் பத்திரிகைகளுக்கு எதிரான எல்லா நிர்வாக நடைவடிக்கைகளும் நிறுத்தப் பட்டுவிடும், சட்டத்தின் பால் பொறுப்புடன் நடந்து கொள்

வதன் வரம்புகளுக்கு உட்பட்டு, மிகவும் விரிவான, மிகவும் முற்போக்கான நெறிமுறைகளுக்கு ஏற்ப, பத்திரிகைகளுக்கு முழுச் சுதந்திரம் அளிக்கப்படும்....

ஆயினும் நெருக்கடியான தருணங்களிலுங்கூட பத்திரிகைச் சுதந்திரத்துக்கான எந்தத் தடை வரம்புகளும் அவசியத்தின் எல்லைகளுக்கு உட்பட்டே ஏற்புடையவை என்பதை மனதிற் கொண்டு மக்கள் கமிசார் அவை பின்வரும் அரசாணையைப் பிறப்பிக்கிறது:

1. பின்வரும் வகைகளைச் சேர்ந்த பத்திரிகைகள் தடைவிதிப்புக்கு உள்ளாகக் கூடியவை: (1) தொழிலாளர்கள், விவசாயிகளது அரசாங்கத்துக்குப் பகிரங்க எதிர்ப்பு காட்டும்படியோ, கீழ்ப்படிய மறுக்கும்படியோ தூண்டி விடுகிறவை; (2) வெளிப்படையாகவும், வேண்டுமென்றே திட்டமிட்டும் செய்திகளைத் திரித்துக் கூறிக் குழப்பம் உண்டாக்குகிறவை; (3) சட்டப்படி தண்டிக்கப்படத் தக்க குற்றகரமான செயல்களுக்குத் தூண்டுதல் அளிக்கிறவை.

2. எந்தப் பத்திரிகையும் தற்காலிகமாகவோ, நிரந்தரமாகவோ தடை விதித்து மூடப்படுதல் மக்கள் கமிசார் அவையின் தீர்மானத்தின் மூலமே செய்யப்பட வேண்டும்.

3. தற்போதைய இந்த அரசாணை தற்காலிகமானது; பொது வாழ்வின் சமூக நிலைமைகள் திரும்பவும் நிலைநாட்டப்பட்டதும் தனி உத்தரவின் மூலம் இது ரத்து செய்யப்படும்.

**மக்கள் கமிசார் அவையின் தலைவர்,**
*விளதீமிர் உலியானவ் (லெனின்).*

* * *

## தொழிலாளர் காவல் துறை குறித்து

1. தொழிலாளர்கள், படையாட்கள் பிரதிநிதிகளது சோவியத்துகள் யாவும் தொழிலாளர் காவல் துறையை நிறுவிக்கொள்ள வேண்டும்.

2. தொழிலாளர் காவல் துறையானது முற்றிலும் தொழிலாளர்கள், படையாட்கள் பிரதிநிதிகளது சோவியத்தின் கட்டளைக்குக் கீழ்ப்பட்டதாகும்.

*3. இராணுவத் துறை, சிவில் துறை ஆட்சியதிகார அமைப்புகள் தொழிலாளர்களை ஆயுதபாணியாக்குவதற்கும், அவர்களுக்குத் தொழில்நுட்பச் சாதனங்கள் அளிப்பதற்கும், அரசாங்கத்தின் யுத்தத் துறைக்குச் சொந்தமான ஆயுதங்களை ஆணையிட்டு எடுத்தளிப்பது வரையிலுமான எல்லா வழிகளிலும் உதவி செய்தாக வேண்டும்.*

*4. இந்த அரசாணையானது தந்தி மூலம் பிரகடனம் செய்யப்பட்டுச் செயலுக்கு வந்தாக வேண்டும்.*

*பெத்ரொகிராது, 1917 நவம்பர் 10.*

**உள் துறை மக்கள் கமிசார்,**

*எ.இ. ரீக்கவ்.*

*ருஷ்யா முழுதும் செங்காவலர் படைப்பிரிவுகள் அமைக்கப்படுவதற்கு இந்த அரசாணை ஊக்கமளித்தது. பிற்பாடு ஆரம்பமான உள்நாட்டுப் போரின் போது இந்தச் செங்காவலர் படைப்பிரிவுகள் சோவியத்து அரசாங்கத்துக்கு மதிப்பிடற்கரிய பக்கபலமாய் அமைந்து செயல்பட்டன.*

**2.**

**வேலைநிறுத்த நிதி**

*வேலைநிறுத்தம் செய்த அரசாங்க ஊழியர்களுக்கும் வங்கி எழுத்தர்களுக்குமான நிதியானது, பெத்ரொகிராதையும் பிற நகரங்களையும் சேர்ந்த வங்கிகளும் தொழில், வாணிப நிறுவனங்களும் மட்டுமின்றி ருஷ்யாவில் தொழில் நடத்திய வெளிநாட்டுக் கம்பெனிகளுங்கூட அளித்த தொகைகளைக் கொண்டு நிறுவப்பட்டது. போல்ஷிவிக்குகளுக்கு எதிராக வேலைநிறுத்தம் செய்ய உடன்பட்டோருக்கு முழுச் சம்பளம் தரப்பட்டது, சில சந்தர்ப்பங்களில் சம்பள உயர்வும் அளிக்கப்பட்டது. போல்ஷிவிக்குகள் அசைக்க முடியாதபடி ஆட்சியதிகாரத்தில் நிலைபெற்றுவிட்டனர் என்பதை வேலைநிறுத்த நிதிக்குப் பங்குத் தொகை அளித்தவர்கள் உணர்ந்து கொண்டு வேலைநிறுத்தச் சம்பளங்கள் தர மறுத்த பிற்பாடுதான், வேலைநிறுத்தம் முடிவாய்த் தகர்ந்தது.*

# அத்தியாயம் 8இன் அனுபந்தம்

## 1.

### கேரென்ஸ்கியின் படை முன்னேற்றம்

நவம்பர் 9ல் கேரென்ஸ்கியும் அவரது கசாக்குகளும் காத்சினு வந்தடைந்தனர், அங்கே இரு வேறு கோஷ்டிகளாகப் பிளவுப்பட்டிருந்த நகரக் காவற் படையினர் உடனே சரணடைந்து விட்டனர். காத்சினு சோவியத்தின் உறுப்பினர்கள் கைது செய்யப்பட்டனர், முதலில் கொல்லப்படுவார்களென அச்சுறுத்தப்பட்டனர்; ஆனுல் பிற்பாடு, நன்னடத்தை வாக்குறுதியின் பேரில் விடுதலை செய்யப்பட்டனர்.

கசாக்கு முன்னணிப் படைப் பிரிவினர் அனேகமாய் எதிர்ப்பு ஏதுமின்று பாவ்லவ்ஸ்க்கையும் அலெக்சாந்திரவ்ஸ்க்கையும் பிற நிலையங்களையும் பிடித்துக் கொண்டு, மறுநாள் காலையில்—நவம்பர் 10ல்—ஜார்ஸ்கயெ செலோவின் சுற்றுவட்டாரத்தை அடைந்தனர். அங்கிருந்த காவற் படையினர் உடனே மூன்று கோஷ்டிகளாகப் பிரிந்துவிட்டனர்-படையதிகாரிகள் கேரென்ஸ்கியை ஆதரித்தனர்; படையாட்களிலும் ஆணை பெருப் படையதிகாரிகளிலும் ஒரு பகுதியினர் தம்மை "நடுநிலையினராக" அறிவித்துக் கொண்டனர்; சாதாரண படையாட்களில் மிகப் பெரும் பகுதியோர் போல்ஷிவிக்குகளை ஆதரித்தனர். தலைமை அதிகாரிகளோ ஒழுங்கமைப்போ இல்லாமற் விடப்பட்ட இந்த போல்ஷிவிக்குப் படையாட்கள் தலைநகரை நோக்கிப் பின்வாங்கிச் சென்றனர். வட்டார சோவியத்தும் ஊரிலிருந்து வெளியேறி பூல்க்கொவோ கிராமத்துக்குச் சென்றது.

பூல்க்கொவோவிலிருந்து ஜார்ஸ்கயெ செலோ சோவியத்தின் ஆறு உறுப்பினர்கள் ஒரு கார் நிறைய பிரசுரங்களை எடுத்துக் கொண்டு கசாக்குகளிடையே பிரசாரம் புரிவதற்காகக் காத்சினு சென்றுர்கள். பகற் பொழுது முழுதும் அங்கே அவர்கள் ஒவ்வொரு கசாக்குக் கொட்டடிக்கும் சென்று வாதாடிக் கொண்டும் வற்புறுத்திக் கொண்டும் விளக்கிக் கூறிக் கொண்டும் இருந்தார்கள். மாலை நெருங்கிய

தும் படையதிகாரிகள் சிலருக்கு அவர்கள் அங்கிருப்பது தெரிந்துவிட்டது. அவர்கள் கைது செய்யப்பட்டு, ஜெனரல் கிரஸ்னேவின் முன்னால் கொண்டுபோய் நிறுத்தப்பட்டார்கள். ''முன்பு நீங்கள் கர்னீலவை எதிர்த்துப் போராடினீர்கள், இப்போது கேரென்ஸ்கியை எதிர்க்கிறீர்கள். நீங்கள் எல்லோரும் சுடப்பட வேண்டியவர்கள்!'' என்று கிரஸ்னேவ் அவர்களிடம் கூறினார்.

பெத்ரொகிராது மாவட்டத்துக்குத் தன்னைப் படைத் தலைவராக நியமித்த உத்திரவை அவர்களுக்குப் பலக்கப் படித்துக் காட்டிவிட்டு, அவர்கள் எல்லோரும் போல்ஷிவிக்குகளா என்று கேட்டார் கிரஸ்னேவ். அவர்கள் ஆமெனப் பதிலளித்தார்கள்—உடனே கிரஸ்னேவ் அங்கிருந்து போய் விட்டார். பிறகு சற்று நேரத்துக்கு எல்லாம் படையதிகாரி ஒருவர் அங்கே வந்து, ஜெனரல் கிரஸ்னேவின் உத்தரவு என்று சொல்லி அவர்களை விடுதலை செய்து வெளியே விட்டார்....

இதற்கிடையில் பெத்ரொகிராதிலிருந்து தூதுக் குழுக்கள் தொடர்ந்து வந்து கொண்டிருந்தன—டூமாவிலிருந்தும், இரட்சணியக் கமிட்டியிடமிருந்தும், முடிவில் விக்ழேலிடமிருந்தும். ரயில்வேத் தொழிலாளர் ஒன்றியமானது உள்நாட்டுப் போரை நிறுத்த உடன்பாட்டுக்கு வர வேண்டுமென வற்புறுத்திற்று; போல்ஷிவிக்குகளுடன் கேரென்ஸ்கி பேச்சு நடத்த வேண்டுமென்றும் பெத்ரொகிராதை நோக்கிப் படையுடன் அவர் முன்னேறிச் செல்வதை நிறுத்திக்கொள்ள வேண்டுமென்றும் கோரிற்று; இப்படிச் செய்ய மறுக்கப் படுமாயின் நவம்பர் 11 நள்ளிரவிலிருந்து பொது வேலை நிறுத்தம் நடைபெறுமென்று விக்ழேல் அச்சுறுத்தியது.

இந்த விவகாரம் குறித்து சோஷலிஸ்டு அமைச்சர்களோடும், இரட்சணியக் கமிட்டியோடும் விவாதிப்பதற்கு அவகாசமளிக்கும்படி கேரென்ஸ்கி கேட்டார். அவர் ஒரு முடிவுக்கு வர முடியாமல் குழம்பினார் என்பது தெளிவாகவே தெரிந்தது.

நவம்பர் 11ல் கசாக்குப் படைகளின் காவற் பிரிவினர் கிராஸ்னெயெ செலோவை அடைந்தனர். உள்ளூர் சோவியத்தும் புரட்சி இராணுவக் கமிட்டியின் பல்வேறு தரங்

களிலுமான படைகளும் அவசர கோலமாகப் பின்வாங்கிச் சென்றன, சில பிரிவுகள் சரணடையவும் செய்தன.... அன்று இரவு கசாக்குப் பிரிவுகள் பூல்க்கொவொவுக்கும் வந்து சேரத் தொடங்கின, அவற்றுக்கு மெய்யான எதிர்ப்பு முதன் முதல் இங்கேதான் காட்டப்பட்டது....

கசாக்குப் படைகளைத் துறந்து ஓடியவர்கள் சிறுத் தொகுதிகளில் பெத்ரொகிராதுக்கு வந்து சேர முற்பட்டனர். கேரென்ஸ்கி தம்மிடம் பொய் கூறியதாக இவர்கள் அறிவித் தார்கள். பெத்ரொகிராது தீயிற்கு இரையாக்கப்படுவதாக வும், போல்ஷிவிக்குகள் ஜெர்மானியர்களை நகருக்குள் வரச் சொல்லி அழைத்திருப்பதாகவும், பெண்களையும் குழந்தை களையும் அவர்கள் கொலை புரிவதாகவும், கண்ணை மூடிக் கொண்டு எல்லோரையும் சுட்டு வீழ்த்துவதாகவும் போர் முனையிலே அவர் தம்மிடையே பிரகடனங்களை ஒலிபரப்பினர் என்றார்கள்....

புரட்சி இராணுவக் கமிட்டி உடனே ''கிளர்ச்சியாளர் கள்'' மிகப் பலரையும் ஆயிரக் கணக்கான துண்டுப் பிரசு ரங்களுடன் அனுப்பி வைத்து, கசாக்குகளுக்கு உண்மை நிலவரத்தைத் தெரிவிக்கும்படிச் செய்தது....

2.

## புரட்சி இராணுவக் கமிட்டியின் பிரகடனங்கள்

''தொழிலாளர்கள், படையாட்கள், விவசாயிகள் பிரதி நிதிகளது சோவியத்துகள் யாவற்றுக்கும்.

''எதிர்ப்புரட்சி, யூதர்-எதிர்ப்புக் கலவரங்கள் யாவற் றையும், எல்லாவிதமான கொலை வெறியாட்டங்களையும் எதிர்த்து வன்மை மிகுந்த நடவடிக்கைகளை உடனே எடுக் கும்படி வட்டார சோவியத்துகளுக்குத் தொழிலாளர்கள், படையாட்கள், விவசாயிகள் பிரதிநிதிகளது அனைத்து ருஷ்யக் காங்கிரஸ் ஆணையிடுகிறது. தொழிலாளர்கள், விவசாயிகள், படையாட்களது புரட்சியின் மாண்புக்கு எந்த விதமான ஒழுங்கின்மையும் சிறிதும் ஒவ்வாததாகும்....

''பெத்ரொகிராதின் செங்காவலர்களும் புரட்சிகரக் காவற் படையினரும் மாலுமிகளும் தலைநகரில் முழுநிறை ஒழுங்கை நிலை நாட்டியுள்ளனர்.

''தொழிலாளர்களே, படையாட்களே, விவசாயிகளே! எங்கும் நீங்கள் பெத்ரொகிராதுத் தொழிலாளர்கள், படையாட்களது முன்னுதாரணத்தைப் பின்பற்ற வேண்டும்.

''தோழர்கள் படையாட்களே, கசாக்குகளே! மெய்யான புரட்சிகர ஒழுங்கினைப் பாதுகாக்கும் கடமை நமக்குரியதாகியுள்ளது.

''புரட்சிகர ருஷ்யா முழுதும், அனைத்து உலகும் உங்களையே உற்று நோக்குகின்றன....''

* * *

''சோவியத்துகளின் அனைத்து ருஷ்யக் காங்கிரஸ் ஆணையிடுகிறது:

''போர்முனையில் கேரென்ஸ்கியால் மீண்டும் புகுத்தப்பட்ட மரண தண்டனையை ஒழித்திடுவதென்று.

''நாட்டில் முழுநிறைப் பிரசார உரிமையை மீண்டும் நிலைநாட்டுவதென்று. அரசியல் 'குற்றங்கள்' என்பதாகச் சொல்லி, தற்போது சிறையில் அடைக்கப்பட்டிருக்கும் எல்லாப் படையாட்களும் புரட்சிகரப் படையதிகாரிகளும் உடனே விடுதலை செய்யப்பட வேண்டும்.''

* * *

''மக்களால் வீழ்த்தப்பட்டுவிட்ட முன்னாள் பிரதமர் கேரென்ஸ்கி சோவியத்துகளின் காங்கிரசிற்குப் பணிய மறுக்கிறார், அனைத்து ருஷ்யக் காங்கிரசால் தேர்ந்தெடுக்கப்பட்ட சட்ட பூர்வமான அரசாங்கமாகிய மக்கள் கமிசார் அவையை எதிர்த்துப் போர் புரிய முயலுகிறார். போர்முனையானது கேரென்ஸ்கியிற்கு உதவ மறுத்துவிட்டது. மாஸ்கோவும் புதிய அரசாங்கத்துக்கு ஆதரவாக அணிதிரண்டுவிட்டது. பல நகரங்களில் (மீன்ஸ்க், மொகிலோவ், ஹார்க்கவ்) ஆட்சியதிகாரம் சோவியத்துகளின் கைக்கு வந்துவிட்டது. எந்தக் காலாட் படைப்பிரிவும் தொழிலாளர்கள், விவசாயிகளது

அரசாங்கத்தை எதிர்த்துக் கிளம்ப உடன்படவில்லை. சேனையின், மக்களின் வைராக்கியமான சித்தத்துக்கு ஏற்ப, தொழிலாளர்கள், விவசாயிகளது அரசாங்கம் சமாதானப் பேச்சுவார்த்தைகளை ஆரம்பத்திருக்கிறது, நிலத்தை விவசாயிகளுக்கு அளித்திருக்கிறது....

''கசாக்குகள் கேரென்ஸ்கியைத் தடுத்து நிறுத்தாவிடில்— அவர்களை அவர் ஏமாற்றி, பெத்ரொகிராதுக்கு எதிராய் அழைத்து வருகின்றார்—புரட்சியின் மகோன்னதை வெற்றிச் சாதனைகளாகிய சமாதானத்தையும் நிலத்தையும் பாதுகாப் பதற்காகப் புரட்சிகர சக்திகள் தமது முழு வலிமையோடும் கிளர்ந்தெழுமென நாங்கள் பகிரங்க எச்சரிக்கை விருக்கின் றோம்.

''பெத்ரொகிராது நகரவாசிகளே! கேரென்ஸ்கி தலை நகரை விட்டு ஓடியவர்; தலைநகரை ஜெர்மானியர்களிடம் சரணடைக்க விரும்பிய கீஷ்கினிடத்தும், நகர உணவு வழங்கீட்டைச் சீர்குலைத்த கரும் படையைச் சேர்ந்த ருத் தென்பேர்கிடத்தும், அனைத்து ஜனநாயகத்தின் வெறுப்புக் கும் உரியவரான பல்ச்சீன்ஸ்கியிடத்தும் அதிகாரத்தை விட் டொழித்துவிட்டு ஒட்டம் பிடித்தவர். உங்களை எல்லாம் ஜெர் மானியர்கள் வசம், பஞ்சத்தின் பிடியில், இரத்தம் பெருக் கெடுக்கும் படுகொலையின் கையிலே விட்டொழித்துவிட்டு ஓட்டமெடுத்தவர் இந்தக் கேரென்ஸ்கி. எழுச்சி புரிந்த மக் கள் கேரென்ஸ்கியின் அமைச்சர்களைக் கைது செய்திருக்கி றார்கள். உடனே ஒழுங்கும் பெத்ரொகிராதுக்கு உணவு வழங் கீடும் எப்படி மேம்பட்டன என்பதை நீங்கள் நேரில் கண்டுள் ளீர்கள். பிரபுக் குல உடைமையாளர்களின், முதலாளிகளின், கள்ள வணிகர்களின் கோரிக்கைக்கு ஏற்ப கெரென்ஸ்கி உங்களுக்கு எதிராய் படை திரட்டிக் கொண்டு இங்கே வரு கிறார்; நிலத்தை நிலப்பிரபுக்களிடம் திருப்பித் தருவதற் காக, எல்லோராலும் வெறுக்கப்படும் நாசகர யுத்தத்தைத் தொடர்ந்து நடத்துவதற்காக வருகிறார்.

''பெத்ரொகிராது நகரவாசிகளே! உங்களில் மிகப் பெரும் பான்மையோர் மக்களது புரட்சிகர ஆட்சியதிகாரத்தை ஆதரிப்பவர்கள், கேரென்ஸ்கி தலைமை தாங்கும் கர்னீலவி யர்களை எதிர்ப்பவர்கள் என்பதை நாம் அறிவோம். இந்தக்

கையாலாகாத முதலாளித்துவச் சதிகாரர்களின் அண்டப் புளுகுப் பிரகடனங்களைக் கேட்டு ஏமாருதீர்கள், இவர்கள் இரக்கமின்றி நசுக்கப்படுவர்.

''தொழிலாளர்களே, படையாட்களே, விவசாயிகளே! புரட்சிகரப் பற்றுதியும் கட்டுப்பாடும் காட்டும்படி உங்களை அறைகூவி அழைக்கின்ருேம்.

''கோடானுகோடியான விவசாயிகளும் படையாட்களும் நம் பக்கம் உள்ளனர்.

''மக்கள் புரட்சியின் வெற்றி உறுதியிலும் உறுதி!''

பெத்ரொகிராது, 1917 நவம்பர் 10.

**தொழிலாளர்கள், படையாட்கள் பிரதிநிதிகளது**
**பெத்ரொகிராது சோவியத்தின்**
**புரட்சி இராணுவக் கமிட்டி.**

3.

## மக்கள் கமிசார் அவை பிறப்பித்த சட்டங்கள்

போல்ஷிவிக்குகள் ஆட்சியதிகாரம் வென்றதுடன் என் கருத்துப்படி தொடர்பு கொண்ட அரசாணைகளை மட்டுமே நான் இந்தப் புத்தகத்தில் தருகின்றேன். ஏனையவை சோவியத்து அரசின் அமைப்பு குறித்து விரிவாய் விளக்குகையில் எடுத்துரைக்கப்பட வேண்டியவை, இந்தப் புத்தகத்தில் நான் இதைச் செய்வதற்கில்லை. ''கர்னீலவ் முதல் பிரேஸ்த்-லித்தோவ்ஸ்க் வரை'' என்ற தலைப்பில் தற்போது தயாரிக்கப்பட்டு வரும் இரண்டாவது புத்தகத்தில் இது முழு அளவில் செய்யப்படும்.

### குடியிருப்புகள் குறித்து

1. நகரத் தன்னுட்சி மன்றங்கள் குடியில்லாத அல்லது ஆளில்லாத குடியிருப்புகள் யாவற்றையும் தாமே எடுத்துக் கொள்ள உரிமை பெற்றவை.

2. நகரத் தன்னுட்சி மன்றங்கள் கிடைக்கக் கூடிய எல்லா குடியிருப்பு இடங்களிலும் சட்டங்களுக்கும் தாம் வகுத்துக்

கொள்ளும் ஏற்பாடுகளுக்கும் ஏற்ப, குடியிருக்க இடமில்லாத நகரவாசிகளையோ, நெருக்கமான அல்லது நலக் குறைவான இடங்களில் குடியிருப்போரையோ குடிபுகச் செய்யலாம்.

3. நகரத் தன்னாட்சி மன்றங்கள் குடியிருப்பு இடங்களைப் பார்வையிடுவதற்கான பணியாளர் தொகுதியை நிறுவலாம், ஒழுங்கமைக்கலாம், அதன் அதிகாரங்களை வரையறுக்கலாம்.

4. நகரத் தன்னாட்சி மன்றங்கள் வீட்டுக் கமிட்டிகளை நிறுவுவது குறித்து உத்தரவுகள் பிறப்பிக்கலாம், அவற்றின் ஒழுங்கமைப்பையும் அவற்றின் அதிகாரங்களையும் வரையறை செய்யலாம், அவற்றுக்குச் சட்டத் துறை அதிகாரம் அளிக்கலாம்.

5. நகரத் தன்னாட்சி மன்றங்கள் குடியிருப்பு வசதி நீதி மன்றங்களைத் தோற்றுவித்து, அவற்றின் அதிகாரங்களையும் பொறுப்புகளையும் வரையறை செய்யலாம்.

6. இந்த அரசாணை தந்தி மூலம் பிரகடனம் செய்யப்பட்டு செயலுக்கு வர வேண்டும்.

**உள்துறை மக்கள் கமிசார்,**
*எ.இ. ரீக்கவ்.*

* * *

## சமூகக் காப்புறுதி குறித்து

கூலித் தொழிலாளர்களுக்கும் மற்றும் நகரங்களையும் கிராமங்களையும் சேர்ந்த ஏழைகளுக்கும் முழு அளவில் சமூகக் காப்புறுதி அளிப்பதென்ற வாக்குறுதியை ருஷ்யப் பாட்டாளி வர்க்கம் தனது இயக்கக் கோஷங்களில் ஒன்றாய்க் கொண்டதாகும். ஜார், நிலப்பிரபுக்கள், முதலாளிகளது அரசாங்கமும் மற்றும் கூட்டுக்கும் சமரசத்துக்குமாகிய அரசாங்கமும் சமூகக் காப்புறுதி குறித்து தொழிலாளர்களது விருப்பங்களை ஈடேற்றவில்லை.

தொழிலாளர்கள், விவசாயிகளது அரசாங்கமானது தொழிலாளர்கள், படையாட்கள், விவசாயிகள் பிரதிநிதிகளது

*சோவியத்துகளின் ஆதரவை ஆதாரமாகக் கொண்டு, தொழிலாளர் நிறுவனங்கள் முன்மொழிந்த பின்வரும் அடிப் படைகளின் மீது சமூகக் காப்புறுதிச் சட்டங்கள் உடனடி யாகத் தயாரிக்கப்படுமென ருஷ்யாவின் தொழிலாளி வர்க் கத்துக்கும், நகர, கிராம ஏழைகளுக்கும் அறிவிக்கிறது:*

*1. விதிவிலக்கின்றி எல்லாக் கூலித் தொழிலாளர்களுக் கும், மற்றும் நகர, கிராம ஏழைகள் யாவருக்கும் காப் புறுதி.*

*2. உடல் நலக் குறைவு, இயலாமை, முதிய வயது, பிள்ளைப் பேறு, கைம்பெண் நிலை, அனாதை நிலை, வேலை யின்மை போன்ற எல்லா வகைப்பட்ட வேலை ஆற்றல் இழப் புக்கும் ஈடு செய்யும் படியான சமூகக் காப்புறுதி.*

*3. காப்புறுதிக்கான செலவுகள் யாவும் வேலை அதிபர் களால் ஏற்கப்பட வேண்டும்.*

*4. வேலை செய்யும் ஆற்றல் முழு அளவில் இழக்கப்படும் போதும் வேலையின்மையின் போதும் குறைந்தது முழுச் சம்பளத்தின் அளவிலாவது ஈடு அளிக்கப்பட வேண்டும்.*

*5. காப்புறுதி நிறுவனங்கள் யாவும் முற்றிலும் தொழி லாளர்களது தன்னாட்சியில் இருக்க வேண்டும்.*

*ருஷ்யக் குடியரசு அரசாங்கத்தின் பெயரில்,*

**தொழிலாளர் மக்கள் கமிசார்,**
*அலெக்சாந்தர் ஷிலியாப்னிக்கவ்.*

**மக்கள் கல்வி குறித்து**

*ருஷ்யாவின் குடிமக்களே!*

*நவம்பர் 7 எழுச்சியின் விளைவாய் உழைப்பாளிப் பெருந் திரளினர் முதன்முதலாய் மெய்யான ஆட்சியதிகாரம் வெற்று கொண்டனர்.*

*சோவியத்துகளின் அனைத்து ருஷ்யக் காங்கிரஸ் தற்காலி கமாய் இந்த ஆட்சியதிகாரத்தை அதன் செயற் குழுவிற்கும் மக்கள் கமிசார் அவைக்கும் மாற்றியிருக்கிறது.*

*புரட்சிகர மக்களின் சித்தத்தால் நான் கல்வித் துறை மக்கள் கமிசாராக நியமிக்கப்பட்டிருக்கிறேன்.*

மக்கள் கல்விக்குப் பொதுவாய் வழிகாட்டும் பணியானது, மத்திய அரசாங்கத்திடம் இப்பணி இருக்கும் அளவுக்கு—அரசியல் நிர்ணயச் சபை கூடும் வரை—மக்கள் கல்வித்துறை ஆணைக் குழுவிடம் ஒப்படைக்கப்பட்டிருக்கிறது. மக்கள் கமிசாரே இந்த ஆணைக் குழுவின் தலைவரும் செயல் அதிகாரியுமாவார்.

இந்த அரசாங்க ஆணைக் குழுவுக்கு அடிப்படையாய் அமையும் ஆதாரக் கோட்பாடுகள் யாவை? அதன் அதிகார வரம்பு நிர்ணயிக்கப் படுவது எப்படி?

**கல்வித் துறையிலான செயல்களின் பொதுவான கொள்கை வழி:** மெய்யாகவே ஜனநாயகத் தன்மையதான ஒவ்வொரு ஆட்சியதிகாரமும் எழுத்தறியாமையும் அறியாமை இருளும் கோலோச்சும் ஒரு நாட்டில், இந்த இருளை எதிர்த்துப் போராடுவதையே கல்வித் துறையில் தனது முதற்பெரும் நோக்கமாகக் கொண்டிருக்க வேண்டும். நவீன போதனை முறைகளின் தேவைகளுக்கு ஏற்ப அமைந்த பள்ளிகளை வலைப்பின்னல் போல் எங்கும் அமைத்து இந்த ஆட்சியதிகாரம் மிகக் குறுகிய காலத்துக்குள் **அனைத்து மக்களையும் எழுத்தறிவுடையோர்** ஆக்கியாக வேண்டும்; அனைவருக்கும் கட்டாய பூர்வமான, இலவசப் பள்ளிக்கூடக் கல்விப் பயிற்சியை அது நடைமுறைக்குக் கொண்டு வர வேண்டும்; அதே நேரத்தில், எல்லையற்று விரிந்து பரந்த நமது ருஷ்யாவின் மக்கள் அனைவரும் கல்வி போதம் பெறுவதற்கு இன்றியமையாததாகிய மக்கள் ஆசிரியர்களது சக்தி வாய்ந்த சேனை ஒன்றை மிகக் குறுகிய காலத்துக்குள் உருவாக்கித் தரும்படியான ஆசிரியர் பயிற்சிக் கல்லூரிகள், பயிற்சிக் கூடங்கள் மிகப் பலவற்றையும் அது வரிசையாய் அமைத்தாக வேண்டும்.

**மையத்தில் குவியாது பரவலாக்கப்படுதல்:** மக்கள் கல்வித் துறை அரசாங்க ஆணைக் குழு பயிற்சிக்கும் போதனைக்குமான நிலையங்களை நிர்வகிக்கும் மைய அதிகாரமாய் எவ்விதத்திலும் அமைந்திருக்கலாகாது. மாறாக, பள்ளிக்கூடக் கல்விப் பணி அனைத்தும் வட்டாரத் தன்னாட்சி மன்றங்களுக்கு மாற்றப்பட வேண்டும். தமது சொந்த முன்முயற்சியைக் கொண்டு கலாசார, கல்வித் துறை நிறுவனங்களை அமைத்

திடும் தொழிலாளர்கள், படையாட்கள், விவசாயிகளது சுயேச்சையான பணிக்கு அரசு மையத்தால் மட்டுமின்றி வட்டாரத் தன்னாட்சி மையங்களாலும் முழுத் தன்னாட்சி உரிமை வழங்கப்படுதல் வேண்டும்.

அரசு ஆணைக் குழுவின் பணியானது, வட்டாரத் தன்னாட்சி மன்றங்களையும் தனியார் குழுக்களையும் சேர்ந்த நிலையங்களுக்கும், குறிப்பாய்த் தொழிலாளர்கள் நிறுவும் வர்க்கத் தன்மை வாய்ந்த நிலையங்களுக்கும் பொருளாதார, ஆன்மிக ஆதரவுக்குரிய வளங்களை ஒழுங்கமைத்திடுவதில் ஓர் இணைப்பாகவும் துணையாகவும் இருக்கும்.

**மக்கள் கல்வித் துறை அரசாங்க ஆணைக் குழு:** புரட்சியின் தொடக்கத்திலிருந்தே மக்கள் கல்வித் துறை அரசாங்கக் கமிட்டியானது மதிப்பிடற்கரிய சட்டதிட்டங்கள் மிகப் பலவற்றையும் வகுத்திருக்கிறது. இந்தக் கமிட்டி அதன் இயைபில் ஓரளவுக்கு ஜனநாயகத் தன்மையதாகும், வல்லுநர்கள் மிகப் பலரையும் கொண்டதாகும். அரசாங்க ஆணைக் குழு இந்தக் கமிட்டியின் ஒத்துழைப்பை மனப் பூர்வமாக நாடுகிறது.

அடியிற் கண்ட வேலைத்திட்டத்தை நிறைவேற்றுவதற்காக இக்கமிட்டியின் சிறப்புக் கூட்டத்தைக் கூட்டும்படி அரசாங்க ஆணைக் குழு இக்கமிட்டியின் குழுமத்தினை வேண்டியிருக்கிறது:

1. ஜனநாயகத் தன்மையை அதிகமாக்கும் பொருட்டு கமிட்டியில் பிரதிநிதித்துவத்தின் விதிகளைத் திருத்தம் செய்தல்.

2. கமிட்டியின் உரிமைகளை விரிவுபடுத்தும் பொருட்டும், ருஷ்யாவில் பொதுமக்கள் பயிற்சியையும் கல்வியையும் ஜனநாயகக் கோட்பாடுகளின் அடிப்படையில் புத்தமைப்பதற்கு உகந்த சட்டதிட்டங்களை வகுத்திடும் ஆதார அரசாங்கக் கழகமாக இக்கமிட்டியை மாற்றும் பொருட்டும் கமிட்டியின் உரிமைகளில் திருத்தம் செய்தல்.

3. கமிட்டியால் ஏற்கெனவே தயாரிக்கப்பட்ட சட்டங்களைப் புதிய அரசாங்க ஆணைக் குழுவுடன் சேர்ந்து திருத்தியமைத்தல். இச்சட்டங்களை வரைந்த போது கமிட்டியானது, அதன் குறுகிய வரம்புகளிலுங்கூட அதற்கு முட்டுக்கட்டை

போட்டு வந்த முந்திய அமைச்சகங்களின் முதலாளித்துவ மனப்பாங்கினைக் கணக்கில் எடுத்துச் செயல்பட வேண்டியிருந்ததால் இச்சட்டங்களைத் திருத்தியமைப்பது அவசியமாகிறது.

இப்படித் திருத்தப்பட்டதும் இந்தச் சட்டங்கள் அதிகார வர்க்கக் குருட்டு வழிமுறைகள் எவையுமின்றி புரட்சிகர ஒழுங்கு வழியில் செயல்படுத்தப்படும்.

**ஆசிரியர்களும் சங்கங்களும்:** நாட்டின் எஜமானர்களாகிய மக்களுக்குக் கல்வி போதமளிக்கும் ஒளி மிகுந்த, மாண்பு மிக்க பணியில் ஈடுபட ஆசிரியர்களை அரசாங்க ஆணைக் குழு வரவேற்கிறது.

ஆசிரியர்களின் பிரதிநிதிகளுடைய கவனமான கலந்தாய்வு இல்லாமல் எந்த ஆட்சியதிகாரமும் மக்கள் கல்வித் துறையில் எந்த நடவடிக்கையையும் எடுக்கலாகாது.

மறு புறத்தில் முற்றிலும் வித்தகர்களது ஒத்துழைப்பால் மட்டும் எவ்விதத்திலும் தீர்மானம் செய்யப்பட்டுவிட முடியாது. பொதுக் கல்விக் கழகங்கள் சம்பந்தமான சீர்திருத்தங்களுக்கும் இது பொருந்துவதாகும்.

சமூக சக்திகளுடன் ஆசிரியர்களின் ஒத்துழைப்பு—இவ்வழியில்தான் ஆணைக் குழுவானது தனது சொந்த அமைப்பினுள்ளும், அரசாங்கக் கமிட்டியிலும், மற்றும் தனது செயற்பாடுகள் யாவற்றிலும் வேலை செய்யும்.

ஆசிரியர்களது நிலையை உயரச் செய்வதே தனது முதலாவது பணியென ஆணைக் குழு கருதுகிறது. யாவருக்கும் முதலாய், ஆரம்பப் பள்ளி ஆசிரியர்களது நிலை உயர்ந்தாக வேண்டும்; இவர்கள் மிகவும் ஏழ்மைப்பட்டவர்கள, ஆயினும் கலாசாரப் பணிக்கு அனேகமாக யாவரினும் தலையாய பங்காற்றுகிறார்கள். இவர்களுடைய நியாயமான கோரிக்கைகள் எவ்வளவுதான் செலவு செய்ய வேண்டியிருப்பினும் உடனடியாகப் பூர்த்தி செய்யப்பட்டாக வேண்டும். பள்ளிக் கூடங்களைச் சேர்ந்த இந்தப் பாட்டாளி வர்க்கத்தினர் தமது சம்பளம் மாதத்துக்கு நூறு ரூபிளாய் உயர்த்தப்பட வேண்டுமெனக் கோரி வந்திருக்கிறார்கள், ஆனால் இதுகாறும் இந்தக் கோரிக்கை ஏற்கப்பட்டாகவில்லை. ருஷ்ய மக்களில் மிகப் பெருவாரியானோரின் கல்வி போதகர்களை இனியும்

வறுமையில் இருத்தி வைப்போமாயின் அது அவக்கேடாகும்.

ஆனுல் மெய்யான ஜனநாயகமானது, வெறும் எழுத்தறிவு அளிப்பதோடு, அனைவருக்கும் ஆரம்பக் கல்வி அளிப்பதோடு நின்றுவிட முடியாது. பல படித்தரங்களிலான மதச் சார்பற்ற சீரான பள்ளிக்கூடக் கல்விக்கு ஏற்பாடு செய்ய அது முயன்ருக வேண்டும். குடிமக்கள் எல்லார்க்கும் சமத்துவமான, முடியுமாயின் கல்லூரிப் படிப்பு வரையிலான கல்வி அளித்திடுவதே இலட்சியக் குறியாகும். இந்த இலட்சியம் எல்லார்க்கும் ஈடேறும் ஒன்ருக இருக்கும் வரை, பள்ளிக்கூடத்தின் எல்லாப் படித்தரங்கள் மூலமும் உயர்ந்து இயல்பான முறையில் பல்கலைக்கழகத்துக்குப் போய்ச் சேர்வது—மேற்கல்வியின் மட்டத்தை அடைவது—முற்றிலும் மாணவரின் தகுதித் திறனையே பொறுத்திருக்க வேண்டுமே ஒழிய, மாணவரது குடும்பத்தின் பண வசதியைப் பொறுத்ததாய் இருக்கலாகாது.

கல்வி போதனையை மெய்யாகவே ஜனநாயகத் தன்மையதாகும்படி ஒழுங்கமைப்பது கடினமான பணியாகும், அதுவும் மிகக் கொடிய, நீண்டதோர் ஏகாதிபத்திய யுத்தத்தால் வறுமையில் ஆழ்த்தப்பட்டிருக்கும் ஒரு நாட்டில் இதைச் செய்வது மிகமிகக் கடினமாகும். ஆனுல் ஆட்சியதிகாரத்தைத் தாமே மேற்கொண்டுவிட்ட தொழிலாளர்கள் தமது கதியை மேம்படுத்திக் கொள்வதற்கும் ஆன்மிக வளர்ச்சி காண்பதற்குமான தமது போராட்டத்தில் கல்வியானது தமக்குக் கிடைக்கும் ஒப்புயர்வற்ற சாதனமாகும் என்பதை நினைவில் கொண்டிருக்க வேண்டும். மக்களது செலவுத் திட்டத்தில் இடம் பெறும் ஏனைய பொருள்களைக் குறைத்துக் கொள்வது எவ்வளவு அவசியமாயினும், கல்விக்கான செலவுகள் உயர் மட்டத்திலேதான் எப்போதும் இருந்து வர வேண்டும். பெரிய அளவிலான கல்வித் துறைக் செலவுத் திட்டம் தேசத்தின் பெருமைக்கும் புகழுக்குமுரிய ஒன்ருகும். ருஷ்யாவின் சுதந்திரமான, முழு உரிமை பெற்ற மக்கள் இதை மறக்க மாட்டார்கள்.

எழுத்தறியாமைக்கும் அறியாமை இருளுக்கும் எதிரான போராட்டம் குழந்தைகளுக்கும் இளம் வயதினருக்கும் முழு அளவில் பள்ளிக்கூட கல்வி கிடைப்பதற்கு ஏற்பாடு செய்

வதுடன் நின்றுவிட முடியாது. வயது வந்தோரும் எழுதப் படிக்கத் தெரியாத மனிதனின் இழிநிலையிலிருந்து தம்மைக் காப்பாற்றிக் கொள்வதில் ஆவல் கொண்டோராகவே இருப் பார்கள். மக்களது கல்விப் பயிற்ச்சிக்கான பொதுத் திட்டத் தில் முதியோர் பள்ளியானது முக்கிய இடம் வகிக்க வேண் டும்.

**போதனையும் கல்வியும்:** போதனைக்கும் கல்விக்குமுள்ள வேறுபாட்டை வலியுறுத்திக் கூற வேண்டும்.

போதனையானது தயாரான அறிவை ஆசிரியர் தமது மணவருக்கு ஊட்டுவதாகும். கல்வி என்பது ஆக்க வழிப்பட்ட நிகழ்ச்சிப் போக்காகும். ஆயுள் முழுதும் ஒருவரது ஆளுமை ''கல்வி கற்றுச்'' செல்கிறது, உருவாகியும் உள் ளடக்கத்தில் செழுமையுற்றும் வலுப் பெற்றும் குறையற் றதாய் மேலும் மேலும் செம்மையுற்றும் செல்கிறது.

உழைப்பாளி வெகுஜனங்கள், தொழிலாளர்களும் விவ சாயிகளும் படையாட்களுமானோர், ஆரம்ப, உயர்நிலைப் போதனை பெற அளவிலா ஆவல் கொண்டுள்ளனர். கல்வித் தாகமும் இவர்களுக்கு நிறைய இருக்கிறது. அரசாங்கத்தா லோ, அறிவுத் துறையினராலோ, தமக்குப் புறத்தே அமைந்த வேறு எந்த சக்தியாலோ இதனை இவர்களுக்கு அளித்திட முடியாது. பள்ளிக்கூடம், புத்தகம், நாடகமன்றம், தொல் பொருட்காட்சிக்கூடங்கள் முதலானவை எல்லாம் இங்கு துணைச் சாதனங்களாகவே இருக்க முடியும். இவர்கள் தமக் கே உரிய சொந்தக் கருத்துகளைக் கொண்டவர்கள். இவர் களது சமூக நிலைமையால் உருவாக்கப்பட்டவை இக்கருத்து கள். இவர்களது சமூக நிலைமை இதுகாறும் கலாசாரத்தைத் தோற்றுவித்து வந்துள்ளவர்களாகிய ஆளும் வர்க்கத்தார், அறிவுத்துறையினர் ஆகியோரது நிலையிலிருந்து வெகுவாய் வேறுபடுவதாகும். இவர்கள் தமது சொந்தக் கருத்துகளை யும், சொந்த உணர்ச்சிகளையும், ஆளுமை, சமுதாயம் இவற் றின் பிரச்சினைகளை அணுகுவதில் தமது சொந்த முறைகளை யும் கொண்டவர்கள். நகரத் தொழிலாளரும் கிராம உழைப்பாளரும் தத்தமக்குரிய பாணியில் தமது தெட்டத் தெளிவான உலகக் கண்ணோட்டத்தை, தொழிலாளர்களது வர்க்கக் கருத்தோட்டத்தில் தோய்ந்த உலகக் கண்ணோட்

டத்தை உருவாக்கிக் கொள்வர். கூட்டு உழைப்பானது தனக்கே உரிய பொதுநிலையான, செழுமை மிக்க, சுதந்திர ஆத்மாவை உருவாக்கிக் கொள்ளும். இந்த நிகழ்வைக் காட்டிலும் அதியற்புதமானது, அல்லது எழிலார்ந்தது வேறு எதுவும் இருக்க முடியாது.

போதனையானது நிச்சயமாய் மிகவும் முக்கியமான ஒரு கூறுதான் என்றாலும் தீர்மானகரமானதல்ல. இங்கு இதனிலும் அதிக முக்கியத்துவமுடையது வெகுஜனங்கள் செய்திடும் விமர்சனமாகும், அவர்களது ஆக்க ஆற்றலாகும். ஏனெனில் விஞ்ஞானமும் கலையும் அவற்றின் சில பகுதிகளில் மட்டுமான பொதுவான மனித குல முக்கியத்துவம் வாய்ந்தனவாக இருக்கின்றன. ஆழ்ந்த வர்க்கக் கொந்தளிப்பு ஒவ்வொன்றின் போதும் விஞ்ஞானமும் கலையும் அடிப்படையான மாற்றங்களுக்கு உள்ளாகின்றன.

ருஷ்யா எங்கும், குறிப்பாக நகரத் தொழிலாளர்களிடையிலும், மற்றும் விவசாயிகளிடத்தும் சக்திமிக்க கலாசார, கல்வித் துறை இயக்கம் மூண்டெழுகிறது; தொழிலாளர்கள், படையாட்களது இவ்வகைப்பட்ட நிறுவனங்கள் அதிவேகமாய்ப் பெருகிச் செல்கின்றன. இவற்றை எதிர் கொள்வதும், இவற்றுக்கு ஆதரவளிப்பதும், இவற்றின் முன்னால் பாதையைச் செப்பனிடுவதும் ஜனநாயகத் தன்மையதான கல்வியின் துறையில் புரட்சிகர, பெருந்திரள் மக்களது அரசாங்கத்தின் முதற் பெரும் பணியாகும்.

அரசியல் நிர்ணயச் சபை விரைவில் தனது பணியைத் தொடங்கும் என்பதில் ஐயமில்லை. அது ஒன்றால் மட்டும்தான் நமது நாட்டில் தேசிய, சமுதாய வாழ்வுக்குரிய அமைப்பை நிரந்தரமாய் நிறுவவும், அதே போது மக்கள் கல்வித் துறை ஒழுங்கமைப்பின் பொது இயல்பினை நிர்ணயிக்கவும் முடியும்.

ஆனால் இப்போது ஆட்சியதிகாரம் சோவியத்துகளின் கைக்கு வந்துவிட்டதால், அரசியல் நிர்ணயச் சபை மெய்யாகவே ஜனநாயகத் தன்மையதாக இருக்குமென்பது உறுதியாகிவிட்டது. ஆகவே அரசாங்கக் கமிட்டியினை ஆதாரமாகக் கொண்டு கல்வித் துறை அரசாங்க ஆணைக் குழு கடைப்பிடிக்கப் போகும் கொள்கை வழியானது அரசியல் நிர்ணயச் சபையால் பாதிக்கப்பட்டு அதிகமாக மாற்ற

மடைய நேரப் போவதில்லை. எனினும் இது குறித்து முன்கூட்டியே முடிவான தீர்மானத்துக்கு வந்துவிடாமல், நாட்டின் ஆன்மிக வாழ்வினைக் கூடுமான விரைவில் செழுமையும் ஒளியும் பெறச் செய்வதை நோக்கமாகத் கொண்ட வரிசையான பல நடவடிக்கைகளைக் கல்வித் துறையில் ஏற்பது தனது உரிமைகளுக்கு அப்பாற்பட்டதல்ல என்பதாய்ப் புதிய மக்கள் அரசாங்கம் கருதுகிறது.

**அமைச்சகம்:** இடைக் காலத்திலான தற்போதைய பணி மக்கள் கல்வித் துறை அமைச்சகத்தின் மூலம் நடந்தேறியாக வேண்டும். அதன் இயைபிலும் கட்டமைப்பிலும் தேவையான எல்லா மாற்றங்களையும் செய்வது, சோவியத்துகளின் செயற் குழுவாலும் அரசாங்கக் கமிட்டியாலும் தேர்ந்தெடுக்கப்பட்ட அரசாங்க ஆணைக் குழுவுக்குரிய பொறுப்பாகும். மக்கள் கல்வித் துறையில் அரசு அதிகார அமைப்பானது அரசியல் நிர்ணயச் சபையால்தான் நிறுவப்படும். அது வரை கல்வித் துறை அமைச்சகமானது, அரசாங்கக் கமிட்டிக்கும் மக்கள் கல்வித் துறை அரசாங்க ஆணைக் குழுவுக்குமான செயல் நிறைவேற்றப் பொறியமைவாய்ப் பணியாற்ற வேண்டும்.

நாட்டின் நலம் பாதுகாக்கப்படுவதற்குரிய உத்தரவாதம், நாட்டிலுள்ள ஜீவ ஆற்றல் கொண்ட, மெய்யாகவே ஜனநாயகத் தன்மை வாய்ந்த எல்லா சக்திகளுக்கும் இடையிலான ஒத்துழைப்பிலேதான் அடங்கியிருக்கிறது.

உழைப்பாளி மக்களும், அறிவொளி படைத்த நேர்மையான அறிவுத்துறையினரும் மேற்கொள்ளும் மும்முர முயற்சிகள் நம் நாட்டினை, அதை வதைக்கும் நெருக்கடியிலிருந்து வெளியே இட்டுச் சென்று, முழுநிறை ஜனநாயகத்தின் மூலமாக சோஷலிசத்தின், தேசங்களது சோதரத்துவத்தின் ஆட்சிக்கு அழைத்துச் செல்லுமென நாம் நம்புகிறோம்.

**கல்வித் துறை மக்கள் கமிசார்,**
அ.வி. லுனச்சார்ஸ்கி.

* * *

## சட்டங்கள் அங்கீகரிக்கப்பட்டு வெளியிடப்பட வேண்டிய வரிசைமுறை குறித்து.

*1. அரசியல் நிர்ணயச் சபை கூட்டப்படும் வரை, சட்டங்கள் அங்கீகரிக்கப்படுவதும் வெளியிடப்படுவதும், தொழிலாளர்கள், விவசாயிகள், படையாட்கள் பிரதிநிதிகளது சோவியத்துகளின் அனைத்து ருஷ்யக் காங்கிரசால் தேர்ந்தெடுக்கப்பட்ட தற்போதைய தொழிலாளர்கள், விவசாயிகளது இடைக்கால அரசாங்கம் விதித்திடும் வரிசைமுறையில் நடைபெற வேண்டும்.*

*2. ஒவ்வொரு மசோதாவும் முறைப்படி அதற்குரிய அதிகாரமளிக்கப்பெற்ற மக்கள் கமிசாரால் கையொப்பமிடப்பட்டு, அதற்குரிய அமைச்சகத்தால் அரசாங்கத்தின் பரிசீலனைக்காகச் சமர்ப்பிக்கப்படுகிறது; அல்லது அரசாங்கத்துடன் இணைந்த சட்டமியற்றும் பிரிவின் தலைவரால் கையொப்பமிடப்பட்டு அந்தப் பிரிவால் அரசாங்கத்தின் பரிசீலனைக்குச் சமர்ப்பிக்கப்படுகிறது.*

*3. அரசாங்கத்தால் அது அங்கீகரிக்கப்பட்டதும், அதன் இறுதி வடிவில் அந்த அரசாணை ருஷ்யக் குடியரசின் பெயரில் மக்கள் கமிசார் அவையின் தலைவராலோ, அல்லது அவர் சார்பில், அரசாங்கத்தின் பரிசீலனைக்கு அதைச் சமர்ப்பித்த மக்கள் கமிசாராலோ கையொப்பமிடப்பட்டு, பிறகு வெளியிடப்படுகிறது.*

*4. அதிகார பூர்வமான அரசேடாகிய "தொழிலாளர்கள், விவசாயிகளது இடைக்கால அரசாங்கத்தின் அரசேட்டில்" அந்த அரசாணை வெளியிடப்படும் தேதிதான், அது சட்டமாகும் தேதியாகும்.*

*5. வெளியிடப்படும் தேதி அல்லாத வேறொரு தேதி அந்த அரசாணை சட்டமாவதற்குரிய தேதியாக அரசாணையிலேயே குறிக்கப்பட்டிருக்கலாம்; அல்லது அரசாணையானது தந்தி மூலம் பிறப்பிக்கப்படலாம் — இப்படிச் செய்யப்படுமாயின், அந்தந்த வட்டாரத்திலும் இந்தத் தந்தி வெளியிடப் பட்டதும் அரசாணையானது சட்டமாகிவிடுவதாகக் கருதப்பட வேண்டும்.*

6. அரசாங்கத்தின் சட்டங்கள் அரசு செனட்டால் பிறப் பிக்கப்படுதல் ரத்து செய்யப்படுகிறது. மக்கள் கமிசார் அவையுடன் இணைந்த சட்டமியற்றும் பிரிவு அரசாங்கத்தின் ஒழுங்கு முறை விதிகள், உத்தரவுகளின் தொகுதியை அவ் வப்போது வெளியிடுகிறது, இவ்விதிகளும் உத்தரவுகளும் சட்டமாகச் செயல்படுகின்றவை.

7. தொழிலாளர்கள், விவசாயிகள், படையாட்கள் பிரதிநிதிகளது சோவியத்துகளின் மத்தியச் செயற் குழு (இத்ஸே-யி-க) அரசாங்கத்தின் அரசாணைகளில் எவற்றையும் எந்நேரத்திலும் ரத்து செய்யவோ, மாற்றம் செய்யவோ, நீக்கவோ உரிமை பெற்றிருக்கிறது.

**ருஷ்யக் குடியரசின் பெயரில்,**
**மக்கள் கமிசார் அவையின் தலைவர்,**
வி. உலியானவ்-லெனின்.

## 4.

## சாராயப் பிரச்சினை

### புரட்சி இராணுவக் கமிட்டியின் ஆணை

1. மேற்கொண்டு ஆணையிடப்படும் வரை, சாராயம், சாராயப் பானங்களின் உற்பத்திக்குத் தடை விதிக்கப்படு கிறது.

2. சாராயம், சாராயப் பானங்களின் உற்பத்தியாளர்கள் எல்லோரும் இம்மாதம் 27ஆம் தேதிக்குப் பிற்படாமல், தமது பண்டக் கையிருப்புகள் இருக்கும் இடங்களைக் கறாராய்க் குறிப்பிட்டுத் தகவல் தெரிவிக்க வேண்டுமென உத்தரவிடப்படுகிறது.

3. இந்த ஆணையை மீறும் குற்றத்தினை இழைப்போர் யாவரும் புரட்சி இராணுவ நீதிமன்றத்தின் முன்னால் விசா ரணைக்குக் கொண்டுவரப்படுவார்கள்.

**புரட்சி இராணுவக் கமிட்டி.**

5.

## ஆணை எண் 2

**பின்லாந்துக் காவலர் ரிசர்வ் ரெஜிமெண்ட்டின் கமிட்டியிட மிருந்து, வசீலி ஒஸ்திரொவிலுள்ள எல்லா வீட்டுக் கமிட்டிகளுக் கும் குடிமக்களுக்கும்.**

*பாட்டாளி வர்க்கத்தை எதிர்த்துப் போராடுவதற்காக முதலாளித்துவ வர்க்கம் மிக இழிவான ஒரு முறையைத் தெரிந்தெடுத்துக் கையாளுகிறது. நகரின் வெவ்வேறு பகுதி களிலும் அது பெரும் பெரும் ஒயின் கிடங்குகளை நிறுவியிருக் கிறது; இவற்றிலிருந்து படையாட்களுக்கு ஒயின் வினியோ கிக்கிறது; இவ்விதம் அது புரட்சி சேனையின் அணிவரிசை களிடையே ஒழுங்கீனத்துக்கும் கலவரத்துக்கும் வித்திடு கிறது.*

*இந்த ஆணை பிறப்பிக்கப்படுவதற்காகக் குறிப்பிடப்பட் டிருக்கும் நேரமாகிய 3 மணிக்கு எல்லாம் எல்லா வீட்டுக் கமிட்டிகளும் நேரில் வந்து, பின்லாந்து காவலர் ரெஜி மெண்ட்டுக் கமிட்டியின் தலைவருக்குத் தமது இருப்பிடங் களில் எவ்வளவு ஒயின் இருக்கிறதென்று இரகசியமாகத் தெரிவிக்க வேண்டுமென இந்த ஆணையின் மூலம் எல்லா வீட்டுக் கமிட்டிகளும் உத்தரவிடப்படுகின்றன.*

*இந்த ஆணையை மீறுவோர்* **கைது செய்யப்பட்டு, தயவுதாட் சண்யமற்ற நீதி மன்றத்தின் முன்னால் விசாரணைக்குக் கொண்டு வரப்படுவர், இவர்களுடைய சொத்து பறிமுதல் செய்யப்படும்,** *கண்டு பிடிக்கப்படும் ஒயின் கையிருப்புகள்*

**இந்த எச்சரிக்கைக்குப்பின் 2 மணி நேரத்தில்
வெடி வைத்துத் தகர்க்கப்படும்.**

*ஏனெனில் இதனிலும் கண்டிப்பு குறைவான நடவடிக் கைகள் தக்க பலன் அளிப்பதில்லை, இது அனுபவ வாயி லாகத் தெரிய வரும் உண்மை.*

**வெடிவைக்கப்படும் முன்பு வேறு எந்த எச்சரிக்கையும் செய் யப்படாதென்பதை நினைவில் கொள்ளுங்கள்.**

**பின்லாந்து காவலர்
ரெஜிமெண்ட்டின் கமிட்டி.**

## அத்தியாயம் 9இன் அனுபந்தம்

### 1.

### புரட்சி இராணுவக் கமிட்டியின் செய்தியறிக்கை எண் 2.

*நவம்பர் 12 மாலையில் கேரென்ஸ்கி ''ஆயுதங்களைச் சரணடைக்கும்படி'' புரட்சிப் படைகளுக்குக் கோரிக்கை அனுப்பினர். கேரென்ஸ்கியின் படையினர் பீரங்கிகள் கொண்டு சுட்டனர். நமது பீரங்கிகள் பதிலுக்குச் சுட்டுப் பகைவனை ஓயுமாறு கட்டாயப்படுத்தின. கசாக்குகள் தாக்குதலை ஆரம்பித்தனர். ஆனுல் மாலுமிகளும் செஞ்காவலர்களும் படையாட்களும் பயங்கரமாகச் சுட்டுத் தள்ளவே கசாக்குகள் பின்வாங்க வேண்டியதாயிற்று. நமது கவச மோட்டார்கள் பகை அணிகளிடையே புகுந்து நாசம் விளைவித்தன. பகைவன் பிழைத்தால் போதுமென ஓட்டமாய் ஓடுகிருன். நமது படைகள் துரத்திச் செல்கின்றன. கேரென்ஸ்கியைக் கைது செய்யும்படி உத்தரவிடப்பட்டிருக்கிறது. ஜார்ஸ்கொயெ செலோவைப் புரட்சிப் படைகள் கைப்பற்றிக் கொண்டு விட்டன.*

**லெத்திஷ் துப்பாக்கிப் படையினர்:** *வீரமிக்க லெத்திஷ் துப்பாக்கிப் படையினர் போர்முனையிலிருந்து வந்து, கேரென்ஸ்கி படைக் கும்பலுக்குப் பின்புறத்தில் படைநிலை அமைத்திருக்கிருர்கள் என்று புரட்சி இராணுவக் கமிட்டிக்குத் திட்டவட்டமான தகவல் கிடைத்திருக்கிறது.*

### புரட்சி இராணுவக் கமிட்டியின் தலைமை அலுவலர்களிடமிருந்து

*காத்சினுவிலும் ஜார்ஸ்கயெ செலோவிலும் பீரங்கிகளும் இயந்திரத் துப்பாக்கிகளும் அறவே இல்லாமற் போய்விட்டன, ஆனுல் கேரென்ஸ்கியின் குதிரைப் படையினரிடம் ஆரம்பம் முதற் கொண்டே பீரங்கிகள் இருந்து வந்தன. இவ்விரு இடங்களும் கேரென்ஸ்கியின் படைப்பிரிவுகளால் கைப்பற்ற முடிந்ததற்கு இதுவே காரணமாகும். நமது*

தலைமை அலுவலர்களுக்குக் கடந்த இரு நாட்களும் மிகவும் கடுமையான அவசர வேலைகளுக்குரிய நாட்களாக இருந்தன, புரட்சிப் படையினருக்குத் தேவையான அளவில் பீரங்கிகளும் இயந்திரத் துப்பாக்கிகளும் களத் தொலைபேசிகளும் பிறவும் சேகரித்து அனுப்ப வேண்டியிருந்தது. மாவட்ட சோவியத்துகளும் ஆலைகளும் (புத்தீலவ் ஆலையும் அபூஹவ் ஆலையும் பிறவும்) முனைந்து முன்னின்று உதவி புரிய, இந்த வேலை செய்து முடிக்கப்பட்டதும், இனி நடைபெறும் போரின் முடிவு எப்படியிருக்கும் என்பது குறித்து ஐயப்பாட்டுக்கு இடமில்லாமற் போயிற்று. புரட்சிப் படைகளுக்கு ஆதரவாய் உபரி அளவிலான போர்த் தளவாடங்களும் பெத்ரொகிராதைப் போன்ற சக்தி வாய்ந்த பொருளாயத அடித்தளமும் இருப்பதோடு, அளவுகடந்த மன வலிமையின் அனுகூலமும் இருக்கிறது. பெத்ரொகிராது படையணிகள் யாவும் அளவிலா ஆர்வத்துடன் புறப்பட்டுத் தமது படைநிலைகளுக்குச் சென்றன. நகரக் காவற் படையினரின் மாநாடு ஐந்து படையாட்கள் அடங்கிய கண்காணிப்பு ஆணைக் குழு ஒன்றை தேர்ந்தெடுத்தது; இவ்விதம் படைத்தலைவருக்கும் காவற் படையினருக்கும் இடையே முழுநிறை ஐக்கியம் நிறுவப்பட்டது. தீர்மானகரமான படை நடவடிக்கையை ஆரம்பிப்பதென்று காவற் படையினரின் மாநாட்டில் ஒரு மனதாய்த் தீர்மானிக்கப்பட்டது.

நவம்பர் 12ல் பீரங்கிக் குண்டுவீச்சு பிற்பகல் 3 மணிக்குள் மிகக் கடுமையாகிவிட்டது. கசாக்குள் அறவே கதிகலங்கி மனம் தளர்ந்துவிட்டனர். அவர்கள் சார்பில் பேசுவதற்காகப் பிரதிநிதி ஒருவர் கிராஸ்னொயே செலோவிலிருந்து படைப்பிரிவின் தலைமை அலுவலர்களிடம் வந்தார்; சுடுதல் உடனே நிறுத்தப்பட வேண்டும் என்றார் அவர், இல்லையேல் ''தீர்மானகரமான'' நடவடிக்கைகள் எடுக்கப்படும் என்று அச்சுறுத்தினார். கேரென்ஸ்கி படைக்கலன்களைச் சரணடைக்கும் போதுதான் சுடுதல் நிறுத்தப்படுமென்று அவருக்குப் பதிலளிக்கப்பட்டது.

மும்முரமாய் மூண்ட போரில் படைகளின் எல்லாப் பிரிவோரும்—மாலுமிகளும் படையாட்களும் செங்காவலர்களும்—அளவு கடந்த வீரதீரத்தை வெளிப்படுத்தினர்.

மாலுமிகள் தம்மிடமிருந்த தோட்டாக்கள் யாவும் சுட்டுத் தீர்க்கப்படும் வரை, நிற்காமல் தொடர்ந்து முன்னேறினர். ஆட்சேதங்கள் இன்னும் திட்டவட்டமாய் நிர்ணயிக்கப்பட்டாகவில்லை, ஆனால் எதிர்ப்புரட்சிப் படைகளுக்கே அதிக சேதம் ஏற்பட்டிருக்கிறது; நமது கவச மோட்டார் ஒன்று அவற்றுக்கு மிகப் பெருஞ் சேதங்களை உண்டாக்கிற்று.

கேரென்ஸ்கியின் தலைமை அலுவலர்கள் தாம் சுற்றிவளைக்கப்பட்டு விடுவோமென பயந்து, பின்வாங்கும்படி உத்தரவிட்டனர், பின்வாங்குதல் விரைவில் நிலை குலைந்து போய் ஒழுங்கற்றதாகியது. இரவு 11-12 மணிக்கெல்லாம் ஜார்ஸ்கயெ செலோ, ஒலிபரப்பு நிலையமும் அடங்கலாய், சோவியத்துகளின் படைகளால் பூரணமாகப் பிடிக்கப்பட்டுவிட்டது. கசாக்குகள் காத்சினாவையும் கோல்ப்பினாவையும் நோக்கிப் பின்வாங்கிச் சென்றார்கள்.

நமது படைகளின் மன உறுதி எவ்வளவு மெச்சினாலும் தகும்படி சிறப்பாய் இருக்கிறது. பின்வாங்கி ஓடும் கசாக்குகளைத் துரத்திச் செல்லும்படி உத்தரவிடப்பட்டிருக்கிறது. ஜார்ஸ்கயெ செலோ வானொலி நிலையத்திலிருந்து உடனே போர்முனைக்கும், ருஷ்யா பூராவிலும் எல்லா வட்டார சோவியத்துகளுக்கும் வானொலித் தந்தி அனுப்பப்பட்டிருக்கிறது. மேற்கொண்டு எல்லா விவரங்களும் தொடர்ந்து அறிவிக்கப்படும்....

2.

### பெத்ரொகிராதில் நவம்பர் 13ல் நடைபெற்றவை

பெத்ரொகிராது சோவியத்தின் கூட்டத்தில் ஸினோவியெவ் கூறியதாவது: ''படை பலத்தைக் கொண்டுதான் பகைவனை முறியடிக்க முடியும். கசாக்குகளை நம் பக்கத்துக்கு வரச் செய்வதற்குச் சமாதான வழி ஒவ்வொன்றையும் நாம் கையாண்டு பார்க்காமல் இருந்தால், நாம் குற்றமிழைப்போர் ஆகிவிடுவோம்.... நமக்குத் தேவைப்படுவது இராணுவ வெற்றி.... போர்நிறுத்தத்தைப் பற்றிய செய்தி காலத்துக்கு முற்பட்ட ஒன்றாகும். பகைவனால் இனி தீங்கு புரிய

முடியாத நிலைமை ஏற்பட்டதும் நமது தலைமை அலுவலர்கள் போர்நிறுத்த ஒப்பந்தம் செய்து கொள்ளத் தயாராயிருப்பார்கள்....

''தற்போது நமது வெற்றியின் செல்வாக்கானது புதிய அரசியல் நிலைமைகளைத் தோற்றுவித்து வருகிறது.... இன்று சோஷலிஸ்டு-புரட்சியாளர்கள் புதிய அரசாங்கத்தில் போல்ஷிவிக்குகளுக்கு இடமளிக்க உடன்படும் நிலைக்கு வந்திருக்கிறார்கள்.... தீர்மானகரமான வெற்றி அத்தியாவசியமாகும், தயங்குவோர் அப்போதுதான் தமது தயக்கத்தை விட்டொழிப்பார்கள்....''

நகர டூமாவின் கவனம் எல்லாம் புதியதோர் அரசாங்கத்தை அமைத்திடும் பிரச்சினையால் ஈர்க்கப்பட்டு வந்தது.

காடேட்டான ஷிங்கரியோவ் நகராட்சி மன்றமானது போல்ஷிவிக்குகளுடனான எந்த உடன்பாட்டிலும் பங்கு கொள்ளலாகாது என்று பறைசாற்றினார்.... ''வெறியர்கள் தமது படைக்கலன்களைச் சரணடைத்து, நீதிமன்றங்களது அதிகாரத்தை அங்கீகரிக்கும் வரையில், அவர்களுடன் எந்த விதமான உடன்பாடும் சாத்தியமன்று....''

**எதீன்ஸ்துவோ** கோஷ்டியின் சார்பில் யார்த்ஸெவ், போல்ஷிவிக்குகளுடன் எந்த உடன்பாட்டுக்கு வருவதாயினும், அது போல்ஷிவிக்கு வெற்றியையே குறிப்பாதாக இருக்கும் என்றார்....

சோஷலிஸ்டு-புரட்சியாளர்களின் சார்பில் பேசிய நகர மேயர் ஷ்ரேய்தர், போல்ஷிவிக்குகளுடனான எவ்வித உடன்பாட்டையும் தாம் எதிர்ப்பதாக அறிவித்தார்.... ''அரசாங்கமானது மக்களது சித்தத்திலிருந்து உதித்தெழுவதாகும். மக்களது சித்தம் நகராட்சித் தேர்தல்களில் வெளியாகிவிட்டது, ஆகவே அரசாங்கத்தைத் தோற்றுவிக்கக் கூடிய மக்கள் சித்தம் உண்மையில் நகர டூமாவிடம்தான் உள்ளது....''

ஏனைய பேச்சாளர்களில், மென்ஷிவிக்கு சர்வதேசியவாதிகளின் பிரதிநிதி மட்டும்தான் புதிய அரசாங்கத்தில் போல்ஷிவிக்குகளுக்கு இடமளிப்பது குறித்து சிந்திக்க விருப்பம் தெரிவித்தார். இதன் பிறகு நகர டூமா, தனது பிரதிநிதிகளை விக்ஷேல் மாநாட்டில் தொடர்ந்து கலந்து கொள்ளச் சொல்வதென்றும், ஆனால் யாவற்றுக்கும் முதலாவதாக இடைக்

கால அரசாங்கத்தை மீண்டும் நிலைநாட்ட வேண்டுமென வற்புறுத்த வேண்டுமென்றும், புதிய ஆட்சியதிகாரத்திலிருந்து போல்ஷிவிக்குகளை ஒதுக்கிவிட வேண்டுமென்றும் தீர்மானம் செய்தது....

3.

## போர்நிறுத்தம். இரட்சணியக் கமிட்டிக்குக் கிரஸ்னோவின் பதில்

''உடனடியாகப் போர்நிறுத்தம் செய்யும்படி முன்மொழியும் உங்கள் தந்திக்குப் பதிலளிக்கும் உச்சப் படைத் தலைவர், வீணில் மேலும் தொடர்ந்து இரத்தம் சிந்தப்படலாகாதென விரும்புகிறார், பேச்சுவார்த்தைகளில் ஈடுபடவும், அரசாங்கச் சேனைகளுக்கும் கலகக்காரர்களது சேனைகளுக்கும் இடையே தொடர்புகளை நிறுவிக் கொள்ளவும் உடன்பாடு தெரிவிக்கிறார். கலகக்காரர்கள் அவர்களுடைய படைகளைப் பெத்ரொகிராதுக்குத் திருப்பி அழைக்க வேண்டுமென்றும், லிகவோ-பூல்க்கொவொ-கோல்ப்பினொ வழியை நடுநிலையானதென அறிவிக்க வேண்டுமென்றும், ஒழுங்கை நிலைநாட்டுவதற்காக அரசாங்கக் குதிரைப் படைகளின் முன்னிலைக் காவற் பிரிவினர் ஜார்ஸ்கயெ செலோவுக்குள் வர அனுமதிக்க வேண்டுமென்றும் அவர் முன்மொழிகிறார். நாளை காலை எட்டு மணிக்கு முன்னதாக இந்த முன்மொழிவுக்கான பதில் எமது தூதர்களின் கைக்கு வந்தாக வேண்டும்.

கிரஸ்னோவ்.''

4.

## ஜார்ஸ்கயெ செலோவில் நிகழ்ந்தவை

கேரென்ஸ்கியின் படைகள் ஜார்ஸ்கயெ செலோவிலிருந்து பின்வாங்கி வெளியேறிச் சென்ற நாளன்று மாலையில் பாதிரிமார்கள் சிலர் நகரத் தெருக்கள் வழியே மத வழிபாட்டு ஊர்வலத்துக்கு ஏற்பாடு செய்து, நியாயமான ஆட்சியதி

காரமான இடைக்கால அரசாங்கத்துக்கு ஆதரவளிக்கும்படி வற்புறுத்திச் சொற்பொழிவுகள் ஆற்றினர். கசாக்குகள் பின் வாங்கிச் சென்றதும் செங்காவலர்களது முதலாவது படைப் பிரிவுகள் நகருக்குள் நுழைந்ததும், பாதிரிமார்கள் சோவியத்துகளுக்கு எதிராக மக்களைத் தூண்டிவிட்டது பற்றியும், மாட்சிமை அரண்மனைக்குப் பின்னுல் இருந்த ரஸ்பூதின் சமாதியில் அவர்கள் பிரார்த்தனைகள் நடத்தியது பற்றியும் பலரும் செங்காவலர்களிடம் சாட்சியம் கூறினர். இந்தப் பாதிரிமார்களில் ஒருவரான திருத்தந்தை இவான் குச்சூரவ் கைது செய்யப்பட்டு, ஆத்திரமடைந்த செங்காவலர்களால் சுடப்பட்டார்....

செங்காவலர்கள் நகரினுள் நுழைந்ததும், தெருக்களில் இருள் குடி கொள்ளும்படி மின்விளக்குகள் யாவும் நிறுத்தப்பட்டன. மின்நிலையத்தின் டைரக்டரை சோவியத்துப் படையினர் கைது செய்து, விளக்குகள் ஏன் நிறுத்தப்பட்டன என்று விசாரித்தார்கள். அவர் கைது செய்து வைக்கப்பட்டிருந்த அறையில், பிற்பாடு அவர் கையில் ஒரு ரிவால்வரோடும், நெற்றிப் பொட்டில் குண்டுக் காயத்தோடும் கிடக்கக் கண்டார்கள்.

மறுநாளன்று பெத்ரொகிராதில் போல்ஷிவிக்கு-எதிர்ப்புச் செய்தியேடுகள், ''பிளெஹானவுக்கு 39 டிகிரி காய்ச்சல்!'' என்பதாகக் கொட்டைத் தலைப்புகளுடன் வெளி வந்தன. ஜார்ஸ்கயெ செலோவில் வசித்து வந்த பிளெஹானவ் நோய்ப் படுக்கையில் படுத்திருந்தார். செங்காவலர்கள் அவருடைய வீட்டுக்குச் சென்று அங்கே ஆயுதங்கள் இருந்தனவா என்று சோதனையிட்டனர், கிழவரை விசாரித்தனர்.

''நீங்கள் எந்த வர்க்கத்தைச் சேர்ந்தவர்?'' என்று செங்காவலர்கள் அவரிடம் கேட்டார்கள்.

''நான் ஒரு புரட்சியாளன்'' என்று பிளெஹானவ் பதிலளித்தார். ''நாற்பது ஆண்டுகளாக என் வாழ்வை விடுதலைப் போராட்டத்தில் ஈடுபடுத்தி வந்துள்ளவன்'' என்ருர் அவர்.

''எப்படியும் இப்போது முதலாளித்துவ வர்க்கத்துக்கு உங்களை விற்றுக் கொண்டுவிட்டீர்கள்!'' என்ருர் ஒரு தொழிலாளி.

ருஷ்ய சமூக-ஜனநாயகத்தின் ஆதிமுதல்வராவார் பிளெஹானவ், ஆனுல் இப்போது அவர் தொழிலாளர்கள் அறியாத ஒருவராகிவிட்டார்!

## 5.

### சோவியத்து அரசாங்கத்தின் வேண்டுகோள்

''காத்சினுவிலுள்ள படைப்பிரிவுகள், கேரென்ஸ்கியால் ஏமாற்றப்பட்ட இவை, போர் புரிய மறுத்து ஆயுதங்களைத் துறந்துவிட்டன. கேரென்ஸ்கியைக் கைது செய்வதென்று இவை முடிவு செய்தன. எதிர்ப்புரட்சி இயக்கத்தின் தலைவர் ஓட்டம் பிடித்துவிட்டார். பிரம்மாண்டப் பெரும்பான்மையுடன் சேனையானது சோவியத்துகளின் இரண்டாவது அனைத்து ருஷ்யக் காங்கிரசுக்கும், இந்தக் காங்கிரசால் தோற்றுவிக்கப்பட்ட அரசாங்கத்துக்கும் ஆதரவாக அறிவித்திருக்கிறது. சோவியத்து அரசாங்கத்துக்குச் சேனையின் பற்றுறுதியை வலியுறுத்துவதற்காக மிகப் பல பிரதிநிதிகள் போர்முனையிலிருந்து பெத்ரொகிராதுக்கு விரைந்து வந்து கொண்டிருக்கிறுர்கள். உண்மைகளை எவ்வளவோ திரித்துப் புரட்டிப் பார்த்தனர், புரட்சிகரத் தொழிலாளர்கள், படையாட்கள், விவசாயிகளை எதிர்த்து அவதூறுகளைக் கட்டவிழ்த்துப் பார்த்தனர், ஆனுல் மக்களை இதன் மூலம் தோற்கடிக்க முடியவில்லை. தொழிலாளர்கள், படையாட்களது புரட்சி வெற்றி வாகை சூடியிருக்கிறது....

''எதிர்ப் புரட்சியின் கொடிக்குக் கீழ் நடைபோடும் படையினருக்கு இத்ஸே-யி-க வேண்டுகோள் விடுக்கிறது, உடனே ஆயுதங்களைத் துறக்கும்படி அவர்களை அறைகூவி அழைக்கிறது—விரல்விட்டு எண்ணக்கூடிய ஒருசில நிலப்பிரபுகள், முதலாளிகளின் நலன்களுக்காக வேண்டி தமது சோதரர்களது இரத்தத்தை இனியும் சிந்தலாகாது என்று அவர்களிடம் கூறுகிறது. மக்களின் பகைவர்களது கொடியின் கீழ் கணப் பொழுதுக்குங்கூட இனியும் தொடர்ந்து செயல்படுவோரை தொழிலாளர்கள், படையாட்கள், விவசாயிகளது ருஷ்யா நிந்தனை செய்து சபிக்கின்றது....

''கசாக்குகளே! வெற்றிகர மக்களின் அணிவரிசைக்கு வந்து சேருங்கள்! ரயில்வேத் தொழிலாளர்களே, அஞ்சல் துறையினரே, தந்திப் பணியாளர்களே—புதிய மக்கள் அர சாங்கத்துக்கு அனைத்து ஆதரவும் அளியுங்கள்!''

## அத்தியாயம் 10இன் அனுபந்தம்

### 1.

### கிரெம்ளினுக்கு ஏற்பட்ட சேதம்

கிரெம்ளினுக்கு ஏற்பட்ட சேதத்தை நான் நேரில் சென்று பார்வையிட்டேன், பீரங்கித் தாக்குதலுக்குப் பிற்பாடு உட னடியாகவே நான் அங்கு சென்றிருந்தேன். சிறிய நிக்கலா யிவ் ஸ்கி அரண்மனை, குறிப்பிட.த்தக்க முக்கியத்துவம் வாய்ந்த தாகக் கூற முடியாத ஒரு கட்டடமாகும், பெரும் கோம கள்கள் எவராவது எப்போதாவது அங்கே வரவேற்பு விருந்து கள் அளிப்பது வழக்கம். இப்போது இந்த அரண்மனை யூன் கெர்களால் தமது கொட்டடிகளாகப் பயன்படுத்தப்பட்டது. அது பீரங்கிக் குண்டுகளால் சேதப்படுத்தப்பட்டது மட்டு மல்ல, அனேகமாகத் தகர்க்கப்பட்டு விட்டதாகவும் சொல்ல லாம். ஆனால் நல்ல வேளை, குறிப்பான வரலாற்றுச் சிறப் புக்குரியது ஏதும் அதனுள் இருக்கவில்லை.

உஸ்பேன்ஸ்கி தேவாலயத்தின் வில்மாடங்களில் ஒன்றில் குண்டு வெடித்துத் துளைத்திருந்தது, ஆனால் கூரைத் தளத்தின் பன்னிறச் சித்திர வேலைப்பாடுகளில் ஒரு சில அடி நீளத்துக்கு ஏற்பட்ட சேதத்தைத் தவிர வேறு சேதம் ஏதும் இல்லை. பிளகவேஷ்ச்சென்ஸ்கி தேவாலயத்தின் வாயில் முகப்பின் சுவர்ச் சித்திரங்கள் குண்டு வெடித்துப் பெரிதும் சேதமடைந்திருந்தன. இன்னொரு குண்டு இவான் வெலீக்கியின் மூலையைத் தாக்கியிருந்தது. சூதவ் மடாலயம் முப்பது தரம் தாக்குண்டிருந்தது. ஆனால் ஒரேவொரு குண்டு தான் சன்னல் வழியே உள்ளே சென்றது, ஏனையவை சன்னல்

களது கல் முகப்பையும் கூரைச் சுவர் பிதுக்கங்களையும் உடைத்திருந்தன.

ஸ்பாஸ்கி கோபுரத்தின் கடிகாரம் நசுக்கப்பட்டிருந்தது. திரோயித்ஸ்கி வாயில் வழி தகர்க்கப்பட்டிருந்தது, ஆனால் எளிதில் சரிசெய்யப்படக் கூடியதாகவே இருந்தது. மூலைக் கோபுரங்களில் ஒன்று அதன் கல் கூம்பு முனையை இழந்திருந்தது.

வசீலி மாதாகோயிலும், அதே போல் பெரிய கிரெம்ளின் அரண்மனையும், அதன் நிலவறைகளில் இருந்த மாஸ்கோ, பெத்ரொகிராதுக் கலைச் செல்வங்களும், கருவூலத்திலிருந்த அரச ஆபரணங்களும் தீண்டப்படவே இல்லை. இவ்விடங்களினுள் யாரும் அடியெடுத்து வைக்கக்கூட இல்லை.

## 2.

### லூனச்சார்ஸ்கியின் அறிக்கை

''தோழர்களே! நாட்டின் இளம் எஜமானர்கள் நீங்கள், செய்வதற்கும் சிந்திப்பதற்கும் உங்களுக்கு இப்போது நிறைய இருக்கின்றன. இருப்பினும் உங்களது கலைத் துறை, விஞ்ஞானத் துறைச் செல்வங்களை எப்படிப் பாதுகாப்பதென்று நீங்கள் தெரிந்து கொள்வது அவசியமாகும்.

''தோழர்களே! மாஸ்கோவில் நடைபெறுவது பயங்கரமான, ஈடு செய்ய முடியாத துர்பாக்கியமாகும்.... ஆட்சியதிகாரத்துக்காகப் போராடும் மக்கள் புகழ் மிக்க நமது தலைநகரைப் பாழ்படுத்தியுள்ளனர்.

''வன்முறைப் போராட்டத்துக்கும், நாசகார யுத்தத்துக்குமான இந்நாட்களில் கல்வித் துறைக் கமிசாராக இருப்பது கொடுமையிலும் கொடுமையாகும். ஒரு புதிய, மேல் நிலையான கலாசாரத்துக்குரிய ஆதாரமாகிய சோஷலிசம் வெற்றி பெறப் போகிறது என்ற நம்பிக்கை ஒன்று மட்டுமே எனக்கு ஆறுதல் அளிப்பதாக இருக்கிறது. மக்களுடைய கலைச் செல்வங்களைப் பாதுகாக்க வேண்டுமென்ற பொறுப்புணர்ச்சி என்னை வருத்துகிறது.... எனக்குரிய இந்தப் பதவியிலிருந்து என்னால் எவ்விதத்திலும் செல்வாக்கு செலுத்த

முடியவில்லை, இப்பதவியில் தொடர்ந்து என்னால் இருக்க இயலவில்லை, ஆகவே நான் ராஜிநாமா செய்தேன்.*

''ஆனால், தோழர்களே, எனக்கு உங்களுடைய ஆதரவை அளிக்கும்படி உங்களை மன்றாடிக் கேட்டுக் கொள்கிறேன்.... நமது தாயகத்தின் எழிலை உங்களுக்கும் உங்களது சந்ததியாருக்காகவும் நீங்கள் பாதுகாத்தாக வேண்டும்; மக்களது சொத்தின் காவலர்களாகச் செயல்படுங்கள்.

''மிகக் கடுமையான அறியாமை இருளில் இருத்தப்பட்டிருப்போருங்கூட, நீண்ட நெடுங் காலமாய் அறியாமையில் ஆழ்த்தப்பட்டோருங்கூட, மிக மிகச் சீக்கிரமே விழித்தெழுவார்கள், கலையானது ஆனந்தத்துக்கும் வலிமைக்கும் விவேகத்துக்குமான ஓர் ஆதாரம் என்பதைப் புரிந்து கொள்வார்கள்....''

*1917 நவம்பர் 16*

**கல்வித் துறை மக்கள் கமிசார்,**
*அ. லுனச்சார்ஸ்கி.*

3.

## முதலாளித்துவ வர்க்கத்தாருக்குக் கேள்விப் பட்டியல்

| | | |
|---|---|---|
| வட்டாரம் . . | குடும்பப் பெயர் . | வீட்டுக் கமிட்டி . |
| . . . . . . . . | . . . . . . . . . | . . . . . . . . . . |
| எண் . . . . . | முதற்பெயர் . . | |
| முகவரி . . . . | தந்தைப் பெயர் . | |
| . . . . . . . . | . . . . . . . . . | எண் . . . . . . |

* அ.வி. லுனச்சார்ஸ்கி கல்வித் துறை மக்கள் கமிசார் பதவியிலிருந்து விலகிவிடவில்லை, தொடர்ந்து அப்பதவியில் இருந்துதான் பணியாற்றினார்.—[பதிப்பாசிரியர்.]

| பால் | வயது | கையிறுப்புகள் | | | |
|---|---|---|---|---|---|
| | | துணி | நீளம் (அர்ஷீன்) | தயாரான ஆடைகள் | உறுப்படி |
| மாதச் சராசரி | | உள்ளுடுப்பு | . . . | மேல் கோட்டு: | . . . |
| வரவு | செலவு | ஆடைத்தொகுதி | . . . | குளிர்கால | . . . |
| | | மேல்கோட்டு | . . . | கோடை . . | . . . |
| | | | | கூதிர்கால . | . . . |
| | | | | ஆடைத் தொகுதி . . | . . . |
| மாத வாடகை | | | | | |
| குடித் தனப் பகுதி | அறை | | | புதைமிதி | . . . |
| | | பிறவகைகள் | . . . | புதைமிதி மேலுறை | . . . |

அடியில் கையொப்பமிட்டிருக்கும் நான் மேலே தந்துள்ள விவரங்கள் மெய்யானவை என்றும், இந்தக் கேள்வி அட்டையை வேறு எவ்விடத்திலும் பெற்றுக் கொள்ளவில்லை என்றும் உறுதி மொழி கூறுகின்றேன்.

கையொப்பம் . . . . . .
(குடியிருப்பவரின் கையொப்பம்)
மாஸ்கோ . . . . . 191.
(வீட்டுக் கமிட்டியின் முத்திரை)

## 4.

## நிதித் துறையில் புரட்சிகர நடவடிக்கை

### ஆணை

தொழிலாளர்கள், படையாட்கள் பிரதிநிதிகளது மாஸ்கோ சோவியத்துடன் இணைந்த புரட்சி இராணுவக் கமிட்டி எனக்கு அளித்திருக்கும் அதிகாரங்களை ஆதாரமாகக் கொண்டு நான் ஆணையிடுகிறேன்:

1. எல்லா வங்கிகளும் அவற்றின் கிளைகளும், மத்திய அரசாங்க சேமிப்பு வங்கியும் அதன் கிளைகளும், தபால், தந்தி அலுவலகங்களிலுள்ள சேமிப்பு வங்கிகளும் நவம்பர் 9 முதல் காலை 11லிருந்து பிற்பகல் 1 மணி வரை, மேற்கொண்டு ஆணையிடப்படும் வரையில் திறக்கப்பட்டிருக்க வேண்டும்.

2. நடப்புக் கணக்குகளிலிருந்தும், சேமிப்புக் கணக்குப் புத்தகங்களிலிருந்தும் மேற்கூறிய நிலையங்கள் தொகை வைத்திருப்பவர் ஒவ்வொருவருக்கும் அடுத்த ஒரு வாரத்தின் போது 150 ரூபிளுக்கு மேற்படாத தொகைகள் மட்டுமே தரலாம்.

3. நடப்புக் கணக்குகளிலிருந்தும், சேமிப்புக் கணக்குப் புத்தகங்களிலிருந்தும் இந்த ஒரு வாரத்தில் 150 ரூபிளுக்கு அதிகமான தொகைகளும், மற்றும் எல்லா வகையான இதர கணக்குகளிலிருந்தான தொகைகளும் அடுத்த மூன்று நாட்களில் —நவம்பர் 9, 10, 11—பின்வரும் சந்தர்ப்பங்களில் மட்டுமே அளிக்கப்பட அனுமதிக்கப்படும்:

(அ) இராணுவ நிறுவனங்களின் கணக்குகளிலிருந்து இந்நிறுவனங்களது தேவைகள் பூர்த்தியாவதற்காக;

(ஆ) பணியாளர்களுக்குச் சம்பளங்களும், தொழிலாளர்களுக்கு அவர்களது சம்பாத்தியங்களும் ஆலைக் கமிட்டிகள் அல்லது பணியாளர்களது சோவியத்துகளால் அங்கீகரிக்கப்பட்டு, கமிசார்களால் அல்லது புரட்சி இராணுவக் கமிட்டிகள், மாவட்டப் புரட்சி இராணுவக் கமிட்டிகள் ஆகியவற்றின் பிரதிநிதிகளால் சான்றொப்பமிடப்பட்ட அட்டவணைகளுக்கும் பட்டியல்களுக்கும் ஏற்ப அளிக்கப்படுவதற்காக.

4. பண வரைவுக்கு எதிராய் 150 ரூபிளுக்கு மேல் தரப்படலாகாது; எஞ்சிய தொகைகள் நடப்புக் கணக்குகளில் பதிவு செய்யப்பட வேண்டும், இந்தத் தொகைகளும் இந்த ஆணையில் குறிக்கப்பட்டிருக்கும் முறையிலேதான் செலுத்தப்பட வேண்டும்.

5. இந்த மூன்று நாட்களின் போது ஏனைய எல்லா விதமான வங்கிச் செயற்பாடுகளுக்கும் தடை விதிக்கப்படுகிறது.

6. எல்லா கணக்குகளிலும் எவ்வளவு வேண்டுமானாலும் பணத் தொகைகளை வரவு வைக்க அனுமதியளிக்கப்படுகிறது.

7. பிரிவு 3ல் குறிக்கப்பட்டிருக்கும் அதிகார அளிப்புச் சான்றொப்பம் அளிப்பதற்காக நிதி அவைப் பிரதிநிதிகள் இலீன்கா தெருவில் பங்கு மாற்றுச் சந்தைக் கட்டடத்தில் காலை 10 மணியிலிருந்து பிற்பகல் 2 மணி வரை அலுவல் புரிவார்கள்.

8. வங்கிகளும் சேமிப்பு வங்கிகளும் அன்றாட ரொக்கச் செயற்பாடுகளின் மொத்தத் தொகைகளை பிற்பகல் 5 மணிக்குள் ஸ்கோபெலெவ் சதுக்கத்திலுள்ள சோவியத்தின் தலைமையகத்தில் புரட்சி இராணுவக் கமிட்டிக்கு, நிதி அவைக்காக குறித்து அனுப்ப வேண்டும்.

9. இந்த ஆணைக்கு இணங்க செயல்பட மறுக்கும் எல்லா வகையான செலாவணி நிலையங்களது எல்லாப் பணியாளர்களும் நிர்வாகிகளும் புரட்சியின் பகைவர்களாகவும் பெருந்திரள் மக்களின் பகைவர்களாகவும் புரட்சி நீதிமன்றங்களின் முன்னால் பொறுப்பேற்க வேண்டிவரும். இவர்களுடைய பெயர்கள் எல்லாருக்கும் தெரியும் பொருட்டு வெளியிடப்படும்.

10. சேமிப்பு வங்கிகள், வங்கிகள் இவற்றின் கிளைகளின் செயற்பாடுகளை இந்த ஆணையின் வரம்புகளுக்கு உட்படும்படி கண்காணிப்பதற்காக மாவட்ட புரட்சி இராணுவக் கமிட்டிகள் மூன்று பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுத்து, இவர்களுடைய அலுவலகத்துக்குரிய இடத்தையும் நிர்ணயம் செய்யும்.

**புரட்சி இராணுவக் கமிட்டியின்**
**முழு அதிகாரம் பெற்ற கமிசார்,**
எஸ். ஷெவெர்தின்-மக்சீமென்கோ.

## அத்தியாயம் 11இன் அனுபந்தம்

### 1.

### இந்த அத்தியாயத்தின் வரம்புகள்

ஏறத்தாழ இரண்டு மாதக் காலத்தைத் தன்னுள் கொண்டது இந்த அத்தியாயம். நேசநாடுகளுடன் பேச்சுகள் நடைபெறுதல், ஜெர்மானியர்களுடன் பேச்சுகள் நடந்தேறி

போர்நிறுத்தம் முடிவாதல், பிரேஸ்த்-லித்தோவ்ஸ்கில் சமாதானப் பேச்சுவார்த்தைகள் ஆரம்பமாதல் ஆகிய பல நிகழ்ச்சிகளுக்குமுரிய காலமும், மற்றும் சோவியத்து அரசின் அடித்தளங்கள் நிறுவப்பட்ட காலமும் இதனுள் அடங்குகின்றன.

ஆனால் வரலாற்றுச் சிறப்புடைத்த இந்த மிக முக்கிய நிகழ்ச்சிகளை விவரித்து அவற்றுக்கு விளக்கம் கூறுதல் இந்தப் புத்தகத்தில் எனக்கு நான் வகுத்துக் கொண்ட நோக்கத்தில் இடம் பெறவில்லை. இதைச் செய்ய இங்கு இடம் போதாது. எனவே இந்நிகழ்ச்சிகளை நான் ''கர்னீலவ் முதல் பிரேஸ்த்-லித்தோவ்ஸ்க் வரை'' என்ற இன்னொரு புத்தகத்துக்காக ஒதுக்கி வைக்கிறேன்.

ஆகவே இந்த அத்தியாயத்தில் சோவியத்து அரசாங்கம் உள்நாட்டில் தனது அரசியல் ஆட்சியதிகாரத்தை உறுதி செய்து கொள்வதற்காக மேற்கொண்ட முயற்சிகளைக் குறிப்பிடுவதுடன் நிறுத்திக் கொண்டு, உள்நாட்டில் பகைக் கூறுகளை அது படிப்படியாக வெற்றி கொண்டதை மட்டும்—படுபாதகமான பிரெஸ்த்-லித்தோவ்ஸ்க் சமாதான உடன்பாட்டால் தற்காலிகமாய் இந்த நிகழ்ச்சிப் போக்கு தடை செய்யப்பட்டது—இங்கு எடுத்துரைக்கிறேன்.

## 2.

## ருஷ்யாவின் மக்கள்தம் உரிமைப் பிரகடனம் (முகவுரை)

தொழிலாளர்கள், விவசாயிகளது அக்டோபர் புரட்சி பொது விடுதலை எனும் கொடியின் கீழ் ஆரம்பமாயிற்று.

நிலப்பிரபுக்களது ஆட்சியதிகாரத்திலிருந்து விவசாயிகள் விடுதலை பெறுகிறார்கள்; நிலத்தில் இனி நிலப்பிரபுக்களுக்குச் சொத்துரிமை இல்லை—இது ஒழிக்கப்பட்டுள்ளது. படையாட்களும் மாலுமிகளும் எதேச்சாதிகார ஜெனரல்களின் ஆட்சியதிகாரத்திலிருந்து விடுதலை பெறுகிறார்கள்; ஜெனரல்கள் இனி தேர்ந்தெடுக்கப்படுவோராகவும் பதவியிலிருந்து திருப்பியழைக்கப்படக் கூடியோராகவும் ஆகின்ற

னர். தொழிலாளர்கள் முதலாளிகளுடைய சபல எண்ணங்களிலிருந்தும் தான்தோன்றித்தனமான சித்தத்திலிருந்தும் விடுதலை பெறுகிறார்கள்; ஆலைகளின் மீது இனி தொழிலாளர்களது கண்காணிப்பு நிறுவப்படும். உயிருள்ளவை யாவும், வாழ வல்லவை அனைத்தும் வெறுக்கத்தக்க கட்டுத் தறிகளிலிருந்து விடுதலை பெறுகின்றன.

எஞ்சியிருப்போர் ருஷ்யாவின் மக்கள் மட்டும்தாம், இவர்கள் துன்பதுயரங்களுக்கு இலக்காகி வருந்தியவர்கள், ஒட்டுக்குமுறையாலும் தன்தோன்றித்தனத்தாலும் வதைக்கப்பட்டு வருகிறவர்கள். இவர்களுடைய விடுதலை உடனடியாக ஆரம்பமாகியாக வேண்டும், இவர்களுடைய விடுதலை வைராக்கியத்தோடும் திட்டவட்டமாகவும் நடைமுறையாக்கப்பட்டாக வேண்டும்.

ஜார் ஆட்சியமைப்பு இருந்து வந்த காலத்தில் ருஷ்யாவின் தேசிய இனங்கள் தவறாமல் முறைப்படி ஒன்றுக்கு எதிராய் ஒன்று குரோதம் கொள்ளும்படி தூண்டிவிடப்பட்டு வந்தன. இத்தகைய கொள்கையின் விளைவுகள் எல்லாரும் அறிந்தவையே: ஒருபுறத்தில் படுகொலைகள், இரத்த வெறியாட்டங்கள்; மறுபுறத்தில் பல்வேறு தேசிய இன மக்களின் அடிமை வாழ்வு.

இந்த வெட்கங்கெட்ட கொள்கை இனி திரும்பவும் தலை காட்ட முடியாது, தலை காட்டவுங் கூடாது, இதற்குப் பதில் இனி ருஷ்யாவின் எல்லாத் தேசிய இனங்களும் தாமே மனமுவந்து நேர்மையோடு ஒன்றுகூடி இணைந்து வாழும் கொள்கையானது செயல்படுத்தப்பட்டாக வேண்டும்.

ஏகாதிபத்தியச் சகாப்தத்தில், மார்ச் மாதப் புரட்சியை அடுத்து, ஆட்சியதிகாரமானது காடேட்டு முதலாளித்துவ வர்க்கத்தாரின் கைக்கு மாற்றப்பட்டதும், அப்பட்டமான முறையில் ஆத்திரமூட்டித் தூண்டிவிடும் கொள்கைக்குப் பதிலாகக் கபடமான முறையில் ருஷ்யாவின் பல்வேறு தேசிய இனங்களுக்கிடையே அவநம்பிக்கையை வளர்த்திடும் கொள்கை கைக்கொள்ளப்பட்டது; குறை கூறுவதற்கும் தேசிய இனங்களது அர்த்தமற்ற ''சுதந்திரம்,'' ''சமத்துவம்'' என்பதான ஏமாற்றுக்குமான கொள்கை கைக் கொள்ளப்பட்டது. இப்படிப்பட்ட கொள்கையின் விளைவுகள் எல்லா

ரும் அறிந்தவையே: தேசிய இனப் பகைமையின் வளர்ச்சி, பரஸ்பர நம்பிக்கை மலர முடியாமற் தடைப்படுதல்.

பொய்மைக்கும் அவநம்பிக்கைக்கும், குறை காண்பதற்கும் ஆத்திமூட்டித் தூண்டிவிடுவதற்குமான இந்தக் கேடுகெட்ட கொள்கைக்கு முற்றுப் புள்ளி வைத்தாக வேண்டும். இனி இதற்குப் பதில், ருஷ்யாவின் பல்வேறு தேசிய இனங்களிடையே முழுநிறைவான பரஸ்பர நம்பிக்கை மலர்வதற்கு வழி வகுத்திடும் வெளிப்படையான, நேர்மையான கோள்கையைக் கைக்கொண்டாக வேண்டும். இவ்விதம் நம்பிக்கையை மலரச் செய்வதன் விளைவாக மட்டுமே ருஷ்யாவின் பல்வேறு தேசிய இனங்களிடைத்தே நேர்மையானதும் நீடித்து நிலவக் கூடியதுமான ஐக்கியத்தை உண்டாக்க முடியும். இம்மாதிரியான ஓர் ஐக்கியத்தின் விளைவாக மட்டுமே ருஷ்யாவின் பல்வேறு தேசிய இனங்களையும் சேர்ந்த தொழிலாளர்களும் விவசாயிகளும் நாடுபிடிக்கும் ஏகாதிபத்திய முதலாளித்துவ வர்க்கத்தாரின் எல்லா முயற்சிகளையும் எதிர்த்து நிற்க வல்ல புரட்சிகர சக்தியாக ஒருசேர இணைந்திட முடியும்.

## 3.

### அரசாணைகள்
### வங்கிகள் நாட்டுடைமையாதல் குறித்து

தேசப் பொருளாதாரத்தின் முறையான ஒழுங்கமைப்புக்காக வேண்டி, வங்கிகளது ஊக வாணிபம் அடியோடு ஒழிக்கப்படுவதற்காகவும் தொழிலாளர்களும் விவசாயிகளும் உழைப்பாளி மக்கட் பகுதியோர் அனைவரும் வங்கி மூலதனத்தின் சுரண்டலிலிருந்து முழு விடுதலை பெறுவதற்காகவும் வேண்டி, மற்றும் ருஷ்யக் குடியரசு அனைத்துக்கும் ஒன்றேயான தேசிய வங்கியை, மக்களின், ஏழை வகுப்புகளின் மெய்யான நலன்களுக்குச் சேவை புரியக் கூடிய இந்தத் தேசிய வங்கியை அமைத்திடுவதற்காக வேண்டி, மத்தியச் செயற் குழுவானது (இத்ஸே-யி-க) தீர்மானிப்பதாவது:

1. வங்கிச் செயற்பாடுகள் யாவும் அரசு ஏகபோகமாகுமென அறிவிக்கப்படுகிறது.

2. தற்போதுள்ள தனியார் கூட்டுப்பங்கு வங்கிகளும் வங்கி அலுவலகங்களும் அரசு வங்கியுடன் இணைக்கப்படுகிறன.

3. கலக்கப்படும் இந்த நிறுவனங்களது இருப்பும் பொறுப்பும் அரசு வங்கியால் எடுத்துக் கொள்ளப்படுகின்றன.

4. தனியார் வங்கிகளை அரசு வங்கியுடன் இணைக்கும் உத்தரவு தனி அரசாணை ஒன்றால் செயலுக்குக் கொண்டு வரப்படும்.

5. தனியார் வங்கிகளது விவகாரங்களின் தற்காலிக நிர்வாகம் அரசு வங்கியின் குழுவிடம் ஒப்படைக்கப்படுகிறது.

6. சிறு வைப்புத் தொகை வைத்திருப்போரின் நலன்கள் பாதுகாக்கப்படும்.

## இராணுவத்தினர் எல்லோரும் பதவிநிலையில் சமத்துவமாதல் குறித்து

சேனையில் முன்பிருந்த சமத்துவமின்மையின் மீதமிச்சங்கள் யாவும் உடனடியாகவும் முடிவாகவும் நீக்கப்பட வேண்டுமென்று புரட்சிகர மக்களுக்குள்ள சித்தத்தை நிறைவேற்றி, மக்கள் கமிசார் அவையானது ஆணையிடுகிறது:

1. கார்ப்பரல் பதவியிலிருந்து ஜெனரல் பதவி வரை எல்லாப் பதவிநிலைகளும் படிநிலைகளும் நீக்கப்படுகின்றன. ருஷ்யக் குடியரசின் சேனை இப்போது சுதந்திரமான, சமத்துவமான குடியோரால், புரட்சி சேனையின் படையாட்கள் என்னும் மாண்புக்குரிய பட்டம் கொண்டவர்களால் ஆனதாகும்.

2. பழைய பதவிநிலைகள், படிநிலைகளுடன் இணைந்த எல்லாத் தனிவுரிமைகளும், ஏற்றத்தாழ்வினைக் குறிக்கும் எல்லாப் புறநிலைச் சின்னங்களும் நீக்கப்படுகின்றன.

3. பட்டங்களைக் குறிப்பிட்டு அழைக்கும் விளிமுறைகள் யாவும் நீக்கப்படுகின்றன.

4. விருதுகளும் சிறப்புகளும் ஏனைய உயர்வுச் சின்னங்களும் அகற்றப்படுகின்றன.

5. படையதிகாரியின் பதவிநிலை நீக்கப்படுவதைத் தொடர்ந்து படையதிகாரிகளது தனிப்பட்ட நிறுவனங்கள் யாவற்றுக்கும் முடிவு கட்டப்படுகிறது.

*6. சேனையில் இப்போது நடப்பிலுள்ள சேவகர்கள் முறை ஒழிக்கப்படுகிறது.*

*குறிப்பு.—தலைமையகங்கள், நெறிமன்றங்கள், கமிட்டிகள், இன்ன பிற இராணுவ நிறுவனங்களில் மட்டும்தான் சேவகர்கள் விட்டு வைக்கப்படுகிறார்கள்.*

**மக்கள் கமிசார் அவையின் தலைவர்,**
*வி. உலியானவ் (லெனின்).*
**இராணுவ, கப்பற் படை மக்கள் கமிசார்,**
*என். குரிலேன்கொ.*
**இராணுவ விவகார மக்கள் கமிசார்,**
*என். பத்வோய்ஸ்கி.*
**அவைச் செயலாளர்,**
*என். கொர்புனோவ்.*

* * *

## சேனையில் தேர்தல் வழிக் கோட்பாடும் அதிகார ஒழுங்கமைப்பும் குறித்து

*1. உழைப்பாளி மக்களது சித்தத்தின் நேறைவேற்றத்துக்குச் சேவையாற்றும் சேனையானது, இந்தச் சித்தத்தின் தலைமைப் பிரதிநிதியான மக்கள் கமிசார் அவைக்குக் கீழ்ப் படிந்து நடக்கக் கடமைப்பட்டது.*

*2. இராணுவப் பிரிவுகளுக்கும் தொகுதிகளுக்குமுரிய வரம்புகளுக்குள் முழு அதிகாரமும் அப்பிரிவு அல்லது தொகுதியின் படையாள் கமிட்டிகளிடமும் சோவியத்துகளிடமும் ஒப்படைக்கப்படுகிறது.*

*3. படைகளது வாழ்க்கையிலும் செயற்பாட்டிலும் ஏற்கெனவே கமிட்டிகளின் அதிகாரத்துக்கு உட்பட்டிருக்கும் துறைகள் இப்போது சட்ட முறையில் அவற்றின் நேரடிக் கண்காணிப்பில் விடப்படுகிறது. கமிட்டிகள் பொறுப்பேற்க முடியாத செயல் துறைகள் மீது படையாட்கள் சோவியத்துகளின் கண்காணிப்பு நிறுவப்படுகிறது.*

*4. தலைமை அலுவலர்களும் படையதிகாரிகளும் தேர்ந்தெடுக்கப்பட்டு நியமிக்கப்படும் முறை புகுத்தப்படுகிறது. ரெஜிமெண்ட்டுகளின் படைத்தலைவர்களும் அடங்கலாய் எல்லாப் படைத்தலைவர்களும் ஸ்குவாட்ரன்கள், பிளட்டூன்கள், கம்பெனிகள், பீரங்கிப் படைத் தொகுதிகள், டிவிஷன்*

கள் (2-3 பீரங்கிப் படைத் தொகுதிகள்), ரெஜிமெண்ட்டு கள் ஆகியவற்ருல் அனைவருக்குமான வாக்குரிமையின் அடிப் படையில் தேர்ந்தெடுக்கப்படுகிருர்கள். ரெஜிமெண்ட்டின் படைத்தலைவருக்கு மேலுள்ள எல்லாப் படைத்தலைவர்களும், உச்சப் படைத்தலைவரும் அடங்கலாய், கமிட்டிகளது காங் கிரசுகள் அல்லது மாநாடுகளால் தேர்ந்தெடுக்கப்படுகிருர் கள்.

குறிப்பு.—''மாநாடு'' என்பது குறிப்பிட்ட படியைச் சேர்ந்த கமிட்டிகள் அவற்றுக்கு ஒரு படி குறைவான கமிட்டி களது பிரதிநிதிகளுடன் சேர்ந்து நடத்தும் கூட்டத்தைக் குறிப்பதாக அர்த்தப்படுத்தப்பட வேண்டும். (ரெஜிமெண்ட்டு களது கமிட்டிகளின் ''மாநாடு'' என்பது கம்பெனிகளது கமிட்டிகளைச் சேர்ந்த பிரதிநிதிகளையும் கொண்டு நடை பெறும் கூட்டமாகும்.—ஆசிரியர்.)

5. ரெஜிமெண்ட்டின் படைத்தலைவருக்கு மேற்பட்ட பதவிக்குத் தேர்ந்தெடுக்கப்படும் படைத்தலைவர்கள் அரு காமையில் அமைந்த உச்சக் கமிட்டியால் அங்கீகரிக்கப் பட வேண்டும்.

குறிப்பு.—தேர்ந்தெடுக்கப்பட்ட படைத் தலைவரை உச்சக் கமிட்டி அங்கீகரிக்க மறுக்குமாயின், அதற்குரிய காரணங்களை அது குறிப்பிட வேண்டும்; அப்போது கீழ்நிலைக் கமிட்டியால் இரண்டாம் தரம் தேர்ந்தெடுக்கப்படும் படைத்தலைவர் அங்கீகரிக்கப்பட்டாக வேண்டும்.

6. சேனைகளின் படைத்தலைவர்கள் சேனைக் காங்கிரசு களால் தேர்ந்தெடுக்கப்படுகிருர்கள். போர்முனைகளின் படைத்தலைவர்கள் போர்முனைக் காங்கிரசுகளால் தேர்ந் தெடுக் கப்படுகிருர்கள்.

7. தனித் துறை அறிவோ, பிற நடைமுறைப் பயிற்சியோ தேவைப்படும் தொழில்நுட்பத் தன்மையதான பதவிகளுக்கு — அதாவது டாக்டர்கள், பொறியாளர்கள், தொழில்நுட்ப வினைஞர்கள், தந்தியாளர்கள், வானெலி இயக்குவோர், ஆகாய விமானிகள், மோட்டார் வண்டிக் காரர்கள் முதலானோரது பணித்துறைகளுக்கு—இவற்றுக்கு வேண்டிய தனித்துறை அறிவு பெற்றுள்ளவர்கள் மட்டுமே, அந்தந்தப் பணித் துறைத் தொகுதிகளது கமிட்டிகளாலும் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும்.

*8. இராணுவத் தலைமை அலுவலர்கள் இப்பதவிக்குத் தேவையான இராணுவத் தனிப் பயிற்சி பெற்றவர்களிட மிருந்து தேர்ந்தெடுக்கப்பட வேண்டும்.*

*9. இராணுவ அலுவலர் குழுவின் ஏனைய உறுப்பினர்கள் எல்லோரும் தலைமை அலுவலரால் நியமிக்கப்பட்டு, அந் தந்தக் காங்கிரசாலும் அங்கீகரிக்கப்பட வேண்டும்.*

*குறிப்பு.—தனிப் பயிற்சி பெற்றவர்கள் யாவரும் ஒரு தனிப் பட்டியலில் குறிக்கப்பட்டிருக்க வேண்டும்.*

*10. செயல்பட்டு வரும் படைத்தலைவர்களில், படை யாட்களால் எந்தப் பதவிக்கும் தேர்ந்தெடுக்கப்படாதவர் களாகவும், ஆகவே சாதாரணப் படையாட்களது நிலைக்குரிய வர்களாகவும் இருக்கும் படைத்தலைவர்களைச் சேவை யிலிருந்து ஓய்வில் விலக்குவதற்கு உரிமை உண்டு.*

*11. படைத்தலைமை சம்பந்தமான ஏனைய எல்லா வேலை களுக்கும், பொருளாதாரப் பிரிவுகளைச் சேர்ந்த வேலைகளைத் தவிர்த்து, ஆட்களை நியமிப்பது தேர்ந்தெடுக்கப்பட்ட அந் தந்த படைத்தலைவர்களுக்குமுரிய பொறுப்பாகும்.*

*12. தலைமைப் படைத் தலைவர்களது தேர்தல்களைப் பற்றிய விவரமான கட்டளைகள் தனியே வெளியிடப்படும்.*

**மக்கள் கமிசார் அவைத் தலைவர்,**
*வி. உலியானவ் (லெனின்).*
**இராணுவ, கடற்படை விவகாரங்களுக்கான மக்கள் கமிசார்.**
*எம். குரிலேன்கொ,*
**இராணுவ விவகார மக்கள் கமிசார்,**
*என். பத்வோய்ஸ்கி,*
**அவையின் செயலாளர்,**
*என். கொர்புனோவ்.*

* * *

## வகுப்புகளும் பட்டப் பெயர்களும் ஒழிக்கப்படுவது பற்றிய அரசாணை

*1. எல்லா வகுப்புகளும் வகுப்புப் பிரிவினைகளும், எல்லா வகுப்புத் தனிவுரிமைகளும் வரையறைகளும், எல்லா வகுப்பு நிறுவனங்களும் கழகங்களும், எல்லா சிவில் துறைப் பட்டப் படிநிலைகளும் ஒழிக்கப்படுகின்றன.*

2. சமுதாயத்தில் எல்லா வகுப்புப் பாகுபாடுகளும் (பிரபுக்கள், வணிகர்கள், குட்டிமுதலாளித்துவப் பகுதியோர், விவசாயிகள் முதலான பாகுபாடுகள்), எல்லாப் பட்டப் பெயர்களும் (கோமகன், பிரபு முதலானவை), மற்றும் சிவில் பட்டத் தராதரங்களும் (தனி ஆலோசகர், அரசு ஆலோசகர் போன்றவை) ஒழிக்கப்பட்டு, ருஷ்யக் குடியரசுக் குடிமையாளர் என்னும் பொதுப் பெயர் நிலை நாட்டப்படுகிறது.

3. பிரபுக் குலத்தவரது சொத்துகளும் கழகங்களும் அந்தந்த ஸேம்ஸ்த்வொ தன்னாட்சி உறுப்புகளுக்கு மாற்றப்படுகின்றன.

4. வணிகர்கள், முதலாளிகளது நிறுவனங்களுடைய சொத்துகள் உடனடியாக நகரத் தன்னாட்சி உறுப்புகளுக்கு மாற்றப்படுகின்றன.

5. எல்லா விதமான வகுப்பு நிறுவனங்களும் அவற்றின் சொத்துகளும் ஆவணக் கையிருப்புகளும் அடங்கலாய் நகர, ஸேம்ஸ்த்வொ தன்னாட்சி உறுப்புகளுக்கு மாற்றப்படுகின்றன.

6. நடப்பிலுள்ள சட்டங்களில் இந்த விவகாரங்கள் சம்பந்தமான எல்லாப் பிரிவுகளும் ரத்து செய்யப்படுகின்றன.

7. இந்த அரசாணை இது வெளியிடப்படும் நாளிலிருந்து செயலுக்கு வருகிறது; இது தொழிலாளர்கள், படையாட்கள், விவசாயிகள் பிரதிநிதிகளது சோவியத்துகளால் செயல்படுத்தப்பட வேண்டும்.

இந்த அரசாணை இத்ஸே-யி-கவால், 1917 நவம்பர் 10ல் நடைபெற்ற அதன் கூட்டத்தின் போது அங்கீகரிக்கப்பட்டது, கையொப்பமிடுவோர்:

**இத்ஸே-யி-கவின் தலைவர்,**
ஸ்வெர்திலோவ்.
**மக்கள் கமிசார் அவைத் தலைவர்,**
வி. உலியானவ் (லெனின்).
**மக்கள் கமிசார் அவைச் செயற் குழு,**
வி. போன்ச்-புருயேவிச்.
**அவையின் செயலாளர்,**
என். கொர்புனோவ்.

* * *

*டிசம்பர் 3ல் மக்கள் கமிசார் அவை பின்வருமாறு தீர் மானித்தது: ''எல்லா அரசாங்க நிலையங்களிலும் நிர்வாகங் களிலும், பொது நிலையினராயினும் தனித் தன்மையராயி னும் விதிவிலக்கின்றி, எல்லா அலுவலர்கள், பணியாளர் களின் சம்பளங்களும் குறைக்கப் படுகின்றன.''*

*முதற்கண், மக்கள் கமிசரின் சம்பளம் மாதத்துக்கு 500 ரூபிளாக நிர்ணயிக்கப்படுகிறது, வேலை செய்யும் ஆற்ற லில்லாத வயது வந்த குடும்ப உறுப்பினர் ஒவ்வொருக்கும் 100 ரூபிள் கூடுதல் தொகை தரப்படும்....*

*அரசாங்க அலுவலர் எவருக்கும் இதுவே மிக உயர்ந்த சம்பளம்....*

4.

*கோமகள் பானினு கைது செய்யப்பட்டு, புரட்சி உச்ச நீதிமன்றத்தின் முன்னுல் விசாரணைக்குக் கொண்டுவரப்பட் டார். இந்த விசாரணையை நான், ''கர்னீலவ் முதல் பிரேஸ்த்-லித்தோவ்ஸ்க் வரை'' என்ற எனது அடுத்த புத்த கத்தில் ''புரட்சிகர நீதி'' என்னும் அத்தியாயத்தில் விரிவு பட எடுத்துரைக்கிறேன். ''பணத்தை திருப்பித் தந்து விட வேண்டும், பிறகு பொது மக்களின் நிந்தனைக்கு உள்ள வதற்காக வெளியே விடப்பட வேண்டும்'' என்று இவருக்குத் தண்டனை அளிக்கப்பட்டது. அதாவது இவர் விடுதலை செய்யப்பட்டார்!*

5.

**புதிய ஆட்சி பற்றிய கிண்டல்**

*மென்ஷிவிக் ஏடான* **துருக் நரோதாவின்** *நவம்பர் 18ஆம் தேதி இதழிலிருந்து:*

*''போல்ஷிவிக்குகளுடைய 'உடனடி சமாதானத்தின்' வர லாறு நகைப்பூட்டும் திரைப்படத் துணுக்கு ஒன்றை நமக்கு நினைவூட்டுகிறது.... நெராத்தவ் ஓடுகிருர் — திரோத்ஸ்கி துரத்திச் செல்கிருர். நெராத்தவ் ஒரு சுவரின் மேல் ஏறு*

கிறார்—திரோத்ஸ்கியும் ஏறுகிறார். நெராத்தவ் நீருக்குள் குதிக்கிறார்—திரோத்ஸ்கியும் அவர் பின்னால் குதிக்கிறார். நெராத்தவ் கூரையின் மீது ஏறுகிறார்—திரோத்ஸ்கியும் பின்தொடர்கிறார். நெராத்தவ் கட்டிலுக்கு அடியில் ஒளிந்து கொள்கிறார்—திரோத்ஸ்கி அங்கே அவரைப் பிடித்துக் கொள்கிறார்! சரியானபடி பிடித்துக் கொள்கிறார்! அவ்வளவுதான், உடனடியான சமாதானம் கையெழுத்திடப்படுகிறது....

''அயல்துறை அமைச்சகம் வெறிச்சோடிப் போய் நிசப்தமாக இருக்கிறது. தகவல் கொண்டு வருவோர் மரியாதை மிக்கவர்களாக இருக்கிறார்கள், ஆனால் அவர்கள் முகம் மட்டும் சிடுசிடுப்பாய் இருக்கிறது....

''யாராவது தூதுவரைக் கைது செய்து, அவருடன் போர் நிறுத்த ஒப்பந்தம், அல்லது சமாதான உடன்பாடு கையெழுத்திட்டுக் கொண்டால் என்ன? ஆனால் இந்தத் தூதுவர்கள் எல்லாரும் விநோதமான ஆட்கள். எதுவுமே காதில் விழாதது போல மௌனம் சாதிக்கிறார்கள். ஹலோ! ஹலோ!— இங்கிலாந்து பிரான்சு, ஜெர்மனி! உங்களுடன் போர்நிறுத்த ஒப்பந்தம் முடித்திருக்கிறோம்! இதைப் பற்றி நீங்கள் ஏதும் அறியாதோராய் இருப்பது சாத்தியம்தானா? எப்படியும் இது எல்லாச் செய்தியேடுகளிலும் வெளியாகியிருக்கிறது, எல்லாச் சுவர்களிலும் ஒட்டப் பட்டிருக்கிறது. போல்ஷிவிக்குக் கண்யத்தின் பெயரில் ஆணையிட்டுச் சொல்கிறோம், சமாதானம் கையொப்பமிடப்பட்டுவிட்டது. உங்களிடம் நாங்கள் அதிகம் கேட்கவில்லை; இரண்டே இரண்டு சொற்கள் எழுதுங்கள் போதும்....

''தூதுவர்கள் மௌனமாயிருக்கிறார்கள். வல்லரசுகள் மௌனமாயிருக்கின்றன. அயல்துறை அமைச்சகம் வெறிச்சோடிப் போய் நிசப்தமாயிருக்கிறது.

'' 'நான் சொல்வதைக் கேள்' என்கிறார் ராப்ஸ்பியர்-திரோத்ஸ்கி, தமது துணையாளரான மராத்-உரீத்ஸ்கியிடம். 'பிரிட்டிஷ் தூதுவரிடம் ஓடிச் சென்று, நாம் சமாதானத்தை முன்மொழிகிறோமெனச் சொல்லேன்!' என்கிறார்.

' 'நீயே போய்ச் சொல்லு, அவர் யாரையும் சந்திக்கத் தயாராயில்லை' என்கிறார் மராத்-உரீத்ஸ்கி.

'' 'அப்படியானால், தொலை பேசியில் கூப்பிட்டுச் சொல்லேன்.'

'' 'கூப்பிட்டுப் பார்த்துவிட்டேன், தொலைபேசியின் ஒலி வாங்கியைக் கீழே எடுத்து வைத்திருக்கிறார்கள்.'

'' 'தந்தி அனுப்பேன்.'

'' 'அனுப்பினேன்.'

'' ' என்ன ஆயிற்று?'

''மராத்-உரீத்ஸ்கி பெருமூச்செரிகிறாரே ஒழிய பதில் கூறவில்லை. ராபஸ்பியர்-திரோத்ஸ்கி ஆத்திரமாகத் தலையைத் திருப்பி மூலையில் காறித் துப்புகிறார்....

'' 'மராத், இதைக் கேள்' என்று கணப் பொழுதுக்குப் பிற்பாடு திரும்பவும் பேச ஆரம்பிக்கிறார் திரோத்ஸ்கி. 'நாம் செயல் வன்மை மிக்க அயல்துறைக் கொள்கையை அனுசரிப்பவர்கள் என்பதை எப்படியாவது காட்டியாக வேண்டும். எப்படிச் செய்யலாம் இதை?' என்று கேட்கிறார்.

'' 'நெராத்தவைக் கைது செய்வது பற்றி இன்னொரு அரசாணை பிறப்பிக்கலாம்' என்று ஆழ்ந்த ஆலோசனை கூறும் பாவனையுடன் பதிலளிக்கிறார் உரீத்ஸ்கி.

'' 'மராத், நீ சரியான முட்டாள்' என்று கூச்சலிடுகிறார் திரோத்ஸ்கி. பிறகு திடுமென்று பயங்கரமான, கம்பீரத் தோற்றம் கொண்டவராய் எழுந்து நிற்கிறார், அக்கணத்தில் பார்ப்பதற்கு அப்படியே அவர் ராபஸ்பியர் மாதிரி இருக்கிறார்.

'' 'உரீத்ஸ்கி, கடிதம் எழுது!' என்று கடுமையான குரலில் கூறுகிறார். 'பிரிட்டிஷ் தூதுவருக்குக் கடிதம் எழுது, பதிவு அஞ்சலில் அனுப்பு, பற்றுச் சீட்டுடன் கூடிய பதிவு அஞ்சலில் அனுப்பு.எழுது நீ! நானும் எழுதுகிறேன்! உடனடி சமாதானத்துக்காக உலக மக்கள் அனைவரும் காத்திருக்கிறார்கள்!'

''வெறிச்சோடிக் கிடக்கும் அந்தப் பிரம்மாண்ட அயல் துறை அமைச்சகத்தினுள் இரண்டு தட்டெழுத்துப் பொறிகளின் தடதடப்பைத் தவிர வேறு ஓசை ஏதும் இல்லை. நேரே தம் கைகளைக் கொண்டு திரோத்ஸ்கி, செயல் வன்மை வாய்ந்த அயல்துறைக் கொள்கையைச் செயல்படுத்துகின்றார்....''

## 6.

## உடன்பாட்டுக்கு வரும் பிரச்சினை குறித்து

எல்லாத் தொழிலாளர்களின், எல்லாப் படையாட்களின் கவனத்துக்கும்.

நவம்பர் 11ல் பெத்ரொகிராது நகரக் காவற் படையின் எல்லாப் படைப்பிரிவுகளது பிரதிநிதிகளின் சிறப்புக் கூட்டம் ஒன்று பிரெயோபிரழேன்ஸ்கி ரெஜிமெண்ட்டின் மன்றத்தில் நடைபெற்றது.

சோஷலிஸ்டுக் கட்சிகளில் சோவியத்துகளின் ஆட்சியதிகாரத்துக்கு ஆதரவானவை எவை, எதிர்ப்பவை எவை, மக்களது தரப்பைச் சேர்ந்தவை எவை, எதிரானவை எவை என்ற பிரச்சினை குறித்தும், இந்தக் கட்சிகள் தம்மிடையே ஓர் உடன்பாட்டுக்கு வருவது சாத்தியமா என்பது குறித்தும் விவாதிப்பதற்காக, பிரெயோபிரழேன்ஸ்கி, செமியோனவ்ஸ்கி ரெஜிமெண்ட்டுகள் முன்முயற்சி எடுத்து இந்தக் கூட்டத்தைக் கூட்டின.

இத்ஸே-யி-க, நகர டூமா, அவ்க்சேன்தியெவின் விவசாயிகளது சோவியத்துகள் ஆகியவற்றின் பிரதிநிதிகளும், போல்ஷிவிக்குகளிலிருந்து நரோத்னிக் சோஷலிஸ்டுகள் வரையிலான எல்லா அரசியல் கட்சிகளின் பிரதிநிதிகளும் இந்தக் கூட்டத்துக்கு அழைக்கப்பட்டிருந்தார்கள்.

எல்லாக் கட்சிகள், நிறுவனங்கள் சார்பிலுமான பேச்சுகளைக் கேட்டு, நீண்ட விவாதங்களுக்குப் பிற்பாடு, போல்ஷிவிக்குகளும் இடதுசாரி சோஷலிஸ்டு-புரட்சியாளர்களும் மட்டும்தான் மக்களின் தரப்பில் இருப்பவர்கள், ஏனைய எல்லாக் கட்சிகளும் மாபெரும் தொழிலாளர்கள், விவசாயிகளது நவம்பர் புரட்சியால் பெறப்பட்ட வெற்றிகளை மக்களிடமிருந்து பறித்துவிடுவதற்காக, உடன்பாடு காண வேண்டுமென்ற திரையின் மறைவில் முயலுகிறவை என்று, பிரம்மாண்டப் பெரும்பான்மை வாக்குகளின் பேரில் இந்தக் கூட்டம் முடிவெடுத்தது.

பெத்ரொகிராது காவற் படையின் இந்தக் கூட்டத்தில், 61 வாக்குகள் ஆதரவாகவும் 11 வாக்குகள் எதிராகவும் பெற்று (வாக்கெடுப்பில் கலந்து கொள்ளாதவர்கள் 12 பேர்), நிறைவேற்றப்பட்ட தீர்மானத்தின் வாசகம் வருமாறு:

''செமியோனவ்ஸ்கி, பிரெயோபிரஜேன்ஸ்கி ரெஜிமெண்ட்டுகள் முன்முயற்சி எடுத்துக் கூட்டிய இந்த காவற்படை மாநாடு, வெவ்வேறு அரசியல் கட்சிகளும் தம்மிடையே ஓர் உடன்பாட்டுக்கு வரும் பிரச்சினை குறித்து எல்லா சோஷலிஸ்டுக் கட்சிகள், பொது மக்கள் நிறுவனங்களின் பிரதிநிதிகள் கூறியவற்றைக் கேட்டபின் காண்பது என்னவெனில்:

''1. இத்ஸே-யி-கவின் பிரதிநிதிகளும், போல்ஷிவிக்குக் கட்சி, இடதுசாரி சோஷலிஸ்டு-புரட்சியாளர்கள் கட்சி இவற்றின் பிரதிநிதிகளும் தாம் சோவியத்துகளின் அரசாங்கத்தையும் நிலத்தையும் சமாதானத்தையும் தொழிற் துறை மீதான தொழிலாளர்கள் கண்காணிப்பையும் பற்றிய அரசாணைகளையும் ஆதரிப்பவர்கள் என்பதையும், இந்த அடிப்படையில் எல்லா சோஷலிஸ்டுக் கட்சிகளோடும் உடன்பாடுக்கு வர விரும்புகிறவர்கள் என்பதையும் திட்டவட்டமாக அறிவித்தார்கள்.

''2. ஆனால் பிறகட்சிகளின் பிரதிநிதிகள் (மென்ஷிவிக்குகள், சோஷலிஸ்டு-புரட்சியாளர்கள்) எந்தப் பதிலும் அளிக்கவில்லை, அல்லது தாம் சோவியத்துகளின் ஆட்சியதிகாரத்தை எதிர்ப்பவர்கள், நிலத்தையும் சமாதானத்தையும் தொழிற் துறை மீதான தொழிலாளர்கள் கண்காணிப்பையும் பற்றிய அரசாணைகளுக்கு எதிரானவர்கள் என்று அறிவித்துக் கொண்டார்கள்.

''இந்த நிலைமையைக் கருத்தில் கொண்டு, இந்தக் கூட்டம் தீர்மானிப்பதாவது:

'' '1. உடன்பாடு காண்பதென்ற திரையின் மறைவில், நடைமுறையில் நவம்பர் புரட்சியின் மக்கள் வெற்றிகளைத் தொலைத்துக் கட்ட விரும்பும் எல்லாக் கட்சிகளும் கடுமையான கண்டனத்துக்குரியவை.

'' '2. இத்ஸே-யி-கவிடத்தும் மக்கள் கமிசார் அவையிடத்தும் முழு நம்பிக்கை தெரிவித்து, இவற்றுக்கு முழு ஆதரவு அளிக்க வேண்டும்.''

''அதே போது, இடதுசாரி சோஷலிஸ்டு-புரட்சியாளர் தோழர்கள் மக்கள் அரசாங்கத்தில் சேர்ந்து கொள்வது அவசியமென்று இந்தக் கூட்டம் கருதுகிறது.''

## 7.

### ஒயின் ''வெறியாட்டங்கள்''

படையாட்களிடையே கலவரங்களைத் தூண்டுவதற்காக முறையான ஒரு நிறுவனத்தைக் காடேட்டுகள் நடத்தி வந்தார்கள் என்பது பிற்பாடு கண்டுபிடிக்கப்பட்டது. குறிப்பிட்ட முகவரியில் ஒயின் வழங்கப்படுமென்று தொலைபேசி மூலம் பல்வேறு கொட்டடிகளுக்கும் தகவல் தெரிவிக்கப்படும். படையாட்கள் அவ்விடத்துக்குப் போய்ச் சேர்ந்ததும் ஒயின் கிடங்கு எங்கிருக்கிறது என்று அவர்களுக்கு ஓர் ஆள் சுட்டிக்காட்டுவார்....

குடியை எதிர்த்துப் போராடுவதற்காக மக்கள் கமிசார் அவை ஒரு கமிசாரை நியமித்தது. இவர் ஒயின் கலவரங்களை ஈவிரக்கமின்றி நசுக்கியதோடு, நூறுயிரக் கணக்கான சாராயப் புட்டிகளை உடைத்து அழித்தார். குளிர்கால அரண் மனையின் நிலவறைகளில், அரிய வகைகளும் உட்பட 50 லட்சம் டாலர் பெறுமானமுள்ளனவாய் மதிப்பிடப்பட்ட ஒயின் சேமிப்புகள் முதலில் நீரில் மூழ்க்கடிக்கப்பட்டன, பிறகு கிரன்ஷ்தாத்துக்கு எடுத்துச் செல்லப்பட்டு அங்கே உடைத்து நாசமாக்கப்பட்டன.

கிரன்ஷ்தாத் மாலுமிகளைப் ''புரட்சிப் படைகளின் பெருமிதத்துக்குரிய மணிமுடிகளாகத் திகழ்வோர்'' என்று திரோத்ஸ்கி போற்றினர். இந்த மாலுமிகள் தாம் உருக்குக் கட்டுப்பாடு கொண்டவர்கள் என்பதை இந்த மது ஒழிப்புப் பணியின் போது நிரூபித்துக் காட்டினர்....

8.

## கள்ள வணிகர்கள்

*இவர்கள் சம்பந்தமான இரு உத்தரவுகள்:*

### மக்கள் கமிசார் அவையிடமிருந்து புரட்சி இராணுவக் கமிட்டிக்கு

*யுத்தத்தாலும் அமைப்பு முறை இல்லாததாலும் உணவு வழங்கீட்டில் ஏற்பட்ட சீர்குலைவானது, கள்ள வணிகர்களாலும் கொள்ளை லாபக்காரர்களாலும் ரயில் நிலையங்களிலும் கப்பல் போக்குவரத்து அலுவலகங்களிலும் அனுப்பீட்டு நிலையங்களிலும் பிறவற்றிலுமுள்ள இவர்களது கையாட்களாலும் மிகவும் உக்கிரமாகி வருகிறது.*

*தேசத்தின் மிகக் கொடிய துர்ப்பாக்கியங்களைத் தமது சுயநலத்துக்குச் சாதகமாய்ப் பயன்படுத்திக் கொண்டு, இந்தக் கொலைகாரக் கொள்ளையர்கள் லட்சோப லட்சக் கணக்கான படையாட்கள், தொழிலாளர்களின் உடல் நலத்துக்கும் உயிருக்கும் உலை வைக்கிறார்கள்.*

*இந்த நிலைமையை இனி ஒரு நாளுக்குங்கூட பொறுக்க முடியாது.*

*கள்ள வாணிபம், சீர்குலைவு, பண்டப் பதுக்கல், அனுப்புப் பண்டங்களைக் கள்ளத்தனமாய் நிறுத்தித் தேக்குதல் முதலானவற்றை ஒழித்துக் கட்டுவதற்காக மிகவும் தீர்மான கரமான நடவடிக்கைகள் எடுக்கப்பட வேண்டுமென்று மக்கள் கமிசார் அவையானது புரட்சி இராணுவக் கமிட்டிக்கு முன்மொழிகிறது.*

*இம்மாதிரியான குற்றச் செயல்களைப் புரிவோர், புரட்சி இராணுவக் கமிட்டியின் விசேஷ ஆணைகளின்படி, உடனடியாகக் கைது செய்யப்பட்டு, புரட்சி நீதிமன்றத்தில் விசாரணைக்குக் கொண்டு வரப்படும் பொருட்டு கிரன்ஷ்தாத் சிறைக்கூடங்களில் அடைக்கப்படத் தக்கவர்களாக்கப்பட வேண்டும்.*

உணவு வழங்கீட்டுக்குக் கேடு விளைவிக்கும் இவர்களுக்கு எதிரான போராட்டத்தில் ஒத்துழைக்கும்படி பொது மக்கள் நிறுவனங்கள் யாவும் அழைக்கப்படுகின்றன.

**மக்கள் கமிசார் அவையின் தலைவர்,**
*வி. உலியானவ் (லெனின்).*

* * *

**நேர்மையான குடிமக்கள் எல்லார்க்கும்**

**புரட்சி இராணுவக் கமிட்டி ஆணையிடுகிறது:**

லாபக் கொள்ளையரும் கொலைகாரர்களும் கள்ள வணிகர்களும் மக்களுடைய பகைவர்களாக அறிவிக்கப்படுகிறார்கள்....

கொள்ளை லாபம், கள்ள வாணிபம், உணவு வழங்கீட்டுச் சீர்குலைவு ஆகிய இவை தெரியவந்ததும் உடனே யாவற்றையும் புரட்சி இராணுவக் கமிட்டிக்குத் தெரிவிக்கும்படி எல்லாப் பொது நிறுவனங்களுக்கும் நேர்மையான குடிமக்கள் எல்லார்க்கும் புரட்சி இராணுவக் கமிட்டி முன்மொழிகிறது.

இந்தக் கேட்டினை எதிர்த்துப் போராடுவது நேர்மையானவர்கள் எல்லார்க்கும் உரிய பணியாகும். மக்கள் நலன்களை மதித்துப் போற்றுவோர் அனைவரது ஆதரவையும் புரட்சி இராணுவக் கமிட்டி எதிர்பார்க்கிறது.

லாபக் கொள்ளையரையும் கொலைகாரர்களையும் தேடிப் பிடிப்பதில் புரட்சி இராணுவக் கமிட்டி இரக்கம் காட்டாது.

**புரட்சி இராணுவக் கமிட்டி.**

பெத்ரொகிராது, 1917 நவம்பர் 10.

9.

**கலேடினுக்குப் புரிஷ்கேவிச்சின் கடிதம்**

''பெத்ரொகிராதில் நிலைமை படுமோசமாகிவிட்டது. நகரம் வெளியுலகிலிருந்து துண்டிக்கப்பட்டு, முற்றிலும் போல்ஷிவிக்குகளின் அதிகாரத்துக்கு உட்படுத்தப்பட்டிருக்

கிறது.... தெருக்களில் மக்கள் கைது செய்யப்படுகிறார்கள், நேவா ஆற்றிலே எறியப்பட்டு மூழ்க்கடிக்கப்படுகிறார்கள், எந்தக் குற்றச்சாட்டுமின்றி சிறையில் அடைக்கப் படுகிறார் கள். புர்த்ஸெவுங்கூட கண்டிப்பான காவலில் பெத்ரொபாவ் லொவ்ஸ்கயா கோட்டையில் அடைக்கப்பட்டிருக்கிறார்.

''எல்லாப் படையதிகாரிகளையும் யூன்கெர் பள்ளிகளில் எஞ்சியிருப்போரையும் ஒன்றுதிரட்டி அவர்களுக்கு ஆயுதங் கள் அளிப்பதற்காக, நான் தலைமை தாங்கும் நிறுவனம் அயராது பாடுபட்டு வருகிறது. படையதிகாரிகளையும் யூன் கெர்களையும் கொண்டு படையணிகள் அமைத்தாலன்றி, நிலைமையிலிருந்து விடுபட வழி இல்லை. இந்தப் படையணி களைக் கொண்டு தாக்குதல் தொடுத்து முதலாவது வெற்றி யைப் பெறுவோமாயின், பிறகு காவற் படைகளிடமிருந்து உதவி பெற முடியும். ஆனால் இந்த முதலாவது வெற்றி யைப் பெறாமல், எந்தவொரு படையாளின் ஆதரவையும் எதிர்பார்க்க முடியாது. ஏனெனில் ஆயிரக் கணக்கான படையாட்கள் ஒவ்வொரு படையணியிலும் இருந்துவரும் கசடர்களால் பிளவுபடுத்தப்பட்டு, பயங்கரப் பீதிக்கு உள் ளாக்கப்பட்டு இருத்தப்பட்டிருக்கிறார்கள். பெரும்பாலான கசாக்குகளும் போல்ஷிவிக்குப் பிரசாரத்தால் நச்சுப் படுத்தப் பட்டிருக்கிறார்கள். ஜெனரல் துத்தோவின் விபரீதக் கொள்கையே இதற்குக் காரணம், தீர்மானகரமான செய லால் ஓரளவு சாதனை பெற்றிருக்கக் கூடிய தருணத்தை அவர் நழுவ விட்டுவிட்டார். பேச்சுவார்த்தைகளுக்கும் சலுகை களுக்குமான கொள்கையானது அதன் பலன்களை ஈந்திருக் கிறது; மதிப்புக்குரியவை யாவும் அடக்கி ஒடுக்கப்படுகின் றன, இழிகுலத்தோரும் குற்றக் குடியோரும் ஆதிக்கம் புரி கிறார்கள் — இவர்களைச் சுட்டு வீழ்த்தாமல், தூக்கிலிடாமல் ஒன்றும் செய்வதற்கில்லை.

''ஜெனரலே, இங்கே உங்களை எதிர்பார்த்துக் காத்திருக் கிறோம். நீங்கள் இங்கு வந்து சேரும் தருணத்தில் எம்மிட முள்ள எல்லா சக்திகளையும் பிரயோகித்து நாங்கள் முன் னேறுவோம். ஆனால் இதன் பொருட்டு உங்களுடன் நாங்கள் தகவல் தொடர்பு நிறுவிக் கொண்டாக வேண்டும், யாவற்

றுக்கும் முதலாய்ப் பின்வரும் விவரங்களைத் தெளிவுபடுத்திக் கொண்டாக வேண்டும்:

"(1) போரில் பங்கு கொள்ளக் கூடிய படையதிகாரிகள் யாவரும், உங்களுடன் சேர்ந்து கொள்ளலாமென்று சாக்கு சொல்லி, பெத்ரொகிராதை விட்டு வெளியேறும்படி உங்கள் பெயரில் அழைக்கப் படுவது உங்களுக்குத் தெரியுமா?

"(2) ஏறத்தாழ எப்போது நீங்கள் பெத்ரொகிராது வருவீர்களென நாம் எதிர்பார்க்கலாம்? நமது செயல்களை ஒருமுகப்படுத்தும் பொருட்டு இதை நாங்கள் தெரிந்து கொள்ள விரும்புகிறோம்.

"இங்குள்ள உணர்வு படைத்தோரின் படுபாதகமான செயலின்மையையும் மீறி—இவர்களது இந்தச் செயலின் மையால்தான் நம் மீது போல்ஷிவிக்கு ஆதிக்கம் சுமத்தப் பட்டிருக்கிறது—பெரும்பாலான படையதிகாரிகளது அளவு கடந்த மதியீனத்தையும் மீறி — இவர்களை ஒழுங்கமையச் செய்வது மிகவும் கடினமாயிருக்கிறது—இவை யாவற்றை யும் மீறி, உண்மை நம் பக்கமே இருக்கிறது, கொடிய, தீய சக்திகளை வெற்றி கொள்ளவே செய்வோமென நாம் திட மாய் நம்புகிறோம். நாட்டுப் பற்றின் காரணமாய், நாட் டைப் பாதுகாக்கும் பொருட்டு செயல்படுகிறவர்கள் நாங் கள். என்ன நேரிடினும் நாம் உள்ளம் ஒடிய மாட்டோம், இறுதிவரை உறுதியாக நிற்போம்."

புரிஷ்கேவிச் புரட்சி நீதிமன்றத்தின் முன்னல் விசாரணைக்குக் கொண்டு வரப்பட்டார். அவருக்குச் சிறிது காலச்சிறைத் தண்டனை விதிக்கப்பட்டது....

## 10.

### விளம்பரங்கள் மீதான அரசு ஏகபோகம் பற்றிய அரசாணை

1. செய்தியேடுகளிலும் புத்தகங்களிலும் அறிவிப்புப் பலகைகளிலும் கடைகளிலும் அலுவலகங்களிலும் பிற நிலை யங்களிலும் விளம்பரங்கள் வெளியிடுவது அரசு ஏகபோக மாகுமென அறிவிக்கப்படுகிறது.

2. பெத்ரொகிராது தொழிலாளர்கள், விவசாயிகளது இடைக்கால அரசாங்கத்தின் ஏடுகளிலும், வட்டார சோவியத்துகளின் ஏடுகளிலும் மட்டுமே விளம்பரங்கள் பிரசுரிக்கப்படலாம்.

3. விளம்பரத் தொழில் அரசாங்கத்துக்கு மாற்றப்படும் வரை, செய்தியேடுகளின் உடைமையாளர்களும் விளம்பர அலுவலக உடைமையாளர்களும் இந்நிறுவனங்களைச் சேர்ந்த எல்லாப் பணியாளர்களும் அவரவரது வேலையிடங்களில் தொடர்ந்து இருந்து.... அவர்களது நிறுவனங்கள் தடையின்றி தொடர்ந்து செயல்படுவதை மேற்பார்வையிடவும், தனியார் விளம்பரங்கள், இவற்றுக்காகக் கிடைக்கும் தொகைகள், மற்றும் கணக்குகள், பிரதி ஆகியவை யாவற்றையும் சோவியத்துகளிடம் ஒப்படைக்கவும் வேண்டும்.

4. வெளியீடுகள், கட்டணம் பெற்று விளம்பரம் செய்யும் தொழில் இவற்றின் நிர்வாகிகள் எல்லாரும், மற்றும் இவற்றின் பணியாளர்களும் தொழிலாளர்களும் நகரக் காங்கிரஸ் நடத்துவதற்கும், சோவியத்து வெளியீடுகளில் விளம்பரம் செய்யும் தொழிலை மேலும் தீர்க்கமாகவும் நியாய முறையிலும் ஒழுங்கமைக்கும் பொருட்டும், விளம்பரப் பொதுச் சேவைக்குச் சிறந்த விதிகளைத் தயாரிக்கும் பொருட்டும் முதற் கண் நகரத் தொழிற் சங்கங்களாகவும், பிறகு அனைத்து ருஷ்ய ஒன்றியமாகவும் ஒன்றுபடுவதற்கும் உடன்பட வேண்டும்.

5. ஆவணங்களையோ பணத்தையோ ஒளித்து வைத்திருக்கும் குற்றமோ, பாராக்கள் 3, 4ல் குறிக்கப்பட்டிருக்கும் ஒழுங்கு முறைகளைச் சீர்குலைக்கும் குற்றமோ புரிந்தவர்களாகத் தெரிய வருவோர் எல்லோரும், மூன்றாண்டுக்கு மேற்படாத சிறைத் தண்டனை விதிக்கப்படுவர்; அதோடு அவர்களுடைய சொத்துகள் யாவும் பறிமுதல் செய்யப்படும்.

6. தனியார் வெளியீடுகளிலோ, மூடிமறைக்கப்பட்ட வடிவிலோ.... கட்டணத் தொகையுடனான விளம்பரங்கள் வெளியிடுவோர் கடுமையாகத் தண்டிக்கப்படுவர்.

7. விளம்பர அலுவலகங்கள் அரசாங்கத்தால் பறிமுதல் செய்யப்படுகின்றன; அவசியமான சந்தர்ப்பங்களில் அவற்றின் உடைமையாளர்களுக்கு இழப்பீடு பெற உரிமை உண்டு.

பறிமுதல் செய்யப்படும் நிலேயங்களது சிறு உடைமையாளர்களுக்கும் வைப்பாளர்களுக்கும் பங்கு உடைமையாளர்களுக்கும், அவற்றில் அவர்கள் போட்டிருந்த தொகைகள் யாவும் ஈடு செய்யப்படும்.

8. விளம்பரத் தொழில் புரியும் எல்லாக் கட்டடங்களும், அலுவலகங்களும், பொதுவில் ஒவ்வொரு நிலேயமும், உடனே தொழிலாளர்கள், படையாட்கள் பிரதிநிதிகளது சோவியத்துக்குத் தகவல் தெரிவிக்க வேண்டும், தனது தொழிலே அதற்கு மாற்றித் தர முற்பட வேண்டும், இல்லேயேல் பாரா 5ல் குறிக்கப்பட்ட தண்டனேக்கு அது உள்ளாக நேரிடும்.

**மக்கள் கமிசார் அவையின் தலேவர்,**
*வி. உலியானவ் (லெனின்).*
**கல்வித் துறை மக்கள் கமிசார்**
*எ. வி. லுனச்சார்ஸ்கி.*
**அவையின் செயலாளர்,**
*என். கொர்புனேவ்.*

## 11.

## கண்டிப்பான உத்தரவு

1. பெத்ரொகிராது நகரம் முற்றுகை நெருக்கடி நிலேமைக்கு உட்பட்டதாக அறிவிக்கப்படுகிறது.

2. தெருக்களிலும் சதுக்கங்களிலுமான எல்லாக் கூட்டங்களுக்கும் திரள்களுக்கும் தடை விதிக்கப்படுகிறது.

3. சாராய நிலவறைகள், கிடங்குகள், ஆலேகள், பண்டக சாலேகள், கடைகள், தனியார் வீடுகள் இத்தியாதி இடங்களேச் சூறையாடுவதற்கான முயற்சிகள் **எச்சரிக்கை அளிக்கப்படாமலே இயந்திரத் துப்பாக்கி கொண்டு சுட்டு நிறுத்தப்படும்.**

4. வீட்டுக் கமிட்டியினர், வாயில் காவலர்கள், காவல் துறையினர் ஆகியோர் எல்லா வீடுகளிலும் வெளிமுற்றங்களிலும் தெருக்களிலும் கண்டிப்பான ஒழுங்கைப் பராமரிக்கக் கடமைப்பட்டவர்கள்; வீட்டுக் கதவுகளும் வண்டி நுழை வாயில்களும் மாலே 9 மணிக்குப் பூட்டப்பட்டு, காலே 7 மணிக்குத் திறக்கப்பட வேண்டும். மாலே 9 மணிக்கு மேல்

வீட்டுக் கமிட்டிகளின் கண்டிப்பான கண்காணிப்பில்தான் வீட்டிலிருந்து யாரும் வெளியே செல்லலாம்.

5. எந்த வகையான சாராய பானமும் வினியோகித்தோ, விற்பனை செய்தோ, வாங்கியோ குற்றமிழைப்போரும், மற்றும் பிரிவுகள் 2, 4ஐ மீறும் குற்றத்துக்கு உரியோரும் உடனே கைது செய்யப்பட்டு, மிகக் கடுமையான தண்டனைக்கு உள்ளாக்கப்படுவர்.

பெத்ரொகிராது, டிசம்பர் 6, இரவு 3 மணி.

**கொலை, கொள்ளை வெறியாட்டத்தை எதிர்த்துப் போராடும் கமிட்டி, தொழிலாளர்கள், படையாட்கள் பிரதிநிதிகளது சோவியத்தின் செயற் குழுவுடன் இணைந்தது.**

## 12.

## இரு பிரகடனங்கள்

லெனின், தேச **மக்களுக்கு:**

''தோழர்களே—தொழிலாளர்களே, படையாட்களே, விவசாயிகளே, அனைத்து உழைப்பாளி மக்களே!

''தொழிலாளர்கள், விவசாயிகளது புரட்சி பெத்ரொகிராதிலும் மாஸ்கோவிலும்.... வெற்றிவாகை சூடிவிட்டது.... புதிய அரசாங்கத்துக்கு... போர்முனையிலிருந்தும் கிராமங்களிலிருந்தும் நாள்தோறும் மணிதோறும் வாழ்த்துரைகள் வந்த வண்ணமுள்ளன.... பெரும்பான்மையான மக்கள் ஏற்கெனவே புரட்சியின் பக்கம் சேர்ந்து கொண்டுவிட்டதால்.... புரட்சியின் வெற்றி உறுதியாகிவிட்டது.

''நிலப்பிரபுக்களும் முதலாளிகளும் மற்றும் அலுவலகப் பணியாளர்கள், அரசாங்க அலுவலர்கள் ஆகியோரின் மேல்மட்டத்துக் கோஷ்டிகளும்—சுருங்கக் கூறின் செல்வந்தர்களும் அவர்களை ஆதரிப்போரும்—இந்தப் புதிய புரட்சியிடம் பகைமை கொண்டுள்ளனர், இதன் வெற்றியை எதிர்க்கின்றனர், வங்கிகளை மூடப் போவதாய் அச்சுறுத்துகின்றனர், பிற அலுவலகங்களின் வேலைகளைச் சீர்குலைத்தும்.... தடுத்து நிறுத்தியும் வருகின்றனர். அவை எல்லாம் முற்றிலும் புரிந்து

கொள்ளக் கூடியவையே. இத்தகைய எதிர்ப்பு தவிர்க்க முடியாதபடி ஏற்படவே செய்யும் என்பது அரசியல் உணர்வு படைத்த ஒவ்வொரு தொழிலாளியும் நன்கு அறிந்தது தான்.... உழைக்கும் வர்க்கங்கள் இந்த எதிர்ப்பைக் கண்டு கணப் பொழுதும் கலக்கமடையப் போவதில்லை. பெரும் பான்மையான மக்கள் நம் பக்கமே உள்ளனர். உலகெங்கும் உழைப்பாளரும் ஒடுக்கப்பட்டோருமான மக்களின் பெரும் பான்மையோர் நம் பக்கமே இருக்கிறார்கள். நமது இலட்சியம் நேர்மையானது. வெற்றி நமதே என்பது உறுதியாகி விட்டது.

''முதலாளிகள், உயர் அதிகாரிகள் ஆகியோரது எதிர்ப்பு தகர்க்கப்படும். வங்கிகளையும் கூட்டுக் கம்பெனிகளையும் நாட்டுடைமையாக்கும் விசேஷ அரசுச் சட்டத்தின் கீழ் வருவோரைத் தவிர்த்து வேறு எவரும் தமது சொத்துக்களை இழக்க வேண்டியிருக்காது. இந்த விசேஷச் சட்டம் தயாராகி வருகிறது. உழைப்பாளி மக்களில் யாரும் ஒரு கோப்பெக்குங்கூட இழக்க நேரிடாது, மாறாக அவருக்கு உதவியே அளிக்கப்படும். பழைய ஆட்சியால் விதிக்கப்பட்ட வரிகள் வசூலிக்கப்படுவதின் மீது கண்டிப்பான கணக்கீட்டையும் கண்காணிப்பையும் நிறுவுவதையன்றி, எந்தப் புதிய வரியையும் விதிக்கும் உத்தேசம் புதிய அரசாங்கத்திடம் இல்லை.

''தோழர்களே, உழைப்பாளர்களே! நீங்களேதான் அரசாங்கத்தை நெறியாண்மை புரிகிறீர்கள் என்பதை நினைவில் கொள்ளுங்கள். நீங்களே உங்களை ஒழுங்கமைத்துக் கொண்டு அரசின் எல்லா விவகாரங்களையும் உங்கள் கையில் எடுத்துக் கொள்ளாவிடில் யாரும் உங்களுக்குத் துணை புரியப் போவதில்லை. இப்போது முதலாய் உங்களுடைய சோவியத்துகள் தான் அரசு அதிகார உறுப்புகள்.... அவற்றைப் பலப்படுத்துங்கள். கடுமையான புரட்சிகரக் கண்காணிப்பை நிறுவிக் கொள்ளுங்கள். குடிகாரர்களும் குண்டர்களும் எதிர்ப்புரட்சி யூன்கெர்களும் கர்னீலவியர்களும் அராஜகத்தை உண்டாக்க மேற்கொள்ளும் எல்லா முயற்சிகளையும் ஈவிரக்கமின்றி நசுக்குங்கள்.

''பொருளுற்பத்தி, பண்டக் கணக்கீடு இவற்றின் மீது கண்டிப்பான கண்காணிப்பை நிறுவுங்கள். மக்களுடைய

இலட்சியத்துக்குத் தீங்கிழைப்போர் எல்லோரையும்—உற்பத்தியைச் சீர்குலைத்தோ, தானியத்தையும் பண்டங்களையும் கள்ளச் சேமிப்பு செய்தோ, தானிய அனுப்பீடுகளுக்கு இடையூறு செய்தோ, ரயில் போக்குவரத்தையும் தபால், தந்தி, தொலைபேசி வசதிகளையும் சீர்குலைத்தோ, அல்லது மாபெரும் சமாதான இலட்சியத்துக்கோ நிலத்தை விவசாயிகளுக்கு மாற்றும் இலட்சியத்துக்கோ உற்பத்தியின் மீதும் பண்ட வினியோகத்தின் மீதும் தொழிலாளர் கண்காணிப்பை உறுதி செய்யும் இலட்சியத்துக்கோ எதிராய்ச் செயல்பட்டோ மக்கள் இலட்சியத்துக்குத் தீங்கு இழைப்போர் எல்லோரையும்—கைது செய்து புரட்சி நீதிமன்றங்கள் வசம் ஒப்படையுங்கள்....

''தோழர்களே—தொழிலாளர்களே, படைவீரர்களே, விவசாயிகளே, அனைத்து உழைப்பாளி மக்களே!

''ஆட்சியதிகாரம் அனைத்தையும் உங்களது சோவியத்துகளின் கைகளிலே எடுத்துக் கொள்ளுங்கள்.... படிப்படியாய், விவசாயிகளில் பெரும்பான்மையோரது உடன்பாட்டுடனும் அங்கீகாரத்துடனும் நாம் உறுதியாகவும் பிறழாமலும் சோஷலிசத்தின் வெற்றியை நோக்கி முன்னேறிச் செல்வோம்—மிகுந்த நாகரிக வளர்ச்சியுடைய நாடுகளின் முன்னேறிய தொழிலாளர்கள் முத்தாய்ப்பு வைத்துப் பூர்த்தி செய்யப் போகும் இந்த வெற்றி எல்லா நாடுகளின் மக்களுக்கும் நிலையான சமாதானம் கிட்டச் செய்யும், எல்லா விதமான ஒடுக்குமுறையிலிருந்தும் சுரண்டலிலிருந்தும் அவர்களை விடுவிக்கும்.''

**மக்கள் கமிசார் அவையின் தலைவர்,**
*வி. உலியானவ் (லெனின்).*

*பெத்ரோகிராது, 1917 நவம்பர் 5.*

## 13.

## பெத்ரோகிராது தொழிலாளர்கள் அனைவருக்கும்

''தோழர்களே! புரட்சி வெற்றி பெறுகிறது—புரட்சி வெற்றி பெற்றுவிட்டது. ஆட்சியதிகாரம் அனைத்தும் நமது சோவியத்துகளின் கைக்கு வந்துவிட்டது. முதலாவது வாரங்

களே மெத்தக் கடினமானவை. முறிக்கப்பட்டிருக்கும் பிற் போக்கு முடிவாய் நசுக்கப்பட்டாக வேண்டும், நமது முயற்சி களுக்கு முழுநிறை வெற்றி கிட்டச் செய்தாக வேண்டும். புதிய சோவியத்து அரசாங்கத்தின் எல்லா நோக்கங்களும் ஈடேற வகை செய்யும் பொருட்டு, தொழிலாளி வர்க்கம் இந்நாட்களில் மிகமிக அதிகமான உறுதியும் சகிப்புத்தன்மை யும் வெளிப்படுத்திக் காட்ட வேண்டும்—நிச்சயம் காட்டித் தான் ஆக வேண்டும். அடுத்த சில நாட்களுக்குள் தொழி லாளர் பிரச்சினை பற்றிய புதிய சட்டங்கள் பிறப்பிக்கப் படும்; தொழில் துறையில் பொருளுற்பத்தி, ஒழுங்குமுறை மீதான தொழிலாளர் கண்காணிப்பு பற்றிய சட்டம் முதலா வதாகப் பிறப்பிக்கப்படப் போகும் சட்டங்களில் ஒன்றாய் இருக்கும்.

''பெத்ரொகிராதில் தொழிலாளர் பெருந் திரளினரது வேலை நிறுத்தங்களும் ஆர்ப்பாட்டங்களும் இப்போது தீங்கிழைப்பன வாகவே இருக்கும்.

''எல்லாப் பொருளாதார, அரசியல் வேலைநிறுத்தங்களை யும் உடனே நிறுத்திவிட்டு, உங்கள் வேலையை மேற்கொள் ளுமாறும், குற்றங் குறையற்ற ஒழுங்குமுறையுடன் அதைச் செய்யுமாறும் உங்களைக் கேட்டுக் கொள்கிறோம். ஆலைகளி லும் எல்லாத் தொழில்களிலும் வேலை நடைபெறுவது புதிய சோவியத்து அரசாங்கத்துக்கு அத்தியாவசியமாகும், ஏனெனில் இந்த வேலை எவ்விதத்திலும் தடைப்படுவதானது நமக்குப் புதிய இன்னல்களையே உண்டாக்கும், இப்போதே நமக்குப் போதுமான இன்னல்கள் இருந்து வருகின்றன. எல்லாரும் அவரவருக்குரிய வேலையிடங்களில் இருந்து செயல் படுங்கள்.

''புதிய சோவியத்து அரசாங்கத்துக்கு இந்நாட்களில் ஆதரவளிப்பதற்குரிய சிறந்த வழி—உங்கள் வேலையை நீங் கள் செய்வதுதான்.

''பாட்டாளி வர்க்கத்தின் உருக்கு உறுதி நீடூழி வாழ்க! புரட்சி நீடூழி வாழ்க!''

தொழிலாளர்கள், படையாட்களது
பெத்ரொகிராது சோவியத்து,
தொழிற்சங்கங்களது பெத்ரொகிராது அவை,
ஆலைக் கமிட்டிகளின்
பெத்ரொகிராது அவை.

## 14.

### வேண்டுகோள்களும் எதிர்வேண்டுகோள்களும்

**அரசு வங்கியையும் தனியார் வங்கிகளையும் சேர்ந்த பணியாளர்களிடமிருந்து பெத்ரொகிராது மக்களுக்கு:**

*''தோழர்கள் தொழிலாளர்களே, படையாட்களே, குடிமக்களே!*

*''புரட்சி இராணுவக் கமிட்டி தான் வெளியிடும் 'சிறப்பு அறிக்கையில்' அரசு வங்கியையும் தனியார் வங்கிகளையும் பிற நிலையங்களையும் சேர்ந்த பணியாளர் மீது குற்றம் சாட்டுகிறது; 'போர்முனைக்கு அவசியப் பண்டங்கள் போய்ச் சேருவதை உறுதி செய்வதற்கான அரசாங்க வேலைகளைத் தடுக்கிறார்கள்' என்று குற்றம் சாட்டுகிறது.*

*''தோழர்களே, குடிமக்களே, பொது உழைப்புச் சேனையின் ஒரு பகுதியாகிய எம்மைப் பற்றிக் கூறப்படும் ஒரு அவதூறு இது, நீங்கள் இதை நம்பக் கூடாது.*

*''கடினமான எமது உழைப்புத் துறை வாழ்வில் வன்முறைச் செயல்கள் மூலம் தலையிடப் போவதாக ஓயாமல் அச்சுறுத்தப்படும் நிலைமையில் நாம் வேலை செய்வது எவ்வளவுதான் உபத்திரவமாக இருப்பினும், நம் நாடும் புரட்சியும் நாசமாகிவிடும் நிலையில் இருப்பது தெரிந்து எவ்வளவுதான் நாம் சோர்வுற்று இருப்பினும், யாவற்றையும் மீறி நாங்கள் எல்லாரும், மிக உயர்ந்த நிலையில் இருப்பவர் முதல் மிகக் கீழ் நிலையில் உள்ளவர் வரை, எல்லாப் பணியாளர்களும் கூட்டுறவாளர்களும் கணக்கர்களும் தொழிலாளர்களும் தகவல் பணியர்களும் பிறரும் போர்முனைக்கும் நாட்டுக்கும் அன்றாடத் தேவைப் பொருள்கள் கிடைப்பதுடன் சம்பந்தப்பட்ட எமது கடமைகளைத் தொடர்ந்து நிறைவேற்றியே வருகிறோம்.*

*''தோழர்கள் தொழிலாளர்களே, படையாட்களே, நிதித் துறை, வங்கிப் பணி இவை குறித்த பிரச்சினைகளில் உங்களுக்குத் தகவல் தெரியாதிருப்பதைப் பயன்படுத்தி, உங்களை ஒத்த தொழிலாளர்களுக்கு எதிராய் உங்களைத்*

*தூண்டிவிடப் பார்க்கிருர்கள். போர்முனையில் சோதரப் படையாட்கள் பட்டினி கிடப்பதற்கும் மடிவதற்கும் யார் பொறுப்பாளர்களோ அவர்களை விட்டுவிட்டு, எல்லோரையும் வருத்தும் வறுமையாலும் ஒழுங்கு குலைவாலும் வதைக் கப்பட்டும் தமது கடமையை நிறைவேற்றி வரும் பழிபாவம் அறியாத தொழிலாளர்கள் தலையில் இந்தக் குற்றத்தைச் சுமத்த விரும்புகிருர்கள்.*

**''தொழிலாளர்களே, படையாட்களே, இதை நீங்கள் நினைவில் கொள்ளுங்கள்! பணியாளர்களாகிய நாங்கள் உழைப்பாளி மக்களின் ஒரு பகுதியே ஆவோம், இந்த உழைப்பாளி மக்களின் நலன்களுக் காகவே எப்போதும் நாங்கள் பாடுபட்டு வந்துள்ளோம், இனியும் பாடுபடுவோம். போர்முனைக்கும் தொழிலாளர்களுக்கும் தேவை யானதில் ஒரேயொரு கோப்பெக்கையுங்கூட பணியாளர்களாகிய நாங்கள் ஒருபோதும் நிறுத்தி வைத்ததுமில்லை, நிறுத்தி வைக்கப் போவதுமில்லை.**

*''அக்டோபர் 24லிருந்து நவம்பர் 10 வரையில், அதாவது 17 நாட்களில், போர்முனைக்கு 50 கோடி ரூபிளும், மாஸ்கோவுக்கு 12 கோடி ரூபிளும் அனுப்பப்பட்டன, இதன்றி பிற நகரங்களுக்கும் தொகைகள் அனுப்பப்பட்டுள்ளன.*

*''தேசம் அனைத்துக்குமான பிரதிநிதியாகிய அரசியல் நிர்ணயச் சபைதான் மக்களது செல்வத்தின் எஜமானஞக இருக்க முடியும், மக்களது இந்தச் செல்வத்தைக் காவல் புரிந்து நிற்கும் பணியாளர்கள், தமக்குத் தெரியாத காரியங்களுக்காக பணத்தைக் கொடுக்க மறுக்கிருர்கள்.*

**''சட்டத்தை உங்கள் கையிலேயே எடுத்துக் கொண்டுவிடும்படி உங்களுக்கு அழைப்பு விடுக்கும் இந்த அவதூறுக்காரர்களின் கூற்றை நம்பாதீர்கள்!''**

**அரசு வங்கியின் பணியாளர்களது**
**அனைத்து ருஷ்ய ஒன்றியத்தின்**
**மத்தியக் குழு.**

**கடன் உதவும் நிலையங்களின் பணியாளர்களது**
**அனைத்து ருஷ்யத் தொழிற் சங்க மத்தியக் குழு.**

* * *

“குடிமக்களே! வழங்கீட்டு அமைச்சகத்தின் பணியாளர்களும், ஏனைய வழங்கீட்டு நிறுவனங்களின் ஊழியர்களும் இருள் கவிந்த இந்நாட்களில் ருஷ்யாவின் விடுமோட்சத்துக்காகப் பாடுபட்டு வருகிறவர்கள். பொறுப்புணர்ச்சி இல்லாதவர்கள் இவர்களுக்கு எதிராய்ப் படுபாதக அவதூறுகளைப் பரப்பி உங்களிடம் கூற முயலும் பொய்க் கூற்றுகளை நம்பாதீர்கள். குடிமக்களே! பயங்கரப் பட்டினியிடமிருந்து ருஷ்ய மக்களைப் பாதுகாப்பதற்காக நாங்கள் ஓய்ச்சல் ஒழிவின்றி அயராது பாடுபட்டு வந்துள்ளோம், இனியும் தொடர்ந்து பாடுபட்டு வருகிறோம்; ஆனால் எங்கள் மீது வன்முறை வெறித் தாக்குதல் நடத்தும்படி சுவரொட்டிகளில் உங்களுக்கு அழைப்பு விடுகின்றனர், சீர்குலைவு புரிவதாகவும் வேலைநிறுத்தங்கள் செய்வதாகவும் எம்மீது பொய்யான குற்றச்சாட்டுகளைப் பொழிகிறார்கள், மக்களை வாட்டி வதைக்கும் எல்லாக் கொடுந் துன்பங்களுக்கும் துர்ப்பாக்கியங்களுக்கும் நாங்கள்தான் காரணமென எங்களைத் தூற்றுகிறார்கள். இவற்றை எல்லாம் பொருட்படுத்தாது நாங்கள் துயருறும் ருஷ்யாவின் குடியாளராய்ப் பொறுமையுடன் பணியாற்றுகிறோம், சேனைக்கும் குடிமக்களுக்கும் அவசியப் பொருட்களை வழங்கும் எங்களது மிகக் கடினமான, பொறுப்பு வாய்ந்த பணியினை ஒரு மணி நேரமுங்கூட கைவிடாமல் பாடுபடுகின்றோம்.

“குளிரில் அடிபட்டு பசியால் வருந்தி சேனையானது தனது இரத்தத்தைச் சிந்திச் சித்திரவதைக்கு உள்ளாகி நமது வாழ்வைப் பாதுகாக்கின்றது—சேனையின் இந்த உருவம் கணப்பொழுதுக்கும் எம் சிந்தையை விட்டு விலகுவதில்லை.

“குடிமக்களே! நமது மக்களின் வாழ்விலும் வரலாற்றிலும் மிக இருண்ட இந்நாட்களில் நாம் அழிந்தொழியாது இருக்கிறோம் என்றால், பெத்ரொகிராதில் பஞ்சம் தலைவிரித்தாடாது தடுப்பதில் வெற்றி கண்டோம் என்றால், துன்புறும் சேனைக்கு ரொட்டியும் உணவும் அளித்திடும் பணியைப் பிரம்மாண்டமான, மனித சக்திக்கும் மீறிய முயற்சிகள் மூலம் சமாளித்து வந்துள்ளோம் என்றால், நேர்மையுடன்

நாங்கள் கடமையாற்றி வந்துள்ளோம், தொடர்ந்து ஆற்றி வருகிறேம் என்பதுதான் காரணம்....

''அடாத வழியில் ஆட்சியதிகாரத்தில் அமர்ந்து கொண்டோரது 'இறுதி எச்சரிக்கைக்கு' நாம் கூறும் பதில் இதுதான்; அழிவை நோக்கி நாட்டை அழைத்துச் செல்லும் உங்களுக்கு எங்களை அச்சுறுத்த, நாடு அழிந்தொழிய விடலாகாதென்று எம்மால் இயன்றது அனைத்தும் செய்து வரும் எங்களை அச்சுறுத்த எந்த அதிகாரமும் இல்லை. அச்சுறுத்தல்களைக் கண்டு நாங்கள் அஞ்சவில்லை. சித்திரவதைக்கு உள்ளாகித் துடிதுடிக்கும் ருஷ்யாவின் புனிதமான உருவம் எங்களுக்கு வழி காட்டுகிறது. சேனைக்கும் மக்களுக்கும் உணவு வழங்கும் எமது வேலையை எமது இறுதி மூச்சுள்ளளவும் தொடர்ந்து நாங்கள் செய்து வருவோம், எங்கள் நாட்டுக்கு எமது கடமையை ஆற்ற முடியாதபடி நீங்கள் தடுத்து நிறுத்தாதவரை தொடர்ந்து இவ்வேலையைச் செய்து வருவோம். இதற்கு இடம் தராமல் தடுப்பீர்களாயின், சேனையும் மக்களும் பஞ்சத்தின் கொடிய பிடியிலே சிக்க வேண்டி வரும், ஆனால் அதற்கான பொறுப்பு வன்முறை புரியும் கொடியோரையே சாரும்.''

வழங்கீட்டு அமைச்சகத்தின்
பணியாளர்களது செயற் குழு.

* * *

**அரசாங்க அலுவலர்கள் எல்லார்க்கும்**

இதன் மூலம் அறிவிக்கப்படுவது என்னவெனில், அரசாங்கப் பணியிலிருந்தும் பொது நிலையங்களது பணியிலிருந்தும் விலகிக் கொண்ட, அல்லது சீர்குலைவுக்காகவோ நிர்ணய நாளன்று வேலைக்கு வந்து சேரத் தவறியதற்காகவோ வேலை நீக்கம் செய்யப்பட்ட எல்லா அலுவலர்களும் பணியாளர்களும், அதே போது தாம் பணி புரியாத இக்காலத்துக்காக முன்கூட்டியே சம்பளம் மட்டும் பெற்றுக் கொண்ட இவர்கள் எல்லோரும், 1917 நவம்பர் 27க்குப் பிற்படாமல், இச்சம்பளத்தைத் தாம் வேலையில் இருந்த நிலையங்களுக்குத் திருப்பித் தந்துவிடக் கடமைப்பட்டவர்கள்.

இப்படிச் செய்யாதிருக்கும் பட்சத்தில், அரசாங்கக் கருவூலத்துக்குரியவற்றைக் களவாடியதற்காகப் பதிலளிக்க வேண்டியவர்களாக்கப்பட்டு, புரட்சி இராணுவ நீதிமன்றத்தின் முன்னுல் விசாரணைக்குக் கொண்டு வரப் படுவர்.

**புரட்சி இராணுவக் கமிட்டி.**

*1917 நவம்பர் 24.*

* * *

**வழங்கீட்டுத் தனிக் குழுவிடமிருந்து குடிமக்களே!**

''பெத்ரொகிராதுக்குப் பொருள் வழங்குவதற்கான எமது பணிக்குரிய நிலைமைகள் நாளுக்கு நாள் மேலும் மேலும் கடினமாகி வருகின்றன.

''எமது வேலைகளில் புரட்சி இராணுவக் கமிட்டியின் கமிசார்களது தலையீடு தொடர்ந்து நடைபெற்று வருகிறது, இந்தத் தலையீடு எமது பணியைக் கேடுறச் செய்கிறது.

''இவர்களுடைய தான்தோன்றித் தனமான செயல்கள், எமது உத்தரவுகளை இவர்கள் ரத்து செய்திடுவதானது, பெருவிபத்தை உண்டாக்கக் கூடியதாகும்.

''நகர மக்களுக்கு வேண்டிய இறைச்சியும் வெண்ணெயும் வைக்கப்பட்டிருக்கும் குளிர்பதனக் கிடங்களில் ஒன்றப் பூட்டி முத்திரையிட்டிருக்கிருர்கள். பண்டங்கள் வீணுகி விடாமல் இருக்கும் பொருட்டு நாங்கள் கிடங்கின் வெப்பநிலையை ஒழுங்கு செய்ய முடியவில்லை.

''ஒரு ரயில்பெட்டி உருளைக்கிழங்கும் ஒரு ரயில்பெட்டி முட்டைகோசும் கைப்பற்றப்பட்டு எடுத்துச் செல்லப்பட்டிருக்கின்றன—எங்கே எடுத்துச் சென்ருர்கள் என்று யாருக்கும் தெரியாது.

''பறிமுதலுக்கு இலக்காக முடியாத சரக்குகளை (ஹல்வா) கமிசார்கள் பறிமுதல் செய்கிருர்கள். இம்மாதிரிதான் ஒரு நாள் ஐந்து ஹல்வாப் பெட்டிகளைக் கமிசார் தமது சொந்த உபயோகத்துக்காகக் கைப்பற்றிக் கொண்டுவிட்டார்.

''எமது கிடங்குகளிலுள்ள பொருள்களை நாங்கள் எடுத்து வினியோகிக்கும்படியான நிலையில் இல்லை, *தம்மைத் தாமே நியமித்துக் கொண்ட இந்தக் கமிசார்கள் சரக்குகளை நாங்கள் வெளியே எடுத்து வர முடியாதபடி தடுக்கிறார்கள், எமது பணியாளர்களை அச்சுறுத்துகிறார்கள், கைது செய்து விடுவோமென மிரட்டுகிறார்கள்.*

''பெத்ரொகிராதில் நடைபெறுகிறவை எல்லாம் மாநிலங்களுக்குத் தெரியும், தோனிலும் சைபீரியாவிலும் வரோனெழிலும் இதர இடங்களிலும் மக்கள் இங்கு மாவும் ரொட்டியும் அனுப்ப மறுக்கிறார்கள்.

''அதிக காலத்துக்கு நிலைமை இப்படியே நீடிக்க முடியாது.

*''இந்த வேலை எமது கைக்கு அடங்காததாகி வருகிறது.*

*''நகர மக்களுக்கு இதைத் தெரியப்படுத்துவது* எமது கடமையாகும்.

*''சாத்தியமான இறுதி தருணம் வரை நாங்கள் நகர மக்களது நலன்களைப் பாதுகாத்து நிற்போம்.*

''நெருங்கி வரும் பஞ்சத்தைத் தவிர்ப்பதற்காக நாங்கள் அனைத்தும் செய்வோம், ஆனால் கடினமான இந்நிலைமைகளில் எமது வேலைகள் நின்று விடும்படியான நிர்ப்பந்தம் ஏற்படுமாயின், அதற்கு நாங்களல்ல குற்றவாளிகள் என்பதை மக்கள் தெரிந்து கொள்வார்களாக....''

* * *

## 15.

### பெத்ரொகிராதில்
### அரசியல் நிர்ணயச் சபைத் தேர்தல்கள்

*பெத்ரொகிராதில் 19 சீட்டுகள் போட்டியிட்டன. நவம்பர் 30ல் வெளியிடப்பட்ட தேர்தல் முடிவுகள் வருமாறு:*

| கட்சி | கிடைத்த வாக்குகள் |
|---|---|
| *நரோத்னி சோஷலிஸ்டுகள்* . . . . . . | 19,109 |
| *காடேட்டுகள்* . . . . . . . . . . . . . | 2,45,006 |
| *கிறிஸ்துவ ஜனநாயகவாதிகள்* . . . . | 3,707 |
| *போல்ஷிவிக்குகள்* . . . . . . . . . . | 4,24,027 |
| *சோஷலிஸ்டு அனைத்துலகவாதிகள்* . . . | 158 |

| | |
|---|---|
| உக்ரைனிய, யூதர் தொழிலாளர்கள் சமூக-ஜனநாயகவாதிகளும் சோஷ லிஸ்டு-புரட்சியாளர்களும் . . . . . | 4,219 |
| பெண்கள் உரிமைக் கழகம் . . . . . . | 5,310 |
| சோஷலிஸ்டு-புரட்சியாளர்கள் (அப ரோன்த்ஸி) . . . . . . . . . . . . . | 4,696 |
| இடதுசாரி சோஷலிஸ்டு-புரட்சியாளர் கள் . . . . . . . . . . . . . . . . | 1,52,230 |
| மக்கள் வளர்ச்சிக் கழகம் . . . . . . | 385 |
| தீவிர ஜனநாயகவாதிகள் . . . . . . | 413 |
| சத்திய சமயத் தொகுதிகள் . . . . . | 24,139 |
| நாட்டின் இரட்சணிய மகளிர் கழகம் | 318 |
| தொழிலாளர்கள், படையாட்கள், விவ சாயிகளது சுயேச்சைக் கழகம் . . . . | 4,942 |
| கிறிஸ்துவ ஜனநாயகவாதிகள் (கத்தோ லிக்கர்கள்) . . . . . . . . . . . . | 14,382 |
| ஐக்கிய சமூக-ஜனநாயகவாதிகள் . . . | 11,740 |
| மென்ஷிவிக்குகள் . . . . . . . . . . | 17,427 |
| எதீன்ஸ்துவொ கோஷ்டி . . . . . . | 1,823 |
| கசாக்குப் படைகளின் கழகம் . . . . . | 6,712 |

## 16.

### மக்கள் கமிசார் அவையிடமிருந்து உழைப்பாளி கசாக்குகளுக்கு

''கசாக்குச் சோதரர்களே!

''நீங்கள் ஏமாற்றப்படுகிறீர்கள். மக்களுக்கு விரோத மாக உங்களைத் தூண்டிவிடுகிறார்கள். தொழிலாளர்கள், படையாட்கள், விவசாயிகள் பிரதிநிதிகளது சோவியத்து கள் உங்கள் பகையாகும் என்றும், உங்களது கசாக்கு நிலங் களையும், உங்களது கசாக்குச் 'சுதந்திரத்தையும்' பிடுங்க விரும்புகின்றன என்றும் உங்களிடம் சொல்கிறார்கள். கசாக்கு களே, இந்தக் கூற்றை நம்பாதீர்கள்.... உங்கள் ஜெனரல் களும் நிலப்பிரபுக்களும் உங்களை இருட்டிலும் அடிமை வாழ் விலும் இருத்தி வைப்பதற்காக உங்களை ஏமாற்றி வருகிறார்

கள். கசாக்குகளே, மக்கள் கமிசார் அவையினரான நாங்கள் உங்களுக்கு இவ்வுரைகளைக் கூற விரும்புகிறோம். இவற்றை கவனமாய்ப் படித்துப் பாருங்கள், பிறகு எது உண்மை, எது கொடிய ஏமாற்று என்பதை நீங்களே முடிவு செய்து கொள்ளுங்கள். கசாக்கின் வாழ்வும் பணியும் எப்போதுமே கட்டுண்டும், அடிமைப்பட்ட தண்டச் சேவையுமாகவே இருந்துள்ளன. அதிகாரிகளது முதலாவது அழைப்பு வந்ததும் கசாக்கு எப்போதுமே தமது குதிரைக்குச் சேணமிட்டு இராணுவச் சேவைக்குப் புறப்பட்டாக வேண்டும். தமக்கு வேண்டிய இராணுவச் சாதனங்கள் யாவற்றையும் அரும்பாடு பட்டுத் தாமே சம்பாதித்ததைக் கொண்டுதான் அவர் வாங்கிக் கொள்ள வேண்டும். கசாக்கு இராணுவச் சேவைக்குச் சென்றிருக்கையில் அவரது நிலங்கள் கவனிப்பாரற்று வீணாகின்றன. இந்த நிலைமை நியாயம்தானா? இல்லை, என்றென்றுக்குமாய் இந்நிலையை மாற்றியாக வேண்டும். அடிமைத் தளைகளிலிருந்து கசாக்குகள் விடுவிக்கப்பட வேண்டும். மக்களது புதிய சோவியத்து ஆட்சியதிகாரமானது உழைக்கும் கசாக்குகளின் உதவிக்கு வரத் தயாராயிருக்கிறது. தேவைப்படுவதெல்லாம், பழைய அமைப்பை ஒழித்துக் கட்டுவதெனக் கசாக்குகள் வைராக்கிய முடிவுக்கு வர வேண்டியதுதான்; தம்மை அடிமைகளாக ஆட்டிப் படைக்கும் படையதிகாரிகள், நிலப்பிரபுக்கள், செல்வந்தர்கள் ஆகியோருக்கு அடிபணிய மறுத்துத் தம் கழுத்திலுள்ள கொடிய நுகத்தடியை உதறித் தள்ள வேண்டியதுதான். கசாக்குகளே, கிளர்ந்தெழுங்கள்! ஒன்றுபடுங்கள்! இன்பம் தழைக்கும் புதிய வாழ்வினுள் அடியெடுத்து வைக்குமாறு மக்கள் கமிசார் அவை உங்களை அழைக்கிறது.

''நவம்பரிலும் டிசம்பரிலும் பெத்ரொகிராதில் படையாட்கள், தொழிலாளர்கள், விவசாயிகள் பிரதிநிதிகளது அனைத்து ருஷ்யக் காங்கிரசுகள் நடைபெற்றன. எல்லா வட்டாரங்களிலும் அனைத்து ஆட்சியதிகாரத்தையும் இந்தக் காங்கிரசுகள் சோவியத்துகளின் கைக்கு மாற்றின, அதாவது மக்கள் நேரில் தாமே தேர்ந்தெடுக்கும் ஆட்களின் கைக்கு மாற்றின. இனி ருஷ்யாவில் மேலிருந்து மக்கள் மீது ஆண்மை புரிந்து அவர்களை ஆட்டிப் படைக்கும் ஆட்சி

யாளர்களோ, அதிகாரிகளோ இருக்கலாகாது. மக்கள் நேரில் தாமே ஆட்சியதிகாரத்தைப் படைத்தமைக்கிறார்கள். படையாளைக் காட்டிலும் அதிக உரிமை பெற்றவரல்ல ஜெனரல். எல்லாரும் சரிநிகர் சமம். கசாக்குகளே, இது சரியல்லவா? இதில் என்ன தவறு? என்பதை நீங்களே சிந்தித்துப் பாருங்கள். இந்தப் புதிய அமைப்பில் சேர்ந்து கொள்ளும்படி, கசாக்குப் பிரதிநிதிகளது சோவியத்துகளான உங்களது சொந்த சோவியத்துகளை உருவாக்கிக் கொள்ளும்படி உங்களை அழைக்கின்றோம். வெவ்வேறு வட்டாரங்களிலும் இம்மாதிரியான சோவியத்துகளுக்கே ஆட்சியதிகாரம் அனைத்தும் உரியதாக வேண்டும். ஜெனரல் பட்டம் கொண்ட அட்டாமன் பிரபுக்களுக்கல்ல, உழைக்கும் கசாக்குகளது தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளுக்கே, உங்கள் நம்பிக்கைக்கு உரியவர்களான உங்களவர்களுக்கே ஆட்சியதிகாரம் உரியது.

''நிலப்பிரபுக்களுடைய எல்லா நிலங்களும் உழைப்பாளி மக்கள் கைவசத்துக்கு மாற்றப்படுகிறது என்று படையாட்கள், தொழிலாளர்கள், விவசாயிகளது பிரதிநிதிகளது அனைத்து ருஷ்யக் காங்கிரசுகள் தீர்மானம் நிறைவேற்றியிருக்கின்றன. கசாக்குகளே, இது நியாயமானதல்லவா? கர்னீலவ்கள், கலேடின்கள், துத்தோவ்கள், கரவூலொவ்கள், பர்திழீக்கள்—இவர்கள் எல்லோரும் தமது உடல், பொருள், ஆவி அனைத்தையும் கொண்டு செல்வச் சீமான்களது நலன்களைப் பாதுகாக்கிறார்கள்; நிலங்கள் தொடர்ந்து நிலப்பிரபுக்களுடைய கைகளில் இருக்க வேண்டுமென்று ருஷ்யாவையே இரத்த வெள்ளத்தில் மூழ்க்கடிக்கத் தயாராயிருக்கிறார்கள். ஆனால் உழைக்கும் கசாக்குகளாகிய நீங்கள் வறுமைக்கும் ஒடுக்குமுறைக்கும் நிலமில்லாத் திண்டாட்டத்துக்கும் பலியாகித் துன்புறவில்லையா? தலைக்கு 4—5 தெஸ்ஸியத்தீனாவுக்கு* மேல் நிலமுடைத்த கசாக்குகள் எத்தனை பேர் இருக்கிறார்கள்? ஆனால் ஆயிரக்கணக்கான தெஸ்ஸியத்தீனாக்கள் சொந்த நிலங்களைப் பெற்றிருக்கும் நிலப்பிரபுக்கள், இவை போதாதென கசாக்குச் சேனையின் நிலங்களையும் தாமே கைப்பற்றிக் கொள்ள விரும்புகிறார்கள். புதியசோவியத்துச் சட்டங்களின் படி கசாக்கு நிலப்பிரபுக்களுடைய

* தெஸ்ஸியத்தீனா=2.7 ஏக்கர்.—[பதிப்பாசிரியர்.]

நிலங்கள் இழப்பீடு இல்லாமலே கசாக்கு உழைப்பாளர் களது கைக்கும் ஏழ்மைப்பட்ட கசாக்குகள் கைக்கும் மாறி விட வேண்டும். ஆனால் உங்களிடமிருந்து உங்கள் நிலங்களைப் பிடுங்கிக் கொள்ள சோவியத்துகள் விரும்புவதாக உங்களி டம் கூறி வருகிறார்கள். இப்படிக் கூறி உங்களைப் பயமுறுத்து கிறவர்கள் யார்? சோவியத்து ஆட்சியதிகாரமானது நிலப் பிரபுக்களுடைய நிலங்களை உங்களுக்குரியனவாய் மாற்ற விரும்புகிறதென்பதை நன்கறிந்த இந்தப் பணக்கார கசாக்கு கள் இதைச் செய்கிறார்கள். ஆகவே, கசாக்குகளே, நீங்கள் யார் பக்கம் என்பதை நீங்களே தீர்மானம் செய்து கொள்ளுங் கள்—கர்னீலவ்கள், கலேடின்களின் பக்கமா, ஜெனரல்கள், செல்வச் சீமான்களின் பக்கமா? அல்லது விவசாயிகள், படை யாட்கள், தொழிலாளர்கள், கசாக்குகள் பிரதிநிதிகளது சோவியத்துகளின் பக்கமா?

''அனைத்து ருஷ்யக் காங்கிரசால் தேர்ந்தெடுக்கப்பட்ட **மக்கள் கமிசார் அவையானது, எல்லாத் தேசங்களுக்கும் உடனடியான போர்நிறுத்தத்தையும், எந்தத் தேசத்துக்கும் நஷ்டமோ தீங்கோ ஏற்படுத்தாத நேர்மையான ஜனநாயக சமா தானத்தையும் முன்மொழிந்திருக்கிறது.** சோவியத்துகளுடைய இந்த சமாதானக் கொள்கைக்கு எதிராய் எல்லா முத லாளிகளும் நிலப்பிரபுக்களும் கர்னீலவிய-ஜெனரல்களும் கிளம்பியிருக்கிறார்கள். யுத்தம் அவர்களுக்கு இலாபங்களும் அதிகாரமும் பட்டமும் பதவியும் பெற்றுத் தந்தது. ஆனால் சாதாரண கசாக்குப் படையாட்களாகிய உங்களுக்கு அது தந்தது என்ன? நீங்கள் உங்களது சோதரப் படையாட்களை யும் மாலுமிகளையும் போலவே காரணமின்றி, குறிக்கோ ளின்றிச் செத்து மடிந்து கொண்டிருந்தீர்கள். இந்தக் கேடு கெட்ட யுத்தம் ஆரம்பித்து விரைவில் மூன்றரை ஆண்டுகள் முடிவுறப் போகின்றன, எல்லா நாடுகளிலுமுள்ள முதலாளி களும் நிலப்பிரபுக்களும் தமது சொந்த இலாபத்துக்காக, தமது உலகக் கொள்ளைகளுக்காகத் தோற்றுவித்துக் கொண்ட ஒரு யுத்தம் இது. உழைக்கும் கசாக்குகளுக்கு இந்த யுத்தம் நாசத்தையும் சாவையுமே பெற்றுத் தந்திருக்கிறது. கசாக்கு களுடைய வேளாண்மை வாழ்விலிருந்து இந்த யுத்தம் எல் லாச் செல்வாதாரங்களையும் பறித்துச் சென்றுவிட்டது. நம்

*நாடு அனைத்தும், குறிப்பாகக் கசாக்குகளும் கரையேறுவதற் கான வழி உடனடியான, நேர்மையான சமாதானம் ஒன் றேதான். மக்கள் கமிசார் அவை எல்லா அரசாங்கங்களுக் கும் எல்லா நாட்டவர்களுக்கும் பிரகடனம் செய்திருக்கிறது: பிற நாட்டு மக்களது சொத்தை நாம் விரும்பவில்லை, எம் நாட்டு மக்களது சொத்தை எவருக்கும் தரவும் விரும்ப வில்லை. பிரதேசச் சேர்ப்புகளில்லாத, இழப்பீடுகள் இல்லாத சமாதானமே வேண்டும். அந்தந்த தேசமும் தானே தனது கதியை நிர்ணயித்துக் கொள்ள வேண்டும். ஒரு தேசம் பிறி தொன்றை ஒடுக்குவது கூடாது. இத்தகைய நேர்மையான, ஜனநாயகத் தன்மையதான, மக்கள் சமாதானத்தைத்தான் மக்கள் கமிசார் அவை நேசநாடுகளாயினும் சரி, பகை நாடு களாயினும் சரி, எல்லா நாடுகளின் அரசாங்கங்களுக்கும் மக்களுக்கும் முன்மொழிகிறது. இதன் விளைவுகள் கண்கூடா கவே புலப்படுகின்றன:* **ருஷ்யப் போர்முனையில் ஏற்கெனவே போர்நிறுத்த ஒப்பந்தம் முடிவாகியுள்ளது.**

*‘‘படையாட்களின், கசாக்குகளின் இரத்தம் இனி இங்கே ஓடவில்லை. கசாக்குகளே, இப்போது நீங்களேதான் முடிவு செய்து கொண்டாக வேண்டும்: இந்த நாசகரமான, அர்த்தமற்ற, கோரத்தனமான படுகொலை தொடர்ந்து நடை பெற வேண்டுமென்று விரும்புகிறீர்கள்? அப்படியானால், மக் களின் பகைவர்களாகிய காடேட்டுகளுக்கு ஆதரவளியுங்கள்; ஜூலை முதல் நாள் தாக்குதல் கொலைக் களத்துக்கு உங்களை ஓட்டிச் சென்ற செர்னேவுக்கும் திசெரெதேலிக்கும் ஸ்கோ பெலெவுக்கும் ஆதரவளியுங்கள்; போர்முனையிலே படை யாட்களுக்கும் கசாக்குகளுக்கும் மரண தண்டனையைப் புகுத்திச் செயல்படுத்திய கர்னீலவுக்கு ஆதரவளியுங்கள்.* **ஆனால் உடனடியான, நேர்மையான சமாதானத்தை விரும்புவீர் களாயின், சோவியத்துகளின் அணிவரிசையில் சேர்ந்து கொண்டு மக்கள் கமிசார் அவைக்கு ஆதரவளியுங்கள்.**

*‘‘கசாக்குகளே, உங்களுடைய எதிர்காலம் உங்கள் கை களிலேதான் இருக்கிறது. நமது பொதுப் பகைவர்களாகிய நிலப்பிரபுக்களும் முதலாளிகளும் கர்னீலவிய-படையதிகாரி களும் முதலாளித்துவச் செய்தியேடுகளும் உங்கள் ஏமாற்றி வருகிறார்கள், நாசகரப் பாதையிலே உங்களை இழுத்துச்*

செல்கிறுர்கள். ஒரென்பார்க் நகரத்தில் துத்தோவ் சோவி யத்து உறுப்பினர்களைக் கைது செய்து நகரக் காவற் படை யினரிடமிருந்து ஆயுதங்களைப் பறித்துக் கொண்டுவிட்டார். தோன் மாநிலத்தில் சோவியத்துகளை அழிக்கப் போவதாகக் கலேடின் அச்சுறுத்துகிறுர். இந்த மாநிலம் யுத்த நிலைமைக்கு உட்பட்டிருப்பதாக அவர் அறிவித்திருக்கிறுர், தனது படை களைத் திரட்டி வருகிறுர். காக்கசஸில் கரவூலொவ் அப்பகுதி யின் குடிகளைச் சுட்டுக்கொல்கிறுர். காடேட்டு முதலாளித் துவ வர்க்கத்தார் கோடிக் கணக்கில் தம்மிடமுள்ள பணத் தைக் கொண்டு இவர்களுக்கு உதவுகிறுர்கள். மக்களது சோவியத்துகளை ஒழித்துக்கட்டி, தொழிலாளர்களையும் விவ சாயிகளையும் நசுக்கி, சேனையில் மீண்டும் சாட்டையடிக் கட் டுப்பாட்டைப் புகுத்துவதும், உழைக்கும் கசாக்குகளை இருத்தும் அடிமைத் தளைகளை என்றென்றைக்கும் சாசுவத மாக்குவதும்தான் இவர்கள் எல்லோருக்கும் பொதுவான நோக்கம்.

''மக்களுக்கு எதிரான இந்தக் கொலைகாரக் கலகத்துக்கு முடிவு கட்டுவதற்காக நமதுப் புரட்சிப் படைகள் தோனுக் கும் உராலுக்கும் செல்கின்றன. கலகக்கார ஜெனரல்களுடன் எந்த விதமான பேச்சுவார்த்தைகளிலும் இறங்க வேண்டா மென்றும், தீர்மானகரமாகவும் இரக்கமற்றும் செயல்பட வேண்டுமென்றும் புரட்சிப் படைகளின் படைத்தலைவர்களுக்கு உத்தரவளிக்கப்பட்டிருக்கிறது.

''கசாக்குகளே! உங்களது சோதரர்களது இரத்தம் இனியும் தொடர்ந்து பெருக்கெடுக்க வேண்டுமா என்பது இப்போது உங்களையே பொறுத்திருக்கிறது. நாங்கள் உங் களுக்கு எமது கரத்தை நீட்டுகிறேம். மக்களின் பகைவர் களை எதிர்த்து மக்கள் அனைவரோடும் ஒன்றுசேருங்கள். கலேடினும் கர்னீலவும் துத்தோவும் கரவூலொவும் இவர் களுக்கு உதவியாகவும் உடந்தையாகவும் இருப்போர் எல் லோரும் மக்களின் பகைவர்களாவரென்று, தேசத் துரோகி களும் காட்டிக் கொடுக்கும் வஞ்சகர்களுமாவரென்று அறி வியுங்கள். உங்களுடைய சொந்த படைபலம் கொண்டு இவர் களைக் கைது செய்து சோவியத்து ஆட்சியதிகாரத்தின் கையில் ஒப்படையுங்கள். புரட்சி நீதிமன்றத்தின் முன்னுல்

இவர்களைப் பகிரங்க, பொது விசாரணைக்குக் கொண்டு வந்து சோவியத்து ஆட்சியதிகாரம் இவர்களுக்குத் தக்க தீர்ப்பு கிடைக்கும்படிச் செய்யும்.

''கசாக்குகளே! கசாக்குப் பிரதிநிதிகளது சோவியத்து களை அமையுங்கள். கசாக்குகளின் எல்லா விவகாரங்களுக்கு மான நிர்வாகப் பொறுப்பை உழைத்துத் தழும்பேறிய உங்களது கரங்களில் ஏற்றுக்கொள்ளுங்கள். உங்களைச் சேர்ந்த செல்வந்தர்களாகிய நிலப்பிரபுக்களின் நிலங்களை அவர்களிடமிருந்து பறிமுதல் செய்யுங்கள். அவர்களுடைய தானியத்தையும், பட்டியலிடப் பட்ட அவர்களது பண்ணைச் சொத்துகளையும், கால்நடைகளையும் பறிமுதல் செய்து, யுத் தத்தால் நலவுற்ற உழைக்கும் கசாக்குகளது நிலங்களின் சாகுபடிக்காக அவற்றைப் பயன்படுத்துங்கள்.

''கசாக்குகளே, மக்களது பொது இலட்சியத்துக்காகப் போராட முன்வாருங்கள்!

''உழைக்கும் கசாக்குகள் நீடூழி வாழ்க!

''கசாக்குகள், படையாட்கள், விவசாயிகள், தொழிலா ளர்களது ஒற்றுமை நீடூழி வாழ்க!

''கசாக்குகள், படையாட்கள், தொழிலாளர்கள், விவ சாயிகள் பிரதிநிதிகளது சோவியத்துகளின் ஆட்சியதிகா ரம் நீடூழி வாழ்க!

''யுத்தம் ஒழிக! நலப்பிரபுக்களும் கர்னீலவிய ஜென ரல்களும் ஒழிக!

''சமாதானமும் பன்னுட்டு மக்களது சோதரத்துவமும் நீடூழி வாழ்க!''

**மக்கள் கமிசார் அவை.**

## 17.

### நகர மத்திய டுமாவுடன் இணைந்த கல்வித் துறை ஆணைக் குழுவிடமிருந்து

''தோழர்கள் உழைப்பாளி ஆடவர்களே, உழைப்பாளி பெண்டிரே!

''விடுமுறைக்குச் சில நாட்கள் முன்னதாகப் பொதுப் பள்ளிக்கூடங்களின் ஆசிரியர்கள் வேலை நிறுத்தம் செய்திருக்

கிறார்கள். தொழிலாளர், விவசாயிகளது அரசாங்கத்துக்கு எதிராய் ஆசிரியர்கள் முதலாளித்துவ வர்க்கத்தாரின் தரப்புக்கு ஆதரவளிக்கிறார்கள்.

''தோழர்களே, பெற்றோர் கமிட்டிகளை அமைத்து, ஆசிரியர்களது வேலைநிறுத்தத்தை எதிர்த்துத் தீர்மானங்கள் நிறைவேற்றுங்கள். கண்டனக் கூட்டங்கள் நடத்தும்படி தொழிலாளர்கள், படையாட்கள் பிரதிநிதிகளது வட்டார சோவியத்துகளுக்கும், தொழிற் சங்கங்களுக்கும், ஆலைக் கமிட்டிகளுக்கும், கட்சிக் கமிட்டிகளுக்கும் முன்மொழியுங்கள். உங்களது சொந்த வசதிகளைக் கொண்டு குழந்தைகளுக்காகக் கிறிஸ்துமஸ் மரங்கள் அமைத்துக் கொண்டாட்டங்களுக்கு ஏற்பாடு செய்யுங்கள், விடுமுறைக்குப் பிற்பாடு நகர டூமா அறிவிக்கும் தேதியன்று பள்ளிக்கூடங்கள் திறக்கப்பட வேண்டுமெனக் கோருங்கள்.

''தோழர்களே, கல்வித் துறை விவகாரங்களில் உங்கள் நிலையைப் பலம் பெறச் செய்யுங்கள், பள்ளிக்கூடங்கள் மீது பாட்டாளி வர்க்க நிறுவனங்களது கண்காணிப்பு வேண்டுமென்று வற்புறுத்துங்கள்.''

**நகர மத்திய டூமாவுடன் இணைந்த**
**கல்வித் துறை ஆணைக் குழு**

## 18.

## சோவியத்து அரசாங்கத்தின் தூதுத்துறைக் கடிதப் போக்குவரத்து

நேசநாடுகளுக்கும் நடுநிலை அரசுகளுக்கும் திரோத்ஸ்கி அனுப்பிய குறிப்புகளும், மற்றும் ஜெனரல் துஹோனினுக்கு நேசநாடுகளது இராணுவத் தூதுக் குழுவினர் அனுப்பிய குறிப்பும் மிகவும் நீளமானவை, அவற்றை இங்கே தருவதற்கில்லை. தவிரவும் சோவியத்துக் குடியரசினது வரலாற்றின் இன்னொரு துறையைப் பற்றியவை—சோவியத்து அரசாங்கத்தின் அயல்துறை உறவுகளைப் பற்றியவை இவை. இத்துறை குறித்து இப்புத்தகம் பரிசீலிக்கவில்லை. ''கர்னீலவ் முதல் பிரேஸ்த்-லித்தோவ்ஸ்க் வரை'' என்ற எனது அடுத்த புத்தகத்தில் இதனை நான் விவரமாக எடுத்துரைக்கிறேன்.

## 19.

## துஹோனினுக்கு எதிராய்ப் போர்முனைக்கு வேண்டுகோள்கள்

''...சமாதானத்துக்கான போராட்டமானது முதலாளித் துவ வர்க்கத்தாரின், எதிர்ப்புரட்சி ஜெனரல்களின் எதிர்ப் பினை எதிர்நோக்கு வேண்டியதாகியுள்ளது.... செய்தியேடு களில் வரும் தகவல்களைக் கொண்டு பார்க்கையில், இராணுவத் தலைமை அலுவலர்கள் அகத்தில் பழைய உச்சப் படைத்தலைவர் துஹோனின் முதலாளித்துவ வர்க்கத்தாரது கையாட்களும் கூட்டாளிகளுமாகிய வெர்ஹோவ்ஸ்கி, அவ்க் சேன்தியெவ், செர்னோவ், கோட்ஸ், திஸெரெத்தேலி முத லானோரைத் திரட்டி வருவது தெரிகிறது. சோவியத்துகளுக்கு எதிராக அவர்கள் ஒரு புதிய ஆட்சியதிகாரத்தை அமைத் திட விரும்புவதாகக்கூட தெரிகிறது.

''தோழர்கள் படையாட்களே! மேலே நாம் குறிப்பிடும் இந்த ஆட்கள் எல்லோரும் ஏற்கெனவே அமைச்சர்களாக இருந்துள்ளவர்கள்தாம். கேரென்ஸ்கியிற்கும் முதலாளித் துவ வர்க்கத்தாருக்கும் உடந்தையாகச் செயல்பட்டுள்ளவர் இவர்கள். ஜூலை முதல் நாள் தாக்குதலுக்கும், யுத்தத்தை நீடிக்கச் செய்ததற்கும் இவர்கள் பொறுப்பாளிகள். விவ சாயிகளுக்கு நிலம் அளிப்பதாக வாக்குறுதி தந்துவிட்டு, பிற்பாடு இவர்கள் நிலக் கமிட்டி உறுப்பினர்களைக் கைது செய்தவர்கள். படையாட்களுக்கு மரண தண்டனையை மீண்டும் நிலைநாட்டியவர்கள். பிரெஞ்சு, ஆங்கிலேய, அமெ ரிக்க நிதியாதிக்கத்தாருக்குப் பணிந்து நடப்பவர்கள்....

''மக்கள் கமிசார் அவையின் கட்டளைகளுக்குக் கீழ்ப் படிய மறுத்ததற்காக ஜெனரல் துஹோனின் முன்பே உச்சப் படைத்தலைவர் பதவியிலிருந்து நீக்கப்பட்டவர்.... இதற்குப் பதிலளிக்கும் முறையில் இவர் நேசக்கூட்டு ஏகாதிபத்திய அரசுகளது இராணுவத் தூதுக் குழுவினரிடமிருந்து வந்த குறிப்பினைப் படைகளிடையே சுற்றிப் பரவ விட்டும், எதிர்ப் புரட்சியினைத் தூண்டிவிட முயன்றும் வருகிறார்....

''துஹோனினுக்குக் கீழ்ப்படியாதீர்கள்! அவரது தூண்டல் சதிக்குச் செவி மடுக்காதீர்கள்! அவரையும் அவரது எதிர்ப்புரட்சி ஜெனரல்கள் கோஷ்டியையும் விழிப்புடன் கவனித்து வாருங்கள்....''

20.

### குரிலேன்கொவிடமிருந்து
### கட்டளை எண் 2

''...முன்னாள் உச்சப் படைத்தலைவர் ஜெனரல் துஹோனின் கட்டளை நிறைவேற்றத்துக்கு எதிர்ப்பு காட்டியதாலும், புதிய உள்நாட்டுப் போரைத் தூண்டிவிடத்தக்க சதிச் செயல் புரிந்ததாலும், மக்களுடைய பகைவராக அறிவிக்கப்படுகிறார். துஹோனினுக்கு ஆதரவு அளிப்போர் யாவரும், அவர்களது சமுதாய, அல்லது அரசியல் நிலையையும் அவர்களது கடந்த காலத்தையும் கருதாமலே, கைது செய்யப்படுவார்கள்; விசேஷ அதிகாரம் வழங்கப்பட்டுள்ளவர்கள் இந்தக் கைது செய்யும் உத்தரவுகளை நிறைவேற்றுவர். மேற்கூறியவற்றைச் செயல்படுத்தி நிறைவேற்றும்படி ஜெனரல் மனிக்கோவ்ஸ்கியை நான் ஆணையிடுகிறேன்....''

## அத்தியாயம் 12இன் அனுபந்தம்

1.

### விவசாயிகள் கேள்விகளுக்குப் பதில்

விவசாயிகள் கேட்கும் எண்ணற்ற கேள்விகளுக்குப் பதிலளிக்கும் முறையில் தெரிவிப்பது என்னவென்றால், நாட்டில் இனி ஆட்சியதிகாரம் அனைத்தும் தொழிலாளர்கள், படையாட்கள், விவசாயிகள் பிரதிநிதிகளது சோவியத்துகளுக்கே முற்றிலும் உரியதாகும். தொழிலாளர்களுடைய புரட்சி பெத்ரொகிராதிலும் மாஸ்கோவிலும் வெற்றி பெற்றுவிட்

டது, ருஷ்யாவின் ஏனைய எல்லா இடங்களிலும் வெற்றி பெற்று வருகிறது. தொழிலாளர்கள், விவசாயிகளுடைய அரசாங்கம் நிலப்பிரபுக்களுக்கு எதிராய், முதலாளிகளுக்கு எதிராய்த் தொழிலாளர்களுடன் விவசாயிப் பெருந்திரளினரது, ஏழை விவசாயிகளது, பெரும்பான்மை விவசாயிகளது கூட்டணிக்கு வகை செய்கிறது.

எனவே விவசாயிகள் பிரதிநிதிகளது சோவியத்துகள், பிரதானமாக மாவட்ட சோவியத்துகளும், பிறகு மாநில சோவியத்துகளும் இப்போதிலிருந்து, அரசியல் நிர்ணயச் சபை கூடுகிற வரையில், அவையவற்றின் பிரதேசப் பிரிவுகளில் முழு அரசாங்க அதிகாரத்துக்கும் உரிமையுடையவை ஆக்கப்படுகின்றன. நிலப்பிரபுக்களுடைய நிலவுடைமையானது சோவியத்துகளின் இரண்டாவது அனைத்து ருஷ்யக் காங்கிரசால் ஒழிக்கப்பட்டிருக்கிறது. தற்போதுள்ள தொழிலாளர்கள், விவசாயிகளது இடைக்கால அரசங்கம் நிலத்தைப் பற்றிய அரசாணை ஒன்றை ஏற்கெனவே பிறப்பித்திருக்கிறது. இதுகாறும் நிலப்பிரபுக்குச் சொந்தமாய் இருந்த எல்லா நிலங்களும் இந்த அரசாணையின்படி முற்றிலும் விவசாயிகள் பிரதிநிதிகளது சோவியத்துகளின் கைக்கு மாறிவிடுகின்றன. **வோலஸ்து** நிலக் கமிட்டிகள் உடனே நிலப்பிரபுக்களுடைய எல்லா நிலங்களையும் தமது நிர்வாகத்தின் கீழ் கொண்டு வந்து, மிகவும் கண்டிப்பான கணக்குப் பதிவுக்கு ஏற்பாடு செய்து, குறையற்ற ஒழுங்கு முறையைப் பேணிக் காக்கவும், முன்பு நிலப்பிரபுக்களது சொத்துகளாய் இருந்தவற்றை மிகுந்த கண்டிப்புடன் பாதுகாக்கவும் வேண்டும். இனி இந்தச் சொத்துகள் மக்கள் அனைவரின் சொத்துகளாகும், ஆகவே மக்கள் தாமே இவற்றைப் பாதுகாக்க வேண்டும்.

விவசாயிகள் பிரதிநிதிகளது மாவட்ட சோவியத்துகளின் ஆமோதிப்புடன் **வோலஸ்து** நிலக் கமிட்டிகள் வெளியிடும் எல்லாத் தீர்வு ஆணைகளும் சட்டத்துக்கு உரிய வலிமையுடையனவாகும்; இவை நிபந்தனையின்றியும் தாமதமின்றியும் நிறைவேற்றப்பட்டாக வேண்டும்.

சோவியத்துகளின் இரண்டாவது அனைத்து ருஷ்யக் காங்கிரசால் நியமிக்கப்பட்ட தொழிலாளர்கள், விவசாயிகளது

அரசாங்கம் மக்கள் கமிசார் அவை என்பதாகப் பெயரிடப் பட்டிருக்கிறது.

விவசாயிகளைத் தத்தமது வட்டாரத்திலும் ஆட்சியதிகாரம் அனைத்தையும் தாமே மேற்கொள்ளும்படி மக்கள் கமிசார் அவை அவர்களுக்கு அறைகூவல் விடுக்கிறது.

விவசாயிகளுக்குத் தொழிலாளர்கள் தமது குறைவிலாத, முழுநிறை ஆதரவையும் அளிக்கின்றனர்; சாகுபடி இயந்திரங்கள், கருவிகள் ஆகியவற்றின் உற்பத்திக்கு அவர்கள் ஏற்பாடு செய்கின்றனர்; இதற்குப் பதில் விவசாயிகள் தானியம் வழங்கித் தமக்குத் துணை புரிய வேண்டுமென அவர்கள் கேட்டுக் கொள்கிளுர்கள்.

**மக்கள் கமிசார் அவைத் தலைவர்,**
*வி. உலியானவ் (லெனின்).*

அமெரிக்கக் கம்யூனிஸ்டு எழுத்தாளர் ஜான் ரீடின் "உலகைக் குலுக்கிய பத்து நாட்கள்" 1919ல் அமெரிக்க ஐக்கிய நாட்டில் வெளிவந்தது. முதன்முதல் 1923ல் ருஷ்ய மொழியில் சோவியத்து நாட்டில் வெளியாயிற்று, அதன் பிறகு மறுபதிப்புகளும் வெளியகியுள்ளன.

விளதீமிர் லெனின் அமெரிக்கப் பதிப்புக்கு எழுதிய முன்னுரையில் இந்நூலை வெகுவாய்ப் போற்றினர். இது அக்டோபர் சோஷலிசப் புரட்சியின் உண்மைச் சித்திரத்தை அளிக்கிறது, இப்புரட்சி மெய்யாகவே மக்கள் பெருந் திரளினரின் புரட்சியாக நடந்தேறியதை விளக்கமாக எடுத்துரைக்கிறது. வரலாறு படைத்திடுவதில் மக்களுக்குள்ள ஆக்கத் திறனையும், தொழிலாளி வர்க்கம், விவசாயிகள், படையாள் பெருந்திரளினர் ஆகியோரது சித்தத்தினை வெளியிடுவோராகிய போல்ஷிவிக்குகள் இதற்கு ஆற்றிய தலையாய பங்கையும் இது தெளிவாகப் புலப்படுத்துகின்றது.

மாபெரும் அக்டோபர் சோஷலிசப் புரட்சி இதற்குமுன் மனித வரலாறு கண்டிராத ஒரு புரட்சியாகும். போல்ஷிவிக்குக் கட்சியும், விளதீமிர் லெனின் தலைமை வகித்த அதன் மத்தியக் கமிட்டியும் இப்புரட்சிக்கு ஆர்வமூட்டி, தலைமை தாங்கி, இதை ஒழுங்கமைத்தன.

புரட்சியின் போக்கு, ஏற்படக்கூடிய எல்லா விளைவு நெளிவுகள், புரட்சிகர மக்கள் திரளினரது நடத்தை, பகை வர்க்கங்கள், கட்சிகளின் செயற்பாங்கு ஆகியவை யாவும்

போல்ஷிவிக்குக் கட்சியாலும் அதன் தலைவர் லெனினாலும் பிழையின்றி முன்கூட்டியே ஊகிக்கப்பட்டன. எழுச்சிக்குத் தலைமை தாங்கிய பல்வேறு நிறுவன உறுப்புகளும்—போல் ஷிவிக்குக் கட்சியின் அரசியல் குழுவும், கட்சி மையமும், பெத்ரொகிராது சோவியத்தும், அதன் செயற் தலைமையக மாக அமைந்து எழுச்சிக்குத் தலைமை வகித்த புரட்சி இராணுவக் கமிட்டியும்—லெனினது கருத்துக்களால்தான் ஊக்குவிக்கப் பட்டன.

சந்தர்ப்பவாதிகளுடன் ஆவேசமாய் முட்டி மோதிப் பொருதித்தான் லெனினது கருத்துக்கள் நடைமுறையில் செயல் படுத்தப்பட்டன. பாட்டாளி வர்க்கப் புரட்சியின் உள்ளாற்றலிலும், ருஷ்யாவில் அதன் வெற்றியின் சாத்தியப் பாட்டிலும் இந்தச் சந்தர்ப்பவாதிகளுக்கு நம்பிக்கை இருக்க வில்லை. இவர்கள் தோல்வி மனப்பான்மை கொண்டவர்களாக இருந்தார்கள், ஆயுதமேந்திய வெகுஜன எழுச்சிக்கான லெனின் திட்டத்தை இவர்கள் அடியோடு எதிர்த்தார்கள், அல்லது எழுச்சியெனும் கருத்தை ஏற்றுக் கொள்வதாகக் கூறிக் கொண்டு அதே போது எழுச்சியை நிச்சயமான தோல் விக்கு இட்டுச் செல்லும் போர்த்தந்திரத் திட்டத்தை முன் வைத்தார்கள்.

எழுச்சிக்குச் சற்று முன்னதாக (செப்டம்பர்-அக்டோபர்) லெனின் எழுதிய கட்டுரைகளும் கடிதங்களும் மக்களது வெற்றியில் அளவுகடந்த நம்பிக்கை கொண்டனவாய் இருந் தன—புரட்சி முகாமிலும் அதன் பகைவர்களது முகாமிலும் இருந்து வந்த நிலைமை பற்றிய அவரது தெளிவான மதிப் பீட்டை அடிப்படையாகக் கொண்ட நம்பிக்கை அது. புரட்சி யின் தீர்வுகட்டமான ஒரு நேரத்தில் பகைவனுக்கு முன்னால் படைக்கலன்களைத் துறந்துவிட்டு ஓட நினைத்த எல்லாக் கோழைகளையும், துரோகிகளையும், இக்கட்டுரைகளும் கடி தங்களும் அம்பலப் படுத்தி அவர்களுக்குச் சாட்டையடி கொடுத்தன.

போல்ஷிவிக்குக் கட்சி மத்தியக் கமிட்டி உறுப்பினர் களான ஸினோவியெவும் காமெனெவும் திரோத்ஸ்கியும் மற்றும் கட்சியின் மேல்மட்டங்களில் அவர்களைச் சேர்ந்தோ ராய் இருந்த ஒரு சிலரும் அனுசரித்த நிலையினை செப்டம்பர்

29ல் ''முற்றிவிட்ட நெருக்கடி'' என்ெருரு கட்டுரையில் லெனின் கடுமையாக விமர்சித்தார். இடைக்கால ருஷ்யக் குடியரசு அவையில் போல்ஷிவிக்குகள் பங்கெடுத்துக் கொள்ள வேண்டுமென்று வற்புறுத்திய ஸிநோவியெவையும் காமெனெவையும் லெனின் சாடினுர்; இந்த அவையில் போல்ஷிவிக்குகள் பங்கெடுத்துக் கொண்டிருந்தால் அது புரட்சி சக்திகளைச் சிந்தாந்த வழியில் நிராயுதபாணியாக்கி, எழுச்சிக்குத் தயார் செய்யும் பணியிலிருந்து அவற்றின் கவனத்தைத் திசைதிருப்பி விட்டிருக்கும். திரோத்ஸ்கியைப் போன்ற தலைவர்களையும் லெனின் அம்பலம் செய்தார்—இவர்கள் ''சோவியத்துகளின் காங்கிரசுக்காகக் காத்திருக்க வேண்டும் என்பவர்கள்; உடனடியாக ஆட்சியதிகாரத்தை மேற்கொள்வதை எதிர்ப்பவர்கள்; உடனடி எழுச்சியை எதிர்ப்பவர்கள்;'' நடைமுறைப் பணிகள் யாவற்றிலும் மிகவும் அவசரமானதைச் செய்யாது நிற்பவர்கள் என்று சாடினுர்.

''இந்தப் போக்கு அல்லது அபிப்பிராயத்தை நிர்மூலமாக்கியாக வேண்டும்'' என்று சீற்றத்துடன் எழுதினுர் லெனின். ''இல்லையேல் போல்ஷிவிக்குகள் என்றென்றுக்குமாய்த் தம்மை இழிவு செய்து கொண்டுவிடுவர், கட்சி என்ற முறையில் தம்மை அழித்துக் கொண்டுவிடுவர். ஏனெனில் இம்மாதிரியான ஒரு தருணத்தை நழுவ விட்டு, சோவியத்துகளின் காங்கிரசுக்காகக் ''காத்திருத்தல் ''அடிமுட்டாள்தனமாகும், அல்லது அப்பட்டமான துரோகமிழைப்பதாகும்.... சோவியத்துகளின் காங்கிரசுக்காகக் காத்திருப்பதானது... வாரங்களும், ஏன் நாட்களுங்கூட யாவற்றையும் தீர்மானிப்பவையாக இருக்கும் ஒரு நேரத்தில், வாரங்களை வீணுக்குவதாகிவிடும்.... இப்போது ஆட்சியதிகாரத்தை மேற்கொள்ளாதிருப்பதானது, ''காத்திருப்பதானது'', மத்தியச் செயற் குழுவில் பேச்சு பேசிக் கொண்டிருப்பதானது, (சோவியத்து) ஆட்சி உறுப்புக்காகப் போராடுவதோடு, ''காங்கிரசுக்காகப் போராடுவதோடு'' நிற்பதானது புரட்சியைத் தோல்வியுறச் செய்வதே ஆகும்.'' (''மூண்டெழும் நெருக்கடி'', வி.இ. லெனின், நூல் திரட்டு, ஆங்கிலப் பதிப்பு, தொகுதி 26, பக்கங்கள் 83,84.)

தோல்வி மனப்பான்மை கொண்டவர்களை எதிர்த்து மத்தியக் கமிட்டியில் லெனின் விடாப்பிடியாக நடத்திய போராட்டத்துக்கு வெற்றி கிட்டியது. அக்டோபர் 23ல் நடப்பு நிலைமை குறித்து லெனினது உரையைக் கேட்டபின் மத்தியக் கமிட்டி, லெனினுல் வரையப்பெற்ற தீர்மானத்தை ஏற்றுக் கொண்டது. எழுச்சி தவிர்க்க முடியாதது, உடனடியாக நிகழக் கூடியதென்பதை இத்தீர்மானம் அங்கீகரித்தது; கட்சி நிறுவனங்கள் யாவும் தமது நடைமுறைப் பணியில் இக்கருத்தினை அடிப்படையாகக் கொண்டு செயல்பட வேண்டுமென அது கூறிற்று. ஸினேவியெவும் காமெனெவும் இந்தத் தீர்மானத்தை எதிர்த்து வாக்களித்தனர். திரோத்ஸ்கியும் அவரது நிலையை விட்டகலாமல், சோவியத்துகளின் இரண்டாவது காங்கிரஸ் ஆரம்பமாவதற்கு முன்பு எழுச்சியைத் துவக்கக் கூடாது என்ருர்; நடைமுறையில் இந்த ஆலோசனை ஒத்திப்போட்டுக் காலங் கடத்துவதாகவும், எழுச்சிக்குரிய நாளைப் பகைவனுக்குத் தெரியப்படுத்துவதாகவுமே இருந்தது.

நவம்பர் 5ல் நடைபெற்ற பெத்ரொகிராது சோவியத்தின் முழுநிறைக் கூட்டத்திலும், பிற சந்தர்ப்பங்களிலும், திரோத்ஸ்கி தமது இந்தப் போக்கினை எடுத்துரைத்தார். திரோத்ஸ்கியின் வாக்குமூலத்தை ஜான் ரீடு தமது புத்தகத்தில் அடியிற் கண்டவாறு குறிப்பிடுகிருர். போல்ஷிவிக்குகள் எப்போது செயலில் இறங்கத் திட்டமிட்டார்கள் என்ற கேள்விக்குத் திரோத்ஸ்கி இவ்வாறு பதிலளித்தார்:

''அட்சியதிகாரத்தின் இந்த மாற்றத்தை அனைத்து ருஷ்யக் காங்கிரஸ் செய்து முடிக்கப் போகிறது.... மக்களது ஒழுங்கமைந்த சுதந்திரத்தை அடிப்படையாய்க்கொண்ட ஆட்சியதிகாரத்தை சோவியத்துகளின் அனைத்து ருஷ்யக் காங்கிரசானது... தானே மேற்கொள்ளுமென நாங்கள் எதிர்பார்க்கின்ருேம். (பக்கம். 133).

பேராபத்து விளைவிக்கக்கூடிய இந்தப் போர்த்தந்திரத்தை லெனின் எதிர்த்தார்; நவம்பர் 6ல் மத்தியக் கமிட்டி உறுப்பினர்களுக்கு அனுப்பிய கடிதத்தில் அவர் அன்று மாலையே, எப்படியும் அன்று இரவே அரசாங்கத்தை கைது செய்து, உடனே ஆட்சியதிகாரத்தைக் கைப்பற்ற வேண்டுமென்று வற்புறுத்திஞர். ''நாம் காத்திருக்கலாகாது! யாவற்

றையும் இழக்கும்படி ஆகலாம்!... புரட்சியாளர்கள் இன்று வெற்றி பெற முடியும் (நிச்சயம் இன்று அவர்கள் வெற்றியே பெறுவார்கள்), ஆனால் நாளைக்கு பெரிதும் இழக்குபடியான ஆபத்து இருக்கிறது, உண்மையில் யாவற்றையும் இழந்து விடும்படியான ஆபத்து இருக்கிறது என்னும் போது, ஒத்திப் போட்டுக் காலங் கடத்துவார்களாயின் வரலாறு அவர்களை மன்னிக்கவே மன்னிக்காது. இன்று நாம் ஆட்சியதிகாரத் தைக் கைப்பற்றுவோமாயின், சோவியத்துகளை எதிர்த்து அல்ல, சோவியத்துகளின் சார்பிலேதான் நாம் அதைக் கைப்பற்றுகிறோம்.... அக்டோபர் 25ஆம் [நவம்பர் 7] தேதிய ஊசலாட்ட வாக்கெடுப்புக்காகக் காத்திருப்பதானது பெருவிபத்தாகிவிடும், அல்லது வெற்றுச் சடங்குப் பற்றாகவே இருக்கும். இம்மாதிரியான பிரச்சினைகளை வாக்கெடுப்பு மூலமல்ல, வன்முறை மூலம் தீர்மானிக்க மக்களுக்கு உரிமை உண்டு; இப்படித் தீர்மானிக்க அவர்கள் கடமைப்பட்டவர் கள். புரட்சியின் போது தீர்வுகட்டும்படியான தருணங்களில் இம்மாதிரியான பிரச்சினைகளை வாக்கெடுப்பு மூலமல்லாமல், வன்முறை மூலம் தீர்மானிக்க மக்களுக்கு உரிமை உண்டு என்பதோடு, இப்படித் தீர்மானிப்பது அவர்களது கடமை யும் ஆகும். புரட்சியின் போது தீர்வுகட்டும்படியான தருணங் களில் மக்கள் தமது பிரதிநிதிகளுக்கு ஆணையிட...அவர்களுக் காகக் காத்திருப்பதற்கல்ல, உரிமை பெற்றவர்கள் என்ப தோடன்றி, கடமைப்பட்டவர்களும் ஆவர்.'' (''மத்தியக் கமிட்டி உறுப்பினர்களுக்குக் கடிதம்''. (வி.இ. லெனின், நூல் திரட்டு, ஆங்கிலப் பதிப்பு, தொகுதி 26, பக்கங்கள் 234-235.)

நவம்பர் 7-8 இரவில் ஸ்மோல்னி வந்தடைந்ததும் லெனின் முழு அளவில் எழுச்சிக்குத் தலைமை ஏற்றுக் கொண்டார். செங்காவலர் படைப் பிரிவுகளின் தலைவர்களும், வட்டாரங்கள், ஆலைகள், சேனையின் படைப் பிரிவுகளின் பிரதிநிதிகளாகத் தகவல்கள் கொண்டு வந்தோருமாகிய மிகப் பல தொழிலாளர்களும் படையாட்களும் அக்டோபர் 25 (நவம்பர் 7) இரவில் ஸ்மோல்னியில் லெனினைச் சந்தித்துப் பேசினர். புரட்சி இராணுவக் கமிட்டி பிரமாத விரிவும் வீச்சும் வாய்ந்த முறையில் செயல்பட ஆரம்பித்தது.

பெரிய அளவில் லெனினுல் ஊக்குவிக்கப்பட்ட தொழிலா ளர்க்ள், படையாட்களது புரட்சிகர முன்முயற்சியானது புரட்சி இராணுவக் கமிட்டிக்கு நம்பகமான ஆதரவாய் அமைந்தது.

லெனினது ஒப்புயர்வற்ற உன்னதப் போர்த்தந்திரம் வெற்றிவாகை சூடியது.

லெனினது மகத்தான சக்தி அவரது பிரம்மாண்ட அறி வாற்றலிலும், தத்துவ வலிமையிலும், இவற்றுடன் கூட நிறுவன ஒழுங்கமைப்பு செய்வதில் அவருக்கிருந்த ஒப்பற்ற வல்லமையிலும் அடங்கியிருந்தது. எழுச்சிக்குத் தலைமை தாங்கிய கட்சி மையமும் புரட்சி இராணுவக் கமிட்டியும் லெனின் தமது செப்டம்பர், அக்டோபர் மாதப் போர்த்தந் திரக் கடிதங்களில் வகுத்தளித்திருந்த திட்டத்திலிருந்து சிறிதும் பிறழாது அதன் வழியிலேதான் செயல்பட்டன.

லெனினை ஒப்பற்ற, தனிப் பெரும் தலைவராகச் சித்திரிக் கிருர், ஜான் ரீடு. ஆம், மெய்யாகவே லெனின் இப்படிப்பட் டவர்தான். மேற்கு ஐரோப்பிய பாணியிலான சமூக-ஜனநா யகத் தலைவரின் பகட்டையும் படாடோபத்தையும் அவர் நஞ்செனவெறுத்தவர்; அசாதாரண எளிமையின் உருவாக வும், அதே போது தமது நடத்தையிலும் சிந்தனையிலும் அசா தாரண விவேகமுடையவராகவும் திகழ்ந்தவர். ஜான் ரீடு எழுதுவது போல, அவர் ''ஆழ்ந்த கருத்துகளை எளிய சொற் களைக் கொண்டு விளக்கும் ஆற்றலும், ஸ்தூல நிலைமையினைப் பகுத்தாராயும் திறனும் நிரம்பப் பெற்றிருந்தார்; கூர்மதி யுடன் கூட அளவு கடந்த அறிவுத் துணிச்சலும் வாய்ந்த வராயிருந்தார்.'' மேதை லெனினுக்கு மக்களுடன் இருந்த நெருங்கிய தொடர்புகளிலிருந்து உதித்த பண்புகள் இவை யாவும். மக்களை அவர் வரலாற்றின் சிருஷ்டியாளர்களாகக் கருதினர், மக்களுடைய ஆக்கத் திறனில் அளவிலா நம் பிக்கை கொண்டிருந்தார்.

மக்களது வெற்றிகர எழுச்சியைத் தொடர்ந்து, அவர் நிகழ்த்திய முதலாவது சொற்பொழிவிலேயே, நவம்பர் 7ஆம் தேதி பிற்பகலில் பெத்ரொகிராது சோவியத்தின் முழு நிறைக் கூட்டத்தில் நிகழ்த்தப் பெற்ற இச் சொற்பொழி விலேயே, மக்களது வெற்றி முடிவானது, மாற்ற முடியாத தென்ற தமது உறுதியான உள்ளார்ந்த நம்பிக்கையை வெளி

யிட்டார். புதிய சோவியத்து ருஷ்யாவின் எதிர்காலத்துள் கூர்மையாய் உற்று நோக்கி, போல்ஷிவிக்குகளையும் தொழிலாளி வர்க்கத்தினரையும் ஏனையப் பெருந்திரளினரையும் எதிர்நோக்கிய வரலாற்றுச் சிறப்புமிக்க பணியினைத் தெட்டத் தெளிவான எளிய சொற்களில் அவர் எடுத்துரைத்தார். சோஷலிசப் பாட்டாளி வர்க்க அரசைக் கட்டியமைத்து, ருஷ்யாவில் சோஷலிசத்தின் வெற்றியினை உறுதி செய்வதே இவர்களது பணி என்று பறைசாற்றினர்.

போல்ஷிவிக்குகளுடைய இந்தத் தெள்ளிய அறிவுசார்ந்த நன்னம்பிக்கைக்கு நேர்விரோதமாய், சோவியத்துகளின் இரண்டாவது காங்கிரசில் திரோத்ஸ்கி தமது தோல்விமனப் பான்மையை வெளிப்படுத்தினர். இந்தக் காங்கிரசில் திரோத்ஸ்கி நிகழ்த்திய சொற்பொழிவிலிருந்து இது சம்பந்தமான வாசகத்தை ஜான் ரீடு தமது செய்தியுரையில் தருகின்ருர்:

''...ஐரோப்பாவானது தொடர்ந்து ஏகாதிபத்திய முதலாளித்துவ வர்க்கத்தாலேயே ஆளப்படுமாயின், புரட்சிகர ருஷ்யா தவிர்க்க முடியாதபடி வீழ்ந்துபடவே நேரும்.... இரண்டில் ஒன்றே நடைபெற முடியும்: ஒன்று ருஷ்யப் புரட்சியானது ஐரோப்பாவில் ஒரு புரட்சி இயக்கத்தைத் தோற்றுவிக்க வேண்டும், அல்லது ஐரோப்பிய அரசுகள் ருஷ்யப் புரட்சியை அழித்துவிடும்!'' (பக்கம் 256.)

திரோத்ஸ்கி இவ்வாறு நினைக்கக் காரணம் என்னவெனில், வெற்றி பெற்ற ருஷ்யப் பாட்டாளி வர்க்கத்துக்கு உழைக்கும் விவசாயிகள் எந்நாளும் புரட்சிகர ஆதரவளிப்பார்களென அவர் நம்பவில்லை. பாட்டாளி வர்க்கத்தால் விவசாயிப் பெருந்திரளினரைத் தன் பக்கத்துக்கு வரும்படிக் கவர்ந்திழுக்க முடியுமென அவர் நம்பவில்லை. 1905ல் அவர் முன்வைத்து வாதாடிய அவரது ''நிரந்தரப் புரட்சி'' என்னும் மென்ஷிவிக்குத் தத்துவத்துக்கு ஆதாரமாய் அமைந்ததும் அவருடைய இந்த நம்பிக்கையின்மைதான். இந்தத் தத்துவத்தின்படி, தலைமையான ஐரோப்பிய நாடுகளில் பாட்டாளி வர்க்கம் ஆட்சியதிகாரம் வென்று கொள்ளமுன், எந்தவொரு நாட்டிலும் சோஷலிசப் புரட்சி வெற்றி பெற முடியாது. அக்டோபர் புரட்சிக்குச் சற்றே முன்பு திரோத்ஸ்கி,

''சமாதான வேலைத்திட்டம்'' என்ற தமது பிரசுரத்தில் எழுதினார்: ''ஜெர்மனியில் புரட்சி இல்லாமல் ருஷ்யாவிலோ இங்கிலாந்திலோ, பின்னவற்றில் இல்லாமல் முன்னதிலோ, வெற்றிகரப் புரட்சி சாத்தியமன்று.'' தலைமையான ஐரோப்பிய நாடுகளில் ஏககாலத்தில் பட்டாளி வர்க்கம் வெற்றி பெற்றாலன்றி, சோஷலிசப் புரட்சியின் வெற்றி சாத்திய மல்ல என்ற இந்தக் கருத்தினை, அக்டோபர் 30ல் ஜான் ரீடுக்கு அளித்த பேட்டியிலும் திரோத்ஸ்கி எடுத்துரைக்கிறார். வருங்கால அரசாங்கத்தின் அயல்துறைக் கொள்கை குறித்துப் பேசுகையில் திரோத்ஸ்கி கூறினார்: ''இந்த யுத்தத்தின் முடிவில் ஐரோப்பா புத்தமைக்கப்படுவதை, தூதுத் துறையாளர்களால் அல்ல, பாட்டாளி வர்க்கத்தால் புத்தமைக்கப்படுவதை நான் எதிர்பார்க்கிறேன். ஐரோப்பாவின் கூட்டுக் குடியரசு, அதாவது ஐரோப்பிய அரசுகளது ஐக்கியம் உருவாதல்—இவ்வாறே இருக்க வேண்டும் இந்தப் புத்தமைப்பு.'' (பக்கம் 119.) இவ்விதம் திரோத்ஸ்கி, தனியொரு நாட்டில் சோஷலிசத்தின் வெற்றி சாத்தியமே என்பதை உணர்த்தும் லெனினியப் பாட்டாளி வர்க்கப் புரட்சித் தத்துவத்துக்கு எதிராக, தோல்வி மனப்பான்மை கொண்ட தமது ''நிரந்தரப் புரட்சித்'' தத்துவத்தின் விளைவாகிய ஐரோப்பிய ஐக்கிய அரசு என்னும் தமது சொந்தக் கருத்தினை வெளியிட்டார்.

ருஷ்யாவில் நடைபெற்ற வரலாற்று நிகழ்ச்சிகளது மீறவொண்ணாத தருக்கவாதமானது, தோல்வி மனப்பாங்குடைத்த கொள்கை வழியினரைத் தமது மனத்தின் முடிவுகளுக்கு நேர்விரோதமாக அவ்வப்போது பேசவும் செயல்படவும் வைத்தது. எழுச்சி நடைபெற்ற காலத்தில் திரோத்ஸ்கி இப்படித்தான் பேசவும் செயல்படவும் வேண்டியிருந்தது; பெத்ரொகிராது சோவியத்தின் தலைவராக இருந்த அவரைப் புரட்சியின் எதார்த்தப் போக்கானது லெனினது போர்த்தந்திர வழியைப் பின்பற்றும்படி கட்டாயப்படுத்திற்று. அக்டோபர் 25ல் [நவம்பர் 7] பெத்ரொகிராது சோவியத்தின் கூட்டத்தில் யாரோ ஒருவர், சோவியத்துகளின் அனைத்து ருஷ்யக் காங்கிரசுக்கு முன்னதாகவே புரட்சியின் வெற்றியை அறிவிப்பது சட்டவிரோதமாகுமென்று

தமது இருக்கையில் இருந்தபடி கத்திய போது, லெனினி யப் போர்த்தந்திர வழிக்கு ஏற்பவே திரோத்ஸ்கி அவருக் குப் பதிலளித்தார்; ஏனெனில் எழுச்சியுற்றுக் கிளர்ந்தெழுந்த மக்கள் வெற்றி பெற்றுவிட்டார்கள் என்ற உண்மையை அவர் எதிர்நோக்க வேண்டியிருந்தது. ''சோவியத்துகளது அனைத்துருஷ்யக் காங்கிரசின் சித்தத்தை முந்திக் கொண்டு பெத்ரொகிராது தொழிலாளர்களும் படையாட்களும் எழுச்சி நடத்திவிட்டார்கள்!'' என்றார் அவர். (பக்கம் 171.) இரண்டு நாட்களுக்கு முன்பு நவம்பர் 5ல் பெத்ரொகிராது சோவியத்தின் முழுநிறைக் கூட்டத்தில் அவரே கூறியதற்கு நேர்விரோதமான முறையில் இப்போது பேசும்படி நிகழ்ச்சி கள் அவரை வலுக்கட்டாயம் செய்தன என்பது விளங்கு கிறது.

ஆனால் வரலாற்று நிகழ்ச்சிகளது இந்த தருக்கவாதத் தால், திரோத்ஸ்கியும் தொடர்ந்து அவரைப் பின்பற்றி யோரும் ஏனைய தோல்வி மனப்பான்மையோரும் கொண் டிருந்த கண்ணோட்டத்தின் சந்தர்ப்பவாத இயல்பு மாறிவிட வில்லை, மாற முடியவுமில்லை. சோஷலிசப் புரட்சியின் சாத் தியப்பாட்டையும், ருஷ்யாவில் சோஷலிசம் வெற்றி பெறுவ தன் சாத்தியப்பாட்டையும் இவர்கள் மறுத்தே வந்தார்கள். நாடாளுமன்ற வகையிலான முதலாளித்துவக் குடியரசு ருஷ் யாவில் நிறுவப்படுவது வரலாற்று வழியில் தவிர்க்க முடி யாதாகுமென்றே நடைமுறையில் கருதி வந்தார்கள். கட்சி விவகாரங்களிலும் நாட்டு விவகாரங்களிலும் பிற்பாடு இவர் கள் அனுசரித்த போக்கு, சோவியத்து அரசை உறுதி பெறச் செய்வது, சோவியத் கூட்டரசில் சோஷலிச சமுதாயத்தை அமைத்திடுவது என்ற லெனினியக் கொள்கை வழிக்கு நேர் எதிரானதாகவே இருந்தது. இந்தக் கொள்கை வழியை எதிர்த்து இவர்கள் வரிசையாகப் பல துரோகச் செயல்கள் புரிந்தனர். பிரேஸ்த் சமாதானப் பேச்சுவார்த்தைகள் நடைபெற்று வந்த காலத்தில் இவர்கள் மேற்கொண்ட நிலையானது நாட்டுக்குத் துரோகமிழைப்பதாகவே அமைந் தது. புதிய பொருளாதாரக் கொள்கை மூலம் சோஷலிச சமுதாயக் கட்டுமானத்துக்கு வகை செய்யும் லெனினியப் போர்த்தந்திரத்தை எதிர்த்து இவர்கள் வாய்வீச்சடித்துத்

தாக்குதல்கள் தொடுத்தனர். சோஷலிச வழியிலான தொழில் வளர்ச்சிக்கும், விவசாயத்தைக் கூட்டுத்துவ மயமாக்குவதற்கும் உரிய லெனினியக் கொள்கையை அனுசரித்து விடாப்பிடியாக முன்னேறிச் சென்ற கட்சி மத்தியக் கமிட்டியை இழித்தும் பழித்தும் அவதூறு செய்து வந்தனர். தோல்வி மனப்பான்மை கொண்ட கோஷ்டியினரும் குழுவோரும் லெனினியக் கொள்கை வழியை எதிர்த்து ஓயாது ஒழியாது நடத்திய இந்தப் போராட்டம், இயல்பாகவும் தவிர்க்க முடியாதவாறும் இவர்கள் கட்சியிலிருந்து அறவே முறித்துக் கொண்டு சென்று சோவியத்து-எதிர்ப்பு நிலையை ஏற்பதிலே போய் முடிவுற்றது.

ஜான் ரீடு தமது புத்தகத்துக்கு வேண்டிய விவரப் பொருள்களைச் சேகரித்தபோதும், இவற்றை ஆய்ந்தறிந்த போதும் இருந்த எதார்த்த நிலைமைகளின் விளைவாய், எழுச்சிக்கு முன்னதாகவும் எழுச்சியின் போதும் போல்ஷிவிக்குக் கட்சியின் மையங்களது செயற்பாட்டினை விரும்பக்கூடிய அளவுக்கு ஸ்தூலமாகவும் நம்பகமான அடிப்படையிலும் அவரால் பரிசீலிக்க முடியவில்லை. ஏனெனில் எழுச்சியின் வெற்றிக்கு முன்பு போல்ஷிவிக்குக் கட்சியும் லெனினும் ஆற்றிய செயல்கள் தலைமறைவாகவே நடந்தேற வேண்டியிருந்தன. தோல்விமனப்பான்மையினரை எதிர்த்தும், திரோத்ஸ்கி வற்புறுத்தி வந்த போர்த்தந்திர வழியை எதிர்த்தும் லெனினும் அவரது மிக நெருங்கிய கூட்டாளிகளும் நடத்திய விடாப்பிடியான போராட்டத்தைப் பற்றி இப்புத்தகத்தில் போதுமான அளவுக்குச் சான்றுதார விவரப் பொருள் இல்லாமற் போனதற்கு இதுவேதான் காரணம். அக்டோபர் புரட்சியின் ஆரம்ப நாட்களில் திரோத்ஸ்கி கூறியவற்றில் இருக்கக் கூடிய முரண்பாடுகளை ஜான் ரீடு கண்டு கொள்ள முடியாமற் போனதற்கும் இதுவேதான் காரணம்.

லெனினையும் திரோத்ஸ்கியையும் பெத்ரொகிராது தொழிலாளர்களையும் சாதாரண படையாட்களையும் தவிர்த்து வேறு யாரும் மூன்று நாட்களுக்கு மேல் போல்ஷிவிக்குகளால் ஆட்சியதிகாரத்தில் இருக்க முடியுமென நம்பவில்லை என்று ஜான் ரீடு கூறுவது தவறாகும். வெற்றி நிலைத்து நீடிக்கக் கூடியதே என்பதில் லெனினுக்கும் மத்தியக் கமிட்டிக்கும்

மிகப் பெரும்பாலான வட்டார போல்ஷிவிக்கு நிறுவனங்களுக்கும் எந்தச் சந்தேகமும் இருக்கவில்லை. வக்கற்ற மென்ஷிவிக்கு, சோஷலிஸ்டு-புரட்சியாளர் கட்சிகளையும், வீழ்த்தப்பட்ட சுரண்டும் வர்க்கங்களையும் சேர்ந்தோரும், அவர்களது கையாட்களும், போல்ஷிவிக்குக் கட்சியினுள் இருந்த ஒருசில தோல்விமனப்பான்மையினரும்தான் வெற்றி பெற்ற புரட்சியானது தவிர்க்க வொண்ணுதவாறு தகர்ந்து போகுமென ''ஆரூடம்'' கூறி வந்தவர்கள். ருஷ்யாவில் புரட்சியின் எதிர்காலங் குறித்து சோவியத்துகளின் அனைத்து ருஷ்யக் காங்கிரசில் திரோத்ஸ்கி கூறிய நம்பிக்கைக்கு இடமில்லாத அவலமான கருத்துரையும் இதே காலத்துக்கு உரியதுதான். ஆயுதமேந்திய எழுச்சியைத் துவக்குவதென்ற தீர்மானம் மத்தியக் கமிட்டியால் எந்தச் சூழ்நிலையில் ஏற்கப்பட்டதென்பது குறித்து ஜான் ரீடு தரும் விளக்கம், வரலாற்று உண்மைகளுக்கு இசைவாய் இல்லை.

ஆயினும் இந்தக் குறைபாடுகளையும், இப்புத்தகத்தில் காணக்கூடிய பிழைகளையும் மீறி, ஜான் ரீடின் இந்நூல் மாபெரும் அக்டோபர் சோஷலிசப் புரட்சியின் உண்மைச் சித்திரத்தை அளிக்கும் தலைசிறந்த ஆவணமாகத் திகழ்கிறது.

இந்நூலாசிரியர் லெனினது, போல்ஷிவிக்குக் கட்சியினது கருத்துகளால் உத்வேகமூட்டப்பட்டவர். எழுச்சிக்குத் தலைமை தாங்கிய சட்டபூர்வமான செயற்பாட்டு மையங்களது செயல்களிலும், எழுச்சி கொண்ட மக்களது வீர தீரத்திலும் அஞ்சா நெஞ்சத்திலும் புரட்சிகர ஆக்கத் திறனிலும் இக்கருத்துகள் உருக் கொண்டிருந்தன. இந்த நிலைமைதான் ஆர்வமிக்க புரட்சியாளரும் ஆற்றல் படைத்த எழுத்தாளருமாகிய இவர் தமது கூர்மையான கண் கொண்டு, தம் முன்னுல் நடைபெற்றப் புரட்சிகர நிகழ்ச்சிகளின் உட்பொருளையும் அவற்றின் ஆழ்ந்த வரலாற்று முக்கியத்துவத்தையும் கண்டு அறிந்து கொள்ள உதவிற்று. இந்நூலின் தலைமையான சிறப்பு இதில்தான் அடங்கியுள்ளது. லெனின் குறிப்பிடுவது போல, ''பாட்டாளி வர்க்கப் புரட்சி, பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரம் என்றுல் என்ன என்பதைப் புரிந்து கொள்வதற்கு மிகவும் முக்கியமான நிகழ்ச்சிகளை உள்ளது உள்ளபடி உயிர்க் களையுடன் இது விவரிக்கின்றது.''

ருஷ்யாவில் நடைபெற்ற அக்டோபர் புரட்சியின் மாபெரும் உண்மையை எடுத்துரைப்பதற்காக ஜான் ரீடு தமது புத்தகத்தைப் பணித்துக் கொண்டார். இந்த நோக்கம் அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகளது இயல்புக்கும் ஏனைய ஏகாதிபத்தியவாதிகளின் இயல்புக்கும் விரோதமானது. ஏகாதிபத்தியவாதிகள் தமது பத்திரிகைகளில் போல்ஷிவிக்குகளை மிக இழிவான முறையில் அவதூறு செய்து பிரசாரம் நடத்தினர். ருஷ்யத் தொழிலாளர்களும் விவசாயிகளும் படையாட்களும் வெளிப்படுத்திய புரட்சிகரத் துணிவும் வீரதீரமும் கவர்ச்சி மிக்க முன்மாதிரியாகி விடலாகாது என்று இவர்கள், தாம் சுரண்டிவந்த மக்கள் பெருந்திரளினரின் கவனத்தைத் திசைதிருப்பிவிட இந்த அவதூறுப் பிரசாரத்தின் மூலம் முயன்றனர். ஜான் ரீடு தமது புத்தகத்துக்காகச் சேகரித்திருந்த விவரப் பொருள்களை இவர்கள் பறிமுதல் செய்ய முயற்சித்தனர். பிறகு கூலிக்கு அமர்த்தப்பட்ட குண்டர்கள் ஜான் ரீடின் பதிப்பாளரது அலுவலகத்தைத் தொடர்ச்சியாக ஆறு தரம் சூறையாடி, புத்தகக் கையெழுத்துப் பிரதியைத் திருடி சென்று அழித்துவிட முயன்றார்கள்.

எல்லா இடையூறுகளையும் இன்னல்களையும் மீறி ஜான் ரீடின் ''உலகைக் குலுக்கிய பத்து நாட்கள்'' 1919ல் அமெரிக்க ஐக்கிய நாட்டில் வெளிவந்தது. மனித குல வரலாற்றிலே ஒரு புதிய சகாப்தத்தை, பாட்டாளி வர்க்கப் புரட்சிகளின் சகாப்தத்தைத் துவக்கி வைத்த ருஷ்யாவின் வெற்றிகர சோஷலிசப் புரட்சியினது உண்மைச் சித்திரத்தை உலகுக்கு அளிப்பதற்காக வெளிநாட்டிலே வெளியாகிய முதலாவது புத்தகமாகும் இது.

பசிபிக் கரையின் கண் அமைந்த போர்த்லந்து நகரம் தான், கல்ச்சாக் சேனைக்குப்* படைக் கலன்களைக் கப்பலில் ஏற்றுமெனத் தொழிலாளர்கள் கூறக் கேட்ட முதலாவது அமெரிக்க நகரம். இதே நகரத்தில்தான் பிறந்தார், ஜான் ரீடு—1887 அக்டோபர் 22ல்.

துணிவும் வலிவும் வெள்ளைமனமும் கொண்டவர்களாய் ஜாக் லண்டன் தமது மேற்றிசைக் கதைகளில் சித்திரிக்கிறரே, அந்த முனைப்புள்ள முன்னோடிகளில் ஒருவராவார், ரீடின் தந்தை. அவர் கூர் அறிவு படைத்தவர், கபட வேடத்தையும் ஏமாற்றையும் வெறுத்தவர். செல்வமும் செல்வாக்கும் மிக்கோருடன் சேர்ந்து கொள்வதற்குப் பதில் இவர்களை எதிர்த்து நின்றவர், வனங்களையும் அரசின் ஏனைய

* அ.வ. கல்ச்சாக்—ஜார் காலத்திய கடற்படைத் தலைவர், முடியாட்சிவாதி, 1918-19ல் ருஷ்யாவில் எதிர்ப்புரட்சிக்குத் தலைமை தாங்கியோரில் ஒருவர், ஆன்டான்ட் அரசுகளின் கையாள். அக்டோபர் சோஷலிசப் புரட்சிக்குப் பிறகு அமெரிக்க ஐக்கிய நாடு, பிரிட்டன், பிரான்சு ஆகிய ஏகாதிபத்திய அரசுகளின் உதவியோடு தன்னை ருஷ்யாவின் தலைமை அதிபதியாகப் பிரகடனம் செய்து கொண்டு, உரால், சைபீரியா, தொலைக்கிழக்கு ஆகியவற்றில் முதலாளிகள், நிலப்பிரபுக்களது இராணுவச் சர்வாதிகாரத்துக்குத் தலைமை தாங்கினர். செஞ்சேனையின் தாக்குதல்களும் கொரில்லா இயக்கத்தின் வளர்ச்சியும் கல்ச்சாக் ஆதிக்கத்தை முடியடித்தன.—[பதிப்பாசிரியர்.]

இயற்கைச் செல்வங்களையும் கைப்பற்றிக் கொள்வதற்காகப் பகாசுர முதலாளித்துவக் கம்பெனிகள் தமது கொடுங் கரங் களை நீட்டிய போது இவற்றை எதிர்த்துக் கடும் போராட் டம் நடத்தியவர். அடக்குமுறைத் தாக்குதல்களுக்குப் பலி யானார், உதைபட்டார், வேலையிலிருந்து மீண்டும் மீண்டும் வெளியேற்றப்பட்டார்—ஆயினும் பகைவனுக்கு அவர் பணி யவே இல்லை.

இவ்விதம் இத்தந்தை, போராட்ட வீரனின் இரத்தத் தையும் உன்னதச் சிந்தையையும் அஞ்சா நெஞ்சத்தையும் சிறந்த மரபுவழிச் செல்வங்களாக ஜான் ரீடுக்கு விட்டுச் சென்றார். இளம் பிராயத்திலேயே ஜானின் அரும் பண்புகள் மலர்ச்சி பெற்றுவிட்டன. உயர்நிலைப் பள்ளியில் படிப்பு முடிந்ததும் அவர் ஹார்வர்டுக்குச் சென்றார். எண்ணெய்த் தொழிலதிபர்கள், நிலக்கரி வேந்தர்கள், உருக்குத் தொழி லின் மாமன்னர்கள் ஆகியோரது குலக் கொழுந்துகளுக்காக அமைந்தது, இந்த ஹார்வர்டுப் பல்கலைக்கழகம். போட்டி விளையாட்டுகளுக்கும், செல்வச் சுக வாழ்வுக்கும், ''உணர்ச்சி வயப்பாடற்ற விஞ்ஞானத்தின் உணர்ச்சி வயப்பாடற்ற போதனைக்குமான'' நான்கு ஆண்டுகளின் முடிவில், தமது புத்திர பாக்கியங்கள் தீவிரவாதப் போக்குகளின் சாயலால் சிறிதும் களங்கப்படாமல் இந்தப் பல்கலைக்கழகத்திலிருந்து வெளியே வருவார்களென்பது இவர்களுக்குத் தெரியும். இவ் வாறுதான் பத்தாயிரக் கணக்கான அமெரிக்க இளைஞர்கள் கல்லூரிகளிலும் பல்கலைக்கழகங்களிலும், இன்றைய சமு தாய அமைப்பின் காவலர்களாக—பிற்போக்கின் வெள்ளைப் படையினராக—வளர்த்து ஆளாக்கப்படுகிறார்கள்.

ஹார்வர்டில் ஜான் ரீடு நான்கு ஆண்டுகள் இருந்தார், உள்ளங்கவரும் அவரது அரும் பண்புகளும் அவரது அறிவுக் கூர்மையும் அவரை அனைவரது நேசத்துக்கும் பாசத்துக்கும் உரியவராக்கின. செல்வச் சீமான் வர்க்கங்களது புதல்வர் களுடன் அங்கே அவர் நாள் தவறாமல் தொடர்பு கொண் டிருந்தார். பக்திப் பரவசமிக்க சமூகவியல் போதனாசிரியர் களது படாடோபமான விரிவுரைகளைக் கேட்டு வந்தார். முதலாளித்துவத்தின் உயர் குருமார்களாகிய அரசியல் பொருளாதாரப் பேராசிரியர்களது உபன்யாசங்களை எல்லாம்

கேட்டார். முடிவில் அவர் அந்தக் கோடீஸ்வரப் பிரபுக்களது கோட்டையிலே சோஷலிஸ்டு மன்றம் ஒன்றை அமைத்திட்டார். மெத்தனமான மேதாவித்தனத்தின் கன்னத்திலே ஓங்கி அறை விடுவதற்கு ஒப்பான ஒரு செயல் இது. ஆனால் முதியவர்கள் இதனை இளமைப் பருவத்துக்குரிய மோகமென நினைத்துத் தமக்குத் தாமே ஆறுதல் கூறிக் கொண்டார்கள். ''கல்லூரியை விட்டு வெளியுலகினுள் அடியெடுத்து வைத்ததும் பையனுடைய தீவிரவாதம் கரைந்தோடிவிடும்'' என்றார்கள்.

ஜான் ரீடு பல்கலைக்கழகப் படிப்பை முடித்துப் பட்டம் பெற்றார், வெளியுலகினுள் அடியெடுத்து வைத்தார்— உடனே அதை வெற்றி கொண்டுவிட்டார். தமது உள்ளத்தின் எழுச்சியால், அடங்காத ஆர்வத் துடிப்பால், தமது எழுது கோலினால் வெற்றி கொண்டுவிட்டார். மாணவராக இருக்கையிலேயே அவர் **லம்ப்பூன்** என்றொரு நகைச்சுவைக் கிண்டல் ஏட்டின் ஆசிரியராக இருந்து, எளிமையும் விறுவிறுப்பும் கொண்ட எழில் நடை தமக்குக் கைவந்த கலையாகுமென்பதை நிரூபித்துக் காட்டியிருந்தார். இப்போது அவர் வரிசை வரிசையாகக் கவிதைகளையும் கதைகளையும் நாடகங்களையும் எழுதித் தள்ளினார். மேலும் மேலும் எழுதித் தருமாறு பதிப்பகத்தினர் ஓயாது அவரை வேண்டினர். பட ஏடுகள் அவருடைய எழுத்துகளுக்கு எவ்வளவு தந்தாலும் தகுமென வாரி வழங்கின, சர்வதேச நிகழ்ச்சிகளை விமர்சித்துக் கட்டுரைகள் எழுதிக் கொடுக்கும்படி பெரிய செய்தியேடுகள் அவரைக் கேட்டு வந்தன.

இவ்வாறுதான் ஜான் ரீடு உலகின் நெடுஞ்சாலைகளில் எல்லாம் சென்று சுற்றும் சஞ்சாரி ஆயினார். நடப்பு விவகாரங்களை உடனுக்குடன் புரிந்து கொண்டு முன்செல்ல விரும்பியவர் எவரும் ஜான் ரீடின் சஞ்சாரங்களைக் கவனித்து வந்தால் போதும் என்றாகியது. முக்கியமான பெரிய நிகழ்ச்சிகள் எங்கே நடைபெறினும் புயற் பருந்து போல உடனே முன்னறிந்து கொண்டு, அப்படி அவர் எல்லார்க்கும் முன்னவராய் அங்கே பறந்தோடிச் சென்று நின்றார்.

பீட்டர்சனில் நூற்பு நெசவாலைத் தொழிலாளர்களது வேலைநிறுத்தம் புரட்சிப் புயலென மூண்டெழுந்தது, ஜான் ரீடு அப்புயலின் நடுவண் நின்று செயல் புரிந்தார்.

கொலராடோவில் ராக்பெலரின் அடிமைகள் அவர்களது சுரங்கப் பொந்துகளிலிருந்து வெளிப்பட்டு, உள்ளே திரும்பிப் போக மறுத்து, ஆயுதப் படையினரது குண்டாந் தடிகளக்கும் துப்பாக்கிகளுக்கும் பணியாமல் எதிர்த்து நின்ளூர்கள்—அங்கேயும் ஜான் ரீடு கலகக்காரர்களுக்கு ஆதர வளித்துக் கொண்டு அவர்கள் மத்தியிலே இருந்தார்.

மெக்சிகோவில் கொத்தடிமைக் குடியானவர்கள் (பியோன்கள்) கலகக் கொடி உயர்த்தி, பாஞ்சோ வில்லா வின் தலைமையில் அணிதிரண்டுக் கப்பிதோலியத்தை நோக்கிக் கிளம்பினூர்கள். குதிரை மீதேறி அவர்களது அணிவரிசையிலே சென்ளூர் ஜான் ரீடு.

இந்த வீரப் போராட்டத்தின் செய்திச் சித்திரம் **மெட்ரொபாலிட்டன்** ஏட்டிலும், பிறகு **புரட்சிகர மெக்சிக்கோ** என்னும் புத்தகத்திலும் வெளிவந்தது. சிவப்பும் செங்கறுப்பும் படர்ந்த குன்றுகளையும், ''சுற்றிலும் பெருங்கள்ளிகளையும் ஊசிக் கற்ளூழைகளையும் கொண்டு அரண் செய்யப்பட்ட'' பாலை வெளிகளையும் ரீடு சித்திரிக்கின்ளூர். எல்லையற்று விரிந்து செல்லும் சமவெளிகளும், இன்னும் அதிகமாய் இவ் வெளிகளின் மக்கட் பெருந் திரளினரும் தம் உள்ளத்தைக் கவர்ந்து கொள்வதை எடுத்துரைக்கிளூர். நிலப் பிரபுக்களாலும் கத்தோலிக்கச் சமயச் சபையாலும் இரக்கம் சிறிதுமின்றி சுரண்டப்பட்ட மக்கள் அவர்கள். மலைகளில் அமைந்த மேய்ச்சல் வெளிகளிலிருந்து மந்தைகளை ஓட்டிக் கொண்டு, விடுதலைப் படைகளில் சேர்ந்து கொள்வதற்காக அவர்கள் விரைந்து வருவதையும், இருட்டிய பின் கணப்புத் தீயைச் சுற்றிலும் கூடி அவர்கள் தமது பாட்டுகளைப் பாடுவதையும், கந்தல் உடுத்தி, வெறுங் காலில் நடந்து, குளிரையும் பசியையும் பொருட்படுத்தாமல் நிலத்துக்காகவும் சுதந்திரத்துக்காகவும் வெஞ்சமர் புரிவதையும் விவரிக்கின்ளூர்.

ஏகாதிபத்திய யுத்தம் ஆரம்பமாயிற்று, பீரங்கிகள் எங்கெல்லாம் இடிமுழக்கமிட்டனவோ அங்கெல்லாம்—பிரான்சிலும் ஜெர்மனியிலும் இத்தாலியிலும் துருக்கியிலும் பால்கன் தீபகற்பத்திலும் இங்கே ருஷ்யாவிலுங்கூட—வந்து நின்ளூர் ஜான் ரீடு. ஜாரிஸ்டு அதிகாரிகளின் துரோகத்தை அம்பலப்

படுத்தியதற்காக, யூதர்-எதிர்ப்புக் கொலை வெறியாட்டங்களுக்கு அவர்கள் உடந்தையாக இருந்ததை நிரூபிக்கும் செய்திகளைச் சேகரித்ததற்காக, அவரையும், புகழ்பெற்ற கலைஞரான பார்டுமான் ராபின்சனையும் ஜாரிஸ்டுப் போலீசார் கைது செய்தனர். ஆனால் எப்போதும் போல், சமார்த்தியமான சூழ்ச்சியாலோ, சமயத்தில் கைகொடுத்து உதவும் அகஸ்மாத்தான வாய்ப்பினாலோ, கூர்மதியின் உபாயத்தாலோ அவர் தமது விடுதலைக்கு வழி செய்து கொண்டார். வெளியே வந்து கிளுகிளுத்துச் சிரித்தவாறு, அடுத்த தீரச் செயலில் அவசரமாய் இறங்கினார்.

அவரைத் தடுத்து நிறுத்தும்படி எக்காலத்திலும் எந்த அபாயமும் அவருக்குப் பெரியதாய் இருந்ததில்லை. அபாயம் அவரது மூலக் கூறுகளில் ஒன்றாய் இருந்தது. யாருக்கும் அனுமதியின்றி தடை செய்யப்பட்ட மண்டலங்களுக்குள்ளும், போர்முனை அகழ்வரிகளினுள்ளும் எப்படியோ நுழைந்து சென்று செயல்படுவதில் எப்போதுமே அவர் வல்லவர்.

ஜான் ரீடுடனும் போரீஸ் ரெயின்ஷ்தேயினுடனும் 1917 செப்டம்பரில் நான் ரீகா போர்முனைக்குப் போயிருந்தது நினைவுக்கு வருகிறது. எங்களுடைய கார் தெற்கு நோக்கி, வென்தென் கிராமத்தை அணுகிச் சென்று கொண்டிருந்தது. அப்போது அந்தச் சிறு கிராமத்தின் மீது ஜெர்மன் பீரங்கிகள் வெடிகுண்டுகளைப் பொழியத் தொடங்கின. ஆகவே திடுமென ஜான் ரீடுக்கு அந்தக் கிராமம் உலகிலேயே மிகவும் கவர்ச்சி வாய்ந்த இடமாகிவிட்டது. அங்கே போகத்தான் வேண்டுமென்று வற்புறுத்தினார். கவிழ்ந்து கொண்டு நாங்கள் எச்சரிக்கையுடன் முன்னேறிப் போய்க் கொண்டிருந்தோம். திடுமென அப்போது எங்கள் முதுகுக்குப் பக்கத்தில் ஒரு பெரிய வெடிகுண்டு வெடித்தது, நாங்கள் கடந்து முடித்திருந்த சாலைப் பகுதியில் புகையும் புழுதியுமான கருங்கோபுரம் கிளர்ந்தெழுந்தது.

பீதியுற்றுப்போய் நாங்கள் ஒருவரையொருவர் கட்டித் தழுவிக் கொண்டோம், ஆனால் மறுகணமே ஜான் ரீடின் முகம் பூரிப்புற்று ஒளிர்ந்தது. அவரை நச்சரித்த ஏதோவொரு அகத் தேவை அப்போதுதான் பூர்த்தியானது போல் அவர் மகிழ்ந்து கொண்டார்.

இப்படி அவர் உலகின் குறுக்கிலும் நெடுக்கிலும் சஞ்சரித்து, எல்லா நாடுகளுக்கும், எல்லாப் போர்முனைகளுக்கும் சென்ருர்; ஓர் அதிசயத் தீரச் செயல் முடிந்ததும் அடுத்ததில் இறங்கினுர். ஆனல் அவர், ஏனைய பல துணிகரச் செயல் வீரர்களையோ, ஓயாது சுற்றி வரும் பத்திரிகையாளர் களையோ போன்றவரல்ல; மக்களது துன்பதுயரங்களை விருப்பு வெறுப்பற்று உற்று நோக்கியவரல்ல. எல்லாக் குழப்படியும் இழிவும் இரத்தப் பெருக்கும் அவரது நீதி நேர்மை உணர்வுக்கு, நல்லொழுக்க மனப்பாங்கிற்கு ஊறு விளைவித்து, அவரை வதைபட வைத்தன. இந்தக் கேடுகளின் ஆணி வேரைக் கெல்லியெறிய வேண்டுமென்று, ஓயாமல் அவர் அந்த வேரைத் தேடி மண்ணைத் தோண்டிக் கொண்டிருந்தார்.

இந்த சஞ்சாரங்களிலிருந்து அவர் நியூயார்க் நகருக்குத் திரும்பி வந்தார்—ஓய்வெடுத்துக் கொள்வதற்காக அல்ல, புதிய வேலையிலும் கிளர்ச்சிப் பணியிலும் இறங்குவதற்காக.

மெக்சிக்கோவிலிருந்து திரும்பியதும் அவர் அறிவித்தார்: ''ஆம், மெக்சிக்கோவில் கலகமும் குழப்பமும் இருப்பது மெய்தான், ஆனல் இவற்றுக்கு எல்லாம் பொறுப்பாளிகள் நிலமில்லாத கொத்தடிமைக் குடியானவர்கள் அல்லர்; பொன்னும் துப்பாக்கியும் தந்து பூசலுக்குத் தூபமிடுகிருர்களே அவர்கள்தான், அதாவது போட்டியிடும் எதிராளிகளாகிய அமெரிக்க, பிரிட்டிஷ் எண்ணெய்க் கம்பெனிகள்தான் இவற்றுக்கு எல்லாம் பொறுப்பாளிகள்.''

பீட்டர்சனிலிருந்து திரும்பியதும் அவர், ''மூலதனத்தை எதிர்த்து பீட்டர்சன் பாட்டாளி வர்க்கம் புரியும் போர்'' என்று பெயரிட்டு, நியூயார்க் மதீசன் சதுக்கப் பூங்காவில் மாபெரும் நாடகக் காட்சிக்கு ஏற்பாடு செய்தார்.

கொலராடோவிலிருந்து திரும்பியதும் லட்லோப் படுகொலையின் முழு விவரத்தையும் எடுத்துரைத்தார். இப்படுகொலையின் பயங்கரங்கள், சைபீரியாவில் லேனுத் தங்கச் சுரங்கங்களில் நடைபெற்ற துப்பாக்கிப் பிரயோகங்களையுங் கூட மிஞ்சுவனவாகும். சுரங்கத் தொழிலாளர்கள் அவர்களுடைய வீடுகளிலிருந்து விரட்டியடிக்கப்பட்டனர்; பிறகு அவர்கள் கூடாரங்களில் வசித்து வந்த போது கூடாரங்கள் மீது பெட்ரோலை ஊற்றி அவற்றுக்கு நெருப்பு வைக்கப்பட்டது;

வெளியே ஓடிய வந்த தொழிலாளர்களைப் படையாட்கள் சுட்டு வீழ்த்தினார்கள்; பல பெண்களும் குழந்தைகளும் தீயிலே மாண்டு போயினர்—ஜான் ரீடு இவை யாவற்றையும் விளக்கிக் கூறினார். கோடீஸ்வர மன்னனாகிய ராக்பெலரைச் சுட்டிக் காட்டிச் சாடினார்: ''அவை யாவும் உமது சுரங்கங்கள், அவர்கள் யாவரும் நீர் காசு கொடுத்து அனுப்பிய கொலையாட்கள், நீர் ஒரு கொலைகாரர்!''

போர்க் களங்களிலிருந்து திரும்பிய போதுங்கூட, போரிட்ட இந்த அல்லது அந்தத் தரப்பார் புரிந்த அட்டூழியங்களைப் பற்றி அவர் வெற்றுப் பேச்சுகள் பேசிக் கொண்டு வரவில்லை; அந்த யுத்தமே அப்பட்டமான மிருகத்தனமாகும், முட்டி மோதிக் கொண்ட ஏகாதிபத்தியங்கள் ஏற்பாடு செய்த இரத்தக் களரியாகும் என்று யுத்தத்தையே கண்டித்துச் சாபமிட்டார். அவர் தமது சிறந்த படைப்புகளை இல்வசமாக அளித்து ஊக்குவித்து வந்த தீவிரப் புரட்சி ஏடாகிய லிபரேட்டர் பத்திரிகையில், சீற்றங் கொண்ட ஏகாதிபத்திய-எதிர்ப்புக் கட்டுரை ஒன்றை வெளியிட்டு, ''உங்களுடைய படையாள் புதல்வனுக்குப் பிண உடுப்பு தயாரியுங்கள்'' என்ற முழக்கத்தை எழுப்பினார். தேசத் துரோகக் குற்றம் சாட்டப் பெற்று அவரும் இந்த ஏட்டின் ஏனைய ஆசிரியர்களும் நியூயார்க் நீதிமன்றத்தின் முன்னால் கொண்டுவரப் பட்டார்கள். தேசபக்தவாத மனோபாவங் கொண்ட சான்றுயத்திடமிருந்து இவர்களுக்குக் குற்றத் தீர்ப்பு வாங்கிக் கொடுத்துவிட வேண்டுமென்று அரசாங்க வழக்குரைஞர் பெருமுயற்சி செய்தார். வழக்கு விசாரணையின் போது நீதிமன்றக் கட்டடத்துக்கு அருகே வாத்தியக் குழுவை நிறுத்தி வைத்து, தேசிய கீதம் இசைக்கச் சொல்லும் அளவுக்குச் சென்றார் அவர். ஆயினும் ரீடும் அவரது தோழர்களும் சிறிதும் பணியாமல் தமது கருத்துகளுக்காக உறுதியுடன் வாதாடினார்கள். புரட்சிக் கொடியின் கீழ் நின்று சமுதாயப் புரட்சிக்காகப் போராடுவது தமது கடமையாகுமெனத் தாம் கருதுவதாக எதற்கும் அஞ்சாமல் ரீடு பறைசாற்றிய போது, அரசாங்க வழக்குரைஞர் அவரைக் கேட்டார்:

''இந்த யுத்தத்திலே அமெரிக்கக் கொடியின் கீழ் போராடுவீரா?''

''போராட மாட்டேன்'' என்று அழுத்தம் திருத்தமாகப் பதிலளித்தார் ரீடு.

''ஏன் அப்படி?''

இதற்குப் பதிலளிக்க முற்பட்ட ரீடு உணர்ச்சித் துடிப்பு மிக்க சொற்பொழிவு நிகழ்த்தி, போர்க் களங்களில் தாம் நேரில் கண்ணுற்ற பயங்கரங்களை எடுத்துரைத்தார். அவர் அளித்த சித்திரம் உள்ளதை உள்ளபடி அப்படியே காட்டுவதாய் அமைந்து உள்ளம் குமுறச் செய்தது; தப்பெண்ணம் கொண்டவர்களான குட்டிமுதலாளித்துவச் சான்றோர்கள் சிலரையுங்கூட கண் கலங்கச் செய்தது. ஆசிரியர்கள் குற்றமற்றவர்கள் என்பதாகத் தீர்ப்பு அளிக்கப்பட்டது.

அமெரிக்கா அந்த யுத்தத்தில் சேர்ந்து கொண்ட போது, ஜான் ரீடு அறுவை சிகிச்சை பெற்று சிறுநீரகங்களில் ஒன்றை இழக்க நேர்ந்தது. இனி இவர் இராணுவ சேவைக்குத் தகுதியற்றவரென டாக்டர்கள் அறிவித்தார்கள்.

''சிறுநீரகத்தை இழந்ததால் நான், தேசங்களுக்கு இடையிலான யுத்தத்திலே, சேவையிலிருந்து விடுபடலாம்; ஆனால் வர்க்கங்களுக்கு இடையிலான யுத்தத்திலே, நான் சேவையிலிருந்து விடபட்டுவிடவில்லை'' என்றார் ரீடு.

1917ஆம் ஆண்டு கோடையில் அவர் ருஷ்யாவுக்கு விரைந்தார். ஆரம்ப நிலையிலான புரட்சிகர மோதல்களிலேயே மாபெரும் வர்க்க யுத்தத்தின் குறிகளை உணர்ந்து கொண்டு அங்கே சென்றார்.

அங்கே போய்ச் சேர்ந்ததுமே நிலைமையை உடனே மதிப்பீடு செய்தார்; பாட்டாளி வர்க்கம் ஆட்சியதிகாரம் வென்று கொள்வது முற்றிலும் சாத்தியமே என்பதையும் தவிர்க்க முடியாதது என்பதையும் உணர்ந்து கொண்டார். ஆனால் இதில் ஏற்பட்ட தாமதங்களும், ஒத்திவைப்புகளும் அவரை வாட்டி வருத்தின. தினமும் பொழுது விடிந்ததும், புரட்சி இன்னுமா ஆரம்பமாகவில்லை என்று உள்ளுக்குள் கடிந்து கொள்வதைப் போன்ற உணர்ச்சியுடன் விழித்தெழுவார். முடிவில் ஸ்மோல்னி சைகை காட்டிற்று, பெருந்திரள் மக்கள் உடனே புரட்சிப் போராட்டம் தொடுத்தனர். ஜான் ரீடும் அவர்களுடன் கைகோத்து முன்னே சென்றார் என்பதைக் கூறத் தேவையில்லை. எல்லா முக்கிய நிகழ்ச்சிகளின் போதும்

அவர் நேரில் வந்திருந்தார்: குடியரசு அவை கலைக்கப்படுதல், தெருக்களில் தடுப்பரண்கள் அமைக்கப்படுதல், தலைமறைவாய் இருந்த லெனினும் ஸினோவியெவும் பகிரங்கமாக வெளியே வந்த போது அவர்களை வரவேற்று ஆர்வ முழக்கங்கள் எழுதல், குளிர்கால அரண்மனை மீது தாக்குதல் நடைபெறுதல்.... எந்த நிகழ்ச்சியும் பாக்கியின்றி எல்லா இடங்களிலும் பிரசன்னமாயிருந்தார்.

இவை யாவற்றையும் அவர் தமது புத்தகத்தில் விரிவாகக் கூறுகின்றார்.

தமக்கு வேண்டிய விவரப் பொருள் எங்கே கிடைப்பதாயினும் அங்கே சென்று சேகரித்துக் கொண்டார். **பிராவ்தா, இஸ்வேஸ்தியா** ஏடுகளின் முழுத் தொகுதிகளையும், எல்லாப் பிரகடனங்களையும், வெளியீடுகளையும், அறிவிப்புகளையும், சுவரொட்டிகளையும் சேகரித்துக் கொண்டார். சுவரொட்டிகளைச் சேகரிப்பதில் தனி ஆர்வமும் ஈடுபாடும் கொண்டிருந்தார். புதிய சுவரொட்டி வெளியானதும், அதைப் பெறுவதற்கு வேறு வழி இல்லாமற் போகுமாயின், தயங்காமல் சுவரிலிருந்தே கிழித்தெடுத்து வந்துவிடுவார்.

அந்நாட்களில் சுவரொட்டிகள் பெரும் பெரும் எண்ணிக்கைகளில் அடிக்கடி வெளியாகி வந்ததால், அவற்றை ஒட்டுவதற்குச் சுவர்களில் இடம் இருக்கவில்லை. காடேட்டுகளும் சோஷலிஸ்டு-புரட்சியாளர்களும் மென்ஷிவிக்குகளும் இடதுசாரி சோஷலிஸ்டு-புரட்சியாளர்களும் வெளியிட்ட சுவரொட்டிகள் ஒன்றுக்கு மேல் ஒன்றாகச் சுவர்களில் ஒட்டப்பட்டன. ஒரு நாள் ரீடு ஒன்றுக்கு மேல் ஒன்றாய் ஒட்டப்பட்ட 16 சுவரொட்டிகள் அடங்கிய அடுக்கு ஒன்றை சுவரிலிருந்து பிய்த்தெடுத்தார். என் அறைக்குள் ஓடி வந்து அந்தத் தடித்த அடுக்கை என் முன்னால் வீசிக் காட்டிக் கூச்சலிட்டார்: ''பாருங்கள் இதை! ஒரே மூச்சில் புரட்சி, எதிர்ப்புரட்சி ஆகிய அனைத்தையும் கைப்பற்றிக் கொண்டுவிட்டேன்!''

இவ்வாறு பல வழிகளிலும் பாடுபட்டு அவர் அதியற்புத தொகுப்பைச் சேகரித்திருந்தார். சிறப்பான சேகரிப்பாய் இருந்ததால், 1918க்குப் பிற்பாடு அவர் நியூயார்க் துறைமுகத்தை வந்தடைந்ததும், அமெரிக்க அரசுத் தலைமை வழக்கறிஞரின் கையாட்கள் அதை அவரிடமிருந்து கைப்பற்றிக்

கொண்டுவிட்டனர். ஆனால் ரீடு எப்படியோ அதைத் திருப்பி வாங்கி வந்து, தமது நியூயார்க் அறையில் ஒளித்து வைத்துக் கொண்டார். இந்த அறையிலிருந்துதான், பாதாள ரயிலும், தலைக்கு மேலும் காலுக்கு அடியிலும் ஓடிய படிக்கட்டுகளும் எழுப்பிய தடதடப்புக்கு மத்தியிலிருந்து அவர், ''உலகைக் குலுக்கிய பத்து நாட்களைத்'' தட்டச்சடித்துத் தயாரித்து முடித்தார்.

இந்தப் புத்தகம் பொது மக்கள் கைக்குப் போய்ச் சேருவதை அமெரிக்க பாசிஸ்டுகள் விரும்பவில்லை, இது புரிந்து கொள்ளக் கூடியதே. இவர்கள் திரும்பத் திரும்ப ஆறு தரம் பதிப்பகத்தார் அலுவலகத்துக்குள் உடைத்துக் கொண்டு புகுந்து, இப்புத்தகத்தின் தட்டச்சுப் பிரதியைத் திருடிச் செல்ல முயன்றார்கள். பதிப்பாளருக்குத் தந்த தமது புகைப்படத்தில், ஜான் ரீடு பின்வருமாறு எழுதினார்:

''எனது புத்தகத்தை வெளியிடுகையில் நாசத்திலிருந்து மயிரிழையில் தப்பிய எனது பதிப்பாளர் ஹோரஸ் லிவ்வெயிட்டுக்கு.''

ருஷ்யாவைப் பற்றிய உண்மையை மக்களிடையே பரப்புவதற்கான அவரது இலக்கிய முயற்சிகள், இப்புத்தகத்துடன் நின்றுவிடவில்லை. இந்த உண்மை பரவுவதை முதலாளித்துவ வர்க்கம் தடுத்திடவே விரும்பிற்று. ருஷ்யப் புரட்சியை அது வெறுத்தது. இப்புரட்சி அதற்குக் கிலி உண்டாக்கி வந்தது. ஆகவே பொய்களைக் கட்டவிழ்த்து விட்டு அந்த வெள்ளத்திலே அது ருஷ்யப் புரட்சியின் உண்மையை மூழ்கடிக்க எத்தனித்தது. அரசியல் மேடைகளிலிருந்தும், திரைப்பட அரங்குகளிலிருந்தும், செய்தியேட்டுப் பத்திரிகைகளிலிருந்தும், வெளியீடுகளிலிருந்தும் அவதூறுச் சாக்கடைக் கும்பி முடிவின்றிப் பெருக்கெடுத்தது. முன்பு ஒரு காலத்தில் கட்டுரை எழுதித் தருமாறு ரீடிடம் கேட்டுத் தவங்கிடந்த பத்திரிகைகள் எல்லாம், இப்போது அவர் எழுதியதை அச்சிடாது இருட்டடிப்பு செய்தன. ஆனால் அவர் வாயை அடைக்க முடியவில்லை அவற்றால். எண்ணிலடங்காத மாபெரும் பொதுக் கூட்டங்களில் அவர் உரையாற்றினார்.

சொந்தப் பத்திரிகை ஒன்றை அவர் நிறுவிக் கொண்டார். இடதுசாரி சோஷலிஸ்டு ஏடான Revolutionary Age

(புரட்சி யுகம்) என்பதன் ஆசிரியராகவும், பிற்பாடு **கம்யூனிஸ்டு** இன் ஆசிரியராகவும் பணியாற்றினர். லிபரேட்டருக்கு வரிசை வரிசையாகக் கட்டுரைகள் வரைந்து வந்தார். அமெரிக்காவின் ஒரு முனையிலிருந்து மறு முனை வரையிலும் ஆங்காங்கே நடைபெற்ற மாநாடுகள் பலவற்றிலும் பங்கெடுத்துக் கொண்டார்; தம்மைச் சுற்றிலும் இருந்தோருக்கு உண்மை விவரங்களை எடுத்துரைத்தார்; தமது உற்சாகமும் புரட்சி ஆர்வமும் அவர்களையும் பற்றிக் கொள்ளுமாறு செய்தார்; யாவற்றினும் முக்கியமாய், முன்பு ஹார்வர்டுப் பல்கலைக்கழகத்தின் மையத்தில் சோஷலிஸ்டு மன்றத்தை அமைத்தாரே, அதே போல் இப்போது அமெரிக்க முதலாளித்துவத்தின் மையத்திலே கம்யூனிஸ்டு-தொழிலாளர் கட்சியினை அமைத்திட்டார்.

''பண்டிதர்களின்'' கூற்று வழக்கம் போல், பொய்த்துப் போயிற்று. ஜான் ரீடின் தீவிரவாதம் ''விரைவில் கரைந்து விடும் மோகமாய்'' இருக்கவில்லை. அவர்கள் ஆருடம் கூறியது போல், வெளியுலகுடனை தொடர்பு ரீடை எவ்விதத்திலும் அவர்களது வழிக்கு வந்துவிடுமாறு செய்யவில்லை. ரீடின் தீவிரவாதத்தை இந்தத் தொடர்பு ஒன்றுக்கு இரு மடங்காய் அதிகரிக்கவே செய்தது. அது எவ்வளவு ஆழமாக வேர்விட்டு வளர்ந்துவிட்டது என்பது, ஜான் ரீடை ஆசிரியராகக் கொண்டிருந்த புதிய கம்யூனிஸ்டுப் பத்திரிகையான Voice of Labour (தொழிலாளர் குரல்) தெட்டத் தெளிவாய்ப் புலப்படுத்திற்று. இறுதியில் அமெரிக்க நாட்டில் மெய்யான புரட்சியாளர் ஒருவர் தோன்றிவிட்டார் என்பது அமெரிக்க முதலாளித்துவ வர்க்கத்தாருக்குத் தெரிய வந்தது. இப்போது அவர்களுக்குப் ''புரட்சியாளர்'' என்னும் சொல் குலைநடுக்கம் உண்டாக்கும் சொல்லாகிவிட்டது. நெடுங்காலத்துக்கு முன்பு அமெரிக்காவில் புரட்சியாளர்கள் இருந்தார்கள் என்பது மெய்தான். பிற்போக்கு முதலாளித்துவ வர்க்கத்தினர் 1776ஆம் ஆண்டுப் புரட்சிக்குப் பாராட்டு தெரிவிப்பதற்காக அமைந்த அமெரிக்கப் புரட்சியின் புதல்வியர், அமெரிக்கப் புரட்சியின் புதல்வர் என்பன போன்ற உயர் மதிப்புக்குரிய கழகங்கள் இப்போதுங்கூட அமெரிக்காவில் இருக்கின்றன. ஆனால் அந்தப் புரட்சியாளர்கள் நெடுங்

காலத்துக்கு முன்பே இறந்துவிட்டவர்கள். ஜான் ரீடு அப்படியல்ல—இவர் உயிருள்ள புரட்சியாளர், உயிர்த் துடிப்பு மிக்கவராகச் செயல்பட்டு வந்தவர், முதலாளித்துவ வர்க்கத்தாருக்குச் சவால் விடுப்பவராகவும் சிம்ம சொப்பனமாகவும் அமைந்தவர்.

ஆகவே ரீடை அடைத்துப் பூட்டி வைப்பதைத் தவிர அவர்களுக்கு வேறு வழி ஏதும் இருக்கவில்லை. ஜான் ரீடு கைது செய்யப்பட்டார்—ஒரு தரமோ, இரண்டு தரமோ அல்ல, இருபது தரம் கைது செய்யப்பட்டார். பிலடெல்பியாவில் கூட்ட மண்டபத்தைப் போலீசார் இழுத்துப் பூட்டிவிட்டு, பேச அவருக்கு அனுமதி இல்லை என்றார்கள். உடனே அவர் தெருவிலே பெட்டி மேடை ஒன்றின் மீது ஏறி நின்றுகொண்டு, சுற்றிலும் குழுமிவிட்ட கூட்டத்துக்கு உரை நிகழ்த்தினார். இந்தக் கூட்டம் வெற்றிகரமாக அமைந்து, ஏராளமானோரை அவரது ஆதரவாளர்களாக்கிற்று. ஆகவே ''அமைதியைக் குலைத்தாகக்'' குற்றம் சாட்டப்பட்டு அவர் விசாரணைக்குக் கொண்டு வரப்பட்ட போது, சான்றாயர்கள் அவருக்குக் குற்றத் தீர்ப்பு அளிக்க விரும்பவில்லை. அமெரிக்க நகரம் ஒவ்வொன்றும், குறைந்தது ஒரு தரமாவது ஜான் ரீடை கைது செய்வது தனக்குரிய கடமையாகுமெனக் கருதிற்று. ஆனால் அவர் ஒவ்வொரு தரமும் ஜாமினில் விடுதலை பெற்றோ, ஒத்திவைப்பு வாங்கியோ வெளியே வந்து, வேறொரு இடத்தில் தாக்குதல் நடத்துவதற்காக அவசரமாகப் புறப்படுவார்.

மேலைய நாடுகளின் முதலாளித்துவ வர்க்கத்தார் தமது இன்னல்களுக்கும் தோல்விகளுக்கும் இந்த ருஷ்யப் புரட்சியேதான் காரணமெனப் பேசப் பழகிக் கொண்டவர்கள். இந்தப் புரட்சி புரிந்த நீசத்தனமான குற்றங்களில் ஒன்று என்னவெனில், ஆற்றல் வாய்ந்த ஓர் அமெரிக்க இளைஞனை இது புரட்சியில் வெறித்தனமான ஆர்வங் கொண்டவனாக மாற்றிவிட்டது—முதலாளித்துவ வர்க்கம் இப்படித்தான் நினைத்தது. ஆனால் இதை முழு உண்மையாகக் கொள்வதற்கில்லை.

ஜான் ரீடைப் புரட்சியாளராக்கியது ருஷ்யாவல்ல. பிறந்த நாள் முதலாய் அவரது இரத்த நாளங்களில் அமெரிக்கப் புரட்சி இரத்தம் ஓடி வந்தது. அமெரிக்கர்கள் ஊதிப்

பருத்து, சுயமனத் திருப்திகொண்ட பிற்போக்குத் தேசத்த வராகவே எப்போதும் கருதப்பட்ட போதிலும், கலக மனப் பாங்கும் ஆத்திரமும் ஆவேசமும் அவர்களுக்குக் கூடப் பிறந்த இயல்புகளாகும். கடந்த காலத்தின் மாபெரும் கல கக்காரர்களை—தாமஸ் பெயினையும், வால்ட் விட்மனையும், ஜான் பிரவுனையும், பார்சன்ஸையும்—நினைத்துப் பாருங்கள். மற்றும் ஜான் ரீடின் இக்காலத்துத் தோழர்களும் கூட்டாளி களுமான பில் ஹேவுட், ராபர்ட் மைனர், ருத்தேன்பேர்க், பாஸ்டர் போன்ற பலரையும் நினைத்துப் பாருங்கள். ஹோம்ஸ் டீடிலும் புல்மனிலும் லாரென்ஸிலும் இரத்தக் களரியாய் மூண்டுவிட்ட தொழில் தகராறுகளையும், உலக ஆலைத் தொழிலாளர்கள் நிறுவனத்தின் போராட்டங்களையும் நினைவு படுத்திக் கொள்ளுங்கள். இவற்றின் தலைவர்கள், இவற்றில் பங்கு கொண்ட பெருந் திரளினர் ஆகிய எல்லோருமே முழுக்க முழுக்க அமெரிக்க மண்ணிலிருந்து உதித்தவர்கள் அல்லவா? தற்போது வெளிப்படையாகத் தெரியாவிட்டா லுங்கூட, அமெரிக்க இரத்தத்தில் கலகத்தின் கூறு நிறைவே இருக்கிறது.

ஆகவே ருஷ்யாதான் ஜான் ரீடைப் புரட்சியாளராக் கிற்று என்பதாகக் கூறிவிட முடியாது. ஆனால் ருஷ்யாதான் அவரை **விஞ்ஞான வழியில் சிந்திக்கும் முரண்பாடற்ற** புரட்சி யாளராக்கிற்று. ருஷ்யா ஆற்றிய பெரிய சேவை இது. ருஷ்யாதான் அவரைத் தமது மேசையிலே மார்க்ஸ், எங் கெல்ஸ், லெனினின் நூல்களைக் குவித்துக் கொள்ளும்படி செய்தது. ருஷ்யாதான் அவருக்கு வரலாற்றைப் புரிந்து கொள்வதற்கான ஆற்றலை அளித்தது, நிகழ்ச்சிகளைப் புரிந்து கொள்வதற்கான ஆற்றலை அளித்ததும் அதுவேதான் என் பதைக் கூற வேண்டியதில்லை. அவ்வளவாகத் தெளிவில்லாத மனிதாபிமானக் கருத்தோட்டங்களுக்குப் பதிலாய், அது அவரை வளைந்து கொடுக்காத, உறுதி படைத்த பொருளா தார உண்மைகளை அடிநிலையாகக் கொள்ளச் செய்தது. அமெரிக்கத் தொழிலாளி வர்க்க இயக்கத்துக்கு ஆசானாகும் படியும், தமது முடிவான திட நம்பிக்கைகளுக்கு அவர் எதை ஆதாரமாகக் கொண்டாரோ அதே விஞ்ஞான அடிப்

படையை இந்த இயக்கத்துக்கும் அளித்திட முயலும்படியும் ருஷ்யா அவரை ஊக்குவித்தது.

''ஜான், அரசியலல்ல உனக்குரிய தனித் துறை!'' என்று அவர் நண்பர்கள் அவரிடம் கூறி வந்தனர். ''நீ ஒரு கலைஞன், பிரசாரகன் அல்ல. இலக்கியப் படைப்புப் பணிக்கு நீ உன் திறனை அர்ப்பணித்துக் கொள்ள வேண்டும்!'' என்றனர். இதன் உண்மையை அவர் அடிக்கடி உணர முடிந்தது; அவர் உள்ளத்துள் புதிய கவிதைகளும் புதிய நாவல்களும் நாடகங்களும் பொங்கியெழுந்த வண்ணமிருந்தன; பீறிட்டு வெளிப்படுவதற்காக, தக்க வடிவம் பெறுவதற்காகத் துடிதுடித்துக் கொண்டிருந்தன. புரட்சிப் பிரசாரப் பணியை ஒதுக்கி வைத்துவிட்டு, மேசையின் எதிரே அமர்ந்து செயல்படும்படி நண்பர்கள் அவரிடம வற்புறுத்திய போது, அவர் புன்னகை புரிந்தவாறு, ''சரி, செய்கிறேன்'' என்று பதிலளித்தார்.

ஆனால் தமது புரட்சிப் பணியினை ஒருபோதும் அவர் நிறுத்தவே இல்லை. அவருக்கு அது இயலாத காரியம்! ருஷ்யப் புரட்சி அவரது உள்ளத்தையும் ஆன்மாவையும் ஆட்கொண்டுவிட்டது. அது அவரை வல்லவராக்கிற்று, அவரது ஊசலாடும் அராஜக உணர்ச்சிப் பெருக்கினை கம்யூனிசத்தின் கண்டிப்பான கட்டுப்பாட்டுக்குப் பணிய வைத்தது. ஒளி பரப்பும் தீச் சுடரை ஏந்திச் செல்லும் மகானாய் அவரை அது அமெரிக்க நகரங்களுக்கு அனுப்பி வைத்தது. பிறகு அமெரிக்க ஐக்கிய நாட்டின் இரு கம்யூனிஸ்டுக் கட்சிகளை ஒருசேர இணைத்திடும் பொருட்டுக் கம்யூனிஸ்டு அகிலத்தில் பணிபுரிவதற்காக அவரை அது 1919ல் மாஸ்கோவுக்கு வருமாறு அழைத்தது.

புரட்சித் தத்துவத்தின் புதிய உண்மைகளைக் கிரகித்துக் கொண்டு திரும்பவும் அவர் நியூயார்க்குக்குப் புறப்பட்டார் —தலைமறைவாக மாலுமி ஒருவரால் காட்டிக்கொடுக்கப்பட்டு கப்பலிலிருந்து இறக்கப்பட்டு பின்லாந்தில் ஒரு சிறைக் கூடத்தில் தனிக் கொட்டடியில் அடைக்கப்பட்டார். அங்கிருந்து ருஷ்யாவுக்குத் திரும்பி, **கம்யூனிஸ்டு இண்டர் நேஷனல்** ஏட்டில் எழுத முற்பட்டார்,ஒரு புதிய புத்தகத்துக்கு விவரப் பொருள்கள் சேகரித்தார், பாக்கூவில் நடைபெற்ற

கிழக்கத்திய மக்களது காங்கிரசில் பிரதிநிதியாகக் கலந்து கொண்டார். டைபஸ் நச்சுக் காய்ச்சல் கண்டு (காக்கசஸில் இந்தத் தொற்று ஏற்பட்டதாகத் தெரிகிறது), மட்டுமீறிய வேலைகளால் வலுவிழந்து ஓய்ந்து போய், இந்நோயிலிருந்து மீள முடியாதவராகி, 1920 அக்டோபர் 17ல், ஞாயிறன்று மரணமடைந்தார்.

ஜான் ரீடைப் போன்றவர்கள் பலரும் இருந்தார்கள்; சோவியத்துக் கூட்டரசில் எதிர்ப்புரட்சியை எதிர்த்து செஞ் சேனை எப்படிப் போராடிற்றோ, அதே போ.ல் இவர்கள் அஞ்சா நெஞ்சம் கொண்டோராய்த் தீரமுடன் எதிர்ப்புரட் சியை எதிர்ந்து அமெரிக்காவிலும் ஐரோப்பாவிலும் போரா டினார்கள். பலர் கொலைவெறித் தாக்குதல்களுக்குப் பலியா யினர், மற்றும் பலர் என்றென்றுக்குமாய் மௌனமாகி விடும்படி சிறைக்கூடங்களில் அடைக்கப்பட்டனர். ஒருவர் பிரான்சுக்குத் திரும்பி வருகையில், வெண்கடலில் புயல் மூண்ட போது, உயிர் நீத்தார். இன்னொருவர் தலையீட்டுயுத் தத்தைக் கண்டித்து ஆகாயத்திலிருந்து சான் பிரான்சிஸ்கோ நகரில் அறிக்கைகளை வீசிச் சென்ற போது, விமானத் திலிருந்து கீழே விழுந்து மாண்டு போனார். புரட்சியை எதிர்த்து ஏகாதிபத்தியம் நடத்திய தாக்குதல் மூர்க்கமாகவே இருந்த தென்றாலும், இந்த வீரர்கள் இல்லாதிருந்தால் அது இன்னுங் கூட அதிக மூர்க்கத்தனம் கொண்டாக இருந்திருக்கும். எதிர்ப்புரட்சியின் கடுமையை மட்டுப்படுத்த இவர்கள் தமக் குரிய பங்கினைச் செலுத்திப் பணியாற்றினர். ருஷ்யப் புரட் சிக்கு உதவியது, ருஷ்யர்களும் உக்ரைனியர்களும் தாத்தாரி யர்களும் காக்கேசியர்களும் மட்டும் அல்ல; இதனிலும் குறை வாகவே என்றாலும், பிரெஞ்சுக்காரர்களும் ஜெர்மானியர் களும் ஆங்கிலேயர்களும் அமெரிக்கர்களுங்கூட இதே போல் தான் உதவினார்கள். ''ருஷ்யர்களல்லாத இந்த வீரர்களில்'' ஜான் ரீடின் உருவம் மிகவும் எடுப்பாய்த் தெரிகின்றது, ஏனென்றால் இவர் அருந் திறல் படைத்தவர், காலைப் பரு வத்திலேயே நம்மிடமிருந்து பறிக்கப்பட்டவர்.

அவர் மறைந்த செய்தி ஹெல்சிங்போர்சிலும் ரேவெலி லும் எமக்கு எட்டிய போது, எதிர்ப்புரட்சிப் புளுகுகளை உற் பத்தி செய்யும் ஆலைகளால் தினமும் தயாரிக்கப்பட்ட பொய்

களில் மற்றும் ஒன்றே இது என்றுதான் நாங்கள் சந்தேகத்து இடமின்றி நினைத்தோம். ஆனால் இந்தத் திடுக்கிடும் தகவலை லூயிஸா பிரயன்ட்* ஊர்ஜிதம் செய்ததும், மறுப்புச் செய்தி வெளிவருமென்ற நம்பிக்கையை விட்டொழித்து நாங்கள் துயருற வேண்டியதாயிற்று.

ஜான் ரீடு தாய்நாட்டிலிருந்து விலக்கப்பட்டவராக உயிர் நீத்தார், அப்போது அவருக்கு ஐந்தாண்டுக் காலச் சிறைத் தண்டனை காத்திருந்தது. ஆயினும் முதலாளித்துவ ஏடுகளுங் கூட, அவரைக் கலைஞர் என்ற முறையிலும் மனிதர் என்ற முறையிலும் போற்றிப் பாராட்டுகள் தெரிவித்தன. ஜான் ரீடு முதலாளித்துவ வர்க்கத்தாரின் பித்தலாட்டத்தை எப்படி அம்பலம் செய்வதென்று நன்கு அறிந்தவர், அவர்களைத் தமது பேனாவைக் கொண்டு ஈவிரக்கமின்றி தோலுரித்துக் காட்டியவர்—இந்த ஜான் ரீடு மறைந்துவிட்டது குறித்து முதலாளித்துவ வர்க்கம் நிம்மதிப் பெருமூச்சு விட்டது.

அமெரிக்காவில் தீவிரவாத உலகுக்கு இது ஈடு செய்ய முடியாத பேரிழப்பாயிற்று. அவரது மறைவால் ஏற்பட்டிருக்கும் இழப்பினை அமெரிக்காவுக்கு வெளியே வசிக்கும் தோழர்களால் சரிவர மதிப்பிட முடியாது. மனிதர் ஒருவர் தமது உறுதியான நம்பிக்கைகளுக்காக உயிரை விடுவது சகஜம்தான், இது இயற்கையே என்பதாக ருஷ்யர்கள் நினைக்கிறார்கள். இது குறித்து உணர்ச்சி வயப்பாட்டுக்கு இடம் இல்லை. இங்கே, சோவியத்து ருஷ்யாவில் சோஷலிசத்துக்காக ஆயிரக் கணக்கிலும் பத்தாயிரக் கணக்கிலும் மக்கள் உயிர் நீத்திருக்கிறார்கள். ஆனால் அமெரிக்காவில் ஒப்பளவில் மிகக் குறைந்த அளவுக்கே தியாகம் புரியப்பட்டிருக்கிறது. கம்யூனிசப் புரட்சிக்கான இத்தகைய முதலாவது தியாகியாக ஜான் ரீடைக் குறிப்பிடலாம், ஆயிரக் கணக்கில் இனி தோன்றப் போகிறவர்களுக்கு முன்னோடிதாகத் திகழ்கின்றவர் அவர். எரிமீனையொத்த அவரது வாழ்க்கை, நெடுந்தொலைவிலுள்ள ருஷ்யாவில், முற்றுகையிடப்பட்ட ருஷ்யா

* லூயிஸா பிரயன்ட்—329 ஆம் பக்கத்தில் உள்ள இரண்டாவது அடிக்குறிப்பைப் பார்க்கவும்.—[பதிப்பாசிரியர்.]

வில் இப்படித் திடுதிப்பென முடிவுற்றுவிட்டது. கொடுமையிலும் கொடுமையான அடியாய் இது அமெரிக்கக் கம்யூனிஸ்டுகளை வருத்திற்று.

அவரது பழைய நண்பர்களுக்கும் தோழர்களுக்கும் ஆறுதலளிப்பதாய் இருக்கும் ஒரேயொரு விவரம் என்னவெனில், ஜான் ரீடு உலகிலேயே அவருக்கு மிகவும் பிடித்தமான ஓரிடத்தில், கிரெம்ளின் சுவரின் பக்கத்தில் அமைந்த அந்தச் சதுக்கத்தில், அடக்கம் செய்யப் பட்டிருப்பதுதான்.

செதுக்கப் பெறாத கருங்கற் பாளம் ஒன்று, அவருடைய இயல்புக்கு முற்றிலும் இசைவான நினைவுச் சின்னமாய் அவரது சமாதியில் நிறுத்தப்பட்டிருக்கிறது. அதில் பொறிக்கப் பட்டிருக்கும் வாசகம்:

**''ஜான் ரீடு, மூன்றாவது அகிலத்துக்குப் பிரதிநிதியாக வந்தவர், 1920.''**

## வாசக நேயர்களுக்கு

இந்த மொழிபெயர்ப்பைப் பற்றியும் இந்தப் புத்தகத்தின் தயாரிப்பைப் பற்றியும் வாசக நேயர்களின் கருத்தை **முன்னேற்றப் பதிப்பகம்** மகிழ்வுடன் வரவேற்கும்.

கடிதங்களைத் தயை செய்து "Progress Publishers, 21, Zubovsky Boulevard, Moscow, USSR" என்ற முகவரிக்கு அனுப்புங்கள்.

விற்பனையாளர்கள்

நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்

தலைமை அலுவலகம்

6, Nallathambi Chetty Street, Madras-2

ஷோ-ரூம்

6/30, Mount Road, Madras-600002

கிளைகள்

80, West Tower St., Madurai-1
87/89, Oppanakara St., Coimbatore-1
Singarathope, Tiruchirapalli-8
Cherry Road, Salem-1